கழக வெளியீடு: எஅ

# குறுந்தொகை

◎

பெருமழைப் புலவர்,

**திரு. பொ. வே. சோமசுந்தரனார்**

எழுதிய

**உரையுடன்**

◎

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,

லிமிடெட்,

திருநெல்வேலி. :: சென்னை-1

First Edition: May, 1955.



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS-1.

*Head Office:*

24, EAST CAR STREET, THIRUNELVELI.

Appar Achakam, Madras-1. C. 1200.

# பதிப்புரை

சங்ககாலப் பழந்தமிழ் நூல்கள், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு எனப் பலவாகப் பிரிவுபடுத்தப் பெற்றுள்ளன. அவற்றுள் இக் குறுந்தொகை எட்டுத்தொகையில் இரண்டாவதாக 'நல்ல குறுந்தொகை'யென ஆன்றோரால் பாராட்டுப் பெற்றது.

இந் நூற்கு ஏற்கெனவே, விரிந்த உரையுள்ளது. ஆயினும், மாணவரும், கற்றுத்துறைபோகும் அறிஞர் களும் கற்பதற்கும் எளிதில் பொருளுணர்தற்கும வாய்ப்பாக, தலைப்பில் பாட்டின் எண்ணும், வாயில் களின் கூற்றும், துறையும், அதன் விளக்கமும், பாட்டுக்குச் சொல்லுரை, விளக்கவுரை, இலக்கணக் குறிப்புக்களும் சுருக்கமும் பெருக்கமுமின்றி அளவோடு சுவை கெழுமப் பெருமழைப் புலவர், திரு. பொ. வே. சோமசுந்தரனாரவர்களைக் கொண்டு எழுதுவித்து அழகிய முறையில் நூல் முழுதுக்கும் எழுதிச் சிறந்த முறையில் செப்பஞ் செய்து வெளியிட்டுள்ளோம்.

பண்டைக்கால நம் தமிழகப் பெரியோர் ஒழுக லாறுகளையும் பழக்க வழக்க ஒழுக்க முறைகளையும் கணவன் மனைவியர் காதல்வாழ்வினையும் அறம் மறம் மானம் உரிமை செம்மை வண்மை தொழில் பண்பாடு ஆகிய சீரிய தன்மைகளையும் அறிந்தின் புறற்கேற்ற முழு மணிப்பேழை இக் குறுந்தொகைப் பெருநூல்.

இதனை நம் தமிழ்நன்மக்கள் உள்ளன்புடன் வாங்கிக் கற்றும் கற்பித்தும் சொல்லியும், நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்னும் அறப்பெரு வாழ்வு வாழ்ந்து இன்புறுவார்களென நம்புகின்றேம.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

பதிப்புரை

அணிந்துரை

பாடிய சான்றோர்

கடவுள் வாழ்த்து

நூல் : (க முதல் ௪௦௦ பாட்டுக்கள்)

செய்யுள்முதற்குறிப்பு அகரவரிசை

அருஞ்சொற்பொருள் அகரவரிசை

—

**பக்கம்**

**3**

....

# க. நூல் வரலாறு

இக் குறுந்தொகை என்னும் சீரிய இலக்கியம் பண்டைக் காலத்து நல்லிசைப் புலவர்களாற் பாடப்பட்ட, பாட்டுந் தொகையும கீழ்க்கணக்குமாகிய முத்திறத்து நூல்களுள் நடு நின்ற தொகை நூல்கள எட்டனுள் ஒன்றாகும்.

"நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறு நூறு
ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்
கற்றறிந்தார் ஏத்துங் கலியோடு அகம்புறம் என்று
இத்திறத்த எட்டுத் தொகை"

என வரும் இப் பழைய வெண்பாவால் எட்டுத்தொகை நூல்கள் இன்னவை என்று உணரலாம்

இவ்வெட்டுத் தொகை நூல்கள், அகம் புறம் என்னும்

பொருணெறி மரபுபற்றிப் பல்வேறு காலங்களிலே பற்பல நல்லிசைப் புலவர்கள் தனித்தனியே பாடிய செய்யுள்களின் தொகுதியே யாகும். கலையுணர்ச்சி மிக்கிருந்த அக்காலத்துச் சான்றோர், அச செய்யுட்களைப் பொருள்பற்றியும, யாப்புப்பற்றியும், எட்டு நூல்களாக வகுத்துத் தொகுத்துள்ளார்கள். அவற்றுள்,

இக் குறுந்தொகையும், நற்றிணையும், நெடுந்தொகையும், (அகநானூறு) ஆசிரியப்பாவா னியன்ற ஆயிரத்திருநூறு செய்யுட்களின் தொகுதியாகும் பொருளானும், யாப்பானும், இச் செய்யுள்களனைத்தும் ஒரே இனத்தின்பாற் படுவனவாயினும், இவையிற்றை ஒன்றாகத் தொகை செய்யுமிடத்து, நூல் மிகவும் நீளிதாம் என்று கருதி, சிறுமை, பெருமை, இடைநிகர்வு என்னும் மூத்திறத்த அடிவரையறைகளானே மூன்று தொகைகளாகப் பகுத்துள்ளனர். அவற்றுள் இக் குறுந்தொகை நான்கடிச் சிறுமையும், எட்டடிப் பெருமையும் உடைய நானூறு செய்யுட்களின் தொகுதியாகும். குறிய அடிகளையுடைய செய்யுட்களின் தொகையாகலின், இது குறுந்தொகை என வழங்கப்பட்டது. ஒன்பதடிச் சிறுமையும், பன்னிரண்டடிப் பெருமையும் உடைய நானூறு செய்யுட்களின் தொகை நற்றிணை யாகும். பதின்மூன்றடிச் சிறுமையும் முப்பத்தோரடிப் பெருமையும் உடைய செய்யுள்களடங்கிய தொகை நூல் நெடுந்தொகை என வழங்கப்படுகின்றது.





இனி இம்மூன்று தொகைநூல்களும், இப்முறையே தொகுக்கப்பட்டிருப்பினும் இக் குறுந்தொகை நூலின்கண் இற்றைநாள் நானூற்றொரு செய்யுள்களும், அவையிற்றுள் ஒன்பதடிப் பெருமையுடைய இரண்டு செய்யுள்களும

(ரு ௦எ, ௩௬௪.) காணப்படுகின்றன இம் மாறுபாடு இந்நூலின்கண் ஒரு செய்யுளேயும், மற்றோர் செய்யுளின்கண் ஓர் அடியையும் இடையே செருகியதனால் ஏற்பட்டதாகும்.

## உ. நுவல்வோர்

இனி, இக் குறுந்தொகையின்கண் அடங்கிய செய்யுள்களை இயற்றிய நல்லிசைப் புலவர்கள் இருநூற்றைவர் ஆவர் என இந் நூலிறுதியினமைந்ததொரு பழைய குறிப்பால் உணரலாம். இப் பொழுதும் இந்நூ ன முகப்பே கடவுள் வாழ்த்துப் பாடியமைத்த, பாரதம்பாடிய பெருந்தேவனாரை விலக்கி இருநூற்றைவர் பெயரே உள்ளன; எனினும் இடை இடையே உள்ளே பத்துச் செய்யுள்கள் ஆசிரியர் பெயா காணப்படாதனவாகவும் உள்ளன. ஆசிரியர் பெயா காணப்படாத செய்யுள்களை, அவ்வச் செய்யு ளின் முன்னின்ற செய்யுளைப் பாடிய ஆசிரியரே பாடினார் என்

பது தோன்றப் பிற்காலத்தே ஏட்டெழுதுவோர் ஆசிரியர் பெயர் எழுதாது விட்டிருக்கக்கூடும் என்று கருதின், ஒருவாறு இதற்கோர் அமைதி கண்டவராவோம் இஃது அமைதி காண வியலாததொரு பிறழ்ச்சி எனக் கருதுவாரும் உளர் இத் தொகை நூலுக்குப்,

ஏனை நானகு தொகை நூலுக்கும முகப் பின் கட் பாரதம பாடிய பெருந்தேவனார் என்னும நல்லிசைப் புலவர் சிறந்த பொருளமைதியுடைய கடவுள் வாழ்த்துச் செய் யுள்களை யாத்துச் சேர்த்துள்ளனர்.

## ௩. நுதலிய பொருள்

இக் குறுந்தொகை நூலின்கண் அடங்கிய செய்யுள்கள் அனை ததும தமிழ்மொழிக்கே சிறந்த அகம்புறம் என்னும் இரு வகைப் பொருளகளில் அகப்பொருள்பற்றி எழுந்தனவாகும.

“ஒத்த அன்பான் ஒருவனும ஒருததியும் கூடுகின்ற காலத்துப் பிறகத பேரினபம, அக்கூட்டததின் பின்னர் அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் ததமக்குப் ஙுகை இவ்வாறிருந்ததெனக் கூறபபடாததாய், யாண்டும உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்ப முறுவதோர பொருளாதலின், அதனை அகம் என்றார். எனவே அகத்தே நிகழ்கின்ற இன்பததிற்கு அகமென்றது ஓர் ஆகுபெய ராம்,” என்பா ஆசிரியர் நச்சினார்க்கினியர். ஆகவே, இந்நூல் அறம பொருள் இன்பம் என்னும் உறுதிப்பொருள் மூன்ற னுள், இன்பம் பொருளாக எழுந்த நூல் ஆதலுணர்க.

ஆழ்ந்து சிந்திப்போர்க்குத் தமிழ்ச்சான்றோர் வகுத்தோதிய அகப்புறப் பொருள்கள் என்பன, முறையே அன்பினது அழகிய ஒழுக்கமும், வீரத்தினது அழகியஒழுக்கமுமாகும் என்பது புலனாம். மக்கள் வாழ்க்கையின் குறிக்கோள், பற்றறுத்து என்றும் அழிவில்லாத வீட்டின்பத்தை எய்துதல் ஒன்றேயாகும் என்பர் சான்றோர். அவ் வீட்டின்பம் எய்துதற்குச் சிறந்த ஏதுவாக அமைவது அருள்உடைமையே யாகும். "அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை" எனவரும் திருக்குறளானும் இதனை யுணரலாம். அவ் வருட்குத் தாயாக அமைந்த பண்பு, அன்பு என்பதாகும். "அருள்என்னும் அன்பின் குழவி" என வள்ளுவனாரும் அருளை அன்பினது குழவியாக உருவகித்தோதுதல் காண்க. அன்பினது முதிர்வே அருள்; அன்பினது பயனே வீடு. "அன்பே சிவம்"; "அன்பெனும் ஒன்றின் தன்மை அமரரும் அறிந்ததன்றால்" என்பது சிறந்த நல்லிசைப்புலவர் ஒருவரின் திருவாய்மொழி என்க.

மக்கள் வாழ்க்கையின் குறிக்கோளாகிய வீட்டின்பத்தைத் தரவல்லது அன்புடைமையே ஆகலின், அவ்வன்பினை வளர்க்கும் நெறியறிந்து நன்கு வளர்த்துக் கோடலே இவ்வுலக வாழ்க்கையின் சிறந்த பயனும் அங்ஙனம் நெறிநின்று வளர்க்கப்பட்ட அன்புப் பெருக்கம் ஒன்றே இம்மையின்பத்தையும், வீட்டின்பத்தையும் ஒருங்கே அளிக்கும் சிறப்புடையது என்னும் கொள்கையுடையர் பண்டைநாள் இத்தமிழகத்தே சிறந்திருந்த மெய்க்காட்சியாளர் என்பதனைப் பண்டைத் தமிழிலக்கியங்களாகிய பாட்டுந் தொகையும் கீழ்க்கணக்குமாகிய அரிய அறிவுக் கருவூலங்களை நன்கு ஆராய்வோர் நன்குணரலாம். வடவாரியர் தமிழகம் புகுவதற்கு முன்னரும், சமயக்கணக்கர் புத்த சமயம் சமண சமயம் முதலிய ஒன்றனோடொன்று முரணிய சமயக் கொள்கைகளை யாண்டும் பரப்புவதற்கு முன்னரும் ஆகிய நெடும் பண்டைக் காலத்திலேயே—கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தின் முன் தோன்றி முதிர்ந்து ஏனை நாட்டினர் போல வயிற்றுக்கிரை தேடி நாடோடிகளாக உலகெங்கும் சுற்றி நிலையின்றித் திரியாமல், ஓரிடத்தே ஒன்றுகூடி வாழும் சிறப்புடையராயினோர் தமிழ்மக்கள் அங்ஙனம் நிலைபெற்று வாழ்ந்த அச்சான்றோர் தம் வாழ்க்கையின் பயனாக "வையத்து வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்," "அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றிற் புறத்தாற்றிற் போஓய்ப் பெறுவதெவன்," "இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான், முயல்வாருள் எல்லாந் தலை," "அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை, பண்பும் பயனும் அது," "அன்போ டியைந்த

வழக்கென்ப ஆருயிர்க்கு, என்போ டியைந்த தொடர்பு," "அன் பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க், கென்புதோல் போர்த்த வுடம்பு," என்பனபோன்ற ன் றென்றும் அழியாத நற்காட்சி

களைத் தம் நாண்மாண் நுழைபுலனாலே கண்டு, அந்நெறியே மக்களை இனிதின் அழைத்துச் செல்வாராயினர். அக்காலத்தே அவ்வன்புநெறிபற்றி வாழ்ந்த மக்களிடையே காணப்பட்ட அன்பொழுக்கங்களின் அழகின் பிழிவே இக் குறுந்தொகையும் பிறவுமாகிய இலக்கியங்கள் என்று உணர்தல் வேண்டும்.

இனி, வீடுபேற்றிற்கு முதலாக அமைந்த கடவுட் பண்பாகிய அன்பொழுக்கத்தினைக்

"கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப"

எனத் தொல்காப்பியனார் வகுத்தோதினர். அவற்றுள் முன் னின்ற கைக்கிளை ஒருதலைக்காமம் என்றும், இறுதியினின்ற

பெருந்திணை பொருநதாக் காமம் என்றும் ஒரு புடை இழுக் குடையனவாகக் கருதப்படும். எஞ்சிய குறிஞ்சி முதலிய ஐந்துவகை யொழுககமும மழுவற்ற உழுவலன்பு காரணமாக நிகழ்வனவாகலான், இவ் வொழுககத்தின்கட காணபபடும கருததழகே இக் குறுந்தொகை முதலிய அகப்பொருணூல் களின் செய்யுளகட்குச் சிறந்துரிமையுடைய உயிர்ப்பொருள் களாகும். இவற்றை உரிப்பொருள என்று ஓதுப.

இனிச் செய்யுளின்கண் அருவமாய் உயிராய் அமைதற் குரியது இவ்வுரிப்பொருள் எனவே, அவ்வுயிர் நிற்றற்கு உடலாயமைந்த செய்யுளுறுப்புக்களை அழகுறுதற் பொருட் டும, நல்லுடலிலே உயிர்இருககை விளஙகித் தோன்றுமாறு போலே செய்யுளின்கண் உரிப்பொருள விளஙகித் தோனறு தறகு ஏதுவாகவும காட்சிப் பொருளிட்டத்தை முதற்பொருள் என்றும, கருபபொருள் என்றும் இருவகைப் பொருள்களாக வகுததுள்ளனர். நிலப்பகுதிகளும் காலக்கூறுகளும் முதற் பொருள் எனப்படுப; தெயவமும நானிலங்களிலே வாழும் உயிர்ப பொருளாகிய புற் பூண்டுகளும், மரங்களும், மாக்களும், விலங்குகளும், பறவைகளும், தொழிலும், தொழிற்கருவிகளும், இசையும், இசைககருவிகளும், பிறவும, கருப்பொருள் எனப் படும். இவ்விருவகைபபொருள்களும் காட்சிப்பொருள் களாய்த் தம் அழகானே பொறிகட்கு இன்பம் பயப்பன. உரிப்பொருள கருத்துப்பொருளாய் மன னுணர்ச்சிக்குத் தனது அழகானே பேரின்பம் நல்குவதாம்.

காம முதலிய எண்வகை மெய்ப்பாடுகளும் கண் முதலிய உறுப்புக்களிலே விளங்கித் தோன்றுமாறு கூத்தாடவல்ல ஆடுகளமகளொருத்தி, தனது கூத்தியல் நன்கு விளங்கி அவையினர்க்குத் தோன்றும் பொருட்டு, அழகிய ஆடரங்கும், ஓவியத் திரைகளும், பல்வேறு இசைக் கருவிகளும், சுடர்விளக்கங்களும் சிறப்ப அமைத்துக்கொண்டு, அவைகள பொலிந்து தோன்றுதற்குரிய வேனிறகாலத்து இரவுப்பொழுதினையும், தேர்ந்துகொண்டு, கூத்தியற்றி அவையினரைப் பெரிதும மகிழ்வித்தல் காண்டும்; மேலும், அவள அவலச்சுவையை வெளிப்படுத்துங் கால அதற்கேற்ற ஆடைகளையும, காமச் சுவையைப் புலப்படுத் துங்கால் அதற்கேற்ற ஆடைகளையும் உடுத்து வருதலும் காண்டும் அங்ஙனமே, புணாதல் முதலிய ஐவகை அன்பொழுக்கத்தின் கருததழகை ஒதுவாாக்கு விளக்க முற்படும் நல்லிசைப் புலவனும, அவ்வொழுக்கங்கட்கு ஏற்ற முதற் பொருளையும், கருப்பொருள களையும, தனது செய்யுளிலே நன்கு புலப்படுத்திக் தான் கருதிய உரிப்பொருள் நன்கு விளங்கும்படி செய்கின்றான இச்செயலை, "நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும பாடல்சான்ற புலனெறி வழக்கம்" என ஆசிரியர் தொல்காப்பியனாரால் கூறப்பட்டதாகும்.

இனி, இக் குறுந்தொகை, அன்பொடு புணர்ந்த ஐந்திணையை உரிப்பொருளாகக் கொண்டு, நில முதலிய முதற் பொருள்களையும், கருப்பொருள்களையும், அவ்வுரிப் பொருட் கிணங்க விரித்து, நாடக வழக்கத்தானே தலைவன் முதலிய உறுப்பினர் கூற்றாகச் சிறுபான்மை உலக வழக்குந் தழீஇப் புனையப்பட்ட அருமந்த செய்யுட்டொகுதி என உணர்தல் வேண்டும்.

## ௩. நுவலுந்திறன்

இனி இக் குறுந்தொகையின்கண் அடங்கிய தீஞ்சுவைச் செய்யுள்களைப் புனைந்த நல்லிசைப் புலவர்கள் அவற்றை யாத்துள்ள அழகினைச் சிறிது ஆராய்வாம். ஓவியத்துறை கைபோகிய ஒரு கலைஞன், தனக்குச் சிறப்பாக அமைந்துள்ள அழகுணர்ச்சியானே இறைவனாற் படைக்கப்பட்ட அகல்விசும்பினிடத்தும், அவ் விசும்பின்கண் திங்கள்மண்டிலம், ஞாயிற்று மண்டிலம், விண்மீன் முதலியவற்றினும், கடலிடத்தும், நால்வகை நிலத்தினும் கானகங்களினும், மயில் முதலிய பறவைகளிடத்தும், யானை முதலிய விலங்குகளினிடத்தும் ஏனைப் பிற பொருள்களிடத்தும், ஆடவர் மகளிர் முதியோர் ஆகிய பலவேறு மாந்தரிடத்தும், கண்டு இன்னே

இளைஞர்
நுகர்ந்து



இன் புற்ற அழகினைத் தான் உணர்ந்
ததினும் சிறப்பக் காண்போர் உணர்ந்தின்
புறுமாறு, வறிய கிழியினகண், பொன்மை
முதலிய வன்ன ஙகளை யும் தூகிலிகை கலையும
கொண்டு ஒவியமாகத தீட்டுகின்றான். இங்ஙனம
அவன் கண்டோர் கண்ணையும் மனத்தையும
கவர்கின்ற ஓவியந் தீட்டுதற்கு ஏது வாவது
அவன் ஏனை யோரினும் பார்க்க
உலகியற்பொருள் களின் அழகைக் கூர்ந்
துநோக்கியுணரும் உணர்ச்சி வன்மை
யுடையனாதலே ஆகும். இவ் வுலகின்கண் தனது
ஓவியத்திற்
குரிய அழகுக்குறிப்புகளை அவன்
நிலை கண்டானுமல்லன்; பற்பல
ஒருபொழுதிலே, ஓரிடத்
பொழுதுகளிலே பற்பல
இடங்களிலே அவன அவைபிற்றை உணர்ந்து
தன் உள்ள ததி னுள் ளே உருப்படுத்திக்

கொள்கின்றான் கூர்ந்துணரும உணர்ச்சி வலிமையானே இயற்கையின் கண் தான் கண்ட அமைகுறையான எழிற்கூறுபாடுகளை, ஓவியமாக்குங்கால் நிறைவு படுத்தித் தீட்டுகின்றான் அங்ஙனம தீட் டப்பட்ட ஓவியங் களிலே முதற்பொருளும கருப்பொருளுமாகிய காட்சிப் பொருள்களின் அழகு வெளிப்பாட்டினும அவ் வோ வியத்தே உருப்பெற்ற நங்கையின் முகத்திலே வெளிப்பட்டுத் தோன்றும் காமமுதலிய குண வெளிப்பாடே அவ் வோவியத்தின் உயிராயமைந்து காட்சியாளரைப் பேரின்பத்தில் திளைக்கச் செய்வதாதலை உணரலாம்.

இவ் வோவியப் புலவன் போலவே, நல்லிசைப்புலவனும் தனது செய்யுட்கு முதலாக அமைந்த அழகுப் பண்புகளை உலகின் பலவேறு பொருள்களினும், பல்வேறு காலங்களினும கண்டு கண்டு தன் னுள் ளத்தே அமைத்துக் கொள்பவனா கின்றான். ஓவியப் புலவன் வண்ணமும கிழியும் கொள்வது போன்று, இயற் புலவன் நல்லியல் புடைய நால்வகைச் சொற்களையே கொண்டு தான் உணர்ந்த அழகெல்லாம தன் செய்யுளைப பயில்வோரும் உணருபடி இனிய செய்யுளாகப் புனைந்து தருகின்றான் எனவே, செய்யுளகள் அழகுப்

பண்பின் பிழிவுகளே
ஆகின்றன. மங்கிமடியும்
தீட்டியமையாலே ஓவியம்
கிழியும் வண்ணமும் கொண்டு
காலத்திலே அழிந்தொழிய, நல்
லிசைப் புலவன் தீட்டிய செய்யுள் ஓவியமோ
கடவுட்டன் மை யுடைய சொல்லாலே
தீட்டப்பட்ட மையானே அக் கடவுளே போல்
காலத்தை வென்று என்றும் நின்று
நிலவுவதாகின்றது.

இனி, இக குறுந்தொகையிற் காணப்படும்
சீரிய கருத்
தோவியங்கள தமது எழிலானே தமமை ஆக்கிய நல்லிசைப்
புலவர்களின் நுண்மாண் நுழைபுலனின் சிறப்பினை நன்கு புலப்
படுத்துகின்றன. மேலும் பிற்றைநாட்புலவர்
கட்கும் அவர்



கட்கும் உள்ள வேற்றுமைகளையும் அவைகள்
தெரியக் காட்டி நிற்கின்றன.

வடமொழி முதலிய பிறமொழிவாணர்கள் தங்கள் இலக்கியங்களை ஆக்குதற்குப் பெரும்பாலும் அறிவொடு பொருந்தாத கற்பனைகளையே பயில வழங்குவராயினர் பாற்கடலும், கருப்பஞ் சாற்றுக் கடலும், மேலுலகங்களும், கீழுலகங்களும்,

அரக்கர்களும், தேவர்களும், பிசாசர்களும், இன்னோரன்ன பொருந்தாப் புனைவுகளை அவர்கள் இலக்கியங்களில் யாண்டுங் காணலாம். பல்லாயிரம் ஆண்டு உயிர்வாழ்ந்திருப்போரையும், பதினாயிரம் மகளிரை மணந்தோர்களையும் அவர்கள் இலக்கியங்களிலே காண்கின்றோம். இப் புனைவுகள் ஆராய்ச்சி அறிவிற்குச் சிறிதும் பொருந்தாத பொய்ப் புனைவுகளே யாகும் அன்றோ! நந்தமிழ் நாட்டுப் பிற்றைநாட்புலவர்களும் "இனத்தைக் காக்கும் அறிவு" என்றபடி அவ் வடவர் கூட்டுறவானே நல்லறிவிழந்து அவர் நெறியே பற்றிப் பிற்றை நாள் வீண்படும் இலக்கியங்கள் பலவற்றை யாத்து அவம் போயினர்

நம் சங்ககாலத்து இலக்கியங்களிலே, இத்தகைய பொருந்தாப் புனைவுகளை யாண்டும் காண்டல் அரிது. ஒரோவழி யாண்டேனும்

காணப்படுவனவும் அக் காலத்தே வடவர் கேண்மையானே வந்த சிறிய இழுக்குகளாகவே காணப்படுகின்றன. நம் பழம்புலவர்கள் உலகியற் பொருள்களின் இயல்பினை யாண்டும் தன்மைநவிற்சியானே விளக்குவதைக் காணலாம். தாங்கூறும் பொருளை புலப்பாட்டின்பொருட்டு, உவமையணியை அவர்கள் வழங்குகின்றனர் இக் காரணத்தானே இக் குறுந்தொகை முதலிய இலக்கியங்கள் இயற்கையை நன்கு பொருந்தத் தழுவிச் செல்வதைக் காணலாம். எடுத்துக் காட்டாக ஒரு செய்யுளைக் காட்டுதும்.

பாலதாணையானே ஒரு பூம்பொழிலின்கண் தம்முள் தாமே தலைப்பட்டு யாழோர் மணம் புணர்ந்த தலைவனும் தலைவியும், பிற்றை நாள்—தலைவி இற்செறிக்கப்பட்டமையானே—ஒருவரை ஒருவர் கண்டளவளாவப் பெறாது வருந்துகின்றனர். தலைவியின் உசாத்துணையாகிய தோழியின் உதவியாலே, தலைவன் ஊர் துஞ்சும் நள்ளியாமத்திலே புலிவழங்கும் காட்டினூடே தமியனாய்த் தலைவியின் மனைக்கு வருகின்றான். அன்றிரவு திசையிருண்டு வானம் முகிலான் மறைக்கப்பட்டு விடாது மழை பொழிந்து கொண்டிருக்கின்றது

ஈண்டுத் தலைவியும் தோழியும் "அந்தோ! இக்கொடிய இரவிலே யாம் நம்பெருமானை 'வருக என்று கூறிவிட்டோமே!



இவ் விடா மழையினூடே அவர் வரின் என்னுவர்?" என்று
எண்ணி நடுங்குகின்றனர். அங்ஙனம் நடுங்கி திசை நோக்கி நிற்கும் தோழியின் முன்னே,
அவன் வருந்
தலைவன் வந்து
நிற்கின்றான். அவன் வருகை கண்ட தோழி அச்சத்தாலே நடுங்கிக் கூறுவதனைக் கேளுங்கள்.

"பெயல்கண் மறைத்தலின் விசும்புகா ணலையே!
நீர்பரந் தொழுகலின் நிலங்கா ணலையே!
எல்லை சேறலின் இருள்பெரிது பட்டன்று!
பல்லோர் துஞ்சும் பானாட் கங்குல்
யாங்குவந் தனையோ ஓங்கல் வெற்ப!
வேங்கை கமழும் சிறுகுடி
யாங்கறிந் தனையோ நோகோ யானே!" (நட

நிஞ)

என்பதாம். இச்செய்யுள் உலகியலோடு சிறிதும் மாறுபடாமற் பொருந்த இணைந்தியங்குவதை உணர்க. இச்செய்யுளினது இணையற்ற பாவிகம் இதன் ஒவ்வோரடியினும் தெற்றெனப் புலப்படுவதனை உணர்ச்சி மிக்கோர் உணர்வது ஒருதலை. இச் செய்யுள், ஒரு சார் அவலச் சுவையையும், மற்றொரு சார் உயிரையும் கீழாக மதிக்கும் காதல் வலிமையையும், மற்றொரு சார் காதல் தன்னலத்தை மறுத்துக் காதல்செய்யப்பட்டாரின் நலத்தையே ஓம்புதற்கு விதுப்புற்று நிற்றலையும், கூதிர் காலத்து நள்ளிரவின்கண் பெருமழை பொழியும் காட்சியையும் பயில்வோருளத்தே ஒரு சேரக் கொணர்ந்து குவித்து விடுவதனையும் உணர்க

ஆசிரியர் திருவள்ளுவனார்,

" அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்

புன்க ணீர் பூசல் தரும் ”
(குறள்-எ க) என்னும் திருக்குறளானே, அன்பினதுண்மை அன்பு செய்யப்பட்டாரது துனபங கண்டுழியே வெளிப்பட்டுத் தோன்றும் என்றார். கருதவொத்த காதலர்கள் இடையீடின்றி உடனுறைதல் அவர்க்குப் பேரின்பமே தரும் செயலாயினும, அவ்வின்பத்தை அவர்கள தத்தம் உளளத்துணர்வானே நுகர்தலன்றிப் புறத்தார்க்கு அவர்தம் அன்பின் பெருமை அவ்வுடனுறைவானே விளங்கித் தோன்றுமாறில்லை. எனவே, அவ்வன்பினது மாண்பினைக் காதலருடைய சொற்களானும், செயல்களானும், வெளிப்படுத்திப் பாவிகமாக்கிக் காட்டக் கருதிய நல்லிசைப புலவர்கள், அக் காதலர்களின் உடனுறைதற் காட்சியை விரும்புவதில்லை.
குறிஞ்சி யொழுக்கம்
னும இற்செறிப்பு
புணர்தலாக இருந்தும் அவ்வொழுக்கத்தி
முதலிய • இடையூறுகளைப் படைத்துக்

கொண்டு நொடிப் பொழுதும் பிரிந்துறைதலாற்றாத காதலர்களை நெடிது பிரித்துக் காட்டி அவர் தம் சொற்களினின்றும் செயல்களினின்றும் அக் காதலினது பெருமையெல்லாம் நமக்குப்புலப் படுத்துகின்றனர்.

கூதிர்ப் பருவத்து நள்ளிர விலே, புலியும் கரடியும் களிறும் பாம்பும் இரைதேர்ந்து திரிகின்ற மலையிடைச் சிறு நெறியிலே, அடர்ந்த காட்டினூடே, துணை யாவார் யாருமின்றித் தன் காதலை வழி காட்ட வரும் அவ்விளைஞன் உயிரினும் சிறந்தது காதல் என்பதனைத் தன் ஒழுக்கத்தானே விளக்குகின்றான்.

இனித் தலைவனைக் காணப் பெறாது இற்செறிக்கப்பட்ட தலைவியோ, கண் விதுப்புற்றுத் தோள் நெகிழ்ந்து உலகெல்லாந் துயிலும் நள்ளிரவினும் துயிலாது நலிகின்றாள் இங்ஙனம் இருக்கவும், தோழி தன்முன் வந்து நின்ற தலைவனைக் கடிதல் காதலன்பின் ஒப்பற்ற அழகைக் காண்டற்குப் புலப்படுத்துகின்றது. என்னை? காதலன்பிற் கட்டுண்ட தலைவன் தலைவியர் இருவரும் ஒருவரையொருவர் பிரிந்து தனித்துறையுங்கால் அவர்கள்

படும் ஆற்றொணுத் துன்பங்கள் அவர்களின் அகத்துறையும் அன்பின் பெருமையை நன்கு புலப்படுத்தப் போதியவே எனினும் இந் நிலையினும் பார்க்க அவ் அன்பினை வெளிப்படுத்தும் உயரிய நிலையும் ஒன்றுண்டு; அது யாதெனின், பிரிந்துறைவோர் தத்தம் தனிமைத் துன்பத்திற்குத் தாமே ஆற்றாராவது போக்கித் தம்பிற் பிரிந்துறைவார் நிலையை எண்ணித் தம் துயர் மறந்து அவர் நிலைக்கே பரிந்து வருந்துமொரு காட்சியே யாகும். அன்புடைமையை வெளிப்படுத்த இந் நிலையினும் சிறந்தது பிறிதில்லை என்றே கருதி நல்லிசைப் புலவரான கம்ப நாடரும், தங்காப்பியத்தின் முதனூலாகிய வான்மீகி இராமாயணத்திலே காணப்படாதிருந்தும் அரக்கன் சிறையிலே அருந்துயர் எய்திய சீதை, தன்னிலையை மறந்து தன் தலைவனது நிலையை உன்னி உன்னி வருந்துவாளாக,

" அருந்தும் மெல்லடகு ஆரிட அருந்தும் என்றழுங்கும்
விருந்து கண்டபோது என் உறுமோ என்று விம்மும்
மருந்தும் உண்டுகொல் யான்கொண்ட நோய்க்
கென்று மயங்கும்
இருந்த மாநிலம் செல்லரித் திடவும்ஆண் டெழாதாள்
"

எனச் செய்யுள் புனைந்து காட்டுவாராயினர்.

இக்கு று ங்தொகை கயில் ஈண் டுக் கா ட்டபபட்ட செய்யுளும் இத்துறை பற்றியே இயற்றப்பட்டதாதல் உணர்க. " பெயல் கண் மறைத்தலின் விசும்பு காணலேயே ! நீர் பரந்தொழுகலின்



நிலங்காணலேயே ! என் று வரும் அடிகள் தோழியினது அக நிலையையும அவள து மருட்கையையு ம எ த்துணை த் தெளிவாகப் புலப்படுத்துக்கின் றன.

இ ரவி ன் கண் வழிப் போவா ர் வானத்தின்கண் மின் னி மிளிரும விண் மீன் களைக கொண்டு திசை தெரிந்து செல்லுவர். வானமோ சிறி து ப் இட மின் றி பு கில்க ள ானே மறைக்கப்பட் டுள து. இஙஙன மாகவும நீ எ வ்வா று தான் திசை தெரிந்து வந்தாயோ ! என் று ம், இடையறாது பெய்கின் ற மழையானே நிலத்தின்கண் யாண்டும நீர் பெருகி வழிகளேயும் மறைத்து ஒழுகுதலானே வழி கூட அறி ந்து கொ ள ள வியலாதே! இங்ஙன மாகவு ம

எவ்வாறு தான் வந்தாயோ! என்றும், ஏனையி ரவுகளினும் பார்க்கச் செறிந்து கிடக்கும அந்நள் ளிருளை நோக்கி மருள்வாள், 'இருள் பெரிது பட்டன்று' என்றாய், உலகிலே உள்ள மாந்தரெல்லாம் துயில் கோடலின் யாண்டும் அமைதி நிலவி அச்சத்தையே தூண்டா இடையிரவாயிற்றே இதன்கண் எவ்வாறு தான் வந் தனையோ! என்பாள, 'பல்லோர் துஞ்சும் பாணாட் கங்குல்' என்றாய், எப்பூரோ கோபுரமும் மதிலும் மாடங்களுமமைந்த நகரமு போலாது, இக்காட்டினூடே மூழ்கிப் புறத்தார க்குப் புலனாகாத சிறிய ஊர்; இப்பேரிருளிலே இவ்வூர் இருக்குமிட தனைத தான் நீ அறிந்து வந்தவெவ்வாறு? எனவியப்பாள், 'எம சிறு குடி யாங்கறிந்தனையோ!' என்றும், இத்தோழி விதிர் விதிரத்து அடுத்தடுத்து வினவும் மொழிகள்

நமது இரக்கத்தைத
வமயத்தே இவ்வாறு

தூண்டி, "ஏனை இவ்விளைஞன் இவ்
வநதான்!" என நமமையும் அத்தோழி
யோடே நோகுமாறு செய்து விடுகின்றன
வல்லவோ!

இப்பேரிரு ளிலே நீ இ ங்ஙு ன ம் வந்தமைக்க ா க யாங்கள் மகிழ்கின் றேம என் ருது, நின் வருகைக்கு யான் பெரிதும வருந்துவேன் என்னும் போதோ இச்செய்யுளின் பா விகம் மிக மிக உயர்ந்து சுவைபபதாகின் றது. இத்துறையிலே நிகழ்கின்ற செய்யுள் இன்னும் பற்பல இக்குறுந்தொகையிலே உள்ளன.

## ரு. சொல்லமைதி

இனி, இக் குறுந்தொகைச் செய்யுள்களின் அடங்கிய சொல்லமைதியினைச் சிறிது காண்பாம். ஓவியம் தீட்டுவோன் ஒரு மகளின் உருவமமைய அவ்வோவியத்தின் புறங்கோடுகளை வரைந்த மாத்திரையானே, இவ்வுருவம ஒரு மகளின் உருவம் எனக் காண்போர்க்குப் புலனாகிவிடும். அங்ஙனம புலனாகும் அளவன்றி, அவ்வோவியத்தின் எழிலிலே உள்ளம் ஈடுபடும்படி செய்வதற்கு அக் கோடுகள் மட்டும் அமையாவாம். மேலும்,

அவ் வோவியன் தனது மெல்லிய தூகிலிகையா லே பல்வேறு வன்னங்களை வன்மையும மென மையும்பட இனிதே தீட்டிய பின்னரே அவவோவியம் கண் கவர் வனப்புடையதாகத் திகழ்கின்றது இவ் வோவியன் செயல் போன்றே நமது பண்டைக்கால நல்லிசைப் புலவர்கள் தாம் சொல்லும் சொற்களின் பொருள் அதற்குரிய சிறப்புப் பண்பும குணப் பண்பும் பிறவும விளங்கித் தோன்றும்படி செய்ய ஒருவகை உபாயத்தை மேற் கொள்கின்றனர். அஃதாவது, யாதானும ஒரு பொருளைச் சொல்லக் கருதும்போது, அப்பொருளின் சிறப்பியல்களும அப் பொருளின தோற்றத்தோடே ஒருங்கே தோன்றும்படி அடைமொழிகளாகுதல், உவமையாகுதல, புனைந்து அழகுறுத்திக் கூறுதலேயாகும இந நெறியைக் கையாளுதற்கு உலகியற் பொருளகளை அப் புலவர் பெருமக்கள கூர்ந்து நோக்கி, அவையிற்றின் சிறப்பியல்புகளை நன்குணர்ந்திருந்தமையே காரணமாகும். பிற்றை நாட் புலவர்கள இவ்வுணர்ச்சி குறைந்தமையானே, இந் நெறியைப் பெரிதும் புறக்கணித்து விட்டனர். பண்டைத் தமிழப புலவர்கள சொற்களைப் புனையும் அழகினை இந நூலினின்றும கீழே காட்டுகின்ற தொடர்களிலே

காண்க.

சிறுமி : "அரும்பிய சுணங்கின் அம்பகட் டிளமுலைப் பெருநகைதோள் நாறுகிய அசுப்பிற் கல்கெழு கானவர் குறுமகள்," கடல் "நீனிற விரி நீர்ப் பெருங் கடல்" வானம் : "அகலிரு விசும்பு", மழை; "மின்னுச் செய் கருவிய பெயன் மழை", நெருஞ்சிப் பூ: "புன்புலைத் தமன்ற சிறியிலை நெருஞ்சிக் கட்கின் புதுமலா", வெளவால்: "நீல மென்சிறை வள்ளுகிர்ப் பறவை", தினை : "பைந்தாட் செந்தினை", அரவு: "பொறி வரி வெஞ்சின அரவு", நள்ளிரவு: உருமுரறும் அரையிருள நடுநாள", ஆண்மான் : "நெறிகோட் டிரலைமான்", ஆம்பல்: "அந்தண் பழனத்து ஏந்தெழின் மலர தூம்புடைத் திரளகால்

ஆமபல்". குளம்: "கடும்புனல் அடைகரை நெடுங்கயம" ஆண்புலி: "குழுங்கை இரும்புலிக் கோள்வல் ஏற்றை", ஆவிரம்பூ: "பொன்னேர் ஆவிரைப் புதுமலர்", கள்ளிக்கிளை: "பொரிகாற் கள்ளி விரிகாய் அங்கவடு", ஈங்கைப்பூ: "நுண் முள்ளீங்கைச் செவ்வரும்பு ஊழ்த்த வண்ணத துய்ம்மலர்," பாடலி நகரம்: "பொன்மலி பாடலி," அன்றில்: "நெருப்பி னன்ன செந்தலை அன்றில்;", என வரும்.

இங்ஙனம் சொற்களை அடை புணர்த்து அவற்றின் சிறப்பியல்பெலாந் தோன்றக் கூறுதல் உலக வழக்கன்று கட்டுரை

களினும இங்ஙனம் கூறுதலில்லை. இவ்வழக்குச் செய்யுட்கே சிறந்துரிமையுடைய தொரு வழககாம். பண்டைநாட் புலவர்கள்



தாம் கூறும் சொல்லினது பொருள் நன்கு புலப்படும் பொருட்டு இவ்வுபாயத்தைக் கைக்கொண்டனர். பெரும்பாலும், பொருளொடு பொருந்தாத அடைமொழிகளை எதுகை மோனைகளின் பொருட்டு அவர்கள் சொற்களோடு பொருத்திப் புனைதலைக் காண்டல் அரிது வார்க்து இன்பஞ்

செய்யுளின் ஓசை இழுமென ஒழுகிப் பயில் செய்யும் பொருட்டுக் குறைச் சொற்களாகிய எச்சங்களைப் பெரும்பாலும் திரித்து அளபெடைச் சொற்களாக்கி வழங்குவதை யாண்டுங் காணலாம்; அவை :

" பயில்லியது செபீஇய நட்பு," " பைந்தாது படீஇயர்," "மாசறக் கழீஇய யானை," "அகனறத் தழீஇக் கேட்குநா,"
"மெய்யுறன் மரீஇய," "மலரிற் சாஅய்," "மள்ளா குழீஇய," "மகளிர் தழீஇய," "கலிங்கம் கழாஅ துடீஇ," எனவரும இனி, இவ்வெச்சச் சொற்களேயன்றிக் குறிய ஓசையுடைய பெயாச் சொற்களேயும், சிறுபான்மை அளபெடை புணாதது செவிக் கினிமை பயப்பச் செய்தல் காணலாம். அவை, "குரீஇ" (குருவி) "பரீஇ" (பருத்தி) "யாஅம்" (யாமரம) "சேஎய்" (சேய்—முருகன்) எனவரும. யாம மேலே காட்டிய சொற்றொடர்கள் ஓதுவார்க்குப் பொருள் புலப்படுத்துவதனோடு வீறுடைய தனித் தமிழ்ச்சொற்களின் தொடையலாய்ச் சிறந்த மணிமாலைகள் போன்று வனப்பெய்தி இன்பம செய்தலேயும் ஓதியுணர்க.

## ௩. உவமை யமைதி

ஒரு பொருளேக் கூற்றுன் உணர்த்துவோர், கேட்போர்க்கு அதனேடு ஒப்புடைய பொருளே உவமைகூறி உணர்த்துதலே உலகியலினும பரக்கக் காணலாம. பொருள் புலப்பாடு திறவிதிற் செய்யும நல்லிசைப் புலவர்களுக்கும உவமை கூறல் இன்றியமையாததாகின்றது. இதன்

இன்றியமையாமை பற்றியே ஆசிரியர் தொல்காப்பியனார், "உவம இயல" என ஓரியல் வகுத்து, அது உலக வழக்கிற்கும் செய்யுள் வழக்கிற்கும பொதுவாம என்னும் கருத்தானே மெய்ப்பாட்டியலுக்குப் பின்னர்ச் செய்யுளியலைச் சாரவைத்து அதன் இயல் எல்லாம நுண்ணிதின் ஆராய்ந்து வரையறை செய்தனர இவ் வுவமைக்குப் பொருளோடே நெருங்கிய பொதுத்தன்மை யுண்மையை நன்கு ஆராய்ந்து, உவமையும பொருளும சாலப பொருந்தின என்று உலகத்தார மகிழும்படியே பண்டைநாட் புலவர்கள் தேர்ந்தமைத்துச் செய்யுள் புனைந்தனர் என்பதனை, இக் குறுந் தொகையினுள் யாண்டுங்
காணலாம். "பொன் போல் ஆவிரை" "பூப்போல் உண்கண்" எனச் சொற்பொருள் விளக்கம் பற்றி வரும் சிறுசிறு உவமைகளினும் இப் பொதுத்தன்மையின் நெருக்கத்தினை நன்குணரலாம்.

இனிச் செய்யுளிற் றிரண்ட கருத்துப் பொருட்டு இக் குறுந்தொகையில் வரும் பொருளை விளக்கும்
உவமை மாண்பினை
யும் சிறிது ஆராய்வாம்.

ஓரிடத்தே ஒரு பரத்தை தன்னை ஒரீஇத் தலைவியின் மனையில் வதிகின்ற தலைவனைப பழிக்கத் தொடங்கினள். 'அத் தலைவன் தனக்கென்று ஒரு சிறிதும் அறிவுடையானலலன், ஆகலின் அவன் மனைவியின் சொற்கேட்டு அவள் கூறியபடியெல்லாம நடப்பவன் ஆகிவிட்டான், அவன் எமமை ஒரீஇ இருத்தற்கு யாம் குறைபாடுடையே மல்லேம்' எனத் தலைவனை அவள பழிக்கின்றாள. அவள இக் கருத்தினை விளக்கக்கூறும் உவமை உளளி உள்ளி மகிழற்பாலதாம. அது வருமாறு,

"கழனி மாஅத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉ மூரன்
எம்மிற் பெருமொழி கூறித் தம்மில்
கையுங் காலுந் தூக்கத் தூக்கும்
ஆடிப் பாவை போல
மேவன செய்யுந்தன் புதல்வன் தாய்க்கே."
(அ)

என்பதாம்.

ஆலங்குடி வங்கனூர் என்னும் நல்லிசைப் புலவர் இயற்றிய செய்யுளாகும இது. இதன் கண் வரும் வெளிப்படை உவமை வினைபற்றி வந்ததாகும். மேலும், இதன் கண் மறைந்துறையும் உவமையும் ஒன்றுளது அதனைப் பின்னர் விளக்குவாம். இதன் கண் ஆடிப்பாவை என்றது தலைவனுக்கு உவமை. ஆடிப்பாவை யாவது: கண்ணாடி நோக்குவோர்க்கு அக் கண்ணாடிக்குள்ளே தோன்றும அவருடைய எதிருருவம் கண்ணாடிக்குள் தோன்றும் பாவைக்கு ஒரு சிறிதும உணர்ச்சியின்றென்பது யாவரும் அறிவர். அங்ஙனம் உணர்ச்சியற்ற அப் பாவையோ, தன் முதலுருவம செய்யும் தொழிலை எல்லாம் தவறாமற் செய்கின்றது. இந்தப் பாவைபோன்றே தலைவன் தனக்கென அறிவில்லாதவனாய், தலைவி செய்விப்பன எல்லாம் செய்பவனாய் அவளிடத்தே அடங்கினான் என்பாள், ஆடிப் பாவையின் செயலை உவமித்தாள். கதிர் நின்றார் கையும் காலும் தூக்க ஆடிப்பாவையும் தூக்குதலை யாம் அறிவேமல்லமோ! இத்தனை நெருக்கமான உவமை தேர்ந்து கூறுதல் உணர்ச்சிமிக்கார்க் கன்றி ஏனையோர்க்கேலாதாம்.

இனி, இவ்வுவமையினது அழகிலே உள்ளம் பறிகொடுத்த பிற்றைநாட் புலவர் சிலர், இதனைப் பொன்போற் போற்றித்தத் தஞ் செய்யுளிலே பொதிந்து வைப்பாராயினர். சீவகசிந்தாமணி



யிலே " மூடி இவ்வுலக மெல்லாம் நின்னடித் தருவல் இன் னே, ஆடியுட் பாவை போனீ அணங்கிய தணங்க வென்றான " என் றும், இதனினும் சிறப்ப, ஞானமிர்தத்திலே " மாற்றிரி, ஆடிப் பாவையோடு அலர் நிழற்பாவை நகால் மெய்பிறிது எவையும் பைப்பையத் தூக்கிற் றாக்கிமே லுயர்தல் ", என்றும், தமிழ் விடு தூதின கண், "ஆடிவநத நற்பாவைபோல் அடியார்கூட விளையாடி வந்த கோமானே " எனவும் வருதலுணர்க

இனி, இச் செய்யுளின்கண் வெளிப்படையாகத் தலைவன் பழிக் கப்படுதலை இவ்வுவமை நன்கு விளக்குகின்றது. இச் செய் யுளின்கண் முன்னின்ற,

"கழனி மாஅத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉம் ஊரன்."

என்றதும ஒரு அழகான உவமமேயாகும். அகப்பொருட் செய்யுட்கு, முன்னர்க்காட்டிய உவமத்தினும் இவ்வுவமமே சாலச சிறந்ததாம்.

செய்யுளின்கண், வெளிப்படக் கிளந்தோதும் பொருளினும் ஆழ்ந்து நோககும இயல்புடைய நுண்ணுர்விஞர்க்கு மட்டுமே
புலஞகும் குறிபபுப பொருளே ஆற்றவும இன்பம் செய்வதாம் இன்பம பற்றிய அகபபொருட்பகுதிக்கு வெளிப்படைப் பொருளினும குறிப்புப் பொருளே சிறப்புடையதாம் எனபது சான்றோர் கொள்கை இச்செய்யுளின்கண் கூறப்பட்ட ஆடிப் பாவை உவமை யாவாக்கும ஓதும்போதே தெற்றெனை வெளிப் பட்டுவிட்டது. இவ்வுவமை போன்றே முன்னிரண்டடிகளிலே ஆலங்குடி வங்கஞர் ஒரு அழகான உவமை கூறிவைத்துள் ளார. ஆடிப்பாவை உவமை போல இது தெற்றெனை வெளிப்பட வேண்டா; செய்யுளை ஆழ்ந்து நோக்குவார்கது மட்டுமே அது புலப்படுதாக என்பது அந் நல்லிசைப் புலவரின் கருத்து இங் ஙனம் வரும் உவமையே உள்ளுறையுவமம எனப்படும்.

உவமஇயலின் கண் இவ்வுள்ளுறை வுவமையை விரிவாக ஆராய்ந்துள்ளனர். மேலும், அகத்திணை யியலிலே இவ்வுள்ளுறையுவமம் பிறக்கும் நிலனும், அதன் றன்மையும் கூறியுள்ளார,

“உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலன் எனக்
கொள்ளும் என்ப குறியறிந் தோரே (அகத்-௪௯)

என்னும் இந் நூற்பா, உள்ளுறை தோன்றும் நிலம் உணர்த்துகின்றது.



உள்ளுறை உவமம் தெய்வம் முதலிய கருப்பொருள்களுள் தெய்வத்தை ஒழித்து, ஒழிந்த கருப்பொருள்களே தனக்குத் தோன்றுமிடம் நிலனாகக் கொண்டு புலப்படும் என்பது, இதன் பொருளாம

“உள்ளுறுத் து இதனொடு ஒத்துப் பொருள் முடிகென
உள்ளுறுத்து இறுவதை உள்ளுறை உவமம்” (அகத் ௪அ.)

எனவரும் நூற்பா அவ்வுள்ளுறையுவமம் கொள்ளும் ஆறு கூறுகின்றது. இதன் பொருள்: செய்யுளை யாக்கும் புலவன் ஒருவன், யான் புலப்படக் கூறுகின்ற இவ்வுவமத்தோடே புலப்படக் கூறாத உவமிக்கப்படும் பொருள் ஒத்து முடிவதாக என்று தன் உள்ளத்தே கருதித் தான் அங்ஙனம் கருதும் மாத்திரையே யன்றியும், கேட்டோர் மனத்தின் கண்ணும் அவ்வாறே நிகழ்த்துவித்து, அங்ஙனம் உணர்த்துதற்கு உறுப்பாகிய சொல்லெல்லாம் நிறையக்கொண்டு முடிவது உள்ளுறை உவமம் ஆகும் என்பதாம.

வியப்பு! வியப்பு!! தமிழ் நூலோர் வகுத்த இவ்விதிகள் அவர்களது கலையுணர்ச்சியின் நுணுக்கத்தை நன்குணர்த்தி
நம்மை வியக்கும்படி செய்கின்றனவல்லவோ
தொகை முதலிய அகப்பறிய நூல்களிலே,
இக் குறுந்
இவ்வுள்ளுறை
யுவமத்தை யாண்டுங் கா
ணலாம். "உணர்ச்சியாயின் உணர்வோர் வலித்தே"
என்பர் தொல்காப்பியர் இவ்வுள

ளுறையுவமங்கள்
தபமை ஆக்கிய புலவரின் கருத்திதுவெனப பயில்வோர்க்கு மெலல மெல்ல உணர்ததுங்கால் உண்டாகும் இனபம இலக்கி யங்களில் நுகரும் இன்பங்களிலே தலைசிறந்த இன் பமாம என்பது மிகையனறு இவ்வின்பம் ஏனை மொழிகளிலே எய்தப்படாத தனித்தமிழ்ப் பே ரின்பமும் ஆகும்.

இனி, "கழனி மாஅத்து விளைந்துகு தீம்பழம் பழன வாளை கதூஉமூரன்" என்னும இததொடரின்கண் பொதிந்துளள உள்ளுறை என்ன? கழனி, மாமரம், பழனம, வாளை என்பன வெல்லாம மருதக் கருப்பொருள்களே ஆகும். தலைவன்பால் ஊடல்கொண்ட பரததையே அவனைப் பழிக்கின்றுளாகலான மருததிணையின பாற்படும இசசெய்யுள், இதன்கண் வெளிப் படத் தலைவனை உவமை கூறிப் பழிக்கும பரததை, இவ்விரண் டடிகளிலே தனது மாண்பு தோன்ற உள்ளுறை பொதிவாளா யினள். அஃதாவது, அத் தலைவி தன்பால் வந்த தலைவனை மடக் கிக்கொண்டு தன் னில்லிலேயே வைத்துககொளளுமாறு போல யாம செய்யேம்! யாமோ மனங்கனிநது நமபால் வலிந்து வருவாரை மட்டுமே நுகரும் இயல்புடையேம எனத் தனக்

கோர் பெருமையை ஏறட்டுக் கொள்கின்றாள். அதனையே இவ் வுவமை உள்ளுறையாகக் கொண்டுள்ளது. எங்ஙனமெனின்,

வயல் வரம்பிலே நிற்கின்ற தேமாமரத்தின்கண்ணே தோன்றி முதிர்ந்த கனி, தானே கனிந்து காம்பற்று நீர்வாவியின்கண் வீழும்போது மட்டும் அந நீர்வாவியில் உறையும வாளை அதனை நுகர்வதாகின்றது அதுபோலத் தலைவன் நெஞ்சம் காமத்தாற் கனிந்து எம்மில்லந்திற்குத் தானே வரும்பொழுதே அவனை யாம் நுகர்வ • ன்றித் தலைவிபோல மடக்கிக்கொண்டு நுகர்வேமல்லேம் என்பதாம.

இனி, மற்றோரிடததே காம நோயாலே நீ மிகவும் உடல் மெலிந்தாய். இது நின் பெருமைகருத்த கவன்று காண் எனத் தன்னைத் தன் நண்பன் இடித்துரை ததபொழுது தலைவன், காம நோய் தன் வரைத்தாகாது பெருகி நலிதற்குக் கூறும் உவமை ஆற்றவும் இனிதாம். அது வருமாறு,

"இடிக்குநு கேளிர் நுங்குறை ஆகம்
நிறுக்க லாற்றின்றோ நன்று மற்றில்ல
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில்
கையில் ஊமன் கண்ணிற் காக்கும்
வெண்ணெய் உணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற்கு அரிதே"
(௫அ)

என்பதாம்.

ஞாயிறு, ஈண்டு காமநோய்க்கு உவமையாகும். வெவ்வறை- வெப்பமேறிய பாறைக்கல். அஃதீண்டு காமத் தீயாற் சுடப்பட்ட நெஞ்சிற்கு உவமை கையில ஊமன், செயலற்ற தலைவனுக்கு உவமை. வெண்ணெய் உணஙகல, உருகும் தலைவனுடலிற்கு உவமை. (இச்செய்யுளின் கண் அமைந்த உவமைகளை இங்ஙனம் பொருந்தக் காணாது, வெண்ணெய் உணங்கல் காமநோய்க்கு உவமையாகக் கருதுவாரும் உளர். அது பொருந்தாமை ஆராய்ந்து கண்டுகொள்க)

இனி, இவ்வுவமையின் கண் அமைந்த நெருங்கிய பொதுத் தன்மைகளை உணர்ந்து காண்மின். காமவொள்ளெரி வெதுப்பிய நெஞ்சம ஞா யிற்றின து வெயிலானே வெப்பமேறிய பாறைக் கல்லோடே எத்துணை ப் பொரு த்தமாகவுள து. ஞாயிற்றின் வெப்பம இயற கையின் உள தாதல் போன் று, காமநோயும் இயற்கையாக உளது என்பது குறிப்பு. அவ்வெப்பத்தில் உரு காது வெண்ணெய் காக்கப்படுதற்கு குளிர் நிழல் வேண்டுமாறு போல ஈண்டுத் தலைவியின் ஆதரவு ஆகிய

நிழல் வேண்டும். அணிந்துரை



உடல் சிந்தை வயத்ததாகலின் நெஞ்சத்தை ஆதாரமாகிய பாறையாகவும், உடல் ஆதேயம் ஆகிய வெண்ணெயாகவும் கூறப்பட்டன. உடல்நெஞ்சத்தின் வயத்தது என்றது நெஞ்சம் நலிந்துழி நலிந்துப், அது தழைத்துழித் தழைத்துங் காட்டலா லானும், அல்லதூஉம்,

> "நைவளம் நவிற்றுமொழி நண்ண வரலோடும்
> வையநுகர் கொற்றவனும் மாதவனு மல்லார்
> கைகள் தலைப்புக்கன கருத்துளது மெல்லாம்

தெய்வமென உற்ற உடல் சிந்தை வயம் அன்றோ'' எனவரும் கம்பநாடர் செய்யுளானும் தெளிக.

இனித் தலைவன் தன்னை, அவ்வெண்ணெய் காக்கும் கையில்லாத ஊமனோடு ஒப்பித்தது சாலவும் பொருத்தமாகும். என்னை? அவ்வூமன் வெண்ணெய் உருகாதிருத்தலையே விரும்புகின்றானாகவும், வெயிலான் அஃதுருகுமபோது, கையின்மையால் அதனை நிழலில் சேர்த்துப் பாதுகாத்தற்கியலாமையானும், ஊமனாகலிற் பிறர்பாற் கூறிக் காத்துக்கோடற் கியலாமையானும், பரிந்து வருந்துமாத்திரையே அமைவான். அங்ஙனமே, தலைவனும் தன் உடல் மெலியாதிருத்தலையே பெரிதும் விரும்புகின்றானாயினும், தானே தலைவியின்பாற் செல்ல வியலாதவனாகவும், மறைச்செய்தியாகலின் பிறர்பாற் கூறி அவளை எய்தமாட்டாதவனாகவும் இருந்து வருந்துகின்றான் அல்லனோ? இங்ஙனமே இக் குறுந்தொகையிற் பற்பல உவமைகள் அமைந்து பெரிதும இன்புறுத்துகின்றன.

## எ. செய்யுள் நுணுக்கம்

இக் குறுந்தொகைக்கண் அடங்கிய செய்யுள்கள் பலவும் பெரிதும் ஆழ்ந்த நுண்பொருள்களையுடையனவாய்த் திகழ்கின்றன . இக் குறுந்தொகைக்குப் புறத்துறுப்பாகப் பாரதம் பாடிய பெருந்தேவனாரால் பாடப்பட்ட கடவுள் வாழ்த்துச் செய் யுளும் இந்நூற் செய்யுளின் நுண் பொருட்கேற்பவே மிகவும் நுண்ணிதா ய் அமைந்துள்ளது.

ஒரு நூலின் தொடக்கச் செய்யுள் அந்நூல் நுதலிய பொருள்களைத் தன்னகத்தே கருவாக நுண்ணிதாகக் கொண்டிருத்தல் வேண்டும் என்பர் சான்றோர். நல்லிசைப் புலவர்களின் செய்யுள் அங்ஙனம் நிற்றலை, திருக்கோவையாரில் "திருவளர் தாமரை" என்று தொடங்கும் செய்யுட்குப் பேராசிரியர் விரித்த உரையானும் தெளியலாம். இக் குறுந்தொகைக் கடவுள் வாழ்த்து, செந்தமிழ்த் தெய்வமாகிய முருகப்பெருமானை வாழ்த்





தியதாகும். அகப்பொருண் மரபில் முருகப்பெருமான் புணர்தலும் புணர்தல் நிமித்தமுமாகிய குறிஞ்சிக் கடவுளாகக் கூறப் பட்டனர். தொகைநூல்களுள் இக் குறுந்தொகையே முதற் றொகை நூல் என்று இற்றை நாள் ஆராய்ச்சியாளரும் கூறுகிற் பர். பத்துப்பாட்டின் முதற்பாட்டும் திருமுருகாற்றுப் படை யாக அமைந்திருத்தலையும் நோக்குக. பாட்டின்முன் முருகப் பெருமான் வாழ்த்தாக முருகாற்றுப்படை அமைந்தாற் போன்று தொகை முன்னும் அக்கடவுளே வழிபடற்பாலார் என்று இப்புலவர் பெருமான் கரு

தினர் போலும். முதற் றொகை நூலுக்கு முதனிலமாகிய குறிஞ்சிக் கடவுள் வாழ்த்தே பொருத்தமாதலும் உணர்க. இரண்டாவதாகிய நற்றிணையின் கண் இரண்டாம் நிலக்கடவுளாகிய திருமாலை வாழ்த்தி யிருத்தலும் இக்கருத்தை வலியுறுத்தும். அஃதொக்கும், அங்ஙனம் ஆயின் மூன்றாந் தொகை நூலாகிய நெடுந்தொகையின்கண் இந் திரனை வழிபடவேண்டுமாலோ? எனின், அற்றன்று, சமயக்
கணக்கர்கள முருகப்பெருமானையும், திருமாலையும் முழுமுதற் கடவுளராகக் கொண்டு வழிபடுகின்றமையானும், அம் மாண்பி ஞேடே நிலக்கடவுள ராகும் சிறப் பும் உண்மையானும் முதலிரு தொகை நூல்களினும் முருகனையும் திருமாலையும் வணங்கி இந் திரனையும் வருணனையும் அங்ஙனம் வழிபடாமையின் ஏனை மூன்று தொகை நூல்களில் பிறவாயாக்கைப் பெரியோனையே வழிபடுவாராயினர் என்க.

இனி, இன்பம் நுதலிவந்த இக் குறு ந்தொகை முகப்பிலே அவ்வின்பப் பேற்றிற்கெல்லாம் ஏதுவாவது அப்பெருமானு டைய திருவருட் காவல் உண்மையே; ஆகலின், அந்நன்றி நினைந்து அப்பெருமான் திருவடிகளை வணங்கி மேலும் பேரின்

பப் பெருவாழ்வு எய்துமின் உலகீரே என
ஆற்றுப்படுப்பார்,

“ தாமரை புரையும் காமர் சேவடிப்
பவழத் தன்ன மேனித திகழொளிக்
குன்றி யேய்க்கும் உடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேல்
சேவலங கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகே ”

என, இனிதாக வாழ்த்துவாராயினர்.
‘‘தாமரைஎன்னும் அழகிய மங்கலச் சொல்லால
எடுத்து உலகே என்னும் மங்கலச் சொல் லோடு
முடியும இவ்வினிய செய்யுள , இக்
குறுந்தொகைக்குரிய
நான்கடிச் சிறுமைக்கும் எட்டடிப் பெருமைக்கும் நடுநின்ற
ஆறடியானே அமைந்துளளது. அறுமுகவொருவனை ஆறடிக



ளானே வாழ்த்துதலும் பொருந்துவதே
புலவர் கருதியும் இருப்பர்.
என இந் நல்லிசைப்

இனி, அகப்பொருள் நூலாகிய இக் குறுந்தொகைக் கேற்பவே இதன்கண் மருதக் கருப்பொருளாகிய தாமரையும், நெய்தற் கருப்பொருளாகிய பவழமும், முல்லைக் கருப்பொருளாகிய குன்றியும், குறிஞ்சி முதற பொருளாகிய குன்றும் கூறப்பட்டமை யுணர்க இனி இறைவனுக்கு இயல்பாகவுள்ள மறத திருவருளைக் குன்றின் நெஞசுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேல் உடைமையானும, அறத்திருவருளைக் காவற்றொழில் கூறினமையானும் பெறவைத்தமை யுணர்க.

இனி, இந்நூலினகத்தே உள்ள இரண்டொரு செய்யுள்களை ஆராயவாம். காதலன்பினது பெருமையைத் தோழிக்குணர்த்துவாள் ஒரு தலைவி,

"நிலத்திினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே சாரல்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே."

(கூ)

என்று கூறுகின்றாள். மக்கள் வாழ்க்கைக்கு இவ்வுலகத்தினும் இவ்வுலகம் கடந்து எய்தநிற்கும் வீட்டுலகத்தினும் ஆக்கமாக அமைவது அன்பென்னும் அககடவுட் பண்பேயாகும். மனிதன் அறிவுக்குச் சிறந்த கருவியாகவுள்ள சொற்களின் எல்லையைக் கடந்துநிற்கும் பொருள்களும் சிலவுள. அவற்றுள் இவ்வன்பும் ஒன்றாகும். எனவே, அறிவினால் அறியவொண்ணாததும அதே சமயத்தில் உணர்ச்சிக்கு நன்கு புலனாவதும் அன்பின் தன்மையாம். இறைவனும்கூட இத்தன்மையுடையவன் என்றே மெய்ந்நூல்கள் கூறுகின்றன. நாம் அன்பு செலுத்தும் ஒருவர் ஆக்கத்தோடே வருதல் கண்டால் நம்நெஞ்சம் இன்பத்தாலே நெகிழ்ந்து பொங்குகின்றது. இந் நெகிழ்ச்சியாலுறும் இன்பமும் நமக்கு உணர்வின்கண் தெற்றெனப் புலனாகின்றது. இத்தகைய இன்பத்தைச் செய்யும் அவ்வன்பு எத்தகையது? அதன் இயல்பு யாதென நம்மை வினவின் அதற்கு யாம்யாது கூறவல்லோம்?

அன்புக்கு நிலைக்களமாக விளங்கும் தலைவனது கேண்மையை அவனோடுளவளாவி உணர்ந்த தலைவி, அதனைத் தன் அறிவாலே ஆராயப் புகுந்தாள். ஆராய்ந்து ஆராய்ந்து அதற்கோர் எல்லைகாணப் பெறாது வியந்தாள். இவ்வியப்பு நிலையில் இருக்கும்பொழுது, தலைவன் சிறைப்புறமாக வந்து நின்றான். அவன் வந்து நிற்றலை உணர்ந்த தோழி அவன் வரவுணராதாள்



*போன்று தலைவியை நோக்கி, நின்னாற்*

*கேண்மை கொள்ளப்*

பட்ட தலைவன் கேண்மைக்குத்
தகுதியில்லாதவன் போலும் என்றாள். இங்ஙனம்
அவள் கூறியது களவின்பமே விரும்பித்
திருமணம் புரிந்து கொள்ளவிலே கருத்தின்றித் திரியும் தலை
வற்கு அவன் குறையைக் குறிப்பால் உணர்த்தும் பொருட்டே
யாகும், "நேசனைக் காணவிடததே நெஞ்சாரவே துதித்தல்"
என்றபடி தலைவனைக் காணாத அப்பொழுது அவனது ஒப்பற்ற
அன்பினைகண் நெஞ்சம் போக்கி வியப்புற்றிருந்த தலைவிக்குத்
தோழி கூறிய மொழிகள் சுருக்கென்று உள்ளத்தே தைத்தது
உடனே சொல்லிக் காட்ட வியலாத அவ்வன்பின் தன்மையைச்
சொல்லத் தொடங்கினாள்.

இவ்வுலகத்தே மக்கள் அறிவாலே
எல்லையற்ற பொருள்
களாக அறியப்பட்டவை மூன்று பொருள்களே யாகும். அவை :
அகலிருவிசும்பும், மாயிருஞாலமும், விரிதிரைக் கடலுமாம்.
தெய்வப்புலமைத் திருவள்ளுவனாரும, எல்லையற்ற பெருமைக்கு
உவமையாக இப பொருள்களையே எடுத்துக் கூறினர். "ஞாலத்
தின் மாணப் பெரிது," "கடலிற் பெரிது,"
"வானுயர் தோற் றம்," என்பன வள்ளுவர்
இன்மொழிகளாம இத்தலைவியும் எல்லை
காணப்படாத தலைவனது அன்பின் பெருமைககு
இம்
மூன்றையும ஒருசேர உவமை யாக்கினாள். அப்பெருமை தானும்
முத்திறத்ததாகக் கண்டு அம முத்திறத்த பண்புகட்கும் இம்
மூன்று பொருளையும் அவள் எடுத்துக் கூறுவாளாயினள்.

அன்பினது பரப்பிற்கு நிலப்பரப்பு ஒவ்வாது என்பாள், நிலத்தினும் அகலத்தாற் பெரிதென்றாள்; அவ்வன்பினது உயர்ச் சிக்கு வானமும் ஒவ்வாதென்பாள், வானினும் உயர்ந்ததென் றாள். மற்று, அதன் ஆழத்திற்கோ கடலும் ஒவ்வாதென்பாள், நீரினும் ஆரளவின்று என்றாள்.

இவ்வுவமைகளா லெல்லாம் அவள் விளக்கியது, அன்பெனும் ஒன்றின் பெருமையை யாரும் அளந்தறிய வொண்ணாதென்பதேயாம்.

இனி இத்தகைய கேண்மை இவ்வுலகத்தில் எவ்வாறு தோன்றுகின்றது? இஃது ஒரு பிறப்பிலே ஒருவர்க்கு வாய்க்கும் எளிமையுடையதென்று எண்ணுதல் புல்லிதாம். பண்டும பண் டும் எத்தனையோ பிறப்புக்களிலே இக்கேண்மை பழகிப் பழகி முதிர்வதாதல் வேண்டும். இங்ஙனம் அன்பாலே பிணிக்கப்பட் டாரை இடையிடையே நிகழும் சாக்காடும் வேறு பிரிக்கும் ஆற் றலுடையதன்று. எத்தனை உடல்கள் நிலையாமையுடைய இவ் வுலகியற்கேற்ப இறந்து ஒழியினும், அன்புடையோர் உயிர்கள் மீண்டும் மீண்டும் சேர்க்கப்படுகின்றன. இது நியதி; ஊழின் செயல் என்று கருதிய தலைவி, அக்கருத்தை அழகிய தோர்

உள்ளுறை உவமத்தாலே குறிப்பால் உணர்த்துவாள், கருங்கோற் 'குறிஞ்சிப்பூக் கொண்டு பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பு' என்றாள். வலிய கிளையை யுடைய குறிஞ்சியின் கண்ணே மலரும் பற்பல பூக்களிடத் தேயுள்ள தேனைக் கவர்ந்து கொடு போய், வண்டுகள் பெரியதேனடையை இயற்றி விடுமாறு போல, ஊழ் பற்பல பிறவிகளிலே பயின்றுவந்த அன்புப் பண்பை எல்லாம் ஒரு சேரத் திரட்டிக் கொணர்ந்து இப்பெரிய நட்பினை இயற்றியிருத்தல் வேண்டும் என்பது இதன்கண் உள்ளுறை பொருளாகும்.

ஈங்கே தலைவனது கேண்மையைத் தலைவி இங்ஙனம் வியக் கக் கண்டோம். இனி மற்றோரிடத்தே ஒரு தலைவன் தலைவி கேட்ப வியத்தலைக் காண்மின்; அஃதாவது,

"யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவவழி அறிதும்
செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே."

(௪0) என்பதாம்.

'நூறாண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை நீர்க்குட் பாசி போல் வேர்க் கொள்ளாதே' என்று கேண்மைப் பண்பின் அருமையைப் புலப்படுத்தினர் ஒரு புலவர். இத்தலைவனே முன்னர் ஒரு நாளும் ஒரு நொடிப்பொழுதும் பயின்றிராத இந்நெஞ்சங்கள் எத்துணை நேரியனவாக ஒன்றுபட்டு விட்டன என்று ஆற்றவும் வியப்படைகின்றான்.

பெயனீர் வானின் கண்ணது ; நிலத்தின் கண்ணதாகிய
செம்புலத்தின் கண்ணே அது வீழ்ந்தவுடனேயே அந்நிலத்தினது நிறத்தையும், சுவையையும தன்னுடையதாய் ஏற்று வேற்றுமை யின்றிக் கலந்துவிட்டது. "நிலத்தொடு நீரியைந் தன்னார்" என்பர் வள்ளுவனாரும். இங்ஙனம் கலத்தற்குக் காரணம் பண்டைப் பிறவிகளின அன்புப் பயிற்சியே யாகும்
எனபதே இததலைவனுடைய கருத்துமாகும். தமிழகத்துப் பண்டைச் சான்றோர் உயிர்கள் மீண்டும் மீண்டும் பிறக்கும் இயல்புடையன. அவை நன்மை செய்தால் நல்லவுலகங்களிலே சென்று வதிதலும், தீமை செய்தாற் றீய நரகங்களிலே சென்று வதிதலும், அப்புளஞ் சிறந்த உயிர்கள் பிறவிதோறும்

கேண்மை கொள்ளுதலும் உடையன என்னும் சீரிய கொள்கை யுடையர் என்பதற்கு இக்குறுந்தொகையின்கண் பற்பல சான்றுகள் காணலாம்.



## அ. நகைச் சுவை

மடைநூல் வல்லுநன் தான் சமைக்கும் இன்சுவை யடிசிற்கு மிகையும் குறையுமின்றி உப்பிட்டுச் சமைக்குமாறு போன்று, நமது பண்டை இலக்கியங்களிலே ஆங்காங்கு நகைச் சுவையைத் தரும் நிகழ்ச்சிகளை நல்லிசைப் புலவர்கள் விரவி வைத்துள்ளனர். இக் குறுந்தொகையிலே, தலைவன் சிறைப்புறமாக வந்து நிற்கும் செவ்வியில் அவன் வரவுணராதாள் போன்று தோழி தலைவனுக்குணர்த்தக் கருதிய செய்திகளை அவன் குறிப்பால் உணர்ந்து கொள்ளும் பொருட்டு தலைவிக்குப் பிறிதொன்று கூறுவாள்போல் கூறும் கூற்றுக்கள் பல, நகைச் சுவை யுடையனவாகக் காணப்படுகின்றன. சில செவ்விகளில் தலைவி கூற்று நிகழ்தலும் உண்டு. ஒரு தலைவன், இயற்கை மணம் நிகழ்ந்த பின்னர்த் தலைவியைக் காண்டற்குச் செவ்வி பெறுமல்

நாள தோறும் பகற்பொழுதிலே ஏதிலான் போல வந்து வந்து வறிதே மீள்வானாயினன். இங்ஙனம் மீள்வதற்குக் காரணம் தலைவியின் தந்தை கடலில் மீன் வேட்டம்புக்க பொழுது ஒரு சுறாமீன் அவனைக் கோட்டாற் கிழித்துப் புண் செய்தமையால் அவன் வீட்டிலேயே உறைந்தமையாகும

சின்னாளில் தலைவியின் தந்தை புண் தணிந்து மீன்வேட் டைக்கு நீனிறப் பெருங்கடலிற் சென்று விட்டனன். அது காறும அவனுக்குப் பணிசெய்யும் பொருட்டு வீட்டிற் றங்கிய தாயும், உப்பை மாறி வெண்ணெல் கொள்ளும்பொருட்டு அளதிற்குச் சென்று விட்டாள் நல்ல செவ்வி ; இப்போது தலைவன் வரின் நன்று என்று தலைவி நினைக்கும் பொழுதே, தலைவன் வந்துவிட்டான். வீட்டின்கண் இத்தகைய செவ்வி புண்டாயிருப்பதை அவன் அறியான். ஆதலால் அவன் வழக்கம் போல் திரும்பிப் போய் விடவும் கூடும இச்செய்தியை அவ னுக்குக் குறிப்பால் அறிவிக்க எண்ணிய தலைவி, அவன் வருகை கையை அறியாதாள் போன் று தோழிக்குக் கூறுபவள்,

" என் அன்புடைய தோழியே! இப்போது நமக்கு ஒரு தூதுவர் இன்றியமையாது வேண்டப்படுகின்றனர். அத்தூதுவரோ தேரில் ஏறிக்கொண்டு, தூரிய வழிகளிலே குதிரைகளைத் தூண்டவேண்டியதில்லை. அவர் குதிரைகள் இளைப்புறவும் வேண்டா; அவருடைய கடமையை வருத்தமின்றியே செய்யக் கூடும் " என்று தொடங்கினாள். இங்ஙனம் கூறுவதன் கருத்தென்னை? தலைவன் சிறைப்புறமாக நிற்கின்றான். அவனுக்கே இச்செய்தியை உணர்த்துவோர் வேண்டும் என்பதேயாம். நம் தூதுவர்க்குத் தேர் வேண்டா! குதிரையும் வேண்டா! அவர் குதிரைகள் இளைப்புறவும் வேண்டா! என்ற இச்சொற்களைக்



கேட்டவுடன், தலைவன் நகைச்சுவையாலே பெரிதும் இன்புற்று, அவள் கூறப்போகும் பின்மொழிகளை ஆவலோடு கூர்ந்து கேட்டிருப்பன். அச் செய்யுள் வருமாறு:

" சேயாறு சென்று துனைபரி யசாவாது
உசாவுநர்ப் பெறினே நன்றுமற் றில்ல
வயச்சுறா எறிந்த புண்தணிந்து எந்தையும்
நீனிறப் பெருங்கடல் புக்கனன் யாயும்
உப்பை மாறி வெண்ணெல் தரீஇய
உப்புவிளை கழனிச் சென்றனள் அதனால்

பனியிரும் பரப்பிற் சேர்ப்பற்கு
இனிவரின் எளியள் என்னுந் தூதே"
(௨௬௯)

என்பதாம்.

இனி ஒரு தலைவற்கு "நாளைப் பகற் பொழுதிலே கடற்கரை மருங்குள்ள இருண்ட புன்னைமரச் சோலையின் கீழமைந்த மணற்பரப்பிலே நீ வருவாயாக! யான் தலைவியை அவ்விடத்திற்கு அழைத்து வருவேன்" என்று தோழி கூறியிருந்தாள். அவனும் அவ்வாறே காலந்தவறாமல் மறுநாள் அம்மணற் பரப்பிற்கு வந்து சேர்ந்தான். வீட்டிலிருந்து தோழியும், தலைவியும் வந்து கொண்டிருந்தனர். அவர்கள் தனது வருகையை உணர்ந்திலர் என்று கருதிய தலைவன், அவர்களை அசதியாடி நகும் பொருட்டு, அயலிலுள்ள புன்னைமரச் செறிவிலே மறைந்து கொண்டான்.

இல்லத்தினின்று வரும் தோழியோ அவன் வருகையை முன்னரே அறிந்துகொண்டே வந்தாள். குறியிடத்தே அவனைக் கண்டிலள். "இப்போது வந்த தலைவன் யாண்டுப் போயிருக்கக் கூடும்! அவன் நம்மை அசதியாடி நகைக்கும் பொருட்டு மறைந்திருத்தல் திண்ணம் நல்லது!

அவனை யானே அசதியாடி
நகைப்பேன்!'' எனத் தனக்குள் ஒரு சூழ்ச்சி செய்து கொண்ட
வளாய், அயலிற் கிடந்த மணற்குன்றிலேறிக் கடற்பரப்பை
நோக்கி நின்று, தலைவிக்குக் கூறுகின்றாள் ; “
அன்னாய் நல்ல தண்ணிழல் பொருந்திய
இம்மணற்பரப்பிற்கு யான் தலைவரை
வருமாறு கூறியிருந்தேன்! இக்குறியிடமோ வெறிச்சென்று
தனித்துக் கிடக்கின்றது! அத்தலைவரோ இன்னும் வந்திலர்.
ஆனால் அதோ பார்! கடலிலே நம்
தமையன்மார்கள் திமில் கள் விரைந்து
வருகின்றன !''

ஈண்டுத்தோழி “ திமில்கள் வருகின்றன ” என்றது முழுப் பொய். தலைவனை அல்லற்படுத்தி நகையாடற் பொருட்டுக் கூர்த்த மதியுடைய தோழி, இங்ஙனம் படைத்துமொழிந்தாள்.

28 குறுந்தொகை

இச்சொற் கேட்டலும் பதுங்கியிருந்த தலைவன் நெஞ்சம் என்ன பாடுபடும் என்று

எண்ணுகின்றீர்கள். திமில்கள் வந்து விட்டால் அன்று கூட்டம் நிகழாது என்பது தலைவன் அறிவான். திமில்களும் வந்து விட்டனவோ! யான் முன்னரே வந்து விட்டேனே! என்று தலைவன் கூறிக்கொண்டே தோழிநின்ற மணற்குன்றில் விதப்புற்று விரைந்து ஏறியிருப்பன். அத் தோழியோ தன்னை நகைக்க எண்ணிய அத்தலைவனை மெல்ல நகைத்திருட பள். இக்காட்சியைக் கண்டு நின்ற தலைவியும், கவிழ்ந்து நிலனோக்கி மெல்ல நகுவள். இதனைப் பயிலும் நமது நெஞ்சிலோ எல்லையில்லாத நகைச் சுவை தோன்றி இன்புறுத்து கின்றது.

அச்செய்யுள்,

"இருள் திணிந் தன்ன ஈர்ந்தண் கொழுநிழல்
நிலவுக்குவித் தன்ன வெண்மணல் ஒருசிறைக்
கருங்கோட்டுப் புன்னைப் பூம்பொழில் புலம்ப
இன்னும் வாரார் வரூஉம்
பன்மீன் வேட்டத் தென்னையர் திமிலே" (கஉ௩)

என்பதாம்.

இனிச் சிறந்த இலக்கியங்கள் பன்னிற மலர்களும் கெழுமிக் கட்கினிதாய் மகிழ்விக்கும் கடிமலர்ப் பொழில் போல இருப்ப துடனே, தீஞ்சுளை ப பலாவும, தேமாங்கனியும், வாழையும் பிறவும் செறிந்த பழமரததோட்டம் போலவும இருத்தல் வேண்டும் என்று அறிஞர்கள் கூறுப. அஃதாவது, இலக்கியங் கள் நவில்தொறும் நவில்தொறும் சுவை பெரிதுடையவாகி மேலும், அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப் பொருளியல்புகளையும் உயிர்க்கு ஊட்டி ஆக்கந்தருவனவாகவும் இருத்தல் வேண்டும் என்பதாம்.

இக் குறுந்தொகையில் நாடக வழக்கானே கூற்று நிகழ்த்து தற்குரிய தலைவன், தலைவி, தோழி, அறிஞர், செவிலி, பாங்கன் முதலியோருடைய கூற்றுக்களிலே ஆங்காங்கு அவ்வுறுதிப் பொருளியல்புகள நுண்ணிதாக வெளிப்பட்டு உயிருணவாக அமைவதைக் காணலாம்.

ஒரு தலைவி “கடவுள் நண்ணிய பாலோர் போல ஒரீஇ

ஒழுகும் என்னைக்கு'' என்று கூறும் உவமையை ஆராய்ந்து பாருங்கள். எண்ணிறந்த பிறப்புக்களிலே அன்பு நெறி நின்று தொடர்புடையார்பால் அன்பு செலுத்திப் பயின்று பயின்று

முதிர்ந்ததன் பயனாக உயிர் அருள் உடைமையை எய்து



கின்றது. அவ்வருள் வாய்க்கப் பெற்ற வுயிர் தொடர்பு பற்றாது எல்லா வுயிரிடத்தும் நிரம்பிய அன்புடையதாய் யான் எனது என்னும் இருவகைச் செருக்கும் அற்றதாய்க கடவுட்டன்மை கைவந்த தாகும். இத்தகைய உயர்நிலையை உயிர் எய்து வதனையே தொல்காப்பியனார், "காமநீத்தபால்" என்றும் "அருளொடு புணர்ந்த அகறசி" என்றும் கூறுகின்றனர். இந் நெறி உயிர் கடவுளை எய்துதற்குத தமிழர் கண்ட தனி நெறி யாகும். கடவுள் நண்ணிய பாலோர் ஒரீஇ ஒழுகுவர் என்றது, யான் எனது என்னும இருவகைச் செருக்கிற்கும் இடனா யமைந்த பொருள்களிலே பற்று வையாது ஒழுகுவர் என்ற வாறாம இத் தொடரிலே கடவுள் உண்மையும், பாலோர் என்றதனால் அக் கடவுட்பொருளின் வேறாய் உயிர்கள் உண்மை யும், ஒரீஇ என்றதனால் பற்றுதற்குரிய பொருள்கள் அவ்விரு பொருளின்

வேறாக உளவாதலும், வீடு பேறடைய முயல்வோர் பற்றுதற்குரிய பொருள்களிற் பற்றொரீஇ அவ் விறைப்பொரு ளின் அருள்வழி நின்று ஒழுகுவர் என்பதும் உணரலாம். இவ் வோர் இனிய அடியானே பண்டைத் தமிழ்ச் சான்றோரின் கடவுணெறி இற்றெனத் தெற்றெனப் புலனாதல் அறிக

இனி, மற்றோரிடத்தே " வினையே ஆடவர்க் குயிரே வாணுதல், மனையுறைமகளிர்க்கு ஆடவர் உயிர்" எனவரும் அடிகள் இவ் வுலகியல் நடத்தற்கு இன்றியமையாதது தொழில் நலனே ஆகலின், ஒவ்வொரு ஆடவனும அத் தொழிற் றுறையை உயிராகப் போற்றி ஒழுகவேண்டும் என்று ஆடவர் கடமையையும, இல்லிருந்து அறம் போற்றும் மகளிா, தம் கணவரை உயிராகக் கொண்டு போற்றவேண்டும் என்று, மகளிர் கடமையையும, எவ்வளவு அழகாக உணர்த்துகின்றன. இன்னும் "சான்றோர் புகழும் முன்னர் நாணுப" என்பது சால் புடைமையின் மாணபினையும, "இல்லோன் இன்பங்காமுற்றாங்கு" எனபது நல்குரவின் சிறுமையையும், "உள்ளது சிதைப்போர் உளரெனப் படாஅர்" எனபது மடியினது இழிவையும், "அரும்

பெறல் அமிழ்தம் ஆர்பதமாகப், பெரும் பெயர் பெறீஇயரோ அன்னை'' என்பது நல்லறம செய்தோர் உலகம்
நல் லுல
கடைவர் எனபதனையும், “பெண்கொலை புரிந்த நன்னன் போல, வரையா நிரயத்துச் செலீஇயரோ அன்னை'' என்பது, தீவினை செய்தோர் தீ நரகெய்துவர் என் பதனையும் காட்டுகின்
றன. இன்னோன்ன குறிப்புக்கள் இந்நூலின்கண் பற்பல விடங்களிலே வந்து பல்வேறு உறுதிப்பொருள்களையும் நுண்ணிதில் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் உணர்த்துகின்றன.



## ௬. வரலாற்றுச் சான்றுகள்

பண்டைக்காலத்து நல்லிசைப் புலவர்கள் தன்மை நவிற்சி யையே சிறந்த அணியாக மேற்கொண்டு இலக்கியங்களை யாத்த மையானே, அக்காலத்து நானில இயல்புகளும், மக்கள் ஒழுக லாறும், அரசியல், வாணிகம், உழவு

முதலிய தொழிற்றுறை இயல்புகளும, மக்கள் வாழ்க்கைப்பண்பாடும், அவர்கள் கையாண்ட கருவிகளின் இயல்பும் பிறவும், அறிதற்கு இக்குறுந தொகையும் இதனோடொத்த பிற இலக்கியங்களும் நல்ல சான்று களைத் தம்பாற் பொதிந்துகொண்டுள்ளன. புறப்பொருட் பகுதி யிலக்கியங்களைப்போல அகப்பொருட் பகுதியிலக்கியங்களிலே அச்சான்றுகள் மிகுதியாகக் காணப்படாவிடினும், புலவர்கள் சார்த்து வகையாலே கூறுகின்ற வேந்தர் வரலாற்றுக் குறிப்பு களும், புலவர் வரலாற்றுக்குறிப்புகளும், ஊர்கள், காடுகள், மலை கள், மக்கள், விலங்குகள், பறவைகள், ஓரறிவுயிர் வகைகள் , தொழில்கள், உணவு வகைகள் , ஒழுக்கவகைகள், முதலியவற் றைப்பற்றிய குறிப்புகளும், ஆங்காங்கே பற்பல உள்ளன. அவையெல்லாம் வரலாற்று நூ ல்வல்லுநர்க்குப் பெறலரும் செல் வங்களாம் என்பதில் ஐயமில்லை.

## கo. ஓதுதற்குரியோரும் நூற்பயனும்

இனி, இக் குறுந்தொகை முதலிய நல்லிலக்கியங்களைப்

பயில்வதனால் உண்டாகும பயனைப்பற்றிச் சிறிது ஆராய்வாம். முழுவதும கட்டுற்று உணர்ச்சியற்ற நிலையினின்றும உயிர்கள் திருவருளானே இயக்கப்பட்டு, ஒன்றறிவுயிர் ஆகிய புற்பூண்டு முதல், ஆறறிவுயிராகிய மக்கட் பிறப்பு இறுதியாகவுள்ள அறு கூற்றினமைந்த எண்ணிறந்த பிறவிகளிலே உழன்றுழன்று முழு வதும் கட்டற்றதொரு உயர்நிலைக்குச் செல்கின்றன என்பது பண்டைச் சான்றோரின் கொள்கை என்ப தனைப் பழைய தமிழ் இலக்கியங்களை ஆராய்வோர் உணர்தல் கூடும இக்காலத்தே வழங்கும் சைவ சமயக் கொள்கை இப்பண்டைத் தமிழ்மக்களின் இக்கொள்கையினின்றே உருப்பெற்றது என்று எண்ண இட முளது. மேலே கூறிய எண்ணரிய பிறவிகளினும், மானிடப் பிற வியே அரிதெனச் சான்றோர் கூறுவதும, அப்பிறவி முழுவதும் கட்டற்ற உயர்நிலையை உயிர் எய்துதற்குரிய சீரிய கருவியாக உள்ளமைபற்றியே யாம்

இனி, ஒன்றறிவுயிர் முதல் ஐந்தறிவுயிர் இறுதியாகவுள்ள உயிர்களோ தாமியைந்துள்ள உடலையே பொருளாகக்கொண்டு அதனை ஓம்புதலும் தம்மினம் வளர்த்தலுமாகிய இருவகைத்

தொழிலின்கண்ணே அடங்கி நிற்பனவாம். இவை ஒழிந்த ஏனை மக்கட் பிறப்பினர் மட்டுமே உடலோடே தமமுயிர் ஆக்கத்தை
யும் கருதி, உடலுக்கு ஆக்கந்தரும் உணவுப் பொருளீட்டுத லோடே உயிர்க்கு ஆக்கதரும் உணர்வுப் பொருளையும் ஈட்டி நுகர்ந்து மேலும் வளர்ச்சி எய்துதற்குரியர் ஆவர்.

மானிடரினத்திலே, ஆறுவதறிவாகிய மன னுணர்ச்சி மரு வப்பெறாத மானிடரே சாலப் பலர். இததகையோரையே "மாவும் மாக்களும் ஐயறி வுயிரே," எனத் தொல்காப்பினர், அறிவு வகையானே இவர் விலங்குகளே யாவர் என்பதுபடக் கூறிப் போந்தார்.
இவ்வினத்துமாக்கட்கு இலக்கியங்கள் இருந் தும் இல் பொருள்களேயாம். இவ்வினத்தாரும் மானிடரே
எனக் கொண்டு, சீரிய இலக்கியங்களை இவர்க்கு ஓதுவித்தலும் பயனில் செயலேயாம். அம்மாக்கள் இலக்கியங்களைப் பல்லாண்டு ஓதியும் ஓதாதவர்களேயாவர். இவர்களை க் கருதியே, "ஓதியும் ஓதாதார் உணர்விலார்" என்ற மெய்ம்மொழி எழுந்ததாகும்

இனி, உடலுக்கு உரந்தரும் சத்துணவை ஆராய்ந்து அவை யிற்றை அளவறிந்து கூட்டி மடைநூல் வல்லான் ஒருவன் சமைத்து நல்கியது இன்சுவை அடிசிலாகின்றது. இவ்வின்சுவை யடிசில் உண்பார்க்கு இனிப்பு முதலிய அறுவகைச் சுவையமைதி யானே இன்பம் நல்குவதோடு அமையாது, மேலும் உண்பார்தம் உடலில் குருதியாய்த் தசையாய் என்பாய் இன்னோரன்ன பிற தாதுப் பொருள்களாய் மாறி அவ்வுடலினை நன்கு செழிக்கச் செய்கின்றது.

இங்ஙனமே, நல்லிசைப் புலவர்கள் உயிர்க்கு ஆக்கந்தரும் சத்துணவைத் தமது கூர்த்த நுண்ணுணர்வானே இறைவனது படைப்பினின்றும் திரட்டி, அவையிற்றை மாசு போக்கி அளவறிந்து கூட்டி, இன் சுவைச் செய்யுளாய்ச் சமைத்தளிக்கின்றனர். இச் செய்யுள்களாகிய கலையமிழ்தங்களோ தமபால் அமைந்த காம முதலிய எண்வகைச் சுவைகளானே, தம்மை நுகரும் திருவுடைய மனவுணர்ச்சி பெற்ற மக்கட்கு ஆற்றவும் பேரின்பம் நல்குவதோடமையாது, மேலும் அவர்தம் உயிரின்கண் மெய் யுணர்ச்சியைத்

தூண்டிப் பெரிதும் வளர்த்து, இறுதியில் அவர் தம் வாழ்க்கைக் குறிக்கோ ளாகிய முழுதும் கட்டற்ற நிலைக்கு உயர்த்துகின்றன.

இலக்கியங்கள், இத்தகைய பெருஞ் சிறப்புடையனவாதல்

குறித்தன்றோ தெய்வப்புலமைத்திருவள்ளுவனாரும் உடற்கு ஆக்கந்தரும் உணவை மட்டும் உணர்வாரை வாயுணர்வின் மாக்கள்

என்றும், அவர்தம் வாழ்க்கை, பயன்படா வெற்று வாழ்க்கையே



யாம் என் பதனை "வாயுணர்வின் மாக்கள் அவியினும் வாழினும் என்?" என்று வினவுமாற்றால் உணர்த்தியும், மற்று, இலக்கிய நுகர்ச்சியுடையோரை அமிழ்துண்ணும் அமரரோடு ஒப்பித்தும், இலக்கியங்களை அமிழ்த உணவோடு ஒப்பித்தும், தம் திருக் குறளிலே,

"செவியுணவிற் கேள்வி யுடையார் அவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து"

“செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்”

எனத் தெளித்தோதுவாராயினர்.

இனி உயிர்தானும் யாதொன்றனை விரும்பிப் பெரிதும் பயின்றது அப்பொருளே தானும் தன்மையுடைத் தென்பர்

அளவை நூலோர் அழகுணர்ச்சி மிகுந்த சான்றோர்கள், உலகிற் காணப்படும் காட்சிப் பொருள்களினின்றும், உணரப் படும் கருத்துப் பொருள் களினின்றும், தாம் நுகர்ந்த அழகு களையே செய்யுளாக நமக்கு அளிக்கின்றனர் இவ்வழகுதானும் இறைப்பொருளின் ஒரு தோற்றமேயன்றி வேறில்லை. எனவே அழகுப் பிழம்புகளாகிய இச் செய்யுள்களில் இருந்து யாம் சுவைபபதும், சொல்லழகும் பொருளழகும் அணியழகும் இசை யழகும் ஆகிய பல்வேறு வகையிற் றோன் றும் அவ்வோர் அழகே யன்றி வேறென்னை ? இவ்வழகினை ஆர்வத்துடன் பயிலும் உயிரும் நாளடைவில் அவ்வழகேயாய் விடுகின்றது. அழகே கடவுள் ! அவ்வழ காக உயிர் பரிணமிப்பதே வீடு எனவே, இந் நூலின் முடிந்த பயன் இதனைப் பயில்வோர் அந்தமில் இன் பத்து அழிவில் வீடு எய்துவர் என்பதேயாம்.

"அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற்பயனே."

தமிழ் வாழ்க.

மேலைப் பெருமழை,
சயயாண்டு ஆனித்திங்கள்
ஐந்தா நாள். }

இங்ஙனம்,

பொ. வே. சோமசுந்தரன்

# பாடிய சான்றோர்

[பெயர், செய்யுள் எண்கள்]

அஞ்சிலாந்தையார், உகூ௯
அண்டர்மகன் குறுவழுதியார்,

௩௪௫(ந)

ஆலங்குடி வங்கனார், ௮, ௬௫
ஆலத்தூர் கிழார், ௧௧௨, ௩௫௦
இடைக்காடனார், ௨௫௧
இருந்தையூர்க் கொற்றன் புலவனார், ௩௩௫
இளங்கீரந்தையார், ௧௪௮
இளங்கீரனார், ௧௧௬
இளம்பூதனார், ௨௩௪
இறையனார், ௨
ஈழத்துப் பூதன்றேவனார், ௩௪௩
உகாய்க்குடி கிழார், ௬௨
உருத்திரனார், ௨௭௪
உரோடகத்துக் கந்தரத்தனார், ௧௫௫
உலோச்சனார், ௧௭௫, ௧௭௭, ௨௦௫,

எயிற்றியனார், உஅசு

ஐயூர் முடவனார், கஉரு, உசுசு,
ருஉஉ

ஒக்கூர் மாசாத்தியார், கஉசு,
கருகூ, கஅசு, உஉ0, உஎரு

ஒருசிறைப் பெரியனார், உஎஉ

ஓத ஞானியார், உஉஎ

ஓதலாந்தையார், கஉ, உக, உஉகூ

ஓரம்போகியார், க0, எ0, கஉஉ.
கஉஎ, ருஅச

ஓரிற் பிச்சையார், உஎஎ

ஓரேருழவனார், கருக

ஔவையார், கரு, உரு, உஅ, உகூ
ருகூ, சரு, அ0, கூக, கூகூ, க0உ,
கருஅ, கஅரு, உ00, ருசுச,

௲அஅ

கங்குல் வெள்ளத்தார், ௲அள

கச்சிப்பேட்டுக் காஞ்சிக் கொற்ற

ஞர், உகரு, உகசு

கச்சிப்பேட்டு நன்ஞகையார், ௲0,

களஉ, கஅ0, கசுஉ, கசுள, உஅள.

கடம்பனூர்ச் சாண்டிலியஞர்,

௲0ள

கடியலூர் உருத்திரங் கண்ணஞர்,

௲௫உ

கடுகு பெருந்தேவஞர், உ௫௫

கருந்தோட் கரவீரஞர், சுசு

கடுவன் மள்ளஞர், அஉ

கண்ணஞர், உசச

காவிரிப்பூம்பட்டினத்துக் கந்தரத் தனார், ௨௯௭

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார், ௨௯௭

காவிரிப்பூம்பட்டினத்துச் சேந்தங் கண்ணனார், ௩௪௭

கிடங்கிற் குலபதி நக்கண்ணனார், ௨௫௨

கிள்ளிமங்கலங் கிழார், ௭௬, ௧௧௦, ௧௫௨, ௧௮௧

குட்டுவன் கண்ணனார், ௧௭௯

குடவாயிற் கீரத்தனார், ௨௮௧, ௩௬௯

குடவாயிற் கீரனக்கனார், ௭௯

குப்பைக் கோழியார், ௩௦௫

௧௨௯, ௧௪௭
கோவதத்தர், ௬௬, ௧௯௪.
கோவூர் கிழார், ௬௫
கோவேங்கைப் பெருங்கதழ்வா, ௧௩௪
சத்திநாதனார், ௧௧௯
சாத்தனார், ௩௪௯
சிறைகுடி ஆந்தையார், ௫௬, ௫௭, ௬௨, ௧௩௨, ௧௬௮, ௨௨௨, ௨௭௩, ௩௦௦
செம்புலப் பெயனீரார், ௪௦
செய்திவள்ளுவன் பெருஞ்சாத்தனார், ௨௨௮
செல்லூர்க் கொற்றனார், ௩௫௩

சேந்தம் பூதனார், ௨௪௪
சேந்தன் கீரனார், ௩௧௧
சேரமானெந்தையார், ௨௨
தங்கால் முடக்கொல்லனார், ௨௧௭
தாமோதரனார், ௯௨
தாயங் கண்ணனார், ௩௧௯
திப்புத்தோளார், ௧
தீன்மிதி நாகனார், ௧௧௧
தும்பிசேர் கீரனார், ௬௧, ௩௧௬,
௩௨௦, ௩௯௨
தூங்கலோரியார், ௧௫௧, ௨௯௫
தேரதனார், ௧௯௫
தேவகுலத்தார், ௩
தொல்கபிலர், ௧௪
நக்கீரனார், ௭௮, ௧௦௫, ௧௪௩,

௧௬௧, ௨௬௬, ௨௮௦, ௩௬௮
நம்பி குட்டுவனார், ௧௦௯, ௨௪௩
நரிவெரூஉத் தலையார், ௫, ௨௩௬
நன்னாகையார், ௧௧௮, ௩௨௫
நாகம் போத்தனார், ௨௮௨



நாமலார் மகனார் இளங்கண்ணனார், ௨௫௦
நெடும்பல்லியத்தனார், ௨௦௩
நெடும்பல்லியத்தையார், ௧௭௮
நெடுவெண்ணிலவினார், ௪௭
நெய்தற்கார்க்கியர், ௫௫, ௨௧௨
படுமாத்து மோசிகீரனார், ௩௩, ௭௫, ௩௮௩

கடவுள வாழததது

பாலைபாடிய பெருங கடுங்கோ,
௧௬, ௩௭, ௧௨௪, ௧௩௫, ௧௩௭,
௨௦௯, ௨௩௧, ௨௬௨, ௨௮௩,
௩௯௮

பூங்கண்ணனா, ௨௫௩

பூங்கணுத்திரையார், ௪௮, ௧௭௧

பூதத்தேவனார், ௨௮௫

பூதமபுலவனா, ௧௬௦

பெருங்கண்ணனார், ௨௮௯, ௩௧௦

பெருங்குன்றூர் கிழார், ௩௩௮

பெருஞ்சாத்தனா, ௨௬௩

பெருந்தோட் குறுஞ்சாத்தனார்,
௩௦௮

பெரும்பதுமனார், ௭
பெரும்பாக்கனார், ௨௬௫
பேயனார், ௨௩௩, ௩௮௯, ௪00
பேயார், ௩௩௯
பேரிசாத்தனார், ௨௭௮, ௩௧௪, ௩௬௫
பேரெயின் முறுவலார், ௧௭
பொதுக்கயத்துக் கீரந்தையார், ௩௩௭
பொன்மணியார், ௩௯௧
பொன்னாகனார், ௧௧௪
மடல்பாடிய மாதங்கீரனார், ௧௮௨
மதுரைக் கடையத்தார் மகனார் வெண்ணாகனார், ௨௨௩

மதுரைக் கண்டாரதத்தனார், ௩௧௭

மதுரைக் கண்ணனார், ௧௦௭

மதுரைக் கதக்கண்ணனார், ௮௮

மதுரைக் காஞ்சிப்புலவர், மாங்குடி கிழார், மாங்குடி மருதனார், (இம் மூன்று பெயரும் ஒருவரையே குறிப்பனவாகக் கருதப் படுகின்றன) ௧௬௪, ௧௭௩, ௩௦௨

மதுரைக் கொல்லன் புலவனார், ௩௭௩

மதுரைச் சீத்தலைச் சாத்தனார், ௧௫௪

மதுரை நல்வெள்ளியார், ௩௬௫

மதுரைப் பெருங்கொல்லனார், ௧௪௧

மதுரை மருதங்கிழார் மகனார் இளம்போத்தனார், ௩௩௨

மதுரை மருதனிளநாகனார், ௭௭, ௧௬௦, ௨௭௯, ௩௯௭

மதுரை யளக்கர் ஞாழலார்மகனார் மள்ளனார் ௧௮௮, ௨௧௫

மதுரை யறுவை வாணிகன் இளவேட்டனார், ௧௮௫

மதுரை யாசிரியர் கோடங்கொற்றனார், ௧௬௬

மதுரை யீழத்துப் பூதன்றேவனார், ௧௮௯, ௩௯௦

மதுரை எழுத்தாளன் சேந்தம் பூதனார், ௯௦, ௨௨௯

மதுரை வேளாதத்தனார், ௩௧௫
மள்ளனார், எ௨
மாடலூர் கிழார், ௧௫௦
மாதிரத்தனார், ௧௧௩
மாமலாடனார், ௪௬
மாமூலனார், ௧௧
மாயெண்டனார், ௨௩௫
மாலை மாறனார், ௨௪௫
மாவளத்தனார், ௩௪௮
மிளைகந்தனா, ௧௯௬
மிளைகிழான் நல்வேட்டனார்,
௩௪௧



மிளைப் பெருங்கந்தனார், ௧௩௬,

௨௦௪, ௨௩௪

மிளைவேள் தித்தனார், ௨௮௪

மீனெறி தூண்டிலார், ௫௬

மோசிகீரனார், ௫௯, ௮௬

மோசி கொற்றனார், ௩௭௭

மோதாசனார், ௨௨௯

வடமவண்ணக்கன், ௮௧

வடம வண்ணக்கன் தாமோதரனார், ௮௫

வடம வண்ணக்கன் பேரிசாத்தனார், ௧௫௯

வருமுலையாரித்தியார், ௧௭௬

வாடாப் பிரபந்தனார், ௩௩௧

வாயிலான் றேவனார், ௧௦௩, ௧௦௮

வாயிலிளங் கண்ணனார், ௫௪௯
விட்ட குதிரையார், ௭௪
வில்லக விரலினார், ௫௭௦
விற்றூற்று மூதெயினனார், ௫௭௨
வெண்கொற்றனார், ௮௭
வெண்பூதனார், ௮௫
வெண்பூதியார், ௯௭, ௧௭௪, ௨௧௯
வெண்மணிப்பூதியார், ௨௯௯
வெள்ளி வீதியார், ௨௬, ௪௪, ௫௮,

௧௫௦, ௧௪௬, ௧௪௯, ௧௬௯,
௫௮௬

வெள்ளூர்கிழார்மகனார் வெண்
பூதியார், ௨௧௯

வேட்டக் கண்ணனார், ௫௮௯.
வேம்பற்றூர்க் கண்ணன் கூத்த

# குறுந்தொகை

## மூலமும் உரையும்

### கடவுள் வாழ்த்து

துறை :—இஃது, அகப்பொருள் துறைச் செய்யுளாகிய இக்குறுந்தொகைக்குப் புறத்துறுப்பாய் வந்தது; புறப்பொருட் பாடாண் திணையைச் சார்ந்தது. அஃதாவது, இந்நூல் ஓதுவார் நூலின் முடிந்த பயனாகிய வீட்டின்பத்தையும் இம்மையின்பத்தையும் எய்துமாறு கடவுளை வாழ்த்தியது.

இதன்கண், நல்லிசைப் புலவராகிய பெருந்தேவனார் "சேவடியையும், மேனியினையும், ஒளியினையும், உடுக்கையினையும், வேற்படையையும், சேவலங் கொடியினையும

உடைய முருகக் கடவுள் காத்தலானே உலகம் இன்புறுவா நின்றது. யாமும் அப்பெருமானது சேவடியை வணங்குவோமாக," என்று அறிவுறுத்தினார்.

தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவழத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி யேய்க்கும் உடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேற்
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகே.

—பாரதம் பாடிய பெருந்தேவனார்.

(இதன் பொருள்) தாமரைபுரையும் காமர் சேவடி - செந் தாமரை மலரை ஒக்கும் அடியார்க்கு விருப்பத்தைச் செய்யும் சிவந்த திருவடியினையும், பவழத்தன்ன மேனி - பவழம்போலும் சிவந்த நிறத்தையுடைய திருமேனியினையும், திகழ் ஒளி - விளங்காநின்ற ஒளியினையும், குன்றி ஏய்க்கும் உடுக்கை - குன்றி

மணியின் நிறம் போன்ற சிவந்த நிறமுடைய ஆடையினையும், குன்றின் நெஞ்சுபக எறிந்த அம்சுடர் நெடுவேல் - கிரௌஞ்ச மலையினுடைய மார்பம் பிளக்கும்படி விசியருளிய அழகிய ஒளியையுடைய நெடிய வேற்படையினையும், சேவல் அம் கொடியோன் - கோழிச்சேவல் எழுதிய அழகிய கொடியினையும் உடைய முருகக் கடவுள், காப்ப உலகு ஏமம் வைகல் எய்தின்று - காத்தலானே உலகத்து வாழும் உயிர்கள் இன்பமான நாட்களை எய்தாநின்றன.

**விளக்கம்:**—சேவடி எனப் பொருட்குக் கூறிய செம்மையை உவமத்திற்கும் ஏற்றிச் செந்தாமரை மலர் என்க. தாமரை மலர் அடியின் நிறத்திற்கும், அழகிற்கும் உவமை. நூற்றொடக்கத்தினின்ற இசசெய்யுளின்கண் தாமரை முதன்மொழியாய் நின்று மங்கலமாதலும் உணர்க. தாமரை, மலர்க்கு ஆகுபெயர். சரவணப் பூம்பொய்கையிலே பதுமப் பாயலிற் றோன்றியவர் முருகக் கடவுள் என்ப வாகலின், அத்தாமரையையே அதன்கட் பயின்ற அடிக்கு உவமையாக நினைந்

தோதினர் என்க. முருகக் கடவுள் செந்நிறமுடையராகலின் அடி யின்கண் அச்நிறத்தை விதந்தோதினர். புரையும் - ஒக்கும்: உவம வுருபு. காமர் - விருப்பம். அன்பராயினர்க்கு மேலும் மேலும் விருப் பத்தை எழுவித்துத் தம்பாலீர்க்கும் திருவடிகள் என்பார் 'காமர் சேவடி' என்றார். "அவன் அருளாலே அவன்றாள் வணங்கி" என வரும் ஆன்றோர் அநுபவ மொழியும் ஈண்டு நினைவு கூர்க. சேவடியே வீடாயிருக்கும் என்பவாகலின் சேவடியை முற்பட வோதினர். இக் கருத்தே பற்றி "நின்னிற் சிறந்த நின் தாளிணையவை" (பரிபா - ௪.) எனப் பிற சான்றோரும் கூறுதல் காண்க. ஆசிரியர் திருவள்ளுவ னாரும் "தாள் தொழாஅரெனின்" (குறள் - ௨) என்றும், "மாணடி சேர்ந்தார்" (குறள் - ௩.) என்றும், "வேண்டுதல் வேண்டாமை யிலான் அடி" (குறள் - ௪.) என்றும், "தனக்குவமை யில்லாதான் தாள்" (குறள் - ௭.) என்றும், பிறாண்டும் திருவடியையே விதந்தோதுதலும் உணர்க.

மேனி, ஈண்டு நிறத்திற்கு ஆகுபெயர். அடிமுதல் யாண்டும் செம்மை கூறலின், ஒளியையும் செவ்வொளி என்க. இறைவன் 'ஞானமயன்' என்னும் மரபுபற்றித் திகழொளி என்றார். ஒளி ஈண்டு அறிவின் மேற்று. குன்றிமணி புறனெல்லாம் சிவப்பும் மூக்கிற் கரு நிறமும் உடைத்தாயினும், பெரும்பான்மை பற்றியும், மேலே செந்நிறத் தையே விதந்தோதுதல் பற்றியும் அதன் செந்நிறத்தையே கருதியாற் கொள்க. ஏய்க்கும் - உவமவுருபு. முருகக் கடவுள் செந்நிற ஆடை யுடையர் என்பதனைச் "செய்யன் சிவந்த ஆடையன்" எனவரும் திருமுருகாற்றுப்படையானும் உணர்க.

குன்று, ஈண்டுக் கிரௌஞ்சமலை. இதனைக் "குருகு பெயர்க் குன்றம்" என்பது தமிழ்மரபு. (சிலப் - குன்றக் - ௧0.) நெஞ் சென்றது அம்மலையின் நடுவிடத்தை. பகைவர் மார்பினும் மலை திண்ணிதாகலின், வேலின் ஆற்றல் கூறுவார் குன்றம் பிளந்தமை யையே கூறினர். பக - பிளக்கும் படி. எறிதல் - வீசுதல். முருகக் கடவுளுக்கு வேல் 'ஞானசத்தி' என்பவாகலான் "அஞ்சுடர நெடு வேல்" என்றார். அஞ்சுடர் - அழகிய அறிவொளி என்க. அச்

கடவுளின் வெற்றி தோன்றச சேவலங் கொடியை எடுத்தோதினர். சேவல் - கோழிச சேவல்; மயிற் சேவல் எனினுமாம். இச்செய்யுளை ஓதுவார் உளத்தே அப்பெருமான் திருவுருவம் திகழ்ந்து தோன்றுமாறு அழகுற ஓதியிருத்தல் உணர்ந்தின்புறுக.

சேவலங் கொடியோன் என்னுந் துணையும் அக்கடவுளின் உருவச் சிறப்பும், தெறற் சிறப்பும் ஓதி, அவனுடைய அளிச்சிறப் போதுகின்றார்; உலகங் காவலற்குத் தெறலும, அளியும் இன்றியமையாமையின் என்க. காப்ப என்றது, மன்னா போன்று இறைப்பொருள் முதலிய கைம்மாறு கருதாது, தமது பேரருள் ஏதுவாகக் காவாநிற்க என்பதுபட நின்றது. இறைவன் நிகழ்த்தும் படைத்தற் றொழில் முதலிய ஐந்தொழிலும, அழுந்து னோகருவார்ககுக் காத்தற் றொழிலாகவே முடிதலின், அவ்வொன்றனையே எல்லாம் அடங்க விதந்தோதினர். காப்ப ஏமவைகல் எயதின்று என ஏதுக்கூறலான், காவாககால் உயிர்கள் இன்புறமாட்டா என அதன் எதிர்மறைப் பொருளையும் கூறிககொள்க. அப்பெருமானை எல்லீரும் வாழ்த்தி இன்புறுமின் என்பது இசை எச்சம்.

இந்நூல் இன்ப நூலாகலின் அவ்வின்பத்தை நெடிது துய்க்க

ஏதுக கூறினா. இன்பம் எனப் பொதுவாகக் கூறலின, இம்மை மறுமை வீடு என்னும் முத்திற இன்பமும் கொள்க ஏமவைகல் எய்தின்றென்றதனை ஈண்டு உலகம் என்றது அறிவில் உலகினை ஒழித்து அறிவுடைய உலகத்தை. அஃதாவது, உயிர்களைக் குறித்து நின்றது என்னை? இன்புறுவன அவையேயாகலின். இவையிற்றை அசேதனப் பிரபஞ்சம் என்றும, சேதனப் பிரபஞ்சம் என்றும் அவ்வை நூலோரும் வகுத்தோதுதலறிக.

இனி, இச்செய்யுள் அகப்பொருட்பகுதியைச

சார்ந்ததன்றெனினும் அகப்பொருட்டுறை முதலிய இந்நூற்குப் புறத்துறைப்பாக நிற்றற் கேற்ப இதன்கண் 'தாமரை' என மருதக் கருப்பொருளும், 'பவழம்' என நெய்தற் கருப்பொருளும், 'குன்றி' என முல்லைக் கருப்பொருளும், 'குன்றின்' எனக் குறிஞ்சி முதற்பொருளும், ஆக, நானிலக் கருப்பொருள்களும் முதனிலமாகிய குறிஞ்சித் தெய்வமும் கூறிய அழகுணர்ந்து இன்புறுக.

இனி இச்செய்யுளை யாத்த நல்லிசைப்புலவரான பாரதம்பாடிய பெருந்தேவனார், இத்தொகை நூற்கேயன்றி ஐங்குறுநூறு, நெடுந்தொகை, புறநானூறு, நற்றிணை என்னும் நூல்கட்கும் இங்ஙனமே கடவுள் வாழ்த்துப் பாடி அமைத்துள்ளனர். தொகைநூல்களுள், இக் குறுந்தொகையே முதற்கண் செய்யப்பட்டதென்னும் வரலாறு நூலோர் கருத்திற்கேற்பவே நானிலங்களுள் முதனிலமாகிய குறிஞ்சிக் கடவுளை இந்நூற்கண்ணும், இரண்டாந் தொகையாகிய நற்றிணைக்கண், இரண்டாம் நிலமாகிய முல்லைக் கடவுளையும் வாழ்த்தி, எஞ்சிய நிலக் கடவுளராகிய இந்திரனையும் வருணனையும், இம்முருகனையும் திருமாலையும் போலச் சமயக்கணக்கர் முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடாமையின், எஞ்சிய நூல்களில் சிவபெருமானையும் வாழ்த்தினர் என்றுணர்க. எஞ்சிய மூன்று நூல்களினும் இவர் சிவபெருமானையே வாழ்த்துவதனை நோக்கின், இவர் சைவசமயத்தைச் சார்ந்தவர் என்று எண்ணவும் இடமுளது.

---

## பாட்டு - ௧: தோழி கூற்று

துறை :—தோழி கையுறை மறுத்தது. அஃதாவது, தோழியின் வாயிலாய்த் தலைவியைக கூடக் கருதிய தலைவன்,
செங்காந்தண் மலரைத் தோழிக்குக் காட்டி இதனைக் கையுறையாக ஏற்றுக்கொடுபோயத தலைவிக்குக் கொடுத்திடுக என வேண்டாநிற்பத் தோழி, தலைவி அரியளா என்பதுபட அதனை மறுத்தது.

இதன்கண், தலைவ! நீ தந்த இச் செங்காந்தண்மலர்
எங்கட்கு அரும்பொருள் அன்று; எமது மலையின்கண் இது நிரப்ப வுளதுகாண்! ஆகலின் இவ்வெண்பொருள் எமக்கு வேண்டா எனத், தோழி கையுறை மறுததுக் கூறுகின்றாள.

க. செங்களம் படக்கோன் றவுணர்த் தேய்த்த
செங்கோ லம்பிற் செங்கோட்டி யானைக
கழல்தொடிச் சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே.

—திப்புத் தோளார்.

(இ - ள்.) செங்களம் படக் கொன்று அவுணர்த் தேய்த்த- போர் உடற்றிய களம் உதிரத்தாலே சிவந்த களமாம்படி அசுரர்களைக் கொன்று இல்லையாக்கிய, செங்கோல் அம்பில் செங் கோட்டு யானை - குருதியாற் சிவந்து திரண்ட அம்பினையும் சிவந்த மருப்பினையுமுடைய யானையினையும், கழல் தொடி - உழலும் தொடியினையும் உடைய, சேய் குன்றம - செவ்வேள்

எழுந்தருளியிருக்கும் எமது மலை, குருதிப் பூவின் குலைக்காந் தட்டு - உதிரம் போன்று சிவந்த பூக்களையுடைய கொத்துக்கள் நிறைந்த காந்தள் மலரினை நிரம்பவுடைத்து.

விளக்கம் :—இதனால் யாங்கள் குறைவிலேமாகலின் நுங்கையு றையை வேம் எனபது குறிப்பெச்சம். இனி "இக்காந்தண்மலர் தெய்வத்திற்கு உரியதாகலான் இதனை மகளிர் சூடல் மரபன்றெனை மறுத்தாளுமாம்" என்பாருமுளர். "வள்ளிதழ் ஒண் செங்காந்தள் ஆம்பல் அனிச்சம் . . . . பல்வேறு உருவின் வனப்பமை கோதையெம் மெல்லிரு முச்சிக் கவின்பெறக்கட்டி" (குறிஞ் - சுக - கUச.) என்புழி மகளிர் செங்காந்தண்மலர் சூடும் மரபுண்மை அறியப்படுதலானும், மரபன்றாயின் அறிவுமிக்க தலைவன் மரபறியான் எனப்பட்டு இழுக் காம் ஆதலாறும் அது கருத்தன்றென்க. இனி "நீ கொணர்ந்த காந்தட் கையுறை நின் கைப்பட்டுக் கரிந்துகாட்டலின் இதனைத்

தலைவி காணின் ஆற்றாள் எனக்கருதி மறுத்தாள்" என்பாருமுளர். இங்ஙனம் கூறின், எங்குன்றம் குலைக்காந்தட்டென்பது பொருட்சிறப்பின்றி வெற்றெனநிற்றலுணர்க.

இனி இச்செய்யுளை, பேராசிரியரும், நச்சினார்க்கினியரும் "தோழி தலைவியை இடத்துய்த்து நீங்கியது" என்னும் துறைப்படுத்தோதுவர். அஃதாவது, தலைமகனது வரவுணர்ந்த தோழி தலைமகளைப் பொழிலின்கண் ஒரு குறியிடத்தே கொண்டுசென்று "சேஎய்குன்றம் குருதிப் பூவின் குலைக்காந்தட்டு ஆண்டுத் தெய்வம் உறைதலின் நின்னால் வரப்படாது, யான் சென்று கொய்துவருவன்; நீ அதுகாறும் இப்பொழிலிடத்தே நிற்கக்கடவாய்" என நிறுத்தி நீங்குதல் என்பதாம்.

செங்களம்பட என்றது போர்க்களம் உதிரத்தாற் சிவக்கும்படி என்றவாறு. இஃது அவுணரின் மிகுதியை உணர்தற்குக் குறிப்பேதுவாதல் உணர்க. தேய்த்த என்றது, அவுணர் பின்னும் உயிருடனிருந்து நல்லோரை நலியாதபடி எஞ்சாமற் கொன்ற என்பதாம். இது முருகப்பெருமானுடைய தெறல் கூறிற்று. களம் குருதியாற் செங்களம் பட்டாங்கே அம்பும், யானை மருப்பும் குருதியாற் சிவந்தன என்க. எனவே, அப்பெருமானுடைய சீர்த்தியும் பகைதெறும் ஆற்றலுடைத்து என்றவாறு.

கழல் தொடி, உழலும் தொடி : வினைத்தொகை.

செறிய இடப்

படாமையின் கழல்கின்ற தொடி எனப்பட்டது. இனி, கழல்தொடி என்பதை உம்மைத்தொகையாகக்கொண்டு வீரக்கழலும் வீரவலயமும் என விரித்தலும் ஒன்று. சேஎய் - முருகக் கடவுள். "சேயோன் மேய மைவரை யுலகமும்" என்றார் தொல்காப்பியனாரும்.

மயிலேயன்றி முருகப்பெருமானுக்கு யானை ஊர்தியும் உண்டென் பதை "வேழமேற்கொண்டு அங்குசம் கடாவ வொருகை" எனவரும் திருமுருகாற்றுப்படையானும் உணர்க. குருதிப்பூ – உவமத்தொகை. காந்தட்டு – காந்தளையுடையது. இதனைப் பாடிய புலவர் பெயர் "தீப்புததோளார்" எனவும் காணப்படுகின்றது.

## பாட்டு – ௨ : தலைவி கூற்று

துறை :—நலம் பாராட்டல். இயற்கைப் புணர்ச்சிக்கண் இடையீடுபட்டுநின்ற தலைமகன், தலைமகளை நாணின் நீக்குதற் பொருட்டு மெய்தொட்டுப் பயிறல் முதலாயின அவள்மாட்டு நிகழ்ததித் தனது அன்பு தோன்ற அவள் நலத்தைப் பாராட்டுதல்

இதன்கண், தலைவன் தலைவியின் கூந்தலில் உறையும் வண்டொன்றனை விளித்து, "வண்டே! நீ மலர் தேர்ந்து கொங் குண்ணும வாழ்க்கையுடையாய்; ஆதலின் நீ அறியும் பூக்களில் இவள கூந்தலினுங் காட்டில் நறியன உள்ளனவாக அறிதியோ?" என வினவுமுகத்தானே, அவள் கூந்தலின் இயற்கை மணத்தைப் பாராட்டுகின்றான்.

உ. கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
காமம் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியல்
செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீயறியும் பூவே.

—இறையனார்

(இ - ள்.) கொங்கு தேர் வாழ்க்கை அம் சிறைத் தும்பி - பூந்தாதுகளையே ஆராய்ந்து உண்ணுகின்ற வாழ்க்கையினையுடைய அழகிய சிறகர்களையும் உடைய வண்டே, காமம் செப்பாது கண்டது மொழிமோ - யான் விரும்பியதனை அறிந்து முகமன் கூறாமல் நீ வாய்மையாக அறிந்ததனையே கூறுவாயாக, பயிலியது கெழீஇய நட்பின் மயில் இயல் செறி எயிறு அரிவை கூந்தலின்—எழுமையும் என்னோடு பயின்றடிப்பட்ட அன்பினையும் மயில்போன்ற சாயலினையும் நெருங்கிய எயிற்றொழுங்கினையும் உடைய இவளது கூந்தல் போன்று, நீ அறியும் பூ நறியவும் உளவோ—நின்னால் அறியப்பட்ட மலர்களுள் வைத்து நறுமணம் மிக்க மலர்களும் உள்ளனவாக அறிந்ததுண்டோ?

விளக்கம் —இவள் கூந்தல் போன்று இனிது கமழும் மலர் இது காறும் யான் அறிந்திலேன், ஒருகால் பூந்தேரும் வாழ்வுடைய நீ அறிநததுண்டாயிற் கூறுக என்றவாறு. கொஙகு - பூந்தாகள் : தேனு

மாம். பூககளைத் தோவதே உன் தொழிலாகலின்

நின்னை வினயுவல்

என்பான், 'கொஙகுதேர் வாழ்க்கைத தும்பி' என்றான். அஞ்சிறை என்பதனை அகம்சிறை எனக்கொணடு "உள்ளிடத்தே சிறையை உடைய" என்பாரும் உளர். இஙஙனம் கூறுவார் கருததுஎன்னையோ அறிகிலம். ஊன்தேர் வாழ்க்கையுடைய பறவைகளினும நீ சிறந்தனை

என முகமன் கூறுவான், கொஙகுதேர் வாழககை அஞ்

சிறைத் தும்பி. என்றான். தும்பி, வண்டினத்துட்

சிறந்ததென்ப காமம் செப்புதல் -

வினவிற்கு நேரிய விடை கூறாது வினவுவாா மகிழும்படி அவா விரும் புவதறிந்து கூறுதல். மொழிமோ - என்பதன்கண் மோ, முன்னிலை

யசை.

கண்டது - வாய்மை, உண்மையாக

அறியப்பட்டது. பண்டு எவ்

வாற்றானும் யாம் ஒருவரை ஒருவர் அறியாதிருந்தும், நம் அன்புடை நெஞ்சம் செம்புலப் பெயனீர் போலக் கலத்தலின் இந்நட்புப் பண்டும் பண்டும் பற்பல பிறப்புக்களில் பயின்று சிறப்பொடு பெருகி, நெஞ்சிற் பின்னி நீககல் செல்லா உழுவலன்பு என்று தலைவிக்கு உணர்த்து வான், பயிலியது கெழீஇய நட்பென்றான். இது குறிப்பால் தம்மிலே உரைத்தவாறும். "உடுத்து வழிவந்த உழுவலன்பு" (பெருங் கதை - உ - கக : நகூ.) என்றார் பிறரும்.

இனி இச்செய்யுளை ஆசிரியர் நச்சினார்க்கினியர் தொல்காப்பி யத்துக் களவியல் க0-ம் சூத்திரத்துக்கு எடுத்துக்காட்டி, "இதனுள் தும்பி என்றது முன்னிலையாக்கல். கண்டது மொழிமோ என்றது,

சொல்வழிப்படுத்தல். கூந்தலின் நறியவும் உளவோ என்றது, நன்னய மூரைத்தல். காமம் செப்பாதென்றது என்நிலத்து வண்டாகலின் எனக்காகக் கூறாது மெய்கூறெனத் தன் இடம் அதுவாகக் கூறலின் இடமணித்தென்றது. பயிலியது கெழீஇய நட்பென்றது தம் நிலை யுரைத்தல்" என மிக அழகாக விளக்கங் கூறியுள்ளார்.

தும்பி விடைதாராதாகவும், விடைகூறுவது போன்று வினவியது, பாடல் சான்ற புலனெறி வழக்கம். இதனை "சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச் செய்யாமரபிற் றொழிற்படுத் தடக்கியும்" (பொருளி-உ.) என வரும் தொல்காப்பிய விதியானும் உணர்க. சாயல்-மென்மை. அது நாட்டிய மரபின் நெஞ்சு கொளின் அல்லது காட்ட லாகாது மனனுணர்ச்சிக்குப் புலனாக மாதர் அழகிற்கிட்டப்பதொன்று. தான் நோக்குயகால் அவள் நிலநோக்கி மெல்ல நக்கபொழுது அவள் எயிற்றழகைக கண்டனனாகலின், அதன் நலம் பாராட்டுவான் செறி யெயிற்றரிவை என்றான். அரிவை - பருவப் பெயராகாது இவள் என்னும் சுட்டுப் பொருட்டாய் நின்றது.

இனி, இப்பாடல் சிவபெருமான் "நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறித்" தரும்! என்னும் அந்தணன் பொருட்டுப் பாடியது என்னும் வரலாறொன்று வழங்குதலும அறிக.

## பாட்டு - ௩: தலைவி கூற்று

துறை :—தலைமகன் சிறைபபுறமாக அவன் வரைந்து கொள்வது வேண்டி த தோழி இயற்பழித்த வழித் தலைமகள் இயறபடமொழிந்தது . அஃதாவது', களவின் பத்தையே விரும் பித தலைவன்

வரைநதுகோடல் கருதாஞய்த் திரிதல் தங்கட்கு
இன்னுதாதலின் , அவன தம்மனை ப
படப்பையருகே வந்து நிற்றல கண்ட தோழி,
அவன் வருகையை யறியாதாள் போன்று
அவனைப் பழிதது ரைகக் கேட்ட தலைவி,
அது பொறாது அவனைப் பாராட்டியது.

இதன்கண், தலைவி, "யான் தலைவனோடு
கொண்டுள்ள நட்புரிமை நிலத்தினும் பெரிது;
வானினும் உயர்ந்தது; கடலினும ஆழமானது"
கின்றாள்.

என்று. பாராட்டித் தோழிக்குக் கூறு

ங. நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே சாரல்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே.
—தேவகுலத்தார்.

(இ - ள்.) சாரல் கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பு - மலைச்சாரலின்கண்

உள்ள கரிய கொமபுகளையுடைய குறிஞ்சியினது பூவிற் றேனைக் கவர்ந்து கொண்டுவந்து வண்டுகள் பெரிய தேனிறாலைக் கட்டா நிற்கும் நாட்டையுடைய தலைவனோடு எனக்குளதாகிய நட்பு, நிலததினும் பெரிது - அகலத்தால நிலவுலகததினுங் காட்டிற் பெரிதாம், வானினும் உயர்ந்தன்று - கருதுங்கால் விசும் பினுங் காட்டில் ஒக்கததால் உயாந்ததாம், நீரினும ஆா அளவின்று - அதன்கண் ஆழ்ந்து காணுங்கால் கடலினுங் காட்டி ல் அளததற் கரிய ஆழமுடையதாம.

**விளக்கம் :**—சாரல் - மலைப்பக்கம். குறிஞ்சி மரத்தின் கொம்பு கரிய நிறமுடைமையின் கருங்கோற் குறிஞ்சி எனப்பட்டது. கோல் - கொம்பு. பூக்கொண்டென்புழிப் பூவிறறேனைக் கவர்ந்து கொண்டு வந்து என்க. தேன் ஆகுபெயராய் இறாலுக்கு ஆயிற்று. இழைததல் - செய்தல். இழைத்தற் றொழிற்கு வினைமுதல் வருவிததுக் கூறப் பட்டது. வண்டுகள் குறிஞ்சிப்பூவிற் றேனைக் கவாநது கொணர்ந்து பெரிய தேனடையை இழைககும் என்றது, பால்வரை தெய்வம் யாங்கள் பண்டு பற்பல பிறப்புககளிலே பயின்றடிப்பட்ட அன்புரி மையை ஈட்டி இப்பெரிய நட்பினை இழைசதது என்னும் உள்ளுறை உவமை என்க. இஙஙனமாகலின் தலைவர் என்னை மறப்பாரல்லர் அவர் அன்பு பெரிது என இயற்பட மொழிந்தபடியாம்.

எவ்வாற்றானும் அளத்தற்கரிதென்பாள் அகலம், உயரம், ஆழம் ஆகிய மூன்றற்கும் தனித்தனிச சிறந்த உவமை எடுத்தோதினாள். பெருமைப் பணபிற்கு ஆசிரியர் திருவள்ளுவனாரும், இவற்றையே சிறந்தனவாகக்கொண்டு தந்திருக்குறளில "ஞாலத்தின் மாணப் பெரிது" (குறள் - க0உ.) என்றும், "வானுயர் தோற்றம்" (குறள் - உஎஉ.) என்றும், "கடலிற் பெரிது" (குறள் - க0௩.) என்றும இனி தின் ஓதுதலுணர்க.

இத்தகைய பேரன்பினனுகலின் அவன் என்னை அருளாதிரான் என, அவன் சால்புடைமையை உயர்த்தோதியவாறு.

## பாட்டு - சு : தலைமகள் கூற்று

துறை :—பிரிவிடை ஆற்றுளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

அஃதாவது—தலைவன் வரைபொருட் பொருட்டு அகன்றுனுக, அப் பிரிவை ஆற்றுது இவள் இறந்து படுவாளோ எனக் கவலையுற்ற தோழிககு யான ஆற்றுவன் கவலற்க என்பதுபடத் தலைவி கூறியது.

இதன்கண், "தோழி ! சான்ருேராகிய நங்காதலர் தண்

ணளியை நினைந்தே யான் ஆற்றியிருப்பேன்; யான் ஆற்ருது வருந்துவது எற்றுக்கெனில் சால்புடைய அவரை நீ சால்பிலர் என்று கூறுகின்றமை கேட்கப் பொருமைக்கே காண்" எனத் தலைவி கூறுகின்ருள்.

மூலமும் உரையும்

௪. நோம்என் நெஞ்சே நோம்என் நெஞ்சே
இமைதீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி
அமைதற் கமைந்தநங் காதலர்
அமைவிலர் ஆகுதல் நோம்என்

நெஞ்சே.

—காமஞ்சேர் குளத்தார்.

(இ-ள்.) என் நெஞ்சு நோம் என் நெஞ்சு நோம்-(தோழீ!) என் உள்ளம் வருந்தாநிற்கும் என் உள்ளம் வருந்தாநிற்கும்; அஃதெறறுக்கெனின், இமைதீய்ப்பு அன்ன கண்ணீர் தாங்கி அமைதற்கு அமைந்த நம் காதலர் - கண்ணிமைகளைச சுடுவது போன்ற வெம்மைமிக்க கண்ணீரைத் தடுத்து யாம் ஆற்றியிருந்தற்குக் காரணமான தண்ணளி பொருந்திய நம்முடைய தலைவர், அமைவிலர் ஆகுதல் - நின்வாயானே சால்பிலரா என்று கூறப்படுவாராதற்கு, நோம் என் நெஞ்சு - என் நெஞ்சு பெரிதும் நோவாநிற்கும.

விளக்கம் :—நோமென் நெஞ்சே என்னும் சொல் ஆற்றாமை மிகுதி தோன்ற மும்முறை அடுக்கிவந்தது தலைவனைத் தோழி 'அமைவிலர்' என இயற்பழித்ததாளாக, அது பொறாது தலைவி, கின்னல் அமைவிலர் என்று கூறப்படுதற்கே என் நெஞ்சு நோமென்பாள் தோழி கூற்றைக் கொண்டு கூறுவாள் நங்காதலர் அமைவிலர் ஆகுதல் என்றாள். அமைதற்கு அமைந்தாராகவும் அஃதறியாது அமைவிலர் எனப் பழித்தல் பொறேன் என்பது கருத்து. அமைதற்கமைந்த காதலர் என்றது, அவர்தம் காதற்சிறப்பை நினைந்து ஆற்றியிருத்தற்கேற்ற சால்புடையோர் என்றபடி. அவர் நல்லர், அருளுடையர் ஆகலின் மறவாது வந்து அளிசெய்வர் என்று எண்ணுங்கால், கண்ணீர் தடுத்து யான் ஆற்றியிருப்பல் என்பாள், கண்ணீர் தாங்கி அமைதற்கு அமைந்த காதலர் என்றாள் அமைதற்கு அமைந்த சிறப்புடைய காதலையுடையார் என்க. பிரிவின் கொடுமை கூறுவாள் இமைதீய்ப்பன்ன கண்ணீர் என்றாள். பிரிவால் உண்டாகிய வெம்மையை அவர் தண்ணளியைக் கருதும் கருத்தாகிய நீரான் அவித்து யான் ஒருவாறு ஆற்றுவேன் என்றவாறு. நினையுந்தோறும் நெஞ்சங் குளிர்தற்குக காரணமான காதலமைதியுடையாரை நீ அமைவிலர் என்பது கேட்டே என் நெஞ்சம் வருந்துகின்றது; அங்ஙனம் கூறுதேகொள், ஆற்றுவிக்கவேண்டிய நீயே இப்போது என்னை ஆற்றாது வருந்தச் செய்கின்றனை எனக் கடிந்து கூறினள் என்க. அவர் பிரிவு நோய் செய்வதாயினும் அவர் சால்பு அந்நோய்க்கு மருந்தாயமையுமாகலின் யான் ஆற்றுவல் என்றபடி.

அமைவு - காதலற்கேற்ற எல்லாப் பண்புகளானும் நிறைதல்.

## பாட்டு - ரு: தலைவி கூற்று

துறை :—பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, வரைவிடை வைத்துப்

## பொருள்வயிற் பிரிந்த தலைவனது பிரிவாற்றாமையாலே மிகவும்

வருந்திய தலைவியின் நிலைகண்டு கவலையுற்ற தோழிக்குத் தலைவி அக்காமநோயின் கொடுமை செப்பியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி "இக்கண்கள் தம்மகத்தே காதலர் உளராகவும், அஃதறியாவாய் அவர் பிரிந்து போயினர் என்று கருதி உறங்காமல் வருந்தாநின்றன. இத் தகைய மடமையைச் செய்யும் இயல்பிற்றோ காமநோய்" என்று கூறுகின்றாள்.

ரு. அதுகொல் தோழி காம நோயே
வதிகுரு குறங்கும் இன்னிழற் புன்னை
உடைதிரைத் திவலை அரும்புந் தீநீர்
மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்
பல்லிதழ் உண்கண் பாடோல் லாவே.

—நரிவெரூஉத்தலையார்.

(இ - ள்) தோழீ—, வதி குருகு உறங்கும் இன்னிழற் புன்னை - தன்னிடத்தே தங்கிய குருகுகள் தம் பேடையை மறந்து உறங்குதற்குக் காரணமான இனிய நிழலையுடைய

புன்னை, உடைதிரைத திவலை அரும்பும் தீநீர் மெல்லம் புலம்பன் - கரையின் மோதி உடைகின்ற அலைகள் சிதறிய நீர்த்துளியாலே அரும்பு போலத் தோற்றத்திற்கிடமான இனிய நீர்ப்பரப்பினை யுடைய நெய்தனிலத்தையுடைய தலைவன், பிரிந்தென - தம்மகத்தே பிரியாது வீற்றிருப்பவும் அஃதறியாது பிரிந்துபோயினனாகக்கருதி, பலஇதழ உண்கண் பாடு ஒல்லா - பலவாகிய இதழ்களையுடைய தாமரை மலர் போன்ற என் மையுண்ட கண்கள் துயில் பொருந்தாவாயின. அது கொல் காமநோய் - அத்தகைய மடமையைச் செய்யுந தன்மையுடையதோ காமப்பிணி!

**விளக்கம் :**—செய்யுளாகலின் சுட்டுப் பெயர் முன்வந்தது. கொல் என்றது - அத்தன்மைத்தோ என்று வியந்தவாறு.

அது

> " கற்புத் தானிலள் நற்றவ உணர்விலள்
> வருணக் காப்பிலள் பொருள்விலை யாட்டியென்று
> இகழ்ந்தன ளாகி நயந்தோன் என்னாது
> புதுவோன் பின்றைப் போயதென் னெஞ்சு
> இதுவோ அன்னாய் காமத் தியற்கை " (மணி - ௫ : அ௬-௯0.)

என, மணிமேகலையார் வியந்தமையும் ஈண்டு நினைவுகூரற்பாற்று. "அதுவென்றது கண் உறங்காமையைச் சுட்டிநின்றது" என்பாருமுளர்.

பிரிந்தென என்றது, அவர் பிரிவிலராய்த் தம்பால் இருப்பவும் அஃதறியாது பிரிந்தார் எனத் தம் மடமையான் உட்கொண்டு என்ற

வாறு. இத்தகைய மடமையும் காமநோய் செய்யும்போலும் என்று அதன் கொடுமை கூறியபடியாம். "கண்ணுள்ளார் காதலவராகக் கண்ணும், எழுதேங் கரப்பாக் கறிந்து" (குறள் - கக உஎ.) என்னும் குறட் கருததை நினைந்து, தம்மகத்தே பிரியாது வீற்றிருப்பவும், என உரை விரித்தாம். தம்மால் இடையீடின்றிக் காணப்படும் தலைவரைப் பிரிந்தாரெனக் கருதும் மடமையைக் காமநோய் செய்யுங்கொல் என்று வியந்தாள் என்க.

வதி குருகு : வினைத்தொகை. வதி குருகுறங்கும் என்றது; கடற் கரைக்கு இரைதேடற்பொருட்டு வந்த குருகுகள் ஆண்டுள்ள நிழல் இனிமையானே தந்துணை மறந்து துயில்வது போன்று, நந்தலைவா நம்மை மறந்து ஆண்டுள்ள பிறவின்பத்தால் தங்குவாராயினர் என்னும் குறிப்புடைததென்க. மெல்லம் புலம்பு - நெய்தனிலம். புலம்பு : ஆகுபெயர்.

இனி, " வதி குருகு உறங்கும்.. . புலம்பன் என்றது, அயல் நாட்டவரும் வந்து துய்த்துறங்கும் பெருமனையுடையான் என்றும், அமமனை கடல்தருஞ் செல்வததால் வளம்பல உடைத்தென்றும் குறிததுத் தான் ஆண்டுச்சென்று உறங்கப்பெறாமைக்கு வருந்துவாள்," என்னும் குறிப்பிற்று என்பாருமுளர்.

## பாட்டு - கூ : தலைவி கூற்று

துறை :—வரைவிடை வைத்துப் பிரிந்தவழி ஆற்றாளாய தலைமகள் தோழியை நெருங்கிச் சொல்லியது. அஃதாவது, தலைவன் தலைவியை மணஞ்செய்தற்குப் பொருளீட்டப் பிரிந்

தானாக, அப்பிரிவாற்றாமையால் வருந்திய தலைவி தனக்கு உசாத்துணையாகாது துயின்ற தோழியைப் பழித்துத் தன் வருத்த மிகுதிதோன்றக் கூறியது.

இதன்கண், தலைவி தோழி கேட்குமபடி " இருளோ ா நள்ளென் னுமஓசையுடைத்தாயிருந்தது ; இவ்விடையாமத்தே சுபுறங்கூறும் மடவோரும வாயவிந்து உறங்காநின்றனர் ; இப் பேருலகம் முழுதுமே துயின்று கிடக்கின்றது. யான ஒருத்தி மட்டுமே இவவுலகில் துயிலாது வருந்துகின்றேன்" என்று கூறுகின்றாள்.

சு. நள்ளேன் றன்றே யாமம் சொல்லவிந்
இனிதடங் கினரே மாக்கள் முனிவின்று
நனந்தலை உலகமும் துஞ்சும்
ஓர்யான் மன்ற துஞ்சா தேனே.

—பதுமனார்.

(இ - ள்.) நள் என்றன்று யாமம் - இவ்விடையிரவு நள் என்னும் ஓசையுடைததாயிருக்கின்றது, சொல்லவிந்து இனிது அடங்கினர் மாக்கள் - புறங்கூறல் தவிர்ந்து இனிதாக உறங்கு

**வாராயினர் மாக்களும், முனிவின்று**

**நனந்தலை உலகமும்**



**துஞ்சும் - என்னை வெறுப்பதில்லையாய் இவ்வகன்ற உலகமும் துயிலாநின்றது, ஓர் யான் மன்ற துஞ்சாதேன் - யான் ஒருத்தியேபோலும் ஒருதலையாகத் துயிலாதிருப்பேன்.**

**விளக்கம்** :—யாமம் நள்ளென்றன்று, மாக்கள் அடங்கினர் என மாறுக. நள் : ஒலிக்குறிப்பு. இனி, நளி என்னும் உரிச்சொல்லாகக் கொண்டு, யாமம் செறிந்த இருளையுடையதாயிற்று எனினுமாம். அலர் தூற்றித் திரிதலையே தொழிலாகவுடைய மாக்கள் அத்தீத்தொழிலை விட்டுத் துயிலுதல், அவர்க்கும் தனக்கும் இனிதே என்பாள், இனி தடங்கினர் மாக்கள் என்றாள். தன்னை அலர் கேட்டு வெறுக்கின்ற உலகமும் வெறுப்பொழிந்து துயில்கின்ற தென்பாள், முனிவின்று உலகமும் துஞ்சும் என்றாள். முன்றி என்னும் வினையெச்சத்திறுதி யிகரம், செய்யுளாகலின் இன்று என உகரமாகத் திரிந்தது.

ஓர் யான் எனபதனை வினைத்தொகையாகக் கொண்டு, இவற்றையும், காமவருத்தத்தையும் உணராநின்ற யான் ஒருத்தியே எனக் கொள்வாருமுளர். தோழியை நோக்கி ஓர்யான் துஞ்சாதேன் என்றது எனக்கு உசாத்துணையாய் ஆற்றுவிக்கும் கடமையுடைய நீயும் இனிதே துயின்றனை என இடித்துக் கூறியபடியாம்.

"மன்னுயி ரெல்லாந் துயிற்றி அளித்திரா
**என்னல்லது இல்லை துணை** "

(குறள் - கந கூஅ.) என்னும் அருமைத் திருக்குறளை இதனோடு ஒப்புக்காண்க.

## பாட்டு - எ : கண்டோர் கூற்று

துறை :—செலவின கண் இடைச்சுரதத்தாக கண்டோர் கூறி

யது. அஃதாவது, தலைவி தன தமரின் நீங்கித் தலைவனோடே உடன் போகும்பொழுது அவர்கள் சென்ற பாலை நிலத்தின் கண் ஆற்றெதிர்ப்பட்டோர் இவர்களைககண்டு இரங்கிக் கூறியது.

இதன்கண், தோற்ற முதலியவற்றால் இவர் உயர்குடி மக்களாகக் காணப்படுகின்றனர். இவள் சிலம்பு அணிந்திருக்கின்றாளாகலின், இவர்கள் மணம் செய்துகொண்டாராகக் கருதவும் இடமில்லை. மெல்லடியுடைய இந்நல்லாளும் இவ்வில்லோனும் யாவரோ அறிகிலேம்; இக்கொடிய பாலைநிலத்தே வழிச்செல்கின்றார்; அளியர்! என இரங்கி ஆற்றிடைக் கண்டோர் கூறுகின்றனர்.

எ. வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலவும் சிலம்பே நல்லோர்

யார்கோல் அளியர் தாமே ஆரியர்
கயிறுடு பறையிற் கால்பொரக் கலங்கி
வாகை வெண்ணெற் றொலிக்கும்
வேய்பயில் அழுவம் முன்னி யோரே.

—பெரும்பதுமனர்.

## மூலமும் உரையும்

கரு.

( இ - ள்.) வில்லோன் காலன கழல் - கையின்கண் வில்லை யுடைய அவ்விளைஞன் கால்களிடத்தே கழல கட்டப்பட் டுள்ளன, தொடியோள் மெல்லடி மேலவும் சிலம்பு - வளைய லணிந்த அம்மகளின் மெல்லிய அடிகளின் மேலே கிடப் பனவும சிலம் புகள், நல்லோர் - தோற்றத்தானே உயர்குடிப் பிறந்த நன் மையுடையோ ராகக காணப்படுகின்ற இவர்கள், யார்கொல் - எவ்வூரினரோ? யாவர் மக்களோ? யாங்கள்

அறிகின்றிலம், அளியர் - அளிக்கத்தக்கார், ஆரியா கயிறு ஆடு பறையின் - ஆரியக் கூத்தர்கள் கயிற்றில் ஏறி ஆடுங் கால் முழங்கும் பறையின் ஓசைபோல, கால் பொரக்கலங்கி வெண் நெற்று ஒலிக்கும் வேய்பயில் அழுவம் முன்னியோர் - மேல்காற்று மோதுதலானே நிலைகலங்கி வாகையினது வெள் ளிய நெற்றுக்கள் ஒலித்தற்கு இடமாகிய மூங்கில்கள் அடர்ந்த

பாலைநிலத்தின்கண்ணே செல்லக் கருதிச் செல்லா நிற்போர்.

விளக்கம் :—உடன்போக்கின்கண் தம்மைப் பிரிந்து சென்ற தலைமகளைத் தேடிவரும் செவிலி, ஆண்டெதிர்ப்பட்டாரை நீயிர் வரும வழியில நும்மெதிர் சென்றோர் யாரையேனும் கண்டனிரோ? என்று வினவ, கண்டேம் என இவ்விவ்வடையாளமுடைய இத்தகையோர் செல்லாநின்றனர் என்கின்றனர். ஆகலின் வில், கழல், சிலம்பு, தொடி முதலிய அடையாளங்கள் எடுத்துக் கூறுகின்றனர் என்க.

வில்லோன் என்றதனால், தலைவன் கையில் விற்படையோடே தலைவியை விழிப்புடன் பாதுகாத்துச் செல்லுதல் விளக்கப்பட்டது. தொடியோள் என்றதூஉம் உடன்போக்காலே அவள் உடல் பூரித்து மகிழ்ச்சியோடே போகின்றமை தெரித்தற்பொருட்டு உரைக்கப்பட்டது. என்னை,

மகளிர் மனம் வருந்தியவழி உடல் மெலிந்து வளைகழலலும், உவந்தவழி உடல் பொலிந்து அது செறிதலும் உண்மையான் என்க.

காலன - காலிடத்தன ; மேல - மேலே கிடப்பன. கழல்கள் மறக்குடிப் பிறப்பும் வெற்றியும் குறித்துக் கட்டப்படுவன ஆகலான், அதத்தலைவன் உயர்குடிபபிறந்த உரவோனாதலைக் குறிப்பாற் பெறவைத்தனர் என்க. மெல்லடி என்றதும், தலைவியின் உயர்குடிப் பிறப்பையும் அவள் ஒருபொழுதும் நடந்தறியாத தன் மெல்லிய அடிகளாலே அவன் பின்னர் அன்பின் வலிமையாலே நடக்கின்றனள் என்பதையும் குறிப்பாற் கூறியவாறு.

சிலம்புண்மை கூறியது, அவர்கள் காதலர் ஆகியவழியும், இன்னும் மணவினை நிகழ்த்தப்படாதவர் என்பது உணர்த்தற்பொருட்டென்க.

நல்லோர் என்றது, அவ்விருவர்தம் முகப்பொலிவும்

தோற்றமும் கண்டு

கூறியதாம். இத்தகைய உயர்குடிப்பிறப்பும் நல்லோர் பாலைசசுரத்தின்கண ஊேதியுமின்றிக்

ஒழுக்கமுமுடைய

காலானே நடந்து

சேறலாயிற்றே என்றிரங்குவாா அவரியர் எனரா.

தாம. ஏ. அசைகள்.

ஆரியர் - ஈண்டுக் கயிறாடுதல் வினையாற் கூத்தர்க்காயிற்று. எனவே ஆரியக் கூத்தர் என்றவாறும். அவா மூங்கிலை நட்டுக் கயிற கட்டி அதன்மேல் ஏறிஆடுவா என்பதனை, " ஆடியுற் பாணிக் கொக்கும் ஆரிய அயிழ்தப் பாடற் கோடியர்," (கம்பர் - கார்கால - நக.) எனப் பிறர் கூறுமாற்றானும் உணர்க.



## பாட்டு - அ: காதற் பரத்தை கூற்று

துறை :—கிழத்தி, தன்னைப புறனுரைத்தாள எனக்கேட்ட காதற் பரத்தை அவட்குப் பாங்காயினர் கேட்பச சொல்லியது. அஃதாவது, தலைவி தன்னை இகழ்ந்து கூறினாள் எனப் பிறர் சொல்லக்கேட்ட பரத்தை, தலைவிக்குப் பாங்காயினர் கேட் கும்படி தலைவனை இகழ்ந்து கூறியது.

இதன் கண், தலைவன் எனக்கு வயப்பட்டான் போன் றிருந்துவிட்டுத தலைவியின்பாற் சென்று அவட்கஞ்சி, அவள மனமபோன்று இயைந்து ஒழுகுகின்றான் ஆகலின், அவள் செருக்குற்று என்னை இகழ்வாளாயினள் எனப் பரத்தை கூறு கின்றாள்.

அ. கழனி மாத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉ மூரன்
எம்மிற் பெருமொழி கூறித் தம்மிற்
கையும் காலும் தூக்கத் தூக்கும்
ஆடிப் பாவை போல
மேவன செய்யுந்தன் புதல்வன் தாய்க்கே.

—ஆலங்குடி வங்கனார்.

(இ - ள்.) கழனி மாத்து விளைந்துகு வரம்பிலுள்ள மாமரத்து விளைந்து தானே தீம்பழம் - வயல் உதிர்ந்த இனிய

பழத்தை, பழன வாளை கதூஉம் ஊரன் - பக்கத்துள்ள பொய்கையின்கண் வாழும் வாளைமீன் கவ்வாநின்ற ஊரையுடைய தலைவன், எம் இல் பெருமொழி கூறி - எம் மனையிடத்தே இருந்து எம்மைப் பெருமைப்படுத்தும் மொழிகளைக் கூறி விட்டுச் சென்று, தம் இல் - தம்முடைய வீட்டில், கையும் காலும் தூக்கத் தூக்கும் ஆடிப் பாவைபோல-முன்னின்றார் கையையும் காலையும் தூக்கும்பொழுது தானும் கைகால்களைத் தூக்கும் இயல்புடைய கண்ணாடியிற் றோன்றும் பாவையைப் போன்று, தன் புதல்வன் தாய்க்கு மேவன செய்யும் - தன் மகனுடைய தாயாகியவளுக்கு அவள் விரும்பியவற்றை அறிந்து அவற்றிற் கியைய ஒழுகாநிற்பன்.

விளக்கம் :—கழனி - வயல். மா - மாமரம். அத்து - சாரியை. தீம் பழம் - இனிய பழம். கழனி மாத்து விளைந்துகு தீம்பழம் பழன வாளை கதூஉம் ஊரன் என்றது, தலைவிக்கே உரியவனாகிய தலைமகனை எம்மனோர் வாய்ப்பு நேர்ந்துழி நுகர்வர் என வெறுத்தோதியவாறும். கதூஉதல் - கவ்வுதல். தீம்பழம் பழனவாளை கதூஉம் ஊரன் என்றதனால் மருதநிலத்தலைவன் என்பது போந்தமை உணர்க.

## மூலமும் உரையும்

அவனுக்குப் பரத்தையரும் பலர் என்பது கருதி பன்மை கூறினள்.

எம்மில் எனப்

பெருமொழி - பெருமைப்படுத்தும் மொழி. இனி "சிறு சொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை" (புறம் - எ௨) என்புழிச் சிறுசொல்-இகழ்ச்சிச் சொல் என்று பொருள்பயந்தாங்கு பெருமொழி புகழ்ச்சி மொழி எனினுமாம். தலைவிக்கும் அவனுக்கும் பொதுவாகலான் தம் இல் எனப் பன்மை கூறினள். தலைவன் ஆண்மையினிழிந்து மனையாளைத் தாழ்ந்து ஒழுகுகின்றானாதலின் அவன் மனைவிக் கென்றது புதல்வன் தாய்க்கென்றாள். எனவே, மனைவியர்க்குரிய அடக்கம் இவள் என்று தலைவியையும், அவட்குத் தாழ்ந்தொழுகுவானாகலின் ஆண்மையிலன் என்று தலைவனையும் ஒருசேர இகழ்ந்தாளாதலறிக.

ஆடி - கண்ணாடி. பாவை - அதன்கட்டோன்றும் நிழலுரு.

கண்ணாடியிற்பாவை முன்னின்றார் செய்தன செய்தலன்றித் தானொன்று கருதிச செய்தலின்றாதல் போலத் தலைவனும் தலைவி செய்விப்பன செய்வதன்றித் தனக்கெனச செயலிலன என்றிகழ்ந்தவாறு.

மேவன - விரும்புவன. இங்ஙனம் தலைவன் அவட்கடங்கிக் கிடக்கின்றமையால் அவள் எம்மனோரை அடக்கமின்றி இகழ்பவளாயினள் என்பது கருத்து. யாம் இகழக்கடவேம் அல்லம் என்றபடி.

## பாட்டு - கூ: தோழி கூற்று

துறை :— தலைமகற்குத் தோழி வாயில் நேர்ந்தது ; அஃதாவது, தலைவன் தனது பரத்தையையால் ஊடியிருந்த

தலைவியின் ஊடல் தீர்க்கக் கருதித் தோழியின்பாற் குறையிரப்பத தோழி, தலைவி ஊடல தீர்வாள என்ற குறிப்பைத் தலைவனுக்குக் கூறியது.

இதன் கண், தலைவி உடல் மெலிவுற்றாளேனும் நின் கொடுமையை நாணி என்னை மறைத்தொழுகுகின்றாளாகலின் அவள் தாய்மைத்தன்மையுடையவளாயினள் ; நீ அவளை அடைதல் எளிதெனத் தோழி கூறுகின்றாள்.

க௯. யாயா கியளே மாஅ யோளே
மடைமாண் செப்பில் தமிய வைகிய
பெய்யாப் பூவின் மெய்சா யினளே
பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்
இனமீ னிருங்கழி யோத மல்குதோறும்
கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்
தண்ணந் துறைவன் கொடுமை
நம்மு ணாணிக் கரப்பா டும்மே.

—கயமனார்.

(இ - ள்.) மாஅயோள் - மாமை நிறமுடைய தலைவி, மடைமாண் செப்பில் தமிய வைகிய பெய்யாப் பூவின் - மூட்டு வாயால் மாட்சிமைபபட்ட செப்பினுள் வைக்கப்பட்டுத் தனித் தன வாக இருந்த சூடப்படாத பூக்களை ப்போன்று, மெய் சாயினள் - உடல் மெலிந்தாள், பாசடை நிவநத கணைக் காலநெய்தல்-பசிய இலைகளுக்கு மேலே உயர்நது நின்ற திரண்ட தாளையுடைய நெய்தற் பூககள, இன மீன் இருங்கழி ஓதம மல்குதொறும் - கூட்டமாகிய மீன்களையுடைய கரிய கடற் கழியின்கண் வெள்ளம் பெருகுந்தோறும், கயம் மூழ்கும் மகளிர கண்ணின் மாறுமே - குளததில் முழுகாநின்ற மகளிரினது கண்களை ஒததறாகுக் கொடுமை - குளிர்நத நாரணமான, தண்ணந் துறைவன் துறையினையுடைய தலைவனது கொடு மையை, நம்முன் நாணிக் கரப்பாடும - நம்முன்னே சொல்லுதற் கும நாணமுறறு மறைததுப் பேசா நின்றாள் ஆதலின், ஆகியள - தாயாந் தன்மையை உடையள் ஆயினள.
யாய்

விளக்கம் :—முன்னிலைப் புறமொழியாகக் கூறுகின்றாளாகலின் நின்கொடுமை என்னாது துறைவன் கொடுமை என்றாள். சினத்தற்குக் காரணம் நின்னிடத்து உளதாய வழியும் நின் சிறுமைகருத் தானே காணுகின்றாளாகலின் அச்சிறுமையை எனக்கு மறைத்தாற்போன்றே உனக்கும் மறைப்பாள் ஆதலின் அவளை எய்துதற்கு வழியுளது என்றவாறு.

எத்தகைய குற்றத்தையும் மனங்கொள்ளாது போற்றுந்தன்மை தாய்மைக்கே உரியதாகலின் தலைவி தன்னிலையினும் உயர்ந்த தாய்ப் பண்பினை எய்தியிருக்கின்றாள் எனத் தலைவியின்

எடுத்துக் காட்டினள் என்க. எனவே அவள்

பெருந்தன்மையை

பெருந்தன்மையே

உனக்கு வாயிலாகும் என்று உபாயம

உணர்த்தியவாறும்.

“ பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்
குறைபதி என்னும் உலகு ”
(குறள்-க0கரு)

என்றோதுபவாகலான் தலைவன் பழிக்குத் தலைவி நாணிக் கரப்பாடினள் எனத் தலைவியின் தகவுடைமையை எடுத்துக்காட்டினள் என்க.

மாயோள் - இயல்பாகவே மாமை நிறமுடைய

தலைவி. மடை -

மூட்டுவாய். மாண் - மாட்சிமையுடைய

ஒளியும புகாதபடி மூட்டுவாயாற் சிறந்த

எனவே உள்ளே காற்றும்
செப்பு என மலரின் நலங்
கெடற்கு ஏதுக்காட்டியவாறு காண்க.

தமிய - தனித்தனவாக. என்றது, பிறந்த கொடியினும் இராது, தாம் அழகுறுத்தவேண்டிய குழலினும் இராது தனிப்பட்டிருந்த என்றவாறு. பெய்யாப்பூ - குழலிலே பெய்யப்படாத பூ. எனவே நினைவல் உகரப்படாத தலைவி என்றவாறு. மெய் சாயினள் - உடல் மெலிந்தாள். இங்ஙனம் உடல் மெலிந்தமையாலேதான் யான் நீ செய்த கொடுமையை அறிந்தேன்; அவள் அதனை எனக்கும் மறைத்தாள் என்றபடி. பாசடை - பசிய இலை. பாசடை நிவந்த நெய்தல் என்றது,

## மூலமும் உரையும்

கஎ

குடிப்பிறப்பின் அடங்காது மிக்க பரத்தையர், கண்கள் என்றற்கு உள்ளுறையாகக் கொள்க. இனமீன் - கூட்டமான மீன். மகளிர் கண்ணுக்கு ஒவ்வா நெய்தல் ஒவ்வுவனபோற் றோன்றும் என்றது, சிறப்பில்லாத பரத்தையர் தலைவனுக்குச் சிறந்த தலைவிபோற் றோன்றினர் என்னும் உள்ளுறை தோன்ற நின்றது.

கயம் - குளம். தண்ணந்துறைவன் - குளிர்ந்த துறையை உடைய தலைவன்; விரித்தல் விகாரம். இனிக் குளிர்ந்த அழகிய துறைவனுமாம். கொடுமை - தலைவியைப் பிரிந்தமையும், பரத்தையைத் தலைவியோ டொப்பக் கருதினமையும் என்க.

தலைவனையும் உளப்படுத்தி நம்முன் நாணிக் கரப்பாடும் எனப் பன்மை கூறினாள். கரப்பாடுதல் - தலைவன் கொடுமை தோன்றாதபடி பேசுதல்.

## பாட்டு - கo : தோழி கூற்று

துறை :— தலைமகற்குத் தோழி வாயில் நேர்ந்தது. அஃதாவது : கூ-ம் செய்யுட்குரைத்தாங் குரைத்துக்கொள்க.

இதன்கண், தலைவி தலைவன் செய்த கொடுமையை மறைத்து அவன் நாணும்படி வாராநின்றாள் எனத் தோழி கூறுகின்றாள்.

கo. யாயா கியளே விழவுமுத லாட்டி
பயறுபோ லிணர பைந்தாது படீஇயர்
உழவர் வாங்கிய கமழ்பூ மென்சினைக்
காஞ்சி யூரன் கொடுமை
கரந்தன ளாகலின் நாணிய வருமே.

—ஓரம்போகியார்.

(இ - ள்.) யாய் ஆகியள் - தாய்மைத் தன்மையுடையளாய தலைவியானவள், விழவு முதலாட்டி - தலைவன் விழவிற்கு முதன்மையை ஆளும் தன்மையுடையளாயினள்; எற்றாலெனின், பயறுபோல் இணர பைந்தாது படீஇயர் - பயற்றங் கொத்துக்கள் போன்ற பூங்கொத்துக்களின் உள்ள பசிய பூந்தாதுக்கள் தம்மேற் படியும்பொருட்டு, உழவர் வாங்கிய கமழ் பூ மென்சினைக் காஞ்சி யூரன் கொடுமை - உழவர்கள் வளைத்த நறுமணங் கமழ்கின்ற பூக்களையுடைய மெல்லிய கிளைகளை யுடைய காஞ்சி மரத்தையுடைய ஊரனது கொடுமையை, கரந்தனள் ஆகலின்-பிறர் அறியாதபடி தன்னுள்ளே மறைத்தா ளாகலின், நாணிய வரும் - அக்கொடுமை செய்தோன் தானே

நாணும்படி அவனை எதிர்கொள்ள வாராநின்றாள்.

**விளக்கம்** :—யாய் ஆகியள் என்றதற்கு கூ-ம் செய்யுட்குக் கூறிய விளக்கங் காண்க. தலைவன் கொடுமையை மனங்கொள்ளாது அவனை வரவேற்கவும் வருகின்றாளாகலின் தாய்மைத் தன்மையை எய்தினள்

கு.—2



என விதந்தோதினள். அத்தன்மையை அவள் எய்தாள் எனில் ஊடல் தீர்தல் அரிதென்பதுபட நின்றது.

விழவு ஈண்டு இன்பம் என்னும் பொருட்டாய் நின்றது. எனவே தலைவன் இல்லறத்தே எய்தும் சிறப்பிற்கெல்லாம் முதலாந்தன்மை யுடையவள் எனத் தலைவியின் சிறப்போதுமாற்றால் இன்பத்திற்கேதுவாகாத பரத்தையரை விரும்பியொழுகும தலைவன் பேதைமையைக் குறிப்பாற் சுட்டிக்காட்டினாள் என்க.

உழவர் காஞ்சிப்பூவின் தாது தம்மேற் படிதலை விரும்பி வளைத்தமையால் அச்செயலை அவர்மேற் படிந்த பூந்தாது உணர்த்தினாற் போன்று, தலைவன் பரத்தையோ டாடினமையை அவன் மேனியிற் பட்ட சந்தனம் முதலியவை உணர்த்தும் என்பது குறிப்பு. இங்ஙனம் உணர்த்தும் எனபதை—"எரியிதழ் சேர்ந்த ஏதிலார்ப் புணர்ந்தமை, கரிகூறும் கண்ணியை," எனவும், "பிறர் கூந்தல் மலர்நாறும் மார்பினை," எனவும், "ஏதிலார் தொடியுற்ற வடுக்காட்டி," எனவும் வரும் கலியானும் (எஅ) அறிக. காஞ்சி - மருதக்கருப்பொருள். நாணிய - நாணமுறும்படி.

> "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
> நன்னயம் செய்து விடல்" (குறள் - ௩௧௪.)

என்னும் திருக்குறட் கருத்து ஈண்டு
நினைவுகூரற்பாலது.

## பாட்டு - கக : தலைவி கூற்று

துறை :—தலைமகள் தன் நெஞ்சிற்குச் சொல்வாளாய்த் தோழி கேட்பச் சொல்லியது. அஃதாவது, தலைவனுடைய பிரிவாற்றாமையால் உடல் மெலிந்து வருந்திய தலைவி தன் நெஞ்சிற்குக் கூறுவாள்போல அவ்வருத்த மிகுதியைத் தோழிக்குப் புலப்படுத்தியது.

இதன்கண், தலைவி தன் நெஞ்சை விளித்து, "நெஞ்சே நாம் அவரைப் பிரிந்தமையால் உடல் மெலிந்து கண்கலுழ்ந்து அழுதலினின்றும் தப்புவோம். யான் வேற்று நாட்டில் அவர் இருப்பினும் அங்குச் செல்லத் துணிந்தேன். ஆதலால் நீயும் உடன்வருவாயாக" எனக் கூறுகின்றாள்.

கக. கோடீர் இலங்குவளை நெகிழ
நாடொறும்
பாடில கலிழும் கண்ணொடு புலம்பி
ஈங்கிவண் உறைதலும் உயகுவம் ஆங்கே
எழுவினி வாழியென் னெஞ்சே

முனு அது

குல்லைக் கண்ணி வடுகர் முனையது
பல்வேற் கட்டி நன்னாட் டும்பர்
மொழிபெயர் தேஎத்த ராயினும்
வழிபடல் சூழ்ந்திசின் அவருடை

நாட்டே.

கக

(இ - ள்.) கோடு ஈர் இலங்கு வளை நெகிழ - சங்கினை அரிந்தியற்றிய விளங்குகின்ற வளையல் கையினின்றும் கழலாநிற்ப, நாள்தோறும் - வரைவிடை வைக்கும் ஒவ்வொரு நாளும், பாடுஇல கலிழும் கண்ணொடு - துயிலுதல் இல்லாதனவாய்க் கலங்கி அழுகின்ற கண்களுடனே, புலம்பி - தனித்திருந்து வருந்தி, ஈங்கு இவண் உறைதலும் உய்குவம் - இவ்விடத்தே இவ்வாறு தங்குதலையும் தப்புவேம், என் நெஞ்சே இனி முனு ஆங்கே எழு வாழி - என்னுடைய நெஞ்சமே இப்பொழுதே முற்பட நீயும் அவ்விடத்திற்கு எழுக நீ வாழ்வாயாக, குல்லைக் கண்ணி வடுகர் முனையது - கஞ்சங் குல்லையைத் தலையிற் சூடும் கண்ணியாகவுடைய வடுகருடைய பகைப்புலத்ததாகிய, பல்வேல் கட்டி நன்னாட்டு உம்பர் - பலவாகிய வேற்படையையுடைய கட்டி என்பானுடைய நல்ல நாட்டிற்கு அப்பால், மொழி பெயர் தேஎத்தர் ஆயினும் - நந்தலைவர் நம் மொழி மாறின நாட்டில் இருப்பாராயினும், வழிபடல் சூழ்ந்திசின் அவருடை நாட்டு - அவரைக் காணும்பொருட்டு ஆறு செல்லுதலை யான் ஆராய்ந்து துணிந்துள்ளேன் அவருடைய நாட்டிடத்தே.

**விளக்கம் :**—கோடு - சங்கு. ஈர்தல் - அரிதல். வளை - வளையல், சங்கை அரிந்து வளையல் செய்தணிதலை "கடற்கோ டறுத்த அரம் போழ் எல்வளை," (ஐங் - ௧௯௪) எனப் பிறர் கூறுமாற்றானும் உணர்க. பிரிவாற்றாமையால் உடல் மெலிந்தமையின் வளை ஞெகிழ்ந்த தென்றவாறு. பிரிவாற்றாமையால் உடல் மெலிந்துழி வளை ஞெகிழ்த லுண்மையை,

> "துறைவன் துறந்தமை தூற்றுகொல் முன்கை
> இறையிறவா நின்ற வளை" (குறள் - ௧௧௫௭.)

என வரும் திருக்குறளானும் உணர்க.

ஞெகிழ்தல் - கழலுதல். நாடொறும், வரைவிடைவைத்த ஒவ் வொரு நாளும் என்க. பாடு - துயில். கலிழ்தல் - கலங்கியழுதல்; கண்ணீர் ஒழுகுதலுமாம். புலம்பி - தனித்து, "புலம்பே தனிமை" என்பது தொல்காப்பியம் (உரி - ௩௩.) ஈங்கு இவண் என்றது, இவ் வாறு துயருறுதற்கு இடனாகிய இவ்விடத்தே என வெறுத்தோதிய வாறு. யான் ஆராய்ந்து துணிந்தபடி வழிபடின் இத்துன்பமும் ஒழியும் என்பாள் புலம்பி உறைதலும் உய்குவம் என்றாள். உய்தல் - தப்புதல். அஃதாவது துன்பத்தினின்றும் விடுபடல். நெஞ்சே மூனாது ஆங்கே எழுவாழி என மாறுக. முனாது - முற்பட. குல்லை - கஞ்சங்குல்லை. கண்ணி - தலையிற் சூடும் மாலை. வடுகர் - வேங்கட மலைக்கு வடபாலுள்ள ஒரு சாதியினர். முனை - பகைப்புலம். மொழி பெயர் தேஎம் - தமிழல்லாத வேறு மொழி வழங்கும் நாடு. மொழி பெயர் தேஎத்தினராயினும் என்றதன்கண் உம்மை மொழிபெயர் தேஎத்தராகாமை குறித்து நின்றது. எனவே யாண்டுளர் ஆயினும் ஆக யான் வழிபடல் சூழ்ந்திசின் என்றவாறு.

கட்டி, சேரனுடைய படைத்தலைவருள் ஒருவன் என்றும் கங்க நாட்டுத் தலைவன் என்றும் கூறுப. இவனைப் பாடியவர், மாமூலனாரும், பரணரும், குடவாயிற் கீரத்தனருமாவர் (அகம்: உஉ௬ - ௪௪.) வழி படல் - ஆறு செல்லுதல். வழிபாடு செய்தல் எனினுமாம்.

## பாட்டு - கஉ : தலைவி கூற்று

துறை :—ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, தலைவன் பிரிவினை ஆற்றாது பெரிதும் வருந்தாநின்ற தலைவி இறந்துபடுவாளோ எனக் கவலையுற்ற தோழிக்குத் தலைவி, யான் வருந்துவது பிரிவிற்கன்று வேறொன்றினுக்கு என்று கூறியது.

இதன்கண், தலைவி தனது ஆற்றாமை கண்டு வருந்திய தோழியை நோக்கி, யான் ஆற்றேனாவது அவர் பிரிந்தார் என்பதற்கன்று. அவர் சென்ற வழியின் கொடுமையை எண்ணியே வருந்துகின்றேன். அஃதறியாது இவ்வூர் அயன்மை கூறி என்னை இடித்துரையாநின்றது என்று கூறுகின்றாள்.

கஉ. எறும்பி யளையிற் குறும்பல் சுனைய
உலைக்கல் அன்ன பாறை ஏறிக்
கொடுவில் எயினர் பகழி மாய்க்கும்

கவலைத் தென்பவவர் சென்ற ஆறே
அதுமற் றவலங் கொள்ளாது
நொதுமற் கழறுமிவ் வழுங்க லூரே.

—ஓதலாந்தையார்.

(இ - ள்.) அவர் சென்ற ஆறு - தலைவர் சென்ற வழி, எறும்பி அளையில் குறும்பல் சுனைய - எறும்பின் வளைகளைப் போன்ற குறிய பலவாகிய சுனைகளையுடையனவும், உலைக்கல் அன்ன - சொல்லனது உலையின்கண் உள்ள பட்டடைக் கல்லை ஒத்த வெம்மையுடையனவுமாகிய, பாறை ஏறி - பாறையின் மேல் ஏறி, கொடுவில் எயினர் - கொடிய வில்லையுடைய வேடர், பகழி மாய்க்கும் கவலைத்து என்ப - அம்புகளைத் தேய்த்துக் கூர்மை செய்தற்குக் காரணமான கவர்த்த வழிகளை உடைத்து என்று கூறுவர், அது அவலங்கொள்ளாது - அதுபற்றி வருத்தங் கொள்ளாமல், இவ் அழுங்கல் ஊர் - ஆரவாரத்தையுடைய இந்த ஊர், நொதுமல் கழறும் - அயற்றன்மையுடைய சொற்களைக் கூறி இடித்துரையா நிற்கும்.

விளக்கம் :—எறும்பி - எறும்பு. எறும்பை எறும்பி என்னும் வழக்குண்மை திருவெறும்பியூர் என்பதனானும் அறிக. அளை - வளை.

குறியனவாயும் பலவுமாயும் இருத்தற்கு எறும்புவளை உவமை என்க. உலைக்கல் - கொல்லன் உலையிற் பட்டடைக்கல். இது வெப்பமுடைமைக்கு உவமை என்க. பாறை-கற்பாறை. பாறையில் ஏறுதல் சேய்மைக்கண் ஆறுசெல் வம்பலரை அறிதற் பொருட்டாம். கொடுவில்-கொடிய கொலைத்தொழில் செய்தற்குக் கருவியாகிய வில் என்க. வளைந்த வில் எனினுமாம். எயினர் - எயினச் சாதியார்; பாலைநில மாக்கள். எனவே, இது குறிஞ்சி திரிந்த பாலை ஆதலறிக. பகழி - அம்பு. மாய்த்தல் - தேய்த்துக் கூராக்குதல். கவலை - கவர்த்த வழி. ஆறு - வழி. குறும்பல் சுனைய என்றது நீர் வறந்த சிறு சுனைகள் என்னும் குறிப்பிற்றாய் உண்ணுநீர் பெறுமையும், உலைக்கல் அன்ன பாறை என்றது வழியின் வெப்ப மிகுதியும், எயினர் பகழி மாய்க்கும் என்றது இடுக்கண் உடைமையும் காட்டித் தலைவர் சென்ற வழியின் கொடுமையை விளக்கின. அது என்றது, அத்தகைய கொடுமைக்கு என்றபடியாம். அவலங் கொள்ளற்குரியது அதுவே ஆகவும் அதற்கு வருந்தாமல் என்பாள் அதுமற் றவலங்கொள்ளாது என்றாள். நொதுமல் - அயன்மை. கழறுதல் - இடித்துரைத்தல். அழுங்கல் - ஆரவாரம். இவ்வூர் என்றது தோழியை. அவளே அயன்மை கூறி இடித்துரைப்பாளாகலின் என்க. "ஏதிலர் என்னும் இவ்வூர்" எனவரும் திருக்குறட் பகுதிக்கு (ககஉ௬.) "தன் கருத்தறியாமை பற்றிப் புலந்து சொல்கின்றாளாகலின், தோழியை வேறுபடுத்து 'இவ்வூ'ரென்றாள்," எனப் பரிமேலழகர் கூறினமையானும் இக்கருத்தினை உணர்க.

## பாட்டு - கரு : தலைவி கூற்று

துறை :—தலைவன் தோழியிற் கூட்டங்கூடி ஆற்றும் வகை யான் ஆற்றுவித்துப் பிரிய, வேறுபட்ட கிழத்தி தோழிக் குரைத்தது. அஃதாவது, பாங்கியிற் கூட்டத்தின் பின்னர்த் தலைவன் பிரிந்தானாக, அப்பிரிவாற்றாது வேறுபட்ட தலைவி யைக்கண்டு கவன்ற தோழிக்குத் தலைவி தன் ஆற்றாமைக்குக் காரணங் கூறியது.

இதன்கண், தலைவி, தலைவர் என்னைப் பிரிந்து பெரிய
நோயைச் செய்தனர்; அதனால் என் கண்கள் பசலை பாய்ந்தன; யான் வருந்தா நின்றேன் எனத் தோழிக்குக் கூறுகின்றாள்.

கரு. மாசறக் கழீஇய யானை போலப்
பெரும்பெயல் உழந்த இரும்பிணர்த் துறுகற்
பைதல் ஒருதலைச் சேக்கும் நாடன்
நோய்தந் தனனே தோழி
பயலை ஆர்ந்தன குவளையங் கண்ணே.

—கபிலர்.

(இ - ள்.) தோழி - தோழியே! மாசு அறக் கழுவிய யானை போல - அழுக்கறக் குளியாட்டப்பட்ட யானையைப்போன்று,

பெரும் பெயல் உழந்த இரும்பிணர்த் துறுகல் - பெரிய மழையினை ஏற்றுத் தூய்மையான பெரிய சருச்சரையை உடைய சிறிய கல்லினுடைய, பைதல் ஒருதலை சேக்கும் நாடன் - குளிர்ச்சியையுடைய ஒரு பக்கத்தே என்னுடன் தங்கிய தலைவர், நோய் தந்தனனே - என்னைப் பிரிந்து வருத்தத்தைத் தந்தார் அதனால், பயலை ஆர்ந்தன குவளை அம் கண்-குவளைமலர் போன்ற அழகிய என் கண்கள் அத் தன்மைகெட்டுப் பசலை நிறம் கொண்டன.

**விளக்கம்** :—மாசு - அழுக்கு. அது யானை தன் உடம்பிற் புழுதியை வாரி வீசிக்கொள்ளல் முதலியவற்றால் உண்டாய தென்க. கழீஇய - குளியாட்டப்பட்ட. பாகனாற் கழுவப்பட்ட என்றவாறு. பெரும் பெயல்-பெரிய மழை. உழத்தல் அம்மழையினின்று ஏற்றுக்கோடல். இரும்பிணர் - கரிய சருச்சரை எனினுமாம். துறுகல் - சிறிய கற் பாறை. இது தோழியிற் கூட்டம் நிகழ்ந்த இடத்தின்கண்ணது என்க. பைதல் - குளிர்ச்சி; பசுமையுமாம். ஒருதலை - ஒருபக்கம். சேக்கும் - தங்கும். என்றது, மனைப்படப்பையின் மருங்குள்ள தாய துறுகல்லின் ஒருபக்கத்தே குளிர்ந்த இடத்தே என்னோடு தங்கிய தலைவன் என்றவாறு. நோய் தருதல் - தான் பிரிந்து அதனால் வருத் தத்தை உண்டாக்குதல். தோழி : விளி. பயலை - பிரிவாற்றாமையான் வருவதோர் நிறவேறுபாடு. இதனை,

> "விளக்கற்றம் பார்க்கும் இருளேபோற் கொண்கன்
> முயக்கற்றம் பார்க்கும் பசப்பு"

(குறள் - ககஅ௬) என வரும் திருக்குறளானும் உணர்க.

நோய் தந்தனனே என்ற பாடத்தை ஒய்தந்தனன் எனக்கொண்டு- ஒய்தந்தனன் என்னின்று ஒழியத்தலைப்பட்டான் என்பாருமுளர்.

## பாட்டு - கச : செவிலி

கூற்று

துறை :—" மடன்மா கூறும் இடனுமா ருண்டே" என்பதனால் (தொல் - களவி - கக) தோழி குறைமறுத்துழித் தலைமகன் மடலேறுவன் என்பதுபடச் சொல்லியது; அஃதாவது, தோழியாற் குறைமறுக்கப்பட்ட தலைவன் இனி யான் மடன் மாவூர்ந்து என்னைத் துன்புறுத்தியவள் இன்னளென்பதை ஊரறியச்செய்து பல்லோரும் பழிதூற்றச் செய்வேன் என அத்தோழி கேட்பக் கூறியது.

இதன்கண், தலைவன், யான் சின்மொழியரிவையை மடன் மா வேறிப் பெறுவேன். யான் அங்ஙனம் பெற்றபொழுது இவ்வூரிலுள்ளோர் அறிவாராக. ஆனால் அங்ஙனம் மடன்மேலேறி இவளைப் பெறுதற்கு என்னை மடன்மா மேலே கண்ட பலரும் இவனேபோலும் இந்நல்லோளுடைய கணவன் என்று

## மூலமும் உரையும்

உரு

கூறுகிற்பர் என்பதற்கே சிறிது நாணுகின்றேன் எனத் தோழி கேட்பக் கூறுகின்றான்.

கச. அமிழ்துபோதி செங்நா அஞ்ச வந்த
வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி

அரிவையைப்

பெறுகதில் அம்ம யானே பெற்றாங்
கறிகதில் அம்மவிவ் வூரே மறுகில்
நல்லோள் கணவன் இவனெனப்
பல்லோர் கூறயாம் நாணுகஞ் சிறிதே.

—தொல்கபிலர்.

(இ - ள்.) அமிழ்து பொதி செந்நா அஞ்ச வந்த - அமிழ்தத்தின் தன்மையைத் தன்னிடத்தே கொண்ட செவ்விய நாவானது அஞ்சும்படியாக முளைத்தெழுந்த, வார்ந்து இலங்கு வை எயிற்று - ஒழுங்குபட்டு விளங்காநின்ற கூர்த்த பற்களையும், சில்மொழி அரிவையை - சிலவாகிய மொழிகளையும் உடைய தலைவியை, யான் பெறுகதில் அம்ம - யான் மடன் மாவேறிப் பெறுவேனாக, பெற்றாங்கு அறிகதில் அம்ம இவ்வூர் - அவ்வாறு பெற்ற பின்னர், இவ்வூரில் உள்ளோர் அறிந்து கொள்வாராக, மறுகில் நல்லோள் கணவன் இவன் என—தெருவின்கண் இந்

நல்லாளுடைய கணவன் இவன்போலும் என்று, பல்லோர் கூற - பலரும் கூறாநிற்கும் அச்சிறு பொழுதைக்கே, யாம் நாணுகம் சிறிது - யாங்கள் நாணாநிற்பேம் சிறிது.

விளக்கம்:—அமிழ்தம் போன்ற சுவைக்கும் இனிய மொழியைப் பேசும் செவ்விய நாவென்பான், அமிழ்து பொதி செந்நா என்றான். இனி, அமிழ்து பொதி செந்நா அமிழ்து பொதி எயிறு என மீண்டும் எயிற்றொடும் கூட்டி அமிழ்தம்போன்ற ஊறலையுடைய எயிறு என்றும் கூறிக்கொள்க. என்னை? "அமிழ்தத் தன்ன அந்தீங் கிளவி" என்றும், (குறுந் - உஉசு.) "முள்ளுறழ் முளை எயிற்று அமிழ்தூறுந் தீநீரை" என்றும் (கலி - ச.) பிறசான்றோரும் இரண்டிற்கும் அமிழ்தத்தன்மை காட்டுவர் ஆகலின் என்க. நா அஞ்சுதற்குக் காரணம் கடியவாகிய பற்கள் தன்னருகே வளர்வதனால் என்க. மெல்லிய நா கடிய பற்களுக்கு அஞ்சுதல் என்றது மெலியோர் கொடியோர்க் கஞ்சும் இயல்புண்மையின் என்க.

வார்தல் - ஒழுங்குபடுதல். வை - கூர்மை. "வையே கூர்மை" என்பது தொல்காப்பியம், (உரி-அகூ.) மகளிர்கள் பாரித்துப் பேசாமல் சில மொழிகளே பேசுதல் அழகென்பர். ஆதலின் சின்மொழியரிவை என்றான். அரிவை பருவங் குறியாது தலைவி என்னும் பொருட்டாய் நின்றது. தில், அம்ம, ஈரிடத்தும் அசைகள். நீ குறை மறுத்தாலும் யான் மடன்மாவேறி அவளைப் பெறுவது திண்ணம் என்பான் பெறுக யானே என்றான்.



இவ்வாறு மடன்மாவேறிப் பெறுவதில் உள்ள இடையூறும் ஒன்றுளது. அஃதாவது, இந்நிகழ்ச்சியை அறியாத ஊர் முழுதும் அறிந்தபோது இவள் கணவன்போலும் இவன் எனப் பல்லோரும் கூறுங்கால் யானும் அவளும் சிறிதுபோழ்து நாணும்படிவரும் அத் துணையே என்பான், பல்லோர் கூற நாணுகம் சிறிதே என்றான். சிறிதே என்றது காலச்சிறுமையைக் குறித்தது.

நல்லோள் என்றது மடன் மாவூருங்கால் தலைவன் தன் கையிற் கொண்டுள்ள தலைவியின் உருவத்தை என்க. நல்லோள் என்றது இங்ஙனம் மடன் மா வூரவிட்டாள் நல்லோள் அல்லள் என்றபடி.

## பாட்டு - கரு : செவிலி கூற்று

துறை :—உடன்போயின பின்றைத் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றாள்; நிற்பச் செவிலித்தாய் நற்றாய்க்கு அறத்தொடு நின்றது. அஃதாவது, தலைவனோடு தலைவி தமரிற் பிரிந்து சென்றபின்னர்த் தோழி அச்செய்தியைத் தன் தாயாகிய செவிலிக்கு அறிவுறுத்தச் செவிலி அச் செய்தியை நற்றாய்க்கு நின் மகள் கற்புக்கடம் பூண்டாள் என்று கூறியது.

இதன் கண், செவிலி நற்றாயை நோக்கி நின்மகள் வெள்வேல் விடலையொடுகொண்ட காதற்கேண்மை அவர் தம்முள் பலரறிமணம் செய்துகொண்டமையால் நாலூர்க் கோசர் நன்மொழிபோல உண்மையாயிற்று என்று அறிவுறுத்துகின்றாள்.

கரு. பறைபடப் பணிலம் ஆர்ப்ப இறைகொள்பு
தோன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய
நாலூர்க் கோசர் நன்மொழி போல
வாயா கின்றே தோழி ஆய்கழற்
சேயிலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தையொடு

நட்பே.

—ஔவையார்.

(இ - ள்.) தோழி - தோழியே, ஆய்கழல் சேயிலை வெள் வேல் விடலையொடு - அழகிய வீரக் கழலையும் சிவந்த இலையையும் உடைய வெள்ளிய வேலினை ஏந்திய தலைவனோடே, தொகுவளை முன்கை மடந்தை நட்பு - பலவாகத் தொக்க வளையணிந்த முன் கையினையுடைய நின் மகள் கொண்ட கேண்மை, பறைபட - மணப்பறைகள் ஆரவாரிப்பவும், பணிலம் ஆர்ப்ப - சங்குகள் முழங்காநிற்பவும், இறை கொள்பு - தலைவன் தன் மனையிடத்தே இறை கொள்ளுதலானே, தொல் மூதாலத்து - பழைதாகிய ஆலமரத்தின்கீழ், பொதியில் தோன்றிய - மன்றத்திடத்தே கூடித் தோன்றிய, நாலூர்க் கோசர் நன்மொழி போல - நான்கு

## மூலமும் உரையும்

உரு

ஊரிலுள்ள கோசர்களுடைய நன்மையுடைய மொழியைப் போன்று, வாய் ஆகின்று - உண்மையாகியது ;

**விளக்கம்** :—பறை - மணப்பறை. "பல்லார் அறியப் பறை யறைந்து நாட்கேட்டுக் கல்யாணம் செய்து" (நாலடி - அசு) என்றார் பிறரும். பணிலம் - சங்கு. இறை கொள்பு - தங்குதல் கொண்டு; என்றது தலைவியோடே மணத்தவிசிலிருந்து மணவினை செய்து என்றவாறு. கொள்பு - செய்பெனெச்சம் கொள்ளலான் என எதுப்பொருள் குறித்துநின்றது. இறை கொள்பு என்பதனைக் கோசர்க் கேற்றுவாருமுளர். தொன் மூதாலம் - பழைதாய் முதிர்ந்த ஆலமரம். பொதியில்- பொதுவிடம், மன்றம். பழைய ஆலின்கீழ்க் கூடிய கோசர் என்க. நாலூர் - ஒரூருமாம். கோசர் என்போர் மோகூர்ப்பழையனுடைய அவைக்களத்துள்ள மறவர் என்ப. இவர் சொன்னசொற் பிழையாது ஒழுகுவோராகலின் அவருடைய நன்மொழியை உவமையாகக் காட்டினுள். கோசர் வாய்மொழியுடையோர் என்பதனை "வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்லிசை வளங்கெழு கோசர்" எனப் பிறர் கூறுமாற்றானும் உணர்க (அகம் - உ0௫). நன்மொழி நன்மை விளக்கும் மொழி. வாய் - வாய்மை. ஆய்கழல் - ஆராய்ந்து கட்டிய கழலுமாம். தலைவியை உடன்கொண்டு சென்ற தலைவனுடைய வீரம் கூறுவாள் வெள்வேல் விடலை என்றாள்.

சேயிலை என்பதனைச் செயலை எனத்திருத்தி அசோகு சூடப்பட்ட வெள்வேல் என்பாருமுளர். மேலும் தொகுவளை என்பதனைத் தொடுவளை எனத் திருத்திச் "செறிக்கும் வளை" என்றும் கூறுவர்.

## பாட்டு - கசு : தோழி கூற்று

துறை :—பொருள்வயிற் பிரிந்தவிடத்துத் தலைமகள் ஆற்றாமை கண்டு தோழி கூறியது; அஃதாவது, பொருளீட்டும் பொருட்டுப் பிரிந்த தலைமகன் மீண்டு வாராமை கண்டு வருந்திய தலைவியை அவர் இன்னே வருவரெனக் கூறித் தோழி ஆற்றுவித்தது.

இதன்கண், தலைவியை நோக்கித் தோழி அன்னாய் நின்னைத் தலைவர் மறந்தமைவாரல்லர். அவர் சென்ற பாலைநிலத்தே

ஆண்பல்லி தன் காதற்றுணையாகிய
பெண்பல்லியை அழைத்
தலைக் கேட்பர். அங்ஙனம் கேட்டபொழுது உன்னை
விரைந்து மீண்டுவருவர், என்று கூறுகின்றாள்.
நினைந்து

கசு. உள்ளார் கொல்லோ தோழி கள்வர்தம்
பொன்புனை பகழி செப்பங் கொண்மார்
உகிர்நுதி புரட்டும் ஓசை போலச்
செங்காற் பல்லி தன்றுணை பயிரும்
அங்காற் கள்ளியங் காடிறந் தோரே.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.



(இ- ள்.) தோழி—, கள்வர்தம் பொன்
புனை பகழி

செப்பம் கொண்மார் - ஆறலைகள்வர் தம்முடைய இரும்பைத் தலையிற் புனைந்த அம்பினைச் செம்மை செய்தற் பொருட்டு, உகிர் நுதி புரட்டும் ஓசைபோல - நகத்தாலே அவ்வம்பின் நுனியைப் புரட்டுதலாலே எழும் ஒலியைப்போன்று, செங்கால் பல்லி தன் துணை பயிரும் - சிவந்த காலையுடைய ஆண் பல்லி தனது காதற்றுணையாகிய பெண் பல்லியை ஒலிசெய்து அழைத்தற்கிடனாகிய, அங்கு - அவ்விடத்தே, கள்ளியங் காடு இறந் தோர் - கள்ளிக் காடுகள் மிக்க பாலையைக் கடந்து சென்ற தலைவர், உள்ளார் கொல்லோ - நம்மை நினையாரோ.

**விளக்கம்** :—தோழி : விளி. உள்ளுதல் - நினைத்தல். உள்ளார் கொல்லோ என்ற வினா, உள்ளுவர் என்னும் பொருள்பட நின்றது. கள்வர் - ஆறலைப்போர். மூங்கிற்கோலின் ஒருதலையில் இரும்பால் இலை முதலிய வடிவங்களிற் செய்யப்பட்ட உறுப்பினைச் செருகியதே அம்பாகலின் பொன்புனை பகழி என்றார். பொன் - ஈண்டு இரும்பென்க. செப்பம் - செம்மை. கொண்மார் - கொள்ளும் பொருட்டு. செப்பம் கொள்ளுதலாவது - அம்பின் நுனியைத் தீட்டிக் கூர்மை செய்தவழி மிகவும் கூரிதாய நுனி தீட்டுதற் றொழிலால் ஒருபாற் கோடுமன்றே அக்கோட்டத்தை உகிரால் வருடி நேரிதாக்கிக் கோடல். "உலைக்கல் அன்ன பாறையேறிக் கொடுவில் எயினர் பகழிமாய்க்கும்" எனப் பன்னிரண்டாஞ் செய்யுளில் எயினர் அம்பு தீட்டுதல் கூறப்பட்டமையும் காண்க. புரட்டுதல் - கோடிய நுனியை நேர்செய்தல். மிகவும் கூரிதாகிய நுனியாகலின் நகத்தால் வருடி நேர்செய்தல் அமைவதாயிற்று என்க.

அம்பின் நுனியை உகிரால் வருடும் ஓசையைப் பல்லியின் ஓசைக்கு உவமையாகக் கண்ட அருமை நினைந்து நினைந்து இன்புறற் பாலது. அங்கால் என்பதனை - அங்கு ஆல் எனக் கண்ணழித்து ஆல் அசை என்க. அழகிய கால் எனக் கொண்டு கள்ளிக்கேற்றுவாரும் உளர்.

பல்லி துணை பயிரும் ஒலி கேட்புழி அவர் தம் துணையாகிய உன்னை நினையாதிரார்; நினைப்பராகலின் விரைந்து வருவர் வருந் தாதேகொள் என ஆற்றியவாறு.

## பாட்டு - கஎ : தலைவன் கூற்று

துறை :—தோழியிற் கூட்டம் வேண்டிப் பின்னின்ற தலை

மகன் தோழி குறை மறுமற் கூறியது. அஃதாவது, தன் குறையை நிறைவேற்ற மறுத்த தோழியைத் தலைவன் நீ மறுப் பாயாயின் யான் வேறு வழியானும் தலைவியைப் பெறுதல்கூடும் என்பதுபடக் கூறியது.

இதன்கண் குறைமறுத்த தோழியை நோக்கித் தலைவன் தான் மடலூர்தல் முதலியன செய்தேனும் தலைவியைப்

பெறுவேன் என்பது குறிப்பாற் றோன்றுமாறு, காமம் காழ் கொண்டோர் இன்னின்ன செய்வதுண்டு என உலகியல் மேலிட்டுக் கூறுகின்றான்.

கள. மாவென மடலும் ஊர்ப பூவெனக்
குவிமுகிழ் எருக்கங் கண்ணியும் சூடுப
மறுகி ஞார்க்கவும் படுப
பிறிது மாகுப காமங்காழ் கொளினே.

—பேரெயின் முறுவலார்.

(இ - ள்.) காமம் காழ்கொளின் - உலகத்து ஆடவர் காம நோய் நனிமுதிர்ந்தால், மாவென மடலும் ஊர்ப - குதிரையல்லாத பனைமடலைக் குதிரையாகக் கொண்டும் செலுத்துவா, பூவெனக் குவிமுகிழ் எருக்கங் கண்ணியுஞ் சூடுப - சூடும் மரபில்லாததாயினும் சூடும் மரபுடைய பூவாகக்கொண்டு குவிந்த அரும்பையுடைய எருக்கம் பூமாலையினையும் தலையிலே சூடிக் கொள்வர், மறுகின் ஆர்க்கவும் படுப - இவற்றோடமையாது தெருவிடத்தே நின்று பலராலும் தூற்றி ஆரவாரிக்கவும் படுவர், பிறிதும் ஆகுப - இவ்வாற்றால் தங்கருத்து முற்றாதாயின் சாதற்குரிய செயலையும் துணிந்து செய்வாரும் ஆவர்.

**விளக்கம்** :—எனவே இம் மிகைச் செயல்களில் யான் இறங்கும்படி நீ செய்யாமல் என் கருத்தை நிறைவேற்றித் தருதலே உனக்கும் எனக்கும் தலைவிக்கும் நலமாகும் என்றவாறு தலறிக.

மா - குதிரை. பனைமடல் மாவாகாதிருக்கவும் அதனை மாவாகக் கொண்டென்பார் மாவென என்றார். பூஎன என்றது ஈண்டுச சூடும் பூவல்லாதிருந்தும் சூடும் பூவாகக கொண்டென்றவாறு. குவிமுகிழ் - கூம்பிய அரும்பு. கண்ணி - தலையிற் சூடும் மாலை. மார்பிலணியும் மாலையைத் தார் என்ப. இதனை,

"கண்ணி கார்நறுங் கொன்றை காமர்

வண்ண மார்பிற் றாருங் கொன்றை "

(புறம்-க)

எனவரும் புறப்பாட்டானும் அதன் உரையானும் உணர்க: காழ் - வயிரம். காமம் காழ் கொள்ளுதல் - காமநோய் ஆற்றொணாதவாறு முதிர்தல். "நிறையும் உண்டோ காமங் காழ்கொளின்" எனப் பிறரும் ஓதுதல் காண்க.

இனிக் காமங்காழ்கொளின் என்றதற்குக் காமமாகிய கனி பரலை (விதை) உடையதானல் என்று கொள்வார்க்குக் கனி விதையை உடைத்தாதல் பிஞ்சாயிருக்குங்காலும் உண்மையின் அது பொருந்தா தென்க. காமத்தை மரமாகவும் காழை விதையாகவும் கொள்வாரும் உளர். விதை முதிர்வதல்லது மரம் முதிர்தலின்மையின் அதுவும் உரையன்றென்க. பிறிதும் என்றது ஈண்டுக் கைகூடாவழிச் சாதலை



என்க. மடலூர்ந்தவழிக் கண்டோர் பலரும் இவன்போலும் இவள் கணவன் என்பன போன்ற சொற்களால் மறுகிற் பேசுவாராகலின் அதனை ஆர்க்கப்படுவர் என்றான்.

## பாட்டு - கஅ : தோழி கூற்று

துறை :—இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகனைத் தோழி எதிர்ப்பட்டு வரைவு கடாயது. அஃதாவது, மனைப்படப்பையில் இரவுக்குறிக்கண் தலைவியைப் புணர்ந்து செல்லும் தலைமகனைத் தோழி தனியிடத்தே கண்டு தலைவியின் வருத்தமிலையுணர்த்தி விரைவில் அவளைப் பலரறிமணம் செய்துகொள்ளல் வேண்டும் என வற்புறுத்திக் கூறியது.

இதன்கண் தோழி தலைவனை நோக்கி நாடனே! சிறிய பலாக்கொம்பிலே பரிய பழம் தூங்கினாற்போன்று தலைவியின் உயிராகிய சிறிய கொம்பிலே காமமாகிய பெரும்பழம் கனிந்து தூங்குகின்றது. இச் செவ்வியறிந்து நீ அக்கனியை தின்புறக் கடவாய். இன்றேல் அக் காமமுதிர்ச்சி நுகர்ந் அவள் உயிர்க்கு இறுதியைப் பயக்கும் என்று கூறுகின்றாள்.

கசு. வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட சேவ்வியை ஆகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரல்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே.

—கபிலர்.

(இ - ள்.) *வேரல் வேலி வேர்க்கோட் பலவின் சாரல்*
*நாட - மூங்கிலாகிய வேலியை உடையதும், வேரிலேயே குலைகளை யுடையதுமாகிய பலாமரம் மிக்க இனிய மலைப்பக்கத்தையுடைய நாட்டையுடையவனே, செவ்வியை ஆகுமதி - நீ துய்த்தற்குரிய தகுதியை உடையனாகுக, யார் அஃது அறிந்திசினோர் - நின்னை யல்லாற் பிறர் யாரே அதனை அறிந்து கொள்வார் உளர், சாரல் சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கியாங்கு - மலைப்பக்கத்தேயுள்ள பலாவினது சிறிய கொம்பின்கண்ணே பெரிய பழம் தூங்கினாற் போன்று, இவள் உயிர்தவச் சிறிது - இத்தலைவியின் உயிரோ ஆற்றவுஞ் சிறியது, காமமோ பெரிது - அவ்வுயிரின்கட் கனிந்த காமநோயோ ஆற்றவும் பெரியதாம்.*

**விளக்கம்:**—*தலைவியின் உயிர்க்குப் பலாவின் சிறிய கொம்பும், அவ்வுயிரின்கண் தோன்றிக் கனிந்த காமத்திற்கு அக்கொம்பிற்றோன்றி முதிர்ந்த பலாக்கனியும் உவமைகள் என்க.*

தலைவியோடு இயற்கைப் புணர்ச்சி எய்திய நீயே அவள் காம நோயின் செவ்வியறிந்து நுகரற்பாலையல்லால் பிறர் யாரும் இலர் என்பாள், யார் அஃதறிந்திசினோர் என்றாள். ஒருவருமிலர் என்பது கருத்து. நின்னாட்டுப் பலாமரங்கள் வேரிலே பழுப்பனவும் மூங்கில் வேலியை இயல்பாக உடையனவும் ஆதலின், அப்பழத்திற்காதல் மரத்திற்காதல் கேடின்மையின் நீ தலைவியின் நிலையைச் சிந்திக்காதிருக்கின்றாய் என்பாள், 'வேரல் வேலி வேர்க்கோட் பலவின் சாரல் நாட' என்று விளித்தாள். ஆகுமதி என்பதன்கண், மதி: முன்னிலையசை. செவ்வியை - செவ்வியுடைமையை. ஈண்டுச் செவ்வி என்றது தலைவியின் காமம் பதனழியாவாறு அதன் நிலையறிந்து துய்க்கும் காலத்தியற்கையை. அஃதாவது, பலர்அறி மணம் செய்துகொண்டு அவளைப் பிரியாது நுகர்தல் என்க. களவு நினைந்தாங்கு நுகர்தற்குரியதல்லா இடையூறு பலவுடைத்தாகலின் செவ்வியறிதற் கியலாமையறிக.

சிறு கொம்பிற் பலாக்கனி பின்னும் பருத்து முதிருமாயின் அக்கொம்பினை முறித்துக்கொண்டு வீழ்ந்து சிதறுமாறுபோலத் தலைவியின் காமம் பின்னும் முதிருங்கால் அவள் உயிருக்கு இடையூறு செய்து தானும் கெடும் என்பது உவமையாற் போந்தமை உணர்க.

> " மலரினும் மெல்லிது காமம் சிலரதன்
> செவ்வி தலைப்படு வார் " (குறள் - ௧உ௮௯)

என்னும் அருமைத் திருக்குறளானும் காமச் செவ்வியை அறிதல் அருமை உணர்க. உயிர் அணுவென வழங்கப்படுதல் பற்றித் தவச் சிறிதென்றாள். தவ - மிகுதி: உரிச்சொல்.

## பாட்டு - ௧௯ : தலைவன் கூற்று

### துறை :—உணர்ப்பு வயின் வாரா

ஊடற்கண் தலைமகன் சொல்லியது. அஃதாவது, தனது பரத்தமை காரணமாக ஊடி

யிருக்கும் தலைவியைத் தலைமகன் நெருங்கி யான் தவறிலேன் எனப் பணிமொழி பல கூறியுணர்த்தவும், அவள் ஊடல் தீர்ந் திலளாகப் பின்னர்த் தலைவன் தன் நெஞ்சை நோக்கிப் புலந்து கூறியது.

இதன்கண், தலைவன், 'நெஞ்சே! நீ எவ்வியென்பானை இழந்த பாணர் வறுந்தலைபோலப் பொலிவிழந்து வருந்தக் கடவை; ஏனெனில் இவள் நமக்கு ஏதிலாள் ஆயினள் ஆகலான்' எனப் புலந்து கூறுகின்றான்.

கக. எவ்வி இழந்த வறுமையாழ்ப் பாணர்
பூவில் வறுந்தலை போலப் புல்லென்
றினைமதி வாழிய நெஞ்சே மனைமரத்
தெல்லுறு மௌவல் நாறும்
பல்லிருங் கூந்தல் யாரளோ நமக்கே.

—பரணர்.

(இ - ள்.) எவ்வி இழந்த வறுமை யாழ்ப்பாணர் - எவ்வி என்பானை இழந்துவிட்டமையாலே நல்குரவுற்ற யாழினையுடைய பாணரின், பூவில் வறுந்தலை போல - பொற்றாமரைப்பூச் சூடப்

படாத வறிய தலை பொலிவிழந்திருத்தல்போல, புல் என்று இனை மதி - புற்கென்று வருந்துக, நெஞ்சே வாழிய - என் நெஞ்சமே நீ வாழ்வாயாக; அஃதெற்றாலெனின், மனைமரத்து எல்லுறு மௌவல்நாறும் பல்இரும் கூந்தல் யாரளோ நமக்கு - மனைப்படப்பைக்கண் உள்ள மரத்தின்மேற் படர்ந்த இராப் பொழுதினையுற்ற முல்லைமலர்கள் போன்று மணங்கமழாநின்ற பலவாகிய பெரிய கூந்தலையுடைய இவள் நமக்கு ஏதிலாள் ஆயினள் ஆகலின்.

**விளக்கம்**:—நெஞ்சே வாழிய எவ்வியிழந்த பாணர் தலைபோல நீ இனிப் பொலிவிழந்து வருந்தக் கடவாய் அஃதெற்றாலெனின், இவள் நமக்கு ஏதிலாள் ஆயினள் ஆகலின் என இயைத்துக் கொள்க.

எவ்வி என்பான் வேளாளர் வகுப்பினனும் மிழலைக் கூற்றத்துத் தலைவனுமாவான். இவன் யாழ்ப்பாணர்கட்குப் பெரிதும் பரிசில் வழங்கிப் போற்றியவன். இவன் இறந்தபின்னர் வழங்குவாரின்மையின் யாழ்ப்பாணர் தலை பொற்பூச்சூடாத வறுந்தலை ஆயின என்றபடி. பாணர்க்குப் பொற்பூ வழங்குதல் பண்டைக்கால வழக்கம். எவ்வி இறந்தமையால் வருந்திய பாணர் நிலையினை "எவ்வி வீழ்ந்த செருவிற் பாணர், கைதொழு மரபின் முறித்திடேப் பழிச்சிய, வள்ளுயர் வணர் மருப்பு" (கசு) என வரும் அகப்பாட்டானும் உணர்க.

எவ்வியை இழந்தமையால் வறுமையுற்ற பாணர் என்க. புல்லென்றல் - பொலிவிழத்தல். இனை - வருந்துக. மதி : முன்னிலை அசை. வருந்துக என்றூகலிற் பரிந்து பின்னும் அந்நெஞ்சை வாழ்த்தினன் என்க. நின்பாற் குற்றமின்றாகவும் இனைகின்றாய் ஆகலின் வாழி என்றான் என்க.

எல்லுறும் மௌவல் - இராக்காலம் எய்தப்பெற்ற முல்லை என்க. மனைமரத்தின்கட் படர்ந்த முல்லை இராப்பொழுதில் சூடப்படாமல் மணந்தாற்போல இவள் நலம் நம்மால் நுகரப்படாமல் திகழ்கின்றது என்பது குறிப்பாகக் கொள்க. எல்லுறு முல்லை என்பதற்கு ஒளியுடைய முல்லை என்றல் பொருள் சிறவாமை காண்க. எல் - இரவு.

## பாட்டு - உ௦ : தலைவி கூற்று

துறை :—செலவுணர்த்திய தோழிக்குக் கிழத்தி உரைத்

தது. அஃதாவது, பொருள்வயிற் பிரியக் கருதிய தலைவன் தன் கருத்தைத் தோழிக்குக் கூறினுகத் தோழி தலைவன் பிரியக் கருதியதைத் தலைவிக்குக்கூற அவள் புலந்து கூறியது.

இதன்கண், தலைவனது பிரிவுணர்த்திய தோழியை நோக்கி அவர் அருளும் அன்புமின்றி நம்மைப் பிரியக் கருதின் நாமென்

## மூலமும் உரையும்

நடக

செய்கோம். அங்ஙனம் பிரிவோர் அறிஞர் ஆயின் ஆகுக அப் பிரிவை ஆற்ருது வருந்தும் யாம் பேதையம் ஆவேமெனில் ஆகுக என்று கூறுகின்ருள்.

உ௦. அருளும் அன்பும் நீக்கித் துணைதுறந்து
பொருள்வயிற் பிரிவோர் உரவோர் ஆயின்
உரவோர் உரவோர் ஆக
மடவம் ஆக மடந்தை நாமே.

—கோப்பெருஞ்சோழன்.

(இ - ள்.) மடந்தை - தோழீ, அருளும் அன்பும் நீக்கி- அருளையும் அன்பையும் தம் உள்ளத்தினின்றும் அகற்றி, துணை துறந்து - எனக்குத் துணையாந் தன்மையையும் அகற்றி, பொருள்வயின் பிரிவோர் - நிலையில்லாத பொருளைக் கருதி அதன்பொருட்டுப் பிரியக் கருதுவோர், உரவோர் ஆயின் - அறிவுடையரே ஆனல், உரவோராக - அறிவுடையர் ஆகுக, மடவம் ஆக நாம் - அவர் பிரிவிற்கு ஆற்ருது வருந்தும் யாம் அறிவிலேம் ஆயின் ஆகுவம், என்பதாம.

**விளக்கம்** :—அருள், தொடர்புபற்றாது இயல்பாக எல்லாவுயிர்கண் மேலும் செல்வதாகிய இரக்கம். அன்பு, வாழ்க்கைத் துணையும், புதல்வரும் முதலிய தொடர்புடையார்கட் டோன்றும் காதல். பொதுவாகப் பெண்பால் என்று நினைந்தவழி என்பால் அருள் கொள்ளல் வேண்டும்; சிறப்பாக மனைவி என்று நினைந்தவழி என்பால் அன்பு கொள்ளல் வேண்டும்; இவ்விரண்டின் ஒன்று நின்ற வழியும் என்னைப் பிரிவாரல்லர். அவர் பிரியக் கருதினராயின் இவ்விருபெருங் குணங்களுமே நீத்தவராதல் வேண்டும் என்பாள் அருளும் அன்பும் நீக்கி என்றாள். இனி துணை துறந்து என்றதற்கு எனக்குத் துணையாந் தன்மையின் அகன்றெனக் கோடலே பொருட் சிறப்புடையதாதல் அறிக. தமக்குத் துணையாகும் என்னைத் துறந்து எனக் கொள்ளின் துணை துறத்தல் தலைவன் துன்பத்திற்கே ஏதுவாதல் அறிக.

அருளும் அன்பும் நீத்துப் பாதுகாக்கப்படுவோரைத் துறத்தல் அறிவுடையார்க் கேலாமையின் அச்செயல் செய்யத் துணிந்தார் சான்றோர் ஆகார் என்பாள், உரவோராயின் என்றாள். இனி அன்புடையார் பிரியப்பொறாத நாம் அறிஞர் அல்லராயின் ஆகுக என்றதும். அன்புடையாரைப் பிரியப்பொறாத மடமையே நமக்கு வேண்டும். பிரியக் கருதுவது அறிவென்றே கூறுவாருளராயின் அவ்வறிவு வேண்டா.

மடவம் - அறிவில்லாதேம். அறிவுமிக்க தலைவரே அவ்வறிவோடு பொருந்தாத செயலைச் செய்யக் கருதின் யாம் என் செய்வேம் எனபது கருதது.



## குறுந்தொகை

### பாட்டு - ௨௧ : தலைவி கூற்று

துறை :—பருவம் வருந்துணையும் ஆற்றுவித்த தோழி அவர் வரக் குறித்த பருவ வரவின்கண் இனி ஆற்றுவிக்குமாறு எவ்வாறு என்று தன்னுள்ளே கவன்றாட்கு அவளது குறிப் பறிந்த தலைமகள் "கானம் அவர் வருங்காலத்தைக் காட்டிற் றாயினும் யான் கார்காலம் என்று தேறேன் (எற்றாலெனின்) அவர் பொய் கூறாராகலின்" எனத் தான் ஆற்றுவல் என்பது படச் சொல்லியது.

அஃதாவது, தலைவன் யான் இன்ன பருவத்தே மீண்டு வருவேன் ஆற்றியிரு எனக் கற்பித்த சொற்படியே தலைவி ஆற்றி யிருந்தாள்; தலைவன் குறித்த பருவம் வந்தது; ஆனால் தலைவன் வரவில்லை; அதுகாறும் அரிதின் ஆற்றியிருந்த தலைவி, இனி ஆற்றாள் எனத் தோழி கவல்வதைத் தலைவி குறிப்பால் அறிந் தாள். "கானம் அவர் கூறிய பருவத்தைக் காட்டிற்றாயினும் இது அப்பருவம் அன்று," ஏனெனில், அவர் பொய் கூறார் அல்லரோ எனத் தான் ஆற்றியிருப்பேன் என்பது தோன்றக் கூறியது.

இதன்கண், தோழி இக்கொன்றைக் கானம் இது கார்காலம் எனக் கூறினும் யான் அதனை நம்பேன்; எற்றாலெனின் அவர் பொய் கூறுவார் அல்லர் என்பது யான் நன்கு அறிந்துளேன் ஆகலின் எனத் தலைவி கூறுகின்றாள்.

உக. வண்டுபடத் ததைந்த கொடியிணர் இடையிடுபு

பொன்செய் புனையிழை கட்டிய மகளிர்

கதுப்பிற் றோன்றும் புதுப்பூங்

கொன்றை

கானங் காரெனக் கூறினும்
யானோ தேரேன் அவர் பொய்வழங்

கலரே.

—ஒதலாந்தையார்.

(இ - ள்.) வண்டுபடத் ததைந்த கொடி இணர் இடையிடுபு - வண்டுகள் வந்து மொய்க்கும்படியாக நெருங்கி மலர்ந்த நீண்ட பூங்கொத்துக்களை இடையே மேற்கொண்டு, பொன் செய் புனையிழை கட்டிய மகளிர் கதுப்பில் தோன்றும் - பொன்னாற் செய்த ஒப்பனை செய்தற்குரிய அணிகலன்களை யாத்த மகளிருடைய கூந்தலைப்போன்று தோன்றாநின்ற, புதுப்பூங் கொன்றைக் கானம் - புதிதாக அலர்ந்த மலர்களையுடைய கொன்றை மரம் நிறைந்த காடு, கார் எனக் கூறினும் - இது



கார்ப்பருவம் என்று தெரிவிப்பினும், யான் தேறேன் - யான் இது கார்ப்பருவம் என்று தெளியேன்; எற்றாலெனின், அவர் பொய் வழங்கலர் - தலைவர் பொய் கூறுவாரல்லர் ஆகலான்; என்பதாம்.

**விளக்கம்** :—வண்டு படுதல் - வண்டு மொய்த்தல். ததைந்த - நெருங்கிய; மலர்ந்த எனினுமாம். கொடி இணர் - நீண்ட பூங்கொத்து. கொன்றைப் பூங்கொத்து மாலைபோன்று நீண்டு தூங்குதலின் கொடி யிணர் என்றார். இடை இடுபு - இடை இடையே மேற்கொண்டு, மகளிர் பொன்னாற் செய்த தலையணிகலன்களை இடையிடையே கூந்தலின்கண் அணிந்தாற்போன்று கொன்றை மரத்தின் தழையிடையே நீண்ட பூங்கொத்துக்கள் தோன்றும் என்க. புனையிழை - வினைத்தொகை. புனைதல்-ஒப்பனை செய்தல். இழை - அணிகலன். கட்டுதல்-கை செய்தல். கதுப்பு - கூந்தல். புதுப்பூங்கொன்றை என்றது புதிதாக அண்மையிலே மலர்ந்த கொன்றை என்றவாறு. கொன்றை கார்ப்பருவத்திலே மலரும் இயல்புடையது ஆகலின், அது மலார்தமை கார்ப்பருவம் இது என்று கூறுவது போன்றிருத்தலின் கானம் கூறினும் என்றாள். கானம் ஒன்றறிவுயிர் ஆகலான் ஆராய்ந்து தெளிய வல்லதன்று. யானோ ஆராயும் அறிவுடையேன்; சான்றாண்மை மிக்க தலைவர் கார்ப்பருவத் தொடக்கத்தே மீண்டும் வருவேன் எனப் பிரிநதார். அவர் வாராமையாலேயே இது கார்ப்பருவம் அன்றென்பது ஐயமறத் துணியப்படும். ஏனெனில் சான்றோர்கள் பொய் கூறமாட்டார் அல்லரோ என்றபடி.

யானோ, என்பதன்கண் ஓகாரம், பிரிநிலை.

## பாட்டு - ௨௨ : தோழி கூற்று

துறை :—செலவுக் குறிப்பறிந்து ஆற்றாளாகிய கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது அஃதாவது, தலைவர், தன்னைப் பிரிநது செல்வர்கொல் என்று ஐயுற்று வருந்திய தலைவியை, அவர் உன்னைப் பிரிந்து செல்லும் வன்கண்ணர் அல்லர்; உன்னையும் உடன் அழைத்தே செல்வர் எனக் கூறித் தோழி தேற்றியது.

இதன்கண், தலைவர் பிரிவர் போலும் என்று வருந்திய தலைவியை நோக்கித் தோழி, 'அன்னாய்! உன்னை யார்தான் பிரிய எண்ணுவர் ? உன்னைத் தலைவர் தம்முடன் அழைத்துச் செல்வர் வருந்தாதே கொள்' எனத் தேற்றுகின்றாள்.

உ௨. நீாவார் கண்ணை நீயிவண் ஒழிய
யாரோ பிரிகிற் பவரே சாரற்
சிலம்பணி கொண்ட வலஞ்சுரி மராஅத்து
வேனில் அஞ்சினை கமழும்
தேம்மூர் ஒண்ணுதல் நின்னொடுஞ் செலவே.
—சேரமானெந்தை.

கு—3



(இ - ள்.) நீர் வார் கண்ணை—தலைவர் பிரிவார் என்று கருதி மனமவானே ஆற்றாது நீர் ஒழுக்கும் கண்களை உடையை ஆயினை, நீ இவண் ஒழிய யாரோ பிரிகிற்பவர்—இத்தகைய நீ இவ்விடத்தே தனித்தொழியவிட்டு உன்னை யார் தாம் பிரிய வல்லர் ஆவர், சாரல் சிலம்பு அணிகொண்ட வலம் சுரி மராஅத்து—மலைப்பக்கத்தேயுள்ள

தாழ்வரை அழகு கொள்ளற்

குக் காரணமான வலப்பக்கத்தே சுரிந்த இதழையுடைய கடப்ப மரத்தினது, வேனில் அஞ்சினை கமழும் — வேனிற்காலத்து அழகிய கொம்புகள் போன்று மணக்கும், தேம ஊர் ஒண்ணுதல்—வண்டுகள் ஊர்தரும ஒளியுடைய நுதலினையுடையோய், செலவு நின்னொடும்—தலைவர் கருதிய செலவு உன்னையும் உடன்கொண்டு செல்லும் செலவேயாம்.

**விளக்கம் :—** தலைவா நின்னைப் பிரிந்து செல்லும் வன்கண்ணர் அல்லர்; உன்னையும் அழைததேகுவர் வருந்தற்க என்று கூறி, ஆற்றிய படியாம.

தோழி தலைவியைக் கண்டபொழுது அவள் பிரிவர் என்னும் அச்சததாற் கண் கரிந்து அழுதுகொண்டிருந்தாள் ஆகலின், "நீர்வார் கண்ணை," என்றாள் பிரிவா என்னும் எண்ணம் தோன்றியதற்கே இஙஙனம் வருந்துமியல்புடைய உன்னை யார்தாம் பிரிந்து செல்லத் துணிவர் என்பாள், 'யாரோ பிரிகிற்பவர்,' என்றாள். யாரோ என்றது மக்களுள் அத்துணை வன்கண்ணர் இருத்தல் அரிது ஆகலின், எத்தகை யோரும் பிரியத் துணியார்; அங்ஙனம் ஆகவும் அருள் நிரம்பிய சான்றோராகிய நந்தலைவர் நீ இவளொழியப் பிரிவர் என்று நினையாதே கொள் என்றவாறு.

அவர் செலவு கருதியது உண்மையே ஆயினும் நின்னோடும் செல்லுதலையே கருதியுள்ளார் என்பாள் 'நின்னொடும் செலவே' என்றாள்; செலவு நின்னொடுமே என மாறுக.

சாரற் சிலம்பு, மலைப்பக்கத்துள்ள தாழ் வரை. வலஞ்சுரி—வலப்பக்கமாகச் சுரிந்த என்க. மராம்—கடப்பமரம். வேனில் அம் சினை-வேனிற்காலத்து அழகிய கொம்பு. வேனிற்காலத்துக் கடப்பங்

கொம்பு மணக்குமாறு போல, மணக்கும் நுதல் என்க. தேம்—வண்டு. ஊரும் என்ற வினையால் தேம்—வண்டெனலே நன்று. மணம் என் பாரும் உளர். வேனிலஞ்சினை கமழும் தேமூர் நுதலை நுகர்ந்த தலைவரும் நின்னைப் பிரிய வல்லுநரோ என்று குறிப்பால் ஓதியவாறு என்க. நின்னோடே ஆகும் என ஆக்கச்சொல் எச்சமாய் நின்றது.

## பாட்டு - உரு: தோழி கூற்று

துறை :—கட்டுக் காணிய நின்றவிடத்துத் தோழி அறத்தொடு நின்றது; அஃதாவது: இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர்ப் பிரிந்த தலைவனைப் பின்னர்க் கூடப் பெறுமையால் ஆற்றுமை மிக்கு மெலிந்த தலைவியைக் கண்டு இந்நோய்க் கார



ணம் அறிவான் கட்டுவிச்சிபாற் குறிகேட்கத் தலைப்பட்ட செவி லிக்குத்தோழி, இந்நோய் தெய்வத்தான் வந்ததன்று; ஓர் தலைவ னால் ஆயிற்றெனக் குறிப்பாற் கூறி அறத்தொடு நின்றது.

இதன்கண், தோழி குறி சொல்லும் கட்டுவிச்சி தெய்வம் பராவிப் பாடுவாளை நோக்கி, 'அகவன் மகளே பாடுக! பாடுக! தலைவருடைய நல்ல மலையைப் பாடும் பாட்டையே இன்னும் பாடுக' என, அவர் மலையைப் பாடும் பாட்டு இவள் நோய்க்கு மருந்தாகும் என்பதுபடக் கூறுகின்றாள்.

உ௫. அகவன் மகளே அகவன் மகளே

மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவன் மகளே பாடுக பாட்டே
இன்னும் பாடுக பாட்டேஅவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே.

—ஔவையார்.

(இ - ள்.) அகவன் மகளே அகவன் மகளே — கட்டுவிச்சியே! கட்டுவிச்சியே! மனவுக்கோப்பன்ன நன்னெடுங் கூந்தல் அகவன் மகளே — சங்குமணிக் கோவைபோன்ற நன்மையுடைய நெடிய கூந்தலையுடைய கட்டுவிச்சியே! பாடுக பாட்டே—நீ இப்பொழுது பாடிய பாட்டையே மீண்டும் பாடுவாயாக, இன்னும் பாடுக பாட்டே—இன்னும் குறிகூறுதலை விட்டு அப்பாட்டையே பாடுவாயாக, அவர் நன்னெடுங்குன்றம் பாடிய பாட்டே—அப்பாடல் எதுவென்னில் அவருடைய நன்மை மிக்க நெடிய குன்றத்தைப் பாடிய அப்பாடலையே.

**விளக்கம்:**—அகவன் மகள் - அழைக்கும் மகள்; கட்டுவிச்சி குறிசொல்வுழித் தெய்வங்களையும் குறி சொல்லப்படுவோர் குலத்தோரையும் அழைத்துப் பாடுதல் பற்றி, அகவன் மகள் என்பது அவளுக்குப் பெயராயிற்று. ஈண்டு அகவன் மகள் என்றது, கட்டுவிச்சி என்னும் பெயர் மாத்திரையாய் நின்றதென்க.

தலைவன் நன்னெடுங்குன்றத்தைப் பாடி வேறு பாட்டெடுக்கும் நிலையில் கட்டுவிச்சியை விளிக்கின்றமையின் இருமுறை அடுக்கிவிளித்தாள். ஒரு காரியத்தின் மனம் போக்கியிருப்பாரைத் தம் சொல்வழித் திருப்ப முயல்வோர், இருமுறை மும்முறை அடுக்கி விளிக்க நேருதலை உலகியலிற் காண்க. மனவு - சங்குமணி. கோப்பு - கோவை. இது கட்டுவிச்சியின் மூப்பையும் அழகையும் எடுத்தோதியவாறும். நன்மை - கூந்தலின் சுரிவு நெய்ப்புடைமை அடர்வு முதலியன.

பாட்டே என்பதன்கண், ஏகாரம் இடையிடையே உரை விரவுதலொழித்துப் பாட்டை மட்டுமே பாடுக என்று உரையைப் பிரித்தலிற் பிரிநிலை என்க. அங்ஙனம் கூறக்கேட்ட கட்டுவிச்சி மீண்டும் ஒருமுறை பாடினளாக அப்பாட்டே தலைவிக்கு இன்பஞ்செய்தல் கண்டு



மீண்டும் பாடுக பாட்டு என்றாள். என்றவள் அவள் வெவ்வேறு பாட்டுக்களைப் பாடாமல் தலைவன் மலையைப் பாடும் பாட்டொன்றனையே பாடுக வென்பாள் ' அவர் நன்னெடுங்குன்றம் பாடிய பாட்டே ' எனச் சுட்டினாள் என்க.

கட்டுவிச்சி, தெய்வம் பராவுவாள் முருகவேள் உறைவதொரு மலையைப் பாடினளாக, அம்மலையே தலைவன் மலையுமாகலின் அப்பாடல் கேட்டுத் தலைவி மகிழ்வெய்துதல் கண்ட தோழி மீண்டும் அம்மலையையே பாடுக என்றாள். 'அவர் நன்னெடுங்குன்றம்' என்றது, செவிலி இது தெய்வத்தான் வந்ததன்று; ஒரு தலைவனால் வந்தது போலும் என, அறிதற்கு ஏதுவாதல் அறிக. அவர் என்றது அம்மலைக்குரிய முருகவேள் என்று ஒரு பொருள் குறித்து நின்றதும் உணர்க.

இனி, கட்டுவிச்சி குலத்தோரை எல்லாம் அழைத்துப் பாடலின் தலைவன் தாய் மரபினனாகலின், அம்மரபினர் மலையும் பாடப்பட்டமை கண்டு இன்னும் பாடுக என்றாள். எனவே, தலைவன் தாய் மரபினன் என்பது கொள்க என்றார் ரா. இராகவ ஐயங்கார் அவர்கள். "யாயும் ஞாயும் யாரா கியரோ" என்றபடி தலைவன் தாய் மரபினன் ஆதல் ஒருதலையன்று, மேலும் தாய் மரபினன் ஆயின், களவொழுக்கம் வேண்டா. இயற்கைப் புணர்ச்சியும் மிகை; கொடுப்பக்கொள்ளலே அமையும் என்க.

முருகவேள் மலையைப்பாட அம்மலையே தலைவன் மலையுமாதல் கண்டு, அம்மலையைப் பாடும் பாட்டையே பாடுக என்றாள் என்பதே பொருந்துவதாம்.

## பாட்டு - உச: தலைவி கூற்று

துறை :—பருவங்கண்டு ஆற்றாளாகிய கிழத்தி உரைத்தது; அஃதாவது : 'இன்ன பருவத்தே மீண்டு வருவல; அதுகாறும் ஆற்றியிரு' எனக் கூறிச்சென்ற தலைவன், அப்பருவம் வந்துழியும் வாராமை கண்ட தலைவி ஆற்றாது கூறியது.

இதன்கண், 'தலைவர் கூறிய இளவேனிற் பருவம் வந்தும் அவர் வந்திலர். வேம்புகள் மலர்ந்தன. அவை சூடப்படாமல் ஒழியும் கொல்லோ? என் நிலை கண்டு யான் ஒண்டுகளாலே மிதிக்கப்பெற்ற அதிகப்பழம், குழையுமாறு போலக் குழையும்படி, கொடியோர் நா அலர் தூற்றுகின்றன. என் செய்கோ? எனத் தலைவி கூறுகின்றாள்.

உச. கருங்கால் வேம்பின் ஒண்பூ யாணர்
என்னை யின்றியுங் கழிவது கொல்லோ

ஆற்றயல் எழுந்த வெண்கோட் டதவத்
தெழுகுளிர் மிதித்த ஒருபழம் போலக்
குழையக் கொடியோர் நாவே
காதலர் அகலக் கல்லென் றவ்வே

—பரணர்

## மூலமும் உரையும்

கூஎ

(இ - ள்.) கருங்கால் வேம்பின் ஒண்பூ யாணர் - கரிய தாளையுடைய வேம்பினது ஒள்ளிய பூவின் புதிய வருவாயானது, என்னை யின்றியும் கழிவது கொல்லோ - என் தலைவர் இல்லாமலும் வறிதே கழிந்து ஒழியுமோ? ஆற்றயல் எழுந்த வெண்கோட்டு அதவத்து - யாற்றின் அருகில் ஓங்கிய வெள்ளிய கொம்புகளையுடைய அத்திமரத்தினது, எழுகுளிர் மிதித்த ஒரு பழம்போல - ஏழு நண்டுகள் பற்றிக் குழைத்த ஒற்றைப்பழம் குழையுமாறுபோல யான் குழையா நிற்ப, கொடியோர் நா காதலர் அகலக் கல்லென்ற - புறங் கூறுவோர் நாவானவை காதலர் அகன்றமை காரணமாக அலர் தூற்றிக் கல்லென்று முழங்கா நின்றன.

**விளக்கம் :—**வேனிற் பருவத்துச் சூடற்குரிய வேம்பின் ஒண்பூவும் அவர் வாராமையாற் சூடப்படாது வறிதே கழிகின்றன; மேலும் கொடியோர் நாவானவை, எழுநண்டுகள் பற்றிக் குழைத்த ஓர் அத்திப்பழம் போன்று யான் குழையும்படி அலர்தூற்றி முழங்கா நின்றன; யான் எவ்வாறு ஆற்றுகோ என்றாள் என்க.

'கருங்கால் வேம்பின் ஒண்பூ' என்றது, சொல்லோவியமாய்ப் பொருள்புலப்படுத்துதல் உணர்க. யாணர்-புதுவருவாய். ஈண்டுவேனிற் பருவத் தொடக்கத்தே புதிதாக மலர் வருதலைக் குறித்து நின்றது.

"புதிது படற்பொருட்டே யாணர்க் கிளவி" (உரி: அக.)

என்பது தொல்காப்பியம். என்னை - என் தலைவர். தலைவனை என்னை என்னும் வழக்குண்மையை,

"அன்னை என்னை என்றலும் உளவே
தொன்னெறி மரபிற் சொல்லினும் எழுத்தினும்
தோன்றா மரபின என்மனார் புலவர்" (பொருளியல் : ருஉ.)

என்னும் தொல்காப்பிய விதியான் உணர்க. ஆறு - நீர் யாறு அதவத்து - அத்திமரத்தினது. அதவம் - அத்தி மரம். அத - அத்தி மரம் எனபாருமுளர். அத்து - சாரியை. எழுகுளிர் - எழு நண்டுகள் ; என்றது பல நண்டுகள் என்றவாறு. எழுகளிறு எனப் பாடங்கொண்டு எழுயானைகள் என்பாரும் உளர். எழு யானைகள் மிதிப்புழிப் பழம் உருத்தெரியாது சிதைந்தழியுமாகலின் குழைந்தது எனல் பொருந்தாமை உணர்க. புறங்கூறுவோர் ஆகலிற் 'கொடியோர்' என்றான்; காதலர் அகல்தலைத் தலைக்கீடாகக் கொண்டு கொடியோர் நா கல்லென்ற என்க.

## பாட்டு - உரு: தலைவி கூற்று

துறை :—வரைவு நீட்டித்த விடத்துத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது அஃதாவது, தலைவன் வரைந்து கொள்ளாது காலம்நீடிக்கச் செய்தல் கண்ட தலைவி, வருந்தித் தோழிக்குக் கூறியது.

கூஅ குறுந்தொகை

இதன்கண், 'தலைவர் என்னை மணந்து கொள்ளாதொழியின், யான் என் செய்வேன்! இக்களவுமணம், பிறர் அறியாமல் நிகழ்ந்ததாயிற்றே! சான்றோராகிய அவரே பொய்ப்பராயின் பிறசான்றுகளும் இலவே' என்று தோழிக்குக் கூறுகின்றாள்,

உரு. யாரும் இல்லைத் தானே கள்வன்
தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ
தினைத்தாள் அன்ன சிறுபசுங் கால
ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்

குருகும் உண்டுதான் மணந்த ஞான்றே.

—கபிலர்.

(இ - ள்.) தோழி! தான் மணந்த ஞான்று - தலைவர்

என்னைக் களவில் மணந்தபொழுது, யாரும இல்லை - அவ்விடத்தே சான்றாகத் தக்கார் ஒருவரும் இலர், தானே கள்வன் - அவரே அது நிகழ்ந்த களத்திருந்தவருமாவார், தான் அது பொய்ப்பின் - அவரே தாம் கூறிய சூளுறவு பொய்ப்பாராயின், யான் எவன் செய்கோ - யான் பின்னர் என்செய்ய வல்லேன், ஒழுகுநீர் ஆரல் பார்க்கும் - ஓடாநின்ற நீரின்கண்ணே உணவின் பொருட்டு ஆரலமீன் வரவினைக் கூர்ந்து நோக்கும், தினைத்தாள் அன்ன சிறுபசுங்கால குருகும் உண்டு - தினையின் தாள்போன்ற சிறிய பசிய கால்களையுடையனவாகிய நாரைகளும் ஆண்டுளவாயின.

**விளக்கம்** :—யாரும் இல்லை என்றது - கரிகூறத்தக்கார் பிறர் யாரும் அவ்விடத்திலில்லை என்றவாறு. தானே களவன் - அக்களத்திருந்தோன் தானே ஆவன் என்க. களவன் - களத்திருந்தோன்; நடுக்கூறுவோனுமாம். ஊரம்பலத்திருந்து ஏனையோர்க்கு நடுக்கூறும் சிறப்புடைய அவனே பொய்ப்பின் அதற்கு யான் என்செய்யமாட்டுவன் என்றவாறும். கள்வன் என்றும் பாடம். கள்வன் பொய்த்தல் இயல்பாகலின், அப்பாடஞ் சிறவாமை உணர்க. பொய்த்தல் - ஈண்டு "நின்னிற் பிரியேன் பிரியின் ஆற்றேன்; நின்னை விரைவில் மணந்து கொள்வேன்" என்று தலைவன் கூறிய மொழியிற் றப்பிநடத்தல். செய்கு - செய்வேன். ஓ : அசை.

இனைத்தாள் நாரையின் கால்கட்குவமை. கால - காலை உடையன வாய. குருகு - குருகுகள். உண்டு என்பதை ஒருமைச சொல்லாகக் கொண்டு, குருகு இருந்தது என்றும், கால என்பது பால் வழுவமைதி என்பாரும் உளர்.

"வேறில்லை உண்டு ஐம்பான் மூவிடத்தன" (நன்னூல் : ௩௩௬.)

என்னும் நூற்பாவில் உண்டு ஐம்பால் மூவிடத்திற்கும் பொதுச்சொல் என்பவாகலான், காலவாகிய குருகுகள் என்பது தவறாகாமை உணர்க.

## மூலமும் உரையும்

௩௬.

இனி,

'சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை' (திருக்குறள் : ௯௯௦)

என்பவாகலின். அவன் பொய்த்துழி யான் செய்யக் கடவதென் சொல் என, அவன் பழிக்கு நாணிக் கூறினளுமாம். குருகுகள் ஆண்டிருந்தன; அவை சான்று கூறும் தகுதியுடையன அல்ல; மேலும் அவை தத்தம் இரை தேருவதன்கண் மனம்போக்கியிருந்தனவாக லின், இவர் சூளுறவைக் கேட்டிரா. இராவாயினும தன்னெஞ் சறிந்தது பொய்த்தவழி அறிவிலாப் பூதங்களும் நகும் என்ப. அவ் விடத்தே இருந்த நாரைகள் நகும் என்பதற்கேனும நாணுது அவர் பொய்ப்பாராயின் யான் என் செய்கோ ? என்றவாறும்.

## பாட்டு - உசு : தோழி கூற்று

துறை :—தோழி அறத்தொடு நின்றது, அஃதாவது. தலைமகளது வேறுபாடுகண்டு நற்றாயும் செவிலிததாயும, 'இஃது எற்றினுயிற' றெனறு கட்டுவிச்சியை வினவிக் கட்டுக் காண நின்ற காலததே, தலைமகளது வேறுபாட்டிற்குக் காரணம் பிறிதோர் தெய்வம் என்று கூறக் கேட்ட தோழி செவிலிக்குத் தலைவி கற்புக் கடம்பூண்ட செய்தியை அறிவித்தது.

இதன்கண், நாடன் தக்போன் ஆகவும், தலைவி தகான் போலக் கொண்டு, அவன் மறந்தால் இந்நிலையில் உயிர்நீத்தலே செய்யற்பாலது எனத் தீது மொழியினும், கட்டுவிச்சியும் இவள் நோய்க்காரணம் அறியமாட்டாளாய், இது தெய்வத் தான் வநததெனினும் இவள் நோய்க்குக் க

ரணமாவான் ஒரு தலைவன் உளன்; அவனை ஆண்டிருந்த குரங்கும் அறியும எனக, தலைவியின் நோய்க்காரணம் கூறுவாள போன்று அவள் கற்புக்கடம் பூண்ட செய்தியைச் செவிலிக்குக் கூறுகின்றாள்.

உரு. அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை
மேக்கெழு பெருஞ்சினை இருந்த தோகை
பூக்கொய் மகளிரிற் றோன்று நாடன்
தகாஅன் போலத் தான்றீது மொழியினும்
தன்கண் கண்டது பொய்க்குவ தன்றே
தேக்கொக் கருந்து முள்ளெயிற்றுத்
துவர்வாய்
வரையாடு வன்பறழ்த் தந்தைக்
கடுவனும் அறியும்அக் கொடியோனையே.
—கொல்லனழிசி.



(இ - ள்.) அரும்பு அற மலர்ந்த கருங்கால் வேங்கை மேக்கு எழு பெருஞ்சினை இருந்த தோகை - அரும்புகள் முற்றவும் மலர்ந்த வலிய தாளையுடைய வேங்கை மரத்தினது

மேலே ஓங்கிய பெரிய கொம்பிலிருந்த மயில்கள், பூக்கொய் மகளிரில் தோன்றும் நாடன் - அதன் மலரைக் கொய்கின்ற

மகளிரைப் போன்று தோன்றுதற்கிடனை

நாட்டையுடைய தலைவன், தகாஅன் போல -

தன்னை மறந்து துறந்தான் சான்

றோன் அல்லன் போலும் என்று கருதி, தான் தீதுமொழி யினும் - தான் உயிர் விடுவதென்னும் இன்னாச்சொல் கூறினு

ளேனும், தேம் கொக்கு அருந்தும் முள் எயிறுறுத் துவர்வாய் - தேமாவின் கனியை உண்ணுகின்ற முள்போலும் கூரிய எயிற்

றினையும் செவ்விய வாயினையும் உடைய,

வரையாடு வன் பறழ்த் தந்தைக் கடுவனும் அறியும்

- மலையிலே விளையாடுதலைச் செய்யும்

வலிய குட்டிக்குத் தந்தையாகிய ஆண்குரங்கும் அறியும், அக் கொடியோனை - இவள் இன்னலுறும்படி செய்த அக்கொடுமை

யுடையவனாகிய தலைவனை.

**விளக்கம்:**—அரும்பற மலர்தல் என்றது, அரும்புகள் இல்லையாம் படி முழுவதும் மலர்ந்த என்றவாறு. கருங்கால் - வலியதாள். கரிய தாளுமாம். வேங்கை - வேஙகை மரம். இது குறிஞ்சிக் கருப்பொருள். தோகை - மயில் ஆகுபெயர். தகாஅன் - தகுதியிலலாதவன் ; ஈண்டுத் தகுதி சான்றாண்மை. தகான் போல என்றது தலைவன தகுதி யுடையனே ஆகவும் இவள் தகுதியில்லானாகக் கருதி என்றவாறு. எனவே, இவள் தகுதியுடைய ஒரு தலைவனோடு கேண்மை கொண் டாள். இற்செறித்தலாலே இவளைப் பிரிந்தானல்லது தகுதியின்மை யாலன்று. இவள் தகாஅன் எனக் கருதல் பிழை என்றாளாயிற்று. இதனால் விரைவில் அத்தலைவனுக்கு இவளை மணஞ் செய்து கொடுத் தலே இவள நோய்க்கு மருந்தாமன்றி கட்டுக்காண்டல் வெறியாடல் முதலியன மருந்தாகா என, அறிவித்தாளுமாம்.

தலைவி பெருநாண் உடையளாதலின், இதனை அறிவிக்கமாட்டாது தீது மொழிகின்றாள் என்பாள், தான்றீது மொழியினும் என்றாள். கடுவனும் அறியும், அதுதானும் தன் கண்ணாற் கண்டதாகலின் பொய்க்காது புகலும். இக்கட்டுவிச்சியோ கண்காணாள் ஆகலின், பொய்ப்பாளாய்ப் பிறிதொன்று கூறுவாளாயினள் எனக் கட்டுவிச்சியை அசதியாடியபடியாம்.

குட்டியை உடைய தந்தையாகலின் அன்புடைய இவள் நிலைக் கிரங்கிப் பொய்க்காது என்பாள், வன்பறழ்த் தந்தைக்கடுவன் என்றாள். தேக் கொக்கு - தேமாமரம். கொடியோன் என்றதும் கொடியோன் அல்லனாகவும் தலைவியால் கொடியோன் என்று கூறப்படுபவன் என்னும் குறிப்பிற்று. இதனால் கட்டுக்காணவேண்டா, இவள் கணவனுடன் விரைவில் கூடுதற்கான மணவினை மேற்கோடலே நன்றென அறத்தொடு நின்றவாறறிக.

## மூலமும் உரையும்

மகளிர் அல்லாத மயில் மகளிர் போன்று தோன்றுமென்றது, நோய்க்காரணமாகாத தெய்வம் கட்டுவிச்சிக்கு நோய்க்காரணமாகத் தோன்றியதென்னும் உள்ளுறை தோன்ற நின்றது.

## பாட்டு - உஎ : தலைவி கூற்று

துறை :---பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, தலைவன் பிரிந்தமையை இவள் ஆற்றாது இறந்துபடுவளோ எனத் தோழி கவன்றாளாக, அது கண்ட தலைவி யான் ஆற்றுவல் என்பதுபடக் கூறியது.

இதன்கண், 'தோழீ! என் அழகு எனக்கும் ஆகாது தலைவர்க்கும் பயன்படாது வீணே பசலைபாய்ந்து கெடா நின்றது' எனத் தலைவி கூறுகின்றாள்.

இச் செய்யுள் வெள்ளிவீதியார் என்னும் நல்லிசைப் புலமையாட்டியார் தம் கணவனைப் பிரிந்தகாலத்தே ஆற்றாது கூறியது என்றும், தம் பெயரையாதல் கணவன் பெயரையாதல் கூறின் புறமாமென்றஞ்சி வாளா கூறப்பட்டு அகமாயிற்றென்றும் கூறுப.

உஎ. கன்று முண்ணாது கலத்தினும் படாது

நல்லான் தீம்பால் நிலத்துக் காஅங்
கெனக்கு மாகா தென்னைக்கு முதவாது
பசலை உணீஇயர் வேண்டும்
திதலை அல்குலென் மாமைக் கவினே.

—வெள்ளிவீதியார்.

(இ - ள்.) நல் ஆன் தீம்பால் - நல்ல ஆவினது இனிய பால், கன்றும் உண்ணாது - அவ்வாவின் கன்றானும் உண்ணப் படாது, கலத்தினும் படாது - கறக்கும் கலத்தினும் வீழாது, நிலத்து உக் காங்கு - மண்ணில் வீணே சிந்தினாற் போல, திதலை அல்குல் என் மாமைக் கவின் - தேமல் படர்ந்த அல்குலிடத்து எனது மணிநிற அழகினை, எனக்கும் ஆகாது - எனக்கும் பயன் படாமலும், என்னைக்கும் உதவாது - தலைவர்க்கும் இன்பம் செய்யாமலும், பசலை உணீஇயர் வேண்டும்-பசலை தான் உண்ணு தலை விரும்பா நிற்கும்.

விளக்கம் —“ விடுநில மருங்கிற் படுபுல் லார்த்து
நெடுநில மருங்கின் மக்கட் கெல்லாம்



பிறந்தநாட் டொட்டுஞ் சிறந்ததன் றீம்பால்
அறந்தரு நெஞ்சோ டருள்சுரந் தூட்டும் ”
என்பவாகலின் நல்லான் என்றார்.

(மணி. கந : டுக-ச.)

நாவிற்கு இனிதாகலின் தீம்பால் என்றாள். கன்றுண்ணவே கருதி அமைந்த பாலாகலின் கன்றை முதற்கட் கூறினாள். கன்று வயிறார உண்ட பின்னர்க் கறத்தலே முறையாகலின் கறவைக் கலம் பிற்கூறப் பட்டது. "கறவை கன்றார்த்திக் கலநிறை பொழிதரும்," எனப் பிறரும் (மணி. கஉ : கூரு) ஓதுதல் காண்க. உக்காங்கு - சிந்தினாற்போன்று. பால் நிலத்துகுதல் அது பயன்படாது வீணாதல். ஆகவே, என் அழகு எனக்கும் அழகாயிருந்து ஆக்கந்தருதலின்றியும், தலைவரை இன்புறுத் தலின்றியும் பசலையால் கெட்டது என்றிரங்கியவாறு. என்னை - தலைவர். பசலை - காமநோய்கொண்ட மகளிர் மேனியிலுண்டாகும் நிறவேறு பாடு. மாமை-கரிய நிறம். மாமைக்கவின் என்றது, கரிய மேனியின்கட் கட்டழகினை. உணீஇயர் : செய்யியர் என்னும் வாய்பாட்டு வினை யெச்சம். வேண்டும் - விரும்பும் என்னும் பொருட்டு. திதலை - தேமல். கவின் - அழகு.

நல்லான் தீம்பால் கன்றிற்கும் பயன்பட்டுக் கலத்தினும் நிறையு மாறுபோல, என் கவின் எனக்கும் பயன்பட்டு தலைவர்க்கும் இன்பம் நல்கற்பாற்று மன் ; அங்ஙனம் இன்றிப் பசலையாலே அழிந்தது என்ற வாறாம். இது காம நோயின் கொடுமை கூறியவாறாம்.

## பாட்டு - உஅ : தலைவி

கூற்று

துறை :—வரைவிடை ஆற்றாளாய்க் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, இயற்கை மணம்புணர்ந்த தலைமகன், தலைவியை வரைந்து கொள்ளுதற்காம் பொருளீட்டப் பிரிந்தவன் விரைந்து வாராமையால் தலைவி ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்கு, 'என் துன்பத்தை அறியாமல் உறங்காநின்ற இவ்வூரினர் திறத்து யான் என்செய்வேன்' எனத் தலைவி சினந்து கூறியது.

இதன்கண், தலைவி "என் உயவுநோய் அறியாது துயில்கின்ற இவ்வூர்க்கு யான் முட்டுவேனோ! தாக்குவேனோ! கூவுவேனோ என்செய்வேன் எனச் சினந்து கூறுகின்றாள்.

உ-ம். முட்டு வேன்கொல் தாக்கு வேன்கொல்
ஓரேன் யானுமோர் பெற்றி மேலிட்டு
ஆஅ ஒல்லெனக் கூவு வேன்கொல்
அலமரல் அசைவளி அலைப்பவென்
உயவுநோ யறியாது துஞ்சும் ஊர்க்கே.
—ஔவையார்.

மூலமும் உரையும்

(இ - ள்.) அலமரல் அசைவளி அலைப்ப - சுழல்கின்ற வாடையாகிய விசுங்காற்று வருத்தாநிற்ப, என் உயவுநோய் அறியாது - எனக்குண்டாகிய வருந்துதலையுடைய காமநோயின் கொடுமையை அறியாதே, துஞ்சும் ஊர்க்கு - இனிதே துயில் கொள்ளாநின்ற இவ்வூரின் திறத்தே, மூட்டுவேன் கொல் - என் னிலையை அவர் அறியுமாறு மூளச்செய்து அறிவிப்பேனோ, தாக்குவேன் கொல் - அன்றி அவர் மெய்யிற் புடைப்பேனோ, ஓர் பெற்றி மேலிட்டு - ஏதேனும் ஒன்றனைத் தலைக்கீடாக மேற்கொண்டு, ஆஅ - அந்தோ, ஒல்லெனக் கூவுவேன் கொல் - ஒலலென்னும் முழக்கம் உண்டாகும்படி கூப்பிடுவேனோ, யானும் ஓரேன் - யானும் யாதுசெய்வதென்று தெரியகில்லேன.

விளக்கம் :—மூட்டுதல் - தான் மறைவாகக் கொண்டுள்ள இக்களவு மணநிகழ்ச்சியை அவர் நினையுமாறு அறிவித்தல். தாககுதல் - உறங்குவோர் அது நீத்தெழும்படி புடைத்தல். ஆஅ, என்றது ஆற்றாமையால் எழுந்த இரக்கக் குறிப்பு. இங்ஙனம் கூறாது ஆவென்றும் ஒல்லென்னும் ஒலியுண்டாகவும் என்பாரும் உளர். ஒல் - ஒலிககுறிப்பு - ஒல்லென்னும் ஓசையுண்டாகும்படி என்க. கூவுதல் - உரக்கக் கூப்பிடுதல். மூளச் செய்தல் மனத்தானும் கூவுதல் மொழியானும் தாக்குதல் உடலானும் நிகழ்வனவாகலான், என் மனமொழிமெய்களான் முயன்ற இவ்வூர்க்கு அறிவிப்பேனோ என்றவாறு.

துஞ்சும் ஊர் என்றது, தான் இத்துணைத் துன்பமுறுதலையும் உணராது இன்றுயில் கொள்ளும் செவிலி நற்றாய் முதலியவரை எதின்மை காட்டி வெறுத்துக கூறியவாறாம். முட்டுவேன் என்பதும் பாடம். முட்டுதலும் தாக்குதலும் மெய்யின் றொழிலாய் ஒன்றாகலின், மூட்டுவேன் என்றபாடங்கொணடனர் முதுபெரும புலவர் ரா. இராசவ ஐயங்கார் அவர்கள்.

அசைவளி என்பதற்கு - அசைந்து வருகின்ற தென்றற் காற்று என்றனர் உ. வே. சா. ஐயரவர்கள். வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிதல் கூதிர்காலமாகலின் வளி ஈண்டு வாடையே ஆதல் காணக.

## பாட்டு - உகூ : தலைவன் கூற்று

துறை :—இரவுக்குறி எம்மை மறுத்தார் என்று மறுக்கப்பட்ட தலைமகன் இவர் வரைந்துகொள்ள நினையாது பின்னும் கூடுதற்கு அவாவுற்ற நெஞ்சினை நோக்கிக் கூறியது. அஃதாவது, தலைவியை இரவின்கண் வந்து கூடிச் செல்லும் தலைவனை வரைந்துகொள்ளற்பொருட்டு இரவின்கண் இனி வாராதே கொள் என, ஏதுக் காட்டித் தோழி மறுத்தாளாக, அவள் கருத்தறியாது பின்னும் அவன் இரவுககுறியை விரும்பும் தன் நெஞ்சினை நோக்கி அக்கூட்டம் இனி அரிதாம் என்பதுபடக் கூறியது.



இதன்கண், 'நெஞ்சே நீ பெறுதற்கரிய தொன்றனைப் பெற விரும்புகின்றனை; அதுபற்றிப் போராடவும் செய்கின்றனை; நின் போராட்டம் நின் சொல்லைத் தழீஇக்

கேட்குநர்ப் பெறின் மிகவும் நன்றேயாம்; அங்ஙனம் கேட்பாரைத்தான் பெறு கின்றிலே' என்று தலைவன் கூறுகின்றான்.

உசூ. நல்லுரை யிகந்து புல்லுரை தாஅய்ப்
பெயல்நீர்க் கேற்ற பசுங்கலம் போல
உள்ளம் தாங்கா வெள்ளம் நீந்தி
அரிதவா உற்றனை நெஞ்சே நன்றும்
பெரிதால் அம்மநின் பூசல் உயர்கோட்டு
மகவுடை மந்தி போல
அகனுறத் தழீஇக் கேட்குநர்ப் பெறினே.

—ஔவையார்.

(இ - ள்.) நெஞ்சே - என் நெஞ்சமே !, நல்லுரை இகந்து
புல்லுரை தாஅய் - நல்ல மொழிகள் நீங்கிப் புல்லிய மொழிகள்
பரக்கப்பட்டு, பெயல் நீர்க்கு ஏற்ற பசுங்கலம் போல - முகில்
துளிக்கும் நீரை எதிர்ந்துள்ள பசிய மட்கலம் போல, உள்ளங் தாங்கா வெள்ளம் நீந்தி - உளந்தாங்கலாற்றாத ஆசைப் பெருக்கில் நீந்தாநின்று, அரிது அவாவுற்றனை - நின்னாற் பெறுதற்கரிய தொன்றனைப் பெறுதற்கு

விரும்பாநின்றனை, உயர் கோட்டு மகவுடை மந்திபோல - உயர்ந்த மரக்கொம்பின் கண்

உள்ள குட்டியை உடைய மந்தி அதனை அகனுறத் தழுவிக் கொள்ளுமாறு போல, அகன் உறத் தழுவிக் கேட்குநர்ப்பெறின் - உள்ளத்தே பொருந்துமாறு தழுவி நினது குறையைக் கேட்பாரை நீ பெறுவாயாயின், நின் பூசல் பெரிதும் நன்றால் - நின்னுடைய ஆரவாரம் மிகவும் நன்றேயாகும்

**விளக்கம்** :—அங்ஙனம் நின்பூசலை அகனுறத் தழுவிக் கேட்பாரின்

மையின் உன்பூசல் பயனின்றாகும் என்பது கருத்து. நல்லுரை - தன் விருப்பத்திற் கிணங்கி இரவுக்குறியில் வரவுடன்படுதல். புல்லுரை இரவுக்குறி மறுத்தல். இரவுக்குறி மறுக்கும் தோழி அதற்குக் காரணம் பல கூறி மறுத்தலால் அம்மொழியின் விரிவுடைமையைத் தாஅய் என்றான். தாஅய் - பரக்கப்பட்டு நல்லுரை அரிதாகிப் புல்லுரையே பெரிதும் பரவுகின்றது என்று புலந்தவாறு. நல்லுரை - புகழ் என்றும், புல்லுரை - பழி என்றும் கூறிப் புகழ் இகந்து பழி பரவுமாறு அரிதவா வுற்றனை என்றான் என்பாருமுளர். இரவுக்குறி விரும்புதல் புகழ் ஒழியவும் பழி பரவவும் ஏதுவாகாமையின் அஃதுரையன்றென்க. பெயல் நீர் - முகில் துளிக்கும் மழைநீர். பெயல் நீர் ஆசைவெள்ளத் திற்கும் அதனைத் தாங்காது உருகும் உள்ளம் பசுமட்கலத்திற்கும் உவமை. பசுமட்கலம் - சுடப்படாத குயக்கலம். அது தண்ணீர் பட்ட வுடன் உருகி அழிதலின் எண்ணியவுடனே உருகும் உளத்திற்கு

உவமையாக்கினன். நீந்துதல் அவ்வாசை வெள்ளத்திலேயே கரை காணாது கிடந்து உழத்தல். இங்ஙனம் உழத்தலோடன்றிப் பெறற்கரிய தலைவியையும் பெற எண்ணுகின்றாய் என்பான் அரிது அவாவுற்றனை என்றான். அரிது - தலைவியைப் பெறும் பேறென்க.

அவ்வவா நிறைவேறாது அரிதாதற்குக் காரணம், தன் மொழியை எற்றுக் குறையுடம் படாமையாகும். குறையுடம் படுவாராயின் இம் முயற்சி மிகவும் நன்றேயாம். அங்ஙனம் அவர் உடம்படாமையானே நின்பூசல் மிகவும் தீதேயாயிற்று என்றானும். மகவுடை மந்தி உயர் கொம்புகளில் இருக்கும்போது தன்னைத் தழுவியிருக்கும் குட்டியைத் தானும் தழுவிக் கோடல் இயல்பு. அங்ஙனமே அவர் மொழியைத் தழுவிக் கூறும் உன் உரையை அவர் தழுவுவாராயின் நின் அவா நன்றாம் என்க. அம்ம - அசை. பெறினே என்றது - பெற்றாயில்லையே என்றவாறு.

பசுமட்கலம் நீர் பெய்துழி உருகிக்கெடும்

என்பதை,

"ஈர்மட் செய்கை நீர்படு பசுங்கலம்
பெருமழைப் பெயற்கேற் றாங்கு"

(நற் : ௩0௮) என்றும்,

"பசுமட் கலத்துணீர் பெய்திரீயற் று"

(குறள் : ௬௬0) என்றும் பிறரும் கூறுமாற்றான் உணர்க.

## பாட்டு - ௩0 : தலைவி கூற்று

துறை :—தலைமகள் கனவு நலிவுரைத்தல். அஃதாவது, 'அவர் நின்னை வரைந்து கோடற் காரணத்தாற் பிரியவும் நீ ஆற்ருயாகின்றதென் ?' என, வினவிய தோழிக்குத் தலைமகள் 'யான் ஆற்றியுளேனாகவும் கனவு வந்து என்னை இங்ஙனம் நலிந்தது' என்று கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கிப், 'பொய் வல்லாளராகிய தலைவர், என் மெய்யோடு பொருந்திய நனவுபோலும் கனவு தோன்றி மருட்டலாலே விழிப்புற்றுத் தலைவர் உளர் எனக் கருதிப் படுக்கையைக் கைகளாலே தடவி ஏமாற்றமடைந்தேன்' என்று கூறுகின்ருள்.

௩௦. கேட்டிசின் வாழி தோழி அல்கற்
பொய்வ லாளன் மெய்யுறல் மரீஇய
வாய்த்தகைப் பொய்க்கனா மருட்ட
ஏற்றெழுந்து
அமளி தைவந் தனனே குவளை
வண்டுபடு மலரிற் சாஅய்த்
தமியேன் மன்ற அளியேன் யானே.

—கச்சிப் பேட்டு நன்னாகையார்.

(இ - ள்.) தோழி - தோழியே, வாழி கேட்டிசின் - யான் கூறுவதைக் கேட்பாயாக, அல்கல் - நெருநல் இரவின்கண், பொய்வலாளன் மெய் உற மரீஇய - பொய்யை மெய்போலச் செய்யும் வன்மையுடைய தலைவர் என் உடலோடு பொருந்த அணைந்த, வாய்த்தகைப் பொய்க் கனா மருட்ட - நனவுபோலும் தன்மையையுடைய பொய்யாகிய கனாத்தோன்றி மயக்கா நிற்ப, ஏற்று எழுந்து - உறக்கம் நீங்கி உணர்ச்சி ஏற்று எழுந்து, அமளி தைவந்தனன் - தலைவர் ஆண்டுளராகக் கருதிக் கையாலே படுக்கை முழுதும் தடவாநின்றேன், வண்டுபடு குவளை மலரில் சாஅய் - வண்டுகள் மொய்த்து உழக்கிய குவளை மலரைப் போல நலிந்து, மன்ற தமியேன் - தேற்றமாகத் தனித்தவளாயினேன், யான் அளியேன் - ஆதலால் யான் இரங்குதற் குரியேன்.

விளக்கம் :—கேட்டிசின் என்றதன்கண் சின் முன்னிலையசை. வாழி - அசைநிலை. அல்கல் - இரவு. ஈண்டு முன்னாள் இரவிற் கண்ட கனவே கூறுகின்றாள் ஆகலின். நெருநல் இரவென்க. பொய் வலாளன் என்றது நின்னிற பிரியேன் பிரியின் ஆற்றேன் எனப் பொய்யை மெய்போலப் பேசவல்லான் என்றவாறு. கனவிடத்தும அவன் பொய்யை மெய்யாகக் கருதும்படி செய்தான் இஃதொரு மாய

மிருந்தவாறு என வியததற்கும பொய்வலாளன் என்றது இடந் தருதல் அறிக. எனவே நனவினும் பொய்வல்லான் கனவினும் பொய்வல்லான் என்ற படியாம். மெய்யுறல் மரீஇய கனவு வாய்த் தகைக் கனவு எனத் தனித்தனிக் கூட்டுக. மெய்யுறல் - மருவுவது போலத் தோன்றிய கனவு, நனவுபோலத் தோன்றிய கனவு என்க.

வாய்த்தகை - உண்மையாம் தன்மை. அஃதாவது

நனவு போன்றது என்றவாறு.

மரீஇய - மருவிய - புணர்ந்த. பொய்க்கனு என்றது பொய்யா யிருந்தும் மெய்போல மருட்டிய அதன் ஆற்றலை வியந்தபடி. மருட் டல் - மயக்குதல். ஈண்டு பொய்யை மெய்யாகக் கருதுதல். மருட்ட - மருட்டலாலே என ஏதுப் பொருளில் நின்றது. எற்றெழுதலாவது- உணர்சசி ஏற்று உறக்கத்தினின்றும் எழுதல். அமளி படுக்கை. தை வருதல் - தடவிப்பார்த்தல்.

வண்டுகள் மொய்த்தலானே துவண்டமலர் காமநோயானே நலிந்த உளத்திற்கு உவமை என்க. சாஅய் - நலிந்து ; வருந்தி. தமி யேன் - தனியேன். மன்ற - தேற்றமாக ; நிச்சயமாக. அளியேன் - இரங்குதற்குரியேன்.

காம மிக்கவர் இவ்வாறு கனுக்கண்டு மருளுதல் உண்மையை,

"நனவினு னல்கா தவரைக் கனவினாற்
காண்டலின் உண்டென் உயிர்"

(குறள் - கஉகக.)

"நனவினாற் கண்டதூஉ மாங்கே
கனவுந்தான்
கண்ட பொழுதே இனிது"

(குறள் - கஉகரு.) என்றற் றொடக்கத்துத் திருக்குறள்களானு மறிக.

## பாட்டு - ௩௧ : தலைவி கூற்று

துறை :—கொதுமலர் வரைவுழித் தோழிக்கு அறத்தொடு நின்றது. அஃதாவது, தலைவி ஒரு தலைவனோடு களவுமணம் புணர்ந்து, கற்புக்கடம் பூண்டமையை அறியாது அயலார் அவளை மகட்பேசி வந்தவிடத்து அதுகாறும் தன் தலைவனைப் பற்றிய செய்தியை
கூறியது.
வெளியிடாத தலைவி, அதனைத் தோழிக்குக்

இதன்கண், தலைவி தோழிக்கு, 'யானும் ஓர் ஆடுகள மகள்; என் கைவளை நெகிழ்த்த தலைவனும ஓர் ஆடுகள மகனேயாவன்; அவன் இப்போது யாண்டுள்ளானோ? யான் அவனை யாண்டும் தேடியும கண்டேனில்லை' என்று தானொரு தலைவனோடு கேண்மை கொண்டமையை வெளிப்படுத்துரைக்கின்றாள்.

௩க. மள்ளர் குழீஇய விழவி னானும்
மகளிர் தழீஇய துணங்கை யானும்
யாண்டுங் காணேன் மாண்தக் கோனை
யானுமோர் ஆடுகள மகளே என்கைக்
கோடீ ரிலங்குவளை நெகிழ்த்த
பீடுகெழு குரிசிலுமோர் ஆடுகள மகனே.

—ஆதிமந்தியார்.

(இ - ள்.) மள்ளர் குழீஇய விழவினானும் - மறவர்கள் கூடியுள்ள சேரி விழாவிடத்தும், மகளிர் தழீஇய துணங்கை யானும் - மகளிர் தம்முள் தழுவியாடும் துணங்கைக் கூத்தின் கண்ணும், யாண்டும் - இவையல்லாத பிறவிடங்களினும், மாண் தக்கோனைக் காணேன் - தேடியும் மாட்சிமை மிக்க தகுதியுடைய தலைவனைக் கண்டேனில்லை, யானும் ஓர் ஆடுகள மகளே - இங்ஙனம் யாண்டுஞ் சென்று தேடுதலானே யானும் கூத்தாடும் களத்திற்குரிய மகளே ஆயினேன், என் கைக் கோடு ஈர் இலங்கு வளை நெகிழ்த்த - எனது கையிலணியப்பட்ட சங்கினை அறுத்தியற்றிய விளங்கும் வளையல்கள் கழலும்படி செய்த, பீடு கெழு குரிசிலும் ஓர் ஆடுகள மகனே - பெருமை பொருந்திய தலைவனும் என்னால் ஆடுகளந்தோறும் தேடப்பட்டு ஆடுகள மகனே ஆயினன்.

**விளக்கம்** :—மள்ளர் - போர் மறவர். குழீஇய - குழுவிய; கூடிய. விழவு - சேரிவிழா. திருவிழாக் காலங்களில் போர் மறவர் சேரிகளிலே கூடி விளையாட்டுப் போர் நிகழ்த்துதல் வழக்கம். இதனை "மாயோன் மேய ஓணநன்னாள்......மறங்கொள் சேரி மாறுபொரு செருவில் மாறா தூற்ற வடுப்படு நெற்றிச் சுரும்பார் கண்ணிப் பெரும்புகன் மறவர்" (௫௯௰—௯.) எனவரும் மதுரைக் காஞ்சியானும் உணர்க.



இனி, மகளிர் துணங்கைக் கூத்தாடும் வழக்கத்தை "நிறைதொடி நல்லவர் துணங்கையுட் டலைக்கொள்ளக் கரையிடைக் கிழிந்த நின் காழகம் வந்துரையாக்கால்" (கலி ௭௩: ௧௬-௭.) எனவரும் கலியானும் அறிக. மகளிர் ஆடும் துணங்கைக் கூத்திற்றலைக் கொள்பவன் என்பாள் ஆடுகள மகன் என்றாள் என்க.

துணங்கை - ஒருவகைக் கூத்து. அஃதாவது, "முடக்கிய இருகை பழுப்புடை ஒற்றத், துடக்கிய நடையது துணங்கையாகும்." (திவாகரம்) என்ப. மாண்தக்கோன் - மாட்சிமையாலே தகுதியுடையோன் என்க. இதனால் தலைவனுடைய குடிப்பிறப்பு முதலிய சிறப்புக்களை உணர்த்தியவாறு. யானும் ஓர் ஆடுகளமகளென்றது, குலமகளிர் போகக் கூடாத இடமெல்லாம் போய்த் தேடினேன் என்பது பற்றித் தன்னை இகழ்ந்து கூறியவாறு. என்கை என்றது, நிறையழியாத் திண்மையுடைய என் கைவளையலையும் நெகிழ்த்தற்குரிய பீடுடையான் என்பது தோன்ற நின்றது.

இதனால் என்னாற் காதலிக்கப்பட்டான் ஒரு தலைவன் உளன் எனத் தலைவி தோழிக்கு அறிவித்தவாறறிக.

இப்பாடல் கரிகான் மன்னன் மகளாராகிய ஆதிமந்தியார் என்

னும் நல்லிசைப் புலமையாட்டியார் தங் கணவனைக் காணாது தேடிய பொழுது கூறியதென்ப. இவர் கணவன் பெயர் ஆட்டனத்தி என்ப. இதனை "யானே காதலற் கெடுத்த சிறுமையொடு நோய் கூர்ந்து ஆதிமந்திபோலப் பேதுற்று அலந்தனன் உழல்வேன் கொல்லோ" (அகம். சுஉ.) எனவரும் வெள்ளிவீதியார் பாட்டானும்,

"ஆட்டனத்தியைக் காணீரோஎன
நாட்டி னாட்டின் ஊரி னூரின்
கடல்கொண் டன்றெனப் புனல் ஒளித்தன்றெனக்
கலுழ்ந்த கண்ணள் காதலற் கெடுத்த
ஆதிமந்தி போல"

(அகம். உ௩௬) என வரும் அகப் பாட்டானும் உணரலாம்.

இச் செய்யுள் சுட்டியொருவர் பெயர் கூறப்படாமையின் அகமாய் இதன்கண் கோக்கப்பட்டதென்க.

## பாட்டு - ௩௨ : தலைவன் கூற்று

துறை:—பின்னின்றான் கூறியது. அஃதாவது, தோழியின் வாயிலாய்த் தலைவியைப் பெறவிழைந்து தோழியை இரந்து பின்னின்ற தலைவன் அவள் தன் குறையை ஏற்றுக் கொள்ளாமை கண்டு மீண்டும் நெருக்கிக் கூறியது.

இதன்கண், 'நான் தலைவியைப் பிரிந்திருக்கவும் ஆற்றேன்; நீ மறுக்கின்றாய், யான் மடலேறும் வாயிலாய்த் தலைவியை அடைய முயலின் அச் செயல் அவட்குப் பழி விளைக்கும். அது செய்யா வழி யான் வாழ்தலும் இயலாது. ஆதலின் உயிர் நீத்தலே நன்று' எனத் தலைவன் தோழிக்குக் கூறுகின்றான்.

௩௨. காலையும் பகலும் கையறு மாலையும்
ஊர்துஞ் சியாமமும் விடியலு மென்றிப்
பொழுதிடை தெரியிற் பொய்யே காமம்
மாவென மடலொடு மறுகில் தோன்றித்
தெற்றெனத் தூற்றலும் பழியே
வாழ்தலும் பழியே பிரிவுதலை வரினே.

—அள்ளூர் நன்முல்லையார்.

(இ - ள்.) காலையும் பகலும் கையறு மாலையும் ஊர்துஞ்சு யாமமும் விடியலும் என்று - காலைப்பொழுதும் நண்பகற் பொழுதும் செயலறுதற்குக் காரணமான அந்திப்பொழுதும் ஊர்முழுதும் துயிலா நின்ற இடையிரவும் விடியற்காலமும் என்ற, இப்பொழுது இடைதெரியின் - இப்பொழுதுகளின் செவ்விகள் தெரியப்படுமாயின், காமம் பொய் - அங்ஙனம் தெரிந்துகொள்வோருடைய காமம் உண்மைக் காமமன்று, பிரிவு தலைவரின் - இடைதெரியா இக்காமக் கூட்டத்திற்குப் பிரிவு வருமாயின், மா என மடலொடு மறுகில் தோன்றி - இஃதொரு குதிரை எனக் கண்டாரிகழப் பனைமடலாற் செய்த குதிரையோடே தெருவிலே வெளிப்பட்டு, தெற்றென - கண்டோரெல்லாம் இவனை இந்நிலை செய்தாள் இவளெனத் தெளிந்து

கொள்ளும்படி, தூற்றலும் பழி - தலைவியின் குறை எடுத்துரைத்தலும் அவட்குப் பழிதரும் செயலாம், வாழ்தலும் பழி - அப்பழி தூற்றலை அஞ்சுமிடத்து யான் இவ்வுலகில் வாழ்தலும் எனக்குப் பழிதரும் செயலாம்.

விளக்கம்:—ஆதலால் நீ குறை நேராயாயின் யான் இறத்தல் ஒருதலை என்றானாயிற்று. காலை முதலிய கால வேற்றுமைகள் காமங்கொண்டார்க்குத் தோற்றமாட்டா என்றான். என்றது, காமம் உள்ளத்தை முழுதும் தன் வயப்படுத்திவிடும் இயல்பிற்றாகலின், அதனாற் பற்றப்பட்டார் அதனைத் தோன்றலையே அறிவதல்லது பிறிதொன்றனையும் அறியமாட்டார் என்றவாறு. ஈண்டுக்கூறிய காமவியல்பு,

" எனைநான் என்பதறியேன் பகல்

இரவாவதும் அறியேன் "

(திருவாசகம், உயிருண்-ரு)

என்ற வீட்டின்பநிலை குறித்தோதிய ஆன்றோர் அநுபவ மொழியுடன் ஒத்திருத்தல் உணர்க. இடைதெரிதல் - ஒன்றற்கொன்று வேற்றுமை தெரிதல்.

" காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி

மாலை மலரும்இந் நோய் "

(குறள் - கஉஉஎ)

என்றபடி காமநோய் கொண்டார் மாலைப்போதில் கையறுநிலை எய்தலின், மாலையைக் 'கையறு மாலை' என்றான். 'ஊர்துஞ்சுயாமம்'

என்றது, யான் மட்டும் துஞ்சாத யாமம் என்னும் குறிப்புடைத்தாத லறிக. சிறுபொழுது ஐந்தென்பாரும் ஆறென்பாருமாய் ஆசிரியர் இருதிறப்படுவர். இப்பாட்டுச் சிறுபொழுது ஐந்தே கூறினமை அறிக.

மாவென - குதிரையாகக் கொண்டெனினுமாம். மறுகு - வீதி. தலைவி எனக்குச் செய்த குறையைப் பலரறியத் தூற்றுங்கால் அச் செயல் அவட்குப் பழியாவதோடு பிறர் பழிதூற்றுமாற்றால் யானும் பழிக்கப்படுவேன் என்பான், பொதுவில் 'தூற்றலும் பழியே' என்றான். மடலேறுது வாழ்வேனாயின் என் கையறுநிலை பழிக்கு என்னை ஆளாக்குதல் ஒருதலையாகலின், வாழ்தலும் பழி என்றான். எனவே இவ்வெல்லாந்தீரச் சாதலே நன்றென்றவாறும்.

## பாட்டு - ௫௫ : தலைவி கூற்று

துறை :—வாயிலாகப் புக்க பாணன் கேட்பத் தோழியை நோக்கித் தலைமகள் வாயில்நேர்வாள் கூறியது. அஃதாவது, தன்னோடு ஊடியிருந்த தலைவியின் ஊடல் தீர்க்கும் பொருட்டுத் தலைவனால் விடப்பட்ட பாணன், தலைவியைக் கண்டு பேசுங்கால் ஊடல் தீர்ந்த தலைவி அக்குறிப்பைப் பாணன் அறியுமாறு தோழிக்குக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி 'அன்னாய் இப் பாணன் ஓர் இளமாணாக்கன். தனதல்லாத வேற்றாரிடத்தும் பெரிய தலைமைத் தன்மையுடையனாகக் காணபபடுகின்றான். இவன் இவனுடைய ஊர் மன்றத்தே எத்தகைய சிறபபுடையன் கொல்லோ ?' என, வியந்து கூறுகின்றாள்.

௫௫. அன்னாய் இவனோர் இளமா ணாக்கன்
தன்னூர் மன்றத் தென்னன் கொல்லோ
இரந்தூ ணிரம்பா மேனியோடு
விருந்தின் ஊரும் பெருஞ்செம் மலனே.
—படுமரத்து மோசிகீரனார்.

(இ - ள்.) அன்னாய் - தோழியே, இவன் ஓர் இளமாணாக்கன் - இப்பாணனைக் காண் இவன் ஆண்டு முதிராத இளமாணாக்கனாகவே உள்ளான், இரந்து ஊண் நிரம்பா மேனியொடு - ஏற்றுண்ணும் உணவினையுடைமையின் நன்கு வளர்ச்சி பெறாத உடலினையுடையனாயிருந்தும், விருந்தின் ஊரும் பெருஞ்செம்மலன் - தனக்குப் புதியதாகிய இவ்வேற்றாரிடத்தும் பெரிய தலைமையுடையனாக விளங்குகின்றான், தன் ஊர் மன்றத்து என்னன் கொல்லோ - இவன் தன்னுடைய ஊர் மன்றத்தே எத் தகைய

சிறப்புடையனே!

## மூலமும் உரையும்

௫௪

விளக்கம்:—தோழியைத் தலைவி அன்னை என்றலும் தலைவியைத் தோழி அன்னை யென்றலும் மரபு. இதனை,

“அன்னை என்னை யென்றலும் உளவே

தொன்னெறி முறைமை சொல்லினும் எழுத்தினும்
தோன்றா மரபின என்மனார் புலவர்” (தொல்-பொருள்-௩௨)

எனவரும் நூற்பாவான் உணர்க. இளமாணுக்கன் - ஆண்டானும் கல்வியானும் முதிராத இளைஞனாகிய மாணுக்கன் என்க. இரந்தூண் - ஏற்றுண்ணும் உணவு. நிரம்பாமை - ஈண்டு மேனி வயதிற்கேற்ற வளம்பெறாமை என்க. நிரம்பாமைக்கு இரந்தூண் குறிப்பேதுவாத லுணர்க. மேனியொடும் என்பதன்கண் சிறப்பும்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது. பெருஞ் செம்மல் - பெரிய தலைமைத்தன்மை. ஈண்டுப் பாணனுக்குத் தலைமைத் தன்மையாவது தலைவனுக்குத் தூதாகத் தான் மேற்கொண்டு வந்த செயலை நன்கு முற்றுவித்தல்.

“அறிவுரு ஆராய்ந்த கல்வி இம்மூன்றன்

செறிவுடையான் செல்க வினைக்கு ”

(குறள்-௬௮௪)

என்பது திருக்குறள். வினை இனிது முடித்தற்கு இவை மூன்றும் ஏதுவாம் என்பது நூலிலக்கணம். நிரம்பிய கல்வியும் தோற்றச் சிறப்பும் ஆண்டு முதிர்வும் இல்லாதிருந்தும் இவன் இனிமையுறப் பேசாநின்றான், என அவனது இயற்கை மதி நுட்பத்தைப் பாராட்டியவாறு.

விருந்தின் ஊர் - புதிய ஊர்; என்றது அவனுக்குப் புதிதாகிய வேற்றூர் என்றவாறு. இன் - சாரியை. தன்னியல்பு பிறரான் நன்கறியப்படாத இப்புதிய ஊரினிடத்தேயும் பெருஞ்செம்மலன் ஆயினன். இவனை நன்கறியும் அவனுடைய ஊர் மன்றத்தே இவன் பெரிதும் சிறந்த செம்மல் உடையன் ஆதல் ஒருதலை என்று வியந்தவாறு. இங்ஙனம் தன்னை வியத்தல் தான் மேற்கொண்டு வந்த வினையின்கண் அவட்கு உடன்பாடு உண்டெனப் பாணன் அறிதற்கு ஏதுவாதலறிக.

இனி விருந்தின் ஊரும் என்றதற்குப் "புதிதாகப் பெறும் விருந்தின் பொருட்டுச்செல்லும்" என்றும், "பலர் அழைத்து இடும் விருந்திரோடும் யானை, பரி, தேர் இவற்றின் ஊர்ந்து செல்லும்" என்றும் கூறுவாருமுளர்.

## பாட்டு - ௩௪ : தோழி கூற்று

துறை :—வரைவு மலிந்தமை ஊர்மேல் வைத்துத் தோழி கிழத்திக்குச் சொல்லியது: அஃதாவது, தலைவியால் விரும்பப்பட்ட தலைவனே மகட்பேசி வரைந்துகொள்ள வந்துளளான் என்ற செய்தியை ஊரவர் மேலிட்டுச் சொல்வாளாய்த் தோழி தலைவிக்கு அறிவுறுத்தியது.

இதன்கண், தோழி, 'தலைவனே மணம் பேசி வந்துள்ளான் ஆதலின், இவ்வூர் இனி ஒவலர் ஒறுப்பவும் தேறலர் மறுப்பவும்

*தமியராய் உறங்கும் வருத்தமின்றாய் இனியது கேட்டின்புறுவ தாக' எனத் தலைவி கேட்பக் கூறுகின்றாள்.*

நடச. ஒறுப்ப வோவலர் மறுப்பத் தேறலர்
தமியர் உறங்குங் கௌவை யின்றாய்
இனியது கேட்டின் புறுகவிவ் வூரே
முனாஅ தியானையங் குருகின் கானலம்

பெருந்தோடு
அட்ட மள்ளர் ஆர்ப்பிசை வெரூஉம்
குட்டுவன் மாந்தை யன்னவெம்
குழல்விளங் காய்நுதற் கிழவனு மவனே.

—கொல்லிக் கண்ணனூர்.

(இ - ள்.) ஓவலர் ஒறுப்பத் தேறலர் மறுப்ப - விட்டு நீங்காத தாயர் வைது ஒறுக்கவும் களவிற் கூடியது தேறாத தந்தைமுதலியோர் தலைவர்க்கு மணமறுக்கா நிற்பவும், தமியர் உறங்கும் கௌவை இன்றாய் - தலைவரைக்கூடப் பெறாது தனித் துள்ள தலைவியர் தமியராக உறங்கும் வருத்தம் இல்லாதவராய், இவ்வூர்இனியது கேட்டு இன்புறுக - இவ்வூரிலுள்ளார் இனிய செய்தி யொன்றனைக்கேட்டு இன்புறுவாராக; அஃதியாதெனின், முனாஅது - தாயர் மறுத்தற்கும் வரைவுடன் படுதற்கும் முன்னரேயும், கானலம் யானையங்குருகின் பெருந்தோடு - கடற் கரையின்கண் உள்ள வண்டாழ்ங் குருகின் பெரிய தொகுதி, அட்டமள்ளர் ஆர்பபு இசை வெரூஉம் - பகைவரைக் கொன்ற மறவரது ஆரவார முழக்கத்தினை அஞ்சுதற்குக் காரணமான, குட்டுவன் மாந்தை அன்ன - குட்ட நாட்டரசனுடைய மாந்தை என்னும் நகரத்தை ஒத்த, எம் குழல் விளங்கு ஆய் நுதல்- எமது கூந்தல் புரண்டு விளங்காநின்ற பலரும் ஆராய்ந்து நன்றென்றற்குக் காரணமான நுதலையுடையாளுக்கு, கிழவனும் அவனே - உரிய தலைவனும் இப்பொழுது தமரால் வரைவுடன் படப்பட்டவனே ஆகலான்.

விளக்கம்:—ஓவலர் ஒறுப்பத் தேறலர் மறுப்ப என மாறுக. ஓவலா - தலைவியைவிட்டு நீங்காத செவிலி, நற்றாய் முதலியோர். அவர் ஒறுத்தலாவது, புறம்போகாது இற்செறித்தலும் தாம் துயிலாதிருந்து காத்தலும் பிறவும் செய்தல் தேறலர் - தன்னையர், தந்தை முதலியோா- இவர் தலைவன் வரைவுவேண்டுழி, இத்தலைவன் தலைவியோடு இயற் கைப் புணர்ச்சி பெற்றமை தெளியாது மறுத்தனர் என்றபடி. முன்னர் மறுத்துப் பின்னர்த் தலைவனுடைய தகுதி கண்டு உடன்பட்டனர் என்க. தமியா - தனித்தவராய். உறங்குங்கௌவை என்றது, ஆற் றாமையாலே கண்படை இலதாகவும் தமர்க்கஞ்சி உறங்குவாள்போல் வருந்திப் பொய்த்துயில் கோடல் என்றவாறு. எனவே, ஒறுத்தலால் உண்டாம் கௌவையும், மறுத்தலால் உண்டாம் கௌவையும், தமியர்

௫௩

உறங்குதலான் உண்டாம் கௌவையும் ஒருசேர இலவாகும்படி இனியது கேட்டின்புறுக என்றவாறு. இனியது: வரைவுமலிந்த செய்தி. இனி வரைவின்கண் எழும் இன்னிய இசை என்பாருமுளர். இசையினும் இச்செய்தியே இனிதாகலின் செய்தியென்றலே நன்றென்க.

தமியர் என்றும், இவ்வூரார் என்றும் படர்க்கைப் பலர்பாலிற் கூறினுளேனும், ஈண்டு அது தலைவியைச் சுட்டியே பேசப்பட்டதென்க. எனவே, 'அன்னாய் நீ இனி எத்தகைய கௌவையுமிலையாய் இனியதுகேட்டின்புறுக; அஃதியாதெனின் நமர் வரைவுடன்பட்டனர்;

யாருக்கெனின், நின் தலைவனுக்கே '

என்றறிவுறுத்தியபடியாம்.

முனாஅது - வரைவுடன்படுதற்கு முன்னரே என்க. முனாது ஆய்ந்தற் கிழவனும் அவனே என்றது பின்னும் அவனே தலைவனாகத் தமரால் உடன்படப்பட்டான் என்றறிவித்தவாறும்.

யானையங்குருகு - வண்டாழ்ங்குருகு என்பார் நச்சினார்க்கினியர். (மதுரைக் - ௬௭௪. உரை) ஆனைச்சாத்தன் என்பாரும் உளர். அட்டமள்ளர் - பகைவரைக்கொன்ற வீரர். தோடு - தொகுதி. குட்டுவன் - குட்டநாட்டையுடைய மன்னன், சேரனுமாம்.

யானையங்குருகு தாம் வெருவ வேண்டா ஆர்ப்பிசையை வெரூஉம் என்றது, தலைவி அஞ்சவேண்டாதவருக்கு அஞ்சுகின்றாள் என்றபடி. மரந்தை என்று பாடங்கொள்வாருமுளர்.

## பாட்டு - ௩௫ : தலைவி கூற்று

துறை:—பிரிவிடை மெலிந்த கிழத்தி தோழிக்குரைத்தது. அஃதாவது, தலைவன் பிரிந்தமையால் பெரிதும் வருந்திய தலைவியைத், 'தோழி நீ இங்ஙனம ஆற்றுயாகின்றது நேரிதோ?' என்றாட்குத் தலைவி ஆற்றுமைக்குக் காரணம் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'என் கண்கள் அவர் பிரிந்த காலத்தே அழுது தடைசெய்யாதுடன்பட்டு, அவர் பிரிந்த பின்னர் அழுதலாலே பெரிதும் நாணில வாயின' என்று கூறுகின்றாள்.

நூரு. நாணில மன்றவெங் கண்ணே நாணேர்பு
சினைப்பசும் பாம்பின் சூன்முதிர்ப்
பன்ன
கனைத்த கரும்பின் கூம்புபோதி யவிழ
நுண்ணுறை யழிதுளி தலைஇய
தண்வரல் வாடையும் பிரிந்திசினோர்க்
கழலே.

—கழார்க்கீரனெயிற்றி.

(இ - ள்.) நாள் நேர்பு - வேனிற் பருவத் தொடக்கத்தே மீண்டுவருவல் என்ற தலைவர்க்கு அவர் பிரியுங்கால் அந்நாளை யுடம்பட்டுப் பின்னர், சினைப் பசும்பாம்பின் சூல் முதிர்ப்பு அன்ன-கருக்கொண்ட பச்சைப் பாம்பினது சூலினது முதிர்வினை

ஒத்த, கணைத்த கரும்பின் கூம்பு பொதியவிழ - பருத்த கரும்பினது குவிந்த அரும்பு மலரும்படி, தண் உறை அழி துளி தலைஇய - நண்ணிதாகத் தூவுகின்ற முகிலினின்றும் அழிந்து வீழ் மழைத்துளியோடு கூடிய, தண்வரல் வாடையும் - தண்ணிதாக வருதலையுடைய வாடைக்காற்றையுடைய கூதிர்க் காலத்தும், பிரிந்திசினோர்க்கு அழல்-பிரிந்துறையும் தலைவர் பொருட்டு அழுதலாலே, மன்ற எம் கண் நாணில - தேற்றமாக எம்முடைய கண்கள் நாணம் இல்லாதன ஆயின.

**விளக்கம்** :—நாள் கோர்தலாவது, போர் முதலியன குறித்துப் பிரியும் தலைவன் யான் இன்ன காலத்தே மீண்டு வருவன் அதுகாறும் ஆற்றியிரு என்று தேற்றுங்கால் அதற்கு உடம்பட்டிருத்தல். வேனிற் பருவத் தொடக்கத்தே வருவன் எனக் கூறிச் சென்றான் ஆகலின் கூதிர்பருவத்து வாடைக்கு ஆற்றாது அழுதல் நாணின்மைக்கு ஏதுவாயிற்று. கூதிர்ப் பாசறை வேனிற் பாசறை என்றிரு பாசறையிருப்புக்களுள், ஈண்டுக் கூதிர்ப் பாசறைக்கண் தலைவன் பிரிந்துறைகின்றானுதல் வாடை என்றதனால் உணர்க.

இனி, வாடைப்போதிற்கு முன் வருவன் என்று கூறிப் பிரிந்தான் என்பாரும் உளர். கூதிர்ப்பாசறைக்கு அப்பருவ வரவின் முன்னரே வருதல் கூடாமையினானும், வாடைக்கு முன் வருவன் எனறான் வாராமைக்குக் கண்கள் அழுதன வெனின், அவை நாணில என்றல் பொருந்தாமையானும், அதுபொருந்தாமை யறிக. வாடைப்போதிற் பிரிந்துறைதற்கு முன் உடன்பட்டும் பின்னர் வாடைக்கு ஆற்றாதழுதலே நாணிலவாதற்கு ஏதுவாம் என்க.

சினைப் பசும் பாம்பென்புழி, சினை என்றது வாளா பொருட்கேற்ற அடைமாத்திரையாய் நின்றது. கனைத்த - பருத்த. கூம்பு - மலர்ப் பொதி. நுண் உறை - நுண்ணிதாகத் தூவுகின்ற துளி என்க. கார்ப் பருவம்போன்று கூதிர்ப்பருவத்தில் பெருமழையின்றிச் சிறுதூற்றலே உளதாகலான், நுண்ணுறை என்றார். அழி துளி - முகிலினின்றும் அழிந்து வீழ் துளி என்க. பெருந்துளி என்பாரும் உளர் அழிதுளி- மிக்க துளி எனினுமாம், அழி மிகுதிப் பொருட்டாதலை "அழிபசி" என்னும் குறட்பகுதிக்குப் (உ௨௬.) பரிமேலழகர் "மிக்கபசி" என உரை கூறுமாற்றானும் உணர்க. தலைஇய - கூடிய. பெய்த எனினு மாம். தண் வரல் வாடை - தண்ணிதாக வருதலையுடைய வாடை என்க. வாடை உடம்பட்ட நாள் ஆகலின், வாடையும் அழல் நானுத் தகவுடைத தென்றாள். அழலே என்பதன் கண் ஆன் உருபு தொக்கது. இது செய்யுள்விகாரத்தாற் றொக்கது என்பர், மயிலை நாதர் (நன் - ௩௬௨.)

## பாட்டு - ௩௬ : தலைவி கூற்று

துறை :—வரைவிடை வைத்துப் பிரிய ஆற்றாள் எனக் கவன்று வேறுபட்ட தோழியைத் தலைமகள் ஆற்றுவித்தது. அஃதாவது, வரைவின்பொருட்டுப் பொருளீட்டத் தலைவன் பிரிந்தானாக, அப்பிரிவினைத் தலைவி ஆற்றாள் எனத், தோழி வருந்

## மூலமும் உரையும்

௫௭

தினாள் ; அதுகண்ட தலைவி, 'நான் ஒருவாறாக ஆற்றியிருக்கின் றேன் ; அங்ஙனமாகவும் நீ என் பொருட்டு வருந்துவானேன்?

வருந்தற்க' என்பதுபடச் சொல்லியது.

இதன்கண், 'குன்றநாடர் என் தோள் மணந்த காலத்தில் யான் நின்னைப்பிரியேன் என்று சூளுறவு செய்தனர். அதற்கிணங்க அவர் வந்திலர் எனின், அது அவர் செய்த தவறாகும். நான் ஒருவாறு ஆற்றியிருக்கின்றேன். அவர் செய்த தவறு நினக்கு நோயாகாதன்றே! ஆகாதாகவும் நீ எற்றிற்கு வருந்துகின்றனை வருந்தாதிரு' என்று தோழியைத் தலைவி தேற்றுகின்றாள்.

௩௬. துறுக லயலது மாணை மாக்கொடி
துஞ்சுகளி றிவரும் குன்ற நாடன்
நெஞ்சுகள னாகி நீயலேன் யானென
நற்றோள் மணந்த ஞான்றை மற்றவன்
தாவா வஞ்சின முரைத்தது
நோயோ தோழி நின்வயி னானே.

—பரணர்.

(இ - ள்.) தோழி—, துறுகல் அயலது மாணை மாக்கொடி-பொற்றைக் கல்லின் பக்கத்தே உள்ளதாகிய மாணை என்னும் பெரிய கொடி, துஞ்சு களிறு இவரும் குன்ற நாடன் - துயில்கின்ற யானையின்மேற் படராநின்ற குன்றங்களையுடைய நாட்டிற்குத் தலைவன், நெஞ்சு களனாக நீயலன் யான் என - தன் நெஞ்சே அறியும் அவைக்களனாக நின்னையான் பிரியேன் என்று

கூறி, நற்றோள் மணந்த ஞான்றை - எனது நல்ல தோள்களை அணைந்த பொழுது, அவன் தாவா வஞ்சினம் உரைத்தது - அத் தலைவன் கெடாத சூளுறவினைக் கூறியது, நோயோ தோழி நின் வயினனே - நோயாகுமோ நின்னிடத்தும் ஆகாதன்றே.

விளக்கம்:—துறுகல் - பொற்றைக்கல். இது யானை போறலை, "துறுகல் யானையிற் றோன்றும்," (குறுந்-உஎக) என்றும், மாசறக் கழுவிய யானைபோலப், பெரும்பெயல் உழந்த இரும்பிணர்த் துறுகல்," (குறுந்-கரு) என்றும், "கூழை யிரும்பிடி கைகரந் தன்ன, கேழிருந் துறுகல்" (குறுந்-ககக.) என்றும் இந்நூலிற் பிறாண்டும் வருதலானும் உணர்க.

மாலை மாக்கொடி - ஒரு காட்டுக் கொடி. மாக்கொடி என்பதற்குக் கரிய கொடி எனினுமாம். துஞ்சு களிறு இவரும் என்றது, தூங்குகின்ற யானையைத் துறுகல் என்று கருதிப் படரும் என்றபடி. எனவே, நிலை பேறின்றித் திரியும் யானையை நிலைபேறுடைய துறுகல்லாகக் கருதி மாலைக் கொடிபடர்ந்து பின்னர் அந்த யானை போயபின் பற்றுக்

கோடற்று அலமருதல் போன்று, யான் சூளுறவின்படி உறுதியாய் நில்லாதானைப்பற்றி இதுபோழ்து அலமருகின்றேன் என்று உள்ளுறை காண்க. களன் - ஈண்டு வீரர்கள் வஞ்சினங் கூறும் அவைக்களன். தலைவன், தன்னெஞ்சே அவைக்களனாகக் கொண்டு தாவா வஞ்சினம் உரைத்தான் என்றவாறு. தாவா - கெடாத. வஞ்சினம் கெடப்படாதாகவும் கெடுத்தொழிந்தான் என்றவாறு. நீயல் - பிரிதல். நீயலென் - பிரியேன். நற்றோள் என்றது, அற்றை நாள் மெலியாதிருந்தமையையும் இற்றைநாள் மெலிந்தமையையும் கருதிக் கூறியபடியாம். நற்றோள் மணத்தல் - இடக்கரடக்கல். மற்று - அசை. வஞ்சினம் உரைத்து அதனிற் றவறியது அவனுக்கு நோயாகும், எனக்கும் அவனுக்கும் இன்பதுன்பம் ஒன்றாய் வருதலின் எனக்கும் நோயாம். ஆகவும், அவன் தவற்றிற்கு நாணி, யான் ஒருவாறு ஆற்றுவேனாகவும் அவ்வஞ்சினம் உனக்கும் நோயாகுமோ? ஆகாதன்றே; நீ என் வருந்துகின்றனை? வருந்தற்க, என்று ஆற்றுவித்தாள் என்க. நோயோ என்றதன்கண் ஓகாரம் ஆகாமை குறித்து நிற்றலின் எதிர்மறைப் பொருட்டென்க.

நெஞ்சு களனாக என்பதற்கு "நின் நெஞ்சு இடமாக இருந்" தென்பாரும் உளர். நெஞ்சு இடமாக இருத்தலில் பிரிந்தபொழுதும் தவறு இலனாகலின், அஃதுரையன் றென்க.

# பாட்டு - ௩௭ : தோழி கூற்று

துறை :— தோழி கடிது வருவாரென்று ஆற்றுவித்தது; அஃதாவது, தலைவன் பிரிவை ஆற்றாது பெரிதும் வருந்திய தலைவியை நோக்கி, அவர் மிகவும் அன்புடையராகலின் விரைந்து வருவார் என்று கூறித் தோழி தலைவியை ஆற்றுவித்தது

இதன்கண், 'தலைவியே ! தலைவர் நின்பாற்

பெரிதும் விருப்ப

முடையர். மேலும் அவர் சென்ற வழியின்கண் ஆண்யானை தன் பிடியானையின் பசிபோக்கும் பொருட்டு யாமரத்தின் பட்டையை உரித்து அதன் நீரைப் பிடிக்கு ஊட்டும்; அந்நிகழ்ச்சியைக் காண்டலும் தலைவர் நின்னை நினைந்து மீள்வர்' என்று கூறித்

தோழி தேற்றுகின்றாள்.

நுஎ. நசைபெரி துடையர் நல்கலு நல்குவர்
பிடிபசி களைஇய பெருங்கை வேழம்
மென்சினை யாஅம் பொளிக்கும்
அன்பின தோழியவர் சென்ற வாறே.
—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

(இ - ள்.) தோழி—, அவர் சென்ற ஆறு - தலைவர் சென்ற வழியின் கண்ணே, பிடி பசிகளைஇய - பெண் யானைகளின் பசியை அகற்றும் பொருட்டு, பெருங்கை வேழம் - பெரிய

துதிக்கையை உடைய களிற்றியானைகள்,

மென்சினை யாஅம்

மூலமும் உரையும்

குள

பொளிக்கும் - மெல்லிய கிளைகளையுடைய யாமரத்தின் பட்டையை உரியாநிற்கும், அன்பின - அன்புடையனவாம் ஆதலால், நசை பெரிதுடையர் - நின்பால் மிகவும் விருப்பமுடைய

தலைவர், நல்கலும் நல்குவர் - நல்குதலையும்

செய்வர்.

**விளக்கம் :**—நசை - ஈண்டுக் காதல் விருப்பத்தின் மேற்று. நசை பெரிதுடையர் என்றது, பேரன்பினர் என்றவாறு. நல்கலும் நல்குவர் என்பது, நல்குவர் என்னும் ஒருசொல் விழுக்காடு. "உண்ணலும் உண்ணேன்" (கலி - ...) மயங்கலும் மயங்கும்" (சிலப் உஉ : கடுசு.) என்புழிப்போல. நல்கலுக்கு நசையுடைமை குறிப்பேதுவாக நின்றது. களைஇய - களைய, தீர்க்க என்றபடியாம். தன்பசி தீராது பிடிபசி தீர்க்க முயலும் சிறப்புடைய கையாகலின் பெருங்கை என்றாள். பெருமையுடைய கை என்க; கைக்குப் பெருமை ஈதலேயாகலின். வேழம் - ஈண்டுக் களிறு. நீர் வறந்து தழைகளிலவாகிய கிளையென்பார், மென்சினை என்றார். ஈண்டு மென்மை, நல்குரவின் மேற்று. என்னை நல்கூர்ந்தாரை மெலியர் என்பவாகலின் என்க. கோட்டால் என்னுது கையாற் பொளிக்கும் என்றலின், பொளித்தல் ஈண்டு உரித்தற்றொழில் குறித்து நின்றது யாஅம் - ஒருமரம். இதனை "யா" என்று வழங்குதலும் உண்டு தலைவர் சென்ற வழியில் பிடிகட்கு யாஅம் பொளிந்தூட்டும் களிறுண்டாகலின், அவ்வன்புச செயலைக் காணுங்கால் நின்னை நினைவுகூர்வர்; கூர்ந்தவழி நின்பால் நசைபெரிதுடையராகலின் விரைந்து மீண்டு வந்து நல்குவர் என்றான் என்க.

இனி ஆறு அன்பின என இடத்து
மேல் ஏற்றிக் கூறினுமாம்.

நிகழ்தொழிலை இடத்தின்

பாட்டு - ௩அ : தலைவி கூற்று

துறை :—வரைவு நீட்டித்தவழித் தலைமகள் தனது ஆற் ருமை தோன்றத் தோழிக்குக் கூறியது. அஃதாவது, வரைந்து
கொள்ளற்கு வேண்டிய பொருளீட்டல் நிமித்தம் பிரிந்த தலைவன், நீண்டநாள் மீண்டு வாராமையால் ஆற்ருமை மிக்க தலைவி, தன் வருத்தம் தோழிக்குப் புலப்படுமாறு கூறியது.

இதன்கண், 'பிரிவினை ஆற்றியிருக்கும் வன்மையுடை
யோர்க்குக் குன்றநாடன் கேண்மை என்றும நன்ருகும்,' எனத் தன் ஆற்ருமை புலப்படத் தலைவி தோழிக்குக் கூறுகின்ருள்.

ருஅ. கான மஞ்ஞை யறையீன் முட்டை
வெயிலாடு முசுவின் குருளை உருட்டும்
குன்ற நாடன் கேண்மை என்றும்
நன்றுமன் வாழி தோழி உண்கண்
நீரொ டோராங்குத் தணப்ப
உள்ளா தாற்றல் வல்லு வோர்க்கே.

—கபிலர். குஅ குறுந்தொகை

(இ - ள்.) தோழி—, கான மஞ்ஞை அறை ஈன் முட்டை-காட்டகத்தே வாழும் மயில் பாறையின்கண் ஈன்ற முட்டையினை, வெயில் ஆடும் முசுவின் குருளை உருட்டும் - வெயிலில் விளையாடுகின்ற குரங்குக்குட்டி உருட்டாநிற்கும், குன்ற நாடன் கேண்மை - மலைநாட்டையுடைய தலைவனுடைய நட்பு, என்றும் நன்று மன் - எப்பொழுதும் நல்லதேயாகும் அஃதியார்க்கோவெனின், உண் கண் நீரொடு தணப்ப - மையுண்ட கண்களிற்

பெருகும் நீர் கண்டு வைத்தும் அதனோடே இரங்காது ஒருபடித் தாய் அவர் பிரியா நிற்ப அத்தகைய வன்கண்ணரை, உள்ளாது

ஆற்றல் வல்லுவோர்க்கே - பின்னர் எப்பொழுதும் இருக்கும் ஆற்றல்வன்மை யுடையார்க்கு.

நினையா

விளக்கம்:—கானமஞ்ஞை - காட்டில் வாழும் மயில். மயிலின் முட்டையைக் குரங்கின்குட்டி வெயிலில் உருட்டும் என்றதற்கு, முட்டையகத்துள்ள குஞ்சிற்குண்டாம் தீமை கருதாமல் குரங்குக்குட்டி வெயிலில் உருட்டுதல் போன்று, யான் எய்தும் துன்பத்திற் கிரங்காமல் இவ்வூரார் யாண்டும் அலர் தூற்றுநிற்ப என்னும் உள்ளுறை காண்க. அறையின் முட்டை என்றது, தன்குடிப்பிறப்பைக் குறித்தது. நீரோடு ஓராங்குத் தணத்தலாவது, நீரைக் கண்ட காட்சியோடே ஒருபடித் தாய்ப்பிரிதல் என்க. எனவே, வன்கண்ணர் என்றாளாயிற்று. அத்தகைய வன்கண்மையுடையார் நம்மை நினைந்து அருளுவாரல்லர் என்பது குறிப்பு. இத்தகைய வன்கண்மையுடையோர் கேண்மை கொண்ட யானும் அவரை உள்ளாத வன்கண்மை யுடையேனாயின், அவா கேண்மை நன்றேயாகும்; அது பெற்றிலேன் என்பாள் அதனைப் பிறர் மேலிட்டு அவர் கேண்மை உள்ளாதாற்றல் வல்லுவோர்க்கு என்றும் நன்றுமன் என்றாள். மன்: யானது பெற்றிலேன் என்னும் பொருட்டு. உள்ளாது ஆற்றல் - நினையாது பொறுத்தல். வல்லுவோர் - வன்மையுடையோர்.

உண்கண் நீரொடு தணப்ப என்றதற்கு "அவன் தணந்தவுடன் தம் உண்கணீரும் ஒரேபடியாகத் தணப்ப என்பாரும் உளர்.

## பாட்டு - ௬௬ : தலைவி

கூற்று

துறை :—பிரிவிடை ஆற்றல் வேண்டும் என்ற தோழிக்கு "யாங்ஙனம் ஆற்றுவேன்" எனத் தனது ஆற்றாமை மிகுதி தோன்றத் தலைமகள் கூறியது. அஃதாவது, தலைவன் பிரி

வாலே மிகவும் ஆற்றாமை எய்திய தலைவியைத் தோழி, 'நீ இவ்வாறு ஆற்றாயாகின்றதென் ?' என வினவியாட்கு 'யான் ஆற்றுவல்; என் ஆற்றாமைக்குக் காரணம் வேறு' என்று

கூறியது.

இதன்கண், 'நான் ஆற்றுவேன் எனினும் தலைவர் சென்ற நெறி, கடத்தற்கரிய பாலைக் கடுஞ்சுரம் என்று கூறுப; அது

## மூலமும் உரையும்

இகூ

கேட்டே யான் இப்போது ஆற்றேன் ஆயினேன்' எனத் தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

௩௯. வெந்திறற் கடுவளி பொங்காப் போந்தென

நெற்றுவிளை உழிஞ்சில் வற்றல் ஆர்க்கும்
மலையுடை அருஞ்சுரம் என்பநம்
முலையிடை முனிநர் சென்ற ஆறே.

—ஔவையார்.

(இ - ள்.) வெந்திறல் கடுவளி பொங்காப் போந்தென-வெப்பமிக்க வலியையுடைய கடிய காற்றுப் பொங்கி வந்ததாக, நெற்று விளை உழிஞ்சில் வற்றல் ஆர்க்கும் - நெற்றாக விளைந்த வாகையின் வற்றல்கள் ஆரவாரித்தற்குக் காரணமான, மலை உடை அருஞ்சுரம் என்ப-மலைகளும் உடையாநின்ற கடத்தற்கரிய சுரம் ஆகும என்று கூறுவா, நம் முலையிடை முனிநர் சென்ற ஆறு - நம் முலையிடத்தே துயிலுதலை வெறுத்துப் பொருளீட்ட விரும்பிச் சென்ற நம் தலைவர் போனவழி.

விளக்கம் :—அதனை நினைந்தே யான் இப்போது ஆற்றேனாகின்றேன் என்றாள் என்பது கருத்தாகக் கொள்க. வெந்திறல் - சுடுகின்ற ஆற்றல். பாலை நிலக் காற்று கதிர்வெம்மையை ஏற்றுச் சுடுமியல்பிற்றாதலின், வெந்திறல் என்றாள். கடுவளி என்றது, விரைந்து வீசும் பெருங்காற் றென்றவாறு. பொங்கர்ப்போந்தென என்றும் பாடம். பொங்கர்-மரக் கொம்பென்க. நெற்றுவிளை உழிஞ்சில் பொருட்கேற்ற அடை. நெற்று - முதிர்ந்த காய். மலையுடை அருஞ்சுரம் என்றதற்கு மலைகளும் பிளத்தற்குரிய வெப்பமிக்க சுரம் என்க. மலைகளையுடைய அருஞ்சுரம் எனினுமாம். அருமை - ஈண்டு ஊடுபோய்க் கடத்தற்கருமை குறித்து நின்றது.

மலையுடை அருஞ்சுரம் என்றதனால் இது குறிஞ்சிதிரிந்த பாலை என்க. என்னை "முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து...பாலை என்பதோர் படிவங் கொள்ளும்" (சிலப், கக: கூச—கூ.) என்பவாகலான்.

குளிர்ந்த முலையிடைத் துயின்று இன்புறவேண்டியவர், அதனை வெறுத்துப் பொருளை விரும்பிக் கடத்தற் கரிய சுரத்திடைப் போயினரே ஆண்டவர் என்பவேரோ! என்பாள், 'முலையிடை முனிநர்' என்றாள். முனிநர்-வெறுத்தவர். முலையிடைமுனிநர் என்றது பொருளினை விரும்பினவர் என்னும் குறிப்புடைத்து.

பாட்டு - ௬௦ : தலைவன் கூ

ற்று

துறை :—இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த

பின்னர்ப் பிரிவ
ரெனக் கருதியஞ்சிய தலைமகள் குறிப்பு வேறுபாடுகண்டு தலை
மகன் கூறியது. அஃதாவது, பால்வரை தெய்வம் கூட்டுவித்த
மால், கொடுப்பாரும் அடுப்பாருமின்றித் தாமே

தமியர் எதிர்ப்



பட்டுப் புணர்ந்த வழித் தலைமகள் 'இவன் எவ்விடத்தானோ,
நம்மைப்பிரிவானோ மறந்து துறப்பானோ துறப்பான் எனின்
யாம் உயிர் வாழுமாறென்னை?' என்று, அஞ்சினளாக, அவள்
கருத்தைக் குறிப்பால் அறிந்த தலைமகன், 'நம் கேண்மை பிரி
யும எளிமைத் தன்'றெனத் தேற்றியது.

இதன்கண், தலைவன் தலைவியை நோக்கி,

' நின் தாயும் என் தாயும் பண்டு கேளிரல்லர்;
எந்தையும் நுந்தையும் உற வினர் அல்லர்; நீயும்
யானும் இப்போது எதிர்ப்பட்டறிந்ததல் லால்
பண்டு ஒருவரை ஒருவர் அறிந்திலோம்;

அங்ஙனமாக

வும், நம் உள்ளம் இரண்டறக் கலந்தன; ஆதலால், இங்கட்பு ஊழானே நிகழ்ந்ததாம் ஆகலின், யாம் பிரிவோமல்லேம்' என்று தேற்றுகின்றான்.

௪0. யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி யறிதும்
செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே.

—செம்புலப் பெயனீரார்.

(இ - ள்.) யாயும் ஞாயும் யாராகியரோ - என் தாயும் நின்

தாயும் ஒருவர்க்கு ஒருவர் என்ன உறவுடையர் ஆகுவர்? எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர் - என் தந்தையும் நின் தந்தையும் எம்முறையினையுடைய உறவினர் ஆகுவர்?, யானும் நீயும் எவ்வழி அறிதும் - யானும் நீயும் இப்பொழுது

யானும்

அறிந்த

தையல்லால் முன்பு எவ்வாற்றான் ஒருவரை ஒருவர் அறிந்துள்

ளோம்? இம்மூன்றானும் தொடர்புடையோம் செம்புலப பெயல் நீர் போல - செந்நிலத்தே

அல்லமாகவும்,

பெய்யப்பட்ட
மழை அந்நிலத்தியல்போடே ஒன்றுறக் கலந்தாற்போன்று அன்புடை நெஞ்சம் தாம் கலந்தன - அன்புடைய நம் நெஞ்சங்கள் தாமாகவே கலந்தன காண்.

**விளக்கம்** :—யாய், ஞாய் - தாய். என்பன முறையே என்தாய், நின் தாய், அவர் தாய் எனத் தன்மை முதலிய மூன்றிடமும் பற்றிவரும், எந்தை நுந்தை தந்தை என்பன போல. யாராகியர் - யாராந்தன்மை புடையர். என்ன உறவினையுடையார் என்றவாறு. நின்தாயும் என்தாயும் ஒருவருக்கொருவர் யாதோர் உறவும் இலராகவும் என்க. எந்தை - என் தந்தை; நுந்தை - நின்தந்தை. கேளிர் - உறவினர். உறவினராவார் ஒருவர்க்கொருவர் யாதாமொரு முறைபற்றியே உறவுடையர் ஆதலின், அம்முறைகளுள் எம்முறைபற்றிய உறவினர் என்பான், 'எம்முறைக் கேளிர்?' என்றான். எம்முறையானும் அவர்கள் கேளிர் அல்லர் என்றவாறு.

## மூலமும் உரையும்

சுக

உறவென்பது தாய் மரபு பற்றியும், தந்தை மரபு பற்றியுமே வரு வது. அவ்விரு மரபானும் யாம் தொடர்புடையேம் அல்லம். உறவினர் அல்லாவிடத்தும் ஒருவரை ஒருவர் அறியுமாற்றானே நட்புக்கிழமை கோடலும் உண்டு. அங்ஙனம் யாம் இதற்கு முன்னர் எவ்வாற்றானும் அறிந்திலம் என்பான், 'யானும் நீயும் எவ்வழி அறிதும்' என்றான். ஒரு வழியானும் அறிந்திலேம் என்றவாறு. கண்டறிதல், கேட்டறிதல் என அறிதற்கு வழி இரண்டுள வாகலான், இவற்றுள் ஒருவழியானும் அறிந்திலம் என்பான், 'எவ்வழி அறிதும்' என்றான், என்க. இங்ஙனம் உறவுத் தொடர்பும், நட்பு மில்லாத நம் நெஞ்சங்கள் இயல்பாகவே அன்புநிரம்பியுள்ளன. அதற்குக் காரணம் யாம் பற்பல பிறப்புக்களிலே பயின்று பயின்று முதிர்ந்த உழுவலன்புடையே மாதலே என்பான், அன்புடைநெஞ்சம்' என்றான்.

வானத்தின்கண் தன் தன்மைத்தாய் நீர் நிலத்தோடு சேர்ந்தவழித் தன் றன்மை திரிந்து நிறம் சுவை முதலிய நிலத்தின் றன்மையைத் தன தாக ஏற்றுக் கொள்ளுமாறு போலவும், நெகிழ்ச்சி தண்மை முதலிய நீரின் தன்மையை நிலம் தனதாக ஏற்றுக் கொள்ளுமாறு போலவும் ம் நெஞ்சங்கள், தத்தம் தன்மை திரிந்து ஒன்றன் றன்மையை ஒன்றேற றுக் கலந்தன என்பான், 'செம்புலப் பெயனீர் போல நெஞ்சம் கலந்தன' என்றான். செம்புலத்திற் பெய்தநீர் போல என்றானேனும் செம்புலமும் அதன் கட்பெய்த நீரும் கலந்தாற்போல என்பது கருத் தாகக் கொள்க. செம்புலப் பெயனீர் என்னும், இவ்வினிய தொடரை ஈத்த அருமைகருதி இதனைப் பாடிய நல்லிசைப் புலவர் "செம்புலப் பெயனீரார்," எனப்பட்டார்.

## பாட்டு – சுக : தலைவி கூற்று

துறை :—பிரிவிடைவேறுபாடு கண்டு கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது ; அஃதாவது. தலைவன் பிரிந்தமையால் ஆற்றாமைமிக்க

தலைவியைக்கண்டு கவலை கொண்ட தோழியை நோக்கிப், 'பிரிவின் கொடுமை அங்ஙன மிருக்கின்றது' எனத் தலைவி கூறியது.

இதன் கண், 'தலைவர் உடனுறையும் காலத்தில் யான் திருவிழா எடுக்கும் ஊர்போலப் பொலிவுறுகின்றேன்; அவர் பிரிந்த பொழுதோ மக்கள் போகிய புலம்பில் போலப் புல்லென்று இருந்தாலிற்பன்; இது என்னியல்பாயினும் ஒருவாறு ஆற்றுவல்' என்று தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

சச. காதலர் உழைய ராகப் பெரிதுவந்து
சாறுகொ ளூரிற் புகல்வேன் மன்ற
அத்த நண்ணிய அங்குடிச் சீறூர்
மக்கள் போகிய அணிலாடு முன்றிற்
[1]புலம்பில் போலப் புல்லென்று
அலப்பென் தோழியவர் அகன்ற ஞான்றே.

— அணிலாடு முன்றிலார்.

1. (பாடம்) புலப்பில்.

(இ - ள்.) தோழி—, காதலர் உழையராக-தலைவர் பக்கத் திருப்பராக அப்பொழுது, பெரிது உவந்து - மிகவும் மகிழ்ச்சி யுற்று, சாறுகொள் ஊரிற் புகல்வேன் - திருவிழாக் கொண்ட ஊர் பொலிவுறுமாறுபோலப் பொலிவுற்று மகிழாநிற்பேன், மன்ற - தேற்றமாக, அவர் அகன்ற ஞான்று - தலைவர் பிரிந்த பொழுதோ, அத்தம் நண்ணிய அங்குடிச் சீறூர் - பாலைநிலத்து வழியிலே பொருந்திய அழகிய குடிகளையுடைய சிறிய ஊரின் கண் உள்ள, மக்கள் போகிய அணில் ஆடு முன்றில் புலம்பு இல் போல - தன்கண் வாழும் மாந்தர் குடியோடப்பட்ட அணில்கள் விளையாடாநின்ற முற்றத்தையுடைய தனித்த வீட்டைப் போல,

புல் என்று அலப்பென் - பொலிவழிந்து வருந்தா

நிற்பேன்.

**விளக்கம்** :—உழை - பக்கம். உழையர் - பக்கத்திலிருப்பவர். உட னுறைபவராக என்றவாறு. சாறு - விழா. விழா நிகழும் ஊர், ஒப்பனை செய்யப்பட்டுப் புதிதாகப் பொலிவுறுமாறு போல என்க. விழாக் கொள்ளும் ஊரினர் மகிழுமாறு போல என்பாருமுளர். பின்னர் மக்கள் போகிய புலம்பில் போல என்றவிடத்து, ஆண்டுப் புற்கென் னும் தணையே புலம்பில் உவமையாளுற் போல, ஈண்டும் பொலிவுறுந் தணையே விழாக் கொள் ஊர் உவமையாகலின், ஈண்டு ஊர் என்றது ஆகுபெயர் அன்றென்க புலம்பில்போலப் புற்கென்று அலப்பேன் என்றதனுல் ஈண்டும் சாறு கொளூரிற் பொற்புற்றுப் புகல்வேன் என்க. புகல்தல் - மகிழ்தல்.

"அருந்தவன் முந்துகூற அலங்கல்வே லுய்கன் சென்று

பொருந்துபு சிறுவற் கொண்டு பொலிவொடு

புகன்று போக"

என்புழியும் அஃ திப்பொருட்டாதல் அறிக. மன்ற - தேற்றமாக. அத்தம் - பாலை நிலம். மக்கள் போகிய என்றது, தன்கண் குடியிருந்த மக்கள் குடியோடிப் போகப்பட்ட என்றவாறு. பாலை நிலத்து வாழ்வோர், நீர் உணவு முதலிய பெறாது குடியோடிப் போதல் வழக்கம் என்க. மக்கள் போகியது அணிலாடுதற்கு ஏது வென்க.

புலம்பு இல் - தனித்த வீடு. புலம்பு - தனிமை. அலப்பென் - வருந்துவேன் - அலப்பு என் என, வினைவாக்குவாரு முளர்.

இனி, காதலர் உழையராக அத்தம் நண்ணிய இச்சீறூரைச் சாறு கொ-ள் ஊர்போல விரும்புவேன் என்றும், பிரிந்தவழி மக்கள் போகிய புலம்பில் போல, அலப்பென் எனறும் கூறினாள் என்பாரும் உளர். விரும்புவேன் என்றதற் கேற்ப முனிவேன் என்னுமையின் அது பொருளன் றென்க.

## பாட்டு - ௪௨ : தோழி

கூற்று

துறை:—இரவுக்குறி வேண்டிய கிழவர்க்குத் தோழி நேர்ந்த வாய்பாட்டான் மறுத்தது ; அஃதாவது, 'தலைவியை இரவுக்குறி

யிடத்தும் அடைதல் வேண்டும் அதற்கு ஆவன செய்க' எனத் தோழியைத்தலைவன் குறை யிரப்ப, அவள் அதற்கு உடன்படு வாள் போல மறுத்துக் கூறியது.

இதன்கண், 'தலைவ! காம நுகர்ச்சி ஒழிவதாயினும் எம் முடைய காதற் றொடர்பு எஞ்ஞான்றும் ஒழியுமியல்பிற்றன்று காண்' என்று தோழி கூறுகின்றாள்.

சஉ. காமம் ஒழிவ தாயினும் யாமத்துக்
கருவி மாமழை வீழ்ந்தென அருவி
விடரகத் தியம்பு நாடவெம்
தொடர்புந் தேயுமோ நின்வயி னானே.

—கபிலர்.

(இ - ள்) யாமத்துக் கருவி மாமழை வீழ்ந்தென-நள்ளிர வின்கண் தொகுதியையுடைய பெரிய மழை பெய்தது என்று,

அருவி விடரகத்து இயம்பும் நாட - அதனாற் பெருகிய அருவி நீர் வழிநாள் மலைமுழைஞசுகளிலே யாவரும் அறியத் தூற்றும் நாட்டையுடையவனே, காமம ஒழிவதாயினும் - காமப்புணர்ச்சி ஒரோவழி ஒழியுமாயினும, நின்வயின் எம் தொடர்புந்

தேயுமோ - அவ்வொழிவு காரணமாக நின்னிடத்து யாம் கொண்டுள்ள காதல் வளர்வதேயன்றித் தேய்ந்து அழியுமோ?

**விளக்கம் :**—காமம் என்றது, ஈண்டு மெய்யுறு புணர்ச்சியை. ஒழியுமாயினும் என்றது, யாண்டும் ஒழிவது மன்று, ஒரோவழிச் செவ்வி பெறாது ஒழியுமாயினும் என்றவாறு. எனவே - இரவுக்குறியில் தலைவியைப்பெறுதல் அரிது எனக் குறிப்பான் மறுத்தாளாயிற்று.

‘யாவரும் உறங்கும் இடையிரவிலே மழை பெய்ததாயினும் அதனாற் பெருகிய அருவி, மழை யுண்டென்று அறியாதாரையும் அறியக் காட்டி வழிநாள் முழைஞ்சுகளிலே முழங்கினாற் போன்று, நீ இரவின்கண் யாருமறியாது இவளைக் கூடிப் பிரிவாயாயினும் அதனாலுண்டாகிய வேறுபாடு வழிநாள் பலரும் அறியத்தூற்றும் என்னும் உள்ளுறை கருதி, யாமத்துக் கருவி மாமழை வீழ்ந்தென அருவி விடரகத்து இயம்பும் நாட’ என்றாள் என்க. இதனால் இரவுக்குறி மறுத்தமைக்கு ஏதுக் காட்டியவாறு.

கருவி - மின் இடி முதலிய தொகுதி என்க. விடரகம் - மலை முழைஞ்சு. இயம்புதல் - கூறுதல் போன்று ஒலித்தல். மழையுண்மையை அருவியானறிதல் கருதலளவையின்பாற்படும். தொடர்பு என்றது, காதற்றொடர்பினை. தேயுமோ என்ற வினா தேயாது வளரும் என்னும் பொருட்டு. இது தலைவனுக்குக் குறைநேர்வாள் போலத் தோன்றுமாறுணர்க.



## பாட்டு - சுரு : தலைவி கூற்று

துறை :—பிரிவிடை மெலிந்த கிழத்தி சொல்லியது. அஃதாவது தலைவன் பிரிவினால் ஆற்றாமை மிகக தலைவி (தனவருத் ததகிற்குத்தானே காரணம எனத) தோழிக்குக் கூறியது.

இதன்கண், 'தலைவர் பிரியார் என்னுந் துணிவால் யான்

வாளாவிருந்தேன். அவரோ, ஆறறுள் எனக் கருதிக் கூறாது பிரிந்தார். இவ்வாற்றால் யான் இப்போது பெரிதும் துன்புறுகின்றேன்' எனத் தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

சரு. செல்வார் அல்லரென் றியானிகழ்ந் தனனே
ஒல்வாள் அல்லளென் றவரிகழ்ந் தனரே
ஆயிடை, இருபே ராண்மை செய்த பூசல்
நல்லராக் கதுவி யாங்கென்
அல்லல் நெஞ்சம் அலமலக் குறுமே.

—ஔவையார்.

(இ - ள்.) செல்வார் அல்லர் என்று யானிகழ்ந்தனனே- தலைவர் நம்மைப் பிரிந்து போகார் என்னும் துணிவாலே யான்

செலவழுங்குவித்தலில் சோர்ந்திருந்தேன், ஒல்வாள் அல்லள் என்று அவர் இகழ்ந்தனர் - பிரிவுணர்த்தின் இவள் உடம்படு வாளல்லள் என்று கருதி அவர் பிரிவுணர்த்தலில் சோர்ந்தனர், ஆயிடை - அவ்வழி, இருபோ ஆண்மை செய்த பூசல்-இருவரி டத்தும் உளவாகிய ஆண்மைகள காரணமாக நிகழ்ந்த பூசலாலே, நல் அராக் கதுவியாங்கு - நல்லபாம்பு கடித்தாற் போன்று, என் அல்லல் நெஞ்சம அலமலக்குறும் - வருந்தா நின்ற என் நெஞ்சம் மேலும் சுழலா நிற்கும்.

**விளக்கம்:**—நசை பெரிதுடைய பேரன்பினர் ஆதலால், என்னை வருந்தும்படி விட்டுப் பிரிவாரல்லர் என்னும் நம்பிக்கையால் யான் சோர்ந்திருந்தேன் என்பாள், 'செல்வாரல்லா என்று யானிகழ்ந்தனன்' என்றாள். இகழ்தலாவது, செயத்தக்கதொன்றனைச செய்யாது சோாந்துவிடுதல். செயத்தக்க செய்யாது கெட்டேன் என்று இரங்கிய வாறு. ஒல்வாளல்லள் - உடம்படுவாளல்லள். யான் சோர்தவிடத் தும் அவர் பிரிவுணர்த்தியிருப்பரேல், அப்பொழுது விழிப்புற்று அழுங்குவிப்பேன். அவரோ யான் உடம்படமாட்டேன் என்று அறிந்து, பிரிவுணர்ததாது பிரிந்தார் என்பாள், 'ஒல்வாளல்லள் என்று அவரிகழ்ந்தனர்', என்றாள். ஆயிடை என்றது, அவ்வாறு இருவரும் இகழ்ந்தவிடத்தென்றவாறு.

பூசல் - ஈண்டுப் பிரிவுந்துன்பம். இருபேர் - இரண்டு பெயர்; இருவர் என்றவாறு. பேர் என்பதை ஆண்மைக்கு அடையாக்குவாரு முளர். ஆண்மை - ஆளுந்தன்மை. ஈண்டுச் செல்வார் அல்லர் என்னுங்

துணிவை ஆளுந்தன்மையும், அன்புடையாளைப் பிரியும் வன்கண்மையை ஆளுந தன்மையும் என்னும் இரண்டு ஆண்மையும் என்க. இவ்வாண்மைகளாலே விளைந்த பூசலாகவின் அவற்றின் செயல் என்றாள். பூசல் - ஈண்டுத் துன்பம் என்னும் பொருட்டு. இனிப்பூசல் என்பதனைப் போர் என்றுகொண்டு இரண்டு ஆண்மைகளும் செய்த போரினால் என்பாரும் உளர். அவை போர செய்தனவென்றல் பொருந்தாமை யுணர்க.

நல்லரா - நல்ல பாம்பு. கதுவுதல் - கவ்வுதல்; ஈண்டுக்கடித்தல் என்னும் பொருட்டு. ஆங்கு, உவமவுருபு. அல்லல் நெஞ்சம் என்றது பிரிவால் இயல்பாகவே வருந்தும் நெஞ்சம் என்றவாறு அலமலக்குறும் - சுழலும். அலமரல் என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்தது போலும். அல்லல் நெஞ்சம் மேலும் அலமரும் என்க.

## பாட்டு - ௯௯ : செவிலித்தாய் கூற்று

துறை :—இடைச்சுரத்துச் செவிலித்தாய் கையற்றுச் சொல்லியது. அஃதாவது, இயற்கைப்புணர்ச்சிக்குப் பின்னர்த் தலைவி தலைவனுடன் தமர் அறியாது போயினளாக, அவளைத் தேடிச்சென்ற செவிலி, பாலைநிலத்தே பெரிதும் வருந்திக் கூறியது.

இதன்கண், செவிலி, என் கால்கள் நடக்கமாட்டாவாய்த்

தளர்ந்தன; கண்கள் கூர்ந்து நோக்கி நோக்கி ஒளி மழுங்கின; எண்ணிறந்தார் பிறரை யான் எதிரே கண்டேன் எனினும் அவரைக் கண்டிலேனே என்று வருந்திக் கூறுகின்றாள்.

சசு. காலே பரிதப் பினவே கண்ணே
நோக்கி நோக்கி வாளிழந் தனவே
அகலிரு விசும்பின் மீனினும்
பலரே மன்றவிவ் வுலகத்துப் பிறரே.
—வெள்ளி வீதியார்.

(இ - ள்.) காலே பரிதப்பின - என் கால்கள் நடந்து நடந்து செலவு தடுமாறின, நோக்கி நோக்கிக் கண் வாளிழந் தன - கண்கள் சேய்மையில் வருவாரைக் கூர்ந்து பார்த்துப் பார்த்துத் தம்புலனாகிய ஒளியை இழந்தன, மன்ற - தேற்றமாக, இவ்வுலகத்துப் பிறர் அகல் இரு விசும்பின் மீனினும் பலர் - இந்நிலவுலகத்து என் மகளும அவள் தலைவனும் அல்லாதார் அகன்ற பெரிய வானத்திலுள்ள மீன்களினும தொகையானே மிக்கவராவார்.

**விளக்கம்**:—பரி - செலவு, தப்புதல் - மாட்டாவாதல். நடந்து நடந்து இளைத்து இனி நடக்கவும் இயலாதவளாயினேன் என்றவாறு. எதிரே சேய்மையில் வருவாரை இவர் அவரோ என ஐயுற்று. அவர்

அண்மையில் வருந்துணையும் கூர்ந்து கூர்ந்து நோக்கினேன் என்பாள் 'நோக்கி நோக்கி' என்றாள். வாள் - ஒளி. அதனை யிழத்தலாவது கண்கள் தமக்குரிய அவ்வொளிப்புலனைக் கொள்ளமாட்டா தொழிதல். யாதாமொரு பொருளைக் கூர்ந்து நோக்கியவழிக் கண்கள் ஒளியிழத்தல் ஆண்டான் முதிர்ந்தார்க்கு இயல்பு.

தன் மகளும் அவள் தலைவனுமோ என்று எண்ணி எண்ணி அருகிற்சென்று எண்ணிறந்தோரைப் பார்த்தேன், அவரை மட்டும் கண்டேனில்லை என்பாள், 'மீனினும் பலர் உலகத்துப் பிறர்' என்றாள்.

இச்செய்யுளை வெள்ளி வீதியார் என்னும் நல்லிசைப்புலமையாட்டியார், தம் கணவனைக் காணாது தேடிய பொழுது அவனைக் காணாதயர்ந்து பாடினர் என்ப. இது சுட்டி ஒருவர் பெயா கூறப்படாமையால் இந்நூலின்கட் கோக்கப்பட்டதென்க. வெள்ளி வீதியார் தம் கணவனைத் தேடிய செய்தியை அவரே,

"யானே காதலற் கெடுத்த சிறுமையொடு நோய்கூர்ந்து
ஆதிமந்தி போலப் பேதுற்று அலந்தனன் உழல்வேன்
கொல்லோ "

என அகத்திற் கூறும் குறிப்பானும், உணர்க. (அகம் - சுகூ.)

## பாட்டு - சரு : தோழி கூற்று

துறை :—தலைமகற்குப் பாங்காயினர் வாயில் வேண்டிய
வழித் தோழி வாயில் நேர்ந்தது. அஃதாவது, பரத்தையிற் பிரிந்த தலைவன் ஊடிய தலைவியின்பால் தூதரைவிட, அவர் சென்று தலைவியை ஊடல் தீரும்படி வேண்டினராகத் தோழி தலைவி ஊடல் தீர்ந்தமை கண்டு அதனைத் தூதர்க்குக் கூறியது.

இதன்கண், தலைவன் பெரிதும் கொடுமை செய்திருப்பவும் அதனைப் பாராட்டாமல் தலைவி வாயில் நேர்ந்தாள். இங்ஙனம்
கொழுநன் குறையைப் பாராட்டாமை
மாகும். குடிப்பிறத்தலும் கொடிதே
குடிப்பிறந்தார் குண
எனத் தோழி கூறு
கின்றாள்.

சஉ. காலை யெழுந்து கடுந்தேர் பண்ணி
வாலிழை மகளிர்த் தழீஇய சென்ற
மல்ல லூரன் எல்லினன் பெரிதேல்
மறுவருஞ் சிறுவன் தாயே
தெறுவ தம்மவித் திணைப்பிறத் தல்லே.

—ஆலங்குடி வங்கனர்.

(இ - ள்.) காலை எழுந்து - நாட்காலையிலேயே விழித்தெழுந்து, கடுந்தேர் பண்ணி - விரைந்து செல்லுமியல்பினையுடைய தேரினை ஒப்பனைசெய்து, வாலிழை மகளிர்த் தழீஇய

மூலமும் உரையும்

கூள

சென்ற - தூய அணிகலன்களையுடைய பரத்தையரைத் தழுவப் போன, மல்லலூரன் எல்லினன் பெரிதேல் - வளப்பமிக்க வூரையுடைய தலைவன் பெரிதும் விளக்கமுடையனாயின், சிறுவன் தாய் மறுவரும் - மகப்பயந்த தாய்மைத் தன்மையுடைய தலைவி உளம் சுழல்வாள், இத்திணைப் பிறத்தல் தெறுவது - இவ்வுயர் குடிப்பிறத்தல் துன்பந்தருவதேயாம்.

**விளக்கம்** :—காலை எழுந்தென்றது, தலைவன் பரத்தையர் இல்லிற் கேகுதலின்கண் பெரிதும் விருப்பமுடையான் என்று குறிப்பான் இகழ்ந்தவாறு. கடுந்தேர் - விரைந்து செல்லுதற்குரிய நல்லுறுப்புக்களும் நல்ல குதிரையும் உடையதாய் விரைந்தோடும் தேர். கடுந்தேர் என்றதும் அவன் உள்ளம் பரத்தையர்பால் விரையுந்தன்மை நினைந்துரைத்ததாம். பண்ணி - ஒப்பனை செய்து. வாலிழை மகளிர் என்

றது பரத்தையரை; இழை தூயரல்லால் உளர்தூயரல்லாப் பரத்தையர் என்றவாறு. தழீஇய - தழுவற்பொருட்டு. தான் தழுவவிரும்புவதல்லால் அவர் தழுவ விரும்பார் என்றவாறு. இதனைப் "பொருட் பெண்டிர் பொய்ம்மை முயக்கம்", (கககஅ) என்னுந் திருக்குறளானும் உணர்க. மல்லலூரன் - மருதநிலத்தலைவன். எல்வினன் - விளக்கம் உடையன். பெரிதென என்றும் பாடம். தலைவன் பரத்தையோடாடிய மகிழ்ச்சியால் மெய்ப்பாடுற்று விளங்குதலைக் காண்பாளேல் சிறுவன் தாய் மன மறுவரும் என்க. மறுவருதல் - சுழலுதல். மனம் சுழல்வாள் ஆயினும் ஏற்றுக்கொள்வாளாயினள்; இஃதவள் குடிப்பிறப்பானுண்டாய பண்பு. குடிப்பிறந்தார் மனம் வருந்தியும் கடமை செய்யவேண்டுதலின், அது துன்பந்தருவதாயிற்றென்க. குலமகளிர் தலைவர் குறை பாராட்டாது ஏற்றுக்கொள்ளும் இயல்புடையராதலே,

> "சேக்கை யினியார்பாற் செல்வான் மனையாளாற்
> காக்கை கடிந்தொழுகல் கூடுமோ கூடா
> தகவுடை மங்கையர் சான்றாண்மை சான்றார்
> இகழினும் கேள்வரை ஏத்தி இறைஞ்சுவர் "

(உ0: அகூ - து) எனவரும் பரிபாடலானும் உணர்க.

தெறுவது - துன்பந்தருவது. பிறத்தல் தெறுவது என்க. சிறுவன் தாய் என்றாள், தலைவன் இழத்தியாம் கேண்மையை நீத்தொழுகலின். இனிச் சிறுவன் தாய் என்றது, பரத்தையர் அறிவறிந்த நன் மக்கட்பேற்றிற்கு ஆகாமையைக் குறிப்பாற் கூறியவாறுமாம்.

## பாட்டு - சகூ : தலைவி

கூற்று

துறை:—பிரிவிடை ஆற்றாள் எனக்கவன்ற தோழிக்குக் கிழத்தி ஆற்றுவலென்பதுபடச் சொல்லியது; அஃதாவது, தலைவன் பிரிந்த காலத்தே தலைவி இப்பிரிவை ஆற்றுளோ எனத் தோழி கவல்வதை அறிந்த தலைவி 'நீ கவலற்க! யான் ஒருசில நாட்களானே ஆற்றியிருக்க வல்லேன் ஆயினேன்', என்று கூறியது.

சுஅ குறுந்தொகை

இதன்கண், 'தோழி நமக்கின்னு செய்யும் புன்கண் மாலையும் தனிமையும் அவர் சென்ற நாட்டில் அவர்க்கும் உளவாக லான் அவர் நம்மை நினைந்து வருவர் என, யான் ஆற்றியிருக்கின்றேன்' என்று தலைவி கூறுகின்றுள்.

சசு. ஆம்பற் பூவின் சாம்ப லன்ன
கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ
முன்றில் உணங்கல் மாந்தி மன்றத்து
எருவினுண் தாது குடைவன ஆடி
இல்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு
வதியும்
புன்கண் மாலையும் புலம்பும்
இன்றுகொல் தோழியவர் சென்ற நாட்டே.

(இ - ள்.) தோழி—, ஆம்பல் பூவின் சாம்பல் அன்ன - ஆம்பல் பூவினது வாடலை ஒத்த, கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ - குவிந்த சிறகுகளையுடைய இல்லத்தே தங்குதலையுடைய குருவிகள், முன்றில் உணங்கல் மாந்தி - முற்றத்திலே உலரவைத்த புழுங்கலைத் தின்று, மன்றத்து - மன்றத்தின்கண் உள்ள, எருவின் நுண் தாது குடைவன ஆடி - எருவாகிய நுண்ணிய துகளிலே குளிப்பனவாய் விளையாடி, இல் இறைப்பள்ளி தம் பிள்ளையொடு வதியும் - இல்லத்தே இறப்பின்கண் சேக்கையில் தம்முடைய குஞ்சுகளோடு தங்குதற்குக் காரணமான, மாலையும் புலம்பும் புன்கண் - மாலைக்காலமும் தனிமையும் தரும் வருத்தம், அவர் சென்ற நாட்டு இன்றுகொல் - தலைவர் சென்றுள்ள நாட்டின் கண்ணே இலதேயோ?

**விளக்கம்:**—'இங்கு எனக்கு மாலையானும் தனிமையானும் வரும் புன்கண், அவர்க்கும் உளதாகலின் நம்மை நினைந்து விரைவின் வருவர் என யான் ஒருவாறு ஆற்றியிருக்கின்றேன் ஆதலால் தோழி நீ கவலற்க.' என்பதாம்.

சாம்பல் - பூவாடல். ஆம்பற்பூவின் வாடலைச் சிட்டுக்குருவியின் குவிந்த சிறகுக்கு உவமை கூறியது உணர்ந்து இன்புறற்பாலது. சிட்டுக்குருவி மனையிறப்பில் உறையும் இயல்புடையதாகலின், 'மனையுறை குரீஇ' என்றாள். மனையுறை குரீஇ என்றது, பெயர் மாத்திரையாய் நின்றது. குரீஇ - குருவி. முன்றில் - முற்றம். உணங்கல் - ஈண்டு உலரவைத்த புழுங்கல் நெல்லைக்குறித்து நின்றது; பிற கூலங்களுமாம். மாந்தி - தின்று. மன்ற தெருவின் நுண்டாது எனப் பாடங்கொண்டு "தேற்றமாக வீதியிடத்தே புழுதியாடி" என்பாருமுளர்; மன்றத்தின்கண் எருத் தாதுளவாதலை 'தாதெரு மன்றம் தானுடன் கழிந்து' (சிலப் - கசு : கoஉ) என்பதனானும் அறிக. நுண் தாது - நுண்ணிய துகள். சிறு குருவிகள் நுண்தாது அல்லது புழுதி

யிற் குடைந்தாடுதல் இயல்பு.
உறையும் சேக்கை.

இறைப்பள்ளி - இறப்பின்கட் குரீஇ

பிள்ளை - ஈண்டுப்பார்ப்புகள். பறவைக்குஞ்சினைப் பிள்ளை என்னும் மரபுண்மையை"

"அவற்றுட்
பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை"

(மரபு - சூ : ச)

எனவரும் தொல்காப்பியத்தானும் உணர்க. இன்றுகொல் - என்னும் ஒருமையோடியைய மாலையும் புலம்புக்தரும் புன்கண் என மாறுக. இன்று என்பதனை இரண்டனோடும் தனித்தனிக் கூட்டியுரைப் பாருமுளா.

## பாட்டு - சஎ : தோழி கூற்று

துறை :—இரவிவைநதொழுகுங்காலை

முன்னிலைப் புறமொழி யாக நிலாவிற்கு உரைப்பாளாகத் தோழி உரைத்தது. அஃதாவது, இரவுக் குறியிடத்தே தலைவியைக் காண வந்த தலைவன் கேட்கும்படி நிலவை நோக்கி இரவுக்குறி மறுத்தமை குறிப் பாய்த் தோன்றும்படி தோழி கூறியது.

இதன்கண், தோழி நிலவை நோக்கி 'நெடு வெண்ணிலவே! நீ தலைவன் இரவுக்குறியிடத்தே தலைவியை எய்துதற்கு நல்லை யல்லை' என்று கூறுகின்றாள்.

சஎ. கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்
இரும்புலிக் குருளையின் தோன்றுங் காட்டிடை
எல்லி வருநர் களவிற்கு
நல்லை யல்லை நெடுவெண் ணிலவே

—நெடுவெண்ணிலவினார்.

(இ - ள்.) நெடு வெண் நிலவே - நெடிய வெண்ணிற நிலாவே, கருங்கால் வேங்கை வீ யுகு துறுகல் - வலிய தாளை யுடைய வேங்கை மரத்தின் பூக்கள் உதிரப்பட்ட பொற்றைக்கல், இரும்புலிக் குருளையின் தோன்றும் காட்டிடை - பெரிய புலி யினது குட்டிபோலக் காணப்படும்

காட்டின் நடுவிலே, எல்லி

வருநர் களவிற்கு நல்லை அல்லை - இரவின்கண் வந்தொழுகும் தலைவர களவொழுக்கத்திற்கு நீ நன்மை விளைப்பாயல்லை.

**விளக்கம்** :—கருமை - ஈண்டு வன்மை குறித்து நின்றது. கால் - அடி மரம். வேங்கை - ஒருமரம். வீ - பூ. கரிய துறுகல் மேலே வேங்கைப்பூ உதிர்ந்து கிடத்தலால் அக்கல் நோக்குவார்க்குப் புலிக் குட்டிபோலத் தோன்றும் என்க. துறுகல் - புலிக்குட்டி போன்றும், அதன்மேல் உதிர்ந்த வேங்கைப் பூக்கள் புலிக்குட்டியின் வரிகள்



போன்றும் தோன்றும் என்க. அஞ்சவேண்டாத பொருள்களும் அசசஞ்செய்யும் காடு என்றவாறும். எல்லி - இரவு. "எல்லியம்போது வழங்காமை முன்னினிதே" (இனியது - கூ) என்புழியும், அஃதப் பொருட்டாதல் அறிக. தாய் துஞ்சாமை, ஊர் துஞ்சாமை, காவலர் கடுகுதல், நிலவு வெளிப்படுதல், நாய் துஞ்சாமை முதலியன, இரவுக் குறிக்கண் நிகழும் இடையூறுகளாம். இவற்றை,

"இரும்பிழி மகாஅரிவ் வழுங்கல் மூதூர்
விழவின் றாயினும் துஞ்சா தாகும்
மல்லல் லாவண மறுகுடன் மடியின்
வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்
பிணிகோ ளருஞ்சிறை அன்னை துஞ்சின்
துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்
இலங்குவேல் இளையர் துஞ்சின்
வையெயிற்று

வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழும்
அரவவாய்ஞமலி குரையாது மடியில்
பகலுரு உறழ நிலவுக்கான்று விசும்பின்
அகல்வாய் மண்டிலம் நின்றுவிரியும்மே"

(கஉஉ) எனவரும் அகப்பாட்டானும் உணர்க.

களவிற்கு நல்லை அல்லை என்றது. இரவின்கண் தலைவன் வருங்கால் அஞ்சுதகுந வல்லாத் துறுகல் முதலியவற்றை அஞ்சுதகுநவாகக் காட்டுதலும், அவன் வருகையைப் பிறர் காணுமாறு செய்தலும் உடையை ஆகலான், நல்லையல்லை என்றவாறு. இனிக் களவிற்கு நல்லையல்லை எனவே கற்பிற்கு நீ மிகவும் நல்லை என்பது குறிப்பாற் போதருதலின், இரவுக்குறி மறுத்து வரைவு கடாவினள் ஆதலும் உணர்க.

நெடு வெண்ணிலவென்றதன்கண், நெடுமை, காலம் நீளுதலைக் குறித்தது. விரைவின் மறைவாயுமின்றி இரவெல்லாம் விளங்கும் நில வென்பாள் நெடு வெண்ணிலவென்றாள்

## பாட்டு - சஅ : தோழி கூற்று

துறை :—பகற்குறிக்கட் காணும்பொழுதினும் காணாப் பொழுது பெரிதாகலின், வேறுபட்ட கிழத்தியது வேறுபாடு கண்டு தோழி சொல்லியது அஃதாவது, பகற்குறிக்கண் தலைவன் தலைவியொடு

பழகுவானாயினும், அதற்குரிய செவ்வி பெற்றுக் கூடும்பொழுது சிறிதாகவும் பிரிந்துறைபொழுதே பெரிதாகவும் இருத்தலால், அப்பிரிவையும பொறாது வருந்திய தலைவியின் வருத்த மிகுதி கண்டு தோழி கூறியது.

இதன்கண், தலைவி, ஆயமகளிரோடாடலும் அயர்த்து, இடையறாது வருந்துவாளாயினள். 'இவ்வருத்தந்தீரும் மருந்



தாகிய நகையாகு பண்பின் ஒரு சொல்லை அருளித் தலைவர் இவள் வருத்தந் தீரார் கொல்லோ?' எனத் தோழி கூறுகின்றாள்.

சஅ. தாதிற் செய்த தண்பனிப் பாவை
காலை வருந்துங் கையா றோம்பென
ஓரை யாயங் கூறக் கேட்டும்
இன்ன பண்பி னினைபெரி துழக்கும்
நன்னுதல் பசலை நீங்க வன்ன
நகையாகு பண்பின் ஒருசொல்
இசையாது கொல்லோ காதலர் தமக்கே.

—பூங்கணுத்திரையார்.

(இ-ள்.) தாதில் செய்த தண்பனிப் பாவை - பூந்தாதாலே செய்யப்பட்டதாய்க் குளிர்ந்த பனியிடத்தே கிடந்த விளையாட்டுப் பாவை, காலை வருநதுமை கையாறு ஓம்பென - காலை வெயிலிற் கிடந்துமுறுகும வருததமாகிய கையறவினைப் பரிகரித்துக் காப்பாயாக என்று, ஓரை ஆயம கூறக்கேட்டும் - விளையாட்டு மகளிர் சொல்லுதலைக் கேட்டிருந்தும அது செய்யாளாய், இன்ன பண்பின் இனை பெரிது உழக்கும - இத்தகைய தன்மை யோடே துன்பம் பெரிதும எய்தாநிற்கும், நன்னுதல் பசலை நீங்க - நல்ல நுதலையுடைய இத்தலைவியின் பசலை நீங்கும்படி, அன்ன நசையாகு பண்பின் ஒருசொல - அததகைய விருப் பத்தை உண்டா கும் தன்மையையுடைய ஒரோ ஒருசொல் கூறுதல், காதலர் தமக்கு இசையாது கொல் - இந்நோய் தந்த காதலருக்கு இயலாததேயோ.

**விளக்கம்** :—தாது - பூந்தாது. பூந்தாது முதலியவற்றாற் செய்த பாவை, தண்பனியிலே கிடக்கும் பாவை எனத் தனித்தனிக் கூட்டுக. காலை வருந்தும் கையாறு என்றது, காலைவெயிலிலே கிடந்து முறுகும் துன்பம் என்றவாறு; பாவையைப் பிள்ளையாகக்கொண்டு போற்றுத லான், அது காலைவெயிலிற் கிடந்து முறுகுதலைப் பிள்ளையுறும் துன்ப மாகக் கருதிக் கையாறு என்றாள். கையாறோம்பலாவது அப் பாவையை எடுத்து அது அழுமாறுபோலக்கொண்டு அவ்வழுகை தணியப்பாராட்டுதல். விளையாடும் மகளிர் பாவையைத் தலைவியின்

மகவாகப் பாவித்துக் குழந்தை வெயிலிற்கிடந்து அழுகின்றது, அதனை எடுத்து ஒலுறுத்தி அழுகை தணிப்பாய் எனக் கூறக்கேட்டும், அது செய்யாளாய் வருந்துகின்றாள் என்றவாறு. இங்ஙனம் விளையாடுதல் மகளிர் இயல்பு. எனவே தலைவி ஆய மகளிரோடே இருந்தும் விளையாட்டில் மனம் வையாது தலைவனையே நினைத்துப் பெரிதும் வருந்தா

நின்றாள் என்றாளாயிற்று.

முன்னெல்லாம் தானே பாவையை எடுத்து ஒலுறுத்திப் பாராட்டியவள் இப்போது மகளிர் கூறக்கேட்டும் செய்திலள் என்பாள் கூறக்



கேட்டும், என்றாள். கேட்டும் அது செய்யாது இனைபெரிதுழக்கும் நன்னுதல் என்க. தலைவியின் மெலிவினைத்தானே கண்கூடாகக் கண்டு நிற்கின்றாளாகலின், இன்ன பண்பின் எனச்சுட்டிக் கூறினாள். இன்ன பண்பின் இனை - இங்ஙனம் செய்யுந்தன்மையுடைய வருத்தம். நன்னுதல்: அன்மொழித்தொகை. முன்னர் நன்றாயிருந்த நுதலின்கட் பசலையை நோக்கி நன்னுதல் பசலை நீங்க என்றாள். பசலை - மகளிர்க்குப் பிரிவாற்றாமையான் வருவதோர் நிறவேறுபாடு.

அன்ன நசை - அத்தகைய விருப்பம். முன்னர் இன்ன பண்பின் இனை என்றாள் ஆகலின், இத்தகைய இனை நீங்க அத்தகைய விருப்பமாகின்ற ஒருசொல் என்றாள். அத்தகைய விருப்பமாவது பிரிவின்றி உடனுறைதல் வேண்டும் என்னும் விருப்பம். அதனைத்தரும் ஒருசொல் ஆவது "நின்னை வரைந்து கொள்வேன்காண்" என்னும் சொல். பலப்பல சொல்லி நலம்பாராட்டும் தலைவர்க்கு இச்சொல் ஒன்று கூறுதல் இயலாதோ என்றபடி.

இனி இசையாது கொல்லோ என்பதற்குப் பசலையை வினை முதலாக்கிப், பசலை தலைவர் தமக்கு ஒருசொல் இசையாதோ என்பாரும் உளர்.

## பாட்டு - சக : தலைவி கூற்று

துறை :—தலைமகன் பரத்தைமாட்டுப் பிரிந்தவழி ஆற்றாளாகிய தலைமகள், அவனைக் கண்டவழி அவ்வாற்றாமை நீங்குமன்றே ; நீங்கியவழிப் பள்ளியிடத்தானாகிய தலைமகற்குச் சொல்லியது. அஃதாவது, தலைவன் பரத்தையர் மாட்டுச் சென்றான் ; அவ்வழித் தலைமகள் ஆற்றாமை மிக்கு வருந்தியிருந்தாள் ; தலைவன் மீண்டுவந்ததைக் கண்டு ஆற்றாமை நீங்கி மகிழ்ந்தாள் : புணர்ச்சிக்குப்பின் தன்னோடேயிருந்த தலைவனை நோக்கி மகிழ்ச்சி மிகுதியால் தலைவி கூறியது.

இதன்கண், 'சேர்ப்பனே ! இப்பிறவி மாறி மறுபிறப்புக் கூடியவிடத்தும் நீயே என் கணவனாகக்கடவை ; யானே நினது காதலியாகக்கடவன் ; பால்வரை தெய்வம் அங்ஙனமே கூட்டுவதாக' என்கிறாள்.

சக. அணிற்பல் அன்ன கோங்குமுதிர் முண்டகத்து
மணிக்கேழ் அன்ன மாநீர்ச் சேர்ப்ப
இம்மை மாறி மறுமை யாயினும்
நீயா கியரென் கணவனை
யானா கியர்நின் னெஞ்சுநேர் பவளே.

—அம்மூவனார்.

(இ - ள்.) அணில் பல் அன்ன கொங்கு முதிர் முண்டகத்து - அணிலின் பல்லையொத்த முட்களையுடைய தாது



முதிர்ந்த முள்ளிச்செடிகளையும், மணிக்கேழ் அன்ன மாநீர்ச் சேர்ப்ப - நீலமணியினது நிறத்தை ஒத்த கரிய நீரையுமுடைய கடற்கரையையுடைய தலைவனே, இம்மை மாறி மறுமையாயினும் - இப்பிறப்பு நீங்கி நமக்கு மறுபிறப்பு எய்துமிடத்தும்,

என் கணவன நீ ஆகியர் - என் காதலங்கேள்வன் நீயே ஆகுக, நின் நெஞ்சு நேர்பவள் - நின் உளமொத்தவள், யான் ஆகியர் - யானே ஆகுக.

**விளக்கம்** :—முண்டகம்-முள்ளிச்செடி என்னும் பொருட்டாகலான், அணிற்பல்லன்ன முள் முண்டகம் என்றது, வாளா முண்டகம் என்றார். அணிற்பல்லன்ன முள்ளையுடைய முண்டகம் என்க. முண்டகம் - கழி முள்ளி. கொங்கு - பூந்தாது. அணிற்பல்லன்ன முள்ளும் கொங்கும் உடைய முண்டகம்போலப் பரத்தமையும், இல்லறவொழுக்கமும் ஒருசேர உடையையாயினும் நீயே என் கணவன் ஆகுக என்றவாறும். நெஞ்சு நேர்தல் குலமகளிர்க்கன்றி பரத்தையர்க்கின்மை குறித்து, மறுமைக் கண்ணும் நீ பரத்தமையுடையை யாயினும் நெஞ்சு நேர்பவள் யானாகியர் என்றாள். குலமகளிர்க்கு நெஞ்சு நேர்வார் கணவரையின்றிப் பிறரின்மையின் நெஞ்சு நேர்பவன் என்றது கணவன் என்றாள். கணவனை என்புழி இறுதியினின்ற ஐ-சாரியை நீ பரத்தமையுடையை யாயினும் நின்கேண்மையை யான் பிறவிகடோறும் விரும்புகின்றேன் என்றவாறு.

இது தலைமகன் நலம் பாராட்டியவழித் தலைவி கூறியது எனக் கருதுவாருமுளர்.

## பாட்டு - ௫௦ : தலைவி கூற்று

துறை :—கிழவர்க்குப் பாங்காயின வாயில்கட்குக் கிழத்தி கூறியது. அஃதாவது, தலைவன் ஊடியிருந்த தலைவியின் ஊடல் நீக்கத் தூதுவிட்டபொழுது அத்தூதுவர்க்குத் 'தலைவன் தகாத வொழுக்கினன்' எனத் தலைவி கூறியது.

இதன்கண், 'தலைவர் தம்பரத்தமையால் தாம் ஆடுந் துறையை அழகுபடுத்தினர்; தாம மணந்த என் தோளை மெலி

வித்தனர்' எனத் தலைவி கூறுகின்றாள்.

௫௦. ஐயவி அன்ன சிறுவீ ஞாழல்
செவ்வீ மருதின் செம்மலொடு தாஅய்த்
துறைஅணிந் தன்றவ ரூரே யிறையிறந்
திலங்குவளை ஞெகிழச் சாஅய்ப்
புலம்பணிந் தன்றவர் மணந்த தோளே.

—குன்றியனார்.

(இ - ள்.) ஐயவி அன்ன ஞாழல் சிறுவீ - வெண்சிறு கடுகை ஒத்த ஞாழலினது சிறிய பூக்கள், செவ்வீ மருதின்



செம்மலொடு தாஅய்-சிவந்த பூக்களையுடைய மருத மரத்தினது வாடற்பூவோடு பரந்து, அவர் ஊர் துறை அணிந்தன்று - தலைவருடைய ஊரின் கண்ணதாகிய நீர்த்துறையை அழகு செய்யாநின்றது, அவர் மணந்த தோள் - அத்தலைவரால் மணக்கப்பட்ட என் தோளோ எனில், இலங்குவளை இறையிறந்து ஞெகிழச் சாஅய் புலம்பு அணிந்தன்று-விளங்காநின்ற வளையல் முன்கையினீங்கிக் கழலும்படி மெலிந்து தனிமைத்தன்மையையே பூண்பதாயிற்று.

**விளக்கம்** :—ஐயவி - வெண்சிறுகடுகு. இது ஞாழற்பூவிற்கு உவமை. சிறுவீ - சிறியபூ. ஞாழல் - ஒருமரம். ஞாழற் சிறுவீ என மாறுக. செவ்வீ - சிவந்தபூ மருது - மருதமரம். செம்மல் - வாடற்பூ. தாஅய் - பரந்து. துறை - நீராடுந் துறை. அணிந்தன்று - அழகு செய்தது. இறை - முன்கை. ஞெகிழ்தல் - நெகிழ்தல்; கழலுதல். சாஅய் - மெலிந்து. புலம்பு - தனிமை.

தலைவர் பரத்தையரோடு ஆடுதலானே நீர்த்துறையில் ஞாழற் பூக்கள் சிதறி அழகு செய்தது. என் தோள்கள் பிரிவாற்றாமையாலே மெலிந்தன என்றவாறு. புலம்பு அணிதலாவது, தனித்திருக்கும் தன்மையை விளங்கவுடைத்தாதல். என்னைத் தலைவர் புறக்கணித்து அடாது செய்கின்றனர் என்று புலந்தபடியாம்.

தலைவர் தனக்கு ஏதிலர் ஆயினர் என்பது தோன்ற, எம்மூர் எனனாது அவர் ஊர் என்றாள்.

இனி, தலைவர் பிரிந்தமையால் என்னாற் சூடப்படாது ஞாழற்பூ வாடியுதிர்ந்து நீர்த்துறையிலே பரந்து அணிந்தது. என் தோள்கள் மெலிந்தன எனினுமாம், ஞாழற்பூவினை மகளிர் சூடும் வழக்கத்தினைக்.

“ கொழுநிழல் ஞாழன் முதிரிணர் கொண்டு
கழும முடித்துக் கண்கூடு கூழை
சுவன்மிசைத் தாழ்தொடு தாழ, அகன்மதி
தீங்கதிர் விட்டது போல முகனமர்ந்து
ஈங்கே வருவாள் இவள் யார் கொல்.” (கலி -
ருசு)

எனவரும் கலியானும் உணர்க.

## பாட்டு - ருக : தோழி கூற்று

துறை :—வரைவு நீட்டித்தவிடத்து ஆற்ருளாகிய தலை

மகட்குத்தோழி கூறியது அஃதாவது, தலைமகன் மணம் செய்து கொள்ளுதற்கு வேண்டியவற்றை முயன்று செய்யாநிற்கவே காலம் நீளுதல் பொருத தலைவி, பெரிதும் வருந்தினுளாக, 'மணவினைக் குரியன நிகழ்கின்றன ; அண்மையில் நிகழும். அதுகாறும் ஆற்றியிரு ' எனத் தோழி தலைவிக்குக் கூறியது.

### மூலமும் உரையும்

எகு

இதன் கண், 'தலைவனை யானும் பெரிதும் விரும்புகின்றேன்; நற்ருயும் விரும்புகின்ருள் ; தந்தையும் அவனுக்கே உன்னைக் கொடுக்க விரும்புகின்ருர் ; அலர் தூற்றும் இவ்வூர் தானும் அவனெடு நின்னைத் தொடர்பு படுத்தியே தூற்ரு நிற்கும் ; இவ்வேதுக்களால் விரைவில் வரைவு நிகழ்தல் ஒருதலை ' என்று தோழி கூறுகின்ருள்.

ருக. கூன்முண் முண்டகக் கூர்ம்பனி மாமலர்
நூலறு முத்திற் காலொடு பாறித்
துறைதோறும் பரக்குந் தூமணற்
சேர்ப்பனை

யானும் காதலென் யாயுநனி வெய்யள்
எந்தையுங் கொடீஇயர் வேண்டும்
அம்ப லூரும் அவனொடு மொழிமே.

—குன்றியனூர்.

(இ - ள்.) கூன்முள் முண்டகக் கூர்ம்பனி மாமலர்-வளைந்த முட்களையுடைய கழிமுள்ளியினது மிக்க பனிக்காலத்துக் கரிய மலர், நூலறு முத்திற் காலொடு பாறித் துறைதொறும் பரக்கும் - நூல் அற்றுச் சிதறிய முத்துக்களைப் போன்று காற்றாலே சிதறப்பட்டு நீர்த்துறைகள் தோறும் பரவாநிற்றற்கிடமான, தூ மணற் சேர்ப்பனை - தூய மணலையுடைய கடற்கரையையுடைய தலைவனை, யானும் காதலென் - யானும் விரும்பாநின்றேன், யாயும் நனி வெய்யள் - நந்தாயும் பெரிதும் விரும்புதல் உடையள், எந்தையும் கொடீஇயர் வேண்டும் - நம் தந்தையும் அவனுக்கு நின்னை மணஞ் செய்வித்தலை விரும்பாநின்றான், அம்பல் ஊரும் அவனொடு மொழிமே - சிலர் அறியப் பழிதூற்றாநின்ற இவ்வூரினரும் இவற்றிற்கு இயைய அவனோடே நின்னைத் தொடர்பு படுத்தியே கூறுகின்றனர்.

**விளக்கம்** :—கூன்முள் - வளைந்தமுள். முண்டகம் - கழிமுள்ளி. கூர்ம்பனி என்பதற்குக கூரசெய்யும் பனி என்பாரும் உளர். அஃதாவது, குளிராற் குன்றுக்கச் செய்யும் பனி என்பது கருத்து. அஃதப் பொருட்டாதல் "மநிகூர" எனவரும் நெடுநல்வாடையான் அறிக. மாமலர்-கரியமலர். முள்ளிப்பூக கருநிறமுடைததாதலை "மணிப்பூமுண்டகம்" (மதுரைக் - கூசு.) என்பதனானும் உணர்க. கோவை செய்த நூல் அறுந்தமையாலே தனித்தனியாகச் சிதறிய முத்துப் போல என்க. ஈண்டு இவ்வுவமை வினைபற்றி வந்தது. கால் - காற்று. ஒடு : ஆனுருபின் பொருளதாய் நின்றது காற்றாலே சிதறி என்க. பாறுதல் - பரத்தல். துறை - நீர்த்துறை. 'வரிக்கும' என்றும் பாடம். வரித்தல் - அழகு செய்தல், வரிவரியாய்க்கிடக்கும் எனினுமாம். துமணல் - வெண்மணலுமாம். சேர்ப்பன் - கடற்கரைத் தலைவன்.

முள்ளுடைய செடியின் மலர்ந்த மலரைக் காற்றுச் சிதறச் செய்து மணற்றுறையை அழகுபடுத்தும் என்றது, காவன் மிக்க பெருங்குடிப்



பிறந்த தலைவியைப் பால்வரை
செய்யா நிற்கும் என்பதாம்.

தெய்வம் தலைவனோடே கூட்டி அணி

யானும் காதலென் என்றது நின்னால் விரும்பப்பட்ட தலைவன் நின் பெருமைக் கேற்ற தகுதியுடையனுதல் கண்டு அவன் நினக்குத் தலைவனுதலை யான் பெரிதும் விரும்பா நின்றேன் என்றவாறும். யானும் என்றதன்கண் உம்மை, எண்ணும் மையாதலோடு நீயே யன்றி யானும் காதலென் என்னும் பொருளுடைத்தாதலும் அறிக. யாய் - தாய். யாய் என்பது என்தாய் என்னும் பொருட்டு. ஈண்டுத் தனக்கும் தலைவிக்கும் வேற்றுமை கருதாது நற்றாயையே என்தாய் என்றாள் என்க. எந்தை என்பதும் அது.

கொடீஇயர் - கொடுக்க, மணஞ்செய்விக்க என்றவாறு. வேண்டும்

என்பதற்கு வரைவொடு வருதலை வேண்டுவன் எனினுமாம். ஊரவர் தலைவனோடு நின்னைச் சேர்த்துப் பழிதூற்றலுமாம் வரைவு விரைவின் நிகழ்தற்கு ஏதுவாமாற்றான் நலந்தருவதாம் என்பாள், ஊரும் அவ னொடும மொழிம் என்றாள். மொழியும் என்பது மொழிம் என ஈற்றுயிர் மெய் கெட்டது.

"இங்ஙனமாதலின் விரைவில் வரைவு நிகழும் அதுகாறும் ஆற்றுக" என்பது கருத்தாகக் கொள்க.

## பாட்டு - ருஉ : தோழி கூற்று

துறை :—வரைவு மலிவுகேட்ட தலைமகட்குத் தோழி "முன்னாளின் அறத்தொடு நின்றமை காரணத்தான் இது விளைந்தது" என்பது படக் கூறியது. அஃதாவது, தலைவனை தலைவியை வரைந்து கோடற்குரிய முயற்சி நிகழ்தலை அறிந்து மகிழ்ந்த தலைவிக்குத் தோழி, 'இச்செயல் யான் அறத்தொடு நின்றமையானே நிகழ்கின்றது' என்பது தோன்றக் கூறியது.

இதன் கண், தோழி, தலைவியை நோக்கி, 'நீ

சூர் தீண்டப்

பெற்ற தன்மையை யுடையையாய்க் கற்பிற்கு இழுக்குண்டாகுமோ என்று நடுங்கினமை கண்டு யான் அடிக்கடி இரங்கினேன் அல்லனோ? அவ்விரக்கத்தின் விளைவே இவ்வரைவு மலிவு' எனக் கூறுகின்றாள்.

ருஉ. ஆர்கலி மிதித்த நீர்திகழ் சிலம்பிற்
சூர்நசைந் தனையையாய் நடுங்கல் கண்டே
நரந்த நாறுங் குவைவிருங் கூந்தல்
நிரந்திலங்கு வெண்பல் மடந்தை
பரிந்தனென் அல்லனோ இறையிறை
யானே.

—பனம்பாரனார். மூலமும் உரையும் எஎ

(இ - ள்.) ஆர்கலி மிதித்த நீர் திகழ் சிலம்பில் - கடலை மிதித்தற்குக் காரணமான அருவி நீர் விளங்கும் மலையிடத்தே உறையும், சூர் நசைந்தனையையாய் - தீண்டிவருத்தும் தெய்வத் தாலே விரும்பப்பட்ட தன்மையை உடையளாகி, நடுங்கல் கண்டே - செவிலி கட்டுக் காணுமிடத்தும் வெறியாடுமிடத்தும் நம் கற்பிற்கு என்னாகுமோ என்று நீ நடுங்குதலைப் பார்த்து, நரந்தம் நாறும் குவையிருங் கூந்தல் நிரைந்து இலங்கு வெண்பல்

மடந்தை - நரந்தம்பூ மணத்தற்கு இடனாகிய தொகுதியாகிய கூந்தலையும் நிரல்பட்டு விளங்கா நின்ற வெள்ளிய பல்லினையும் உடைய மடந்தையே, யான் இறை இறை பரிந்தனன் அல்லனோ - யான் சிறிதுசிறிது இரங்கி வருந்தினேன் அல்லனோ.

**விளக்கம்:**—ஆர்கலி மிதித்தலாவது கடனீரை உந்தித்தள்ளுதல். ஆர்கலி - கடல். கடலை மிதித்த நீர் திகழ் சிலம்பு என்றது, தலைவன் வரைவு மலிந்தமை அலர் தூற்றிய இவ்வூரினர் வாயை அடக்கிற் றென்னும் குறிப்புடைத் தென்க.

சிலம்பிற் சூர் - மலையுறை தெய்வம். சூரரமகளிராகிய தெய்வமு மாம். சூர் நசைந்தனையை யாய் என்றது, சூர் விரும்பி நின் மெய்யைத் தீண்டிவருந்தாதிருப்பவும் கட்டுவிச்சி செவிலி முதலியோரானே சூர் தீண்டப்பட்டவளாகக் கருதப்படுதற்கு ஏற்றவளாகி என்றவாறு. நடுங் குதல் - தன்பொருட்டாகச் செவிலி எடுக்கும் வெறிபாடலால் கற்புக்கு ஏதம் விளையுங்கொல்! இந்நோய் நம்மால் வந்ததன்று தெய்வத்தால வந்ததுபோலும் எனத் தலைவர் கருதின் நம் நிலை என்னும்! எனக்கருதி மெய் நடுக்கமுறுதல். வரைவு மலிந்தமை உணர்ந்த பின் தலைவி நலிவ கன்று முகமலர்ந்து முறுவல் பூப்பத் தோன்றுகின்றமையின் இந்நலம் தோன்ற நரந்த நாறும் குவையிருங் கூந்தல் நிரந்திலங்கு வெண்பல் மடந்தை எனச் சொல்லோவியப் படுத்துரைத்தாள். இறை இறை - சிறிது சிறிது. நின்னைக் காணும் பொழுதெல்லாம் என்றவாறு.

பரிந்தனென் அல்லனோ என்றது இரங்கினேன் அல்லனோ அங்ங னம் இரங்கிச் செவிலிக்கு அறத்தொடுநின்றேன் அதன் பயனே இவ்வரைவு மலிவு என்றவாறும்.

## பாட்டு - ருரு : தோழி கூற்று

துறை :—வரைவு நீட்டித்த வழித் தோழி, தலைமகற் குரைத்தது. அஃதாவது, 'தலைவன் வரைந்து கொள்வேன்' என்று உறுதிமொழி கூறிய பின்னரும் காலந் தாழ்த்தலாலே ஆற்றாமை மிக்க தலைவியின் நிலைகண்டு தோழி தலைவனை நோக்கிக் கூறியது.

இதன்கண், 'தலைவனே ! நீ மொழிந்த சூள்மொழிகளின் படி ஒழுகாமை எம்மைப் பெரிதும் வருத்தும்' எனத் தோழி கூறுகின்றாள்.

எஅ குறுந்தொகை

ருரு. எம்மணங் கினவே மகிழ்ந முன்றில்
நனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்
வேலன் புனைந்த வெறியயர் களந்தோறும்
செங்நெல் வான்பொரி சிதறி யன்ன
எக்கர் நண்ணிய எம்மூர் வியன்துறை
நேரிறை முன்கை பற்றிச்
சூரர மகளிரோ டுற்ற சூளே
—கோப்பெருஞ் சோழன்.

(இ - ள்) மகிழ்ந - தலைவனே, நனைமுதிர் புன்கின் பூத் தாழ் வெண்மணல் - அரும்பு முதிர்ந்த புன்கமரத்தினது பூக்கள் உதிர்ந்து கிடந்த வெள்ளிய மணற் பரப்பு, வேலன் புனைந்த வெறியயர் களந்தொறும் - வேலனால் ஒப்பனை செய்யப்பட்ட வெறியாடுதற்குரிய இடங்கள் தோறும், செந்நெல் வான்பொரி சிதறியன்ன - சிவந்த நெல்லினது வெள்ளிய பொரியைச் சிதறினாற்போன்று தோன்றாநிற்கும், எக்கர் நண்ணிய எம்மூர் வியன் துறை முன்றில் - இடுமணல் பொருந்திய எம்முடைய ஊரின் கண் உள்ள அகன்ற நீர்த்துறை முன்றிலிடத்தே, நேர் இறை முன்கை பற்றி - நேரிய சந்தினையுடைய முன்கையைப் பிடித்துக் கொண்டு, சூர் அரமகளிரொடு உற்ற சூள் - நீ சூரரமகளிரைச் சுட்டிக்கூறிய வஞ்சினம், எம் அணங்கின - எம்மை வருத்தாநின்றன.

**விளக்கம்** :—மகிழ்ந முன்றிலிடத்தே முன்கைபற்றி நீ சூரரமகளிர்ச சுட்டி உரைத்த சூள் எம் அணங்கின என இயைத்துக்கொள்க.

சூள் உரைத்தோர் அதன்படி ஒழுகாவிடின் அச்சூளொடு சார்த்திய தெய்வம் அச்சூளுரைத்தாரைத் துன்புறுத்தா நிற்கும். ஆதலால், நீ அதனை அஞ்சாது மறந்து திரிவை எனினும் அச்சூளானே நினக்கு ஏதம் வரும் என்று எண்ணி யாங்கள் வருந்தா நின்றேம் என்பாள், சூள் எம்மணங்கின என்றாள். தலைவி தலைவன் இருவர்க்கும் இன்ப துன்பம் ஒன்றாய் வருதலின், தலைவற்குறும் ஏதம் தலைவியதாய்க் கொண்டு கூறினள் என்க. முன்றிலை வியன்றுறையோடும் கூட்டி வியன்றுறை முன்றில் என்க. முன்றில் - முற்றம். பூத்தாழ் வெண் மணல், வேலன் புனைந்த வெறியயர் வெங்களத்தே பொரி சிதறிக்கிடங் தாற்போன்று தோன்றும் என்க. பூ, வெண்பொரிக்கும் வெறியாடு களம், வெண் மணற்கும் உவமைகள். வான்பொரி - வெள்ளியபொரி.

அஞ்சவேண்டாத களம் அஞ்சுதற்குரிய வெறியாடு களம்போலத் தோன்றும் என்றது, அஞ்சவேண்டாத சூள், அஞ்சுதற்குக் காரண மாயிற்று என்னும் உள்ளுறை தோன்ற நின்றதுணர்க. அஞ்சற்க என்று சூள் மொழிந்தாய், அச்சூள் மொழிக்கே யாம் இதுபொழுது அஞ்சுகின்றேம் என்றவாறு. எக்கர் - இடுமணல். பலமுறையும் சூள் மொழிந்தான் என்பதுதோன்ற அணங்கின எனப் பன்மையாற் கூறினள். சூரர மகளிரொடு-சூரரமகளிரின் பெயரோடு சேர்த்து என்க.

## மூலமும் உரையும்

எசு

## பாட்டு - ௫௪ : தலைவி கூற்று

துறை :—வரைவு நீட்டித்த வழி ஆற்றாளாகிய தலைமகள், தோழிக்குச் சொல்லியது. அஃதாவது, தலைவன் வரைந்து கோடற்கண் கருத்தின்றிக் களவின்பமே விரும்பி ஒழுகுத லானே அதனால் உண்டாகும் துன்பத்தை உணர்ந்து வருந்திய தலைவி வரைவு முடுக்குதல் வேண்டித் தோழிக்குக் கூறியது.

இதன்கண், 'தோழி கேள்! யான் இவ்விடத்திலிருக்கின்

றேன். என் னலனே கானக நாடனேடு அவன் இருக்குமிடத் திற்குச் சென்றுவிட்டது. இங்கிலை ஏன்னால் ஆற்றுதற்கரிதாம்' என்று தலைவி கூறுகின்றாள்.

ருசு. யானே யீண்டை யேனே யென்னலனே
ஏனல் காவலர் கவணொலி வெரீஇக்
கான யானை கைவிடு பசுங்கழை
மீனெறி தூண்டிலி னிவக்கும்
கானக நாடனொ டாண்டொழிந் தன்றே.

—மீனெறிதூண்டிலார்.

(இ - ள்.) தோழி, யானே ஈண்டையேன் - யான் மட்டும் இவ்விடத்திலேயே இருக்கின்றேன் என் நலன் - என்னுடைய பெண்மை நலமோ எனில், ஏனல் காவலர் கவண் ஒலி வெரீஇக் கான யானை கைவிடு பசுங்கழை - தினைப்புனம் காப்போர் விடும்
கவண் கல்லினது ஓசையை அஞ்சிக காட்டியானை (தான் வளைத்துப் பின்னர்) கைவிட்ட பசிய மூங்கில், மீனெறி தூண்டிலின் நிவக்கும் - மீனால் இரைகதுவப்பட்ட தூண்டிற்கோல் போன்று நிமிராநிற்கும், கானக நாடனொடு - காட்டையுடைய தலைவ

ளோடே, ஆண்டு
யொழிந்தது.
ஒழிந்தன்று - அவ்விடத்தேயே நீங்கி

**விளக்கம்** :—என்னை வறியளாக்கி என் நலனெல்லாம் உடன்
கொண்டு சென்றார்; அதனால் யான் ஆற்றுகிலேன் என்றவாறு. யானே என்பதன்கண், ஏகாரம் நலனைப் பிரித்தலின் பிரிநிலை எனக. எனக்குரியதாயிருந்தும் என்னைக் கைவிட்டுச்சென்றதென்பாள், என்னலனே என்றாள். நலன் - சாதியொருமை.

**நலனுவண:** அழகு சிந்தை உணர்வு தேசு நாணம் நிறை முதலாயின.

"பயிரொன்று கலையும் சங்கும் பழிப்பறு நலனும் பண்பும்
செயிரின்றி யலர்ந்த பொற்பும் சிந்தையும் உணர்வும் தேசும்
வயிரஞ்செய் பூணும் நாணும் மடனுந்தன் நிறையும் மற்றும்
உயிரொன்றும் ஒழிய எல்லாம் உகுத்தொரு தெரிவை நின்றாள்."

(உலா - அ)

எனவரும் கம்பராமாயணச் செய்யுளானும் மகளிர் இழக்கும் நலங்களை அறிக.

இனி ஏனல் காவலர் கவண் ஒலியை வெரீஇ யானை உணவாக வளர்த்த பசுங்கழையைக் கைவிடும் என்றது, உள்ளுறை உவமமாம். மீனெறி தூண்டில் ஏனையுவமம் என்க. யானும் அலரஞ்சி அவருள் வழிப்படாது இவ்விடத்திருக்கின்றேன் என்பது உள்ளுறையாகக் கொள்க.

கானயானை இரையின் பொருட்டு வளர்த்த பசுங்கழையைக் கவண் ஒலி வெரீஇக் கைவிடும் கானகம் என்க.

இங்ஙனமாகலின் யான் ஆற்றேனாகின்றேன் என்று கூறி விரைவில் அவர் வரைந்துகொள்ளுமாறு நீ முயல்க எனக் குறித்தவாறும்.

## பாட்டு - ருரு : தோழி கூற்று

துறை :—'வரைவொடு புகுதானேல் இவள் இறந்துபடும்'

எனத் தோழி தலைமகன் சிறைப்புறத்தானாகச் சொல்லியது. அஃதாவது, வரைவுநீட்டித்தல் பொறாது, பெரிதும் துன்புறா நின்ற தலைவியின் நிலைமையைத் தலைவன் அறிந்துகொள்ளுமாறு செய்ய நினைந்த தோழி, அவன் சிறைப்புறமாக வருதல் கண்டு அவன் வரவினை அறியாதாள்போல அவன் கேட்கும்படி கூறியது.

இதன்கண், ' இவ்வூர், தலைவி ஒருசில நாட்களே வாழ்தற்

குரியதாய் இன்னாததாக மாறிவிட்டது என்று, அவள் ஒருசில நாளில் இறந்துபடுவாள்' என்பதுபடத் தோழி கூறுகின்றாள்.

ருரு. மாக்கழி மணிப்பூக் கூம்பத்
தூத்திரைப்
பொங்குபிதிர்த் துவலையொடு மங்குல்
தைஇக்
கையற வந்த தைவரல் ஊதையொடு
இன்னா உறையுட் டாகும்
சின்னாட் டம்மவிச் சிறுநல் லூரே.

—நெய்தற் கார்க்கியர்.

(இ - ள்.) இச்சிறு நல்லூர் - முன்பெல்லாம் வாழ்தற் குரியதாயிருந்த நன்மையுடைய இச்சிறிய ஊர், மாக்கழி மணிப் பூக்கூம்பத் தூத்திரை பொங்கு பிதிர்த் துவலையொடு - பெரிய கழியிடத்தே உள்ள நீலமணிபோலும் நிறமுடைய பூக்கள் குவியும்படி தூவுதலையுடைய அலைகளிடத்துப் பொங்கிய பிசிராகிய துளிகளோடே, மங்குல் தைஇ - முகில்களையும் அணிந்து கொண்டு, கையற வந்த தைவரல் ஊதையொடு - பிரிந்துறைவோர் செயலற்று வருந்தும்படி வந்துள்ள தடவுதலுடைய

வாடைக்காற்ரேடு, இன்ஞ உறையுட்டாகும் -

இன்னல் மிக்க

உறையுமிடத்தையுடையதாகும் ஆதலால், சில்நாட்டு - இவ்வூர் சிலவாகிய வாழ்நாள்களை மட்டுமே உடைத்து.

**விளக்கம்** :—மாக்கழி - பெரிய கடற்கழி (நீரோடை) கரிய கழியுமாம். மணிப்பூ என்றது நெய்தற் பூவை. மணி - நீலமணி. பூக்கூம்பும்படி கையற வந்த ஊதை என்க. தூ - தூவுதல். தூத்துவலை, திரைபொங்கு பிதிர்த்துவலை எனத் தனித்தனிக் கூட்டுக. மங்குல் - மேகம் - தைஇ - அணிந்து. கையற - செயலற்று வருந்தாநிற்ப. தலைவனைப் பிரிந்துறையும் தலைவி ஆற்ருமையால் கையற்று வருந்த என்று அறிவித்தவாறு. வந்த என்றது யாம் விரும்பாதிருப்பவும் தானே வந்த என்றவாறு. தைவரல் - தடவுதல். இதுவாடையின் இயல்பு. இத்தைவரல் இன்ஞமைக்கேது என்க ஊதை - வாடைக்காற்று. பிரிவாலே வருந்தியிருத்தற் கிடமானதுமன்றிப் பிரிந்தோரைத் தைவந்து வருத்தும் ஊதையினையும் உடைத்தாய் இன்ஞதாகும் என்க. உறையுட்டு - உறையுளை உடைத்து. இத்தகைய இன்ஞ உறையுள் தன்கண் வாழ்வார்க்களிக்கும் வாழ்நாளும் சிலவே என்பாள், சின்ஞட்டு என்ருள். சில்நாட்டு - சிலவாகிய நாள்களையுடையது. வாழ்வோர் நாளை இடத்திலேற்றிக் கூறப்பட்டது. இத்தகைய இன்ஞமையுடைய உறையுளில் தலைவனைப் பிரிந்துறைய நேர்ந்த தலைவி, இன்னும் ஒருசில நாள் மட்டுமே உயிர் வாழ்வாள்போலும் என்றபடி. எனவே விரைவில் வரைந்து கொள்ளல்வேண்டும் என அறிவித்தவாருயிற்று.

“ மணிப்பூ முண்டகத்தின் வேருய் மணிமருள் நெய்தலை மணிப்பூ என வழங்கிக் காட்டியதனல் இவர் நெய்தற் கார்க்கியர் எனப்பட்டனர் ஆவார் ” என ஊகிப்பாருமுளர். இப்பெயர் இக்கருத்தாலே வழங்கப் பட்டதாயின் “ மணிப்பூக் கார்க்கியர் ” எனவே வழங்கியிருப்பின் இன்னும் விளக்கமுடைத்தாகும்.

## பாட்டு – ருகூ : தலைவன்

கூற்று

துறை :—தலைமகன் கொண்டுதலைப் பிரிதலை மறுத்துத்

தானே போகின்ற வழி, இடைச்சுரத்தின் பொல்லாங்கு கண்டு கூறியது ; அஃதாவது 'தலைவியையும் உடன்கொண்டு செல்க' எனத் தோழி வேண்டினாள். தலைவன் அவ்வேண்டுகோட்கிணங்கானாய்த் தலைவியைவிட்டுத் தனித்துச்சென்றான் ; அங்ஙனம் செல்லும் வழியிடையே உள்ள தீமைகளைக்கண்டு 'தலைவியை அழைத்துவாராதது நன்றேயாயிற்று ; அவள் உடன்வரின் இத் தீங்கினை ஆற்றாள்' எனத் தலைவன் கூறியது.

இதன்கண், 'தலைவி என்னோடு வந்திருப்பாளாயின் நாயுண்ட இவ்வழுகல் சின்னீரைத் தன் கையால் கொண்டு உண்ண நேர்ந்திருக்கும்; அவ்வாறாயின் அவள் பெரிதும் இரங்கத் தக்கவள் ஆவாள் ; வாராமையே நன்றாயிற்று' என்று தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

கு.—()



௫௬. வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்

குளவி மொய்த்த அழுகற் சின்னீர்
வளையுடைக் கைய ளெம்மோ டுணீஇயர்
வருகதில் அம்ம தானே
அளியளோ அளியளேந் நெஞ்சமர்ந்
தோளே.

—சிறைக்குடி ஆந்தையார்.

(இ - ள்.) வேட்டச் செந்நாய் - வேட்டஞ்செய்து உயிர் வாழும இயல்புடைய செநநாய்கள், கிளைக்துாண் மிச்சில் - தங்கால்களாலே தோண்டி உண்ணப்பட்டு மிஞ்சியதாகிய, குளவி மொய்தத அழுகல சின்னீர் - காட்டுமல்லிகையின் இலைகள் உதிர்ந்து மூடியதனாலே அழுகிய சிறிதாகிய நீரினை, வளையுடைக் கையள் - வளையணிந்த கையினையுடையளாய் எமமொடு உணீஇயர் - அக்கையாலே முகந்து எம்மோடு சேர்ந்து உண்டற்கு,
வருகதில - வருவாளாக அது எமககு விருபபம், எம் நெஞ்சு அமர்ந்தோள் - எமது நெஞ்சிடத்தே வீற்றிருந்த தலைவி அங்ஙனம் வந்துளாளாயின், அளியளோ அளியள்-பெரிதும் இரங்கத் தக்கவள் ஆவாள்.

**விளக்கம்** :—வேட்டையாடி உண்டலே செந்நாய்க்கியல்பாதலின்,

வேட்டச செந்நாய் என்றான். வேட்டையாடும் செந்நாய் திரியும் நெறி யென நெறியின் தீங்கு குறித்தவாறுமாம். நாய் நாவானகக்கி நீர் குடிக்கும் இயல்பிற்று. நக்கிக் குடித்தற்கும் போதாமையா றேற்ண்டியுண்டது என்பான், கிளைத்தூண் மிச்சில் என்றான். கிளைத்தல் - தோண்டுதல், ஈண்டுச செந்நாய் காலாலே தோண்டின என்க. ஊண் மிசசில் - உண்டெஞ்சியது. எனவே, எச்சில் நீர் என்றவாறு. நாயுண்டெஞ்சிய மிசசில் என்றது, அந்நீரின் தூய்தல்லாத் தன்மையை நன்கு எடுத்தோக் கூறிய வாறாம்.

குளவி - காட்டுமல்லிகை. ஈண்டு அதன் சருகிற்கு ஆகுபெயர். மொய்த்தல் - சருகு உதிர்ந்து மூடுதல். இனி, குளவி வண்டுமாகவின் மொய்த்த என்ற வினைக்கேற்ப வண்டெனினுமாம். அழுகற்கேது வெயிலாற் கொதித்தும் இரவிற் குளிர்ந்தும் கிடத்தல் எனலாம். இனிச் சருகு மொய்த்தழுகிய எனினுமாம். சின்னீர் - சிறிய அளவுள்ள நீர். நாயுண்டமிச்சில் ஆதல் மட்டுமின்றி அழுகலும் உடைய நீர் என உண்ணத்தகாமைக்கு இரண்டு ஏதுக் கூறினான் என்க.

இவ்வழுகனீரை அவள் உண்டல் கிடக்க அழகிய அக்கையாலே தொடுதலும் இரங்கத்தக்கதென்பான், அவள் கையின் அழகை நினைவு கூர்ந்து வளையுடைக்கையள் என்றான். வருகதில் என்பதில், தில் விழைவுப்பொருளும் ஒழியிசைப்பொருளும் ஒருசேரக் குறிக்கின்றது

> "விழைவே காலம் ஒழியிசைக் கிளவியென்
> றம்மூன் றென்ப தில்லைச் சொல்லே."

(இடை - ரு)

## மூலமும் உரையும்

அரு

என்பது தொல்காப்பியம். எனவே வருக இல் என்றதற்கு வருவாளாக, அது எமக்கு விருப்பம்; அங்ஙனம் வாராதொழிந்தமை நன்றென்று பொருள் காண்க. அம்ம-கேள் என்னும் பொருட்டு. தன் நெஞ்சொடு கூறுகின்றான் ஆகலின் கேள் என்றான் எனக.

'அன்பிலாமையால் அவளை வாரற்க என்றேன் அல்லேன், இத் தீமை நினைந்தே கூறினேன்' என்பான், என் நெஞ்சமர்ந்தோள் என்றான்.

இனி, இச்செய்யுளை "இது களவிற் றலைவன் தலைவியை உடன் கொண்டுபோகத் துணிந்தது" (தொல் - அகத - ௪௪) என்று இளம் பூரணரும், "கற்பிற்றலைவன் தோழி கேட்பக் கூறியது" (தொல் - கற்பு - ரு) என நச்சினார்க்கினியரும் கருதாநின்றனர்.

## பாட்டு - ருஎ : தலைவி கூற்று

துறை:—காப்பு மிகுதிக்கண் ஆற்றாளாகிய தலைமகள தோழிக்குச் சொல்லியது; அஃதாவது, தாய் முதலியவர்களால் இற்செறிக்கப்பட்ட தலைவி, அக்காவல மிகுதியால் தலைவனைக் காணப்பெறாளாயப் பெரிதும வருததமுற்றுத் தோழிககுக் கூறியது.

இதன்கண், மகன்றிற் பறவைகள்போன்று பிரிந்து வாழ வியலாத நீங்காத காமத்தோடே தலைவரைப் பிரிநதுறைவதை விட அவர் பிரிந்தவுடனே ஒருவராயிருந்து உயங்கும் புன்மை யிற் றப்பும்பொருட்டு 'எமமுயிர் போவதாக; இஃது எமக்கு விருப்பம்' என்று தலைவி, தோழிக்குக் கூறுகின்றாள்.

௫எ. பூவிடைப் படினும் யாண்டு கழிந்தன்ன

நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப்
பிரிவரி தாகிய தண்டாக் காமமொடு
உடனுயிர் போகுக தில்ல கடனறிந்
திருவேம் ஆகிய வுலகத்
தொருவே மாகிய புன்மை நாம் உயற்கே.

—சிறைக்குடி ஆந்தையார்.

(இ - ள்.) தோழி—, கடன் அறிந்து இருவேம் ஆகிய உலகத்து - செய்யக்கடவ கடமைகளையறிந்து ஓர் உயிர்க்கு ஈருடம்பினேமாய்ப் பயின்றுவரும் இவ்வுலகததின்கண்ணே, ஒருவேம் ஆகிய புன்மை நாம் உயற்கு-பிரிவினாலே ஒருவராகித் தனித்துறையும் சிறுமையினின்றும் யாம் தப்புதற் பொருட்டு, பூவிடைப் படினும் யாண்டு கழிந்தன்ன-தாம் வாழும் நீரின்கண் உள்ள நீர்ப்பூவொன்று தம்மிடை நின்று மறைக்க நேரினும்



அம்மறைவானேரும் நொடிப் பொழுதும் பலயாண்டுகள் கழிந்தாற் போலக் கருதித் துன்புறும், நீர் உறை மகன்றில் புணர்ச்சி போல - நீரின்கண் வாழும் மகன்றிற் பறவைகளின் சேர்க்கையைப் போன்று, பிரிவு அரிதாகிய தண்டாக் காமமொடு-பிரிந் துறைதல் அரிதாகிய

துய்த்தமையாத காமத்தோடே, உடன்
உயிர் போகுக தில்ல - பிரிவு நேர்ந்த அப்பொழுதே இவ்வுயிரும் இவ்வுடலை விட்டுப் போவதாக; இஃது எனக்கு விருப்பம்.

**விளக்கம்** :—மகன்றில் - நீரின்கண் வாழும் ஒருவகைப் பறவை. இப்பறவைகள் ஆணும் பெண்ணும் கூடி இணைபிரியாது வாழும் இயல்புடையன. தம்முட் சிறியதொரு பிரிவு நிகழினும் ஆற்றாது உயிர் விடும் ஆராக்காதலுடையன என்பர். இதனைக் "குறுங்கால் மகன்றி லன்ன உடன்புணர் கொள்கைக் காத லோரே" என இந்நூல் ௩௨௪-ம் செய்யுளில் வருதலானும்,

> "முடியா நுகர்ச்சி முற்றாக் காதல்
> அடியோர் மைந்தர் அகலத் தகலா
> அவர்ஞெமன் மகன்றில் நன்னர்ப் புணர்ச்சி"

(அ : ௬உ-௬.) எனவரும் பரிபாடலானும் உணர்க.

மகன்றிற் பறவைகள் இணைந்து நீரிடை நீந்துங்கால் அந்நீரில் நிற்கும் தாமரைமலர் ஒன்று அவற்றிடையே நிற்க விலகிச் செல்லு மல்லவோ? அங்ஙனம் விலகிச் செல்லுங்கால் அப்பூவானே மறைக்கப் படும் காலம் எத்துணைச் சிறிதாம், அச்சிறுகாலப் பிரிவுதானும் பல யாண்டுகள் பிரிந்தாற் போன்ற வருத்தத்தைச் செய்வதாக ஆற்றாமை யுறும் மகன்றில் போல என்பாள், 'பூவிடைப்படினும் யாண்டு கழிந்தன்ன புணர்ச்சி மகன்றில்' என்றாள். மகன்றிற் புணர்ச்சி - அங்ஙனம் சிறுபிரிவும் நிகழாது ஓம்பி உடனுறையும் மகன்றிற் பறவைகளின் சேர்க்கை. தண்டாக் காமம் - துய்த்தமையாத காமம். உடன் - பிரிவு நிகழ்ந்த பொழுதே. மகன்றிற் பறவைகள் பிரிவு வந்துழி இறக்குமாறுபோல என் உயிரும் போவதாக என்றாள் என்க.

புன்மை - ஈண்டுச் சிறுமை; பிரிவாலே நிகழும் சிறுமையை உயிரோடிருந்து நுகர்தலைவிட இறந்துபடுதலே நன்றென்றவாறும். தலைவருக்கும் தனக்கும் உயிர் ஒருங்கே போக என்பாரும் உளர். தலைவருயிர் போக எனத் தலைவி கூறுதல் சிறப்பல்லாமை உணர்க. தில் - விழைவுப் பொருள் குறித்து நின்றது. உயல் - தப்புதல்.

## பாட்டு - ருஅ : தலைவன் கூற்று

துறை :—கழற்றெதிர்மறை. அஃதாவது, இயற்கைப் புணர்ச்சிக்குப்பின் தலைவியைக் காணப் பெறுமையாற் பெரிதும் துன்புற்று நலிந்த தலைவனைப் பாங்கன் இது நின்பெருமைக்குத் தகவாகாதென இடித்துக் கூறிய பொழுது தலைவன் அவனுக்கு மறுமொழியாகக் கூறியது.

### மூலமும் உரையும்

அறு

இதன்கண், 'என்னை இடித்துரைக்கும் நண்பீர்! நீயிர் இடித்துரை வழங்குவதை விட்டு என்னோயைத் தணிக்க வேறு செயல் ஏதேனும் உளதாயின் அது செய்தலே நன்று. இந்நோய் என் ஆற்றலானே தடுத்தற்குரியதாக எனக்குத் தோன்றிற்றில்லை' எனத் தலைவன் பாங்கனுக்குக் கூறுகின்றான்.

ரு௪. இடிக்குங் கேளிர் நுங்குறை ஆக
நிறுக்க லாற்றினோ நன்றுமற் றில்ல
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்
கையில் ஊமன் கண்ணிற் காக்கும்
வெண்ணெய் உணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற் கரிதே.

—வெள்ளி வீதியார்.

(இ - ள்.) இடிக்குங் கேளிர் - இடித்துரை வழங்கும் கேண்மையுடையீரே, நுங்குறை ஆகம் நிறுக்கல் ஆற்றின் நன்று மற்று இல்ல - நீயிர் செய்யும் இடித்துரைச் செயல் என்னுடம்பு உருகாமல் நிறுத்துதலைச் செய்யின் நற்செயல் இதனிற் பிற இலவாகும். ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில் - ஞாயிற்று மண்டிலம் காய்தலானே வெம்மையுடைத்தாகிய பாறையின் ஒருபுறத்தே வைக்கப்பட்டு, கையில் ஊமன் கண்ணிற் காக்கும் வெண்ணெய் உணங்கல் போல - கையில்லாததொரு மூங்கையன் கண்களான் மட்டும் பாதுகாக்கும் வெண்ணெய் உணங்கல் போன்று, ஆகம் நோன்று கொளற்கரிது - யானும் இவ்வுடல் உருகாமல் பொறுத்தல் அரிதாகும், அஃதெற்றாலெனின், பரந்தன்று இந்நோய் - அவ்வாகத்தின்கண் இந்த நோய் பரந்ததாகலான்.

**விளக்கம்** :—இடிக்குங் கேளிர்-குற்றங்கண்டவிடத்துக் கடிய கூறித் திருத்துதற்குரிய நண்பர்.

"நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிகண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு" (குறள் - எ௮௪.)

என்னுந்திருக்குறள் ஈண்டு நினைவு கூரற்பாற்று. இடிக்குங்கேளிர் என்றமையால் அவர் இடித்துரைத்தமையும் பெற்றாம். இடித்துரைத் தலாவது "தேரோன் தெறுகதிர் மழுங்கினும் திங்கள் தீரா வெம்மை யோடு திசை நடுக்குறுப்பினும் பெயராப் பெற்றியிற் றிரியாச் சீர்சால் குலத்திற் றிரியாத கொள்கையும் கொள்கையொடு நலத்திற் றிரியா நாட்டமும் உடையோய் நீ கண்டதன் அளவையிற் கலங்குதி இஃது நின் பெருந்தகவிற்கு ஒல்லுமோ" என்று இன்னோரன்ன உரைத்தல்.

கேளிர், நும் என்னும் பன்மைச் சொற்கள் செறல்பற்றி நண்பன் ஒருவனுக்கே வந்தன. நும் குறை - நுமது செயல். அஃதாவது,



இடித்துரைக்கும் இச் செயல் என்றவாறு. நண்பன் செய்யும் செயல் துன்பம் போக்கவல்லதாதல் வேண்டுமென்றே நும் இடித்துரை எனக் குற்ற நோயைப் போக்குமாயின் நன்று; அஃது அத்துயரைப் போக்க வல்லதன்றென்பான், 'நுங்குறை ஆகம் நிறுக்கலாற்றினோ நன்று' என் றான். ஓகாரம் அதுசெய்திலது என்னும் பொருள்பயந்து எதிர்மறை யாயிற்று. ஆகம் - உடம்பு. உடம்பை நிறுத்தலாவது, அந்நோயான் உருகாது பரிகரித்தல். நிறுத்துமாயின் இது மிகவும் நன்று இதனின் நன்று வேறு இல என்றான் எனக.

இந்நோய் நீயிர் இடித்துரை வழங்கினும் என்னாற் பொறுத்தற் கரிது என்பான் நோன்று கொளற் கரிது என்றான்.

நோற்றற் கரிதாயினமைக்கு ஏதுக் காட்டுவான் பாறையில் வைத்த வெண்ணெய் உணங்கல் போல இந்நோய் பரத்தலான் உடல் உருகா

நின்றது என்றான்.

வெண்ணெய் உணங்கல், ஆகத்திற்கு உவமை. அதனை ஞாயிறு காய்தல், நோய்பரத்தற்குவமை. கையில் ஊமன் - தலைவனுக்கு உவமை. கையில்லாமையால் உருகும் வெண்ணெயை எடுத்து நிழலில் விட்டு உருகாமற் பண்ணவும், ஊமனாகலின் பிறர்க்கதனை உரைக்க வியலாமை பற்றிப் பிறரானே ஓம்பவும் இயலாதவன் ஆனாற் போன்று யானும் என் ஆகத்தை யானேயாதல் பிறர் உதவியாலாதல் ஓம்ப முடியாதவன் ஆயினேன்; ஆகவே, உன் இடித்துரை பயனில் சொல் லாம் என்றவாறு.

## பாட்டு - ருக : தோழி கூற்று

துறை :—பிரிவிடை அழிந்த கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது. அஃதாவது, பொருள்வயிற் பிரிந்த தலைவன் மீண்டு வாராமையால், ஆற்றாமை மிக்க தலைவியைத் தோழி அவன் வருவதற்கு ஏதுக்காட்டி ஆற்றியது.

இதன் கண், 'அவாவளவிற்றாகப் பொருள் யாண்டும் நிரம்பா இயல்பிற்றுதலை அவர் நன்கு அறிகுவர். மேலும், நின்பாற் பெரிதும் அன்புடையவர் ஆதலின், நின்னை அருளுதற் பொருட்டு விரைவின் மீண்டு வருவர். அவர் வருங்காறும் ஆற்றியிரு!' எனத் தோழி தலைவிக்குக் கூறுகின்றாள்.

௫௬௦. பதலைப் பாணிப் பரிசிலர் கோமான்
அரலைக் குன்றத் தகல்வாய்க் குண்டுசுனைக்
குவளையோடு பொதிந்த குளவி நாறுநின்
நறுநுதல் மறப்பரோ மற்றே முயலவும்
சுரம்பல விலங்கிய அரும்பொருள்
நிரம்பா ஆகலின் நீடலோ இன்றே.

—மோசி கீரனார்.



(இ - ள்.) பதலைப் பாணிப் பரிசிலர் கோமான் - ஒருகட் கிணைப்பறையை முழக்கும் தாளத்தையுடைய இரவலர்க்குப் புரவலனாகிய மன்னனுடைய, அரலைக்குன்றத்து அகல்வாய்க் குண்டுசுனைக் குவளையொடு பொதிந்த - அரலை என்னும் குன்றின்கண் உள்ள அகன்ற வாயையுடைய ஆழமுள்ள சுனையின்கண் மலர்ந்த குவளைமலர்களோடு சேர்த்துக் கட்டப்பட்ட, குளவி நாறும் நின் நறுநுதல் - காட்டுமல்லிகையின் மணம் கமழும் நின்னுடைய நறிய நெற்றியை, மறப்பரோ - தலைவர் மறந்துவிடுவாரோ, முயலவும் சுரம் பல

விலங்கிய அரும்

பொருள் - அடுத்து முயன்றவிடத்தும பாலைநிலம் பற்பல குறுக்கிட்ட கிடைததற்கு அரிய பொருள், நிரமபா ஆகலின் நீடல் இன்று - முற்றக் கைகூடாவாதலின் காலம் நீட்டித்தல் இல்லை.

**விளக்கம்** :—பதலை - ஒருகட் கிணைப்பறை. பரிசிலர் - பாணர் முதலியோர் : பரிசிலர் கோமான் - இரவலரைப் புரக்கும் வேந்தன். அரலைக்குன்றம் : ஒருமலை ; இது சேலத்தைச் சோந்த ஒசூர்ப்புறத்துள்ள '**அரலிகுண்டா**' என்னும் மலை என்றும், ஈண்டுக் கோமான் என்றது, நள்ளி என்னும் வள்ளலை என்றும், கருதுவாரும் உளர். குண்டுசுனை - ஆழ்ந்தசுனை. பொதிந்த - கட்டப்பட்ட. குளவி - காட்டு மல்லிகை ; மலைப்பச்சையுமாம். மறப்பரோ - ஓகாரம் எதிர் மறை. மறவார் என்றபடி. மற்று, ஏ அசைகள். முயலவும் என்றது, பலநாள் அடுதது முயன்றாலும் என்றவாறு. விலங்கிய - குறுக்கிட்ட. அரும்பொருள் - தேடுதற்கு அரிய பொருள். நீடல் - காலம் தாழ்த்து இருத்தல். அவர் நின்னை மறவார்; காலம் தாழ்த்தாது மீண்டு வருவர் என்று தேற்றியவாறு.

## பாட்டு - கூ0 : தலைவி கூற்று

துறை :—பிரிவிடை யாற்றாமையிற் றலைமகள் தோழிக்கு

உரைததது. அஃதாவது, தலைவனது பிரிவை ஆற்றாத தலைவி, 'தலைவரைக் காணத்தானும் பெறேன்' என, வருந்தித் தோழிக்குக் கூறியது.

இதன்கண், நெடியமலையின் உச்சியிடத்தே உள்ள தேனைக் கண்ட முடவன், அதனைப் பெறலாற்றாமல் கீழிருந்து உள்ளங் கையைச் சிறுகுடையாகக் கோலிக்கொண்டு, அத்தேனைச்

சுட்டிச் சுட்டித் தன வறுங்கையை நக்குவதுபோன்று, தலைவரைக் கூடப்பெறாதவிடத்தும் காணவாவது பெறுவனேல் அக் காட்சிமட்டுமே, எனக்கினியதாம் எனத் தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

௬௦. குறுந்தாட் கூதளி யாடிய நெடுவரைப்
பெருந்தேன் கண்ட இருக்கை முடவன்



உட்கைச் சிறுகுடை கோலிக் கீழிருந்து
சுட்டுபு நக்கி யாங்குக் காதலர்
நல்கார் நயவா ராயினும்
பல்காற் காண்டலும் உள்ளத்துக் கினிதே.

—பரணர்.

(இ - ள்.) கூதளி யாடிய நெடுவரை -

றாலே ஆடாநின்ற நெடிய மலையிடத்தே, பெருந்தேன் கண்ட குறுந்தாள் இருக்கை முடவன் - பெரிதாகிய தேனிறாலைக் கண்ட குறுகிய கால்களையுடைய நடத்தலும் நிற்றலுமின்றி இருத்தற்றொழிலையே உடைய முடவன், உள் கைச் சிறுகுடை கோலிக் கீழ் இருந்து - உள்ளங்கையினைச் சிறிய உண்கலமாகக் குவித்துக் கொண்டு நிலத்தே இருந்தபடியே இருந்து, சுட்டுபு நக்கியாங்கு - அத்தேனிறாலைப் பன்முறையும் ஏனைக்கையாற் சுட்டிச் சுட்டித் தன் வறுங்கையை நக்கினாற்போன்று, காதலர் நல்கார் நயவார் ஆயினும் - நங்காதலர் நம்மை அருளாராயினும் விரும்பாராயினும், பல்கால் காண்டலும் உள்ளத்துக்கு இனிதே - பலகாலும் அவரை நங்கண்ணாற் பார்த்திருத்தலும் உள்ளத்திற்கு இன்பமாம, அது பெற்றேனில்லையே.

**விளக்கம்** :—குறுந்தாளை முடவனுக் கேற்றுக. குறுந்தாளுடைமையின் நிற்றலாற்றாது இருத்தலொன்றே யுடைய முடவன் என்க. கூதளி - ஒருகொடி,

> "பலவுக்காய்ப் புறத்த பசும்பழப் பாகல்
> கூதள மூதிலைக் கொடிநிரை தூங்க
> அறனின் றலைக்கும் ஆறு வாடை" (உஇரு)

என்னும் அகப்பாட்டில் கூதளி கொடியாதல் தெரித்தோதுதல் காண்க. இனி, குறுந்தாட் கூதளி என்றதற்கு குறுகிய தாளையுடைய கூதளஞ்செடி என்பாருமுளர்.

ஏறுதற்கியலாத மலை என்பாள் நெடுவரை என்றும், முடவன் மிகுந்த ஆசை கொள்ளற்குரிய தென்பாள் பெருந்தேன் என்றும் கூறினள். இருக்கைமுடவன் - நிற்றலும் நடத்தலும் ஏறுதலும் செய்யவியலாது இருத்தற்றொழில் ஒன்றே உடைய முடவன். பிரிந்து சென்ற தலைவன் இருக்குமிடந்தேடிச் செல்லற்கோ வேறுவழியானே அவனைப் பெறமுயலுதற்கோ வழியின்றி இருந்து வருந்துதல் ஒன்றே உடையேன் என்பாள் இருக்கை முடவனைத் தன்னோடு ஒப்பித்தாள் என்க.

உள் கை - உள்ளங்கை. சிறுகுடை - பனை ஓலை முதலியவற்றாற் செய்த சிறிய உண்கலம். "வேணீருண்டகுடை" (உரு) எனக் கலியினும் வருதல் காண்க. குடைபோறலிற் குடை என்றார். கீழ் இருந்தென்றது, முடவனின் இயலாமையைக் குறித்தது.

## மூலமும் உரையும்

அகூ

சுட்டுபு - சுட்டிக்காட்டி, ஒருகையைக் குடையாகக் கோலிக் கொண்டு மற்றொருகையின் விரலால் தேனிறாலைச் சுட்டிச் சுட்டிக் காட்டிக்கொண்டு உள்ளங்கையை நக்கினாற் போன்றென்க.

முடவன் எத்துணை அவாவினும் இரங்காமலும் அவனை விரும்பாமலும் இருக்கும் தேனிறால் போன்று தலைவர் நல்கார் நயவாராயினர் ஆயினும், என்க. இது கண்விதுப்புறல் கூறியவாறு.

"பேணாது பெட்பவே செய்யினும்

கொண்கனைக்

காணாது அமையல கண்" (குறள் :

கஉஅங) என்னும் திருக்குறள் ஈண்டு நினைவு

கூரற்பாலது.

## பாட்டு - சுக : தோழி கூற்று

துறை :—தோழி தலைமகன் வாயில்கட்கு உரைத்தது. அஃதாவது, தலைவன் பரத்தையிற் பிரிந்தமையால் தலைவி ஊடி யிருந்தாளாக, அவ்வூடல் பேர்ப்பான் தலைவன் பாணர் முதலி யோரைத் தூதாகவிட்டான். அத்தூதர்களை நோக்கித் தோழி தலைவன் கொடுமையைக் குறிப்பாற் கூறியது.

இதன்கண், ' தலைவன், பரத்தையர்க்கு ஊர்ந்தின்புறும் தேர்போல்கின்றான் ; தலைவியோ ஊர்ந்தின்புறுது தேரினை ஈர்த் தின்புறும் சிறுர்போன்று அவனுக்கு எண்மையைச் செய்தல் மாத்திரையாலே இன்புறுவாளாயினள் ' என்று தோழி தூதர்க்குக் கூறுகின்றாள்.

சுக. தச்சன் செய்த சிறுமா வையம்

ஊர்ந்தின் புறூஅர் ஆயினுங் கையின்
ஈர்த்தின் புறாஉம் இளையோர் போல
உற்றின் புறேஎம் ஆயினும் நற்றேர்ப்
பொய்கை யூரன் கேண்மை
செய்தின் புற்றனெஞ் செறிந்தன
வளையே.

—தும்பிசேர் கீரனார்.

(இ - ள்.) *தச்சன் செய்த சிறுமா வையம்* - தச்சனாற் செய்யப்பட்ட சிறிய குதிரைகளையுடைய தேரினை, *ஊர்ந்து இன்புறூஅர் ஆயினும்* - ஏறிச் செலுத்தி இன்பமடையாராயினும், *கையின் ஈர்த்து இன்புறூஉம் இளையோர்போல* - தம் கையானே அதனை இழுத்தன் மாத்திரையால் இன்புறுகின்ற இளஞ்சிறார் போன்று, *உற்று இன்புறேம் ஆயினும்* - யாமும் தலைவரோடு மெய்யுற்று இன்பம் எய்தேமாயினும், *நற்றேர்ப் பொய்கை ஊரற்கு* - நல்ல தேரினையுடையரும் வாவிகளையுடைய ஊரினை



யுடையரும் ஆகிய அத்தலைவர்க்கு, *எண்மை செய்து இன்புற்றனம்* - எண்மையாகிய செயல்களைச் செய்தன்மாத்திரையானே இன்பமடைவேமாயினேம் அதனால், *செறிந்தன வளை* - எம் கையின்கண்

செறிவுடையவாயின வளையல்கள்.

விளக்கம் :—தேரின் அழகுதோன்றத் தச்சன் செய்த வையம்

என்றார். சிறுமா வையம் - சிறியதும் குதிரைகளையுடையதுமாகச் செய்யப்பட்ட தேர். குதிரை - தச்சனாற் செய்யப்பட்ட குதிரை. தேர் ஊர்ந்தின்புறுதற்கே உரியதாகவும் அது செய்யாது ஈர்த்தின்புறும் சிறார்களின் எண்மைநிலை காட்டி அவவெண்மையைத் தம்மெண்மைச் செயற்கு ஒப்பித்தாள் என்க. ஈர்த்து - இழுத்து. இளையோர் ஈண்டு மறுகில் ஆட்டயரும் இளஞ்சிறார். தலைவராகிய தேரினை இப்போது ஊர்ந்தின்புறுவோர் பரத்தையராக யாமோ அவருக்கு எண்மை செய்து ஈர்த்து இன்புறுவேமாயினேம் என இரங்கினாள் என்க. உற்றின் புறுதல் - மெய்யுறு புணர்ச்சியாலின்புறுதல். நற்றேர் என்றது, அவன் பரத்தமைக்குத் துணைக்கருவி ஒன்றனைச் சுட்டிப் பழித்தவாறு. நற்றேருடையனாதல் பரத்தையிற் பிரிதற்பொருட்டே என்பது கருத்து. "காலை எழுந்து கடுந்தேர் பண்ணி" என இந்நூலிற் பிறாண்டும் வந்தமை காண்க. (சடு) பொய்கையூரன் - மருதநிலத்துத் தலைவன், எண்மை செய்தலாவது மனத்தால் ஊடியிருந்தேயும் உணவிடுதல் வாய்பூச நீர்பெய்தல் முதலிய கடமைகளைச் செய்தல.

இது, 'களவுக்காலத்து ஆற்றவும் அரியராயிருந்தேம்; இக்கற்புக் காலதது ஆற்றவும் எளியராயினேம்' எனத் தம் எண்மைநிலை காட்டி இரங்கியதென்க. என்னை?

> "அருமைக் காலத்துப் பெருமை காட்டிய
> எண்மைக் காலத்து இரக்கத் தானும்"

(தொல்-கற்பு-கூ) எனத் தொல்காப்பியனார் ஓதுதலும் அறிக.

“ பொய்கை யூரன் கேண்மை செய்தின்புற்றனெம் ” எனப் பாடம் ஓதி அதற்கியையப் பொருள் காண்பாரும் உளர்.

## பாட்டு - கூஉ : தலைவன் கூற்று

துறை :—தலைமகன் இடந்தலைப் பாட்டின்கண் கூடலுறும் நெஞ்சிற்குச் சொல்லியது அஃதாவது, இயற்கைப் புணர்ச்சி எய்தித் தலைவியைப் பிரிந்தபின்னர் மீண்டும் இடந்தலைப்பாட்
டின்கண் தலைவியைக் கூடவிழையும் தன் நெஞ்சிற்குத் தலைவன் தலைவியின் நலனுரைத்தது

இதன்கண், ‘அவள் ஆ! எத்துணை நறியள்! நல்லோள்! அவள் மேனி தளிரினும் மெல்லிது! முயங்கற்கு மிகவும் இனியது!’ என்று தலைவன் தன் நெஞ்சொடு கூறிக்கொள்கின்றான்.

### மூலமும் உரையும்

கூக-

கூஉ. கோடல் எதிர்முகைப் பசுவீ முல்லை
நாறிதழ்க் குவளையொ டிடைப்பட விரைஇ

ஐதுதோடை மாண்ட கோதை போல
நறிய நல்லோள் மேனி
முறியினும் வாய்வது முயங் கற்கும் இனிதே.
—சிறைக்குடி ஆந்தையார்.

(இ - ள்.) கோடல் எதிர் முகைப் பசு வீ முல்லை-காந்தள் மலா அரும்பிய அரும்பாகிய பசிய முல்லை என்னும் இவை யிற்றை, நாறு இதழ்க் குவளையொடு இடைப்பட விரைஇ-மணங்கமழும் இதழ்களையுடைய குவளை மலரோடே நடுவே
நடுவே கலந்து, ஐது தொடை மாண்ட கோதை போல-அழகிதாகத் தொடுத்தற றொழிலானே மாட்சிமைப்பட்ட மாலைபோல, நறிய நல்லோள் மேனி-நறுநாற்றத்தையுடைய நல்லோளது மேனி, முறியினும் வாய்வது - தளிரையுங் காட்டில் நிறனும் மென்மையும் பொருந்தியது மேலும், முயங்கற்கும இனிதே-தழுவுவதற்கும் மிகவும் இனியது.

**விளக்கம்:**—கோடல் - காநதள் மலர். இது, தலைவியின் கைகளை நினைநது கூறியது. எதிர்முகைப் பசுவீ முல்லை - அரும்பி மலராத நிலையிலுள்ள பசிய பூவும முல்லையும். இது புதிதாக முளைத்தெழும் தலைவியின் எயிற்றொழுங்கினை எண்ணி இயம்பியது. நாறிதழ்க் குவளை, இமையையுடைய கண்களைக் கருதியதென்க. இவ்வுறுப்புக்கள் அழகுற அமைந்திருக்கும் அருமை கருதி, 'ஐது தொடைமாண்ட கோதை' என்றான். ஐது - அழகிது. தொடை-தொடுத்தற் றொழில். மாண்ட - மாட்சிமைப் பட்ட. கோதை - மாலை. நறிய நறுமையுடைய.

இது மேனிக்கு அடை. மூக்கிற்கு இனிமையாகிய நறுமையோடே ஏனைப் பொறிகட்கும் மனத்திற்கும் இன்பமாகிய நலன் எல்லாம் குறையற உடையள் என்பான், நல்லோள் என்றான். மேனி - ஈண்டு உடம்பிற்கு ஆகுபெயர். முறி - ஈண்டு மாந்தளிர் என்க. மாந்தளிர் முயங்கின் வாடிக் குழைந்து கரிந்து கெடுமாகலின், இம்மேனி முயங்கிற் றளிர்ப்பதன்றிக் கெடாதென்பான், 'முறியினும் வாய்வது' என்றான். "உறுதோ றுயிர்தளிர்த்த"லுண்மை கருதி முயங்கற்கும் இனிதே என்றான். இதனைப் "புணர்ந்துழி மகிழ்ந்து கூறியது" என்பர் நச்சினார்க்கினியர். (தொல் - அகத். கச; களவு - க.)

## பாட்டு - சுந : தலைவன் கூற்று

துறை :—பொருள்கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது அஃதாவது, இன்மையதிளிவு கருதிப் பொருளீட்டி வரல் வேண்டும் என்று அவாவிய தன் நெஞ்சிற்குத் தலைவன் கூறியது.



இதன்கண், தலைவன் தன் நெஞ்சை நோக்கி, 'நெஞ்சே ஈதலும், இன்பம் துகர்தலும், பொருளில்லார்க்கு இல்லை என்று கருதி, அப்பொருளீட்டற்கு விரைகின்றாய். அத்தொழிலிற்குச் செல்லுங்கால் தலைவி உடன் வரமாட்டாளன்றோ! பிரிதற் கியலாத அவளைப் பிரிந்து போம்படியோ தூண்டுகின்றாய்; அவளைப் பிரிதலும் இயலுமோ கூறுதி' எனக் கூறுகின்றான்.

சுடு. ஈதலும் துய்த்தலும் இல்லோர்க் கில்லெனச்
செய்வினை கைம்மிக எண்ணுதி
அவ்வினைக்கு
அம்மா அரிவையும் வருமோ
எம்மை உய்த்தியோ உரைத்திசின் நெஞ்சே.
—உகாய்க்குடிகிழார்.

(இ - ள்.) நெஞ்சே - என் நெஞ்சமே! நீ, ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல் என - வறியோர்க்கு வழங்குதலும் இன்பங்களை நுகர்தலும் பொருளில்லாதார்க்கு இல்லை என்று கருதி, செய்வினை கைம்மிக எண்ணுதி-அப்பொருளினை ஆக்கிக் கொள்ளும் செயல்களையே மிகுதியும் எண்ணுகின்றனை, அவ் வினைக்கு - அப்பொருள் ஈட்டுஞ் செயலுக்கு யாம் போமிடத்து, அம் மா அரிவையும் வருமோ-அழகிய மாமை நிறத்தையுடைய நங்கையும் நம்மோடே வருவாளோ, வாராளன்றே? எம்மை உய்த்தியோ - அவள் வாராதொழியினும் ஒழிகவென்று எம்மை மட்டும் செலுத்தாநின்றனையோ, உரைத்திசின் - உன் கருத் தினை எமக்கு விளங்கக் கூறிக்காண்.

**விளக்கம்:**—ஈதல் - வறியோரின்மை தீரக் கொடுத்தல். இல்லை எனவே புகழும் இல்லை என்பதாயிற்று. என்னை?

ஈதல்

"உரைப்பார் உரைப்பவை எல்லாம்
இரப்பார்க்கொன்
றீவார்மே னிற்கும் புகழ்" (குறள் - உ௩உ.)

என்றோதுபவாகலான் என்க. வாழ்தலின் ஊதியம் ஈதலானே உறுதலின் அதனை முற்கூறினான். துய்த்தல்-ஐம்பொறியானும் புலன்களை ஆரநுகர்தல். எனவே பொருளிலாதார்க்கு அறமும் இன்பமும் இல்லை என்றதாயிற்று. இதனை,

"இருள்படு நெஞ்சத் திடும்பை தீர்க்கும்
அருள்நன் குடைய ராயினும் ஈதல்
பொருளில் லோர்க்கஃ தியையா தாகுதல்
யானும் அறிவேன் மன்னே" (அகம் - ௩௩௫.)

என்றும்,



"இசையும் இன்பமும் ஈதலு மூன்றும்

. .

அசைவுட னிருந்தோர்க் கரும்புணர் வின்மென,"
(நற் - உ௧௪.)

என றும,

"இன்மை எனவொரு பாவி மறுமையும்
இம்மையும் இன்றி வரும்" (குறள் -

௧0௪௨.)

என்றும் பிறசான்றோர் கூறுமாற்றானும் இத்திருக்குறட்கு "ஈயாமை யானும் துவ்வாமையானும் அவை இலவாயின" எனப் பரிமேலழகர் விளக்கங் கூறுமாற்றானும் அறிக. எனவே ஈதலுந் துய்த்தலும் இல்லென்றது இம்மையும் மறுமையும் கெடும் என்பதாயிற்று.

"ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கில்லென"

என்னும் துணையும்

பொருள்கடைக்கூட்டும் நெஞ்சின்கருத்தினைக் கொண்டு கூறிய தென்க. செய்வினை - பொருள் செய்தற்குரிய தொழில். அஃது நாடிடையிட்டும் கடல் கடந்தும் சென்று வணிகம்செய்தலும் பிறவும் என்க. கைம்மிக எண்ணுதலாவது-மேலும் மேலும் கருதுதல். பொருளீட்டப் போங்கால் தலைவியை உடன்கொண்டு சேறலில்லை ஆகலின், அவள் நம்மோடு வரற்பாலள் அல்லளே என்பான், 'அம் மா அரிவையும் வருமோ,' என்று வினயினன். வரமாட்டாள் ஆதல் அறிந்து வைத்தும எண்ணுகின்றனை என்றவாறு.

இனி எம்மை உய்த்தியோ என்றது, அவளைப் பிரிந்துபோதல் எனக் கியலாதென்பது நீ நன்கறிந்துவைத்தும் எம்மை உய்த்தியோ என்றவாறு. எனவே தலைவியைப் பிரிந்து போதல் இயல்வதன்று என றபடியாம.

## பாட்டு - கூ௪ : தலைவி கூற்று

துறை:—பிரிவிடை ஆற்றாமை கண்டு வருவர் எனச் சொல்லிய தோழிக்குக் கிழத்தி உரைத்தது. அஃதாவது- தலைவன் பிரிந்தமையாலே பெரிதும் ஆற்றாமை எய்திய தலைவியைத் தோழி அவர் விரைவில் வருவர் ஆற்றுக என்று தேற்றினளாக, அவட்குத் தலைவி கூறியது.

இதன்கண், தலைவி 'தோழி! நந்தலைவர் நமது வருத்தத்தை நன்கு அறிந்தவராயிருந்தும் தாம் வரக்குறித்த பருவத்தினும வந்திலராய்த் தூரிய நாட்டின்கண்ணே தங்கினரே! யான் என் செய்கோ!' என்று வருந்துகின்றாள்.

சுச. பல்லா நெடுநெறிக் ககன்று வந்தெனப்
புன்றலை மன்றம் நோக்கி மாலை
மடக்கண் குழவி அணவந் தன்ன
நோயேம் ஆகுதல் அறிந்தும்
சேயர் தோழி சேய்நாட் டோரே.

—கருவூர்க் கதப்பிள்ளை.

(இ - ள்.) தோழீ—, பல் ஆ நெடுநெறிக்கு அகன்று வந்தென-பலவாகிய பசுக்கள் நெடிய வழிக்கட் பிரிந்து போயினவாக, மடக்கண் குழவி - மடப்பம் பொருந்திய ஆன்கன்றுகள், மாலை - அவை மீண்டு வருதற்குரிய பொழுதாகிய அந்திமாலையில், புன்றலை மன்றம் நோக்கி - அவை வாராமையானே பொலிவிழந்த மன்றத்தைப் பார்த்து, அணவந்தன்ன - தலை நிமிர்ந்து ஏமாற்ற மடைந்து வருந்தினாற் போன்று, நோயேம் ஆகுதல் அறிந்தும் - யாமும் எதிர்பார்த்து வருந்துவேமாதலை அறிந்து வைத்தும், சேய்நாட்டார் - தூரிய நாட்டிற் சென்ற தலைவர், சேயர் - காலத்தானும் சேயராய் வாராராயினர்.

**விளக்கம்** :—பல்லா - பலவாகிய ஆன்கள். நெடுநெறி - தூரியவழி. அகன்று வருதல் - பிரிந்து போதல். ஈண்டு வந்த என்றது, சென்ற என்னும் பொருளில் வந்தது. வந்தென-சென்றதாக என்க. நாகிளங் கன்றென்பார், மடக்கட்குழவி என்றார். அணவருதல் - தலையை நிமிர்த்து நோக்குதல். அணவந்தன்ன - அணந்து நோக்கினாற் போல. அணவந்தன்ன நோயேம் என்றதனால் கன்றுகள் அணவந்து நோய் கூர்ந்தாற் போன்ற நோய் என்க. "முயக்கிடைத் தண்வளி போழினும் பசப்புறும்" எம்மியல்பு கண்டவராகலின் நெடிய பிரிவை ஆற்றாது பெரிதும் நோய் உடையேம் ஆவேம் என்பதை அவர் நன்கறிகுவர். அங்ஙனம் அறிந்துவைத்தும் காலந் தாழ்த்திருந்தனரே என்பாள், 'நோயேம் ஆகுதல் அறிந்தும் சேயர்' என்றாள். சேய்மை - ஈண்டுக் காலச் சேய்மை. நாட்டினும் சேயராய்க் காலத்தினும் சேயராயினர் என்று வருந்தியபடியாம். சேயர் என்றது, அவர் மீண்டு வருவல் எனக்குறித்த பருவம் கடந்தும் வாராது நெடிது தாழ்த்தனர் என்றவாறு. சேய் நாடு - தூரிய நாடு.

## பாட்டு – கூ௬ : தலைவி கூற்று

துறை :—பருவங்கண்டு அழிந்த தலைமகள், தோழிக்கு உரைத்தது. அஃதாவது, தலைவன் பிரிந்து செல்லுங்கால், 'யான் கார்ப்பருவத் தொடக்கத்தே மீண்டு வருகுவனை; அது

காறும் ஆற்றியிரு' என்று தேற்றிப் பிரிந்தவன், அப்பருவம் வந்த பினனரும் வந்திலாமையானே ஆற்றாமைமிக்குத் தலைவி தோழிக்குக் கூறியது

இதன் கண், வன்மையுடைய பரலில் வீழ்ந்த தெளிந்த நீரைப்பருகித் தன் காதற்றுணையோடே இரலைமான் துள்ளி

யாடாநிற்குமபடி கார்ப்பருவம் வந்தது. அது, 'யான் வரும் பருவத்தே மீண்டு வருவன் எனக் கூறிச்சென்ற நுந்தலைவர் வருகையைப் பெரிதும் விரும்பி, வாராமையானே வருந்தி நொந்து உறைகின்றீரோ நீயிர் அளியரோ அளியர், எனக்கூறி இரங்குவதுபோன்று எனக்குத் தோன்றுகின்றது' தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

எனத்

மூலமும் உரையும்

சூடு. வன்பரல் தெள்ளறல் பருகிய இரலைதன்
இன்புறு துணையோடு மறுவந் துகளத்
தான்வந் தன்றே தளிதரு தண்கார்
வாரா துறையுநர் வரனசைஇ
வருந்திநொந் துறைய இருந்திரோ எனவே.

—கோவூர்கிழார்.

(இ - ள்.) தோழீ, வன்பரல் தெள்ளறல் பருகிய இரலை - வலிய பரற்கற்களிடத்தே நின்ற தெளிந்த நீரைப் பருகிய ஆண் மான், மறுவந்து இன்புறு துணையொடு உகள - தான் இன்ப செய்தற்குக் காரணமான பெணமானிருக்குமிடத்திற்கு மீண்டு வந்து அதனோடே துள்ளி விளையாடாநிற்குமபடி, தளி தரு தண்கார் தான் - மழைததுளி யைய உலகிற்குதவும குளிர்ந்த கார்பபருவம், வாரா துறையுநா வரல நசைஇ - தாங்குறிததுச் சென்ற காலத்தே மீண்டும வருதலின்றி ஆண்டே உறையும வன்கண்ணர் ஆகிய நுந்தலைவா வருதலை விரும்பி, வருந்தி நொந்து உறைய இருநதிரோ - மிகவும் வருந்தியிருத்தற் பொருட்டு உளராயினீரோ? என - என்று என்னை வினதற்கு, வந்தன்று - வந்தது

**விளக்கம்:**—வன்பரல் - வன்மையுடைய பருக்கைக் கற்கள். வன் பரலின்மேல் மழை பெய்தமையால் நீர் நின்றதென்க. அறல் - நீர். சேறில்லாது பரற்கல்லின்மேனின்ற நீர் ஆகலின் தெளிந்த நீர என்றார். முதுவேனிற் பருவங்கழிந்து கார்ப்பருவத்தின்கண் தலைப்பெயல் பொழிந்தமை தோன்ற 'வன்பரல் தெள்ளறல் பருகி' என்றார். இரலை - கலைமான். "அறுகோட்டிரலையொடு மான்பிணையுகளவும்" (பட். 249.) என்றார் பட்டினப்பாலையினும். உகளுதல் - துள்ளி விளையாடல். இன்புறுதுணை - காமவின்பந்துய்த்தற்குக் காரணமான பிணைமான். இதுவும் ஆற்றாமை மிகுதற்குக் குறிப்பேதுவாய் நின்றமை காண்க. மான் உகளுதற்குத் தண்கார் ஏதுவென்க. மறுவந்து - மீண்டுவந்து. தான் - அசை. வந்தன்று - வந்தது. தளிதருதண்கார - மழைத் துளியை உலகிற்கு வழங்கும் தண்மையுடைய கார்ப்பருவம். தண்கார் என்றார், தண்ணளியுடைய கார் என்பதும் தோன்ற என்க.

'பருவம் வந்தும் வாராமையானே நீர் இறந்துபடுவீரே! இறந்து படாது இருந்தமை அவ்வன்கண்ணர் வருவர் என்னும் நசையாற் போலும். இருந்திடுமின்! இருந்தமையால் வருந்தி நோதலே பயன்; ஊழ்வினையை யாரே வெலவார்; ஊழ்வினை ஊட்டாகழியுமெனின் இறந்துபடுவீர்; வருந்தி நோதற்குரிய ஊழுண்மையின் இருந்தனிர்' எனக் கார்ப்பருவமானது வினவுதல்போன்று வந்தது என விரித்துக் கொள்க.

"தன் கற்பால் இட்ட வழக்காயிருக்குங்கார் இவ்வாறு இருந்திரோ எனக் கேட்குமாறு தலைவர் பருவந்தப்பியும் உயிர் வாழ்தலை நொந்து உரைத்தவாறு", என்பாருமுளர்.



## பாட்டு – ௬௬ : தோழி கூற்று

துறை :—பருவங்கண்டழிந்த தலைமகளைத் தோழி பருவ மன்றென்று வற்புறீஇயது.

அஃதாவது, 'கார்ப்பருவம் தொடங்குங்கால் மீண்டு வருகுவல்' எனத்தலைவன் கூறிச் சென்றான்; அப்பருவந்தொடங்கியும் வந்திலன்; அதனால், தலைவி ஆற்றாமைமிக்கு வருந்தினாள்; அதுகண்ட தோழி, 'இது கார்ப பருவம் அன்று; கார்ப்பருவம் வருமுன் தலைவர் வருவர்; அது காறும் ஆற்றியிருத்தலே நின்கடன்' என வற்புறுத்தியது.

இதன்கண், "தோழீ! கொன்றைமரங்கள் இணரூழ்த் தமை கண்டு, இது கார்ப்பருவம்போலும் அவர் வந்திலரே என்று நீ ஆற்றாயாகின்றாய்; வாய்மையாக இது காரப்பருவம் அன்று; இப்பொழுது பெய்த மழை, நிலைபெற்ற பருவ மழையன்று; இம்மழை வேனிற் பருவத்தே ஒரோவெனத் தோன்றிப் பெய் யும் மழையாகும்; இக்கொன்றைகள் தம் அறியாமையாலே இம்மழையைப் பருவ மழையாகக் கருதின; அறிவு மிக்க நீ அங்ஙனம் கருதாது உண்மையுணர்ந்து ஆற்றியிருக்கக் கடவை" எனத் தலைவியைத தோழி தேற்றுகின்றாள்.

சாகூ. மடவ மன்ற தடவுநிலைக் கொன்றை
கல்பிறங் கத்தஞ் சென்றோர் கூறிய
பருவம் வாரா அளவை நெரிதரக்
கொம்புசேர் கொடியிணர் ஊழ்த்த
வம்ப மாரியைக் காரென மதித்தே

—கோவத்தனார்.

(இ - ள்.) தடவுநிலைக் கொன்றை மன்ற மடவ - பரிய அடி யினையுடைய
இக்கொன்றைமரங்கள் தேற்றமாக அறியாமை யுடையன எற்றுலெனின், கல்பிறங்கு அத்தம் சென்றோர் - மலைகள் விளங்கும பாலைநிலத்து அருவழியைக் கடந்து சென்ற நந்தலைவர், கூறிய பருவம் வாரா அளவை - தாம் மீண்டு வரு
தற்கு எல்லையாகக் கூறிச்சென்ற கார்ப்பருவம் வருதற்கு முன்னரே, வம்ப மாரியைக் கார் என மதித்து - இம்முதுவேனிற் பருவத்தே ஒருரேலெனத்தோன்றி மறைந்த நிலையற்ற மழை
யினைப் பருவமழையென்று கருதி, நெரிதரக் கொம்புசேர் கொடியிணர் ஊழ்தத - செறியும்படி கொம்பினிடத்தே உள்ள வாகிய நெடிய பூங்கொத்துக்களை மலர்வித்தன ஆகலான்.

விளக்கம் :—தடவுநிலைக்கொன்றை - பரிய அடிமரத்தினையுடைய கொன்றை என்க. நிற்றலால் அடிமரத்தினை ஆகுபெயரான் நிலை என்றார். தடவு - பெருமை. "தடவும் கயவும் நளியும் பெருமை" (உரி - உஉ.) என்

மூலமும் உரையும்
கூள

பது தொல்காப்பியம். மடவ - அறியாமையுடையன. மன்ற-தேற்றமாக; (நிச்சயமாக.) குறிஞ்சி திரிந்த பாலை என்பாள் கல்பிறங்கு அத்தம் என்றாள், கல் - மலை. பிறங்குதல் - வெயிலானே விளங்குதல். மரங்கள் பிறங்காது வறிய மலைமட்டுமே பிறங்கும் அத்தம் என்றவாறு. அத்தம் - அருவழி. அத்தஞ் சென்றோர் நிரம்பிய அறிவினராகலான் அவர் கூறிய சொற்பிறழார்; அவர் வந்திலர் என்பதே இது கார்ப் பருவம் அன்றென்பதற்குச் சான்றென்பாள் 'அத்தம் சென்றோர் கூறிய பருவம் வாரா வளவை' என்றாள். இது காப்பருவம் அன்றென்ப தற்கு எதுக்காட்டியவாறு. கொன்றைமரம் கருதலளவை முதலிய வற்றால் அளந்து காணும் தகுதியுடையன அல்லவாதலின், ஒன்றை ஒன்றாகக்கண்டு மயங்கின என்றவாறு. நெரிதல் - செறிதல், தழைத்து என்றவாறு. கொன்றைமரங்கள் கார்ப்பருவத்தே தழைத்துச செறிந்து இணரூழ்க்கும் இயல்பின. ஆதலின், தலைவி அவையிற்றைக் கண்டு இது காப்பருவம் எனக் கருதி வருந்தினள் என்க. அது கார்ப் பருவமே ஆகவும் தோழி அது கார் அணறென மருட்டி இது படைத்து மொழிகின்றாள் என்க. பருவம் - கார்ப்பருவம். கொடியிணர் - கொடி போன்று நெடியதாய் நீண்ட பூங்கொத்து. ஊழ்த்தல் - மலர்தல். வம்பமாரி - வேனிற் பருவத்தே ஞெரேலெனத் தோன்றிப் பின் மாறி விடுகின்ற நிலையில்லாத மழை. "வம்பு நிலையின்மை" (உரி - உக.) என்பது தொல்காப்பியம்.

## பாட்டு - கூஎ : தலைவி கூற்று

துறை :—பிரிவிடை ஆற்றாது தலைமகள் தோழிக்கு உரைத் தது. அஃதாவது, தலைவனது பிரிவை தலைவி தோழிக்குக் கூறியது.

ஆற்றாது மெலிந்த

இதன கண், 'நமமைப் பிரிநதுசென்ற வன் கண்ணராகிய தலைவர் நம்மை அன்பொரீஇ மறந்திருபபாரோ? மறவாரெனின் வந்திருப்பரே' என்று தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

கூஎ. உள்ளார் கொல்லோ தோழி கிள்ளை
வளைவாய்க் கொண்ட வேப்ப வொண்பழம்
புதுநாண் நுழைப்பான் நுதிமாண்
வள்ளுகிர்ப்
பொலங்கல வொருகா சேய்க்கும்
நிலங்கரி கள்ளியங் காடிறந் தோரே.
—அள்ளூர் நன்முல்லையார்.

(இ - ள்.) தோழி—, கிள்ளை வளைவாய்க்கொண்ட வேப்ப ஒண்பழம் - கிளி தன் வளைந்த வாயிலே கொண்டுள்ள வேம்பினது ஒள்ளிய பழம், புதுநாண் நுழைப்பான் நுதிமாண் வள் உகிர்ப் பொலங்கலம் ஒரு காசு ஏய்க்கும் - ஒருத்தி புதிய நாணினை ஊடுசெலுத்தும் பொருட்டு முனைமாட்சிமைப்பட்ட

கு—7

வளைந்த உகிர்களிடையே கொண்ட பொன் அணிகலத்தின் ஒற்றைக் காசினை ஒக்கும், நிலம் கரி கள்ளியங்காடு இறந்தோர் - நிலம் கரிந்துள்ள கள்ளியை உடைய பாலைநிலத்தைக் கடந்து

சென்ற நந்தலைவர், உள்ளார் கொல்லோ -

நம்மை நினையவும் மாட்டாரோ?

**விளக்கம் :**—நினைவராயின் வருவரே என்று இரங்கியபடியாம். உள்ளல் - நினைவு கூர்தல். தோழி: அண்மைவிளி. கிள்ளை - கிளி; வளைவாய் வளைவுடைய அலகு. வேம்பமரத்தினது ஒண்பழம் என்க. வேம்பு பாலைக்கருப்பொருள். புதுநாண் - புதிய நூல். கிளி தன் அலகிலே கொண்டுள்ள வேப்பம்பழம் சிவந்த நகங்களையுடையாள் ஒருத்தி நூலை நுழைக்கும் பொருட்டுத் தன் பெருவிரலனும் சுட்டு விரலானும் உகிர் நுனியிலே பற்றிய பொற்காசிற்கு உவமை என்க. நுழைப்பான் - நுழைக்கும்பொருட்டு. பான் விகுதிபெற்ற வினையெச்சம். நுழைப்பான் என்பதனை உயர்திணை ஆணபாலாகக்கொண்டு நுழைக்கும் பொற்கொல்லன் என்பாருமுளர். பொற்கொல்லன் உகிரினைச் சிவந்த கிளிவாயோடு உவமித்தல் பொருந்தாமையுணர்க. ஈண்டுத் தோழி நூலற்ற அணிகலன்களைப் புதுநாணிற் கோக்கும் தொழிலுடையளாகலின், மகளிர் உகிரினை நினைந்து கூறுதலே இயல்பென்க. செவ்விரல் ஆகலின் ஒருத்தி எனத் தகுதியால் எழுவாய் வருவித்துரைத்துக் கொள்க. மகளிர் விரனுதி உகிர்க்குக் கிளிவாயை உவமை கூறும் வழக்கத்தைச் "சார்ந்தன ளிருந்து வாங்குபு கொண்டு கிள்ளைவாயினன்ன வள்ளுகிர் நுதிவிரல் சிவப்பக் கதியறிந் நயக்கவின்" (௬ - எ: ௬௪ - ௩.) எனப் பெருங்கதையினும் "கிளிவாய் ஒப்பின் ஒளிவிடு வள்ளுகிர்" (பொருந - ௩௪.) எனப் பொருநராற்றுப்படையினும் பிற சான்றோர் கூறுமாற்றான் அறிக.

வேம்பின் ஒண்பழம் என்றது. வேம்பின் பூத்தளிர்க்கும் காலத்து வருவன் என்றவர், அது பழமாய்க் கிளியாலே கொள்ளப்படும் இப் பருவத்தும் வந்திலர் என காலநீட்டித்தமை கருதிக் கூறியவாறென்க. இக்கருத்தினை "வேம்பின் ஒண்பூவுரைப்பத் தேமபடு கிளவியவர் தெளிக்கும்பொழுதே" (கூ௫0.) எனவரும ஐங்குறுநூற்றுப் பகுதி யானும் அறிக.

இதனால் பண்டைநாளில் பொற்காசு வேப்பம் பழம்போன்று உருண்டை வடிவிற்றாயிருந்தமையும் உணரப்படும்.

## பாட்டு - கூஅ : தலைவி

கூற்று

துறை :—பிரிவிடைக் கிழத்தி மெலிந்து கூறியது. அஃதாவது, தலைவன் முன்பனிப் பருவத்தும வாராமையால் பெரிதும் வருந்திய தலைவி தனது ஆற்றாமையைத் தோழிக்குக்

கூறியது.

இதன்கண், தலைவி, 'உழுந்தின் முதிர்காயை மானினங் கவர்ந்துண்டற்குக் காரணமான, இப்பனிப் பருவத்திலும் என்

நோய் தீர்க்கும் மருந்து அவர்தம்

மார்பன்றிப் பிறிதில்லை

யாகவும் அவர் வந்திலரே! எங்ஙனம்
வருந்தித் தோழிக்குக் கூறுகின்றாள்.
ஆற்றுகேன்!' என

கூ௯. பூழ்க்கா லன்ன செங்கால் உழுந்தின்
ஊழ்ப்படு முதுகாய் உழையினங் கவரும்
அரும்பனி அச்சிரந் தீர்க்கும்
மருந்துபிறி தில்லையவர் மணந்த மார்பே.

—அள்ளூர் நன்முல்லையார்.

(இ - ள்.) பூழ்க் காலன்ன செங்கால் உழுந்தின் - குறும்பூழ்ப்பறவையின் கால் போன்ற சிவந்த தாளையுடைய உழுந்தினது, ஊழ்ப்படுமுதுகாய்-ஊழ்த்தலையுடைய முதிர்ந்த காய்களை, உழையினம் கவரும் அரும்பனி அச்சிரந் தீர்க்கும் - மானினங்கள் தின்னற்பொருட்டுக் கொள்ளாநின்ற பொறுத்தற்கரிய இம் முன்பனிக்காலத்துண்டாகும் வருத்தத்தைப் போக்குதற்குரிய, மருந்து அவர் மணந்த மார்பே - மருந்தாகற்பாலது என்னை மணந்த அத்தலைவர் மார்பு ஒன்றேயல்லது, பிறிது இல்லை - வேறு இல்லையாம்.

**விளக்கம்** :—பூழ் - குறும்பூழ்; காடை; இஃது ஒரு பறவை. செங்கால் - சிவந்த தாள். ஊழ்ப்படுதல் - மலர்தல், மலர்தலினின்றும் தோன்றிய முதுகாய் என்க. முதுகாய் - நெற்று. உழை - மான். கவர்தல் - இரையாகக் கோடல், அச்சிரம் - முன்பனிக்காலம், அச்சிரந்தீர்க்கும் என்றது, முன்பனிக்காலத்தால் உண்டாகிய நோயைத் தீர்க்கும் என்றவாறு. நோய் - காமநோய், உழுந்தின் முதுகாயை உழையினங் கவரும் என்றது, என் கணவனுர் நுகர்தற்குரிய என் மாமைக் கவினைப் பசலையுண்டு கழிகின்றது என்னும் குறிப்புடையது என்க.

காமநோய்க்கு மருந்து நோய்செய்யும் மார்பேயன்றி வேறின்மையால் மணந்த மார்பே மருந்து பிறிதில்லை என்றாள்.

உழுந்து பனிப்பருவத்தே மலரெடுத்துக் காய்க்கும் இயல்பிற்று. இதனை, "இரும்பனிப் பருவத்து மயிர்க்காய் உழுந்து" (அக.) என வரும் நற்றிணையானும் உணர்க.

தலைவர் என்னை மறந்தனர் போலும் என்பது

கருத்தென்க.

## பாட்டு - கூகூ : தோழி

கூற்று

துறை :—தோழி இரவுக்குறி மறுத்தது. அஃதாவது, வரைந்து கோடலிற் கருத்தின்றிக் களவின்பமே விரும்பி ஒழுகுந்தலைமகன் இரவுக்குறிக்கண் வருவானைத் தோழி வரைவு கடாவுதல் நிமித்தம் 'இரவின்கண் வாரற்க' என மறுத்தது.

இதன்கண், 'நாடனே நீ இரவின்கண் இங்ஙனம் வாரற்க; வரின் நினக்கு இருள் வழியில் ஏதம்பல உண்டாகும் என்று யாங்கள் பெரிதும் அஞ்சாநிற்பேம்' என்று தோழி கூறுகின்றாள்.

௬௯. கருங்கண் தாக்கலை பெரும்பிறி துற்றெனக்
கைம்மை உய்யாக் காமர் மந்தி
கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி
ஓங்குவரை அடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்
சாரல் நாட நடுநாள்
வாரல் வாழியோ வருந்துதும் யாமே.

—கடுந்தோட் கரவீரனார்.

(இ - ள்.) கருங்கண் தா கலை பெரும்பிறிது உற்றென - கரிய கண்ணையும் தாவுந் தொழிலையும் உடைய ஆண்குரங்கு இறந்துபாடுற்றதாக, கைம்மை உய்யாக் காமர் மந்தி - கைம்மைத் துயர்கொண்டு வாழ்தலாற்றாத கணவன்பால்

விருப்பமிக்க பெண்குரங்கு, கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்ந்தி - தன்
தொழிலைக் கற்றிலாத தன் வலிய குட்டியைச் சுற்றத்தினிடத்தே ஓம்படை செய்து, ஓங்குவரை அடுக்கத்துப் பாய்ந்து உயிர் செகுக்கும் - உயர்ந்த மலைப்பக்கத்தே பாய்ந்து உயிரைப் போக்கிக் கொள்ளற்கிடனாகிய, சாரல் நாட - சாரல் பொருந்திய நாட்டையுடையோனே, நடுநாள் வாரல் - நீ இவ்வாறு இவ்விடை யாமத்தே வருதலைத் தவிர்வாயாக, வருந்துதும யாம - இங்ஙனம் நீவரின் நினக்கு ஏதம் வருங்கொல் என்று எண்ணி யாங்கள் பெரிதும் வருந்தா நிற்பேம்.

**விளக்கம்** :—தாக்கலை - தாவுகின்ற ஆண்குரங்கு. தாக்கலை என்றதன்கண் தாவுதற் றொழில் பெரும்பிறிதுறற்குக் குறிப்பேதுவாய் நின்றது : கொம்பிழக்காது தாவுந்தொழில் வல்ல குரங்கும் தப்பி வீழ்ந்து பெரும்பிறிதுற்ற தென்றவாறு. எனவே, இருள செறிந்த நெறியின் ஏதம் எடுத்துக்காட்டினளாயிற்று. பெரும்பிறிது - சாவு. கைம்மை - கணவனையிழந்த நிலை ; இந்நிலை மகளிர்க்குப் பெரிதும் இன்னாமையுடைய நிலையாகலின் மந்தி அதனைப் பொறுத்து உய்யாதாயிற்று என்க. "இன்புறு தங்கணவர் இடரெரி யகமூழ்கத், துன்புறு வன நோற்றுத் துயருறுமகளிர்," (சிலப். துன்பமாலை. ௩௪-௫.) என்றார் கண்ணகியாரும் காமர் மந்தி - கணவன்பால் பெரிதும் விருப்ப முடைய மந்தி. இது கைம்மை யுய்யாமைக்கு ஏதுக்காட்டியவாறு. கல்லா வன்பறழ் - மரமேறுதல் தாவுதல் உணவுதேர்தல் முதலிய தொழில்களை இன்னும் கற்றிலாத இளங்குட்டி. வன்பறழ் என்றது ஆண்குட்டி என்றவாறு. இது மந்தி வரைபாய்தற்கு இயலாத தடையுடையதாயிருந்தும் அத்தடையைப் பொருட்படுத்தாது வரைபாய்ந்தது என அதன் தலையன்பினை எடுத்துக்காட்டியவாறு.

## மூலமும் உரையும்

கல்லா வன்பறழ், என்பதற்குத் "தன் தொழிலை இனிக் கற்றல் வேண்டாத (முழுதுங் கற்ற) வலியகுட்டி" என்பாருமுளர் அங்ஙனம் வலிதாகிய குட்டியைக் கிளைமுதற் சேர்த்துதல் வேண்டாமையானும் அக்குட்டி வரையாய்தற்குத் தடையாகாமையானும் அது சிறப்பன்றென்க. நின் மலையில் வாழ்குரங்கும் கைம்மை உய்யாதென்றது. நினக்கு ஏதம் வருங்கொல் என எண்ணும் எண்ணத்தையே இவன் உய்யாள் என்று குறிப்பாற் கூறியவாறு.

நடுநாள் - ஈண்டு நடு இரவு என்னும் பொருட்டு. வாரல் - வாராது பரிகரி. வருந்துதும் என்றது, நீ இவ்வாறு வருதற்கு வருந்தாநின்றேம் என்றவாறு.

## பாட்டு - எ0 : தலைவன் கூற்று

துறை :—புணர்ந்து நீங்குந தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது. அஃதாவது, இயறகைப புணாச்சிபெற்ற தலைமகன், அவள தந்த ஐம்புல இன்பச சிறப்பால் ஆராமை எய்தி அவள் அருமையைப் புகழ்நது தன் நெஞசிற்குக் கூறியது.

இதன்கண், 'குறுமகள ஒடுங்கீரோதியையும் ஒண்ணுதலையும் உடையள் ; குளிர்ந்த நீர்மையள் ; பிரியுங்கால் அணங்கு செய்பவள் ; அணை தடதோளுடையாள ; அவள நலம உணருமள வன்றிச் சொல்லும் தரதததன்று' என்று தலைவன் தன் நெஞ சோடு கூறிக்கொள்கின்றான்.

௭௦. ஒடுங்கீர் ஓதி ஒண்ணுதற் குறுமகள்
நறுந்தண் ணீரள் ஆரணங் கினளே
இனையள் என்றவட் புனையள வறியேன்
சிலமெல் லியவே கிளவி
அணைமெல் லியள்யான் முயங்குங் காலே.

—ஓரம்போகியார்.

(இ - ள்.) ஒடுங்கு ஈர ஓதி ஒண் ணுதல் குறுமகள் - நெஞ்சமே ஒடுங்கிய நெய்ப்புடைய கூந்தலையுடையள் ஒள்ளிய நெற்றியை உடையள் இளையள், நறுந்தண் ணீரள் - நறிய மணமும் குளிர்ச்சியும் உடைய நீர்மையினை உடையவள், ஆர் ஆணங் கினள் - பிரிந்தபொழுதோ பொறுத்தற்கரிய வருத்தத்தைச் செய்பவளும் ஆகின்றாள், இனையள் என்று அவள் புனையளவு அறியேன் - இத்தன்மையுடையாள் என்று அவள் நலத்தைப் புனைந்துரைக்கும் எல்லையும் யான் அறிகின்றிலேன், கிளவி சில மெல்லிய - நாம பேசும் கிளவிகள் சில செவ்விகளில் மெலிந்தன வாகின்றன, அணை மெல்லியள் யான் முயங்குங்கால் - யான்

அவளைத் தழுவும்போழ்து பஞ்சணைபோலும் மென்மைத் தன்மையுடையள் என்பேன், ஆயினும் அது நிரம்பாது.

விளக்கம் :—நெஞ்சே நாம் பேசும் மொழி சில செவ்வியில் நம் உணர்ச்சியை வெளியிடற்குரிய வன்மையிலாது மெலிவுடையவாகின்றன; அதனால், அவள் இத்தன்மையள் என்று புனைந்து கூறும் எல்லையைச் சொல்லிடந்தாராமையால் அறிகின்றிலேன். அறியேனாயினும், சொல்லைக் கொண்டே ஒருவாறு கூறின் ஈரோதி ஒண்ணுதற் குறுமகள், நறுந்தண்ணீரள், முயங்குங்கால் அணைமெல்லியள் என்பேன், எனினும் அவளியல் முழுதும் கூறியபடியாகாது என்பதாம். எனவே, அவள் தன்மை சொல்லில் அடங்காது என்றவாறு. ஒடுங்கு ஈரோதி - இருபுறமும் ஒடுங்கிய நெய்ப்புடைய கூந்தலையுடையாள். ஈரோதி: அன்மொழித் தொகை. ஒண்ணுதல் - அன்மொழித் தொகை. குறுமகள் என்றது பன்னீராட்டைப் பருவத்திளைஞள் என்றவாறு. குறுமகளை எழுவாயாக்கினுமாம். இனையள் - இத்தன்மையள். புனையளவு - சொல்லால் புனைந்துகூறும் எல்லை. சொன்னலங் கடந்த சுவையுடையளாகலின் சொல்லாற் புனைதற்கு எல்லை காண் கிலேன் என்றான். என்றவன் சொல்லின் குறைபாடு கூறுவான் கிளவி சில மெல்லிய என்றான். மொழி சில செவ்விகளில் மெலிவுடையன என்றபடி. அணைமெல்லியள் யான் முயங்குங்கால் என்றே சொல்லக் கூடும் இச்சொற்கள் அம்முயக்கவின்பத்தை முற்ற வெளிப்படுத்தா மெல்லிய வாதல் காண் என்றான் என்க.

இனிச் சிலவாகிய மெல்லிய கிளவிகளையுடையாள் என்பதும் ஒன்று.

## பாட்டு - எக : தலைவன் கூற்று

துறை :—பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லிச் செலவழுங்கியது. அஃதாவது, இன்மையதிளிவும்

உடைமைய துயர்ச்சியுங் காட்டிப் பொருளீட்டற்கண் ஊக்கிய தன் நெஞ்சிற்குத் தலைவியைப் பிரிதலருமை காட்டித் தலைவன் செலவு அழுங்கியது.

இதன்கண், 'தலைவி நம் உயிர்க்கமிழ்தமாய் நுகர்தற்குச் செல்வமாய்த் திகழ்கின்றாள். இவளிற் சிறந்த செல்வமும் உண்டுகொல்! ஆதலின் இவளைப் பிரிந்து பொருளீட்ட யான் உடம்படேன்' எனத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

எக. மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே
அரும்பிய சுணங்கின் அம்பகட்
டிளமுலைப்
பெருந்தோள் நுணுகிய நுசுப்பிற்
கல்கெழு கானவர் நல்குறு மகளே.

—கருவூர் ஓதஞானியார்.

(இ - ள்.) கல் கெழு கானவர் நல்குறும் - மலை பொருந்திய காட்டிடத்தே வாழும் குறவர் ஈன்றளித்த, அரும்பிய சுணங்கின் அம்பகட்டு இளமுலை - தோன்றுகின்ற தேமலையும் அழகிய பெருமையையுமுடைய இளையவாகிய முலையினையும், பெருந் தோள் நுணுகிய நுசுப்பின் மகள்-பரிய தோள்களையும் நுண்ணி தாகிய இடையினையும் உடைய தலைவி, மருந்தெனின் மருந்தே - உறுதோறுயிர் தளிர்த்தலான் அமிழ்தம் எனின் அவ்வமிழ்தமே ஆகின்றாள், வைப்பெனின் வைப்பே - கண்டுகேட்டு உண்டு உயிர்தது உற்றறியும் ஐம்புலனின் பங்களையும் ஒருங்கேயுடைமை யின் நுகர்தற்குரிய எல்லாச் செல்வங்களின ஈட்டம் என நினையின் அச்செல்வ ஈட்டமுமாவாள்

**விளக்கம்** :—'நெஞ்சே! இவளே அமிழ்தமும் வைப்புமாகச் சிறத் தலின் இவளை நீத்தடையும்பொருள் வேறியாதுளது? இல்லை ஆகலின், இவளை நீத்து நின்வழிப் படரேன்காண்.'

இததகைய சிறந்த மகளை ஈன றளிதத நன்றியை நினைவான் கல் கெழுகானவர் நல்குறும் மகள் என்றான். நல்குறுதல் - கைம்மாறு கருதாது வழங்குதல். உறுதோறுயிர் தளிர்ப்பத் தீண்டலால் அமிழ்தினி யன்றனவோ என்னும் சிறப்புடைமை கருதிப் பெருந்தோள் என்றான். வனப்பும் பருமையும் ஒருஙகேயுடைய வென்பான் அம்பகட்டிளமுலை என்றான். அம்பகட்டிளமுலையின் மேற்படாந்து அழகுக் கழகு செய்யும் சுணஙகினை, அஃது உளத்தின்பஞ் செய்தல் கருதிக் கூறினான். நுசுப்பு - இடை. வைப்பு - ஈட்டிக் குவித்த செல்வத்திரட்சி. பிற் றைக்கு வேண்டுமென வைக்கப்படுதலின வைப்பு என்பது செல்வத் திற்கு ஏதுப்பெயராயிற்றென்க.

செல்வம் சேர்த்தல் இம்மை மறுமைகளிற் போக நுகர்தற்காயின், இவள் மறுமையின்பமாகிய அமிழ்தம் போல்பவளும் ஐம்புல இன்பமும் ஒருங்கேயுடையளுமாகலின் இவளிற் சிறந்த செல்வம் பிறிதில்லை இவளே அனைத்துச செல்வமும் என்பான், 'வைப்பெனின் வைப்பே' என்றான். அமிழ்தமும் செல்வமும் கைவரப் பெற்ற யாம் அவற்றைப் புறக்கணித்துப் பின்னைப் போய்ப் பெறுவதெவன் என்று பொருள் கடைக்கூட்டிய நெஞ்சினைப் பேதைமை யூட்டியவாறும்.

மருந்து - காமநோய்க்குப் பரிகாரம் என்பாரும் உளர்.

## பாட்டு - எ௨ : தலைவன் கூற்று

துறை :—தலைமகன் தன் வேறுபாடு கண்டு வினைய பாங்கற்கு உரைத்தது; அஃதாவது, இயற்கைப்புணர்ச்சி எய்திப் பிரிந்த பின்னர்த் தலைமகளை எய்தப் பெறுமையால் மெலிவுற்ற தலைமகனை இவ்வேறுபாடு நினக்கு எற்றாலாயது என்று வினவிய பாங்கனுக்குத் தலைமகன் உரைத்தது.

இதன்கண், 'மலைப்புறத்தே தினைப்புனத்துக் குருவி ஓப்பு வாள் ஒருத்தியின் பூவும் ஏவும் ஒத்து அலமரும் பெருமழைக்

கண்கள் புறத்தாரெல்லாரும் அறியுமாறு என்னை நோய் செய்தனகாண்!' என்று தலைவன் பாங்கற்குக் கூறுகின்றான்.

எஉ. பூவொத் தலமருந் தகைய ஏவொத்து
எல்லாரும் அறிய நோய்செய் தனவே
தேமொழித் திரண்ட மென்தோள் மாமலைப்
பரீஇ வித்திய ஏனற்
குரீஇ ஒப்புவாள் பெருமழைக் கண்ணே.

—மளளாஜுர.

(இ - ள்.) தேமொழித் திரண்ட மென் தோள் - இனிய மொழியினையும் திரண்ட மெத்தென்ற தோளினையும் உடைய, மாமலைப் பரீஇ வித்திய ஏனல் குரீஇ ஒப்புவாள் - பெரியமலைப் பக்கத்தே பருத்தினைய இடையிடையே விதைத்த தினைப்புனத்தில் குருவி கடிவாளாகிய ஒருத்தியினுடைய, பெருமழைக்கண் - பெருமையுடைய குளிர்ந்த கண்கள், பூ ஒத்து அலமருந்தகைய - அழகான தாமரை மலரை ஒத்துச் சுழலுந் தன்மையுடையனவாய், ஏ ஒத்து - கொடுமை செய்தலில் அம்பினை ஒத்து, எல்லா ரும் அறிய நோய் செய்தன - பிறர் எல்லாம் தெற்றென அறிந்து கொள்ளும்படி துன்பத்தை உண்டாக்கின.

**விளக்கம்** :—குருவி ஒப்புங்கால் 'ஆயோ' எனக் கூவிக் கடிந்தமை கேட்டான் ஆகலின், அதன் இனிமையை முற்படநினைந்து தேமொழி என்றான். தான் முயங்குங்கால் தோளின் இனிமை அறிந்தானாகலின் அதன் பருமையையும் மென்மையையும் நினைந்து 'திரண்டமென்றோள்' என்றான்.. "அணைமெல்லியள்யான் முயங்குங் காலே" (எ0) எனப் பிறரும் இந்நூலகத்துக் கூறுதலறிக. மாயலை - பெரியமலை - மலையின் பக்கத்தே என்றவாறு. பரீஇ - பருவி - பருத்தி. தினைப்புனத்தில் பருத்தி விதைத்தலும் வழக்கம். இதனை, "பருவி வித்திய பைந்தாட் புனம்" (பெருங் - க - ҇௰ : கசு.) எனப் பிறர் ஓதுமாற்றானும் உணர்க. குருவி என்னும் பெயர்ச்சொல் குரீஇ எனவருதல் போன்று பருவி பரீஇ என வந்தது.

இனி, பரீஇ வித்திய எனல் என்றதற்கு "நல்லகாலம் அறிந்து வித்திய தினை" என்பாருமுளர். இதற்கு "நன்னாட்கொண்டு தன்னையர் பரியப் பொன்னேர் சிறுதினை விளைந்த புலந்தொறும்" என வரும் பெருங்கதைப் பகுதியைக் காட்டுவர் அவர். இவ்வெடுத்துக் காட்டினுள் நாட்கொண்டு பரிய விளைந்தபுலம் என்புழிப் பரிய என்னும் சொல், நாட்கொண்டென்னும் பொருட்டாகாமை வெளிப்படை. இவ்வெடுத்துக் காட்டில், பரிய என்பது - பரவாநிற்ப என்னும் பொருட்டாதல் காணலாம். எனவே, பரீஇ வித்திய என்பதற்குப் பரப்பி விதைத்த எனப் பொருள் கோடலும் சிறப்பாகத் தோன்றுகின்றது.

எனல் - தினை. கண்கள் பெரியன வாதல் அழகு. மழை - கண்ணுக்குப் பணபுவமை என்க. அழகால் தாமரை ஒப்பனவாயிருந்தும்

## மூலமும் உரையும்

க0ரு

செயலால் அம்புபோன்ற கொடுமையுடையவாயிருந்தன என்றவாறு. அலமரும் நோய் என்பாரும் உளர். அலமருதல் - சுழலுதல். நின் போல் கேளிரேயன்றிப் பகையும் நொதுமலும் ஆவாரும் அறிந்து கொள்ளும்படி என்பான் எல்லாருமறிய என்றான்.

## பாட்டு - எஎ : தோழி கூற்று

துறை :—பகற்குறி மறுத்த இரவுக்குறி நேர்ந்து அதுவும் மறுத்தமைபடத் தலைமகட்குத் தோழி கூறியது. அஃதாவது,

'இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர் வரைந்து கொள்ளுதலிற் கருத்தின்றிப் பகற்குறிக்கண் வந்தொழுகும் தலைமகனை அப் பகற்குறிக்கண் வாரற்க' எனவும், இரவுக் குறிக்கண் 'வருக' எனவும் தோழி கூறினள்; இரவுக் குறியில் அடிக்கடி தலைவியைக் காணல் அரிதாம் ஆகலின், தலைவன் வரைந்து கொள்ள முயல்வன் என்று கருதியே தோழி அவ்வாறு செய்தாள். பின்னரும் தலைவன் வரைந்துகொள்ள முயலானாய் இரவுக் குறிக்கண் வந்தொழுகுவானாயினன். தோழி 'இரவினும் ஏதம் பலவுள; வாரற்க' என்றாள். இதுகேட்ட தலைவி என்னிது இரவினும் வாரல் என்றனை யான் உய்யுமாறியாது? என அவட்கு இச் சூழ்ச்சி இன்றியமையாது எனத் தோழி கூறுகின்றாள்.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, " அன்னாய் நீ தலைவனை ஆற்றவும் விரும்புகின்றனை என்பது யானும் அறிவேன். அறிந்தே அவனை இரவின்கண் வாராதேகொள் என

மறுத்தேன். இது வன்கண்மையுடைய செயல் என நினக்குத்

தோன்றும்; ஆயினும் இவ்வன்கட் செயலையும் யாம் செய்ய வேண்டியது இன்றியமையாதாகின்றது. இங்ஙனம் நெருக்கினாலன்றித் தலைவன் வரைந்து கொள் ளற்கு முற்படான் என்று கூறுகின்றாள்.

எஃ. மகிழ்நன் மார்பே வெய்யை யானீ
அழியல் வாழி தோழி நன்னன்
நறுமா கொன்று நாட்டிற் போக்கிய
ஒன்று மொழிக் கோசர் போல
வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமாற் சிறிதே.

—பரணர்.

(இ - ள்.) தோழி—, அழியல் நீ மகிழ்நன் மார்பே வெய்யை - யான் பகல் வருவானை இரவு வருகென்று பின்னர் இரவினும் வாரற்க என்றமை நினைந்து பின்னர் அவனை எய்துமா

றென்னே என்று உள்ளம் அழியாதேகொள் நீ தலைவன் மார்பினைப் பெரிதும் விரும்பும் இயல்பினை உன் விருப்பத்திற்கேற்ப அவன் மார்பினைப் பிரியாது நீ பெறவேண்டின், நன்னன் நறுமா

கொன்று நாட்டிற்போக்கிய ஒன்றுமொழிக் கோசர்போல - நன்னன் என்பானுடைய நறிய மாமரத்தை அழித்து அதனை ஊரின்கட் செலுத்தும்பொருட்டு வஞ்சினத்தையுடைய கோசர்

என்பார் செய்த சூழ்ச்சியைபபோல, வன்கட்சூழ்ச்சியும் சிறிது வேண்டும் - இத்தகைய வன்கண்மையுடைய சூழ்ச்சியும் சிறிது செய்தல் இன்றியமையாது வேண்டப்படும்.

**விளக்கம்** :— மகிழ்நன் - மகிழ்தற்குக் காரணமான தலைவன் வெய்யை - விருப்பமுடையாய். ஆல் - அசை. நீ தலைவன் மார்பினைப் பிரியாது நுகர்தல் வேண்டும் என்னும் விருப்பம் பெரிதும உடையாய். அங்ஙனம் பிரியாது நுகர்தற் பொருட்டே யான் இச்சூழ்ச்சி செய்தேன் ஆகலின், நீ இதனை வேறாகக் கருதி வருந்தற்க என்பாள், 'அழியல்' என்றாள் என்க. இருவகைக் குறியானும் அவன் மார்பைப் பிரியாது நுகர்தற்கு இடனில்லை; இவற்றிற்கு ஏதங்காட்டி மறுத்தவழி அவன் நின்னைப் பெற வரைந்து கொள்ளலன்றி வேறு வழியின்மையால் விரைவில் வரைதற்கு முயல்வான். இருவகைக் குறியும் மறுத்தமை வன்கட்செயலாகத் தோன்றினும் இது செய்யாவழி அவன் வரையுமாறின்மையின் செய்தல் இன்றியமையாதென்பாள், வன்கட் சூழ்ச்சியும் வேண்டும் என்றாள். இச்சூழ்சசி வரைந்துகொள்ளும் அளவுமே வேண்டும் என்பாள், சிறிதென்றாள்.

வன்கண் - தறுகண்; கருணையற்ற செயல் என்றபடி. இருவகைக் குறியும் மறுத்தல் ஒருவரை ஒருவர் காணப்பெறாது தலைவனும் தலைவியும் துன்புறுதற் கேதுவாமாகலின் வன்கட்செயலாயிற்று.

தலைவி ஈண்டுச் செய்த சூழ்ச்சிக்கு நன்னன் மாமரத்தை அழித்து நாட்டிற் போக்கற்குக் கோசர் செய்த சூழ்ச்சி உவமை என்க. கோசர் மொழிதப்பாதவராகலின் ஒன்றுமொழிக் கோசர் என்றான்.

கோசர் சூழ்ச்சி தப்பாது பயன்றருமாறுபோல விரைவிற் பயன்றரும் என்பது கருத்து.

என் சூழ்ச்சியும்

கோசர் செய்த சூழ்ச்சியாவது :—

தன் கனியை உண்டாற்கு நீண்ட ஆயுள்தரும் எனக் கூறப்பட்ட மாமரம் ஒன்றனை நன்னன் என்பான் வளர்த்தானாக, அது நெடுநாட் சென்றீன்ற ஒரே கனி ஆற்றில் வீழ, அதனைக் கோசர்குடிப் பெண்ணொருத்தி எடுத்துண்டாள். அதுகேட்டுச் சினந்து நன்னன் அவளைக் கொன்றான். அப்பழிக்கு மாறுசெய்யக் கருதிய கோசர் அவன் ஊரி லில்லாத அமயத்தே அகுதை தந்தையிடம் யானைப் பரிசில் பெற்று வந்த பாடினிகளை அவ்வியானைகளை அம் மாமரத்திற் பிணிக்கச் செய்தனர். அவ்வியானைகள் அம்மரத்தைப் பிடுங்கிக் கொண்டு ஊரி னுட் புக்கன. இச்சூழ்ச்சியால் அம்மாமரம் ஊரினுட் போக்கப்பட்டது எனபது.

நாட்டிற் போகிய என்ற பாடத்தைக் கொண்டு அவனது நாட்டி னுட்புகக எனபாருமுளர்.

## மூலமும் உரையும்

கOள

அகுதை தந்தை பாடினிக்குப் பிடிப்பரிசில் நல்கியது சூழ்ச்சியே யாகும் என்பதனை, இந்நூலில் இப்புலவரே பாடிய,

“இன்கடுங் கள்ளின் அகுதை தந்தை

வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர்
மடப்பிடிப் பரிசில் மானப்
பிறிதொன்று குறித்ததவன் நெடும்புற
நிலையே. என்னும் செய்யுளானும் உணரலாம்.
(உகஅ)

## பாட்டு - எச : தோழி கூற்று

துறை :—தோழி, தலைமகன் குறைமறுதவாற்றாற் கூறியது. அஃதாவது : தோழியின்பால் தலைவன் குறையிரந்தானாக, அதற்கு உடம்பட்ட தோழி 'தலைவனை ஏற்றுக்கொள்க' என்பதுபடத் தலைவிக்குக் கூறியது.

இதன் கண், 'தலைவனை யாம பெரிதும் விரும்பாநின்றோம் ; நாம் இத்துணை விருப்பமுடையோம என்பதனை அவன் அறியாமல் நின்னைப் பெரிதும் விருமபி மெலியாநின்றான்' எனத் தோழி தலைவிக்குக் கூறுகின்றாள்.

எச. விட்ட குதிரை விசைப்பி னன்ன
விசும்புதோய் பசுங்கழைக் குன்ற நாடன்
யாம்தற் படர்ந்தமை அறியான் தானும்

வேனில் ஆனேறு போலச்
சாயினன் என்பநம் மாணலம் நயந்தே.

—விட்டகுதிரையார்.

(இ - ள்.) விட்ட குதிரை விசைப்பின் அன்ன - நெடுநாட் கட்டியிருந்து அவிழ்த்துவிட்ட குதிரை துள்ளி எழுந்தாற் போன்று எழும் எழுச்சியுடைய, விசும்பு தோய் பசுங்கழை - வளைத்துவிடபபட்ட வானத்தைத் தீண்டும் பசிய மூங்கிலையுடைய, குன்றநாடன் - மலைநாட்டையுடைய நந்தலைவன், யாம் தன் படர்ந்தமை அறியான் - யாம் அவன் கூட்டத்தை விரும்பி மெலிந்தமையை அறியானாகி, தானும் வேனில் ஆனேறுபோல - தானும் வேனிலின்கட் பிணிக்கப்பட்ட காளைபோன்று, நம் மாண் நலம் நினைந்து சாயினன் - நமது மாட்சிமைபட்ட நலத்தை விரும்பி அது நுகரப்பெறாமையால் மெலிந்தான்.

விளக்கம் :—விட்டகுதிரை என்றது விடாது பிணிக்கப்பட்டிருந்து பிணியவிழ்த்து விடப்பட்ட குதிரை என்றவாறு. பிணித்துப் பின் விடப்பட்ட குதிரை என்றதற்கேற்ப வளைத்துவிடப்பட்ட கழை

என்க. விசைத்தல் - துள்ளியெழுதல். வளைத்துவிடப்பட்ட மூங்கில் விசும்புதோயும் மலைநாடன் என்றது, நம்பாற் பணிவுடையன் ஆயினும், இயற்கையில் உயர்ச்சியுடையான் என்னும் குறிப்பிற்று. என்னை? "ஒன்று இரப்பான்போல் எளிவந்தும் சொல்லும் உலகம், புரப்பான் போல்வதோர் மதுகையும் உடையன்" (கலி - சஎ.) என்றபடி, வளைப் புழித் தாழவளைதலும் நிமிர்வுழி விசும்புதோய நிமிர்தலும் உடைய மூங்கிலைத் தலைவன் எண்மைக்கும் உயர்வுக்கும் உள்ளுறை உவமை யாக்கிக் கூறினள் என்க.

யாம் அவனைப் பெறுதற்குப் பெரிதும் விருப்பமுற்றிருத்தல் அறியாதவனாய் நம்மைப் பெறற்கரியராகக் கருதிப் பெரிதும் மெலி கின்றான் என்பாள் 'யாந்தற்படர்ந்தமை அறியான்' என்றாள். எனவே யாம் விரும்பிப்பெற எண்ணுகின்ற தலைவனே வலிதில் நம்மைப் பெற முயல்கின்றான் ஆதலின், நன்றேயாயிற்று. அவன் பெரிதும் மெலி தற்கு முன்னரே யாம் அவனை ஏற்றுக்கொள்ளல் வேண்டும் என்ற வாறாயிற்று.

வேனிற்காலத்தே ஆனேறு கட்டவிழ்த்து ஆன்கூட்டத்தில் விடப்படுதல் வழககம்; அக்காலத்தே அது பிணிததுவைக்கப்படின் ஆன்களை நினைந்த நினைவிற்றாய் இரைகொள்ளாது மெலிந்துபோகும் இயல்பிற்று. ஆதலின், தலைவியைக் காணப்பெறாத தலைவனை வேனிற் காலத்தே பிணிப்புண்ட ஆனேற்றோடு உவமித்தாள். வேனிற்காலத்து வெப்பந்தாங்காது மெலிந்த ஆனேறு என்பாருமுளர். வேனில் வெப் பத்தை ஆனேறுகள் தாங்கா என்பது பொருந்தாக் கூற்றென்க.

சாயினன் - மெலிந்தான். என்ப : அசை.

மாண்நலம் - மாட்சி

மைப்பட்ட நன்மை. ஆனேறு ஆனின் நலம் நயந்து மெலிந்தாற் போன்று நம் மாணலம் நயந்து மெலிந்தான் ஆதலின் அவற்கருளுதல் நங்கடன் என்று இரந்தவாறு.

வளைத்துவிட்ட மூங்கிலின் விசைப்பிற்கு விட்டகுதிரையின் விசைப்பினை உவமைகூறிய அருமைகருதி இவர் விட்டகுதிரையார் எனப்பட்டார்; வேனிலானேற்றூர் எனக் குறித்திருப்பின் இன்னும் அழகிதாம்.

## பாட்டு - எரு : தலைவி கூற்று

துறை :—தலைமகன் வரவுணர்த்திய பாணற்குத் தலைமகள் கூறியது. அஃதாவது தன்னைப் பிரிந்திருந்த தலைவன் மீண்டு வருதலை முன்னர் வந்து மொழிந்த பாணனைத் தலைவி தனது ஆர்வம் தோன்ற வாழ்த்தியது.

இதன்கண், 'தலைவர் வருகின்றனர் என யான் கேட்க விரும்பியிருந்த இன்பச் செய்தியை உரைத்த பாணனே! வாய்மையாக விருக்குமோ நின்சொல்; அவர் வருகையை நீயே கண்கூடாகக் கண்டாயோ? அல்லது பிறர் கூறக் கேட்டனையோ? நன்று! நன்று! இந்நற்செய்தி கொணர்ந்த நீ பொன்மலி பாடலி பெறுக. இச்செய்தியை நினக்கு யாரே கூறினர்.' என்கின்றாள்.

### மூலமும் உரையும்

கOசு

எரு. நீகண் டனையோ கண்டார்க்

கேட்டனையோ

ஒன்று தெளிய நசையினம் மொழிமோ
வெண்கோட் டியானை சோணை படியும்
பொன்மலி பாடலி பெறீஇயர்
யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே.

—படுமரத்து மோசிகீரனார்.

(இ - ள்.) பாண—, காதலர் வரவு நீ கண்டனையோ - தலைவரின் வருகையை நீயே கண்கூடாக் கண்டாயோ, கண்டார்க் கேட்டனையோ - அல்லது தலைவன் வருகையைக் கண்ட பிறர் கூறக் கேட்டாயோ, யார்வாய்க் கேட்டனை - அங்ஙனம் பிறர் கூறக் கேட்டிருப்பாய் எனின் யார் வாயிலாகக் கேட்டனை, ஒன்று தெளிய நசையினம - உண்மை தெளிந்துகொள்ளற்கு விரும்பினேம், வெண்கோட் டியானை சோணை படியும் பொன்மலி பாடலி பெறீஇயர் மொழிமோ - வெள்ளிய மருப்பினையுடைய யானைகள் சோணையாற்றில் நீராடற்கிடமான பொன் மிக்க பாடலி நகரத்தை நீ பெறக்கடவாய்; சொலவாயாக!

**விளக்கம்** :—தலைவன் வருகையை எதிர்நோக்கியிருக்கும் அன்பு கெழுமிய தலைவியின் ஆர்வ மிகுதியை அவள் பாணனை வினவு மாற்றாலே நன்கு தெளியக்காட்டிய இப்பாடலின் அழகு நினைந்து நினைந்து இன்புறற்பாலது. இதன்கண் நிகழும் ஒவ்வொரு சொல்லினும் அவளுடைய கடல்போன்ற ஆர்வம் பொதியப்பட்டுள்ள துணர்க.

தான் கேட்கப் பெரிதும் ஆர்வமுற்றிருந்த செய்தியை ஒருவர் கூறுங்கால், அது மெய்யாகவேண்டுமே என்னும் வீதிர்விதிர்ப்பால் இங்ஙனம் அடுத்தடுத்து வினவுதல் உலகியற்கையாகும். தேர்வில் வெற்றியடைந்தனை என நண்பன் அறிவுறுத்துங்கால் தேர்வுக்குரிய மாணவன்பால் இந் நிலையினைக் காணலாம். செய்தித்தாள்களில் வெளியாயிருப்பினும் அதனைப் பன்முறை ஓதிஓதித் தெளிவர் மாணவர்

ஒருவன் ஒருசெய்தி கூறுங்கால் அசசெய்தி தான் கண்டதாக வாதல், அல்லது கேட்டதாக வாதல் இருத்தல்வேண்டும். கண்ட தாயின் ஐயுறற்கிடனில்லை. கேட்ட செய்தியெனின் அச்செய்தியைச சொல்வோர் பொய்யராயவிடத்துச செய்தியும் பொய்யாய் விடுமே. பொய்கூறாத சான்றோர் கூறியதெனின், அது உண்மையென்று தெளியலாம். ஆதலின், கண்டாரக் கேட்டனையோ என்று வினவிய பின்னரும் யார்வாய்க் கேட்டனை என்று அடுத்தும் வினவுகின்றாள்.

ஒன்று தெளிய என்றது உண்மையைத் தெளிந்துகொள்ளும் பொருட்டு என்றவாறு. ஒன்று - உண்மை. இனி ஒன்றென்பதற்கு இவையிற்றுள் ஒன்று என்பாரும் உளர். நசையினம் - தன்மைப் பன்மை. விருப்பமுடையோம் என்க. மோ - முன்னிலையசை. பெரீஇயர் - வியங்கோள்; வாழ்த்துப் பொருளில் வந்தது.

பாடலிநகர் பண்டு சிறந்திருந்தமை இதனால் உணரலாம். யானை சோணைபடியும் என்றது, பாடலி சோணையாற்றின் கரைக்கண் உள்ள

தலைநகரமாதலை உணர்த்துதல் அறிக. பாடலி நகரத்தே பொன் மிக்கிருந்தமை "பாடலிப் பிறந்த பசும்பொன் வினைஞரும்" (க. இஅ: சஉ.) எனவரும் பெருங்கதையானும் அந்நகர் புகழ்நிறைந்த நகரம் என்பதனைப்,

"பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை
நீர்முதற் கரந்த நிதியங் கொல்லோ" (அகம்: உ௬௫)

எனவரும் அகப்பாட்டானும் உணர்க. பாடலி பெறீஇயர் என்றது, பெருஞ்செல்வம் பெற்று வாழ்வாயாக என்று வாழ்த்திய படியாம். பாணர் சில செவ்விகளில் பொய்யும் கூறுவர் ஆகலின் இங்ஙனம் அடுத்தடுத்து வினவினுள் என்க.

## பாட்டு - எ௬ : தலைவி கூற்று

துறை :—பிரிவுணர்த்தச் சென்ற தோழிக்கு அவர் பிரிவு

முன்னர் உணர்ந்த தலைமகள் சொல்லியது அஃதாவது, தலைவன் தன்னைப் பிரிவான் என்பதைக் குறிப்பா னுணர்ந்து வருந்திய தலைவிகுத் தோழி தலைவன் பிரிவை வந்து கூறினளாகச் செல வழுங்குவியாது செலவுணர்த்தும் தோழியோடு புலந்து தலைவி

கூறியது.

இதன்கண், 'தோழி ! கல்வரைமார்பர் தண்வரல் வாடை தூக்கும் கடும்பனி அச்சிரக் கொடுமையை யாம் நுகர்ந்து நடுங்கி வருந்தும்படி செல்வார் என்றோ சொல்கின்றார்? செல்லிற் செல்லுக' எனத் தலைவி கூறுகின்றாள்.

எகூ. காந்தள் வேலி ஓங்குமலை நல்நாட்டுச்
செல்ப என்பவோ கல்வரை மார்பர்
சிலம்பிற் சேம்பின் அலங்கல் வள்ளிலை
பெருங்களிற்றுச் செவியின் மானத் தைஇத்
தண்வரல் வாடை தூக்கும்
கடும்பனி அச்சிரம் நடுங்கஞர் உறவே.

—கிள்ளி மங்கலங்கிழார்.

(இ - ள்.) தோழீ, சிலம்பிற் சேம்பின் அலங்கல் வள்ளிலை - மலைக்கண் உள்ள சேம்பினது அசைகின்ற வளவிய இலை, பெருங் களிற்றுச் செவியின் மான - பெரிய களிற்றியானை

யின் செவியை ஒக்கும்படி, தைஇத் தண்வரல் வாடை தூக்கும் - தடவிக்குளிர்ந்த வரவினையுடைய வாடைக்காற்று அசைத்தற்குக் காரணமான, கடும்பனி அச்சிரம் நடுங்கு அஞர் உற - மிக்க பனியையுடைய அச்சிரக் காலத்தில் பிரிவாற்றாமையால் நடுங்கு



தற்குக் காரணமான வருத்தத்தை யான் எய்தும்படி, கல்வரை மார்பர் - கற்களையுடைய மலைபோன்ற மார்பையுடைய தலைவர், காந்தள் வேலி ஓங்குமலை நல நாட்டு - காந்தளை வேலியாக

உடைய உயர்ந்த மலைகளையுடைய நல்ல நாட்டிடத்தே, செல்ப என்பவோ - என்னைப் பிரிந்து போவார் என்று கூறுகின்றனரோ?

**விளக்கம்** :—சிலம்பு - மலை. சேம்பு - ஒருவகைச் செடி. இதன் இலைக்குக் களிற்றுச்செவி உவமை. அலங்கல் - அசைதலையுடைய. வள்ளிலை - வளப்பமான இலை. மான - ஒக்கும்படி. தைஇ - தடவி. தண்வரல் - வாடை குளிர்ந்த வருகையினையுடைய வாடைக்காற்று. அச்சிரம் - முன்பனிக்காலம்: மிக்கபனியையுடைய முன்பனிக்காலம் என்க. இக்காலம் பிரிந்திருப்போர்க்குப் பெரிதும் வருத்தத்தைச் செய்யும் இயல்புடையது. இதனை,

"அச்சிரம் வந்தன் றமைந்தன் றிதுவென

எப்பொருள் பெறினும் பிரியன்மி

ஞேவெனச்

செப்புவல் வாழியோ துணையுடை யீாக்கே

" (அகம்-உகஎ.) எனவும்,

" தண்பணி அச்சிரம் தமியோர்க்

கரிதெனக் கனவினும் பிரிவறி யலனே "

(அகம்-கஎஅ) எனவும், பிறசான்றோர் கூறுமாற்றானும் உணர்க.

தூக்கும் என்றது, உயர்த்தி அசைக்கும் என்றவாறு. தோழி பிரிவுணர்த்துங்கால் தலைவன் கூறினன் என்னாது செல்வார் என்று பிறர் கூறக்கேட்டேன் என்றமையாற் செல்ப என்பவோ என்றாள். அவா பிரிவார் என்பதை யான் முன்னரே குறிப்பான் உணர்ந்துள்ளேன் ; இப்பொழுது வெளிப்படையாகவும் பிரிந்து போவார் எனக் கூறப்படுகின்றனரோ என்றவாறு.

கல்வரை மார்பர் என்றது, கன்னெஞ்சர் என்றும் ஒரு பொருள் தோன்ற நின்றதுணர்க. அஞர் - வருத்தம். பனியும் வாடையும் அச்சிரத்திற்குரியனவாய்ப் பிரிந்தாரை நடுங்கஞர் உறச்செய்தலின், 'தண் வரல் வாடைதூக்கும் கடும்பனியச்சிரம்' என்றாள்.

## பாட்டு - எஎ: தலைவி கூற்று

துறை :—பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைமகள், தோழிக்

குச் சொல்லியது. அஃதாவது, தலைவன் பிரிந்தமையால் ஆற்றாமை மிக்க தலைவியை 'நீ இங்ஙனம் ஆற்றாயாகின்றதென்?' என வினவிய தோழிக்குத் தலைவி தன் ஆற்றாமைக்கு ஏதுக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'நீ ஆற்றாமையால் தோள் மெலிந்து வருந்துதல் தவறுடைத்தென்கின்றனை; கடத்



தற்கரிய பாலைநிலத்தில் தலைவர் சென்றார் என்று யான் எண்ணுங்கால், இத்தோள் மெலிந்து வருந்துதல் எங்ஙனம் தவறுடையதாகும்?' என்று கூறுகின்றாள்.

எஎ. அம்ம வாழி தோழி யாவதும்
தவறெனின் தவறோ இலவே வெஞ்சுரத்து
உலந்த வம்பலர் உவலிடு பதுக்கை
நெடுநல் யானைக் கிடுநிழ லாகும்
அரிய கானஞ் சென்றோர்க்கு
எளிய வாகிய தடமென் தோளே.

—மதுரை மருதன் இளநாகனார்.

(இ - ள்.) அம்ம வாழி தோழி - தோழியே

கேட்பாயாக,

வெம்சுரத்து உலந்த வம்பலர் - பாலைநில வழியேசென்று ஆறலை கள்வரானே கொல்லப்பட்டவருடைய உடலை மூடுதற்கு, உவல் இடுபதுக்கை - தழையை இட்ட கற்குவியல், நெடுநல் யானைக்கு இடுநிழல் ஆகும் - நெடிய நல்ல யானைகட்குச் செயற்கையாலிடப் பட்ட நிழலாகப் பயன்படாநின்ற, அரிய கானம் சென்றோர்க்கு - கடத்தற்கரிய பாலைநிலத்தே சென்ற தலைவர்ப்பொருட்டு, எளிய வாகிய தடமென் தோள் - ஆற்றாமையான் மெலிந்திளைத்த பெரிய மெத்தென்ற தோள்கள, தவறெனின் - தவறுடையன என்பாயாகில், யாவதும தவறு இல - அவைகள் சிறிதும் தவறுடையன ஆகமாட்டா.

**விளக்கம்** :—அம்ம - கேட்பித்தற்கண் வந்தது. "அம்ம கேட்பிக் கும்," (இடை - உஅ.) என்பது தொல்காப்பியம். வாழி - அசை.

யாவதும் - ஒருசிறிதும் என்றபடி "அஞ்சி லோதி அசையல் யாவதும், அஞ்ச லோம்புமதி" (குறிஞ்சிப் பாட்டு: கஎக.) என்புழியும் அஃதப்பொருட்டாதல் அறிக. எளியவாகிய தடமென்றோள் தவறெனின் தவறில என்க. உன் தோள்கள் ஆற்றாமையால் எளியவாதல் தவறு என்றாட்கு, அவர் அரிய கானஞ்சென்றமையைக் கருதி அவை மெலிகின்றனவாகலின், தவறில என்றாள் என்க. எனவே பிரிந்தமைக்கன்று அரிய கானம் சென்றமைக்கே ஆற்றேனாயினேன் என்றபடியாம். இனி அவர் அரிய கானம் சென்றமை தவறு எனின் அவரைப் பிணித்துச் செலவழுங்குவிக்கும் வன்மையிலாத இத்தோள் களும் தவறு, ஓவில என்பாருமுளர். ஓவில - ஒழிவில என்று பொருள் கொள்வர் அவர். இதற்கு,

" சுரம்பல விறந்தோர்

தாம்பழி யுடைய ரல்லர் நாளும்
நயந்தோர்ப் பிணித்தல் தேற்றா வயங்குவினை

மூலமும் உரையும்

கக்கூட்

வாளே ரெல்வளை நெகிழ்த்த

தோளே தோழி தவறுடை யவ்வே "

(௨௬௭.) என்னும் அகப்பாட்டை எடுத்துக்காட்டுவார்; ஏற்புடையது கொள்க.

வம்பலர் - வழிச்செல்வோர். பதுக்கை - இறந்தோர் உடலைவிட்டு மூடிய கற்குவியல். கற்குவியலே யானைக்கு நிழலாகும் எனவே பிறிதொரு நிழலும் இல்லாத பாலை என்றவாறாயிற்று. வழிச் செல்வோரை ஆறலை கள்வர் கொன்று புதைக்கும் கொடுநெறியாதலோடு நிழலுமற்றதாகலின், அரிய கானம் என்றாள்; அரிய - கடத்தற்கரிய என்க. அவரைப் பிணித்துச செலவழுங்குவியாமையால் தோள் தவறுடைவில என்பார்க்குக் கானத்தின் கொடுமை கூறல் சிறப்பின்றி நிற்றலும் உணர்க.

பாட்டு - ௭அ : பாங்கன்

துறை :—பாங்கன் தலைமகற்குச் சொல்லியது. அஃதாவது: காம நோயான் மெலிந்த தலைவனை, 'இது நின் தகைமைக்குத் தகுநததன்று' எனப் பாங்கன் கழறியது.

இதன்கண், காமத்தான் மெலிந்த தலைவனை

நோக்கி, 'உயர்

குடிப் பிறந்தோய்! இது நினக்குத் தகுவதன்று. தன்னை நன் றென உணரார் மாட்டும் சென்று இரநது நிற்கச் செய்யும் பெரும் பேதைமைத்துக் காமம்; ஆதலால் அது நின்னால் வெறுக்கற் பாலது' எனப் பாங்கன் இடித்துரைக்கின்றான்.

எஅ. பெருவரை மிசையது நெடுவெள் ளருவி
முதுவாய்க் கோடியர் முழவின் ததும்பிச்
சிலம்பின் இழிதரும் இலங்குமலை வெற்ப
நோதக் கன்றே காமம் யாவதும்
நன்றென உணரார் மாட்டும்
சென்றே நிற்கும் பெரும்பே தைமைத்தே.

—நக்கீரனார்.

(இ-ள்.) பெருவரை மிசையது நெடுவெள் அருவி-பெரிய மலையுச்சியிற் றோன்றியதாகிய நெடிய வெள்ளிய அருவி நீர், முது

வாய்க் கோடியர் முழவில் ததும்பி - அறிவு வாய்த்தலையுடைய கூத்தரது முழவைப் போன்று ஒலித்து, சிலம்பின் இழிதரும் இலங்கு மலை வெற்ப - பக்கமலையின் கண்ணே வீழாநிற்கும் விளங்குகின்ற மலைகளையுடைய தலைவனே, காமம் நோதக்கன்று-காமநோய் வெறுக்கத்தக்க தொன்றாம்; அஃது எற்றாலெனில், யாவதும் நன்றென உணரார் மாட்டும்-தன்னைச் சிறிதும் நன்று என உணராதவரிடத்தும், சென்று நிற்கும், பெரும் பேதை

கு.—8



மைத்து - வலிந்து சென்று குறையிரந்துநிற்கும் பெரிய மடமையை அஃதுடைத்தாகலான்.

**விளக்கம்** :—பெரிய மலையுச்சியிற் பிறந்த அருவி, தன் பிறப்புயர்வு நோக்காது தாழ்ந்த மலைகளிடத்தே வீழ்ந்து இழியுமாறு போல, நீயும் நின் உயர்குடிப்பிறப்பிற்கேற்ப ஒழுகாது காமநோயால் இழிந்து கலங்கா நின்றனை என, உள்ளுறை காண்க. வெற்ப என்றது குறிஞ்சித்தலைவன் என்னும் பொருட்டாய் நின்றது. நோதக்கன்று - வெறுக்கத்தக்கது. யாவதும் தன்னை உணரார் மாட்டும் என்க. காமம் நன்றென வுணரா தார் காமஞ்சாலா இளமையோள், சான்றோர் முதலியோர். காமங் கொண்டோர் காமஞ்சாலா இளமையோளைப் பின்னிற்றலும், மடலூர்ந்து சான்றோர் அவைக்களம் ஏறுதலும் உடையராதல் அறிக. இனிக் காமம் கொண்டோர் மகவுடைமந்தி போலத் தங்குறையை அகனுறத் தழீஇக் கேட்கப்பெறாத தலைவி தோழி பாங்கன் முதலியோ ரிடத்தும் சென்று நிற்றலும் உடைய மடமையுடையர் ஆதலும் உணர்க.

தன்னை உணரார் மாட்டுச் சென்று நிற்றல் மடமை என்பதனை,

"ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின்
அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று"

(குறள் - கூகூஎ) என்றும்,

"புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை"

(குறள் - கூகூகூ)
என்றும் வரும் குறட்பாக்களானும் அறிக.
காமநோயுற்றாரிடத்தின்றாதலை,

இத்தகைய மானகுணம்,

"செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை
காமநோய்
உற்றார் அறிவதொன் றன்று."

(குறள் - கஙஞ) எனவரும் குறட்பாவானும் உணர்க.

இத்தகைய பெருந்தகைமையைக் கைவிடலிற் பெரும் பேதைமைத்தே என்றான் என்க. பேதைமைத்து - அறியாமையை உடையது.

## பாட்டு - எகூ : தலைவி கூற்று

துறை :—பொருள்வயிற் பிரிந்த தலைமகனை நினைந்த தலை மகள் தோழிக்குச் சொல்லியது. அஃதாவது, தலைவன் பிரிந்து நெடுநாள் தங்கிவிட்டமையால் ஆற்றுமை மிக்க தலைவி தோழிக்குத் தன் ஆற்றுமை தோன்றக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி "தலைவர் தாம் பிரியுங் காலத்து அக்கருத்தை என்பாற் கூறின், யான் உடன் படேன் என்று நினைத்து, எனக்கு அறிவியாமலே பிரிந்தனர்; அத்தகைய வன்கண்ணர் நம்மை மறந்து மீண்டு வாராதே ஆண்டே தங்கிவிடுவரோ?" என்று கூறுகின்ருள்.

### மூலமும் உரையும்

கக௩

எகூ. கான யானை தோனயங் துண்ட
பொரிதாள் ஓமை வளிபொரு நெடுஞ்சினை
அலங்கல உலவை யேறி ஒய்யெனப்
புலம்புதரு குரல புறவுப்பெடை பயிரும்
அத்தம் நண்ணிய அங்குடிச் சீறூர்ச்

சேந்தனர் கொல்லோ தாமே யாந்தமக்கு
ஒல்லேம் என்ற தப்பற்
சொல்லா தகறல் வல்லு வோரே.

—நடவாயிற் கீரத்தனுர்.

(இ. ள்.) யாம் தமக்கு ஒல்லேம் என்ற தப்பல் - யாம் பிரிவினைப் பொறுக்கமாட்டோம் என்று அவர்க்குக் கூறிய தவற்ருல், சொல்லாது அகறல் வல்லுவோர் - அறிவியாமல் பிரிந்து போதலில் வன்மையுடையோர், கானயானை தோல் நயந்து

உண்ட பொரிதாள் ஓமை-காட்டியானையாற் பட்டையை விரும்பி உண்ணப்பட்ட பொரிந்த அடியையுடைய ஓமை மரத்தினது, வளி பொரு நெடுஞ் சினை அலங்கல் உலவை ஏறி - காற்ருல் புடைக்கப்பட்ட நெடிய கிளையின்கண் அசையாநின்ற உலர்ந்த கொம்பில் ஏறி, ஒய்யெனப் புலம்பு தரு குரல புறவுப் பெடை பயிரும் - ஒய் என்று தனிமையும் வருத்தமும் தோற்றுவிக்கும் குரல் உடையவாய் ஆண்புருக்களைப் பெண்புருக்கள் அழையாநின்ற, அத்தம நண்ணிய அங்குடிச் சீறூர்-சுரவழி பொருந்திய அழகிய குடிகளையுடைய சிறிய ஊரின்கண், சேந்தனர் கொல்-என்னை மறந்தனராய்த் தங்கி விட்டனரோ.

**விளக்கம்** :—சொல்லாது அகறல் வல்லுவோராகலான், சீறூர்ச் சேந்தனர் கொல்லோ என ஏதுவாக்குக. காட்டியானை ஓமைத் தோலையுண்ணும் என்பதை,

"நயந்தலை மடப்பிடி உயங்குபசி களைஇயர்

பெருங்களிறு தொலைத்த முடத்தாள் ஓமை"
(நற்றிணை - கநஉ)

எனப்பிறர் கூறுமாற்றானும் உணர்க ஓமை - பாலைக் கருப்பொருள். தோல் - ஈண்டு ஓமை மரத்தின் பட்டை, அப்பட்டையும் கிடைப்பது அருமை என்பது தோன்ற 'நயந்துண்ட' என்றார். அலங்கல் உலவை-அசைகின்ற உலர்ந்த கொம்பு. மழை வறத்தலால் ஓமையின் கொம்புகள் உலர்ந்தன என்க. ஒய் - ஒலிக்குறிப்பு: விரைந்து எனினுமாம். புலம்பு தரு குரல - ஆண்புறாக்கள் பிரிந்தமையால் தனிமைத்துயர் தோன்றும் குரலை உடையன என்க. புறவு - ஈண்டு ஆண்புறா என்னும் பொருட்டு. பயிர்தல்-அழைத்தல். பெடை, தம் புறவினை அழைக்கும் புலம்பு தரு குரலை அவர் ஆண்டுக் கேட்டும் நம்மை நினையாது தங்கினார்



என்று இரங்கியபடியாம். அத்தம் - பாலை நிலவழி. சேர்ந்தனர்-தங்கினர். தாம், ஏ, அசைகள். 'பிரிதற்கு உடன்படேம்' என, யாம் அவர்க்கு முன்னர் அறிவித்திருந்தது தாம் செய்த் தவறு என்றும் அத்த வற்றாலேயே அவர் சொல்லா தகன்றனர் என்றும் இரங்கினள் என்க. அத்தவறு செய்திலேமேல் அவர் பிரிவுணர்த்துவர்; உணர்த்துங்கால் செலவழுங்குவித்தல் கூடும்; அது கழிந்தது என்றவாறு. ஒல்லுதல்-இயைதல்; பொறுத்தலுமாம்.

இதனை ஆசிரியர் நச்சினார்க்கினியர் "புலம்பு தரு குரல வாய்ப் புறவினைப் பெடை அழைக்கும் வருத்தங் கண்டு வினைமுடியாமல் வருவரோ என அஞ்சியவாறு காண்க" (தொல் - கற்பு - எ.) என்றோதுவர்.

பாட்டு - அ௰ : பரத்தை கூற்று

துறை :—தலைமகட்குப் பாங்காயினர்

கேட்பப் பரத்தை
சொல்லியது. அஃதாவது, தலைவி தன்னைப் புறங்கூறினள் எனக்கேட்ட பரத்தை, அது பொறாது அத்தலைமகட்குப் பாங் காயினர் கேட்பத் தலைமகளைப் பழித்தது.

இதன்கண், 'யாம் தலைவனோடே ஆம்பற்றழையை உடுத்துக் கொண்டு வெள்ளமிக்க நீர்த்துறையில் விளையாடச் செல்வேம். யாம் தலைவனோடே விளையாடுதலைத் தலைவி அஞ்சுவாளாயின், தன் கணவனை விளையாட வாராமற் பாது காப்பாளாக' என்று கூறுகின்றாள்.

௮௦. கூந்தல் ஆம்பல் முழுநெறி அடைச்சிப்
பெரும்புனல் வந்த இருந்துறை விரும்பி
யாமஃ தயர்கம் சேறும் தானஃது
அஞ்சுவ துடையள் ஆயின் வெம்போர்
நுகம்படக் கடக்கும் பல்வேல் எழினி
முனையான் பெருநிரை போலக்
கிளையோடுங் காக்கதன் கொழுநன்
மார்பே.

—ஔவையார்.

(இ - ள்.) கூந்தல் ஆம்பல் முழு நெறி அடைச்சி - ஆம்ப லினுடைய கூந்தல் போன்ற நெறிப்பினையுடைய முழு நெறித் தழையை உடுத்து, பெரும்புனல் வந்த இருந்துறை விரும்பி - மிக்க நீர் பெருகிவந்துள்ள பெரிய துறையின்கண் ஆடுதலை விரும்பி, யாம் அஃது அயர்கம் சேறும் - யாம் அவ் விளையாட் டைச் செய்வோமாகி ஆண்டுச் செல்வேம், தான் அஃது அஞ்சு வது உடையளாயின் - தலைவி யாம் ஆடும் அச் செயலைப் பழி யென்று கொண்டு அஞ்சுவாளாயின், வெம்போர் நுகம்படக்

கடக்கும் பல் வேல் எழினி - வெவ்விய

போரின்கண் நடுநிலை

மூலமும் உரையும்

கசுஎ

யுண்டாக வெல்லும் பலவாகிய வேற்படையை

உடைய எழினி

என்பானுடைய, முனை ஆன் பெருநிரை போல - போர்முனைக் கட்பட்ட ஆன்களின் பெரிய திரள் பாதுகாக்கப்படுமாறுபோல, கிளையொடு காக்க தன் கொழுநன் மார்பு - தன் பாங்காயினு

ரோடும் பாதுகாத்துக் கொள்வாளாகத் தன்

கணவனுடைய

மார்பினை.

விளக்கம்:—ஆம்பல் கூந்தல் முழுநெறி அடைச்சி என மாறுக. கூந்தல் போன்ற நெறிப்பினையுடைய முழுநெறித் தழை என்க. அடைச்சி - உடுத்து. பரத்தையர் ஆம்பற்றழை உடுத்தலை,

"......ஆம்பலம்பகை நெறித்தழை
தித்திக் குறங்கின் ஊழ்மா றலைப்ப
வருமே சேயிழை"
(குறுந் : உ௯௩)

என்னுமிடத்தும் உணர்க. புதிதாகப் புனல் பெருகி வந்தமை தோன்றப் பெரும்புனல் வந்த இருந்துறை என்றாள். பலரும் சென்று ஆடுந் துறையிலேயே ஆடுவேம் வல்லளாயிற் காக்க என்பாள், இருந்துறை என்றாள் இருந்துறை – பெரிய துறை. விருந்திறை என்றும் பாடம். இதற்கு விருந்தாக வந்த தலைவனோடே எனப் பொருள் கூறுக. தான் என்றது ஈண்டுத் தலைவியை. தலைவனோடே யாம் எம் இல்லில் ஆடுதலையே பொறாதாள் மேலும் யாம் நீராடவும் செல்வதைப் பெரிதும் வெறுப்பாளன்றே வெறுப்பதுண்டாயிற் காக்கக் கடவள் என்றபடி. தலைவனை யாமே பிணித்துக் கொள்வோமோ என்று தலைவி அஞ்சுவாள் என்பாள், 'அஞ்சுவ துடையளாயின்' என்றாள்.

மறவர்கள் எப்போது போர் வரும் என்று விரும்புவார்கள் ஆதலால், வெம்போர் எனப்பட்டது. கொடிய போர் எனினுமாம். நுகம்-நுகத்தடியிற் பகலாணி. ஈண்டு நுகம் என்றது, அதன்கண் ஆணிக்கு ஒருமடி ஆகுபெயராய் அது பின்னரும் நடுவுநிலைமையைக் குறித்து இருமடியாகுபெயராய் நின்றது. நுகம் படுதலாவது நடுநிலைமை உண்டாதல். அஃதாவது பகைவரை வஞ்சியாது எதிர்நின்று வெல்லல் முதலாய அறத்தை மேற்கோடல். எழினி – அதியமான் அஞ்சி என்னும் வேந்தன். இவன் தன்னாட்டுப் பசுக்களைப் பகைவர் கவரவந்துழி அவர்களை வென்று பசுக்களைப் பாதுகாத்தான் என்னும் வரலாற்றினை,

"சில்பரிக் குதிரைப் பல்வேல் எழினி
கெடல்அருந் துப்பின் விடுதொழின் முடிமார்
கனையெரி நடந்த கல்காய் கானத்து
வினைவல் அம்பின் விழுத்தொடை மறவர்
தேம்பிழி நறுங்கள் மகிழின் முனைகடந்து

வீங்குமென் சுரைய ஏற்றினந் தரூஉம்”
(அகம்: ௧0௫) என்றும்,

“நெடுநெறிக் குதிரைக் கூர்வேல் அஞ்சி
கடுமுனை அலைத்த கொடுவில் ஆடவர்
ஆகொள் பூசலின்”

(அகம்: ௩௭௨) என்றும், வரும் அகப்பாடல்களானும் அறிக.



தலைவன் எம் விருப்பப்படியே ஒழுகுமாறு செய்யவல்லேம்; அவன் அழுக்காறு கொள்ளலாற் பயனில்லை என்றபடியாம்.

## பாட்டு - அக: தோழி கூற்று

துறை :—தோழியிற் கூட்டங் கூடிப் பிரியும் தலைமகற்குத் தோழி சொல்லியது. அஃதாவது, தோழியின்பாற் குறை
யிரந்து அவள் உதவியால் தலைவியைப் பெற்று அவளுடன் கூடிப் பிரியா நின்ற தலைவனுக்குத் தோழி கூறியது.

இதன்கண், தோழி தலைவனை நோக்கி, ‘ஐய! உன்னுடைய சொல்லை வாய்மையாகக் கொண்ட

என்னுடைய சொலலைத் தெளிந்து தலைவி நினக்கு உறுதுணையாயினள்; அவள் நீ பிரிந்து போகின்றமையால் இப்பொழுதே தன் புதுநலனிழந்து புலம்புடையள் ஆயினள்; அவள நிலையை நீ நினைந்து அதோ தோன்றுகின்ற எமது சிற்றூரின்கண்ணும் அடிக்கடி வந்து அவளைக் காண்டல் வேண்டும்' என்று கூறுகின்றாள்.

அக. இவளே, நின்சொற் கொண்ட என்சொல் தேறிப்
பசுநனை ஞாழற் பல்சினை ஒருசிறைப்
புதுநலன் இழந்த புலம்புமார் உடையள்
உதுக்காண் தெய்ய உள்ளல் வேண்டும்
நிலவும் இருளும் போலப் புலவுத்திரைக்
கடலும் கானலுந் தோன்றும்
மடல்தாழ் பெண்ணையெம் சிறுநல் லூரே

—வடம வண்ணக்கனர்.

(இ - ள்.) தலைவனே -, இவளே - இத்தலைவிதானும், நின் சொல் கொண்ட என்சொல் தேறி - நீ குறையிரந்த சொற்களை

நினக்கிரங்கி மேற்கொண்ட என்னுடைய சொற்களைத் தெளிந்து,

பசு நனை ஞாழல் பல்சினை ஒருசிறை - பசிய அரும்புகளையுடைய ஞாழல் மரத்தினது பலவாகிய கொம்புகளின் கீழாகிய ஓரிடத்தே நின்னொடு கூடுதலானே, புதுநலன் இழந்த புலம்பு மார் உடையள் - புதுவதாகப் பெற்ற அழகினையும் நீ பிரித லானே இப்பொழுதே இழந்தமையாலுண்டான தனிமைத் துன் பத்தையும் உடையளாயினள், உள்ளல் வேண்டும் - நீ அவள் தன்மையை மறவாதே நினைத்தல் வேண்டும், உதுக்காண் - உதோ காண்பாயாக, நிலவும் இருளும் போலப் புலவுத் திரைக் கடலும் கானலும் தோன்றும் - நிலாவொளியும் இருளும் ஓரி டத்தே இணைந்து தோன்றுமாறு போலப் புலானாற்றத்தையும்

மூலமும் உரையும்



அலைகளையுமுடைய கடலும் அதன் கரையும் தோன்றுகிற்கும், மடல்தாழ் பெண்ணை எம் சிறு நல்லூர் - அதுவே மடல்கள் தாழ்ந்துள்ள இளம் பனைகளையுடைய எம்முடைய சிறிய நல்ல ஊராகும்.

**விளக்கம்:**—இவள் இப்பொழுது நலனிழந்து புலம்புடையளாதற் குக் காரணம் நீயே பிறரில்லை என்பாள், இவள் நின் சொற்கொண்ட என் சொற்றேறிப் புது நலம் இழந்த புலம்பும் உடையள் என்றாள்.

நின்பாற் குறையிரந்தமைக்கு இரங்கி நின் குறை முடிக்கலானேன் என்பாள், நின் சொற்கொண்ட என்றாள். உன்னை யான் நம்பினேன்; என்னை அவள் நம்பினாள்; அவள்புலம்புடையளாயினள்; நீ அவளை நினைந்து அருளல்வேண்டும் என்று வேண்டியவாறும். பசுநனை-பசிய அரும்பு - புதிய அரும்புகள் முகிழ்த்துள்ள ஞாழல் நீழலிலே நீங்கள் கேண்மை கொண்டீர்கள். அவ்வரும்பு இனி மலர்ந்து காய்த்துக் கனிந்து பயன்தருமாறு போல, நுங்கேண்மையும் தொடர்ந்து பயன் உடையதாக வேண்டும் என்பாள், பசுநனை ஞாழல் ஒருசிறை என்றாள். தலைவனைப் பெற்றுழித் தலைவிக்கு முன்னினும் அழகு மிக்கமையின் அதனைப் புதுநலன் என்றாள். அவன் பிரிந்தவுடன் அப்புதுநலமாறிப் பசப்பூர நின்றாளாகலின், புதுநலன் இழந்த புலம்பு என்றாள். நின்னைத் தலைவனாகப் பெற்றமையால் உண்டாய மகிழ்ச்சி ஒருசார் நிற்பவே இப் பிரிவாற் புலமபுடையளாயினாள் என்பாள், புலம்பும் என, உம்மை கொடுத்து ஓதினாள். நீ இப்பொழுதே பிரிந்து வருகின்றாயாகவும் அது பொறாது நலனிழந்து புலம்புடையளாயினாள் நின் பிரிவை நீளப் பொறாள் அவ்வியல்பை நீ கருத்திற் கொள்ளல் வேண்டும் என்பாள், உள்ளல் வேண்டும் என்றாள். தெய்ய - அசை.

சேய்த்துமின்றி அணித்துமின்றி ஊர் தோன்றலின் உது என்று சுட்டினாள். உதுககாண் என்புழிச் சுட்டின்முன் மிக்கதனை,

வல்லெழுத்து

"சுட்டுமுத லிறுதி உருபிய னிலையும்
ஒற்றிடை மிகா வல்லெழுத் தியற்கை"

(உயிர் மயங்கு: ௯௪)

என வரும் தொல்காப்பிய விதியின்கண் வல்லெழுத்தியற்கை னும் விதப்பானே அமைத்துக் கொள்வர் நச்சினார்க்கினியர்.

என்

நிலவு, கடற்கரை மணற்பரப்பிற்கும் இருள், கடலுக்கும் உவமைகள். புலவுத்திரை என்பதை புலவுக்கானல் திரைக்கடல் என எதிர்நிரனிறையாக்கினுமாம். மடல் தாழ் பெண்ணை என்றது, இளம்பனைகளை. இதனை விடலிப்பனை என்று வழங்குப. இப்பனை மடல்கள் அடிகாறும் அடர்ந்திருத்தலின் களவுப் புணர்ச்சிக் குரிய மறைவிடமுண்மை குறிப்பாற் கூறினாளாதலறிக. சிறியதாயினும் பயில்தற்கு இனிய ஊர் என்பாள், நல்லூர் என்றாள்.

‘ஒருநாள் உறைந்திசி னோர்க்கும் வழிநாள்
தம்பதி மறக்கும் எம்பதி’

என்றார் பிறரும். இதில், நல்லூர் ஆதலின், தம்பதியையும் மறக்கும் படியான தென்க. ஆங்கு நீ அடிக்கடி வந்து தலைவியை அருளுக என்பது கருத்தென்க.



## பாட்டு - அஉ : தலைவி கூற்று

துறை :—பருவங்கண்டழிந்த தலைமகள் வருவர் என்று வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது. அஃதாவது, தலைவன் பிரிந்து சென்றபொழுது, ‘யான் இன்ன பருவத்தே மீண்டு வருவன், அதுகாறும் ஆற்றியிரு’ என்று கூறிச் சென்றவன்,

அப் பருவம் வந்தபின்னரும் வாராமையால், ஆற்றாமை மிக்க தலைவியை, ‘நீ ஆற்றியிருத்தல் வேண்டும்’ என்று தோழி வற்புறுத்தினாளாக; அவட்குத் தலைவி கூறியது.

இதன்கண், 'தோழி! கேள் முன்னர் நம்முடைய கூந்தலைத் தம் கையாற் கோதி நாம் வருந்தும்போழ்து அழுத கண்ணீரைத் துடைக்கும் அன்புடையராயிருந்த தலைவர், இப்போது அவ் வன்புமாறி நம்மை மறந்தனர் என்றே தோன்றுகின்றது. எற்றுலெனின்? பொறுத்தற்கரிய இவ் அச்சிரக் காலத்தும் நம்மையுள்ளி வந்திலர் அல்லரோ?' என்று தலைவி கூறுகின்றாள்.

அ௨. வாருறு வணர்கதுப் புளரிப் புறஞ்சேர்பு
அழாஅல் என்றுநம் அழுதகண் துடைப்பார்
யாரா குவர்கொல் தோழி சாரற்
பெரும்புனக் குறவன் சிறுதினை மறுகாற்
கொழுங்கொடி அவரை பூக்கும்
அரும்பனி அச்சிரம் வாரா தோரே.

—நடுவன் மள்ளனூர்.

(இ - ள்.) தோழி—, புறம் சேர்பு வார் உறு வணர் கதுப்பு உளரி - முதுகினைச் சார்ந்து நின்று வார்தலுற்றுக் கடை குழன்ற கூந்தலை விரலாற் கோதி, அழாஅல் என்று நம் அழுத கண் துடைப்பார் - அழாதேகொள் என்று கூறி நம்முடைய

அழுதகண்ணீரைத் துடையாகிற்பர் அதுபண்டு, சாரல் பெரும் புனக்குறவன் சிறுதினை மறுகால் கொழுங்கொடி அவரை பூக்கும்-மலைச்சாரலின்கண்ணே பெரிய தினைப்புனத்தையுடைய குறவன் சிறிய தினையை அரிந்த மறுகாலிடத்தே கொழுவிய கொடியையுடைய அவரை பூவாநிற்கும், அரும்பனி அச்சிரம் வாராதோர் - பொறுத்தற்கரிய பனியை உடைய அச்சிரக் காலத்தும் மீண்டு வருதலைச் செய்யாதோர், தன்மை யுடையரோ?

யாராகுவர் - எத்

விளக்கம் :—வார்தல் - கோதுதல். வாருறுதல் என்பதற்கு நீட்சியையுடைய என்பாருமுளர். வணர் - குழலுதல். கதுப்பு - கூந்தல். உளருதல் - விரலால் அலைத்துக் கோதுதல். உளர்தல் - வகிர்தல்

என்பாருமுளர். புறம் - முதுகு. சேர்பு - சேர்ந்து. அழாஅல் - அழா திரு. யாராகுவர் - எத்தன்மையுடையர்? நாம் அழுதபோது அன் புடையராய்ப் புறஞ்சேர்ந்து அழாஅல் எனக் கண்துடைப்பார் இப் போது இவ்அச்சிரக்காலத்தும் நம்மை உள்ளாது தங்குவர். அவர் அன்புடையார் கொல்லோ அன்பிலார் கொல்லோ எத்தன்மையர்? என்று அறிகின்றிலேன் என்பாள், யாராகுவர் என்றாள். அவர் உடனிருக்குங்கால் பிரிவரோ என்று எண்ணிக் கண்ணீர் விட்டமை ஆற்றாது கண் துடைத்துத் தேற்றுபவர், ஆற்றற்கரிய அச்சிரக் காலத்து என்படுவள் என்று எண்ணிலர் என்பாள், அரும்பனி அச் சிரம் வாராதோர் என்றாள். அச்சிரமும் எனற் பாலதாகிய சிறப்பும்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது. பெரும்புனம் சிறுதினை என்புழி முரண்தோன்றிச செய்யுள் இன்பம் மிகுதல் உணர்க. மறுகால் என்பது, ஒருமுறை ஒரு கூலத்தை விளைவித்துக் கொண்டு அக்கூலம் அறுத்த பின்னர் மீண்டும் அச்செய்யில் விதைப்பதை என்க. எனவே சிறுதினை மறுகால் என்றது, சிறுதினையை அரிந்து கொண்டு மறு காலாக விதைத்த அவரை என்றவாறு. அவரை விதைக்கும் பருவமே அச்சிரத் தொடக்கமாக அது படர்ந்து பூக்கும் பருவத்தும் வந்திலர் என்பாள், கொழுங்கொடி அவரைபூக்கும் அச்சிரம் என்றாள். அரும் பனி என்றது அச்சிரக் கொடுமை கூறியவாறு.

அன்புடையரோ இலரோ யாராகியர் என்றவினு அவர்முன் கண் துடைத்த அன்பு, பொய்யன்பு என்பதை வாராமையே காட்டிற்று. அன்பிலர் என்னும் குறிப்புடைத்து. அவர் வருவார் என்று நீ கூறுதல்

எற்றுக்கு எனப் புலந்து கூறினள் என்க.

## பாட்டு - அரு : தோழி கூற்று

துறை :—தலைமகன் வரைந்தெய்துதல் உணர்த்திச் செவிலியைத் தோழி வாழ்த்தியது. அஃதாவது, தலைவன் தலைவியை வரைந்துகொள்ள வருகின்ற நற்செய்தியைச் செவிலி தோழிக்குக் கூறினளாக; அச்செய்தியைத் தோழி தலைவிக்குக் கூறிச் செவிலியை வாழ்த்தியது.

இதன்கண், மலைநாடன் வரைவொடு வருவன் என்ற செய்தியை அறிவுறுத்திய செவிலி, துறக்கவுலகத்தைப் பெறுவாளாக என வாழ்த்தும் வாயிலாய்த் தோழி தலைவிக்குத் தலைவன் வரைவு மலிந்தமை அறிவுறுத்துகின்றாள்.

௮௩. அரும்பெறல் அமிழ்தம் ஆர்பதம் ஆகப்
பெரும்பெயர் உலகம் பெறீஇயரோ
அன்னை
தம்மில் தமதுண் டன்ன சினைதோறும்
தீம்பழந் தூங்கும் பலவின்
ஓங்குமலை நாடனை வரும் என்றோளே.

—வெண்பூதனர்.

(இ - ள்.) தம் இல் தமது உண்டன்ன - தமக்குரிய இல்லிலிருந்து தாம் ஈட்டிய பொருளைத் தென்புலத்தார் முதலியவர்க்குப் பகுத்துண்ணக் கொடுத்துத் தமக்குரிய கூற்றை உண்டாற்போன்ற இன்பமுடையதும், சினை தொறும் தீம்பழந் தூங்கும் பலவின் ஓங்குமலை நாடனை - கிளைகள்தோறும் இனிய பழங்கள் தூங்காநின்ற பலாமரங்களையுடைய உயர்ந்த மலைகளையுடையதுமாகிய நாட்டையுடைய தலைவனை, வருமென்றோள் அன்னை - வரைதல் முயற்சியோடே வருவான் என்று எனக்கு அறிவித்தவளாகிய அன்னை, அரும்பெறல் அமிழ்தம் ஆர்பதம் ஆக - பெறுதற்கரிய அமிழ்தமே உண்ணும் உணவாக, பெரும்பெயர் உலகம் பெறீஇயர் - பெரும புகழையுடைய மேனிலையுலகம் பெறுவாளாக.

விளக்கம் :—தம் இல் - தமக்குரியவீடு. தமது - தாம் அறநெறியாலீட்டிய உடைமை. இல்வாழ்வோர் தாம்ஈட்டிய பொருளின்கண் தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்னும் ஐந்திடத்திற்கும் பகுத்தவற்றுள் தமக்குரிய கூறு ஒன்றேயாகலான், தமதுண்டன்ன என்ற குறிப்பால் ஏனையோரை ஊட்டித் தங்கூற்றை மட்டுமே உண்டாற் போன்ற எனக் கூறினும். இங்ஙனங் கூறாக்கால் தம்மில் இருந்து தமதுண்டல் இன்பமாகாமை யுணர்க. இதனைப் பாடிய நல்லிசைப்புலவர்,

> “ தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றால்,
> அம்மா அரிவை முயக்கு ”

என்னும் அருமைத் திருக்குறளை நினைந்தே பாடுகின்றார் என்பதைச் சொற்பொருள் ஒற்றுமையானே உணர்க. தம்மில் தமதுண்டன்ன நாடன்; தீம்பழந்தூங்கும் ஓங்குமலை நாடன் எனத் தனித்தனிக் கூட்டித் தம்மில் இருந்து தமதுண்டன்ன இன்பமுடைய நாடன் என்க. இவ்வின்பததைத் தீம்பழத்திற் கேற்றுவாருமுளர். தம்மில் இருந்து தமதுண்டன்ன நாடன் என்றது, இனித் தலைவன் நின்னை வரைந்துகொண்டு தன் இல்லிற் பிரிவற விருந்து நுகர்வான் என்னும் குறிப்பிற்று. சினைதொறும் தீம்பழந்தூங்கும் என்றது, வரைவு மலிந்து பயனுறுங்காலம் வந்தமை குறித்தது என்க. என்னை? தீம்பழம் இனிப் பறித்துண்ணும் தகுதி பெற்றாற்போன்று, களவுமணம், பலரறிமணமாம் பருவம் பெற்றது என்னும் கருத்திற் கூறுகின்றாளாகலின் என்க. அரும்பெறல் அமிழதம் - நல்வினை மிகவும் செய்தார்க்கன்றி ஏனையோர் பெறுதற்கரிய அமிழதம் என்க. செவிலி அறத்தொடு நிற்றன் முதலிய செயல்களால் வரைவு மலிதற்கு ஏதுவாகிய அறமுடைமையானும் இந் நற்செய்தியை அறிவித்து நம்மை மகிழ்வித்த அறமுடைமையானும் அறவோரே பெறற்குரிய அமிழ்தத்தையும் துறக்கத்தையும் பெறுக என வாழ்த்தினாள். நீ உனக்குரிய நாட்டை எய்தித் தலைவனை நுகர்ந்து இன்புறுவதுபோல அவளும் சுவர்க்கம் எய்தி அமிழ்தம் நுகர்க என்பாள் அமிழதம் ஆர்பதமாகப் பெரும்பெயர் உலகம் பெறுக என வகுத்தோதினன்.

## மூலமும் உரையும்

கஉ௬

### பாட்டு - அ௬ : செவிலி கூற்று

### துறை :—மகட் போக்கிய செவிலித்தாய்

சொல்லியது. அஃதாவது, தலைவி தமரிற் பிரிந்து தலைவனோடு சென்றுவிட்டாளாக, அதனை அறிந்த செவிலி இரங்கிக் கூறியது.

இதன்கண், செவிலி, "அந்தோ யான் நெருநல் இரவு அவளை என் மார்போடு அணைக்க முயலுங்கால் 'என் உடல் வியர்த்துளது' என்று கூறி அச்செயற்கு உடன்படாதொழிந்தாள். அவள் அங்ஙனம் கூறியது வாய்மை என்று அப்போது நினைந்து வாளாவிருந்துவிட்டேன். அவள் அங்ஙனம் கூறியது வெறுப்பினால் என்று இப்பொழுதுணர்கின்றேன். அவள் ஆம்பல் மலரினும் தண்ணியள் ஆவளே! பாலைநிலத்து எங்ஙனம் நடப்பாள்!" என்று தனக்குள்ளே வருந்திக் கூறுகின்றாள்.

அ௪. பெயர்த்தனென் முயங்கயான் வியர்த்தனென் என்றனள்

இனியறிந் தேனது துனியா குதலே
கழல்தொடி ஆஅய் மழைதவழ் பொதியில்
வேங்கையும் காந்தளும் நாறி
ஆம்பல் மலரினும் தான்தண் ணியளே.

—மோசிகீரனார்.

(இ - ள்.) கழல் தொடி ஆஅய் மழைதவழ் பொதியில் - உழலுந் தொடியினையுடைய ஆய்வள்ளலது முகில்கள் தவழா நின்ற பொதியமலை யிடத்தே உண்டான, வேங்கையும் காந்தளும் நாறி - வேங்கைப்பூ மணமும் காந்தட்பூமணமும் கமழ்ந்து, ஆம்பல் மலரினும் குளிர்ச்சியையுடைய தண்ணியள் - ஆம்பற்பூவினுங்காட்டில் மகள், யான் முயங்கப் பெயர்த்தெனன் - என்னோடு ஒருபாயலிற் புறங்காட்டிக் கிடந்தாளைத் தழுவுதற் பொருட்டுப் பெயர்த்தேனாக, வியர்த்தனென் என்றனள் - அதற்குடம்படாளாய் யான் உடல் வெயர்த்துள்ளேன் என்றாள், இனி அறிந்தேன் அது துனியாகுதல் - அப்பொழுது அது வாய்மை என்று கொண்டு வாளாயிருந்த யான் இப்பொழுது அம்மறுப்பின் காரணம் வெறுப்பாதலை அறிகின்றேன்; அறிந்தும் என் செய்வேன்!

விளக்கம் :—கழல் தொடி - உழலும்படி இட்ட தோளணி. இனி உம்மைத் தொகையாக்கி, வீரக்கழலையும், வீரவலயத்தையும் உடைய ஆய் எனினுமாம். ஆய் எழுவள்ளலுள் ஒருவன். வண்மையும் அறமும் உடையன் ஆகலின், அவன் மலையில் முகில் தவழ்வதாயிற்றென்க. பொதியில் - தமிழ்நாட்டுத் தென்றிசைக்கண்ணுள்ள தொருமலை. வேங்கையும் காந்தளும் குறிஞ்சி நிலப்பூவாகலின், தலைவி இடையறாது

சூடுதலில் அந்நறுநாற்றமே மிக்குக் கமழும் இயல்புடையாள் என்க. எப்போதும் தான் தலைவியை முயங்கிமுயங்கிப் பயின்றமையால் அவளுடைய திருமேனியின் மணமும் ஊறும் கூறினாள். தண்ணென் னும் ஊறுடைமையே இயல்பாகவுடையவள் வெயர்த்தனென் என்ற பொழுதே அதற்குக் காரணம் பிறிதாதல் வேண்டும் என ஆராயற் குரிய யான் வாளாவிருந்து கெட்டேன் என்பாள், தண்ணியள் வெயர்த்தெனென் என்றனள் என்றாள். அப்பொழுதே அறியின் அறத் தொடு நிற்றல் முதலியனசெய்து வரைவிற்கு வழிகண்டிருப்பேன்; காணதொழிந்தேன் என்பாள், இனி அறிந்தேன் என இரங்கினாள். இனி என்பது இப்போது என்னும் பொருட்டு.

துனி - ஈண்டு வெறுப்பு. தலைவனை யணைந்த மார்பு தாயை அணைய விரும்பாமை என்க. இதனைப் பயில்வு என்னும் உணர்ச்சி என்பர் நச்சினார்க்கினியர். அவர் கூறுவதாவது, "இனிப் பயில்வாவது செவிலி முலையிடத்துத் துயில் வேண்டாது பெயர்த்து வேறோரிடத் துப் பயிறல்" என்பதாம்.

ஆம்பல் மலரினும் தண்ணியள் அருஞ்சுரத்து என்படுவளோ! என்றிரங்கியவாறு.

வெவ்வழிக்கண்

தலைவன் சூட்டிய மலர்கள் மணந்து அவ்வின்பத்தால் தண்ணியள் ஆகியும் வியர்த்தேன் என்றாள், என்பாருமுளர். செவிலியொடு பாயல் கொண்டுழிப் பிரிவுண்மையால் அப்போது தண்ணியள் என்பது பொருந்தாதென்க.

## பாட்டு - அரு : தோழி கூற்று

துறை :—வாயில் வேண்டிச் சென்ற பாணற்குத் தோழி சொல்லி வாயில் மறுத்தது. அஃதாவது, தலைவன் பரத்தமை ஏதுவாகத் தலைவி ஊடியிருந்தாளாக, அவ்வூடல் தீர்க்கும் பொருட்டுத் தலைவன் பாணனைத் தலைவியின்பால் தூதுவிட்டான். தூதாகவந்து தலைவன்பால் ஏதமின்மை காட்டிய பாணனுககுத் தோழி தலைவனுடைய ஏதங்காட்டிக் கூறியது.

இதன்கண், பாணனுடைய வாய்ச் சொல்லாற் காணுங்கால், தலைவன் மிகச் சிறந்த அன்புடையனாகக் காணப்படுகின்றான். அத்தலைவனுடைய செயலை ஆராயுங்கால் அவன்பால் அன்பின்மையே காணப்படுகின்றது'' என்று தோழி கூறுகின்றாள்.

அரு. யாரினும் இனியன் பேரன் பினனே
உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்
சூன்முதிர் பேடைக் கீனி லிழைஇயர்
தேம்போதிக் கொண்ட தீங்கழைக் கரும்பின்
நாறு வெண்பூக் கொழுதும்
யாண ரூரன் பாணன் வாயே.

(இ - ள்.) உள் ஊர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்-ஊரின் அகத்தே வாழும் இயல்புடைய ஊர்க் குருவியின் துள்ளிய நடையையுடைய ஆண்பறவை, சூல் முதிர் பேடைக்கு ஈன் இல் இழைஇயர்-கருப்பம் முதிர்ந்த தன்பேடை கருவுயிர்த் கற்குக் கூடியற்றும் பொருட்டு, தேம் பொதிக் கொண்ட தீங் கழைக் கரும்பின் - தேன் பொதிதலையுடைய இனிய கழை பாகிய கரும்பினது, நாறு வெண்பூக் கொழுதும் - மணமற்ற வெள்ளிய பூவை அலகாற் கோதாநின்ற, யாணர் ஊரன் பாணன் வாயே - புது வருவாயையுடைய ஊருக்குத் தலைவன் பாணனின் சொல் அளவானே, யாரினும் இனியன் பேரன் பினன் - எல்லாரினும் மிகக இனிமையுடையானும் பெரிய அன்பு உடையனும் ஆகின்றான்.

விளக்கம் :—யாணரூரன் தன்செயலளவானே தீயவனும் அன்பற்ற வனுமே ஆவன் என்று பழித்தபடியாம்

காட்டின்கண் வாழும் குருவியின் வேறாய் ஊரின்கண் வாழும் இயல்புடைமையின் ஊர்க்குருவி என்பது பெயராயிற்று. உள்ளூர்க் குரீஇ என்றது அவ்வேதுப் பெயர்க்கேற்ற அடை கூட்டி ஓதியவாறு. குரீஇ - குருவி. ஊர்க்குருவி நடக்கும்போது அடியிட்டு நடவாது துள்ளித் துள்ளி நடக்கும் இயல்புடையதாகலின், 'துள்ளு நடைச் சேவல்' என்றார். ஈன் இல் - முட்டை யிடுதற்குரிய கூடு. இழைஇயர்- செய்யும் பொருட்டு. ஊர்க்குருவிச்சேவல் சூன்முதிர் பெடைக்குக் கூடியற்றும் அன்புடையனவாகும் இயல்பும் தலைவன்பால் இல்லை. அவன் தன் தலைவியை நீத்துப் பரத்தமையுடையன் ஆயினான் என்பது, குறிப்பு.

இனித் தேம் பொதியும் இனிமையுமுடைய கரும்பின்கண் அவை நிற்றைக் கொள்ளாது சேவல் ஊற்றின்பம் ஒன்றே கருதி மணமற்ற வெண்பூவைக் கோதினாற் போன்று, அறமும் இன்பமு முடைய தலைவி யின் பாலிராது இன்பம் ஒன்றே கருதிப் பரத்தமை யுடையனாயினான் என்றிகழ்ந்த குறிப்பும் கொள்க. தேம் - தேன். ஈண்டுக் கருபபஞ்சா றென்க. கழை - கரும்பில் ஒருவகை. கழைக்கரும்பு இருபெயர் ஒட்டு கழை - கோலுமாம்.

கரும்பின் பூ, நாறாமை இயல்பு. கொழுதும் - அலகால் கோதும். பாணர் - புதுவருவாய். ஊரன் - மருதநிலத் தலைவன். வாய்-சொல். ஆகுபெயர்.

இது பாணன் கூற்றால் வெகுண்டு படர்க்கையில் அவன் கேட்பக் கூறியது.

## பாட்டு - அ௬ : தலைவி கூற்று

துறை :—ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி சொல்லியது. அஃதாவது, தலைவன் பிரிந்துறைதலைப் பொறுத

)பரிதும் வருந்திய தலைவியின் நிலைமை கண்டு வருந்திய

கஉசு குறுந்தொகை

தோழிக்குத் தலைவி தன் ஆற்றுமைக் காரணம் தோன்ற உரைத்தது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'பிரிவுத் துன்பத் தாலே பெரிதும் வருந்தும் இக் கூதிர்ப்பருவத்து இடையிரவின் கண் என்னென்று உசாவுவாரும் இன்றி ஆன் மணிக்குரலும் கேட்க நேரின், யாரே ஆற்றவல்லார்' எனக் கூறுகின்றாள்.

அசு. சிறைபனி உடைந்த சேயரி மழைக்கண்
பொறையரு நோயொடு புலம்பலைக்
கலங்கிப்
பிறருங் கேட்குநர் உள்கொல் உறைசிறந்து
ஊதை தூற்றும் கூதிர் யாமத்து
ஆனுளம் புலம்புதொ றுளம்பும்
நாநவில் கொடுமணி நல்கூர் குரலே.

—வெண்கொற்றனர்.

(இ - ள்.) சிறை பனி உடைந்த சே அரி மழைக்கண்- ஆற்றியிருத்தல் கருதி என்னால் தடுத்து நிறுத்தப்பட்ட துளிகள் உடைந்தொழுகாநின்ற சிவந்த வரிகளையுடைய மழை போன்ற கண்கள், பொறை அரு நோயொடு - பொறுத்தற்கரிய காம நோயோடே, கலங்கிப் புலம்பலை - கலக்கமடைந்து தனிமை கூர்ந்து வருந்துதலை, சிறந்து ஊதை உறை தூற்றும் கூதிர் யாமத்து - வாடை காற்று மிகுந்து மழைத்துளியைத் தூவா நின்ற இக் கூதிர் காலத்து இடையிரவின்கண், நுளம்பு உலம்பு தொறும் ஆன் நாநவில் கொடுமணி நல்கூர் குரலே உளம்பும்- ஈக்கள் ஒலிக்குந் தோறும் அவற்றைக் கடியும் பொருட்டுத் தலையசையாநின்ற ஆன்களின் கழுத்திலணிந்த நாவாலே நவிலப் பட்ட கொடிய மணியினது வறுங்குரல் ஒன்றே ஒலிப்பதன்றி, பிறரும் கேட்குநர் உளர்கொல் - என்னுற்றனையோ என்று உசாவுவார் பிற யாரும் உளரோ.

**விளக்கம்:**—கூதிர்யாமத்துக் கண்கலங்கிப் புலம்பலைக் கண்டு நீ என்னுற்றனை எனக் கேட்குநர் குரலை யான் பெற்றிலேன். அப்போது யான் கேட்பது 'கொடுமணி நல்கூர் குரல் ஒன்றுமே என்று வருந்தினள் என்க.

என் நோயை மிகுவிக்கும் குரலேயன்றிக் தணிப்பார் குரலைக் கேட்டிலேன் என்றபடி. மணியின் குரல், அது பொழுது கேட்கப் படினும அது பொருளற்ற வறுங்குரலாய் என் துன்பத்தை மிகச்செய்யும் என்பாள், 'கொடுமணி நல்கூர் குரல் உளம்பும்' என்றாள். உளம்புதல் - அசைதல். ஈண்டு ஒலித்தல் என்னும் பொருட்டு. சிறைபனி- தடைசெய்யப்பட்ட கண்ணீர்த்துளி' சிறைபனி என்பதை வினைத் தொகை என்பாருமுளர். சேயரி - சிவந்தகோடு. இடையறாது துளித்

தலின் மழை போலும் கண் என்க. குளிர்ந்த கண்ணுமாம். கலங்கிப் புலம்பலே எனமாறுக. ஆன்மணியின் ஒலி காமநோய்க்கு உத்தீபன ஏது என்ப; இதனை, "செறிவளை நெகிழச் செய்பொருட் ககன்றோர் அறிவர்கொல் தோழி......பல்லான் றொழுவத்து ஒருமணிக் குரலே" (கஃ0) என்றும், திரிமருப்பெருமை இருணிற மையான், வருமிடறு யாத்த பகுவாய்த் தெண்மணி, புலம்புகொள் யாமத்து இயங்குதோ றிசைக்கும், இது பொழுதாகவும் வாரார் கொல்லோ?," (உஎக) என்றும் இந்நூலிற் பிறண்டும் வருதலான் உணர்க. பிறரும் கேட்குநர் உளர் கொல் என்றது, கேட்டற்குரிய தலைவர் ஈண்டிலராதலோடு நீயும் துயின்றனை எனத் தோழியையும் சுட்டிப் புலந்தபடியாம். நுளம்பு-ஒரு வகை மாட்டு ஈ.

## பாட்டு - அஎ : தலைவி கூற்று

துறை :—தலைமகள் தெய்வத்திற்குப் பராயது அஃதாவது, தலைவன் நின்னைப் பிரியேன் எனத் தெய்வங்காட்டிச் சூளுற்ற

வன், பிரிந்து காலம் நீட்டித்தமையாற் சூளுறவில் தப்பினனாக, சூளுறவு தபபியோர் தெய்வத்தால் ஒறுககப்படுவர் என்பவா தலான், தலைவி தலைவனுக்குத் தீங்கு நேராமை கருதித் தெய்வத்தை வாழ்த்தியது.

இதன்கண், தலைவி. 'கடம்பின்கண் தங்கும் கடவுள் சூள் தப்பிய கொடியோரை ஒறுக்கும் என்று கூறுவர். என் தலைவரோ சூளில் தப்பினர் அல்லர் அவர் மிகவும் நல்லர். என் நுதல் பசந்தமைக்கும் தோள் மெலிந்தமைக்கும் என் மன நிலையேயன்றி அவர் காரணராகார்' என்று கூறித் தெய்வம் வாழ்த்துகின்றாள்.

அள. மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள்
கொடியோர்த் தெறூஉம் என்ப யாவதும்
கொடியர் அல்லரெங் குன்றுகெழு நாடர்
பசைஇய பசந்தன்று நுதலே
ஞெகிழ ஞெகிழ்ந்தன்று தடமென் தோளே.

—கபிலர்.

(இ - ள்.) மன்றம் மராஅத்த பேஎம் முதிர் கடவுள்-அம் பலத்தின்கண் உள்ள கடம்பிலுறைகின்ற பிறர்க்கு அச்சம்

செய்தலிலே முதிர்ந்த முருகக்கடவுள், கொடியோர்த் தெறூஉம் என்ப - கொடுமை செய்தோரை ஒறுக்கும் என்று அறிந் தோர் கூறுவர், எம் குன்று கெழு நாடர் - எம்முடைய மலைகள் பொருந்திய நாட்டையுடைய தலைவர், யாவதும் கொடியர் அல் லர்-சிறிதும் கொடுமைப்பாடுடையர் அல்லர், பின் சின்பால் இவ்



வேற்றுமை எற்றுளய தென்னின், நுதல் பசைஇய பசந்தன்று- எம் நெற்றி அவர் என்னை விழைதல் வேண்டிப் பசந்து காட்டுவ தாயிற்று, ஞெகிழ ஞெகிழ்ந்தன்று தடமென் தோள்-அவர் உள்ளம் எம்பால் ஞெகிழ்தலை வேண்டி ஞெகிழ்ந்து காட்டுவ தாயிற்று எம்முடைய பெரிய மெத்தென்ற தோள்.

**விளக்கம்** :—மன்றம் - அம்பலம்; பொதுவிடம். ஊரம்பலத்துள்ள மராத்தில் உறையும் கடவுள் என்க. மராம் - செங்கடம்பு. செங் கடம்புறை கடவுள் என்றது, முருகக் கடவுளை. கொடியோர்த் தெறூஉம்

என, அக்கடவுளின் அளியும் தெறலுமாகிய இரண்டு பண்புகளில் தெறலே கூறுதற் கேற்பப் 'பேஎம் முதிர்கடவுள்' என்றாள். பேஎம்-அச்சம். கொடியோரை அச்சுறுத்தற்கண் தொன்று தொட்டு முதிர்ந்த தெய்வம் என்க. எனவே அதன் தெறலினின்று யார்க்கும் தப்பவியலாதென்றவாறு. கடம்பின்கண் முருகன் உறைதலை "நல்லரைமராஅத்த கடவுள்" (மலைபடு - நஎ௩) என்பதனானும் முருகனைக் கடம்பன் என்பதனானும் உணர்க. கடவுள் கொடியோரைத் தெறல் போன்று நல்லோரை அருளுதலும் உண்மையின், தெறற் குரியர் அல்லர் அருளுதற்குரியரே என் தலைவர் என்பாள் கொடியோரல்லர் நாடர் என்றாள். ஆயின், நினக்கு இவவேறுபாடு எற்றாலாயதென்னும் வினாவிற்கு இனி விடைகூறித் தெளிப்பாள், அவர் எக்காலமும் பிரியாதிருக்கத் தகுந்த விழைவுடையராதற் பொருட்டு எதிராதாகக் காத்தற்கு நுதல், சிறிது பிரிந்த துணையானே பசந்தும், தோள், சிறிது பிரிந்த துணையானே ஞெகிழ்ந்தும், அவர் நெடும் பிரிவினைத் தாம் ஆற்ற மாட்டாமையை அறிவித்தன. அத்துணையே என்பாள், 'பசைஇய பசந்தன்று நுதல்; ஞெகிழ ஞெகிழ்ந்தன்று தோள்' என்றாள். பசைஇய-விழைதற் பொருட்டு. ஞெகிழ -நெகிழ்தற் பொருட்டு. பசந்தன்று-பசந்தது. ஞெகிழ்ந்தன்று - நெகிழ்ந்தது.

மகளிர் சிறுபிரிவையும் பொறுது பசக்கும் இயல்பினர் என்பதை.

"புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன்
அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு" (குறள் : ௧௧அ௭.)

எனவரும் திருக்குறளானும் உணர்க. எங்கணவர் கொடியரல்லர் அவரை அருளுக என்ப ராயவாறு.

## பாட்டு - அஅ : தோழி கூற்று

துறை :—இரவுக்குறி நேர்ந்த வாய்பாட்டால் தோழி தலைமகட்குச் சொல்லியது. அஃதாவது, தலைவன் சிறைப்புறத்

தானாக பகற்குறி மறுத்துத் தான் இரவுக்குறி நேர்வாள்போலத் தலைவிக்கு தோழி கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'இனித்தலைவர் துன்னருஞ் சாரலில் இடையாமத்தும் வந்து நின்னைக் காண்பர். அதனால் நமக்குண்டாம் பழிக்கு யாம் என்று கூறுகின்றாள்.

நாணுதிருப்பேமாக'

## மூலமும் உரையும்

கஉகூ

அஅ. ஒலிவெள் ளருவி ஓங்குமலை நாடன்
சிறுகண் பெருங்களிறு வயப்புலி

தாக்கித்

தொல்முரண் சோருந் துன்னருஞ் சாரல்
நடுநாள் வருதலும் வரூஉம்
வடுநா ணலமே தோழி நாமே.

—மதுரைக் கதக்கண்ணனர்.

(இ - ள்.) ஒலிவெள் அருவி ஓங்குமலைநாடன் - முழங்கா நின்ற வெள்ளிய அருவியை உடைய உயர்ந்த மலைநாட்டை யுடைய தலைவன், சிறுகண் பெருங்களிறு வயப்புலி தாக்கித் தொல் முரண்சோரும் துன்னருஞ்சாரல் - சிறிய கண்ணையுடைய பெரிய களிற்றியானை வலியுடைய புலியோடு போர்செய்து தனது பழைய வலி கெடுதற்கு இடனாகிய கிட்டுதற்கரிய மலைச் சாரலின் வழியே, நடுநாள் வருதலும வரூஉம் - இரவின் இடை யாமத்தேயும் வருவன் ஆதலால், தோழி நாம் வடு நாணலம் - தோழி நாம் அத தகாச்செயற்கு உடன்படுதலானே நமக்குண் டாம் பழிக்கு நாணுதிருக்கக் கடவேம்.

**விளக்கம்** :—எனவே இரவுக்குறிக்கண் வருதல் பெரும்பழி யுடைத்து. ஆகலான், வாரற்க எனக் குறிப்பானுணர்த்தி மறுத்த வாறும், சொல்லளவானே உடம்படுவாள் போலுதலும் உணர்க. இங் ஙனம் கூற வறியாது பிறரெல்லாம் தத்தமக்கு வேண்டியவாறு துறை யொடு பொருந்தாமல் கூறுவாராயினர்.

வெள்ளருவி ஒலிக்கும் மலைநாடன் என்றது, அறிவிலார் புறங் கூறுமாறு ஒழுகும் தலைவன் என்னும் குறிப்பிற்று. 'சிறுகண் பெருங் களிறு' என்புழிச செய்யுளின்பம் உணர்க.

பெருங்களிறுயினும் தன் ஆற்றற்கண் அமையாத வயப்புலியோடு பொருது பழைய வலியைக் கெடுத்துக்கொள்ளுமாறு போலப் பெருந் தகையாயினும் தன் பெருந்தகைமைக் கேலாத இரவுக்குறி விரும்பி இன்னுமை செய்துகொள்வானுயினன் என, உள்ளுறை காண்க. களிறு வயப்புலியோடு பொருதும் சாரல் என்றது, வருதற்கொண்ணுத வழி என்றற்குக் குறிப்பேதுவாதல் அறிக. துன்னற் கரிய அவ்வழியே வருங்கால் தலைவனுக்கு விலங்கு முதலியவற்றுனே ஏதம் உண்டாயின் அப்பொழுதுண்டாகும் பழி பெரிதென்பாள் வடு என்றுள். தலைவன் துங்ஙனம் பழிபடுமாற்றுனே ஒழுக யாம் உடம்படுதல் நாணுத்தக புடைத்தாயினும், கண்ணேட்டத்தால் யாம் அந் நாணத்தை மேற் கோடற் பாலம் அல்லேம் ஆயினேம் என்று பரிவாள், 'தோழி நாம் மநாணலம்' என்றுள். பிறராயின் இவ்வடுவிற்கு நாணுதிரார் என் பான், நாமே எனப் பிரிநிலை ஏகாரத்தால் கூறிஞள். 'வருதலும் வருஉம்', என்றது வருதலைச் செய்யும் என்றவாறு.

கு.—9



## பாட்டு - அக: தோழி கூற்று

துறை :—(க) தலைமகன் சிறைப் புறத்தானுகத் தோழி தன்னுள்ளே சொல்லுவாளாய்ச் சொல்லியது. அஃதாவது, ஊரிலுள்ளோர் அலர் தூற்றுவதனைத் தலைவனுக்கு அறிவிக்கக் கருதிய தோழி, அவன சிறைபுறத்தாணுகியபொழுது அவன் வருகையை அறியாதாள் போன்று அவன் கேட்கும்படி தனக் குததானே சொல்லிக்கொண்டது.

(உ) தலைமகற்குப் பாங்காயினுர்

கேட்பச்சொல்லி வாயின்
மறுத்ததுமாம். அஃதாவது தான் பரத்தையிற் பிரிந்தமை யால் ஊடியிருந்த தலைவியின் ஊடல் தீர்க்கச்சென்ற தலைமக னுடைய தூதர் கேட்குமபடி கூறி வாயில் மறுத்ததுமாம்.

இதன்கண், தலைவன் சிறைப்புறத்து வந்தானை அறியாதாள் போலத தோழி 'மெல்லியற் குறுமகள் தலைவன் புகழை வள் ளைப் பாட்டிற் பாடினள். பாடினால் இவ்வூரார்க்கு அழிவுவந்தது ஒன்றுமில்லையே! அங்ஙனமாகவும் யாஙகனும் அலர் தூற்று கின்றனர் இவ்வூரார் அறிவில்லாதார்' என்று கூறி ஊரலர் தூற்றலைத் தலைவனுக்கு அறிவுறுததுகின்றாள்.

அகூ. பாவடி உரல பகுவாய் வள்ளை
ஏதின் மாக்கள் நுவறலும் நுவல் ப
அழிவ தேவென்கோலிப் பேதை யூர்க்கே
பெரும்பூண் பொறையன் பேஎமு திர்
கொல்லிக்
கருங்கண் தெய்வம் குடவரை யெழுதிய
நல்லியற் பாவை அன்ன இம்
மெல்லியற் குறுமகள் பாடினள் குறினே.
—பரணர்.

(இ-ள்.) பெரும்பூண் பொறையன் பேஎம் முதிர் கொல்லி- பெரிய அணிகலத்தையுடைய சேரனுக்குரிய அச்சம் மிகுதற்குக் காரணமான கொல்லிமலைக்கண் உறையும், கருங்கண் தெய்வம் குடவரை எழுதிய - கரிய கண்ணையுடைய தெய்வம் அம்மலையின் மேற்குப் பக்கத்தே வரைந்த, நல் இயல் பாவை அன்ன இம்மெல் இயல் குறுமகள் பாடினள் குறின் - நன்றாகிய இயலையுடைய பாவையை ஒத்த இம்மென்மை மிக்க இயல்பையுடைய தலைவி தலைவன் பெயரோத்திப்பாடினளாய் இடிப்பாளாயின், இப்பேதை ஊர்க்கு அழிவது எவன் கொல் - இவ்வறிவில்லாத ஊரினாக்கு அதனால் உண்டான அழிவுதான் யாது; ஒன்றுமில்லையே அங்ஙனமாகவும், பாவடி உரல பகுவாய் வள்ளை - இத்

## மூலமும் உரையும்

கங்க

தலைவி பாடிய பரந்த அடியினையுடைய உரலிடத்தனவாகிய

பகுத்த வாயாற்பாடும் உலக்கைப் பாட்டைக் குறித்து, ஏதின் மாக்கள் நுவறலும் நுவல்ப - அயலோராகிய அறிவிலிகள் குறை கூறுதலையும் செய்யாநின்றனர்.

**விளக்கம்**:—பொறையன் - சேரமன்னன். ஒரு சேரமன்னன் ஏழு மன்னரை ஒருசேர வென்று அவர்தம் முடிக்கலனால் அணிகலன் இயற்றி அணிந்து கொண்டான் என்ப. இப்புகழுடைமை பற்றிப் பெரும்பூண் பொறையன் என்றார். கொல்லித் தெய்வம், தன்னைக் கண்டோர் உயிர் செகுக்குமாதலின், 'பேஎம் முதிர் தெய்வம்' என்றாள். கருங்கண் என்றது கொடுமை செய்யும் கண் என்றவாறு. "கருங்கை வினைஞர்" (பெரும்பாண்: உஉங.) என்புழிக் கருமை - வன்மையின் மேற்றாதல் அறிக. குடவரை - மேற்குப் பக்கம். கொல்லித்தெய்வம் அம்மலையின் மேற்குப்பக்கத்தே வரைந்த பாவை என்க. கொல்லி மலைக்கண் தெய்வத்தால் வரையப்பட்ட பாவை உண்டென்பதைப்

" பொறையன் உரைசால் உயர்வரைக் கொல்லிக்,

குடவயின்......நெடு

வரைத் தெய்வம் எழுதிய, வினைமாண் பாவை" (நற்றிணை: கஅரு) என்றும் "பயங்கெழு பலவின், கொல்லிக் குடவரைப் பூதம் புணர்த்த, புதியியல் பாவை," (நற்றிணை: ககஉ.) என்றும் பிறசான்றோர் கூறு மாற்றானுமுணர்க. ஏதின் மாக்கள் - அயலோர். பிறர்பழி தூற்று பவர் ஆகலின், மாக்கள் என்றாள். இப்பேதையூர்க்கு அதனால் அழி

வது யாதுளது [ என்க.

தலைவனோடு தலைவிக்குள்ளதாய நட்பினை இவ்வூரார் அறிந்து யாண்டும் அலர் தூற்றுகின்றனர். ஆதலால் இனி வரைந்துகோடலே செயற்பாலது என்று உணர்த்தியவாறாம். இத்துறை களவுக்காலத்தது. இனி இரண்டாவதாகக் கூறப்பட்ட துறை கற்புக்காலத்தது. அதற்குப் பரத்தையர்க்குப் பாங்காயினார் கேட்பத் தலைவன் பரத்தமை பற்றித் தலைவி வள்ளைப்பாட்டில் இழித்துப்பாடினாளாக, அது பொறாத பரத்தையர் பழி தூற்றுகின்றனர். அறிவில்லா அவர்கட்குத் தலைவி செயலாலெய்திய அழிவு யாது என்பது கருத்தாகக் கொள்க.

## பாட்டு - கூ0 : தோழி

கூற்று

துறை :—வரைவு நீட்டித்த வழி ஆற்ருளாகிய தலைமகட்குத் தலைமகன் சிறைப்புறமாகத் தோழி கூறியது. அஃதாவது, தலைவன் களவின்பத்தையே விரும்புவானுய் வரைந்து கொள்ளு தலிற் கருத்தின்றி ஒழுகுதலைப் பொருத தலைவிக்குத் தலைவன் சிறைப்புறத்தே வந்தமை கண்டு அவன் கேட்கும்படி தோழி கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'அன்னுய்! தலைவனுடைய நட்பு உனக்குப் பெரிதும வருத்தத்தைத் விளைவித்து உன் மென்றோளை மெலிவித்தும் நினக்கு அமைதியே தருவதாகின்றது. இது வியத்தற் குரித்தே,' என்கின்ருள்.



கூ௦. எற்றே வாழி தோழி முற்றுபு
கறிவளர் அடுக்கத் திரவின் முழங்கிய
மங்குல் மாமழை வீழ்ந்தெனப் பொங்குமயிர்க்
கலைதொட இழுக்கிய பூநாறு பலவுக்கனி
வரையிழி அருவி உண்துறைத் தரூஉம்
குன்ற நாடன் கேண்மை
மென்தோள் சாய்த்துஞ் சால்பீன் றன்றே.

—மதுரை எழுத்தாளன் சேந்தன்பூதனர்.

(இ - ள்.) தோழி-, முற்றுபு கறிவளர் அடுக்கத்து இரவின் முழங்கிய மங்குல் மாமழை வீழ்ந்தென - சூல் முதிர்ந்து மிளகுக்கொடி வளராநின்ற மலைப்பக்கத்தே இராக்காலத்தே முழக்கத்தைச் செய்த முகிலினது பெரிய மழை கால் கொண்டதாக, பொங்கு மயிர்க் கலை தொட இழுக்கிய பூ நாறு பலவுக் கனி - குளிராலே சிலிர்த்த மயிரையுடைய ஆண்குரங்கு தொட்டதுணையானே வீழ்ந்த பூப்போலத் தூரியவிடத்தும் சென்று கமழும் பலாக்கனியினை, வரையிழி அருவி உண்துறை தரூஉம் - மலையினின்றும் வீழ்கின்ற அருவி கொணர்ந்து நீருண்கின்ற துறையிடத்தே தருதலைச் செய்யும், குன்றநாடன் கேண்மை - குறிஞ்சிநிலத் தலைவனுடைய நட்பு, மென்தோள் சாய்த்தும் - நினது மெல்லிய தோளினை மெலிவித்தும், சால்பு ஈன்றன்று- நின் உள்ளத்தே அமைதியை உண்டாக்குவதொன்றாயிருந்தது, எற்றோ - அஃதெத்தன்மைத்தோ ?

விளக்கம் :—முற்றுபு - முற்றி, சூல் முதிர்ந்து என்க. இனி விளைந்துகொண்டு எனினுமாம். கறி - மிளகுக் கொடி. அடுக்கம் - பக்கமலை. மழை வீழ்தலாவது, மழை கால்கொண்டு பெய்தல். குளிரானே மயிர் சிலிர்த்த குரங்கென்பார், பொங்கு மயிர்க்கலை என்றார். பொங்குதல் - ஈண்டுச் சிலிர்த்தல். கலை - ஆண்குரங்கு. ஆண் குரங்கு சுளையைத் தோண்டியுண்ணக் கருதித் தொட்ட துணையானே வீழ்ந்த பலாக்கனி என்க. இதனால் அக்கனியினது முதிர்வு தெளித்துக் கூறப்பட்டது.

பூவாது காய்க்கும் இயல்புடையதாயிருந்தும் பலா அப்பூமணத்தைத் தன் கனியாலே செய்யும் என்பார், 'பூநாறு பலவுக்கனி' என்றார். பூப்போலச் சேய்மையினும் மணக்கும் கனி என்க.

இரவிற் கலை தொட வீழ்ந்த கனியை அருவி பலரும் நீராடும் துறைக்கண் தரூஉம் என்றது, நின்னைக் களவில் தலைவன் மணந்த செய்தியை ஊரவர் அறிந்து அலர் தூற்ற நின்றனர் என்னும் உள்ளுறைக்கு உவமமாகக் கொள்க. இதனை நச்சினார்க்கினியர் தலைவி கூற்றாகக் கொண்டு "கலை தீண்ட வழுக்கி விழுந்த பழத்தை அருவி பின்னும் பயன் படுத்து நாடன் என்றதனானே, அவரால் நஞ் சுற்றத்திற்

## மூலமும் உரையும்

### கநு.க

பிரிந்தேமாயினும் அவன் நம்மை வரைந்து கொண்டு இல்லறஞ் செய்து பயன் படுத்துவன் என்பதாம்" (தொல்-பொருள் : கூ) என்று கூறியுள்ளார். அகத்தே தோன்றும் குணத்திற் கேற்பவே புறத்தே மெய்ப்பாடு தோன்றுதல் உலகியல்பாகவும், நின் அகத்தே தோன்றும் அமைதியை முரணிய மெலிவினை நின் தோள்கள் உடையவாதல் வியப்பென்பாள், 'எற்றோ!' என்றாள். இவ்விபரீதம் எத்தன்மைத்தோ என்றவாறு. எனவே தலைவி ஆற்றற்கரிய நோயுடையளாயிருந்தும் குலப்பிறப்புண்மையால் ஒருவாறு ஆற்றியிருக்கின்றாள். விரைவில் வரைந்துகோடல் வேண்டும் எனத் தலைவற் கறிவுறுத்தவாறுதல் அறிக.

பாட்டு - கூக : தலைவி கூற்று

துறை:—(க) பரத்தையர்மாட்டுப் பிரிந்த தலைமகன் வாயில் வேண்டிப் புக்கவழித் தன் வரைத்தன்றி அவன் வரைத்தாகித்
தன் நெஞ்சு
சொல்லியது.
நெகிழ்ந்துழித் தலைமகள் அதனை நெருக்கிச்
அஃதாவது, தலைமகன் பரத்தையரோடு சென்று பயில்வதனால் ஊடல்கொண்டிருந்த தலைவி,
அவன் வந்தால்
ஊடல் வாயிலாய் அவனை ஒறுக்கக் கருதியிருந்தாளாக, ஒரு நாள் தலைவன் தன்பால் வந்தவுடன் தன் நெஞ்சம் நிறையழிந்து ஊடற்கண் செல்லாது அவனைக் கூடற்கண் விரைந்தது. அது கண்ட தலைவி அந் நெஞ்சிற்குக் கூறியது.

(உ) பரத்தையிற் பிரிந்து வந்தவழி வேறுபட்ட கிழத்தியைத் தோழி கூறியதூஉமாம். அஃதாவது, தலைவன் பரத்தையரிற் பிரிந்தமையால் ஊடிய தலைவி, அவனைக் கண்ட துணையானே நெஞ்சு நெகிழ்ந்து கூ டற்கட் சென்றமை கண்டு தோழி இடித்துரைத்ததுமாம்.

இதன்கண், 'நெஞ்சே தகாது செய்யும்

தலைவரைக் கண்ட

வுடன் ஊடற்குரிய உறுதியிழந்து நீ இங்ஙனம் எளியை ஆயின், நினக்குப் பற்பல இடரே மேலும்மேலும் உண்டாகும். துயரத்தால் தூங்காத இரவுகள் பலவாகத் துயில்தற்குரிய நாள்

அவர் நின்னை அருளும் ஒரு சில நாட்களே உளவாகப் பெறு வாய்' என்று கூறுகின்றாள். தோழி கூற்றாகக் கொள்ளின் இங்ஙனம் தலைவியை இடித்துரைத்தாளாகக் கொள்க.

கூக. அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற விளைகனி
குண்டுநீ ரிலஞ்சிக் கெண்டை கதூஉம்
தண்டுறை ஊரன் பெண்டினை யாயிற்
பலவா குகநின் நெஞ்சிற் படரே
ஓவா தீயு மாரி வண்கைக்
கடும்பகட் டியானை நெடுந்தே ரஞ்சி



கொன்முனை இரவூர் போலச்
சிலவா குகநீ துஞ்சு நாளே.

—ஔவையார்.

(இ - ள்.) நெஞ்சே, அரில் பவர்ப் பிரம்பின் வரிப்புற விளை கனி - பிணங்குதலையுடைய கொடியாகிய பிரம்பினது வரியமைந்த புறத்தையுடைய முதிர்ந்த பழத்தை, குண்டு நீர் இலஞ்சிக் கெண்டை கதூஉம் தண் துறை ஊரன் - ஆழ்ந்த நீரையுடைய குளத்தின்கண் வாழும் கெண்டை மீன் கௌவித் தின்றற்கு இடனான குளிர்ந்த துறைகளையுடைய ஊரையுடைய இத்தலைவனுக்கு, பெண்டு இனையாயின் - பெண்டாகிய நீ இத்தன்மையுடையை யானால், ஓவாது ஈயும் மாரி வண்கைக் கடும்பகட்டு யானை நெடுந் தேர் அஞ்சி - ஒழிவின்றி ஈதற்றொழிலைச் செய்யாநின்ற மழை போன்ற வண்மையுடைய கையினையும், கடிய களிற்று யானைகளையும் நெடிய தேரினையும் உடைய அஞ்சி என்பானுடைய, கொன் முனை செய்யும் போர்க்களத்தின்கண் இரவூர் போல - அச்சத்தைச் உள்ள இரவினையுடைய ஊரினுள்ளாரைப் போன்று, பலவாகுக நின் நெஞ்சிற் படர் - நின்னுடைய நெஞ்சின்கண் துன்பம் பற்பலவாகுக, நீ துஞ்சும் நாள் சிலவாகுக - படரொழிந்து நீ துயில்பெறும் நாள் சிற்சிலவே ஆவனவாக.

விளக்கம் :—அரில் - பிணக்கம். "ஐவன வெண்ணெலோடு அரில்

கொள்பு நீடி" என வரும் மதுரைக்காஞ்சியின்கண் நச்சினார்க்கினியர் உரையானும் அஃதப் பொருட்டாதல் உணர்க. பவர்ப்பிரம்பு: இரு பெயரொட்டு. கொடியாகிய பிரம்பென்க. பிரப்பங்கனி புறத்தே வரியுடைத்தாதல் கண்டறிக. விளைகனி : வினைத்தொகை. குண்டு-ஆழம். இலஞ்சி - குளம்; ஓடை முதலிய நீர் நிலைகளுமாம். கதூஉம்-கதுவும் - கவ்வும். நீரில் தோன்றாது நிலத்தில் தோன்றிய பிரப்பங் கனியை நீரில் வாழும் கெண்டை தின்னும் என்றது, குடியிற் பிறந்த தலைவனைக் குடிப்பிறப்பில்லாப் பரத்தையர் நுகர்கின்றனர் என்றவாறு. தண்டுறை - குளிர்ந்த நீர்த்துறை. பரத்தையரோடாடுதற்குரிய நீர்த் துறை பலவும் உடைய ஊரன் என்றிகழ்ந்தவாறு. இத்தகைய பரத் தனுக்குப் பெண்டாகிய நீ என்பாள், ஊரன் பெண்டு என்றாள். இனை - இன்னை என்பதன் இடைக் குறைந்து நின்றது. இன்னை - இத் தன்மையுடையை. அத்தன்மையாவது காணுதபோது ஊடியிருந்து கண்ட உடனே நிறையழிந்து கூடுதற்கு விழையும் எண்மைக் குணம் உடைமை. இவ் வெண்மைக் குணம் உடையையாயிருக்குந் துணையும் அவன் பரத்தமை விடான் ஆகலின், எப்பொழுதும் தனித்துக் கிடந்து எண்ணிறந்த துன்பத்தை நுகர்வாய் என்பாள், 'பலவாகுக நின் நெஞ் சிற் படர்' என்றாள். எப்போதாவது அவன் வலிந்து அருள் செய்யும் ஒருசில நாள் மட்டுமே நீ இன்புற்றுத் துயிலற்குரிய நாள். எஞ்சிய நாளெல்லாம் துயிலாத் துயர் நாளே என்பாள் 'சிலவாகுக நீ துஞ்சும் நாளே' என்றாள். நீ இங்ஙனம் எளியையாயின் நின் துயர் தவிர்தற்கு வழியில்லை என இடித்துரைத்தபடியாம்.

## மூலமும் உரையும்

கஈ௫

அஞ்சி - அதியமானஞ்சி என்னும் ஒரு வள்ளல். இவன் புகழைப் புறநானூறு முதலிய நூல்களானும் உணரலாம். இவன் போர்க்களத் தருகிலுள்ள ஊரின்கண் வாழ்வோர் பற்பல துன்பமுடையராய்த் துயில் பெறாது வருந்துவராகலின் ஈண்டு உவமையாக அவரைப் படர் உறுதற்கும் துயிலாமைக்கும் எடுத்தோதினள்.

## பாட்டு - கூஉ : தலைவி கூற்று

துறை :—காமமிக்க கழிபடர் கிளவியால் பொழுது கண்டு சொல்லியது. அஃதாவது, வரைவு நீட்டித்தலாற் பெரிதும் வருந்தியிருந்த தலைவி, காம நோயை மிகுவிக்கும் இயல்புடைய மாலைப்பொழுதின் வரவுகண்டு கூறியது.

இதன்கண், 'ஞாயிறு மறைகின்ற இவ்வந்திப் பொழுதின் கண்ணே வளைந்த சிறகுகளையுடைய இப்பறவைகள் தாமும் தம் மன்புடைய பார்ப்புக்களின் வாயிலூட்டுதற் பொருட்டு இரை தேர்ந்து தம் வாயிற் கொண்டனவாய் விரைந்து தஞ் சேக்கை நோக்கிப் போகின்றன. இங்ஙனம ஒன்றுறக் கலந்து இலைறஞ் செய்தற்கு நந் தலைவர் கருதிற்றிலரே' என்று தலைவி இரங்குகின்றாள்.

கூஉ. ஞாயிறு பட்ட அகல்வாய் வானத்து
அளிய தாமே கொடுஞ்சிறைப் பறவை

இறையுற வோங்கிய நெறியயல் மராஅத்த
பிள்ளை யுள்வாய்ச் சேரீஇய
இரைகொண் டமையின் விரையுமாற்
செலவே.

—நாமோதரனுர்.

(இ - ள்.) ஞாயிறு பட்ட அகல்வாய் வானத்து - ஞாயிற்று மண்டிலம் மறைந்த அகன்ற இடமமைந்த விசும்பின் கண், கொடுஞ்சிறைப் பறவை - வளைந்த சிறகுகளையுடைய பற வைகள், இறையுற ஓங்கிய நெறி அயல் மரா அத்த - தாம் தங்கு தல் பொருந்த உயர்ந்த வழிக்கு அயலே உள்ள கடம்பின்கண் உறையும், பிள்ளை உள்வாய்ச் சேரீஇய - பார்ப்புக்களின் வாயி னுள்ளே செருகும் பொருட்டு, இரை கொண்டமையின் - இரை யைத் தம் வாயில் கவுளிடத்தே எடுத்துக் கொண்டமையால், செலவு விரையும் - செல்லுதற்கண்ணே விரையா நிற்கும், அளிய- அவை இரங்கத் தக்கன.

**விளக்கம்**:—ஞாயிறு படுதல் என்றது, ஈண்டுமறைதல் என்னும் பொருட்டு. இப்படுசொல், தோன்றுதல் என்னும் பொருள்பட வரு தலும் உண்டு. அகல்வாய் வானம் - அகன்ற இடத்தையுடைய விசும்பு. வானத்தின்கண் செலவு விரையும் என்க. கொடுஞ்சிறை - வளைந்த

சிறகுகள். இறை - தங்குதல். இறையுற ஓங்கிய மராம், செறியயல் மராம் எனத் தனித்தனிக் கூட்டுக. நெறி - நடைவழி. மராம் - கடப்ப மரம். பிள்ளை - ஈண்டுக் குஞ்சு. "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை" (மரபி : ச.) என்பது தொல்காப்பியம். அன்பின் வழியே இப்பறவைகள் இயங்குதலால் அவை இரங்கத்தக்கன என்னுமுகத்தால் அன்பின்றித் தன்னை மறந்துறையும் வன்கண்மையுடைய தலைவர், இவ்வன்புதானும் அறிகிலரோ என்று கருதி இரங்கியவாறும்.

"காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்" (குறள் : கஉஉஎ)

என்னுந் திருக்குறளானும்,

........."தத்தம் துணையையுள்ளி வந்துசேரும் விலங்குகளையும்,

மக்களையும் கண்டு தான் அக்காலத்தில் நுகர்ந்த இன்பநினைந்து ஆற்றாமை மிகுதிபற்றி மாலை மலரும் என்றுங் கூறினாள்" என்னும் பரிமேலழகர் உரையானும், மாலைக்காலம் காமநோய் மிகச்செய்தலும் விலங்கு பறவை முதலியன அந்நோய் மிகுதற்கு உத்தீபன எதுவாதலும் உணாக.

## பாட்டு - கஙரு : தலைவி கூற்று

துறை :—வாயிலாகப் புக்க தோழிக்கு வாயில் மறுத்தது. அஃதாவது, பரத்தையரிற் பிரிந்தமையால் தலைவனோடு ஊடி

யிருந்த தலைமகளை ஊடல்தீர்த்துத் தலைவனொடு முயன்ற தோழியைத் தலைவி மறுத்துரைத்தது. கூட்டுவிக்க

இதன்கண், 'தோழி அவரே நமக்குத் தாயும் தந்தையுமாகும் தகுதியுடையார். அத்தகையார் நம்பால் அன்பிலராயவழி அவரோடு யாம் ஊடினேம் என்று உரைத்தல் நாணுத்தகவுடைத்து. ஆகலான், நலமிகச்சாஅய் இன்னுயிர் கழியினும் யாம் புலந் துள்ளேம் என்று நீ நாண்கெடக்கூறுதே கொள். அன்பிலாரிடத்து ஊடினேம் என்பதும் பயனின்று' என்று கூறுகின்றாள்.

கூ௩. நன்னலந் தொலைய நலமிகச் சாஅய்
இன்னுயிர் கழியினும் உரைய லவர்நமக்கு
அன்னையும் அத்தனும் அல்லரோ தோழி
புலவியஃ தெவனோ அன்பிலங் கடையே.

—அள்ளூர் நன்முல்லையார்.

(இ - ள்.)
யினும் - அவர்

தோழி—, நலமிகச் சாஅய் இன்னுயிர் கழி
பரத்தமை காரணமாக நமது அழகு பெரிதும்

கெட்டு இனிய உயிர் நீங்குவதாயினும், நன்னலம் தொலைய
புலவி உரையல் - நமது நல்ல நாணங்கெடுமாறு யாம் புலந்துள்

ளேம் என நீ கூறாதேகொள், அவர் நமக்கு
அன்னையும் அத்தனும் அல்லரோ - அவர்
நமக்குத் தாயும் தந்தையும் போலும்

## மூலமும் உரையும்

கஙஎ

சிறப்புடையவர் ஆவரே, அன்பிலங்கடை - அவர் நம்பாற் கொள்
ளற்குரிய அன்பிலாத விடத்தே, அஃதெவனோ - அப்புலவி யாது
பயனைச் செய்யும்?

விளக்கம்:—நீ புலந்துள்ளாய் கொழுநனோடு இங்ஙனம் புலவி நீட்
டித்தல் நினக்குத் தகுவதன்று என்று தோழி கூறினளாக, அவட்கு,
யான் புலந்துளளேன் என்று நீ கூறுதல் நாணுத்தகவுடைத்து.
ஆதலால் நீ அங்ஙனம் கூறாதொழிக; அவர் அன்னையும் அத்தனும்போல
நம்மால் வழிப்படத்தக்கவரே; யாம் வழிபாடு செய்வேமாக; ஊடத்
தகுந்த அன்புடையாரல்லர் ஆகலின், யான் ஊடியிருக்கின்றேன்
அல்லன்; அவர்பால் ஊடலால் யாதுபயன் என்று கூறினளாக உணர்க.

இங்ஙனமின்றி வேறுவகையாகப் பொருளியையின்றிக் கூறுவாரு முளர். ஊடினேன் அல்லன் ஆகலின், அதுதீர்ந்து கூடவும் உரியே னல்லேன் என வாயில் மறுத்தமையும் அறிக.

அன்பிலாதாரிடத்து ஊடுதல் பயனில்லை என்பதனை,

"நோதல் எவன்மற்று நொந்தாரென் றஃதறியும்
காதலர் இல்லா வழி" (குறள். கூ0அ)

என்னும் அருமைத் திருக்குறளானும் உணர்க.

உயிரினும் சிறந்தது என்ப வாகலின் நாணினை 'நன்னலம்' என்றான். நன்னலம் கெட என்றது, நாணுக்கெட என்றவாறு. நலம்மிகச் சாஅய் என்புழி, நலம் திருமேனி அழகென்க. அஃது - அப்புலவி. அன்பிலங் கடை - அன்பில்லாத விடத்து.

## பாட்டு — கூஉ : தலைவி கூற்று

துறை :—பருவங்கண்டு ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவலென்பதுபடத் தலைமகள் சொல்லியது. அஃதாவது, தலைவன் கார்ப்பருவத் தொடக்கத்தே வருவன்; அதுகாறும் ஆற்றியிரு என்று பிரிந்து சென்றவன் அப்பருவம வந்த பின்னரும் வந்திலாமையால் தலைவி ஆற்றாது வருந்துவளே என்று தோழி கவன்றாள். அதுகண்ட தலைவி யான் ஆற்று வேன் என்பதுபடச் சொல்லியது.

இதன்கண், 'இது கார்ப்பருவம் அன்ருகவும் பேதைப் பித்திகத் தரும்பு இவ்வம்பமாரியைக் காரெனமதித்துச் சிவந் தன. யானே இப்போது முழங்கும் இவ்விடிக்குரல் கேட்பின் வினைவயிற் சென்ற நந்தலைவர் இதனைக் கார்ப்பருவம் என மதித்துத் தாம் குறித்தபடி மீள்வரோ இன்றெனத் தெளிந்து வினையின்கண் முனைவரோ என்னுகுவர் என்று மருளாநின்றேன். இம்மருட்சியே அல்லால் ஆற்ருமையுடையேன் அல்லேன்' என்று தோழிக்குத் தலைவி கூறுகின்ருள்.

கஙஅ குறுந்தொகை

கூச. பெருந்தண் மாரிப் பேதைப் பித்திகத்து
அரும்பே முன்னும் மிகச்சிவந் தனவே
யானே மருள்வேன் தோழி பானாள்
இன்னுந் தமியர் கேட்பிற் பெயர்த்தும்
என்னு குவர்கொல் பிரிந்திசி னோரே
அருவி மாமலை தத்தக்
கருவி மாமழைச் சிலைதருங் குரலே.

—கதக்கண்ணனுர்.

(இ - ள்.) தோழி—, பேதைப் பித்திகத்து அரும்பே பெருந்தண் மாரிமுன்னும் மிகச் சிவந்தன - அறியாமையுடைய

பிச்சியினது அரும்புகள் பெரிய குளிர்ந்த கார்ப்பருவவரவின் முன்னரே இவ்வம்பமாரியைக் காரெனமதித்து மிகவும் சிவந்தன,

பிரிந்திசினோர் இன்னுந் தமியர் - நம்மைப் பிரிந்து சென்றோராகிய தலைவர் இன்னும் மீண்டிலாது தமியராயிருப்போர்,

பாஅனாள் - நடு இரவின்கண், அருவி மாமலை தத்தக் கருவி மாமழைச் சிலைதருங்குரல் கேட்பின் - அருவிநீர் பெரிய மலையிடத்தே தததி வீழும்படி பெய்யாநின்ற தொகுதியையுடைய கரிய முகில் முழங்கும் ஓசையைக் கேட்குமிடத்தே, பெயர் ததும் என்னாகுவர்கொல் யானே மருள்வேன் - மீட்டும் யாதின்கண் ஆவரோ என்று யான் மயங்காநின்றேன்.

**விளக்கம்:**—மாரிக்காலத்தே மலரும் இயல்புடைய பித்திகம் மாரி வருமுன்னர் வம்பமாரியைக் காரென மதித்துச் சிவந்தன ஆதலின், அவை மடமையையுடையன என்றாள். பெருந்தண் மாரி மூன்னும் எனக் கூட்டுக. பெருந்தண்மாரி என்றது கார்ப்பருவத்தை என்க. அவை பேதைமையாற் சிவந்தன; யான் அங்ஙனம் மயங்கி ஆற்றேனேன்; ஆற்றுவன் என்றவாறு. இன்னும் மீளாது தமியராய் வைகுவோர் என்க. முன்னர் என்வயினிராது வினைவயின் சென்றோர் இப்போது என்வயின் வருவரோ வினைவயிற்றங்குவரோ இவ்விரண்டின்கண் யாது துணிவர் என்பாள், 'பெயர்த்தும் என்னுகுவர்கொல்' என்றாள். கொல் - அசைநிலை. மூன்னும் வினையிடத்தாயினோர் பெயர்த்தும் அதனிடத்தாவரோ மீள்வரோ என்றவாறு. அருவி தத்தக் காரணமான மழை என்க. மழை, ஆகுபெயர். சிலை - இடி. குரல் கேட்பின் வினைமுடியாது மீள்வரோ தங்குவரோ என்று ஐயுற்று ஒன்றுந்தெளியாது மயங்குவேன் என்பாள், 'யானே மருள்வேன்' என்றாள். யான் மருள்வேனன்றி ஆற்றேனுகின்றேன் அல்லன் என்றவாறு. தமியராய் இருந்து கேட்பின் துயர் செய்யும் குரல் ஆகலின், தமியர் கேட்பின் என்றாள். பிரிந்திசினோர் - பிரிந்தவர். பானாள் - பால்+நாள் - பாதிநாள்; நள்ளிரவு. தமியர் - நம்மைப் பிரிந்திருந்தும் தனித்து ஈங்கே வாராது, ஆங்கேயே தங்கியிருப்போர் என்றபடி. தலைவிதான் ஆற்றலாகா வருத்தத்தால் இவ்வாறு கூறி வருந்தினாள் என்க.

## மூலமும் உரையும்

கஙஅ

## பாட்டு - கூரு: தலைவன்

கூற்று

துறை :—தலைமகன் பாங்கற்கு உரைத்தது. அஃதாவது, இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர்த் தலைவியை எய்தப்பெருமல் உடல் நிலை வேறுபட்ட தலைவனைப் பாங்கன், 'நினக்கு இவ் வேறுபாடு எற்றுனயது?' என்று வினவியாற்கு, 'இற்றுனய' தெனத் தலைவன் கூறியது.

இதன்கண், 'ஒரு குறுமகளின் நீர்போன்ற சாயல் தீப் போன்ற என் உரனை அவித்தமையால் யான் இவ்வாறு ஆயி னேன்' என்று தலைவன் பாங்கற்குக் கூறுகின்றான்.

கூரு. மால்வரை இழிதருந் தூவெள் அருவி
கல்முகைத் ததும்பும் பன்மலர்ச் சாரல்
சிறுகுடிக் குறவன் பெருந்தோட்
குறுமகள்
நீரோ ரன்ன சாயல்
தீயோ ரன்னவென் உரனவித் தன்றே.

—கபிலர்.

(இ - ள்.) தோழனே—, மால்வரை இழிதரும் தூவெள் அருவி - பெரிய மலையினின்றும் வீழாநின்ற தூயவெள்ளிய அருவி, கல் முகைத்ததும்பும் - மலை முழைஞ்சுகளிலே ஒலித் தற்குக் காரணமான, பல் மலர்ச் சாரல் சிறு குடிக் குறவன் பெருந்தோள் குறுமகள் - பலவாகிய மலர்களையுடைய மலைப்

பக்கத்துள்ள சிறிய குடியின்கண் வாழும் குறவன் ஈன்ற பெரிய தோளையுடைய சிறுமியினது, நீர் ஓரன்ன சாயல் - நீர் போன்ற மென்மை, என் தீ ஓரன்ன உரன் அவித்தன்று - என்னுடைய நெருப்பை ஒத்த வலியை அழித்தது.

**விளக்கம் :**—மால் வரை - பெரிய மலை. இழிதருதல் - வீழ்தல். கல் முகை - மலை முழைஞ்சு. ததும்பும் - முழங்கும். "ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப" (புறம்: கஉச.) என்புழியும் அஃதப்பொருட்டாதல் அறிக. பன்மலர்ச் சாரல் என்றது, தலைவியை இயற்கைப் புணர்ச்சியின் எய்திய பொழிலை என்க. சிறுகுடி பெருந்தோள், தீ, நீர் என்பவற்றுள் **முரண் அணி** தோன்றிச் செய்யுளின்பம் மிகுதல் காண்க. நீர், சாயலுக்கு உவமை. சாயலாவது, மகளிர் உடம்பு முழுவதும் உள்ள மென்மை. இம்மென்மை காண்போர் நெஞ்சானே உணர்தற்கு இயல்வதல்லது எடுத்துக்காட்டவியலாப் பண்பென்க. குறுமகளின் சாயல் என் உரனை அழித்தது என்றான் என்க. ஞாட்பினுள் நண்ணாரும் உட்கும் பீடாகலின், எதிர்ப்பட்ட பொருளையெல்லாம் அழிக்கும் தீயை உவமை கூறினான். திருக்குறளினும்,

> " ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
>
> நண்ணாரும் உட்கும்என் பீடு " (குறள்: க0அஅ.)

என்றோதுதல் அறிக.



## பாட்டு - கூகூ : தலைவி கூற்று

துறை :—தலைமகனை இயற்பழித்துத் தெருட்டும் தோழிக்குத் தலைமகள் இயற்படச் சொல்லியது. அஃதாவது, தலைமகனைக் குறை கூறிப் பழிக்கு முகத்தானே தலைவியைத் தேற்றிய தோழிக்குத் தலைவன் குறை கேட்கப்பொறுத தலைவி அவனுடைய இயல்பைப் புகழ்ந்து எதிர் கூறியது.

இதன்கண், 'ஒப்பாரு மிக்காருமில்லாத் தலைவனே தவறு செய்வானாயின் யான் என் செய்வேன் என்கின்றனை; நீ அங்ஙனம கூறுவது நகைத்தற்பொருட்டு என்று நான் கருதுகின்றேன். அங்ஙனம் இன்றி நின்மொழி வாய்மையே என யான் கருதியிருப்பனேல் இன்னிலை என்னும்' என்று தலைவி தோழியைச் சினந்து கூறுகின்றாள்.

கூகூ. அருவி வேங்கைப் பெருமலை நாடற்கு
யானெவன் செய்கோ என்றி யானது
நகையென உணரேன் ஆயின்
என்னா குவைகொல் நன்னுதல் நீயே.

—அள்ளூர் நன்முல்லையார்

(இ-ள்.) நன்னுதல் நீ - நல்ல நுதலையுடைய தோழியே நீ, அருவி வேங்கைப் பெருமலை நாடற்கு யான் எவன் செய்கு என்றி - நீர் அருவியினையும் வேங்கை மரங்களையுமுடைய பெரிய மலைகளையுடைய நாட்டையுடைய தலைவன்பாலுள்ள குறைக்கு யான் யாது

பரிகாரஞ் செய்யவல்லேன் என்று கூறுகின்றனை,

யான் அது நகை என உணரேனாயின் - நீ அவ்வாறு தலைவன் குறையுடையன் என்று கூறியதனை நகைத்தற்பொருட்டுக் கூறிய விளையாட்டு மொழி என்று நினையாது வாய்மை என்று கருதி விடுவேனாயின், என்னாகுவைகொல் - நீ என்ன தன்மையுடையை ஆகுவை.

**விளக்கம்** :—அருவியும் வேங்கையும் உடைய மலைநாடன் என்றது, மலை தன் அருவியாலே வேங்கைப் பொழிலைப் புரந்து வருங்கால் மகிழ்ந்தும் அருவியின்றி மாறியவழி அவ்வேங்கை வருந்தியும் இருப்பதல்லால் வேங்கை அவ்வருவியைத் தான் விரும்பும்போதெல்லாம் தன் கண் எய்துவித்துக்கொள்ள இயலாதது போன்று, தலைவன் அருள் சுரந்து வந்து மகிழ்விக்கும்போதெல்லாம் மகிழ்ந்தும் வாராதபொழுது வருந்தியும் இருப்பதல்லால் அவன் வாராக்குறைக்கு யான் என் செய்வேன் என்னும் குறிப்பிற்று. இது தலைவன் நீர்அருவி போன்று ஒரு சமயம் வருவன்; ஒரு சமயம் வாராதொழிவன்; இடையறாத அன்புடையனல்லன் எனத் தோழி இயற்பழித்தவாறாயிற்று. இங்ஙனம் நீ தலைவனைப் பழித்ததனை யான் விளையாட்டாகக் கூறுகின்றனை

என்று கருதி அமைகின்றேன். உண்மையாகவே கூறியிருப்பையேல் நீ என் அன்புடைத் தோழி ஆதல் எங்ஙனம் என்பாள், 'என்னுகுவை' என்றாள் என்க. என்றி - என்கின்றாய். நகை - நகைச்சொல். அது - அங்ஙனம் கூறியது. நன்னுதல்: அன்மொழித்தொகை ; விளி.

இனி, தலைவி இயற்பட மொழிந்தமைக்கு ஏற்ப அருவி வேங்கைப் பெருமலை நாடன் என்றது, தன்பாலுள்ள வேங்கைப் பொழிலினை அருவியால் மலை ஊட்டுதல் போன்று, தலைவன் நம்மை அருளுவன் என்னும் குறிப்பிற்றாகவும் கொள்க.

## பாட்டு - கூஎ : தலைவி கூற்று

துறை :—வரைவு நீட்டித்தவழித் தலைமகள் தோழிக்குச் சொல்லியது. அஃதாவது, இயற்கைப் புணர்ச்சிக்குப்பின் தலைவன் களவின்பமே விழைந்து வரைதற்குக் கருத்தின்றி ஒழுகுவதை, ஆற்றாளாகிய தலைவி தோழிக்குச் சொல்லியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'யான் தலைவனைப் பெறுதற்கரிய சிறையிடத்திருக்கின்றேன் ; என் பெண்மை நலம், யான் தலைவனைக்கண்ட கடற்கரைச் சோலையிடத்தது ; தலைவனோ தன் ஊரின்கண் தங்குவானாயினன்; மறையாகிய நங் களவுச்செய்தியோ பலரானும் அலர் தூற்றப்பட்டு அம்பலத்தின் கண்ணையது' என்று வருந்திக் கூறுகின்றாள்.

கூஎ. யானே ஈண்டை யேனே யென்னலனே
ஆனா நோயொடு கான லஃதே
துறைவன் தம்மூ ரானே
மறையல ராகி மன்றத் தஃதே

—வெண்பூதியார்.

(இ-ள்.) தோழீ, யானே ஈண்டையேன் - யான் இவ்விடத்தே தனித்திரா நின்றேன், என் நலன் ஆனு நோயொடு கானலஃது - எனது பெண்மை நலமோ பிரிந்தமையாத நோயோடே கடற்கரைச் சோலையிடத்தது, துறைவன் தம் ஊரான் - தலைவன் தன்னுடைய ஊரின்கண் உள்ளான், மறை

அலராகி

அறிந்து

மன்றத்தஃது - நம் களவுச் செய்தியோ பலரும் தூற்றுதற்கு உரிய அலர்மொழியாகி ஊரம்பலத்திடத்தே பரவா நின்றது.

விளக்கம்:—ஈண்டையேன் - இவ்விடத்தினேன். ஆனுநோய் - அமையாத துன்பம். ஆனுநோயொடு யான் ஈண்டையேன் எனப் பிரித்துக் கூட்டி நோயைத் தலைவிக்கேற்றுதல் சிறப்புடைத்து. துறைவன் - நெய்தனிலத்தலைவன். தலைவன் தன் தமருடன் வாழும் ஊராதலின் தம்மூர் என்று பன்மை கூறினாள். கானலஃதே, மன்றத்



தஃதே என்னும் ஈரிடத்தும் ஆய்தங்கள் விரிக்கும் வழி விரித்துப் பின் தோற்றிக்கொண்டவைகள். மறை - களவு மணம். பிறரறியாவாறு நிகழ்ந்தமையின் மறை எனப்பட்டது. அலர் - பலர் அறிந்து கூறும் பழிச்சொல். சிலர் அறிவது, அம்பல் என்பர்.

வரைந்து கொள்ளப்பட்டுத் தலைவனில்லத்து அவனோடிருந்து இல்லறம் இயற்றற்குரிய யான், அஃதொழிந்து காவன் மிக்க இவ்வின்னவிருக்கையிற் றனியே இருப்பேனாயினேன் என்பாள், 'யானே ஈண்டையேன்' என்றும், என்னோடிருக்கற்பாலதாகிய என் பெண்மை நலம் அழிந்ததென்பாள், அழிந்ததற்கிடனாகிய 'கானலஃ'தென்றும் வரைந்து கொள்ளற்குரிய தலைவன், அக்கருத்தின்றி வாளா தமரோடுறைகின்றான் என்பாள், 'துறைவன் தம்மூரான்' என்றும், மறைந்திருத்தற்குரிய நம் களவுமணச் செய்தி மறையாகாது பலரும் அறிந்து தூற்றப்பட்டது என்பாள், 'மறை அலராகி மன்றத்தஃது' என்றும் புலந்து கூறினாள் என்க. மன்றம் - ஊரம்பலம்.

இனி, இந்நிலை ஆற்றற்கரியது என்று வருந்தியவாறும்.

## பாட்டு - கூஅ : தலைவி கூற்று

துறை :—பருவங்கண்டு அழிந்த தலைமகள் தோழிக்கு உரைத்தது. அஃதாவது 'இன்ன பருவத்தே மீண்டு வருவல் வருந்தாதே; அதுகாறும் ஆற்றியிரு' எனத்தேற்றிச் சென்ற தலைவன், அப்பருவம் வந்த பின்னரும் வந்திலாமையால் ஆற்றாமை மிக்க தலைவி தோழிக்குக் கூறியது.

இதன்கண், 'தோழி ! தலைவர் தாங்கூறிய பருவம் வந்தும் வாராராயினர்; யாரேனும் அவர்பாற் சென்று அவர் கூறிய பருவம் வந்துவிட்டமையையும் அதனால் யான் உறும் வருத்தத்தையும் அறிவிப்பாராயின் நன்று' என்று தலைவி கூறுகின்றாள்.

கூ௪. இன்ன ளாயினள் நன்னுதல் என்றவர்த்
துன்னச் சென்று செப்புநர்ப் பெறினே
நன்றுமன் வாழி தோழிநம் படப்பை
நீர்வார் பைம்புதற் கலித்த
மாரிப் பீரத் தலர்சில கொண்டே.

—கோக்குளமுற்றனர்.

(இ - ள்.) தோழி-, நம் படப்பை நீர் வார் பைம்புதல் கலித்த - நமது மனைப்படப்பையின்கண் நீர் ஒழுகாநின்ற பசிய புதலின் மேற்படர்ந்து தழைத்த, மாரிப் பீரத்து அலர்சில கொண்டு - இக் கார்ப்பருவத்தே மலர்ந்த பீர்க்கின் மலர்கள் சிலவற்றைக் கைக்கொண்டு, அவர்த் துன்னச்சென்று - தலை



வரை அணுகச்சென்று, நல் நுதல் இன்னளாயினள் என்று - 5ல்ல நெற்றியையுடைய நுந்தலைவி இம்மலரின் நிறமெய்தினள் என்று, செப்புநர்ப்பெறின் நன்றுமன் - கூறுவாரைப் பெற்றால் மிகவும் நன்றேயாம்; அவரைப் பெற்றிலேமன்றே.

விளக்கம்:—நன்னுதல் என்றது நின்னைக் காணாத முன்பெல்லாம் நன்னுதலாயிருந்தவள் என்று பழைமை நினைப்பித்து என்றவாறு. இன்னள் - இத்தன்மையள். மாரிப்பீரத்து அலரின் தன்மையள் என்றறிவித்தல் வேண்டும் என்பது கருத்து. இது களவுச்செய்தி யாகலின் அவர்க்கு அணுக்கராய்ச் சென்று கூறல் வேண்டும் என்பாள், 'துன்னச்சென்று' என்றாள். துன்னல் - நெருங்குதல். 'செப்புநர்ப் பெறின்' என்றது, அவரைப் பெறக்கூடாத களவுக்காலம் என்பதைக் குறிப்பானுணர்த்திற்று. இதனால் இப்பிரிவு வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்ததென்க. நனறுமன் என்பதன்கண், மன்: ஒழியிசைப் பொருட்டாய் அது கைகூடப் பெற்றிலேம் என்பதுபட நின்றது. கார்ப்பருவம் வந்தமை புலப்படுத்தற்கும் அதனால் தலைவி பசந்தமை அறிவுறுத்தற்கும் பீர்க்கலர் எதுவாதல் அறிக. கார்ப்பருவ மாகலின், மழைநீர் வார்ந்து புதல்பசியதாயிற்று. பீர்க்கும் கலித்த தென்க. கலித்தல் - தழைத்தல். படப்பை - மனைக்கு அண்மையி லுள்ள தோட்டம்.

## பாட்டு - கூகூ : தலைவன் கூற்று

துறை:—பொருள் முற்றிப் புகுந்த தலைமகன் 'எம்மை நினைததும அறிதிரோ?' எனற தோழிக்குச் சொல்லியது. அஃ தாவது, பொருள் ஈட்டச் சென்ற தலைவன் மீண்டு வந்ததற்பின், அவனைநோக்கி, 'நீயிர் பிரிநதிருநத பொழுது எங்களை நினைத்த துண்டோ?' என்று வினவிய தோழிக்குத தலைவன் கூறியது.

இதன்கண், 'யான் நும்மை உள்ளினேன்; நினைத்தேன்;

நினைந்து மருண்டேன்; எதனிடத்தெனின்? பெரிய வெள்ளம் ஒழுக ஒழுக இறைத்துண்ணும்படி வற்றினாற் போன்று, என் காமவிருபபம் அறுதியடையும்படி எழுந்த விருப்பத்தின்கண்' என்று தலைவன் தோழிக்குக் கூறுகின்றான்.

கூகூ. உள்ளினேன் அல்லனே யானே உள்ளி
நினைத்தனேன் அல்லனே பெரிதே
நினைத்து
மருண்டனேன் அல்லனே உலகத்துப்
பண்பே
நீடிய மரத்த கோடுதோய் மலிர்நிறை
இறைத்துணச் சென்றற் றாஅங்கு
அனைப்பெருங் காமம் மீண்டுகடைக்
கோளவே.

—ஔவையார்.



(இ - ள்.) யான் உள்ளினென் அல்லனே - யான் தம்மை இடையறாது கருதினேன் அல்லனே, உள்ளி பெரிதே நினைத்தனென் அல்லனே-அங்ஙனம் உள்ளுங்கால் இவ்வுலக வின்பங்களிற் பெரிதாகிய காமவின்பத்தையே நினைத்தேன் அல்லனே, நினைத்து - அங்ஙனம் காமவின்பத்தையே நினைத்து, நீடிய

மரத்த கோடு தோய் மலிர்நிறை இறைத்து உணச் சென்று அற்றாங்கு - நீண்ட மரங்களினுடைய கொம்புகளைத் தீண்டும்படி பெருகும் மிக்க வெள்ளம் இறைத்துண்ணுமாறு நெடுந்தூரம் ஒழுகி அற்றது போன்று, அனைப்பெருங் காமம்-அவ்வெள்ளம் போன்ற பெரிய காமம், மீண்டு கடை கொள - நும்பால் மீண்டு வருமாற்றானே முடிவடைய, உலகத்துப் பண்பு மருண்டனென் அல்லனோ - உலகியலின்கண் யானும் மயங்கினேன் அல்லனோ?

**விளக்கம்:**—உள்ளுதல்-இடையறாது எண்ணுதல். தலைவியை இடையறாது எண்ணினேன். எண்ணுங்கால் அவளோடு நுகரும் அப்பேரின்பத்தையும் அவளை எண்ணும்போதெல்லாம் எண்ணினேன் என்பான், 'நினைத்தனன் பெரிதே' என்றான். இவ்வுலக வின்பங்களுட் பெரிது காமவின்பமாகலின், அதனைப் பெரிதென்றான். அஃது அங்ஙனமாதலை "ஈண்டின்பமென்றது ஒரு காலத்து ஒரு பொருளான் ஐம்புலனும் நுகர்தற் சிறப்புடைத்தாய காமவின்பத்தினை. இச்சிறப்புப்பற்றி வடநூலுட் போசராசனும் சுவைபல வென்று கூறுவார் கூறுக யாம் கூறுவதின்பச சுவை ஒன்றனையுமே என, இதனையே மிகுத்துக் கூறினன்" எனப் பரிமேலழகர் திருக்குறளின்கண் (காமத்துப்பால் முன்னுரை) கூறுதலானும், "உலகமும் புத்தேளுடும் சீர்தூக்கின் சீர்சாலாவே ..... தோள் மாறுபடும் வைகலோ டெமக்கே" (குறுந் - க0௧") என்றும் "தாம்வீழ்வார் மென்றோட் டுயிலின் இனிதுகொல், தாமரைக் கண்ணான் உலகு', (குறள் - ௧௧0௩) என்றும் பிற சான்றோர் கூறுமாற்றானும் உணர்க.

எத்தகையோரும் காமவின்பத்தே மயங்குதல் இயல்பாகலின், அவ்வியல்புக் கேற்பவே யானும் அதன்கண் மயங்கிக் காமம் கடைக்கொள நும்பால் மீண்டனன் என்பான், 'மருண்டனன் அல்லெனோ உலகத்துப் பண்பே' என்றான். அப்பண்பு மருட்டியிராதெனின், என் பொருளீட்டல் வினைக்கண் மேலும் முயன்று ஆற்றவும் ஈட்டியிருப்பேன். அப்பொருளினும் நீயிரும் காமவின்பமும் சிறந்தமையாலே நும்மை உள்ளி மீண்டேன் என்றவாறு. இக்கருத்தறியாது உலகத்துப் பண்பென்பதற்குப் பிறர் எல்லாம் பொருளுக்குப் பிரிந்தான் அது பெற்றே வரவேண்டும் மரபு என்பாரும் பிற கூறுவாரும் ஆயினர்.

மலிர் நிறை - மிக்கவெள்ளம். தலைவியைப் பிரிந்து சேணிடை யிருந்தமையால் அளவிறந்து காமவிருப்பம் பெருகிற்றென்பான், மரத்தின் கோடுதோயப் பெருகிய வெள்ளத்தை உவமை எடுத்தோதினன். அவ்வவரப் பெருக்கு மீண்டு வருங்கால் மெல்ல மெல்லக் குறைந்து தலைவியை எய்தி நுகர்ச்சி பெற்றவுடன் முடிவுறுதலின், வெள்ளம் நெடுந்தூரம் ஓடி அறுதலை உவமை கூறினன். எனவே, எம்மை

## மூலமும் உரையும்

கசடு

நினைத்து மறிதிரோ என்றாட்கு நினைத்து மருண்டமையானன்றோ இத்தனை விரைவில் மீண்டு வருவேனாயினேன் என இறுத்தானாதலறிக.

## பாட்டு - ௧00 : தலைவன் கூற்று

துறை :—(க) பாங்கற்கு உரைத்தது. அஃதாவது தலைவியைப் பொழிலிற் கண்டு மணந்த தலைவன் அச்செய்தியைத் தன் தோழனுக்குக் கூறியது.

(உ) அல்ல குறிப்பட்டு மீள்கின்றான் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. அஃதாவது, குறியல்லாதவற்றைக் குறியாகக் கருதிச் சென்ற தலைவன் ஆண்டுத் தலைவி வரப் பெறாமையால் வறிதே மீள்கின்றவன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

இதன்கண், 'பாங்கனே! யான்
ஓரி வள்ளலின் கொல்லிமலையின்
கண்டு காமுற்ற குறுமகள்
மேற்குப்பக்கத்தே வரைந்
துள்ள பாவை போன்று கண்டார்க்கு
மடமைவரச் செய்பவள்; பெறுதற்கும் அரியள்
காண்' எனத் தலைவன் கூறுகின்றான்.

௧00. அருவிப் பரப்பின் ஐவனம் வித்திப்
பருவிலைக் குளவியோடு பசுமரல் கட்கும்
காந்தள் வேலிச் சிறுகுடி பசிப்பிற்
கடுங்கண் வேழத்துக் கோடுநொடுத்
துண்ணும்
வல்வில் ஓரி கொல்லிக் குடவரைப்
பாவையின் மடவந் தனளே
மணத்தற் கரிய பணைப்பெருந் தோளே.

—கபிலர்.

(இ - ள்.) அருவிப் பரப்பின் ஐவனம் வித்தி - மலையருவியினையுடைய பரந்த நிலத்தின்கண் மலைநெல்லினை விதைத்து, பருஇலைக் குளவியொடு பசுமரல் கட்கும் - அந்நிலத்திடையே முளைத்த பரிய இலையினையுடைய மலைமல்லிகையும் பசிய மரலு

மாகிய களையினைப் பறிக்கின்ற, காந்தள்
வேலிச் சிறுகுடி-
காந்தளாகிய வாழ்வேலியையுடைய சிறுகுடியின்கண் வாழ்
வோர், பசிப்பின் கடுங்கண் வேழத்துக் கோடு கொடுத்து உண்
ணும் - பசிப்பாராயின் தறுகண்மையுடைய
யானையினது மருப்
பினை விற்று அவ்விலைப் பொருளை யுண்ணுகின்ற, வல்வில் ஓரி
கொல்லிக் குடவரை - வலிய வில்லையுடைய ஓரி வள்ளளினது
கொல்லியாகிய மேற்குமலையின்கண் எழுதப்பட்ட, பாவையின்
மடவந்தனள் - பாவை தன்னைக் கண்டார்க்கு மடமைவரச்
செய்யுமாபோல மடமைவரச் செய்பவள்
ஆவள், மணத்தற்

கு.—10



கரிய பணைப் பொருந்தோள் - அவளுடைய
மூங்கில் போன்ற பெரிய தோள்கள் தழுவுதற்கு
அரியனவாகும்.

**விளக்கம்** :—மலையின்கண் அருவிபாயும் நிலப்பரப்பின்கண் ஐவனம் வித்தி என்க. பருவிலை-பெரிய இலை. குளவி - மலைமல்லிகைமரல் - ஒரு வகைக் கொடி. குளவியும் மரலுமே களை என்க. கட்கும்-களைபறிக்கும். காந்தள்வேலி: பண்புத்தொகை. என்றும் மாறாது இயற்கையாக வுள்ளமையால் வாழ்வேலி என்றவாறு. சிறுகுடி - மலைவாணர் ஊர். சிறுகுடி - ஆகுபெயராய் ஆண்டு வாழ் வாரைக் குறிக்கும் க டுங்கண் வேழம் என்றது, அச்சிறுகுடியின் வேட்டச் சிறப்பிற்குக் குறிப்பேது வாய் நின்றது. தம்பால் உள்ள மலை நெல் முழுதும் வித்துவிட்டமை யானும் வித்தும் தொழிலில் ஈடுபட்டு வேட்டம் போகாமையானும், பசித்தனர். என்க கோடு - மருப்பு. நொடுத்து - விற்று. கோடு நொடுத்து அதனாற் பெற்ற பொருளை உண்ணும் என்க.

வல்விலோரி - விற்றொழிலில் வன்மையுடைய ஓரி. ஓரியின் வில் வன்மையைப் புறநானூற்றின்கண் வன் பரணர் பாடிய

> "வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி
> பேழ்வாய் உழுவை பெரும்பிறி துறீஇப்
> புழற்றலைப் புகர்க்கலை உருட்டி உரற்றலைக்
> கேழற் பன்றி வீழ வயல
> தாழற் புற்றத் துடும்பிற் செற்றும்
> வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்."

(புறம்: கருஉ) என்னும் செய்யுளானும் உணர்க.

கொல்லிப்பாவை, கண்டாரை மடமையுறுத்துவது போன்று மடமை யுறுத்துபவள், பெறுதற்கும் அரியள் என்றவாறு.

இனி இரண்டாவது கூறிய துறைக்கும், அல்லகுறிப்பட்டு வறிதே மீள்பவன் அங்ஙனம் நெஞ்சிற்குக் கூறினனாகக் கொள்க.

## பாட்டு - கO௪ : தலைவன்

கூற்று

துறை:—(க) தலைமகட்குப் பாங்காயினோர் கேட்பச் சொல்லியது.

(உ) வலித்த நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங் கியதூஉமாம்.

அவையாவன: தலைவியோடு இன்பம் நுகர்ந்த தலைவன் தலைவிக்குப் பாங்காயினோர் கேட்கும்படி தலைவியைப் புகழ்ந்து கூறியது. அல்லது, பொருளீட்டத்தூண்டும் தன் நெஞ்சிற்குத் தலைவியின் பெருமையைப் பிரிதற்கரியாள் என்பதுபடச் சொல்லியது என்னும் இருதுறைக்கும் இது பொருந்தும்.

இதன்கண், 'கடல் சூழ்ந்த இவ்வுலகமும், பெறுதற்கரிய வானவர் உலகமும், ஆகிய இரண்டும் தரும் இன்பமெல்லாம்



சீர்தூக்கிக் காணுங்கால் யான் தலைவியோடு வைகும் பத்திற்கு ஒப்பாகமாட்டா' எனத் தலைவன் கூறுகின்றான்.

இன்

விரிதிரைப் பெருங்கடல் வளைஇய உலகமும்
அரிதுபெறு சிறப்பிற் புத்தேள் நாடும்
இரண்டும் தூக்கிற் சீர்சா லாவே
பூப்போல் உண்கண் பொன்போல்
மேனி
மாண்வரி அல்குற் குறுமகள்
தோள்மாறு படூஉம் வைகலோ
டெமக்கே.

—பரூஉ மோவாய்ப் பதுமனார்.

(இ - ள்.) விரிதிரைப் பெருங்கடல் வளைஇய உலகமும்- விரிந்த அலைகளையுடைய பெரிய கடலாலே வளைக்கப்பட்ட இம் மண்ணுலகந் தரும் இன்பமும், அரிது பெறு சிறப்பின் புத்தேள் நாடும் - பெறுதற்கரிய தலைமையினையுடைய தேவர்கள் உலகந்தரும் இன்பமுமாகிய, இரண்டும் - இருவேறின்பங்களையும், பூப்போல் உண்கண் பொன்போல் மேனி மாண்வரி அல்குல் குறுமகள் - தாமரைப்பூப்போன்ற மையுண்ட கண்ணையும் பொன்போன்று திகழும் மேனியையும் மாட்சிமைப் பட்ட வரிகளையுடைய அல்குலையும் உடைய தலைவியினது, தோள் மாறு படும் வைகலோடு தூக்கின் - தோள்கள் மாறுபட்டுத் தழுவு தலையுடைய நாள்தரும் இன்பத்தோடு வைத்துப் புலக்கோலாலே தூக்கிக் காணுமிடத்து, எமக்குச் சீர்சாலா - அவ்விரண்டின்பங் களும் யாம்பெறும் இவ்வின்பத்தின் நிறைக்கு ஒவ்வமாட்டா.

விளக்கம்:—இவ்வுலகமுழுதும் ஒருகுடை நீழலில் ஆளும் அரச இன்பம் என்பான், 'விரிதிரைப் பெருங்கடல் வளைஇய உலகம்' என்றான். உலகம் நாடு வைகல் என்பன அவைதரும் இன்பத்திற்கு ஆகு பெயராய் நின்றன. புத்தேள் நாடு ஆற்றவும் அறஞ் செய்தார்கன்றிப் பெறல் சாலாமையின், 'அரிது பெறு சிறப்பிற் புத்தேள் நாடு' என்றான். உலகாளும் இன்பம் பொருளானும், புத்தேணாட்டிற் பெறும் இன்பம் அறத்தானும் எய்துவன வாகத், தலைவி தோள்மாறுபடுமின்பம் அன்பா லெய்துவதாகலின், அவை இதன் பொறைக்கு ஆற்றாவாயின என்க. ஏதுக்களான் உண்டாம் இன்பம், இயற்கையின்பத்தை ஒவ்வா என்றவாறு.

பூப்போல் உண்கண் பொன்போல் மேனி மாண்வரி அல்குல் முதலியன, இன்பவரவிற்கு ஏதுவாகிய உறுப்புக்கள். உலகத்திற்கும் புத்தேணாட்டிற்கும் உளவோ என்பான், இவையிற்றை விதந்தெடுத்தோதினான். 'தோள்மாறுபடும் வைகல்' எனப் பொழுது வரைந்தோதிய வாற்றான், உலகத்தினை ஆயுள்எல்லை காறும் ஆளும் இன்பமும் புத்தேள் நாட்டினை அறங்கடை கொள்ளும் காலங்காறும் நுகரும் இன்பமும் என்று விரித்தோதுக.



உலகமும் நாடும் ஆகிய இரண்டும் என்க. தூக்குதல் - நிறை காண்டல். இவையிற்றைத் தூக்கத் தலையின்மையின் புலக்கோலால் தூக்கின் என்க. 'தோள்மாறுபடும் வைகல்' என்றது, இடக்க ரடக்கல்.

இனிப் பாங்காயினர் கேட்பச் சொல்லியதெனக் கொள்ளின், இத்தகைய குறுமகளைப் பிரியவல்லேன் அல்லன் என, அவர்கள் அறியக் கூறியதாகவும், பொருள்வலித்த நெஞ்சிற்குக் கூறியதாகக் கொள்ளின், இவள்தரும் இன்பத்திற்குச் சிறிதும் ஒவ்வாத பொருளுக்கோ இவளைப் பிரிந்து போகக் கருதுகின்றனை என நெஞ்சினை இகழ்ந்தானாகவும் கொள்க.

## பாட்டு - கo௨ : தலைவி கூற்று

துறை :—ஆற்றுளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி யான் யாங்ஙனம் ஆற்றுவேன் என்றது. அஃதாவது, பிரிந்து சென்ற தலைவன் நெடிது காலந் தாழ்த்தானாக, இப் பிரிவுத் துன்பத்தை இனி இவள் ஆற்றுதல் இயலாது போலும் எனத் தலைவி நிலைக்கு இரங்கி வருந்திய தோழிக்குத் தலைவி அந்நோயின் கொடுமை கூறி, 'இதனை யான் எங்ஙனம் ஆற்றுவேன்?' பது படச் சொல்லியது.
என்

இதனகண், ' தலைவரை எண்ணுமிடத்து நெஞ்சம் வேகா நின்றது ; அவரை எண்ணுதலைமைவதும் இயலாததாக இருக்கின்றது ; காம நோயோ விரிந்த விசும்பையும் சென்று தொடும்
பெருக்கமுடைத்து ; இங்ஙனம் என்னை வருந்தவிடுத்து வாராது

அமைந்திருப்பாராகிய தலைவர், அறவோர் அல்லர்' எனத் தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

௧0௨. உள்ளின் உள்ளம் வேமே உள்ளா
திருப்பினெம் அளவைத் தன்றே வருத்தி
வான்றோய் வற்றே காமம்
சான்றோர் அல்லர்யாம் மரீஇ யோரே.

—ஔவையார்.

(இ - ள்.) உள்ளின் உள்ளம் வேம் - நம்மை மறந்துவிட்ட தலைவரை யாம் நினைப்பின் அவர் பிரிவாகிய தீச் சுடுதலானே எம் நெஞ்சம் வேகா நின்றது, உள்ளாது இருப்பின் எம் அளவைத்து அன்று - ஆயின் அவரை நினையாதமைவேம் எனினோ அங்ஙனம் இருத்தல் எம் ஆற்றலின் அளவிற் பட்டதன்று, காமம் வருத்தி வான் தோய்வற்று - இவ்வாறு தப்பும் வழியின்றி இடையறாது இக் காமநோய் எம்மை வருந்தச் செய்து மேலும் மேலும் பெருகுதலாலே விசும்பை முட்டுமாறு



போன்றதொரு பெருக்க முடைத்து, யாம் மரீஇயோர் சான்றோர் அல்லர் - இவ்வாறு யாம்

வருந்தும்படி நம்மை மறந்தமை யும் நம் தலைவர் அருளாளர் ஆகார்.

**விளக்கம் :**—உள்ளுதல் - நினைத்தல். தலைவரை நினைக்கும் பொழுது அவரைப் பிரிந்திருக்கும் துன்ப நெருப்பு, அந்நினைக்கும் உள்ளத்தி லேயே தோன்றி அதனையே சுடுதலான் அந் நெஞ்சம் வேகின்றதென் பாள், 'உள்ளின் உள்ளம் வேமே' என்றாள். துன்பத்திற்குக் காரணம் அவரை உள்ளுதலே என்பது நன்கு தெரிந்திருந்தும் அதனைச் செய் யாது ஆற்றியிருக்க எனின், நினையாதிருத்தல் எம் மாற்றலில் அமைந்த தன்று என்பாள், 'அஃது எம் மளவைத்தன்று' என்றாள். அவரை நினையாது பிறிதுபொருளில் நெஞ்சம்போக்கி ஆற்றுக என்று தேற்றிய தோழியின் உரையை "உள்ளாதிருப்பின்" எனக் கொண்டு கூறுகின்றாள் என்க. 'உள்ளாதிருப்பின் வருந்தாதிருக்கலாமே; அங்ஙனம் இருப்பினே! என்று நீ கூறுவாயாகின் அஃது எம்மள வைத்தன்று' என்றாள் என்க.

"மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போல் தோன்றி விடும்." (குறள் : கஉருரு.)

என்பாள், 'அஃது எம்மளவைத்தன்று' என்றாள். அந் நோய் எம் கருத்தின்வழி வாராது தானே தோன்றி நினைப்பித்து வருத்தும் எனறவாறு.

காமவின்பம் கடல் போன்ற பெருக்க முடைத்து; அதுதானே பிரிவால் துன்பஞ் செய்யுங்கால் அத்துன்பம் கடலினும் பெரிது என் பாள், 'வான்றோய் வற்றுக் காமம்' என்றாள்.

"இன்பங் கடன் மற்றுக் காமம் அஃதடுங்கால்
துன்பம் அதனிற் பெரிது." (திருக்குறள் : ககசுசு.)

என்னும் திருக்குறளை ஈண்டுக் கருதுக. வானம் கடலிற்பெரிதாகலின், 'வான்தோய்வற்று' என்றாள். விரிந்த விசும்பெல்லாம் நிறைந்து தோய்வது போல்வதொரு பெருக்க முடைத்தென்க. வான்றோய்வற்று என்றதற்கு "இவ் வருத்தத்தால் யான் இறந்துபட்டு வான்புக்க விடத்தும் ஆண்டு வந்து தோய்தல் வல்லது" என்பாருமுளர்.

சான்றோர் - ஈண்டு அருளுடையோர் என்னும் பொருட்டு. தன் பொருட்டு இவவாறு ஒருயிர் வருந்தும் என்பதறிந்தும் அவர் வந்து அளிசெய்யாமையின் அருளாளர் ஆகார் என்றவாறு. சான்றோர் அல்லர் என்றது சாலார் ஆகலின் வாரார் கொல்லோ என்று வருந்திய படியாம். யாம் மரீஇயோர் என்றதும் நம்மால் மருவப்பட்டு நம்மைத் தாம் மருவாதவர் என்னும் குறிப்புடையது.

## பாட்டு - கoரு : தலைவி கூற்று

துறை:—பருவங்கண்டு அழிந்த தலைமகள், தோழிக்குச் சொல்லியது. அஃதாவது, தலைவன் பிரிந்த பொழுது, 'யான் இன்ன பருவத்தே நின்பால் மீள்வன் ஆற்றியிரு' என்று



தேற்றிச் சென்றவன், அப் பருவம் வந்தபின்னரும் வாராமையால் ஆற்றாமை மிக்க தலைவி, தோழிக்குக் கூறியது.

இதன்கண், தலைவி, 'தூஉம் துவலைத் துயர்கூர் இவ் வாடைக் காலத்தும், எம்மை நினைந்து வந்திலர் ; இப்பிரிவுத் துன்பத்தை இனி ஆற்றவுங்கில்லேன் ; ஆதலின், இறந்துபடுவேன் போலும்,' என்று தோழிக்குக் கூறுகின்றாள்.

க0ரு. கடும்புனல் தொகுத்த நடுங்களுர் அள்ளல்
கவிரிதழ் அன்ன தூவிச் செவ்வாய்
இரைதேர் நாரைக் கெவ்வ மாகத்
தூஉந் துவலைத் துயர்கூர் வாடையும்
வாரார் போல்வர்நங் காதலர்
வாழேன் போல்வல் தோழி யானே.

—வாயிலான் தேவனூர்.

(இ - ள்.) தோழி—, கடும் புனல் தொகுத்த நடுங்கு அளுர் அள்ளல் - கடிதாய் ஓடும் நீரானே குவிக்கப்பட்ட நடுக்கத்தைச் செய்யும் வருத்தத்திற்குக் காரணமான சேற்றினிடத்தே, கவிர் இதழ் அன்ன தூவிச் செவ்வாய் இரைதேர் நாரைக்கு எவ்வமாக - முள்முருக்கம் பூவின் இதழ் போன்ற மென்மையுடைய இறகுகளையும் சிவந்த வாயினையும் உடையனவும் மீனாகிய இரையை ஆராய்வனவும் ஆகிய நாரைகளுக்குத் துன்பமுண்டாகும்படி, தூஉம் துவலைத் துயர் கூர் வாடையும் - சிதறு நின்ற நீர்த்துளிகளையுடைய பிரிந்தோர் வருத்தம் மிகு தற்குக் காரணமான

இவ்வாடைக் காற்றையுடைய கூதிர் காலத் தும, நம காதலர் வாரார் போல்வர் - நந்தலைவர் வரமாட்டா தார் போல இருந்தார், யான் வாழேன் போல்வல் -இனி யானும் இத்துயரத்தைப் பொறுத்து உயிர் வாழ்ந்திரேன் போலே இருந்தேன்.

**விளக்கம் :**—'வாடைக்காலத் தொடக்கத்தே வருவல்' எனக்

கூறிச் செனறவர், அப்பருவம் வந்துழியும் வாராமையால் இவ்வாடைக் காலம் முழுதுமே வாரார் போல இருந்தார் என்பாள், 'வாடையும் வாரார் போல்வர்' என்றாள். வாடையும் என்புழி, உம்மை சிறப் பும்மை. பிரிவாற்றாமை நாடோறும் மிக்கு நலிதலால், 'யான் சின் னாளில் இறந்துபடுவல்' என்பாள், 'யான் வாழேன் போல்வல்' என்றாள்.

கடும்புனல் - கடிதாக ஓடும் நீர். நடுங்கு அயிர் எனப் பாடமோது வாருமுளர். இதற்கு, நடுங்கும் நுண்மணல் என்று பொருள் கூறுக. அஞர் - வருத்தம். நடுங்குதற்குக் காரணமான வருத்தம் என்க. கவிர்- முள்முருங்கை. இதன் இதழ், நாரைத் தூவிக்கு மென்மைப் பண்பு பற்றி வந்த உவமை என்க. தூவி - இறகு. எவ்வம் - துயரம். துயர்

## மூலமும் உரையும்

கருக

கூர் வாடை - துன்பம் மிகுதற்குக் காரணமான வாடை. தூஉம் - தூவுகின்ற. இரைதேர் நாரைக்கு எவ்வமாகத் தூஉந் துவலைத் துயர் கூர் வாடை என்றது, உயிர்களிடத்து இரக்கமின்றித் துன்ப மிகுதி யையேசெய்யும் வாடை என, அதன் கொடுமையை விதந்தோதியவாறு.

## பாட்டு - ௧௦௪ : தலைவி கூற்று

துறை :—பிரிவின்கண் ஆற்றளாகிய தலைமகள் தோழிக் குக் கூறியது. அஃதாவது, தலைவன் பிரிந்தமையால் உண்டாய
வருத்தத்தை ஆற்றளாய தலைவியை நோக்கி 'நீ இங்ஙனம் ஆற்று யாகின்றதென்?' என வினுய தோழிக்குத் தலைவி தன் ஆற்று மைக்கு ஏதுக் கூறியது.

(2) 'சிறிய வுள்ளிப் பெரிய மறக்க வேண்டாவோ?' என்ற தோழிக்குக் கிழத்தி கூறியதூஉமாம். அஃதாவது, 'சிறிய சிறிய பிற செய்திகளை நினைக்கும் உபாயத்தாலே பெரி
தாகிய காமநோயை மறந்து ஆற்ற வேண்டாவோ?'
தோழிக்கு, அங்ஙனம் ஆற்றமாட்டாமைக்குத் தலைவி
என்ற
ஏதுக்
கூறியதூஉமாம.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, '
நந்தலைவர், பிரிவுத்

துன்பத்தை ஆற்றவொண்ணு பனிக்காலத்தும் பிரிந்துறைவா ராயினர்; அங்ஙனம் உறையும் நாட்களும் பற்பலவாக நீள்கின்

றண்; யான் இனி எங்ஙனம் ஆற்றுவேன்?' என்று கூறுகின்றாள்.

கoச. அம்ம வாழி தோழி காதலர்
நூலறு முத்தின் தண்சிதர் உறைப்பத்
தாளித் தண்பவர் நாளா மேயும்
பனிபடு நாளே பிரிந்தனர்
பிரியும் நாளும் பலவா குவவே.

—நாவன் முல்லைப்பூதனார்.

(இ - ள்) அம்ம வாழி தோழி - தோழி யான் கூறுவதனைக் கேட்பாயாக, காதலர் - நந்தலைவர், நூல் அறு முத்தின் தண் சிதர் உறைப்ப-கோத்த நூலற்றுழி முத்துக்கள் சிதறுமாறு போலக் குளிர்ந்த மழைத்துளிகள் சிதறுநிற்ப, நாள் ஆ தாளித் தண்பவர் மேயும் - நாட்காலத்தே பசுக்கள் தாளியறுகின் குளிர்ந்த கொடியை மேய்கின்ற, பனிபடு நாள் பிரிந்தனர் - பனி மிக்கு வீழ்கின்ற இந்நாளினும் பிரிந்துறைவாராயினர், பிரியும் நாளும் பல ஆகுவ - மேலும் அவர் அங்ஙனம் நின்ற நாள்கள் தாமும் பற்பலவாக நீண்டன.

பிரிந்துறையா

கருஉ

குறுந்தொகை

**விளக்கம்**:—அம்ம: கேட்பித்தற்கண் வந்தது. யான் கூறுவதனைக் கேட்க, என்றவாறு. வாழி: உரையசை. நீ வாழ்வாயாக என வாழ்த்து முகத்தானே இனி யான் வாழ்கல்லேன் எனக் குறித்தாள் எனினு மாம். காதன் மிக்கோர் பிரிந்திருந்து ஆற்றொணுக் காலமாகிய பனி படு நாள் என்பாள், தலைவர் என்னுது காதலர் என அக்கிழமையைத் தெரித்தோதினுள். நூல் - முத்துமாலையின்கண் உள்ள கோக்கும் நூல். நூலற்றபோது யாண்டும் சிதறும் முத்துக்கள், மழைத்துளி சிதறி வீழ்தற்கு உவமை. இது வினை மெய் உருவென்னும் மூன்றும் பற்றி வந்த உவமை என்க. வாடையின் குளிர்க்கொடுமையை இது மிகுவிக்கும் எனபாள், 'தண் சிதர்', என்ருள். சிதர்-துளி. உறைத்தல்-துளித்தல். நாள் - விடியற்காலம். தாளிப்புல்லின் குளிர்ந்த கொடியினை ஆமேயும் என்றது, என் பெண்மை நலனெல்லாம் பசலையுண்ணு நிற்கும் என்னும் குறிப்புடையது.

பனிபடுநாள் - கூதிர்காலம். பிரியவொண்ணுத நாளினும் பிரிந்தனர்; மேலும் பிரிந்துறையும் நாளகளும் சில ஆயின் ஒருவாறு ஆற்றுவன்; அவைகளும் பலவாகின்றன, என்பாள், 'பிரியும் நாளும் பல வாகுவ' என்ருள்.

> "ஒருநாள் எழுநாள்போற் செல்லும்சேட் சென்ருர்
> வருநாள்வைத் தேங்கு பவர்க்கு."

(திருக்குறள் - கஉகக)

என்பவாகலின், பருவம் வந்து சிலநாளே ஆகியும் அவை பலவாகுவ என்று ஏங்கினுள் என்க. இங்ஙனமாகலின் யான் ஆற்றுவதெவ்வாறு

எனறவாறு.

இனிச் சிறிய உள்ளிப் பெரிய மறக்கவேண்டும் என்றது, 'தம் மனைக்கண் நிகழும் வேறு வேறு செய்திகளிலே மனம் போக்கி, அம் மனத்தின்கண், பெரிதாக உறையும் பிரிவினை உள்ளாது மறக்க வேண்டும்; அங்ஙனமின்றி நீ அதனையே உள்ளி ஆற்றாயாகின்றதென்?' என, வினய தோழிக்கு அச் சிறியவற்றை யான் சிந்திப்பதெங்ஙனம்? இத்துன்பம் பிறிதொன்றனை நினைக்கவிடாமல் என் னெஞ்சைச் சிறை கொண்டது என்றாளாக, இரண்டாவது துறைக்குக் கூறிக்கொள்க.

இதற்கு இங்ஙனம் கூற அறியார், தலைவன் அவள்மாட்டுச் செய்த தலையளியைச் சிறிய என்றும், அதனை நினைந்து பெரிய கொடுமையை மறப்பாய் என்றாள் என்றும், இங்கு வாராமற் கழியும் நாள்களின் எண் சிறிய என்றும், அவர் வாராது முன்னர்க் கழிந்தநாள் பெரிய என்றும், இச் சிறுமையை எண்ணி அப் பெரியவற்றை மறந்திடுக என்றாள் என்றும், தத்தமக்குத் தோன்றிவாறே கூறுவாரும் உளர்.

## பாட்டு - ௧௦௫ : தலைவி கூற்று

துறை: வரைவு நீட்டித்தவிடத்துத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது. அஃதாவது, தலைவன் வரைபொருட்குப் பிரிந்தான் காலம் நீட்டித்திருந்தானாக, அப்பிரிவினைப் பொறாது கலங்கித் தலைவி தோழிக்குக் கூறியது.

### மூலமும் உரையும்

௧௦௫

இதன்கண், தலைவி தோழியை நோக்கித் 'தலைவருடைய கேண்மை வாய்மையாகாமல் என் நினைவின் மட்டுமே நின்று

என்னைப் பெரிதும் வருத்துவ தொன்றாயிற்று' என்று கூறு கின்றாள்.

கoரு. புனவன் துடவைப் பொன்போற் சிறுதினைக்
கடியுண் கடவுட் கிட்ட செழுங்குரல்
அறியா துண்ட மஞ்ஞை ஆடுமகள்
வெறியுறு வனப்பின் வெய்துற்று நடுங்கும்
சூர்மலை நாடன் கேண்மை
நீர்மலி கண்ணொடு நினைப்பா கின்றே.

—நக்கீரர்.

(இ - ள்.) புனவன் துடவைப் பொன்போல் சிறுதினை - தோழி! குறவனுடைய தோட்டத்தின்கண் விளைந்த பொன்போற் போற்றப்பட்ட சிறிய தினையில், கடியுண் கடவுட்கு இட்ட செழுங்குரல் - புதிதுண்டற் காரணமாகத் தெய்வத்திற்கு அவிக் காட்ட இட்டுவைத்த செழிய கதிரினை, அறியாது உண்ட மஞ்ஞை - அறியாமல் தின்ற மயில், ஆடுமகள் வெறியுறு வனப்பின் வெய்துற்று நடுங்கும் - அரங்கின்கண் கூத்தாடுகின்ற விறலி வெறியுற்றோள் அவிநயம் காட்டும் வனப்பினை ஒத்துத் துன்புற்று நடுங்குதலைச் செய்தற்கிடமான, சூர்மலை நாடன்

கேண்மை - தெய்வங்கள் உறைதற்குரிய மலைநாட்டையுடைய தலைவனது நட்பு, நீர்மலி கண்ணொடு நினைப்பு ஆகின்று - நீர் நிரம்பிய கண்களோடு வருந்தி நினைக்கும் நினைவுமாத்திரையே யாயிற்று.

**விளக்கம்** :—புனவன் - குறிஞ்சி நிலத்தில் வாழ்பவன்; புனத்தை உடையவன் என்க. தட்டை-தோட்டம். தெய்வத்திற்கு அவிக்காட்ட விட்ட தினையாகலின் பொன்னைப் போற்றுமாறு போற்றப்பட்ட சிறு தினை என்றாள் என்க. இனிப்பொன்போலும் நிறத்தையுடைய தினை எனினுமாம். கடியுண் - புத்துணவு. அஃதாவது, தினை நெல் முதலிய வற்றை விளைவிப்போர் ஒரு ஆண்டின் விளைவினை முதன் முதலாக உண்பதனைப் புதிதுண்ணல் என்ப. இப் புத்துணவினைத் தெய்வத் திற்கு நிவேதித்துண்ணல் வழக்கம். இதனைப்,

"புனத்தினைக் கிள்ளிப் புதுவவிக்காட்டி நின் பொன்னடிவாழ்கவென்
றினக்குறவர் புதியதுண்ணும் திருமாலிருஞ் சோலை
" எனவரும் பெரிய திருமொழியானும்,
"சிறுதினை மூர்துவிளை யாணர் நாட்புதிதுண்மார்"
(புறம்-கசு அ) எனவரும் புறப்பாட்டானும் உணர்க.



தமது புனத்தின்கண் செழுமையான கதிரைத் தெய்வத்திற்கிட் டனராதலின், செழுங்கதிர் என்றாள். தனக்கு இயல்பாகவுள்ள அறி யாமையால் தெய்வத்திற்கிட்டவற்றை உண்ணலாகாது என்று அறியா மல் தின்ற மயில் என்க. மஞ்ஞை - மயில். ஆடுமகள் - விறலி. விறலி - தெய்வமுற்றோள் அவிநயம் காட்டுங்கால் தோன்றும் வனப்புத் தோன்ற மயில் வெய்துற்று நடுங்கும் என்க.

"தெய்வ முற்றோ னவிநயம் செப்பின்

கைவிட் டெறிந்த கலக்க முடைமையும்
மடித்தெயிறு கௌவிய வாய்த்தொழி
லுடைமையும்
துடித்த புருவமும் துளங்கிய நிலையும்
செய்ய முகமும் சேர்ந்த செருக்கும்
எய்து மென்ப இயல்புணர்ந் தோரே"

எனவரும் (சிலப். அரங். அடியார்க் - உரை) கலையாகலின், வனப்பென்றார். ஆடுமகள் என்றதற்குத் தேவராட்டி எனினுமாம்.

கடவுட்கிட்ட கதிரை அறியாதுண்ட மயில்
வெய்துற்று நடுங்கும்

என்றது, தலைவன் அரியன் என்பது அறியாமற் கேண்மைகொண்டு யான் இப்போது அக்கேண்மை காரணமாக வருந்தி நடுங்காநின்றேன் என்னும் குறிப்புடையதென்க. சூர்மலைநாடன் என்றதும், தீண்டி வருத்தும் சூர் போன்று, நம்மைக் கேண்மைகொண்டு வருத்தும் இயல்புடையன் என்பது தோன்ற நின்றதுணர்க.

நீர்மலிகண் - துன்பத்தாலே நீர் பெருகிய கண். நினைப்பு வருத்தஞ் செய்தலை 'நீர்மலி கண' என்பதனால் உணர்த்தினாள். எனவே, தலைவன் கேண்மை கூடிமகிழ்வதற்கு ஏதுவாகாது தனித்திருந்து நினைத்து வருந்துதற்கே ஏதுவாயிற்றென இரங்கியவாறும்.

## பாட்டு - ௧0௫ : தலைவி கூற்று

துறை : தலைமகன் தூதுகண்டு கிழத்தி தோழிக்குக் கூறியது. அஃதாவது, பாத்தையிற்

பிரிந்த தலைவன் அவ்வொழுக்

கத்தை மறைத்துத் தான் தீதிலன் என்று அறிவிக்குமாறு தலைவியின்பால் தூது விட்டானாக, அத்தூதன் கூறியதுகேட்டுத் தலைவி, தான் வாயில்நேர்ந்தமை தூதனுக்குத் தோன்றத் தோழிக்குக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியைநோக்கி 'நாடன் தீதில் நெஞ்சன் என்னும் சொல்லொடு தூதன் நம்பால் வந்துள்ளான்.

யாமும், அத்தூதன் மொழியை ஏற்று அத்தலைவர் மணந்த நாளில் இருந்த தன்மையேமாகவே இப்பொழுதும் இருக்கின்றேம் என்னும் செய்தியைத் தூதுவாயிலாய் அவர்க்கு அறிவிப்போம்' என்று கூறுகின்றாள்.

## மூலமும் உரையும்

கருஞ

கoகூ. புல்வீழ் இற்றிக் கல்லிவர் வெள்வேர்
வரையிழி அருவியின் தோன்றும் நாடன்
தீதில் நெஞ்சத்துக் கிளவி நம்வயின்
வந்தன்று வாழி தோழி நாமும்
நெய்பெய் தீயின் எதிர்கொண்டு
தான்மணந் தனையமென விடுகந் தூதே.

—கபிலர்.

(இ - ள்.) தோழி—, புல்வீழ் இற்றிக் கல் இவர் வெள் வேர் - புல்லிய விழுதாகிய இற்றியினது மலையின்கண் படர்கின்ற வெள்ளிய வேர்கள், வரைஇழி அருவியில் தோன்றும் நாடன் - அம்மலையினின்றும் வீழாநின்ற அருவிபோலத் தோன்றாநின்ற மலைநாட்டையுடைய தலைவன், தீதில் நெஞ்சத்துக் கிளவி - குற்ற மற்ற நெஞ்சத்துணடாகிய மொழி, நம்வயின் வந்தன்று - தூதன்வாயிலாய் நம்பால் எய்திற்று, நாமும் நெய்பெய் தீயின் எதிர்கொண்டு - இனி யாமும் நெய்பெய்யும் கால் அதனை விரைந் தேற்கும் தீயைப்போன்று அவன் மொழியை ஏற்றுக்கொண்டு, தான் மணந்தனையம் எனத் தூது விடுகம் - அவன் எம்மை மணந்த காலத்தே எத்தன்மையேமா யிருந்தோம் ; அத்தன் மையேமாகவே இருக்கின்றேமை என்று அவனுக்குக் கூறும்படி தூதுவிடுவேமாக.

**விளக்கம்** :—புல் வீழ் - புல்லுகின்ற வீழ் எனினுமாம். இற்றி -

ஒருவகை மரம்; இதனை இச்சி என இக்காலத்தார வழங்குப. இம் மரம் யாதானும் பிறிதோர் மரத்தைப்பற்றியே வளரும் இயல்பினது. இவர்தல் - படர்தல் - கல்லின்மேற் பற்றிப் படர்தலின், கல்லிவர் இற்றிவேர் என்றாள். வெள்வேராகலின் அருவிபோற் றோன்றும் என்க. வரையிழி அருவி - மலையினின்றும் வீழ்கின்ற அருவிநீர் ஒழுக்கு. வெள்வேர் அருவிபோற் றோன்றும் என்றது தீதுள நெஞ்சனாகவும் தீதில் நெஞ்சினனாகத் தன்னைக் காட்டுகின்றான் என்றவாறு. தீதில் நெஞ்சன் எனத் தூதன் கூறினனாக, அதனைக் கொண்டு கூறுவாள், 'தீதில் நெஞ்சத்துக் கிளவி' என்றாள். தீதுடைய நெஞ்சத்துக் கிளவி என்பது குறிப்பு. கிளவி : சாதியொருமை. அவன் பரத்தை வயிற்பட்டானாக அவனது கிளவி நம் வயின் வந்தது என்றாள் என்க. வந்தன்று - வந்தது. குடிப்பிறப்பாட்டியேமாகிய யாமும் அதனை மெய்யென்றே ஏற்றேம்போல ஏற்றுக்கோடலன்றி வேறென் செய்தும் என்பாள், 'நாமும் நெய்பெய் தீயின் எதிர்கொண்டு தூது விடுகம்' என்றாள். கணவன் குற்றத்தை ஒல்லும்வகை மறைத்து அவனை ஏற்றுக்கோடலே குடிப்பிறப்பாட்டியர்க் கியல்பாவதை—

"சேக்கை யினியார்பாற் செல்வான் மனையாளாற்
காக்கை கடிந்தொழுகல் கூடுமோ
கூடா தகவுடைய மங்கையர் சான்றாண்மை
சான்றார் இகழினுங்கேள்வரை ஏத்தி இறைஞ்சுவார்."
(உ0: அகூ-அக)

 குறுந்தொகை

என வரும் பரிபாடலானும் உணர்க. காணக்காலை நெய் பெய்தீ

துன்னி எழுந்தமை கண்டாள் ஆதலின், அதனையே தாம் எதிர்கொள்ளும் எழுச்சிக்கு உவமை கூறினாள். தான் மணந்த ஞான்று "நின்னைப் பிரியேன் பிரியின் உயிர் வாழேன்" எனச் சூளுரைத்தமையை மறந்து அவன் பிரிந்து இன்னா செய்வானாயினும் யாம் அன்பிற் பிறழாது அன்றே போல்குதும் இன்றும் என அறிவுறுத்துவேம் என்பாள், 'தான் மணந்தனையம்' என்றாள். 'அவன் மணந்த பொழுது எத்தகைய அன்பினேம்; அத்தகைய அன்பினேமாய் இன்றுமுளேம்,' என்றபடி. தான் பிறிதோர் தூதுவிடுவாள் போன்று கூறினளேனும் தீதுடைய நெஞ்சம் உளராயினும் அவரை ஏற்றுக்கொள்ள இசைந்தேம் எனத் தலைவன் விட்ட தூதனுக்கு அறிவிப்பதே தலைவி கருத்தாகக் கொள்க.

## பாட்டு - கoஎ : தலைவி கூற்று

துறை :—பொருள்முற்றி வந்த தலைமகனுடைய கிழத்தி காமமிக்க கழிபடர் கிளவியாற் கூறியது. அஃதாவது, தலைவனுடைய பிரிவாற்றாது அவன் வருகையை,

> "வருகமற் கொண்கன் ஒருநாட் பருகுவன்
> பைதனோய் எல்லாங் கெட." (திருக்குறள் - கஉ௬௬)

என ஆர்வத்துடன் எதிர்பார்த்திருந்த தலைவி, அவன் மீண்டு வந்துழி அவனொடு பாயல்கொண்ட, இரவு புலர்ந்தமையைக் கூவியறிவித்த சேவற்குக் கூறுவாளாய்த் தனது காமமிகுதியைக் கூறியது.

இதன்கண், தலைவி, 'என் உயிர்த் தலைவனோடு பாயல் கொண்டிருந்த என்னை எழுப்பிய சேவலே! நீ பூனைக்கு இரையாகிக் கொடிய துயரை நுகர்வாயாக,' என வைகின்றாள்.

கoள. குவியிணர்த் தோன்றி ஒண்பூ வன்ன
தொகுசெந் நெற்றிக் கணங்கோள் சேவல்
நள்ளிருள் யாமத் தில்லெலி பார்க்கும்
பிள்ளை வெருகிற் கல்கிரை யாகிக்
கடுநவைப் படீஇயரோ நீயே நெடுநீர்
யாணர் ஊரன் தன்னொடு வதிந்த
ஏம இன்துயில் எடுப்பி யோயே.

—மதுரைக் கண்ணனூர்.

(இ - ள்.) குவி இணர்த் தோன்றி ஒண் பூ அன்ன - குவிந்த கொத்துக்களையுடைய செங்காந்தளினது ஒள்ளிய பூவைப்போன்ற, தொகு செந் நெற்றிக் கணங் கொள் சேவல் - தொக்குச் சிவந்த கொண்டையையுடைய திரளையுடைய சேவலே,

நள் இருள் யாமத்து இல் எலி பார்க்கும் பிள்ளை வெருகிற்கு அல்கு இரையாகி - செறிந்த இருளையுடைய இடை இரவின்கண் இல்லத்திலுள்ள எலிகளைத் தனக்கு இரையாக ஆராய்கின்ற குட்டியாகிய காட்டுப் பூனைக்கு இட்டு வைத்துண்ணும் இரையாக அகப்பட்டுக் கடிய துன்பத்தை எய்துவாயாக; அஃதெற்றுக்கெனின், நீ யாணர் நெடுநீர் ஊரன் தன்னொடு வதிந்த ஏம இன் துயில் எடுப்பியோய் - நீ புது வருவாயினையுடைய ஊரையுடையவனும் உடனே செய்யவேண்டுவதனைக் காலந் தாழ்த்துச் செய்யும் தன்மையுடையவனுமாகிய தலைவனோடே தங்கிய என்னுடைய மிக இனிய துயிலினின்றும் எழுப்பினை யாகலான்.

**விளக்கம்** :—குவியிணர் : வினைத்தொகை. இணர் - கொத்து. தோன்றி - செங்காந்தள். தோன்றியின் குவிந்த இணரையுடைய ஒள்ளிய பூ என மாறினுமாம். தோன்றிப்பூ, சேவலின் கொண்டைக்கு நிறமும் உருவமும் பற்றிவந்த உவமை. நெற்றி - கொண்டை : ஆகு பெயர். பெடைக்கணங்களை வலிந்து கொள்ளும் சேவல் என்பாள், 'கணங்கொள் சேவல்,' என்றாள். கணம் - திரள். கணங் கொள் சேவல் என்றது. 'நின் சுற்றமாகிய பெடைகளின் கூட்டத்திற் பிரிந்து கடுநவைப் படீஇயர்' என்னும் பொருள்படநின்ற குறிப்புச் சொல். தன் கேளிரினின்றுந் தன்னைப் பிரித்தமையால் நீயும் நின் சுற்றத்தினீங்கிக் கெடுக என்றவாறு. சேவல் : விளி. நள்ளிருள் - செறிந்த இருள். பிள்ளை வெருகு - குட்டியாகிய காட்டுப்பூனை.

"அவற்றுட், பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை
தவழ்பவை தாமு மவற்றோ ரன்ன." (தொல் - மரபு. சூ-ச-ரு)

என்னும் விதியினில் தாமும் என்ற இலேசானே பின்னை நடப்பவைக்கு வந்தமையை அமைத்தனர் பேராசிரியர். இல் வெலி - வீட்டின்கண் வாழும் இயல்புடைய எலி. பார்த்தல் - ஆராய்தல். அல்கு இரை - ஒரே முறையில் விழுங்காது வைத்துப் பிய்த்துண்ணப்படும் இரை. எனவே சித்திர வதைக்கு ஆளாவாய் என்றவாறும். கடுநவை - பெருந் துன்பம். படீஇயர் - படுவாயாக.

"பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்." (திருக்குறள் - ௩௧௯)

என்பவாகலின், 'எனக் கின்னாமை செய்த நீ இன்னாமை எய்துதி,' என்று கூறியவாறும்.

நெடுநீர் - உடனே செய்யவேண்டிய தொன்றனை அங்ஙனம் செய்யாது கால நீட்டித்திருத்தற் பண்பு. தலைவன் தன்னைப் பிரிந்து வருவல் என்ற பருவத்தே வாராமல் காலநீட்டித்திருந்து வந்தான் என்பது தோன்ற, 'நெடுநீர் ஊரன்,' என்றாள். துயில் இயல்பானே உயிர்கட்கு இன்பமாவதாகலின், 'இன்றுயில்,' என்றும், அவ் வின்பத்தின் மேலும் தான் தலைவனோடே பாயல் கொண்ட பேரின்பமும் உடைத்தாகலின், இன்பத்தின்மேலும் இன்பமுடைய துயில் என்பாள், 'ஏம இன்றுயில்,' என்றும் கூறினாள். ஏமம் - இன்பம்.

௧௰௮ குறுந்தொகை

இது தனக் கின்னு செய்தார்க்கும் இனியவே செய்யும் சான்றாண்மையின் ஒரீஇத் தன் காம மிகுதி காரணமாகப் பிறவுயிர்க் கின்னாமை கருதிக் கூறலின், 'காம மிக்க கழிபடர் கிளவி,' யாயிற் றென்க.

## பாட்டு – கoஅ : தலைவி கூற்று

துறை:—பருவங்கண் டழிந்த தலைமகள், தோழிக்குக் கூறியது. அஃதாவது, 'கார்ப்பருவந் தொடங்குங்கால் மீண்டு வருவேன்,'
பின்னரும்
எனக் கூறிச் சென்ற தலைவன், அப் பருவம் வந்த வாராமையானே பெரிதும் வருந்திய தலைவி தோழியை நோக்கிக் கூறியது.

இதன் கண், 'மலைகளிலே முகில்கள் தவழ்கின்றன ; மாலைப் போதில் ஆன்கள் தங் கன்றை நினைந்து அவற்றின்பால் செல்கின்றன ; முல்லைப்பூக்கள் மலருஞ்செவ்வி யடைந்தன ; இன்னும் தலைவரோ வந்திலர் ! இனி, யான் என் வருத்தத்தைத் தாங்கி உயிர்வாழ்ந்திருத்தற்கு இயலாதேன் போல ஆய்விட்டேன் ; என் செய்வல் !' எனத், தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

கா௩. மழைவிளை யாடுங் குன்றுசேர் சிறுகுடிக்
கறவை கன்றுவயிற் படரப் புறவிற்
பாசிலை முல்லை ஆசில் வான்பூச்
செவ்வான் செவ்வி கொண்டன்று
உய்யேன் போல்வல் தோழி யானே.

—வாயிலான் தேவனர்.

(இ - ள்.) *தோழீ—, மழை விளையாடும் குன்று சேர் சிறு குடி - முகில்கள் தவழ்ந்து விளையாடாநின்ற மலையினைச் சார்ந்திருந்த இச் சிற்றூரின்கண், கறவை கன்றுவயின் படர - மேய் தற்குச் சென்றிருந்த பசுக்கள் தங் கன்றை நினைந்தனவாய் அவை யிருக்குமிடத்திற்குச் செல்லாநிற்ப, புறவில் பாசிலை முல்லை ஆசு இல் வான் பூ - முல்லைநிலத்தின்கண் பசிய இலையை யுடைய முல்லையினது குற்றமற்ற வெள்ளிய பூக்கள், செவ்வான் கொண்டன்று-செக்கர் வானத்தின் அழகினைக்கொண்டது, யான் உய்யேன் போல்வல் - இனி யான் உயிர் வாழ்ந்திரேன் போலும்.*

விளக்கம் :—'கார்ப்பருவத் தொடக்கத்தில் தலைவர் வருவர் என்னும் எண்ணம் பற்றுக்கோடாக என் உயிர் இதுகாறும் நின்றது ; இப்பொழுதோ அவர் குறித்த பருவம் வந்தும் அவர் வந்திலர் ஆதலின், இனி என்னுயிர் அப் பற்றுக்கோடுமற்று என் உடலினின்றும் நீங்கும்' என்பாள், 'யான் உய்யேன் போல்வல்' என்றாள்.

## மூலமும் உரையும்

கருக

மழை விளையாடுங் குன்றென்றது, கார்ப்பருவம் வந்தமையைக் குறிப்பாற் கூறியவாறும். அன்பின் தூண்டுதலாலே கறவைகள் கன்றை நினைந்து செல்லல், தன்னை நினைந்து மீளவேண்டிய தலைவன் வாராமையை நினைப்பித்து வருத்தும் என்பாள், 'கறவை கன்று வயிற் படர,' என்றாள். இனிக் கறவை கன்றுவயிற் படரும் கார்ப்பருவத்து முதனாள் மாலையே தலைவன் வருவன் எனக் குறித்துச் சென்ற கால மாதல்பற்றி அம் மாலைக்காலம் வந்தமையையும் அதனால் தெரி வித்தாள்.

புறவு - முல்லைநிலம். இது செம்புலமாதலின், இதனைச செவ் வானத்தோடும் இதன்கண் மாலையில் மலரும் முல்லைப்பூவினை நாண் மீன்களோடும் ஒப்பித்தாள். தான் குறித்த பருவத்தே தவறாது பூக்கும்பூ வென்பாள், 'ஆசில் வான்பூ,' என்றாள். முல்லைப்பூவிற்கு ஆசின்மை காட்டுமுகத்தானே தலைவன் தன் சொல் பிறழ்ந்து ஆசுடையனாதல் குறிப்பா லுணர்த்தினாள். ஆசு - குற்றம் செவ்வான் - செக்கர் வானம். கொண்டன்று - கொண்டது. 'யானே உய்யேன் போல்வல்,' என்றதன்கண் ஏகாரம் அவர் உய்வர் எனத் தலைவனைப் பிரித்தலால், பிரிநிலை. உய்யேன் - உயிர்கொண்டிரேன். இனி யான் இறந்துபடுவல் என்றவாறு.

## பாட்டு – கoகூ : தோழி கூற்று

துறை : சிறைப்புறம், தலைவி வேறுபாடு கண்ட புறத்தார் அலர் கூறுகின்றமை தோன்றத் தோழி தலைமகட்குக் கூறியது. அஃதாவது, வரைந்துகோடலிற் கருத்தின்றிக் களவின்பமே வெஃகி ஒழுகுந் தலைவன், ஒருநாள் மனையயலே வந்தமை கண்ட தோழி, அவன் வரவுணராதாள்போலே தலைவிக்குக் கூறுவாளாய் அவன் கேட்பக் கூறியது;

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'அன்னாய் ! நின்னைத் தலைவன் பிரியாது உடனுறையும் பொழுதும் நினது நுதல் அவன் பிரிந்துள்ள இப்பொழுது கவினழிந்திருப்பது போன்றே இருக்கின்றது, இஃதென்னை ?' என வியந்து கூறு கின்றாள்.

கoகூ. முட்கால் இறவின் முடங்குபுறப் பெருங்கிளை
புணரி இகுதிரை தரூஉந் துறைவன்
புணரிய இருந்த ஞான்றும்
இன்னது மன்னோ நன்னுதற் கவினே.
—நம்பி குட்டுவனார்.

(இ - ள்.) முட்கால் இறவின் முடங்குபுறப் பெருங்கிளை - முளளைப் போன்ற கால்களையுடைய இருமீனின் வளைந்த முதுகை யுடைய பெரிய இனத்தை, புணரி இகு திரை தரூஉம்



துறைவன் - கடலில் தாழும் அலைகள் கொணர்ந்து தவும் துறை யையுடைய தலைவன், புணரிய இருந்த ஞான்றும் - நின்னைப் புணருவான் உடனுறையும் பொழுதும், நன்னுதல் கவின் இன் னது மன் - நின்னுடைய நல்ல நுதலின் அழகு அவன் பிரிந் துள்ள இப்பொழுது அழிந்துள்ளது போல அழிந்தே யுளது ; இங்கிலை இரங்கற் குரியது.

விளக்கம் :—முடக்கால் என்று பாடமோதி வளைந்தகால் என்பாரு முளர். 'முடக்கால் இறவின் முடங்குபுறப் பெருங்கிளை' என்புழிக் கேள் விக்கின்னுதாதல் உணர்ச்சி கருவியா புணர்க. இருலின் கால்கள் முட் போறலும் கண்டறிக. இருல்மீன் விற்போல் வளைந்திருத்தலின், 'முடங்குபுறம்' என்றாள். கடலில் இருமீன் பெரிய பெரிய கூட்டங்க ளாகக் காணப்படும் இயல்பு பற்றிப் 'பெருங்கிளை' என்றாள்.

இகுதல் - தாழ்தல்: தாழுந்திரையே இருமீனை உந்திக் கொணர் தலின், 'இகு திரை தரூஉம்' என்றாள். நாடா வளமுடைய துறைவன் என்றவாறு. கடலலைகள் தரும் இருலைத் தன் முயற்சியின்றிப் பெற் றமைகின்ற தலைவன் என்றது, ஊழால் தரப்பட்ட களவின்பமே நுகர்ந்து வரைதல் முயற்சியின்றி அமைபவன் என்றவாறு.

புணரிய: செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம், புணரும் பொருட்டு நின்னோடு உடனுறையும் பொழுதும் என்க. புணரும் பொருட்டே வருதலன்றி, வரைந்துகொண்டு அறஞ்செய்யும் கருத் திலன் என்றிகழ்ந்தவாறு.

இன்னது என்றது, அவனின்னோடில்லாமற் பிரிந்த இப்பொழு திருந்தாற் போல்வது என்றவாறு. அவன் நின்னைப் பிரியாது உட னுறையும் பொழுதும் பிரிந்துறையும் இப்பொழுது போன்றே கவின் அழிந்துளது நின்னுதல் என்றது, இக்களவொழுக்கமாத்திரையானே இவள் வேறுபாடு நீங்காது வரைந்து கோடல் வேண்டும் எனத் தலைவ னுக்கு அறிவுறுத்தும் குறிப்பிற்றென்க. புணர்வுக் காலத்தும், பிரிவஞ் சும் புன்கண் உடைமையின், புணரிய விருந்த ஞான்றும் கவினழிவ தாயிற்றென்க. கவின் இன்னது என்றது, கவின் இப்பொழுது பசந் திருப்பது போன்றது என்றவாறு.

## பாட்டு - ககo : தலைவி கூற்று

துறை :—பருவங்கண்டு அழிந்த தலைமகள், தோழிக்கு உரைத்தது ; தலைமகனைக் கொடுமை கூறித் தலைமகளைத் தோழி வற்புறீஇயதுமாம். அவையாவன : தலைவன் குறித்த பருவம் வந்த பின்னரும் அவன் வாராமை கண்ட தலைவி, உளம் நொந்து தோழிக்குக் கூறியது. அல்லது, பிரிந்து காலம் நீட்டித்த தலைவ னுடைய கொடுமை கூறுமுகத்தானே தலைவியைத் தோழி ஆற்றுவித்ததூஉமாம்.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, “பிரிவாற்றாமை யாலே வருந்தும் நம்மை, இவ்வாடை மேலும் இறந்துபாடு செய்

யும் இன்னுமை செய்வதாக, இவ்வல்லற் காலத்தும், நீயிர் என்னுயினீர்?' என, வினவவும் கருதாத தலைவர், இனி யாம் இறந்துபட்ட பின்னர் வருவாராயினும், வாராராயினும் நமக்கு என்ன உறவினையுடையர் ஆவர்'' என நொந்து கூறுகின்றாள்.

கக0. வாரா ராயினும் வரினும் அவர்நமக்கு
யாரா கியரோ தோழி நீர
நீலப் பைம்போ துளரிப் புதல
பீலி ஒண்பொறிக் கருவிளை யாட்டி
நுண்முள் ஈங்கைச் செவ்வரும் பூழ்த்த
வண்ணத் துய்ம்மலர் உதிரத்
தண்ணென்று
இன்னு தெறிதரும் வாடையோடு
என்ஞ யினள்கொல் என்ஞ தோரே.

—கிள்ளிமங்கலங்கிழார்.

(இ - ள்.) தோழி—, நீர நீலப் பைம்போது உளரி - நீரி லுள்ள நீலத்தினது பசிய போதுகளை அசைத்து, புதல பீலி ஒண் பொறிக் கருவிளை ஆட்டி - புதலிலுள்ள மயிற்பீலியின் ஒள்ளிய பொறிகளையுடைய கருவிளை மலரை அசைத்து, நுண் முள் ஈங்கைச் செவ்வரும்பு ஊழ்த்த வண்ணத் துய்ம்மலர் உதிர - நுண்ணிய முட்களையுடைய ஈங்கையினது செவ்விய அரும்புகள் மலர்ந்த நிறமும் துய்யும் உடைய பூக்கள் உதிரா நிற்ப, தண் என்று இன்னாது எறிதரும் வாடையொடு - குளிர்ந்து இன்னாத தாக வீசாநின்ற வாடைக்காற்றினால், என்னாயினள் என்னு தோர் - எத்தன்மையள் ஆயினளோ என்று எண்ணுதலும் செய்யாதவராயினர் நந்தலைவர், வாராராயினும் வரினும் அவர் நமக்கு யாராகியர் - இனி நம்மை நினைந்து வாராதவராயினும் அன்றி வருவார் ஆயினும் அவர் நமக்கு எத்தகைய உறவினர் ஆவார்.

விளக்கம் :—இனி இன்னா தெறிதரும் இவ்வாடைக்காலத்தே யான் இறந்துபடுவேன் ; இறந்துபட்டபின்னர் அவர் வாராதிருத்தலும் வருதலும் ஆகிய செயல்களால் யாது பயன் என்பாள், 'வாராராயினும் வரினும் அவர் நமக்கு யாராகியர்' என்றாள். எனவே, உற்றுழித் தாங்கும் கேளிராகார் ஏதிலர் என்றவாறு. செய்யுளாகலான் சுட்டுச் சொல் முதற்கண் வந்தது. என்னாயினள் என்னுதோர் தலைவர்; அவர் நமக்கு யாராகியர் என்றியைத்துக்கொள்க. நீரவும், புதலவும், முள்ளவு மாய்ப் பற்றுக்கோடும், பாதுகாவலும் உடையவற்றையும் நிரலே அசைத்து, ஆட்டி, உதிர்த்து, எறியும் கொடுமையுடைய வாடை, அப் பற்றுக்கோடும் பாதுகாவலும் அற்றுத் தனித்த என்னைக் கொல்ல இன்னாதாக எறிதரும்; இனியான் இறப்பன் என்பது கருத்தாகக் கொள்க. நீலம் - கருங்குவளை. உளருதல் - அசைத்தல். பைம்போது -

கு —11

பசிய பூ. புதல - புதலிலே படர்ந்தனவாகிய. கருவிளை மலரின்கண் உள்ள புள்ளிகட்குப், பீலிக்கண் உவமை. ஊழ்த்த-மலர்ந்த. வண்ணம்-நிறம். இன்னு தெறிதரும் - இன்னுததாக வீசுகின்ற. வாடையொடு என்புழி, ஒடு உருபு, ஆனுருபின் பொருட்டாய் நின்றது. என்னுயினன் என்னுதோர் என்பதற்கு "எத்தன்மையள் ஆயினள் என ஒரு தூதின் வாயிலாய் வினவுதலையும் செய்யாதோர்," என்பாருமுளர்.

தலைவர் நம்மை நினையாது ஏதிலர் ஆயினர் யான் இனி, இறந்து படுவல் என்றவாறு.

## பாட்டு - கககக : தோழி கூற்று

துறை :—வரைவுநீட்டித்தவழித் தலைமகள் வேறுபாடு கண்டு வெறியெடுப்பக் கருதிய தாயது நிலைமை தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைவன் சிறைப்புறமாகத் தோழி கூறியது.

அஃதாவது, வரைதற் கருத்தின்றிக் களவின்கண் வந்தொழுகுந் தலைவன் சிறைப்புறத்தே வருதல் கண்ட தோழி, அவன் வருகையை உணராது தலைவிக்குக் கூறுவாள் போன்று, தாய் தலைவி யின் மெலிவுகண்டு வெறியாட்டெடுப்ப எண்ணியிருக்கும் நிலைமையைக் கூறுமுகத்தானே வரைவு கடாயது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, ' உனது மெல்லிய தோளை நெகிழ்த்த வருத்தம் பிறிதொன்றாக, அதனை அறியாது இது நெடுவேளானே

நேர்ந்ததென்றான் வேல் மகன்; நந்தாயும் அஃதுண்மை யென்றே கருதாநின்றாள்; நம் இல்லத்துள்ளோர்
அச் செல்லல் தீர்த்தற்கு வெறியாட முயல்வதாகிய பெரிய நகைப்பிற் கிடனாகிய நிகழ்ச்சியைக் கண்டு நகைக்கும்பொருட்டு நந்தலைவர் ஈண்டு வரின் நன்று' என்று கூறுகின்றாள்.

கககக. மென்தோள் நெகிழ்த்த செல்லல்
வேலன்
வென்றி நெடுவேள் என்னும்
அன்னையும்
அதுவென உணரும் ஆயின் ஆயிடைக்
கூழை இரும்பிடிக் கைகரந் தன்ன
கேழிருந் துறுகற் [1]செழுமலை நாடன்
வல்லே வருக தோழிநம்
இல்லோர் பெருநகை காணிய சிறிதே.

தீன்மிதி நாகனார்.

(இ - ள்.) தோழி மென் தோள் நெகிழ்த்த செல்லல் - தோழீ நின் மெல்லிய தோளை மெலிவித்த வருத்தம், வேலன் வென்றி நெடுவேள் என்னும் - வேன்மகன் வெற்றியையுடைய நெடிய முருகக்கடவுளானே வந்தது என்று

யும் அது என உணருமாயின் - நந்தாயும் அஃதுண்மை என்றே நினைப்பாளாயின், ஆயிடை இல்லோர் பெருநகை காணிய - அப் பொழுது நம்மில்லத்துள்ளோர் செய்யும் பெரிய நகைப்பிற்கிட மான செயல்களைக் காணும் பொருட்டு, கூழை இரும்பிடி கை கரந்தன்ன - குறிய கரிய பிடியானை கை மறைந்து தோன்றினாற் போலத் தோன்றும், கேழ் இருந் துறுகல் கெழுமலை நாடன் - நிறத்தானே கரிய குண்டுக்கல் பொருந்திய நாட்டையுடைய தலைவன், சிறிது வல்லே வருக - சிறிதுபொழுது விரைந்து ஈண்டு வருவானாக.

விளக்கம் :—இதனால் தலைவியின் தோள் காமநோய் மிகுதியால் நெகிழ்ந்தமையும், தாய் இம் மெலிவிற்குக் காரணம் என்னென்று ஆராய்வாள் வேலனை வினவியமையும், வேலன் இது தெய்வத்தான் வந்ததென்றமையும், அக் கூற்றைத் தாய் உண்மை யென்று கொண்ட மையும், அச்செல்லல் தீர்ப்பான் வெறியாடக் கருதியிருக்கின்றமையும், தலைவனுக் குணர்த்தி இந்நிலையடைந்த தலைவியை விரைந்து வரைந்து கோடலே செய்யற் பாற்றெனத் தோழி அறிவுறுத்தியது உணர்க.

தலைவனால் நிகழ்ந்த செல்லல் என்பாள், 'மென்றோள் நெகிழ்த்த செல்லல்' என்றாள். செல்லல் - வருத்தம். வேலன் - வேல் மகன்; வெறியாடும் பூசாரி. இவன் முருகனுக்குரிய வேலைக் கைக்கொண்டு நின்று ஆடுதலின், வேலன் எனப்பட்டான். நெடுவேள் - நெடிய புகழை யுடைய முருகவேள் என்க. மதவேளும் உண்மையின் நெடு வேள் என்றாள். நெடுவேள் என்னும் என்றது, நெடுவேளானே நிகழ்ந்ததென்னும் என்றவாறு. வேலன் அறியாது கூறினனாயினும் அன்னை நம்போன்று இளையளாயிருந்து மூத்தவளாகலின், இச் செல்லற்குக் காரணம் காமநோய் என ஆராய்ந்து காணற்பாலள். அங்ஙனம் ஆராயாது அவ்வேலன் கூற்றையே மெய்யென்று கொண்ட னள் என்பாள், அன்னையும் அதுவென உணரும் என்றாள். உம்மை: சிறப்பு. அன்னை அங்ஙனம் உணருமிடத்து இனி வெறியாட்டெடுத்தல் ஒருதலை என்பாள், 'ஆயிடை இல்லோர் பெருநகை காணிய' என்றாள். பெரு நகைக்குக் காரணமான செயல் என்க.

நகைத்தற்குரிய செயல் நிகழ்வுழி ஒத்த உளமுடையோர் கூடி யிருந்து நகைத்தல் மேலும் சுவையுடைத்தாகலின், இல்லோர் பேதை மைக்கு நகும் நம்மோடு நகுதற்குத் தலைவனும் ஈண்டு வருக என்ற வாறு. சிறிதே என்றது, பெரிதும் தம்மோடிருத்தற்கு இக் களவுக் காலந் தகுதியில்லாமை காட்டியவாறு.

## பாட்டு - கஃஉ : தலைவி கூற்று

துறை: வரைவு நீட்டித்தவழித் தலைமகள் தோழிக்குச் சொல்லியது. அஃதாவது, தலைவன் வரைந்துகொள்ளாமற் காலநீட்டித்தலால் தனக்குற்ற இன்னாமையைத் தலைவி தோழிக் குக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி 'ஊரார் பழிச்

சொல்லுக்கு அஞ்சியவிடத்துக் காமம் கெடாநிற்கும்; காமத்தை விடினோ கற்பும் போம்; நாண்மட்டுமே எஞ்சும். இங்ஙனமாகலின், என்னுடைய நலன் களிற்றியானையால் முரிக்கப்பட்ட நாருடைய கிளையைப் போன்றதாயிற்று' என்று கூறுகின்றாள்.

கக௨. கேளவை யஞ்சிற் காமம் எய்க்கும்
எள்ளற விடினே உள்ளது நாணே
பெருங்களிறு வாங்க முரிந்துநிலம் படாஅ
நாருடை ஒசியல் அற்றே
கண்டிசின் தோழியவர் உண்டஎன்
நலனே.

—ஆலத்தூர் கிழார்.

(இ - ள்.) தோழி—, கௌவை அஞ்சில் காமம் எய்க்கும்- இவ்வூரவர் எடுக்கும் அலரை அஞ்சுமிடத்துக் காமம் மெலிவடையும், எள் அற விடினே உள்ளது நாணே - ஊரவர் பழிச்சொல் அறும்பொருட்டு அதனை விட்டுவிடுக என்றாலோ அதனை விடின் என்பால் எஞ்சி உளதாவது நாணம் மட்டுமே; இங்ஙனமாகலின் காமம் விடமாட்டாமலும் நாண் விடமாட்டாமலும்,

அவருண்ட என் நலன் - தலைவரானே உண்டெஞ்சிய என்னுடைய நலம், பெருங்களிறு வாங்க முரிந்து நிலம் படாஅ

நாருடை ஒசியல் அற்றே - பெரிய களிற்றுயானை வளைத்தமையால் முரிந்து தூங்கி நிலத்திலும் வீழ்ந்துபடாத நார்மிக்குடைய

ஒடிந்த கிளையைப்போன்றது, கண்டிசின் -

காண்பாயாக.

விளக்கம் :—காமமும் விடற்பாலதன்று; நாணமும் விடற்பாலதன்று. இவ்விரண்டும் ஒன்றற்கொன்று மறுதலையாகலின், ஒன்றைப் பேணி ஒன்றை விடுதலும் இயலாது என் நலன் கெடாநின்றதென்பாள், யானை முரித்த நாருடை ஒசியல் துவர ஒடிபட்டு வீழாமலும் பழைய நிலையை எய்த இயலாமலும் வாடித் தூங்குமாறுபோல என் நலன் வாடுகின்றதென்றாள். காமமும் நாணமும் மறுதலைப் பண்புகள் என்பதைக்,

“காமம் விடுவொன்றோ நாண்விடு

நன்னெஞ்சே

யானோ பொறேனிவ் விரண்டு.” (குறள் -

கஉ௪எ)

என்பதனானும் அறிக. கௌவை - அலர். அலர் தூற்றற்கு அஞ்சுமிடத்துக் காமம் அடக்கப்படுதல் வேண்டுமாகலின், அது மெலியும் என்பாள், ‘காமம் எய்க்கும்’ என்றாள். எய்த்தல் - இளைத்தல். காமம், தலைவன்பால் நிகழும் விருப்பமே ஆகலின், அதனை விடுதல் கற்பழிவாதலும் அறிக. இது காமத்தை அடக்கி நாணைப் பேணுதி என்ற தோழிக்குத் தலைவி கூறியதாகக் கொள்க.

காமம் கௌவையாலேதான் வளர்ச்சியுறுகின்றது; காமத்தை வளர்க்கும் அதற்கு அஞ்சில் அது வளராது தேய்ந்தழியும் என்றவாறு.

நார் - மரங்களில் நார்த்தன்மையுடையனவும் அல்லனவும் என இரு வகையுள்ளன. நாரில்லாதவற்றை ஒடிக்குங்கால் முழுதும் ஒடிந்து வேறாம்; நாருடையன சவண்டு ஒடிந்தும் ஒடியாதனவாம். நார் - பட்டை என்று கூறினரும் உளர். ஒசியல் - ஒடிந்த கிளை. கண்டிசின் - காண்பாயாக.

## பாட்டு - ககஅ : தோழி கூற்று

துறை : பகற்குறி நேர்ந்த தலைமகற்குக் குறிப்பினாற் குறியிடம் பெயர்த்துச் சொல்லியது. அஃதாவது, பகற்குறியில் தலைவியோடளவளாய் நீங்குந் தலைமகனைத் தோழி எதிர்ப்பட்டு, பகற்குறியிடம் வேறு குறிப்பாலுணர்த்துவாள் கூறியது.

இதன்கண், 'எம்மூர்க்கு அணித்தாக ஓர் ஊருணியுளது; அதன் அருகே ஒருசிறு கான்யாறும் உளது; அக்கான்யாற்றங் கரையருகே மக்கள் வழக்கற்ற ஒரு பொழில் உளது; யான் கூந்தலுக்கு எருமண் கொணரும் பொருட்டு அங்கு வருவேன்; என்னோடு தலைவியும் வருவள் காண்' எனத் தோழி தலைவனுக்குக் கூறுகின்றாள்.

ககஅ. ஊர்க்கும் அணித்தே பொய்கை

போய்கைக்குச்

சேய்த்தும் அன்றே சிறுகான் யாறே
இரைதேர் வெண்குரு கல்ல தியாவதும்
துன்னல்போ கின்றாற் பொழிலே

யாமெம்

கூழைக் கெருமண் கொணர்கஞ்

சேறும்

ஆண்டும் வருகுவள் பெரும்பே தையே.

—மாதிரத்தனர்.

(இ - ள்.) *தலைவ! பொய்கை ஊர்க்கும் அணித்து* - ஊங்கே ஒரு பொய்கையுளது, அஃது இவ்வூர்க்கும் அணித்தாக உள்ளது, *பொய்கைக்குச் சிறுகான் யாறு சேய்த்தும் அன்று* - அப்பொய்கைக்கு நின்னாலறியப்பட்ட சிறிய காட்டாறும் தூரியதன்றி அணித்தாகவே உளது, *பொழில்* - ஆண்டுளதோர் பொழில் அதுதானும், *இரைதேர் வெண்குருகு அல்லது யாவதும் துன்னல் போகின்று* - அப் பொய்கையினும் கான்யாற்றினும் இரையை ஆராய்தற்குவரும் வெள்ளிய குருகுகளையன்றிப் பிறவுயிர்கள் வழங்குதலொழிந்ததாகும், *யாம் எம் கூழைக்கு எருமண் கொணர்கம் சேறும்* - யாம் எம்முடைய கூந்தலுக்

கிடும் எருமண் கொண்டு வருதற்பொருட்டு அவ்விடத்திற்குச் செல்லும் வழக்கமுடையேம், பெரும்பேதை ஆண்டும் வருகுவள் - பெரிய பேதைமையுடைய தலைவி எம்மோடே அவ்விடத்திற்கும் வருதலுண்டு.



**விளக்கம் :**—ஊர்க்கும் அணித்தே பொய்கை என்றாள், ஆண்டு மகளிர் சேறலை ஊரவர் அயிரார் என்பதுணர்த்தற்கு. தலைவன் நாள்தோறும் சிறுகான் யாற்றைக் கடந்து வருதலின் நின்னால் அறியப்பட்ட சிறுகான் யாற்றிற்கு உவ்விடத்தினுங்காட்டில் அவ்விடம் அணித்தென்பாள், 'பொய்கைக்குச் சேய்த்துமன்று சிறுகான் யாறு' என்றாள்.

இனி, அவ்வியாற்றங்கரைக்கும் பொய்கைக்கு மிடையே உள்ளதொரு பொழில். ஆண்டு இவ்வூரவர் வருவதில்லை என்றுணர்த்துவாள், 'இரைதேர் வெண்குருகு அல்லது யாவதும் துன்னல் போகின்று' என்றாள். துன்னுதல் - நெருங்குதல். இரைதேர் வெண்குருகு மட்டுமே ஆண்டு துன்னும் என்றது, தலைவியைக் கூட எண்ணும் நீ அக்குருகு போன்று அங்கே வருக என்று குறிப்பால் உணர்த்தியவாறு.

கூழை - கூந்தல். எருமண் - வண்டற் பொருக்கு மண். நீரோடு கரைந்து பின்னர் உறைந்துலர்ந்த மண் என்க. இம்மண்ணைக் கூந்தலி லுள்ள அழுக்கு, நெய்ப்பு முதலியன போதற்பொருட்டு மகளிர் கூந் தலிலிட்டு மூழ்குதல் இன்றும் கண்டது. கூந்தலுக்கு எருமண் கொணர்தற் பொருட்டுப் பெருங்குடி மகளாகிய அவள் வருதல் வேண்டா எனினும், விளையாடற் பொருட்டு எம்மோடு அவள் ஆண்டும் வரும் வழக்கமுடையள் என்பாள், 'பெரும் பேதை' என்றாள். தலைவி எம்மோடு வருதலைத் தாயர் முதலியோரும் அயிர்ப்பாரல்லர் என்ப துணர்த்தியவாறு. அப் பகற்குறியிடத்தே தலைவியை நிறுத்தி, யானும் எருமண் மேலிட்டு நீங்குவன் என்பாள், எருமண் கொணர்தற்கு ஆண்டுச் செல்லும் வழக்கமுடையேம் என்றாள் என்க. யாமும் என்றது, ஆயத்து ஏனை மகளிரையும் உளப்படுத்தி.

## பாட்டு - கக௪ : தோழி கூற்று

துறை: இடத்துய்த்து நீங்குந் தோழி தலைமகற்குக் கூறி யது. அஃதாவது, தலைவியை ஒரு பொழிலிடத்தே நிறுத்தி ஒன்றன்மேலிட்டுப் பிரிந்துவந்த தோழி தலைவனைக் கண்டு அதனை அவனுக்குக் குறிப்பானுணர்த்தியது.

இதன்கண், 'இயல் தேர்க்கொண்க! நெய்த னிலத்தின் கண் பாவையைத் துயிலக் கிடத்தி நின்குறியிடத்தே வந்தேன் ; நாரை என் மகள் நெற்றியை மிதிப்பினும் மிதிக்கும்; யாங்கள் போதல் வேண்டும்; ஆதலால் விடைதருக!' எனத் தோழி தலைவனுக்குக் கூறுகின்றாள்.

கக௪. நெய்தற் பரப்பிற் பாவை கிடப்பி
நின்குறி வந்தனென் இயல்தேர்க்
கொண்க
செல்கம் செலவியங் கொண்மோ

அல்கலும்

ஆரல் அருந்த வயிற்ற
நாரை மிதிக்கும் என்மகள் நுதலே.

—பொன்னுகனுர்.

## மூலமும் உரையும்

கசுஎ

(இ - ள்.) இயல் தேர்க் கொண்க - அழகிய தேரையுடைய தலைவனே, நெய்தல் பரப்பில் பாவை கிடப்பி நின்குறி வந்தனென் - நெய்தனிலப்பரப்பின்கண் எனது பாவையைத் துயிலப் போகட்டு நினது குறியிடத்தே வந்துள்ளேன், செல்கம் - ஆதலால் யாங்கள் ஆண்டுச் செல்வேம், அஃதெற்றுக்கெனின், அல்கலும் ஆரல் அருந்த வயிற்ற - இரவு வருதலும், ஆரல் மீனைத் தின்று நிறைந்த வயிற்றையுடையவாகிய, நாரை என் மகள் நுதல் மிதிக்கும் - நாரைகள் என் மகளாகிய அப்பாவையின் நெற்றியை மிதிக்கும் ஆதலான், செலவியங் கொண்மோ-செல்ல நீ விடுப்பாயாக.

**விளக்கம் :**—நெய்தற் பரப்பு - நெய்தற் பூவினைப் பரப்பிய படுக்கையுமாம். விளையாட்டின் மேலிட்டுத் தலைவியை அழைத்து வந்தேன் என்பாள், 'நெய்தற் பரப்பிற் பாவை கிடப்பி' என்றாள். கிடப்பி - துயிலக் கிடப்பி எனறவாறு. பாவையை மகவாகக் கொண்டு விளை

யாடுதல் மகளிர் வழக்கம். அதனால் பாவையை 'என் மகள்' என்றாள். இனிக் கொல்லிப்பாவை போல்வாளை நெய்தற் பொழிலிடத் துய்த்து வந்தேன் என ஒரு பொருள் தோன்றலும் காண்க. தலைவியும் உடன் வந்து குறியிடத்துள்ளாள் என்பதைச் செலகம் என்னும் பன்மையா லுணர்த்தினாள். மகள் நுதல் அல்கலும் நாரை மிதிக்கும் என்றது, இரவு வரிற் பிறர் அறிந்து அலர் தூற்ற ஏதுவாம் என்று குறிப்பான் உணர்த்திய தென்க. ஆரல் அருந்த வயிற்ற என்றதும் பிறர் பழி நாடித்திரியும் அறிவிலிகள் என்றவாறும்.

செல - போகும்படி. வியங் கொள்ளுதல் - விடுத்தல். நீ அவளோ டளவளாவியிருந்து இரவு வருமுன் செல்லவிடு என்றவாறு.

## பாட்டு - ககரு : தோழி கூற்று

துறை : உடன் போக்கு ஒருப்படுத்து மீளுந் தோழி தலை மகற்குக் கூறியது. அஃதாவது; காவல் மிகுதியால் தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் காணமாட்டாத நிலையினை எய்திய பொழுது தலைவியைத் தலைவனோடே போகும்படி கடைக்கூட்டி விட்டு ஓம்படுத்தும் தோழி தலைவனுக்குச் சொல்லியது.

இதன்கண் 'தோழி, தலைவனை நோக்கி, தலைவ! இப் பெரு மகள்பால் நீ யாண்டும் அன்புடையையாய்ப் பாதுகாத்தல் வேண்டும்; ஏனெனில் இவள் நின்னையன்றிப் பற்றுக் கோடாவார் பிறரை யிலள் அல்லளோ!' என்று ஓம்படை கூறுகின்றாள்.

ககரு. பெருநன் றாற்றிற் பேணாரும் உளரே
ஒருநன் றுடையள் ஆயினும் புரிமாண்டு
புலவி தீர அளிமதி இலைகவர்
பாடமை ஒழுகிய தண்ணறுஞ் சாரல்

மென்னடை மரையா துஞ்சும்
நன்மலை நாட நின்னல திலளே.

—கபிலர்.

(இ - ள்.) ஆடு அமை ஒழுகிய தண் நறுஞ் சாரல் - அசையா நின்ற மூங்கில்கள் நீண்டு வளர்ந்த தண்ணிய நறிய மலைச் சாரலின்கண், மெல் நடை மரையா இலை கவர்பு துஞ்சும் - மெத் தென்ற நடையையுடைய மரையா இலைகளை விரும்பியுண்டு துயிலா நிற்றற்கு இடமான, நன் மலை நாட - நன்றாகிய மலை நாட்டினையுடைய தலைவனே, பெருநன்று ஆற்றிற் பேணுரும் உளரே - உலகத்தில் பெரிய நன்மையை ஒருவர் தமக்குச் செய் தால் அங்ஙனம் செய்தாரைப் போற்றுதவரும் உளரோ? எல் லோரும் போற்றுவர் அல்லரோ? அது சிறப்பன்று, ஒரு நன்று உடையளாயினும் - இவள் நினக்குச் செய்த நன்றி ஒரு சிறிதே உடையளாக இருப்பினும், புரி மாண்டு புலவி தீர அளி மதி - நீ இவளை விரும்புதல் மாட்சிமைப்பட்டு இவள் நின்னொடு பிணங்கினாளேனும் அப்பிணக்கந் தீரும்படி அருளுதலைச் செய் வாயாக, நின்னலது இலள் - இவள் நின்னையன்றி வேறு பற்றுக்

கோடில்லாதவள்.

**விளக்கம்:**—பெருநன்று - செயற்கரிய நன்மை ; செய்யாமற் செய்த உதவியுமாம். சிறந்த நன்மைசெய்வோரை உலகத்தார் போற்றுவர் ; அங்ஙனம் போற்றுதல் சிறப்பன்று. சிறு நன்மை செய்தவரையும் போற்றுதலே சிறப்பாம். இவள் நினக்குச் சிறிய நன்மையே செய்பவளாயினும் போற்றுக என்று ஓம்படுத்தவாறு. ஈண்டு ஒரு நன்று என்றது, குலமகளிர் தங்கணவர்க்குச் செய்யும் கடமையை என்க. புரி - புரிதல் - விரும்புதல். எனவே, அன்பு மாட்சிமைப்பட்டு என்றவாறு. இனி இல்லறம் நிகழ்த்தற்குரிய நுமக்கு அதன் பண்பு அன்பேயாகலின் அதன்கட் சிறந்து எனலுமாம்.

புலவிதீர என்றது, இவள் அறியாமையானே நின்னொடு பிணங்கியவிடத்தும் அதனைப் பொருட்படுத்தாது அது தீரும்படி என்றவாறு. நின் பெருந்தகைமையானே அருளுக என்பாள் புலவி தீர அளிமதி என்றாள். மதி : முன்னிலையசை.

மரையா - ஒருவகைக் காட்டு விலங்கு. மரையா தமக்கு வேண்டிய இலையுணவினை வேண்டியாங்குப் பெற்று இன்றுயில் கோடற்குரிய மலைநாடன் என்றது, இவளும் நின் அருள் நீழலிலே தனக்குரிய எல்லா நலங்களையும் எய்தி இன்புற்று அமரும்படி அருள்க என்னும் குறிப்புடைத்தென்க.

மூங்கில் காற்றாலே பெரிதும் அசையும் இயல்புடையதாகலின் ஆடமை எனப்பட்டது. அமை - மூங்கில்.

“ தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார் ” (குறள் - ௧0௪)

"கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும்" (குறள் - க0க)

எனவரும் திருக்குறள்கள் ஈண்டு நினைவு கூரற் பாலன.

## பாட்டு - கககூ : தலைவன் கூற்று

துறை ; இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கும் தலைமகன்
தன் நெஞ்சிற்குச் சொல்லியது. அஃதாவது. "ஒன்றி யுயர்ந்த பாலது ஆணையின்" ஒரு பொழிலிடத்தே ஒத்த கிழவனும் கிழத்தியும் தமியராய்த் தம்முள் தலைப் பெய்து கூடிப் பிரியுங்கால் தலைவன், தலைவியின் பெருமையைத் தன் நெஞ்சினுள்ளே பாராட்டியது.

இதன்கண், 'தலைவன் தனக்குள்ளே, என்னால் விரும்பப் பட்டு என் நெஞ்சத்தே உறைகின்ற தலைவி, வளமிக்க சோழ மன்னருடைய உறந்தையின்கண் உள்ள காவிரிப்பெருந்துறை யினிடத்தே வார்ந்துள்ள அறல் போன்ற நறிய தண்ணிய கூந்தலை யுடையளாவாள்' எனத் தலைவியைப்

பாராட்டுகின்றான்.

கககூ. யானயங் துறைவோள் தேம்பாய் கூந்தல்
வளங்கெழு சோழர் உறந்தைப்
பெருந்துறை
நுண்மணல் அறல்வார்ந் தன்ன
நன்னெறி யவ்வே நறுந்தண் ணியவே.
—இளங்கீரனர்.

(இ - ள்.) யான் நயந்து உறைவோள் - நெஞ்சமே என்னால் விரும்பப் பெற்று என்னுள்ளே உறையாநின்ற இத் தலைமகளினது, தேம் பாய் கூந்தல் - வண்டுகள் பாய்தற்குக் காரணமான
கூந்தல், வளம் கெழு சோழர் உறந்தைப் பெருந்துறை - வளம் பொருந்திய சோழமன்னருடைய தலைநகராகிய உறந்தையின் கண் உள்ள பெரிய நீர்த்துறையிடத்தே, நுண் மணல் அறல் வார்ந்தன்ன - நுண்ணிய கருமணல் நீண்டு படிந்தாற் போன்ற, நல் நெறிய - நன்றாகிய நெறிப்பை உடையன, நறுந் தண்ணிய - மேலும் நறியவும் குளிர்ந்தனவுமாம்.

**விளக்கம்** :—தலைவியின் கூந்தலே பாயலாகக் கிடந்தானாகலின், அதன்கண், தனது கண் மெய் மூக்காகிய மூன்று பொறிகளும் பெற்ற காட்சி முதலிய மூன்றின்பங்களையும் பாராட்டினான் என்க. இதன்கண், அழகிய நெறிப்புடைமை காட்சியின்பத்தையும், நறுமணம் உயிர்ப்பின் பத்தையும் தண்மை ஊற்றின்பத்தையும் தந்தமை உணர்க. நயந்து உறைவோள் என்றது, என்னால் விரும்பப்பட்டு என் உளத்தே உறைகின்றவள் என்றவாறு. மூன்று நாட்டினும் சோணாடே நீர்வள மிக்க



மையின் 'வளங்கெழு சோழர் உறந்தைப் பெருந்துறை' என்றான். உறந்தை - உறையூர். இது சோழமன்னர் தலைநகராகலின், அதன் கண் துறையைப் பெருந்துறை என்றான். ஈண்டுப் பெருந்துறை என்றது காவிரித்துறையை என்க.

கூந்தற் குவமித்தலின், ஈண்டு நுண்மணல் என்றது, நுண்ணிய கருமணலை என்க. அறல் - நீரோடிய வழி மணலிலுண்டாகும் வரிகள். இது கூந்தலின்கண் நெறிப்புக்கு உவமை. நன்னெறியவ்வே என்புழி வகரம் விரித்தல் விகாரம்.

## பாட்டு - கசஎ : தோழி கூற்று

துறை : வரைவு நீட்டித்த விடத்துத தலைமகட்குத் தோழி சொல்லியது. அஃதாவது வரைந்து கோடற்கு முயலாது

களவின்கண் வந்தொழுகுந் தலைமகன் சிறைப்புறத்தானாக, அவன் வருகையை அறியாதாள் போன்று தலைவியின் நிலைமை

தலைவனுக்குப் புலப்படும்படி தோழி தலைவிக்குக் கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி 'நந்தலைவன் வாரா திருப்பினும் இருப்பானாக; நின் தோள்கள் மெலிந்து வளைகள் நெகிழ்ந்து வீழ்கின்றன ; இம் மெலிவினை அயலார் அறியாவாறு மறைத்தற்கு வளையல் விற்போரிடத்துச் சிறிய வளையல்களும் உளவாதலால் அவற்றை வாங்கிச் செறிய இட்டுப் பிறர் அறியா வாறு இதனை மறைப்போம்' எனக் கூறுகின்றாள்.

கக௭. மாரி ஆம்ப லன்ன கொக்கின்
பார்வல் அஞ்சிய பருவரல் ஈர்ஞெண்டு
கண்டல் வேரளைச் செலீஇயர் அண்டர்
கயிறரி யெருத்திற் கதழுந் துறைவன்
வாரா தமையினும் அமைக
சிறியவும் உளவீண்டு விலைஞர்கை
வளையே.

—குன்றியனார்.

(இ - ள்.) மாரி ஆம்பல் அன்ன கொக்கின் - கார்காலத்து ஆம்பல்மலர் போன்ற தோற்றத்தையுடைய கொக்கினது, பார்வல் அஞ்சிய பருவரல் ஈர் ஞெண்டு - பார்வையை அஞ்சிய துன்பத்தையுடைய ஈரிய நண்டு, கண்டல் வேர் அளைச் செலீஇ

யர் - தாழையின் வேரிடத்துள்ள தனது வளையிற் புகுந்து கொள்ளும்பொருட்டு, அண்டர் கயிறு அரி எருத்தில் கதழும் துறைவன் - ஆயர்களாற் பிணிக்கப்பட்ட கயிற்றினை அறுத்துச் செல்லும் எருதைப்போன்று விரைந்து செல்லுதற்குக் காரண மான கடற்றுறையையுடைய தலைவன், வாராது அமையினும்



அமைக - இவண் வாராதிருப்பினும் இருந்திடுக, விலைஞர் கைவளை ஈண்டு சிறியவும் உள - வளையல் விற்போரிடத்து இவ்வி டத்தே சிறிய வளைகளும் உள்ளன.

**விளக்கம்** :—களவொழுக்கத்தே ஈண்டுத் தலைவன் வருதல், பிறர் அறிந்து அலர் தூற்றவும், இற்செறிக்கவும ஏதுவாகி நமக்கு இன்னல் தரும், வாராதமையினே நின் தோள்கள் மெலிந்து வளை நெகிழுமாற் றாற் பிறர் அறிந்து பழிதூற்ற ஏதுவாகும்; இரண்டும் இன்னாதனவே ஆயினும், இவற்றுள் தலைவன் வாராவழி வளைகழலின் விலைஞர் இடத் துச் சிறிய வளையினை வாங்கிச் செறிய இட்டுப் பிறர் அறியாமற் பரிகரிக் கக்கூடும். தலைவன் வருகையை அறியாமல் மறைத்தல் கூடாது ஆகலின், அவன் வாராதமைதலே நன்று என்றபடியாம்.

எனவே, இது இரவுக்குறி பகற்குறியாகிய இருவகைக்குறியும் மறுத்துத் தலைவனைக் குறிப்பால் வரைவுகடாயதாத லுணர்க.

கொக்கு பறக்கும்போது வெண்ணிற மூடையதாகவும் இருக்கும் போது குவிந்த ஆம்பற்பூவின் நிறமுடையதாகவும் காணப்படும். ஈண்டு இரைதேர்ந்து கூம்பியிருக்கும் கொக்கிற்கு, கூம்பிய ஆம்பன்மலர் உவமை யென்க. "கயக்கணக் கூம்புமுகைக் கணைக்கா லாம்பல்," (நற்-உகூ0) என்றும் "கொக்கின் கூம்பு நிலையன்ன முகைய வாம்பல்" (நற் - உஅ0) என்றும் இருவழியும் கூம்பியிருக்கும் நிலைக்கே பிறரும் உவமை கூறுதல் காண்க.

பார்வல் - பார்வை. கொக்கு, தன் இரை தப்பாது பிடித்தற் பொருட்டுக் கூர்ந்து நோக்கும் இயல்புடையது ஆகலின், அக் கூர்த்த பார்வையையே அஞ்சி நண்டு விரைந்தோடும் என்க. பருவரல் - துன்பம், தன்னை இரையாகப் பற்றிக்கொள்ளுங்கொல் என்னும் அச்சத்தால் உண்டாகிய துன்பம் என்க. நண்டு, கொக்கின்பார்வையை அஞ்சி வளைபுக விரையும் என்றது, நாம் அலர் தூற்றுவார் பார்வையை அஞ்சி அவர் அறியுமுன் தலைவன் இல்லத்தே புக விழைகின்றோம் என்னும் குறிப்புடையது என்க. வேரளை - வேரின் மருங்கே உள்ள வளை. அண்டர் - ஆயர். கதழும் - விரைந்தோடும்.

## பாட்டு - ககஅ : தலைவி கூற்று

துறை :—வரைவு நீட்டித்தவழித் தலைமகள் பொழுது கண்டு தோழிக்குச் சொல்லியது. அஃதாவது, வரைந்து கோடலிற் கருத்தின்றி ஒழுகுந் தலைவன் வருகையை ஆர்வத்தோடு எதிர்நோக்கியிருந்த தலைவி, அந்திமாலையில் வாயிலோர் கதவடைக்குந் துணையும் 'வருவன் வருவன்' என எதிர்பார்த்து, அப்பொழுதும் வாராமையானே வருந்தித் தோழிக்குக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'அந்திமாலையும் கழியாநின்றது; நம் மாளிகையின் வாயில்காப்போர் கதவடைக்கும் பொருட்டு உள்ளே வருவீர் உளீரோ என்று ஆராய்



வாராகவும், தலைவர் இன்னும் வந்திலர், யான் என் செய்கோ,' எனக் கூறி வருந்துகின்றாள்.

கக௮. புள்ளும் மாவும் புலம்பொடு வதிய
நள்ளென வந்த நாரின் மாலைப்
பலர்புகு வாயில் அடைப்பக் கடவுநர்
வருவீர் உளீரோ எனவும்
வாரார் தோழிநங் காத லோரே.

—நன்னாகையார்.

(இ - ள்.) தோழி—, புள்ளும் மாவும் புலம்பொடு வதிய - பறவைகளும் விலங்குகளும் தனிமையோடே தத்தஞ் சேக்கைகளிலே உறையாநிற்ப, நள் என வந்த நாரின் மாலை - நள் என்னும் ஓசையோடே வந்த அன்பில்லாத இம் மாலைக்

காலத்தே, கடவுநர் - விருந்தினரை வினவியறிவோர், பலர் புகு வாயில் அடைப்ப - எத்தகைய விருந்தினரும் தடையின்றிப் புகுதற்குத் திறந்துகிடந்த வாயிலை அடைத்தற்பொருட்டு, வருவீர் உளீரோ எனவும்-இன்னும் விருந்தினிர் யாரும் உள்ளே வரவேண்டுவீர் இருந்தனிரோ என்று நங் காதலர் வாரார் - நம் தலைவர் வந்திலர். ஆராயும்பொழுதும்,

**விளக்கம்**:—தலைவன் சில அமயங்களில் விருந்தினரோடு தானும் ஒரு விருந்தினன்போலத் தலைவியின் மாளிகையிற் புகுந்து தங்குத லுண்டு. இவ் வழக்க முண்மையை,

"புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப்
பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்
வேளாண் எதிரும் விருந்தின் கண்ணும்."

(தொல்-களவு. கசு) என வரும் நூற்பாப் பகுதியானும் உணரலாம்.

ஈண்டுத் தலைவன் அவ் விருந்தினருள் ஒருவனாய் மனையகம் புகுதல் கூடும் என்று எதிர்பார்த்திருந்த தலைவி, வாயிலோர் கதவடைக்குந் துணையும் அவன் வாராமை யுணர்ந்து தேற்றமாக இன்று தலைவன் வந்திலன் என்று வருந்துகின்றாள் என்க.

மாலைக்காலத்தே துணையொடு வதியும் புள்ளும் மாவும் உளவாயினும், தனிமையாலே வருந்துந் தலைவி தனித்துறையும் இயல்புடைய புள்ளையும் விலங்கையுமே நினைந்து ஓதுகின்றாள் என்க. புலம்பு - தனிமை. நள் என்பது ஒலிக்குறிப்பு. துணையின்றித் தனித்துறையும் உயிர்கட்குக் கொன்றன்ன இன்னா செய்யும் இயல்புடையதாகலின், மாலையை 'நாரின்மாலை' என்றாள். நார் - அன்பு. மாலைக்காலம் தனித்துறைவோர்க்கு இன்னாதாதலை,

"காதலர் இல்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும்." (குறள். கஉஉச)

என்றும்,

## மூலமும் உரையும்

களகூ

"மாலேயோ வல்லே மணந்தார் உயிர்உண்ணும்
வேலேநீ வாழி பொழுது." (குறள். கஉஉக)

என்றும் வரும் திருக்குறள்களானும் உணர்க.

பலர்புகு வாயில் என்றது, அந்தணர் அறவோர் விருந்தினர் முதலிய பலரும் தடையின்றிப் புகும்பொருட்டுத் திறந்துகிடக்கும் வாயில் என்றவாறு.

கதவடைக்கும்போதும் வெளியில் யாரும் விருந்தினர் தங்கியிருப்பரோ என்று ஆராய்ந்து வினவியே அடைக்கும் வழக்கமுடைமையை இதனுல் உணரலாம். பலர்புகு வாயில் என்றதனுலும் விருந்தினிர் உளீரோ என வினவி அடைத்தலானும் தலேவியின் குடிச்சிறப்பு நன்கு தெரித்தோதப்பட்டமை உணர்க.

## பாட்டு - கககூ: தலேவன் கூற்று

துறை:—இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்குந் தலேமகன்

பாங்கற்கு உரைத்தது. அஃதாவது, பாலதாணையானே தலைவியை ஒரு பூம்பொழிலிடத்தே தலைப்பட்டுப் புணர்ந்து நீங்கிய தலைமகனின் வேறுபாடு கண்டு, 'இஃதெற்றினானயது?' என்று வினைய பாங்கனுக்குத் தலைமகன் கூறியது.

இதன்கண், தலைவன் தோழனை நோக்கி, 'ஒரு சிறிய அராக் குருளை, காட்டியானையைத் தீண்டி வருத்தினாற்போன்று, ஒரு குறுமகள் என்னை வருந்தச் செய்தனள் காண்,' என்று கூறுகின்றான்.

கக௬. சிறுவெள் ளரவின் அவ்வரிக் குருளை
கான யானை அணங்கி யாஅங்கு
இளையள் முளைவாள் எயிற்றள்
வளையுடைக் கையள்எம் அணங்கி
யோளே.

—சத்திநாதனார்.

(இ - ள்.) நண்பனே, சிறு வெள் அரவின் அவ் வரிக் குருளை - சிறிய வெள்ளிய பாம்பினது அழகிய வரிகளையுடைய
குட்டி,
பெரிய
கான யானை அணங்கி யாஅங்கு - காட்டிடத்தே வாழும் களிற்றியானையை வருத்தினாற்போன்று, எம் அணங்கியோள் - எம்மை வருத்தியவள், இளையள் முளைவாள் எயிற்றள்

வளையுடைக்கையள் - ஆண்டான் மிக இளமை யுடையோளும் புதுவதாக முளைத்தெழும் ஒளியுடைய பற்களையுடையாளும் வளையல் அணிந்த கையினையுடையாளுமாகிய ஒருத்தி காண்.

**விளக்கம்:**—காட்டிலே கட்டின்றித் திரியும் களிற்றியானையைச் சிறிய பாம்புக்குட்டி தன் பல்லாலே வருத்தினாற்போல, ஒரு சிறுமி



ஆண்மை மிக்க என்னைத் தன் முறுவலாலே வருத்தினள் என்றவாறு. இளையள் என்றது, பன்னீராண்டகவையள் என்றவாறு. தான் நோக்குழி அவள் நிலம் நோக்கி நக்கனள் ஆகலின் அந்நகை தன்னை வருத்தியது என்றான் என்க.

நகையும் கையும் கூறினான்,
அவளைத் தழுவியமை தோன்ற.
முறுவற்குறிப்புணர்ந்து தான்

வெள்ளரவு - வெண்ணிற நாகம்; கருநிற நாகத்தி னீக்குதற்கு 'வெள்ளரவு,' என்றான். வெள்ளரவு உயர்ந்த இனத்தது. எனவே தலைவியின் குடிபிறப்புயர்வு குறித்தான் என்க.

அவ் வரி - அழகிய கோடுகள். குருளை - சிறுபான்மை ஊர்வன வற்றிற்கும் வந்தது. யார்க்கும் அடங்கா ஆண்மை யுடையேன் என்பான், கானயானையை உவமை எடுத்தோதினான். சிறு வெள்ளரவு என்றதற்கு ஏற்பப் பெருங் கானயானை என்க.

"அளைதா ழரவும் அரியும்வெந் தீயும்
அரசுமெங்ஙன்
இளைதா யினும்கொல்லும்." (அம்பிகாபதிக்
கோவை-கஉசு) என்பதனால், பாம்புக்குட்டியும் அணங்கும்

என்பதனையும்,

"குஞ்சரங் கோளிழைக்கும் பாம்பு." (திருச்சிற் - உக)

என்பதனுல் பாம்பு யானையையும் அணங்கும் என்பதையும் உணர்க.

## பாட்டு - கஉ௦ : தலைவன் கூற்று

துறை :—(க) அல்ல குறிப்பட்டு மீளுந் தலைமகன் தன் னெஞ்சிற்குச் சொல்லியது. அஃதாவது, தலைவன் தான் இரவுக் குறியின்கண் வரும்போது, 'இன்னவாறு ஓசையுண்டாக்கு வேன்' என்று குறிப்பிட்டிருந்தான். தலைவன் வருதற்கு முன் னரே பறவை முதலியவற்றுல் அத்தகைய ஓசை எழுந்தது; அதுகேட்ட தலைவி குறியிடத்துச் சென்று தலைவனைக் காணு ளாய் வருந்தி மீண்டாள்; பின்னர்த் தலைவன் வந்து ஓசையுண் டாக்கியபோது தலைவி அதனையும் முன்னையதென்று கருதி வந்தாளில்லை. ஆதலால் வறிதே மீண்ட தலைவன் வருந்தித் தன் னெஞ்சிற்குச் சொல்லியது.

மகன்

(உ) இஃது இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலை பிரிந்தவழிக் கலங்கியதுமாம். அஃதாவது, தலைவியை முதன்முதலாகப் பொழிலிடத்தே கண்டு

கூடிய தலைவன் அவளைப் பிரிந்து செல்வுழி உளங்கலங்கி உரைத்ததூஉமாம்.

இதன்கண், 'நெஞ்சே நங்காதலி நல்லள் என்பதைமட்டுமே
நீ அறிந்துள்ளாய்; அவள் பெறற்கரியள் என்பதை நீ அறிந்தா யில்லை; ஆதலால், நல்குரவாளன் இவ்வுலக வின்பங்களை



அவாவுமாறுபோலக் கிடைத்தற்கரிய இன்பத்தை நீ அவாவுகின்றனை, அளியைகாண்' எனத் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

கஉ௦. இல்லோன் இன்பங் காமுற் றாஅங்கு
அரிதுவேட் டனையால் நெஞ்சே காதலி
நல்லள் ஆகுதல் அறிந்தாங்கு
அரியள் ஆகுதல் அறியா தோயே.

—பரணர்.

(இ - ள்.) நெஞ்சே—, காதலி நல்லள் ஆகுதல் அறிந்தாங்கு - நம்மாற் காதலிக்கப்பட்டவள் பெண்மைநலம் முழுதும் உடையள் என்பதை நீ தெரிந்திருக்கும் அளவு, அரியள் ஆகுதல் அறியாதோய் - அவள் நாம் விரும்பியாங்குப் பெறுதற்கு அரியளாவாள் என்பதை அறிந்தாயில்லை ஆகலான், இல்

லோன் இன்பம் காமுற்றுஅங்கு - வறியவன் ஒருவன் அரச இன் பங்களை நுகர விரும்பினாற் போன்று, அரிது வேட்டனை - நம் மாற் பெறுதற்கு அரியதாக இருக்கும் இன்பத்தைப் பெரிதும் விரும்பித் துன்புறுகின்றனை; அளியைகாண்.

**விளக்கம்**:—இல்லோன் - கைப்பொருள் சிறிதும் இல்லாத ஏழை. இல்லோன் என்பதற்கேற்ப இன்பத்தை அரச இன்பம் என்க. நல்குரவுடையோன் இவ்வுலகவின்பத்தை நுகர விரும்பினாலும் அவை கிடைக்கமாட்டாவாகலின் அவ்வவாவினால் உற்ற துன்பமே எஞ்சும். அதுபோல் நினக்கும் தலைவி கிடைக்கமாட்டாளாகலின் துன்பமே எஞ்சிற்று என்று இரங்கியவாறு. இல்லோர்க் கின்பம் இன்றென்பதை,

"அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
இவ்வுலகம் இல்லாகி யாங்கு." (குறள் - உசஎ)

எனவரும் திருக்குறளானும் உணர்க.

அறிந்தாங்கு அறியாதோய் என்ற உவமை மாறுபட வந்த உவமத் தோற்றம் என்க. அரிது - தலைவியை நுகரும் இன்பம். அறிந்தால் இங்ஙனம் அவாவுவாயல்லை என்றபடியாம்.

அரியளாகுதல் அறியாமையும், நல்லள் வேட்டற்குக் குறிப்பேதுக்களாய் நின்றன.

ஆகுதல் அறிந்தமையும்,

இரண்டு துறைக்கும் இது பொருந்துமாறுணர்க. முன்னதற்கு நன்கு பொருந்திற்றாதலறிக.

பொருந்ினும்

## பாட்டு - கஉக : தலைவி கூற்று

துறை :—இரவுக்குறி வருந் தலைமகன் செய்யுங்குறி பிறி தொன்றனால் நிகழ்ந்து, மற்று அவன் குறியை ஒத்தவழி அவ் வொப்புமையை மெய்ப்பொருளாக வுணர்ந்து சென்றாள்.



ஆண்டு அவனைக் காணாது தலைமகள் மயங்கியவழிப் பின்னர் அவன் வரவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் கூறியது.

அஃதாவது தலைவன், ' இன்றிரவு யான் வந்து இன்ன

ஓசையை உண்டாக்குவன்; அஃதுணர்ந்து வருக' போயினன். அவ்விரவின்கண், அத்தகைய வோசை என்று

பறவை
யால் உண்டாயிற்று ; அதனைத் தலைவன்
செய்ததாக எண்ணித்
தலைவி ஆண்டுச் சென்று தலைவனைக் காணாது மயங்கி மீண்டாள்;
பின்னொருநாள் அவ்வோசை யுண்டாயபோது தோழி 'தலைவன்
வந்துள்ளான்' எனத் தலைவிக்குக்கூற
கூறியது.
அவள் தோழிக்குக்

இதன்கண், ' தோழீ முன்னரும்
இப்படியே குறியாலே
தலைவன் வந்ததாக எண்ணிச் சென்று ஏமாற்றமடைந்தேன்;
அவன் வந்தானாக நீ இப்பொழுது கருதலளவையாற் கூறுவது
மெய்யோ பொய்யோ யான் அறிகிலேன்,' என்று தலைவி கூறு
கின்றாள்.

கஉக. மெய்யோ வாழி தோழி சாரல்
மைபட் டன்ன மாமுக முசுக்கலை
ஆற்றப் பாயாத் தப்பல் ஏற்ற
கோட்டோடு போகி யாங்கு நாடன்
தான்குறி வாயாத் தப்பற்குத்
தாம்பசந் தனஎன் தடமென் தோளே.

—கபிலர்.

(இ - ள்.) தோழி மெய்யோ வாழி - தோழீ நீ தலைவர் வந்துளார் என்று கூறுவது உண்மையோ உண்மையாயின் நீ வாழ்வாயாக, சாரல் மைபட்டன்ன மாமுக முசுக்கலை - மலைச் சாரலில் வாழும் கரு மை தோய்ந்தாற்போன்ற கரிய முகத்தை யுடைய ஆண் குரங்கு, ஆற்றப் பாயாத் தப்பல் - தாங்குங் கொம்பறிந்து பாயாது தாங்காக் கொம்பிற் பாய்ந்தமையால் அதனை ஆற்றாது முறிந்த தவறு, ஏற்ற கோட்டொடு போகி யாங்கு - குரங்கினுடையதாகவும் அதன்மேற் செல்லாது அதனை ஏற்று முறிந்த கொம்பினிடத்தே சென்றாற்போன்று, நாடன் தான் குறி வாயாத் தப்பற்கு - தலைவன் தன் குறி வாய்ப்பச் செய்யாத தவற்றிற்கு, தடமென் தோள் பசந்தன - எனது பெரிய மெத்தென்ற தோள்கள் பசலை அடையாநின்றனகாண்.

விளக்கம் :—முன்னொரு நாள் எழுந்த ஓசையைத் தலைவன் செய்யும் குறியாகக் கருதிச் சென்று வறிதே மீண்டமையை எண்ணுவாளாய் அக்குறிபோன்று இதுவும் பொய்யோ மெய்யோ என்பாள், 'நீ தலைவன்.

வந்தானைக் கூறுதற்குக் காரணமான குறி மெய்யாயிருக்குமோ?' என்று வினவினன். மெய்யாயின் நீ இந் நற்செய்தியை அறிவித்தற்கு நீண்டகாலம் இனிதே வாழ்க என்பாள், 'வாழி தோழி' என்றாள்.

இனித் தான் அல்லகுறிப்பட்டு வருந்தினமை கூறுகின்றாள் - மை. கருமை - கரிய மையைப் பூசினாற்போன்ற முகத்தையுடைய முசுக்கலை என்க. முசு - முகமட்டும் கரிதாயிருக்கும் ஒருவகைக் குரங்கு. கலை என்றது அதனில் ஆண் குரங்கை என்க.

'மைக்காலிருளாயினும் மந்தி கொம்பிழக்கப் பாயாது' என்பது ஒரு பழமொழி. இருளின்கண் தன்னை ஏற்றுத் தாங்கும் கொம்பென்று நினைத்து ஏலாக் கொம்பிற் பாய்ந்தமையால் அக்கொம்பு முறிந்ததாக அத்தவறு குரங்கினுடையதாகவும், கொம்பு முறிந்ததெனக் கொம்பின் மேலேற்றுமாறுபோல, குறியுணர்த்துங்கால் வாய்ப்பவுணர்த்தாத் தலைவன் தவற்றிற்கு, தவறிலவாகிய இத் தோள்கள் நோயுற்றன என்றவாறு. எனவே பண்டும் யான் இத்தகைய குறியை மெய்யென எண்ணிச் சென்று அது பொய்யாக வருந்தாநின்றேன், இப்பொழுது நீ கூறுவது மெய்யோ என்று வினவியவாறும்.

ஆற்ற - தாங்கும்படி. தப்பல் - தவறு.

## பாட்டு - ௧௨௨ : தலைவி கூற்று

துறை :— தலைமகள் பொழுது கண்டழிந்தது.

அஃதாவது,

தலைவன் பிரிந்துறையும் நாளில் தலைவி அந்திமாலைப் பொழுதின் வரவுகண்டு ஆற்றாமையாற் கூறியது.

இதன்கண், தலைவி மாலையைக் கண்டு, 'அந்தோ ! பிரிந்தாரை வருத்தும்

மாலைப்பொழுது வந்துவிட்டது; இதுமட்டுமோ என்னைத் துன்புறுத்துவது! இதன் பின்னாக ஆற்றொணாத் துயர் செய்யும் அவ்விராக் காலத்தையும இது உடைத்தாயிருந்தது! என்செய்வல்!' என வருந்துகின்றாள்.

கஉஉ. பைங்காற் கொக்கின் புன்புறத் தன்ன
குண்டுநீர் ஆம்பலும் கூம்பின இனியே
வந்தன்று வாழியோ மாலை
ஒருதான் அன்றே கங்குலும்
உடைத்தே.

—ஓரம் போகியார்.

(இ - ள்.) பைங்கால் கொக்கின் புன்புறத்தன்ன - பசிய கால்களையுடைய கொக்கினது புல்லிய முதுகினை ஒத்த, குண்டு நீர் ஆம்பலும் கூம்பின-ஆழ்ந்த குளத்தின் கண்ணவாகிய ஆமபற் பூக்களும் குவியாநின்றன, இனி மாலை வந்தன்று - இப்பொழுது பிரிந்தாருயிருண்ணும் மாலைக்காலமும் வந்தது, வாழி - அது வாழ்க, ஓ - அந்தோ, ஒருதான் அன்றே - அம்மாலை தானும்

கு.—12

தான் ஒன்றுமட்டும் அன்று, கங்குலும் உடைத்தே - தன்னினும் கொடிய இராப்பொழுதினையும் தன் பின்னாக உடையதாயிரா நின்றதே யான் எவ்வாறு ஆற்றுவேன்!

**விளக்கம்** :—"மாரி ஆம்பல் அன்ன கொக்கின்" (கசஎ) என இந் நூலின்கண் முன்னர்க் கொக்கிற்கு ஆம்பல் உவமையாக வந்தமை நினைக. புன்புறம் - புல்லிய முதுகு; ஒடுங்கிய கூன் முதுகாதலின் 'புன்புறம்' எனப்பட்டது. கொக்கின் புன்புறத்தன்ன ஆம்பல், குண்டு நீர் ஆம்பல் எனத் தனித்தனிக் கூட்டுக. ஆம்பல் - குமுதம் என்னும் ஒரு நீர்க்கொடி. இது மாலையில் குவியும் இயல்புடையது போலும். ஆம்பல் கூம்புவது மாலைக்கால வரவிற்கு அறிகுறியாக லான், 'ஆம்பலும் கூம்பின' என்று அஞ்சுவாளாயினள். ஆம்பலும் என்றதன்கண், உம்மை: உயர்வு சிறப்பு. இனி - இப்பொழுது. வந்தன்று - வந்தது. 'மாலை வாழி' என்றது அது கெடுக என்னும் பொருளில் வந்த குறிப்புமொழி, "செல்வலத்தை சிறக்க நின்னாளே" (புறம்: ககசு) என்புழிப்போல.

காமநோய், 'காலையரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலைமலரு' மாகலின், அதன் மிகுதிக்கு ஆற்றாது அஞ்சுபவள், 'அம்மாலை தனக்குப் பின்னாக கொடிய இரவினையுடைத்தாதலையும் கருதிப் பெரிதும் வருந்து கின்றாள் என்க. இம்மாலைப் பொழுதையும் இராப்பொழுதினையும் எங்ஙனம் ஆற்றுவல் என்பது குறிப்பு.

## பாட்டு - கஉரு : தோழி கூற்று

துறை :—பகற்குறியிடத்து வந்த தலைமகனைக் காணாத தோழி, அவன் சிறைப்புறத்தானாதலறிந்து தலைமகட்குச் சொல்லியது. அஃதாவது, தலைவன்

பகற்காலத்தே வந்தவன்,

தலைமகள் அல்லல் காணிய, அயலே ஒரு சிறை மறைந்து நின்றானாக, அவனைக் குறியிடத்தே காணாத தோழி அவன் அயலே மறைந்து நிற்றல் அறிந்து அவன் அல்லல் காணிய தலைவியை

நோக்கிக் கூறியது.

இதன்கண், 'தோழி! நந்தலைவர் தாம் குறிப்பிட்டபடி அப் புன்னை மரத்தின் நீழலாகிய பகற்குறியிடத்தே இன்னும்

வந்திலர் ; அவர் இப்பொழுதே வருவாராயின்,

அவரோடு நாம் அளவளாவுதல் எளிதாம் ; அதோ

கடலில் நம் தமையன்மார்

திமில் தோன்றுகின்றன ; இன்னும் சிறிது காலந்தாழ்த்து வருவாராயின் அவர் நம்மைக் காண்டல் அரிதாம்' என்று, தோழி

தலைவிக்குக் கூறுகின்றாள்.

கஉரு. இருள்திணிந் தன்ன ஈர்ந்தண்
கோழ்நிழல்
நிலவுக்குவித் தன்ன வெண்மணல்
ஒருசிறைக்
கருங்கோட்டுப் புன்னைப் பூம்பொழில்
புலம்ப

இன்னும் வாரார் வரூஉம்
பன்மீன் வேட்டத் தென்னையர் திமிலே.

—ஐயூர் முடவனார்.

(இ - ள்.) தோழி—, நிலவுக் குவித்தன்ன வெண்மணல் ஒரு சிறை - நிலவொளியைத் திரட்டிக் குவித்து வைத்தாற்போன்ற வெள்ளிய மணற்குவியலின் ஒரு பக்கத்தே, இருள் திணிந் தன்ன ஈர்ந்தண் கொழுநிழல் - இருள் செறிந்து கிடந்தாற் போன்ற ஈரிய குளிர்ச்சிமிக்க கொழுவிய நிழலையுடைய, கருங் கோட்டுப் புன்னைப் பூம்பொழில் புலம்ப - கரிய கொம்புகளை யுடைய புன்னை மரங்களையுடைய பூஞ்சோலையாகிய குறியிடம் தனித்துக் கிடக்கும்படி, இன்னும் வாரார் - நம் தலைவர் தாம் குறித்த பொழுது வந்தும் இன்னும் தாங் கூறியாங்கு வந்திலர், பன்மீன் வேட்டத்து என்னையர் திமில் வரூஉம் - பலவாகிய மீன்களை வேட்டையாடுதற்குச் சென்றிருந்த நம் தமையன் மாருடைய படகுகள் அதோ வாராநின்றன.

விளக்கம் :—பகற்குறியிடத்தே தான் குறித்தபடி வந்த தலைமகன் தலைவி தன்னைக் காணாது அலமருதலைக் கண்டு மகிழ எண்ணி மறைந்து நின்றான்; அவன் மறைந்தமையை அறிந்த தோழி, அவன் அலமரல் கண்டு நகைக்கும் பொருட்டு இங்ஙனம் படைத்து மொழிந்தாள்; 'என்னையர் திமில் ஈதோ வரும்' என்ற சொற் கேட்டதும், தலைவன், 'அந்தோ வந்ததோ! திமில் அறியாது கெட்டேன்!' என அலமந்து ஓடி வந்திருப்பன் என்பது ஒருதலை. தோழியின் கூர்மதிச் சூழ்ச்சி பன்முறையும் நினைந்து நினைந்து இன்புறற் குரியதாதல் அறிக.

கதிரவன் கதிர்புகாதிருண்ட சோலைக்கண் நிழற்கு இருட் செறிவும், மணற் குவியற்கு நிலவுக் குவியலும் உவமைகள். வெண் மணலுக்கு நிலவினை உவமை கூறல் பெருவழக்கு. நிழலின் சிறப்பினை விதந்தோதுவாள் 'ஈர்ந்தண் கொழுநிழல்' என்றாள். பகற்குறியிடத் தின் இயல்பு இச் செய்யுளின்கண் நன்கு கூறப்பட்டிருத்தல் உணர்க. தலைவனை அந் நிழலிடத்தே காணலாம் என வந்தேம்; அந் நிழல் அவ் வழகனை யின்றி வறிதே கிடப்பதாயிற்று என்பாள், 'பூம்பொழில் புலம்ப' எனறாள். புலம்ப - தனித்திருப்ப. திமில் - ஒருவகைப் படகு. அவர் வலியராதலைப் பன்மீன் வேட்டத்து என்னையர் என்பத னால் உணர்த்தினாள். என்னையர் - என் தமையன்மார் என்னும் பொருட்டு. தந்தையை, எந்தை என்பது போன்று தன்னையர் என்பது என்னையர் என வந்தது. என்னையர் இவண் வந்துவிட்ட பின்னர்த் தலைவன் வரின் அவனை வரவேற்று அளவளாவுதல் நமக்கு அரிதாம் என்பது குறிப்பெச்சம்.

## பாட்டு - கஉச : தோழி கூற்று

துறை :—புணர்ந்துடன் போக்கினைத் தலைமகள் ஒழியப் போகலுற்ற தலைமகற்குத் தோழி சொல்லியது. அஃதாவது, தலைவி தலைவனுடன் போதலைப் பெரிதும் விரும்பினளாக, பாலை

நிலவழியில் இம்மெல்லியல் தன்னோடு வரின் இன்னல் எய்துவள் எனக்கருதிய தலைவன் அவள் தன்னோடு வருதலை உடன்படாது மறுத்தான். அப்பொழுது அத்தலைவனுக்குத் தோழி கூறியது.

இதன்கண், தோழி தலைவனை நோக்கி 'ஐய பாலைநில வழியிற்போவது பெரிதும் இன்னல் தரும் என்கின்றீர்; தலைவரைப் பிரிந்து தமித்துறையும் மகளிர்க்கு மனைமட்டும் இனிமை தருமோ! இயம்புதிர்' என்கின்றாள்.

கஉச. உமணர் சேர்ந்து கழிந்த மருங்கி னகன்றலை
ஊர்பாழ்த் தன்ன ஓமையம் பெருங்காடு
இன்னா என்றி ராயின்
இனியவோ பெரும தமியோர்க்கு மனையே.
—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

(இ - ள்.) பெரும - தலைவரே! உமணர் சேர்ந்து கழிந்த மருங்கின் அகன்தலை - உப்பு வாணிகர் பலர் ஒன்றுகூடிக் கடந்துசென்ற பக்கத்தினையும அகன்ற இடத்தினையும் உடைய, ஊர் பாழ்த்தன்ன ஓமையம் பெருஙகாடு -

குடியிருந்த ஊர்
பாழ்பட்டாற் போன்ற தோற்றத்தையுடைய ஓமை மரங்கள் மிக்க பெரிய காட்டு வழிகள், இன்னா என்றிர் ஆயின் - தங்கட் செல்வார்க்கு இன்னாமையுடையன என்று கூறி உடன் போக்கினை மறுப்பீராயின், தமியோர்க்கு மனை இனியவோ - துணைவரைப் பிரிந்து தமியராய் இருக்கும் மகளிர்க்கு மனைகள் மட்டும் இன்பந் தருவனவாகுமோ கூறுதிர்?

**விளக்கம்** :—'உமணர் சேர்ந்து கழிந்த மருங்கின் அகன்றலை ஊர்
பாழ்த்தன்ன ஓமையம் பெருங்காடு இன்னா' என்னுந் துணையும் உடன் போக்கு மறுத்த தலைவன் கூறியது. அதனைத் தோழி கொண்டு கூறினள் என்க. காடு இன்னா வுடைத்தாதற்கு உமணர் சேர்ந்து கழிதல் அகன்றலை, ஊர்பாழ்த்தன்ன ஓமையங்காடு என்பன குறிப் பேதுக்களாய் நின்றன. என்னை? அப் பாலைக் காட்டின்கண் ஆறலை கள்வர் உண்மையால் ஆறு செல்வோர் பெருந்திரளாகக் கூடியே செல்லல் வேண்டும் என்பதும், நடக்கத் தொலையாத அகலிடமுடைத் தென்பதும் ஓமையங்காடு கரிந்து பாழூர் போன்று கிடக்கும்படி ஆண்டு வெப்பம் மிகுதியாக வுள்ளது என்பதும் இவையிற்றால் உணர்த் தப்படுதலின் என்க.

உமணர் - உப்பு வாணிகர். சேர்ந்து கழிதல் - கூட்டமாகக் கூடிக் கடத்தல். மருங்கு - பக்கம். அகன்தலை - அகன்ற இடம். வெயிலால் கரிந்து கிடக்கும் ஓமைக்காட்டிற்கு, பாழ்பட்ட ஊர் உவமை. பெருங காடென்றது, நீடிய வழியுடைத்து என்ப துணர்த்தற்கு. ஓமை, பாலைக் கருப்பொருள். காடுகள் தன்னூடே செல்வார்க்குத் துன்பந் தருவன எனக.

## மூலமும் உரையும்

**கஅக**

என்றிர் - என்று சொல்கின்றீர். பாலை நிலத்திலே தந்துணை

வருடன் உடன் போகும் மகளிர்க்கு, அவ் வுடனுறை யின்பம் அப்பாலை தரும் துன்பங்களை இல்லையாக்கித் தானே மேலிட்டு நிற்கும். பிரிந்து மனையில் தனித்துறையும் மகளிர்க்கோ, அம் மனை தரும் இன்பம் அனைத்தும் இல்லையாய்ப் பிரிவுத் துன்பம் ஒன்றே எஞ்சி நிற்பதாம். இஃதுணர்வீராயின் தலைவியை உடன்கொண்டு செல்லுதலே நன்றாதல் அறிவீர் என்றுணர்த்தியபடியாம். 'காடு இன்னா என்றிர்' என்றது, உடன் போவார்க்கு இனியவாகவும் நீயிர் இன்னா என்கின்றீர் என்பது பட நின்றது. இனியவோ என்றது, இன்னாவுடையனவாதல் ஒருதலை என்பது படநின்றது.

இனி, இவ்வழகான உள்ளம் உருக்கும் சுவையுடைய செய்யுளை ஓதி மகிழ்ந்த கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பநாடர், இதன் கருத்தைத் தமது பெருங் காப்பியத்துள்ளே பெய்து வைத்தமை ஈண்டு நினையற்பாற்று. அதன்கண் இராமன்,

''உருக்கழல் காட்டும்
கல்லரக்கும் கடுமையவல்ல நின்
சில்லரக்குண்ட சேவடிப் போது''

என, உடன்போக்கு மறுத்துழிச, சீதை,

''ஊழியருக்கனும்
எரியும் என்பதி யாண்டைய நீண்டுநின்
பிரிவி னும்சுடு மோபெருங் காடென்றாள்''

(கம்ப, நகர்நீங்கு : உஉ௫ - ௬)

என, அமைந்திருத்தல் உணர்க.

## பாட்டு - கஉரு : தலைவி கூற்று

துறை :—வரைவு நீடித்தவிடத்துத் தலைமகள் தோழிக்குச் சிறைப்புறமாகச் சொல்லியது. அஃதாவது, வரைந்து கோடற் கருத்தின்றிக் களவின்பமே காமுற்றுத் தலைவன் ஒழுகா நிற்ப, அவ்வொழுக்கம் தனக்கின்னாதாதலை உணர்ந்த தலைவி, ஒருநாள் தலைவன் தம் மனையயலே வருதல் கண்டு அவன் வரவறியாதாள் போன்று தோழிக்குக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'மகளிர் பலருடைய நலத்தினுங் காட்டிற் சிறந்த என் பெண்மை நலம், தண்ணந் துறைவனோடே சென்றொழிந்தது; யான்மட்டும் நலனிழந்து வளையல் நெகிழ ஈண்டு மெலிந்து கிடக்கின்றேன்; இந்நிலை நீடின் யான் இறந்துபடுவேன்' என்று கூறுகின்றாள்.

கஉரு. இலங்குவளை நெகிழச் சாஅ யானே
உளேனே வாழி தோழி சாரல்
தழையணி அல்குல் மகளி ருள்ளும்

விழவுமேம் பட்டவென் னலனே பழவிறற்
பறைவலந் தப்பிய பைதல் நாரை
திரைதோய் வாங்குசினை யிருக்கும்
தண்ணந் துறைவனொடு கண்மா றின்றே.

—அம்மூவனார்.

(இ - ள்.) தோழி—,சாரல் தழையணி அல்குல் மகளிருள்ளும் - மலைப்பக்கத்துள்ள தழையை உடுத்த அல்குலையுடைய மகளிர்கள் பலருள்ளும், விழவு மேம்பட்ட என்நலன் - திருவிழாவைப் போன்று மேன்மையுற்றுத் திகழ்ந்த எனது பெண்மை நலம், பழவிறல் பறைவலந் தப்பிய பைதல் நாரை - பழைய ஆற்றலாகிய சிறகரின் வன்மையை யிழந்ததனால் உண்டாகிய வருத்தத்தையுடைய நாரை, திரை தோய் வாங்கு சினை இருக்கும் தண்ணந்துறைவனொடு - கடல் அலை தோயாநின்ற வளைந்த கிளையின்கண் இராநின்ற குளிர்ந்த அழகிய துறையை யுடைய தலைவனோடே, கண் மாறின்று - இடம் பெயர்ந்து சென்றது, யானே இலங்குவளை நெகிழச் சாஅய் உளென் - அந்நலம் என்னைப் பிரிந்தமையால் இப்போது யான் மட்டும் விளங்குகின்ற

வளையல்கள் கழன்று வீழும்படி மெலிந்து வாளா உயிர்த் திருப்பேனுகின்றேன்.

விளக்கம் :—மகளிர் தழையை ஆடையாக உடுத்தல் பண்டைக் கால வழக்கம். ஆய மகளிர் பலருள்ளும் தனது பெண்மை நலம் தலைசிறந்த தென்பாள், 'மகளிருள்ளும் விழவு மேம்பட்ட என்னலன்' என்றாள். அந்நலன் கழிந்ததற் கிரங்குகின்றாளாகலின், தற்புகழ்ன்மையுணர்க.

விழவு மேம்படுதலாவது - பல நாள்களுள்ளும் விழவு நாள் சிறந்து தோன்றுமாறு போலத் தோன்றுதல். விழவு போல மேம்பட்ட என்க. பழவிறல் வலம் என இயைத்து, பழைய ஆற்றலாகிய சிறகரின் வன்மை என்க. பறை - சிறகர். பழைதாகிய தனது விழவு மேம்பட்ட நலனுக்கு நாரையின் பழவிறல் வலம் உவமை. சிறகுவலியிழந்த நாரை, திரைதோய வளைந்த சினையில் இருக்கும் என்றது, நலன் இழந்த யான் ஊரலர் தூற்றக் கேட்டும் ஈண்டு உயிருடன் இருக்கின்றேன் என்று இரங்கிய குறிப்பிற்று. அலையுயருந் தோறும் அலைக்கப்படும் கிளை என்பாள், 'திரைதோய் வாங்குசினை' என்றாள். வாங்குசினை - வளைந்த கொம்பு. முறை முறையாக அலைகள் வந்து மோதுதலானே இன்னலுற்றும் அதனை விட்டு நீங்கற்குச் சிறைவலியின்மையால் வருந்தும் நாரை என்க. தான் அலர் முதலியவற்றால் அலைப்புண்டும் அவன் வரைந்து கொள்ளாமையால் அவனை எய்தவியலாது வருந்துகின்றேன் என்றவாறும்.

தண்ணந் துறைவன் என்றது, இகழ்ச்சிக் குறிப்பு. என்னை? அவன் துறை மட்டுமே தண்ணிது அவன் வெய்யன் ஆயினன் என்பது படநிற்றலான் என்க. கண்மாறுதல் - இடம் பெயர்தல் - கண்மாறின்று

என்புழித் துறைவன் கண்ணோட்டமிலன் ஆயினன்; அவனோடு என் நலனும் கண்ணோட்டமிலதாய் என்னை நீத்தகன்றதென்று ஒரு பொருள் தோன்றுதலும் காண்க.

## பாட்டு - கஉகூ : தலைவி கூற்று

துறை :—பருவங் கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது. அஃதாவது, பிரிந்து செல்லுங்கால் 'இன்ன பரு
வத் தொடக்கத்தே மீண்டு வருவேன் ஆற்றியிரு' எனத் தேற்றிச் சென்ற தலைவன், அப்பருவம் வந்துழியும் வாராமை கண்ட தலைவி தோழிக்குக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'கார்ப்பருவம் நின் தலைவர் அரிதாகிய இளமையைப் பொருளாகக் கொள்ளாது, பொருளையே பொருளாகக் கொண்டு நின்னைப் பிரிந்
தனரே! பிரிந்தவர் தாம் குறித்த பருவத்தினும் வந்திலர், அவர் யாண்டுளர் என, என்னைப் பார்த்து நகைக்கின்றது' என்று கூறுகின்றாள்.

கஉகூ. இளமை பாரார் வளநசைஇச் சென்
றோர்

இவணும் வாரார் எவண ரோவெனப்
பெயல்புறந் தந்த பூங்கொடி முல்லைத்
தொகுமுகை இலங்கெயி றாக
நகுமே தோழி நறுந்தண் காரே.

—ஒக்கூர் மாசாத்தியார்.

(இ - ள்.) தோழி—, நறுந் தண்கார் - நறிய மணமுடைய குளிர்ந்த கார்ப்பருவம் என்னை நோக்கி, இளமை பாரார் - நின்னுடைய தலைவர் பெறற்கரிய இளமையை ஒரு பொருளாகக் கருதிற்றிலர், வளம் நசைஇச் சென்றோர் - எளிய பொருளையே பொருளாகக் கருதி அதனை ஈட்டற்குச் சென்றவர், இவணும் வாரார் - தாங் கூறிச்சென்ற பருவமாகிய யான் வந்த பின்னரும் இவ்விடத்திற்கும் வந்திலர், எவணரோ - அந்தோ பொருளாசை பிடிதத அவர் அதனை ஈட்டற்கு எவ்விடத்திற் சென்றனரோ நீ அளியை காண், எனப் பெயல் புறந்தந்த பூங் கொடி முல்லைத் தொகு முகை இலங்கெயிறாக - தனது மழையானே பாதுகாக்கப்பட்ட பூவையுடைய கொடியாகிய முல்லையினது தொக்க அரும்புகளே விளங்குகின்ற பற்களாகத் தோன்றாநிற்ப, நகும் - நகைக்கின்றது.

விளக்கம்:—கார்ப்பருவம் தலைவியை நோக்கி 'இளமையுடையராய்க் கூடியிருப்போர்க்கு யான் பேரின்பம் நல்குவேனாகவும், என் அருமை



நோக்காது பொருளாசை பிடித்துச் சென்ற தலைவர், யான் வந்தும் வந்திலர்; இப்போது நின்னுடன் கூடி மகிழவேண்டிய அவர், அந்தோ பொருளாசை காரணமாக எந்நாட்டிற் றனித்துக் கிடந்து வருந்துகின்றனரோ அறியேன்?' என நகைத்ததென்க.

இதன்கண், பிறன்கட்டோன்றிய பேதைமை பொருளாக நகை பிறந்ததென்க. இங்ஙனம் கூறாது 'இளமை.........எவணரோ என' என்னுந் துணையுந் தலைவி கூற்றாக்கி என்று எண்ணியிருப்பக் கார் நகும் என முடிப்பாரும் உளர். அங்ஙனம் கூறின் அது நகுதற்கு ஏதுப் பெறாது பொருள் சிறவாமை யுணர்க.

இவணும் வந்திலர் என்றது, கார்ப்பருவத்தே இவண் வருவன் என்று கூறிச் சென்றவர், இவணும் வந்திலர் என்றவாறு. உம்மை உயர்வு சிறப்பு 'எவணரோ' என்றது. பொருளாசையானே இக் கார்ப் பருவத்தே எவ்விடத்தே தனித்துறைகின்றனரோ என்று இரங்கியவாறும். இவணர் - இவ்விடதர். எவணர் - எவ்விடத்தர். :

கார், காலந் தப்பாது வந்து முல்லையைப் பெயலாற் புறந்தந்தமையால் செருக்குற்று, நின் தலைவர் என்போன்று வந்து நின்னைப் புறந்தந்திலர்; பொருளாசை கொண்டார்; அருளுடையராதல் இலர் என்று நக்கதெனினுமாம். இளமை கழிந்தாற் பின் பெறமுடியாத தொன்று. வளமை எப்பொழுதும் பெறக்கூடும். எனவே, பெறற்கரிய இளமையைப் பேணி அதனால் பெறும் இன்பத்தைப் பெறாது, ஈட்டுதல் போற்றுதல் முதலியவற்றால் துன்பமே தரும் பொருளை விரும்பிச் செல்வது பேதைமை என்பதுபட "இளமை பாரார் வளநசைஇச் சென்றோர்" என்றதென்க.

இது தலைவி தன் கருத்தைக் கார்ப்பருவத்தின் கருத்தாக வைத்துக் கூறியதாகலான், இளமை பாராது வளனசைஇச் சென்றோர் ஆகலான் மேலும் அவ் வளனசைஇ வாராது தங்கிவிடுவரோ என்று வருந்தியதாகக் கொள்க.

## பாட்டு - கஉஎ : தோழி கூற்று

துறை :—பாணன் வாயிலாகப் புக்கவழித் தலைமகற்குத் தோழி சொல்லியது. அஃதாவது பரத்தையிற் பிரிந்து மீண்ட தலைவன் ஊடியிருந்த தலைவியை அஞ்சி, அவள் ஊடல் தீர்க்கப் பாணனை உய்த்து, அவன் பின் நின்ற பொழுது, அத் தலைவனை நோக்கித் தோழி கூறியது.

இதன்கண், 'தலைவ! நின்னுடைய பாணன் முழுப் பொய்யன்; அவன் அங்ஙன மாகலின், நின்னாற் பிரியப்பட்ட மகளிர்க்கு உலகத்துள்ள பாணர் எல்லாம் களவர் போலவே காணப் படுவாராயினர்' என்று கூறுகின்றாள்.

கஉஎ. குருகுகோளக் குளித்த கேண்டை அயலது
உருகெழு தாமரை வான்முகை வெரூஉம்

கழனியம் படப்பைக் காஞ்சி யூர
ஒருநின் பாணன் பொய்ய னாக
உள்ள பாணர் எல்லாம்
கள்வர் போல்வர்நீ அகன்றிசி னோர்க்கே.

—ஓரம் போகியார்.

(இ - ள்.) குருகு கொளக் குளித்த கெண்டை - அன்னம் தன் அலகாற் கௌவ அதற்குத் தப்பி நீரினுள்ளே மூழ்கி உய்ந்த கெண்டை மீன் பின்னர், அயலது உருகெழு தாமரை வான் முகை வெரூஉம் - பக்கத்தே உளதாகிய அழகு பொருந்திய தாமரையினது வெள்ளிய அரும்பை அஞ்சா நிற்றற்கு இடமான, கழனி அம் படப்பைக் காஞ்சி ஊர - கழனிகளை யுடைய அழகிய பக்கங்களையுடையதும் காஞ்சி மரங்கள் மிக்கதுமாகிய ஊரை உடைய தலைவனே, நின் ஒரு பாணன் பொய்யனாக-நின்னுடைய தூதனாகிய ஒரு பாணன பொய் பேசுபவனாய்விட்ட காரணத்தால், நீ அகன்றிசினோர்க்கு - நின்னால் கைவிடப்பட்ட மகளிர்க்கு, உள்ள பாணர் எல்லாம-உலகிலுள்ள பாணச் சாதியினர் எல்லோரும், கள்வர் போல்வர் - பொய்யரே போலக் காணப்படுகின்றனர்.

**விளக்கம்:**—குருகு ஈண்டு அன்னம் எனக. வெண்டாமரை மல
ரோடு உவமித்தலான் நாரை என்றுதல் கொக்கென்றுதல் கூறுதல் பொருந்தாது. வான்முகை என்றதனுல் வெண்டாமரை என்பது பெற்றும். அயலது - பக்கத்தில் உள்ளது. உரு - நிறம்; அழகுமாம். வெரூஉம் - அஞ்சும். கழனிகளையும் அழகிய தோட்டங்களையும் காஞ்சி மரங்களையும் உடைய ஊரன் எனினுமாம். நின் ஒரு பாணன் என மாறுக. ஒரு நின் பாணன் பொய்யனுக எனவே, நின்னைப் பரத்தமை யுடையனுக யாங்கள் தேற்றமாக அறிந்துள்ளே மாகவும், நின் பாணன் நின்னைத் தூயன் எனக் கூறுகின்றுன் என்றவாறு. நீ அகன்றிசினேர் என்றது, நின்னுற் பல மகளிர்கள் வஞ்சிக்கப்பட்டுப் பிரிந்துறை கின்றனர் என, அவன் பரத்தமை மிகுதியைச் சுட்டிக் கூறியபடியாம். உள்ள பாணர் என்றது, உலகிலுள்ள பாண் சாதியினர் எல்லாம் என்ற வாறு. எனவே நீ பாணரைப் பொய் கூறப் பயிற்றி அவர் சாதிக்கே இழுக்குண்டாக்குகின்றுய் என்றிகழ்ந்தாளாயிற்று.

குருகு கொளக் குளித்த கெண்டை என்றது, அன்னத்தாற் கௌவப்பட்டுழி அதற்கு அகப்படாது நீரினுட் புகுந்து உயிருய்ந்த கெண்டைமீன் என்றவாறு. எனவே, நின் பாணன் பொய்யில் மயங் காது தப்பினேம் என்றபடியாம். வேறு பாணர் பொய் கூறுராயினும் இவன் கூறிய பொய் கேட்டு உலகில் பாண் சாதியினரே பொய் பேசும் வழக்கமுடையர் போலும் என்று யாங்கள் கருத இடனுண்டாகின்றது என்பாள், கெண்டை பழைய அச்சத்தால் நீங்கு செய்யாத முகையை வெரூஉம் என்றுள். எனவே, இது வாயில் மறுத்ததாதல் அறிக.



## பாட்டு - கஉஅ: தலைவன் கூற்று

துறை:—(க) அல்ல குறிப்பட்டு மீளும் தலைமகன் தன்னெஞ்சினை நெருக்கிச் சொல்லியது. அஃதாவது, தலைவியைக் குறியிடத்தே காணுமல் வறிதே மீளும் தலைவன் அவளைப் பெரிதும் விரும்பும் தன்னெஞ்சைக் கடிந்து கூறியது.

(உ) இஃது உணர்ப்பு வயின் வாரா ஊடற்கண் தலைமகன் கூறியதூஉமாம். அஃதாவது தலைவன்பரத்தமை காரணமாக ஊடியிருந்த தலைவியை அணுகி, அவள் ஊடலைத்தீர்க்கப் பெரிதும் முயன்றும் கைகூடாவழித் தன் நெஞ்சை நோக்கிக் கூறியது எனினுமாம்.

இதன்கண், 'கீழ்த்திசைக் கடற்கண் உள்ள சிறகிழந்த நாரை ஒன்று, மேற்குக் கடல் துறையின் கண்ணதாகிய அயிரை மீனைக் கௌவக் கருதித் தலை எடுத்தாற் போல, நமக்குச் சேய்மைக்கண் உள்ளவளும், பெறற்கரியளுமாகிய ஒருத்தியை அவாவி வீணே இன்னலுறுகின்றாய்காண்' என்று தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

கஉஅ. குணகடல் திரையது பறைதபு நாரை
திண்டேர்ப் பொறையன் தொண்டி
முன்றுறை

அயிரை ஆரிரைக் கணவங் தாங்குச்
சேயள் அரியோட் படர்தி
நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே.

—பரணர்.

(இ - ள்.) நெஞ்சே குணகடல் திரையது பறை தபு நாரை- நெஞ்சமே கிழ்கடலின் அலைவாயின்கண் உளதாகிய சிறகுகள் இழந்த நாரை, திண்தேர்ப் பொறையன் தொண்டி முன் துறை- திண்ணிய தேரையுடைய சேரமன்னனது தொண்டியென்னும் பட்டினத்தே உளதாகிய கடற்றுறையின்கண் உள்ள, அயிரை ஆர் இரைக்கு அணவந்தாங்கு - அயிரை மீனாகிய பெறற் கரிய இரையை அவாவி நிமிர்ந்து நோக்கினாற் போன்று, சேயள் அரியோள் படர்தி - நமக்குத் தொலைவிடத்தில் உள்ளவளும் பெறுதற்கரியளுமாகிய தலைவியைப் பெறுதற்கு நினையாநின்றாய், நோயை - ஆகலின் நீவருத்தமுடையை காண், நோய்ப் பாலோய் - இத்தகைய வருத்தத்திற்குக் காரணமான ஊழினை யுடையை போலும்.

விளக்கம்:—குணகடல்-கீழ்த்திசைக்கண் உள்ள கடல். திரையது அலைமோதும் இடத்தில் உளது. திரை - ஆகுபெயர். பறை - சிறகு.

மூலமும் உரையும்

பறத்தல் தொழிலுமாம் - தபுதல்-இழத்தல் முதுமையாற் பறையிழந்த நாரை என்க. இந்நாரை நெஞ்சிற்கு உவமம். திண்டேர் - பகைவ ரானே அழிக்கப்படாத தேர். பொறையனுடைய மறத்திண்மையைத் தேரின் மேலேற்றிக் கூறியவாறு. பொறையன் - சேரமன்னன். தொண்டி - சேரநாட்டின் கண்ணதாகிய ஒரு துறைமுகப் பட்டினம். அயிரை - ஒருவகை மீன்: ஆர் இரை, உண்ணும் இரையுமாம். சேயள் என்றது, ஈண்டு தூரத்தைக் குறிக்காமல் தன்னால் செல்லமுடியாத இடம் என்னும் பொருளதாய் நின்றதென்க. பெறற்கரிய தொன்றனைத் தூரத்திலுளதென்பது உலகவழக்கு. கீழ்கடல் நாரை மேல் கடல் மீனுக்கு அணவந்தாங்கு என்றது, பெறற்கருமை கூறியபடியாம்.

தலைவியைத் தனது முயற்சியால் எய்தவியலாமை கூறுவான், 'பறை தபு நாரை' என்றான். அவள் நாம் விரும்பியவாறு நம்மை எய்துதற் குரியளும் அல்லள் என்பான், 'அரியோள்' என்றான். 'கிட்டாதாயின் வெட்டென மற'த்தலே அறிவு. நீ அங்ஙனம் மறவாது அவளை இடை யறாது நினைந்து உருகாநின்றனை இது நின் தலைவிதிபோலும்' என்று இரங்கினான் என்க.

இரண்டாவதாகக் கூறியதுறைக்குக் கூறுங்கால் 'நெஞ்சே! இவள் நாம் எத்துணை நயந்தும் நம்பால் அன்புமாறிச் சேயளாயினள்; ஊடல் தீர்வாளுமல்லளாய் அரியளுமாகினள்; நீயோ இத்தகைய கைகூடாப் பொருளில் பெரிதும் விழைவுற்று இன்னலுறுகின்றாய். நின் தலைவிதி அப்படி இருந்ததுபோலும்!' என்று நொந்து கூறினானாகக் கொள்க. இம்மொழிகள் தலைவியின் உளம் உருக்கும் பண்புடையனவாதலும் உணர்க.

## பாட்டு - கஉகூ : தலைவன் கூற்று

துறை :—தலைமகன் பாங்கற்கு உரைத்தது. அஃதாவது, இயற்கைப் புணர்ச்சி எய்தித் தலைவியைப் பிரிந்து வந்த தலை
வனது வேறுபாடுகண்ட பாங்கன், 'இவ்வேறுபாடு நினக்கு எற்றாலாயது?' என்று வினவியவழித் தலைவன் அவனுக்கு உரைத்தது.

இதன்கண், 'நண்பனே! ஒருத்தியினது கரிய கடலின் நடுவே தோன்றும் எட்டா நாள் திங்களை ஒத்த நுதல், புதிதாகப் பிடிக்கப்பட்ட யானையைப் பிணிக்குமாறுபோல என்னைப் பிணித்தது காண்' என்று தலைவன் பாங்கனுக்குக் கூறுகின்றான்.

கஉகூ. எலுவ சிறுஅர் ஏமுறு நண்ப
புலவர் தோழ கேளா யத்தை
மாக்கடல் நடுவண் எண்ணாட்
பக்கத்துப்
பசுவெண் திங்கள் தோன்றி யாங்குக்
கதுப்பயல் விளங்கும் சிறுநுதல்
புதுக்கோள் யானையிற் பிணித்தற்றால்
எம்மே.

—கோப்பெருஞ்சோழன்.

(இ - ள்.) எலுவ - என்தோழனே, சிறூஅர் ஏமுறு நண்ப- சிறுவர்கள் இன்புறுதற்குக் காரணமான நட்பையுடையோனே, புலவர் தோழ - அறிவுடையோர்க்கும் தோழனுவோனே, கேளாய்-கேட்பாயாக, மாக்கடல் நடுவண்-கரிய கடலினிடையே, எண் நாள் பக்கத்துப் பசுவெண் திங்கள் தோன்றி யாங்கு- உவாவின் எட்டாம் நாளாகிய திதிக்குரிய இளைதாகிய வெள்ளிய திங்கள் தோன்றினாற் போல, கதுப்பயல் விளங்கும் சிறுநுதல்- ஒருமகளின் கூந்தலின் பக்கத்தே விளங்காநின்ற சிறிய நெற்றி யானது, புதுக்கோள் யானையில் எம் பிணித்தற்று-புது வதாகக் காட்டினின்றும் பிடிக்கப்பட்ட யானையைப் பிணிக்குமாறுபோல எம்மைப் பிணித்து விட்டது.

**விளக்கம்**:—எலுவன் - நண்பன். சிறுவர் இன்புறுதற்குக் காரண மான நண்ப என்றது, எத்துணையும் பேதமுறாது எவவுயிர்க்கும் செந் தண்மை பூண்டொழுகும் அறவோனே என்றவாறு. இனிப் 'புலவர் தோழ' என்றது, பேரறிவுடைய புலவர்கட்கும் நண்பனுதற்குரிய அறிவுமேம்பாடுடையனே என்றவாறு இவ்விளிகளால் தன் நண்பனைப் பாராட்டினமை காண்க. ஏமம் - இன்பம். ஏம் எனக் குறைந்து நின்றது. அத்தை: அசை. மாக்கடல்-கரிய கடல். எண்ணுட்பக்கம்- உவாவினின்றும் எட்டா நாளாகிய திதி; அஃது அட்டமி என்க. பசுமை - ஈண்டு இளமைமேற்று; பசுங்குழவி என்புழிப்போல. எனவே, வளர்பக்கத்து எட்டாநாள் திங்கள் என்றவாறு. இத்திங்கள் நெற்றிக் கும், கடல் கதுப்புக்கும் உவமைகள். கதுப்பு - கூந்தல். 'புதுக் கோள் யானை' என்றது, யானை வேட்டுவர் காட்டினின்றும் புதிதாகப் பிடித்து வந்த யானை என்றவாறு. யானையைப் பிணிக்குமாறு போலப் பிணித்தது என்க. பிணித்தன்று என்பது பிணித்தற்று என வலித் தல் விகாரம் பெற்றது. பிணித்தது என்னும் பொருட்டு

இதன்கட் கூறப்பட்ட உவமையைப்பற்றித் தொல்காப்பிய உவம வியல் கய-ம் சூத்திர வுரையில் பேராசிரியர் கூறுவதாவது:

"கடல் போன்றது கூந்தல் எனவும் கடல் நடுவெழுந்த எண்ணட் பக்கத்து மதிபோன்றது நுதல் எனவும் கூறினன். அதனுல் கடல்போலும் மயிரென்றதும், பலகாவதப் பரப்புடைய மதிபோன்றது நுதல் என்றதும், கழியப் பெரியவாயினும், அது வழக்காரவிற் சிறப்பிற்றீராது மனங்கொளவந்த உவமம் எனவே படும்" என்பதாம்.

## பாட்டு - கரு௦ : தோழி கூற்று

துறை :—(க) பிரிவிடை அழிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது; 'நீ அவர் பிரிந்தாரென்று ஆற்ருயாகின்றதென்னே? யான் அவர் உள்வழி அறிந்து தூதுவிட்டுக் கொணர்வேன்; நின் ஆற்ருமை நீங்குக' எனத் தோழி தலைமகளை ஆற்றுவித்தது. இதன்பொருள் வெளிப்படை.

(உ) தோழி தூதுவிடுவாளாகத் தலைமகள் தனது ஆற்ருமையாற் கூறியதுமாம். அஃதாவது பிரிந்த தலைவனைத்

## மூலமும் உரையும்

கஅசு

தன்னேடு கூட்டற்குத் தூதுவிடுதல் முதலியன செய்து முயலும்படி தூண்டற்பொருட்டுத் தலைவி தன் ஆற்ருமையைப் புலப்படுத்தியது.

இதண்கண், 'நங்காதலர் பிரிந்துளார் ஆயினும், அவர் நிலத்தைத் தோண்டிக்கொண்டு அதனுட்புகுவார் அல்லர்; வானத்திற் பறந்து போவாருமல்லர்; கடல்கடந்து சென்றாரு மல்லர்; ஆதலான், அவரை நாடுகள் தோறும், ஊர்கள் தோறும், குடும்பங்கள் தோறும ஆராய்ந்து தேடினுல் அவர் காணப்படுதல் ஒருதலை' என்று தோழி, அல்லது தலைவி கூறுகின்றாள்.

கூ௦. நிலந்தோட்டுப் புகாஅர் வானம் ஏறார்
விலங்கிரு முந்நீர் காலிற் செல்லார்
நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்
குடிமுறை குடிமுறை தேரிற்
கெடுநரும் உளரோநம் காத லோரே.

—வெள்ளிவீதியார்.

(இ - ள்) நம் காதலோர்-தோழி நம் தலைவர் (நம்மைப் பிரிந்து போயினர் எனினும்,)நிலந்தொட்டுப் புகாஅர்-நிலத்தைத் தோண்டி அதனுட் புகுவாரல்லர், வானம் ஏறார்-வானின் கட் பறந்து உயரப் போவாருமலலர், விலங்கு இரு முந்நீர் காலிற் செல்லார்-எதிரே குறுக்கிடும் கடலைக் காலாலே கடந்து செல் வாருமல்லர்; ஆதலின், அவர் யாண்டேனும் ஓரிடத்தே இருப் பாராதல் வேண்டும் எனவே, நாட்டின் நாட்டின்-நாடுகள் தோறும் நாடுகள்

தோறும் சென்று சென்று, ஊரின் ஊரின்- அந்நாட்டகத்துள்ள ஊர்கள் தோறும் புகுந்து, குடிமுறை

குடிமுறை - அவ்வூரகத்துள்ள குடிகள் தோறும் குடிகள் தோறும் உள்ளாரை வினவி, தேரில் கெடுநரும் உளரோ - ஆராய்ந்து காணுமிடத்துக் காணுமற் போவரோ, காணப்படுவது ஒருதலை

**விளக்கம்** :—தோழி கூற்றாயின், 'அங்ஙனம் ஆராய்ந்து தலைவனைத் தேடிக் கொணர்வன்; நீ ஆற்றியிரு' என்பது குறிப்பெச்சமாகக் கொள்க. தலைவி கூற்றாயின், 'நீ அங்ஙனம் முயன்று அவரைத்தேடித் தாராயாயின், யான் இறந்துபடுவல்' என்பது குறிப்பெச்சமாகக் கொள்க.

நிலத்திற் புகுதலும் வான மேறலும் நீர்மேல் நடத்தலும் உடையோர் இருத்திசத்தி கைவரப்பெற்ற சாரணர்கள்; அத்தகைய சாரணர் அல்லர் நந்தலைவர் என்பாள், "நிலந்தொட்டுப் புகாஅர் வானமேறார் முந்நீர் காலினிற் செல்லார்" என்றாள். தொடுதல் - தோண்டுதல். புகுதல் - அதனுட் புகுந்து மறைதல். சாரணர் இத்தகைய சித்திகளையுடையார் என்பதனை,



"நிலத்திற் குளித்து நெடுவிசும் பேறிச்
சலத்திற் றிரியுமோர் சாரணன் தோன்ற."

(உ௪ : ௪௬-எ.) எனவரும் மணிமேகலையானும் உணர்க.

கடல் ஒரு நாட்டிற்கும் மற்றொரு நாட்டிற்கும் குறுக்கே கிடந்து தடுத்தலின், 'விலங்கிரு முந்நீர்' என்றாள். விலங்குதல் - குறுக்கிடுதல்; தடுத்தலுமாம். முந்நீர் - கடல்; யாற்றுநீரும் ஊற்றுநீரும் மழைநீரும் ஆகிய மூன்று நீரையுடைமையின் முந்நீர் என்றாயிற்றென்பாரும், உலகினைப் படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் மூன்று நீர்மையுடைமையின் முந்நீர் எனப்பட்டதென்பாரும் இருவகை ஆசிரியர் உளர். முந்நீர் காவிற் செல்லார் என்றது, கடல்நீரின்மேற் காலால் நடந்து செல்வார் அல்லர் என்றவாறு. எனவே, அவர் நம் நாவலந்தீவினுள் யாண்டேனும் ஓரிடத்துறைபவராவார்; அவரை யாண்டும் ஆராயிற் காண்டல் ஒருதலை என்றவாறு.

ஊர்களிற் குடிகள், பால்வேறு தெரிந்த நால்வேறு வகுப்பும் இன்னின்ன இடங்களில் வீடுகட்டி வாழ்தல் வேண்டும் என்னும் முறைப்படி வாழ்வராகலின் 'குடிமுறை' என்றாள்.

இனி இச்செய்யுளைப்பாடிய வெள்ளிவீதியார் என்னும் நல்லிசைப் புலமையாட்டியார், தங்கணவனைக் காணாது தேடுவார் கூறியது என்று கூறுப. இதன்கட் சுட்டி ஒருவர் பெயர் கொளப்படாமையின் இஃது அகத்திற் கோத்தற்குரியதாயிற்று. வெள்ளிவீதியார் தங்கணவற் கெடுத்துத் தேடினார் என்பதனை,

> "நெறிபடு கவலை நிரம்பா நீளிடை
> வெள்ளி வீதியைப் போல நன்றும்
> செலவயர்ந் திசினால் யானே." (கசஎ)

என்று வரும் அகநானூற்றுப் பாடலானும்,

இவரே அகநானூற்றில்,

> "ஆதிமந்தி போலப் பேதுற்று
> அலந்தனென் உழல்வென் கொல்லோ."

(அகம்: சரு) என்று கூறிய குறிப்பானும் உணரலாம்.

## பாட்டு - கஉக : தலைவன்

கூற்று

துறை :—வினைமுற்றிய தலைமகன் பருவ வரவின்கட் சொல்லியது. அஃதாவது, தலைவியைப் பிரிந்து வினைமேற் சென்ற தலைவன், அவ்வினை முடிந்தபின்னர், தான் மீண்டு வருவதாகத் தலைவிக்குக் குறித்துவந்த பருவம் வந்தமை கண்டு தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

இதன்கண், 'குறித்த பருவம் வந்துவிட்டது ; தலைவியிருந்த ஊரோ நெடுந்தூரத்திலுளது ; அவள் ஆற்றாது வருந்துவளே

### மூலமும் உரையும்

கஉக

என்று என் நெஞ்சு பெரிதும் விரையாநின்றது' என்று தலைவன் தன்னுட் கூறிக்கொள்கின்றான்.

கஉக. ஆடமை புரையும் வனப்பிற் பணைத்தோள்

பேரமர்க் கண்ணி யிருந்த ஊரே

நெடுஞ்சேண் ஆரிடை யதுவே நெஞ்சே

ஈரம் பட்ட செவ்விப் பைம்புனத்து

ஓரேர் உழவன் போலப்
பெருவிதுப் புற்றன்றால் நோகோ யானே.

—ஓரேருழவனார்.

(இ - ள்.) ஆடு அமை புரையும் வனப்பில் பணைத்தோள்
பேர் அமர்க்கண்ணி இருந்த ஊர் - அசைகின்ற மூங்கிலை ஒத்த அழகையுடைய பருத்த தோளினையும் பெரிய போரையுடைய கண்ணையும் உடைய தலைவி இருந்த எம்மூரோ, நெடுஞ் சேண் ஆர் இடையது - நெடுந்தூரத்தின்கண் எய்துதற்கரிய இடைவழியையுடைத்து, நெஞ்சு - என் நெஞ்சமோ, ஈரம்பட்ட செவ் விப் பைம்புனத்து ஓர் ஏர் உழவன் போலப் பெரு விதுப்புற் றன்று - மழை பெய்தமையால் உழவிற்கேற்ற ஈரம் உண்டாகிய செவ்வியையுடைய பசிய புனத்தையும ஒற்றை ஏரையுமுடைய உழவனைப்போலப் பெரிதும் விரைவுடையதாகின்றது, யான் நோகு - அதனால் யான் வருந்துவேன்

விளக்கம் :—ஆடு அமை - அசைகின்ற மூங்கில். தல். வனப்பு - அழகு. அமர்க்கண்ணி - போர்
பணைத்தல் - பருத்
செய்யும் கண்ணை

யுடையாள். அஃதாவது தம்மைக்கண்டார் நெஞ்சோடு போர்செய்யும் கண்களையுடையாள் என்றவாறு. இனிப் பேரமர்க்கண் என்பதற்குப் பெரிய விருப்பத்தைச் செய்யும் கண் எனினுமாம். தலைவியை நினைந் துழித் தோள் கண் முதலிய உறுப்புக்கள், தன் நெஞ்சின்கண் தோன்று தலால் அவையிற்றின் வனப்பைப் பாராட்டி ஓதினன். தான் குறித்து வந்த பருவம் வந்துவிட்டமையால் அப் பேரமர்க் கண்கள் என் னுறுமோ என்பான், அந்நினைவால் 'பேரமர்க்கண்ணி' என்றான்.

தன்னெஞ்சம் விரைதற்கேற்ப அவளை விரைந்தடைதற்கியலாதவாறு இடைக்கிடந்த சுரத்தை எண்ணி இந்நெடுஞ்சுரத்தைக் கடந்து தொலைப்பது எப்போதென்பான், 'நெடுஞ் சேண் ஆர் இடையது' என்றான். ஆர் இடை - கடத்தற்கரிய இடைவழி என்க. ஓரேருழ வன் என்றதனால், அவன் ஏழை என்பதும், ஈரம்பட்ட செவ்வியை இழந்தால் அவனுக்குப் புனம் விளைவு குன்றி வறுமைமிகும் என்பதும், அதனால் தனது ஒற்றை ஏரைக்கொண்டே புனம் செவவி கெடாமல் உழுதற்கு விரைவன் என்பதும், அந்நிலை அவனுக்குப் பெரிதும் இன்னல் நிலையாம் என்பதும் தோன்ற, 'ஈரம்பட்ட செவ்விப் பைம் புனத்து ஓர் ஏருழவன்' என்றான். தலைவி பருவம் வந்துவிட்டமை யால் ஆற்றாது பெரிதும் வருந்துவள். அந்நிலை சிறிது நீளின் ஆற்றா மையால் அவட்கு இறந்துபாடு நிகழினும் நிகழும்; விரைந்து அவளை



எய்துதற்கோ இடைவழி மிகமிக நீளிது என்செய்கோ? எனத் தன் நெஞ்சு விதுப்புறுகின்றதென்றவாறு. இவ்வுவமையின் அருமையை உணர்ந்து இதனைப் பாடிய நல்லிசைப் புலவரை 'ஓரேருழவர்' என, நம் பண்டைச் சான்றோர் வழங்குவாராயினர். நோகு - நோவேன்: தன்மை ஒருமை.

## பாட்டு - கநஉ : தலைவன் கூற்று

துறை :—கழற்றெதிர் மறை; அஃதாவது, தலைவியை நினைந்து மெலிந்த தலைவனை நோக்கிப் பாங்கன், 'நின் பெருந் தகைமைக்கு இஃது ஏற்குமோ ?' என்று இடித்துரைத்தானாகத், தலைவன், அவன் கூற்றை மறுத்துரைத்தது.

இதன் கண், ' அன்பாலே விரைந்து தழுவுபவளும், விருப் பத்தைச் செய்யும் அழகியும், குவிந்த மெல்லிய முலையையுடை யாளும், நீண்ட கூந்தலையுடையாளும், நுணுகிய நோக்கினையுடை யாளுமாகிய என் காதலியை யான் மறந்துறைதல் கூடுமோ ?' என்று தலைவன் பாங்கனுக்குக் கூறுகின்றான்.

கரு௨. கவவுக் கடுங்குரையள் காமர் வனப்பினள்
குவவுமென் முலையள் கொடிக்கூந் தலளே
யாங்குமறந் தமைகோ யானே ஞாங்கர்க்
கடுஞ்சுரை நல்லா னடுங்குதலைக் குழவி
தாய்காண் விருப்பி னன்ன
சாஅய்நோக் கினளே மாஅ யோளே.

—சிறைக்குடியாந்தையார்.

(இ - ள்.) மாஅயோள் - மாமையையுடைய தலைவி, கவவுக் கடுங்குரையள் - தழுவிக்கோடலில் மிக்க விரைவுடையாள், காமர் வனப்பினள் - விருப்பம் உண்டாக்கும் அழகினையுடையள்,

குவவு மென்முலையள் - குவிந்த மெல்லிய முலையினையுடையாள், கொடிக் கூந்தலள் - நீண்ட மயிரினையுடையாள், ஞாங்கர்க் கடுஞ் சுரை நல் ஆன் நடுங்கு தலைக்குழவி தாய்காண் விருப்பின் அன்ன - பக்கத்தே பிரிந்து சென்ற கடிய சுரப்பினையுடைய நல்ல ஆவினது நடுங்குகின்ற தலையையுடைய இளங்கன்று தனது தாயைக் காண்டற்குக் கொள்ளும் விருப்பத்தைப்போன்ற விருப் பத்தையுடைய, சாஅய் நோக்கினள் - மெலிந்த பார்வையினை யுடையாள், யான் யாங்கு மறந்து அமைகு - இத்தகையாளை யான் எவ்வண்ணம் மறந்து அமைவேன்.

விளக்கம் :—கவவு - அகத்தீடு. அஃதாவது தழுவுதல் என்னும் பொருட்டு, "கவவகத்திடுமே" (உரி - இக.) என்பது தொல்காப்பியம் கடுங்குரையள் என்பதன்கண் குரை என்பது அசைச்சொல். கடுமையை

புடையாள் என்பதாம். மிக்க அன்புடையளாகலின் விரைந்து தழுவிக் கொள்ளும் இயல்பினள் என, அவள் பேரன்பினை உணர்த்தியவாறு. இயற்கைப் புணர்ச்சிக்கண் தழுவப்பட்டின்புற்றமை கருதிக் கூறினன் என்க. அவள் அழகு நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் தன் னெஞ்சத்தை ஈர்த்தலின், 'காமர் வனப்பினள்' என்றான். காமர் - விருப்பம். விருப்பத்தை உண்டாக்கும் வனப்பென்க. எனவே, அவளைக் காணுதமையல என் கண் என்றுணர்த்தியவாறு. வனப்பு - அழகு. "வனப்பென்பது பெரும்பான்மையும் பலவுறுப்பும் திரண்ட வழிப் பெறுவதோர் அழகு" (தொல். செய். உகுக. உரை.) என்பர், பேராசிரியர். குவவு - திரட்சி. கொடி என்பது ஈண்டு நீடல் என் னும் பொருளில் வந்தது. நீண்ட கூந்தலையுடையள் என்க. இயற் கைப் புணாச்சிக்கண் அதுவே பாயலாகக் கிடந்தமைபற்றி அதன் நெடுமையைப் பாராட்டினுன்.

ஞாங்கர் - பக்கம். பக்கத்தே சென்ற நல்லான், கடுஞ்சுரை நல்லான் எனத் தனித்தனிக் கூட்டுக. கடுஞ்சுரை - கடிதிற் சுரக்கும் சுரப்பு. அஃதாவது, கன்றை நினைந்தவுடன் சுரக்குமியல்புடைய நல்லான் என்றவாறு. அந்நல்லானை அதன் இளங்கன்று காண்டற்கு விரும்பிப் பார்க்குமாறு என்னைக் காண்டற்கு விரும்பி நோக்குபவள் என் னுமுகத்தானே அந்நல்லான் இளங் கன்றை விரும்புமாறு யான் அவளை விரும்பாநின்றேன் என்று குறிப்பாற் பெறவைத்தமையும் உணர்க.

சாஅய் - நுணுக்கம். அஃதாவது, பிரிவஞ்சும் மெலிவு தோன்றப் பார்க்கும் பார்வை என்க. தான் பிரிந்துழி அங்ஙனம் மெலிந்து நோக்கினள் ஆகலின், அப்பார்வையே என்னை வருத்தும் என்பான், 'சாஅய் நோக்கினள்' என்றான். எனவே, 'பேரன்பும் பேரழகு முடை யாளை யான் மறந்தமைதல் ஒல்லுமோ? நீயே கூறுக,' என்றவாறு. மாயோள் - கருமை நிறமுடையோள்.

## பாட்டு - கஙஙு : தலைவி கூற்று

துறை:-வரைவு நீட்டித்த விடத்துத் தலைமகள் சொல்லியது. அஃதாவது, வரைந்து கோடலிற் கருத்தின்றித் தலைவன் காலம் நீட்டித்தானாக, அவ்வழி இன்னலுற்ற தலைவி தன்னிலைமையைத் தோழிக்குக் கூறியது.

இதன்கண், தலைவி, தோழியை நோக்கித், 'தலைவர் என்னலம் புதிதுண்டு போயினர்; அவர் அருளுவர் என்னும் நினைவே பற்றுக் கோடாக நலனும், வலியும
இழந்தபின்னரும் யான் உயிர் வாழா நின்றேன்,' என்று கூறுகின்றாள்.

கூரு. புனவன் துடவைப் பொன்போற் சிறுதினை
கிளிகுறைத் துண்ட கூழை யிருவி
பெரும்பெய லுண்மையி னிலையொலித் தாங்கென்
உரஞ் செத்தும் உளேனே தோழியென்
நலம்புதி துண்ட புலம்பி னானே.
—உறையூர் முதுகண்ணன் சாத்தனார்.

கு.—13

(இ - ள்.) தோழி-, என் நலம் புதிது உண்ட புலம்பினுல்-எனது பெண்மை நலத்தைப் புதுவதாகத் தலைவர் உண்டு பிரிந்தமையாலே உண்டாய தனிமையால், என் உரம் செத்து-எனது வலிமுழுதும்அழிந்தபின்னரும்,புனவன் துடவைப் பொன்போற் சிறுதினை- னத்தையுடைய குறவனுடைய தோட்டத்தின்கண் வளர்ந்த பொன்போன்ற சிறிய தினையினது கதிரை, கிளி குறைத் துண்ட கூழை இருவி - கிளியாலே ஒடித்துண்ணப்பட்ட கூழையாகிய தாள், பெரும்பெயல் உண்மையின் இலையொலித் தாங்கு- பெரிய மழை பெய்தமையாலே இலைவிட்டுத் தழைத்தாற் போன்று, உளென் - தலைவர் அருளுவார் என்னும நினை வுண்மையானே யான் இன்னும் உயிர்த்துளன் ஆகின்றேன்.

விளக்கம் :—புனவன் - தினைப்புனத்தையுடைய குறவன். பொன் போற்சிறுதினை என்றதற்குப் புனவன் பொன்னைப் போற்றுமாறு போற்றப்பட்ட சிறுதினை எனினுமாம். 'புனவன் துடவைப் பொன் போற் சிறுதினை' என்னும் இவ்வடி கO௫-ம் செய்யுளின்கண்ணும் முதலடியாக அமைந்திருத்தலறிக. துடவை - தோட்டம்,

சிறுதினை நலத்திற்கும், இருவி தலைவிக்கும், கிளி தலைவனுக்கும், மழை, அருளுவர் என்னும் நினைவிற்கும், இலை உயிர்ப்புக்கும் உவமைகளாகக் காண்க. குறைத்துண்ட – அலகாலே ஒடித்துண்ட என்க. கூழை – குறைக்கப்பட்டது. இருவி – கதிர் கொய்யப்பட்ட தாள். பயனுகிய கதிர் குறைக்கப்பட்ட பின்னர்த் தாள் பட்டொழிதலே இயல்பாகவும், மழையுண்மையாலே மேலும் இலைவிட்டுத் தளிர்ததாற் போன்று, நலம் உண்ட புலம்பினுனே வலிகெட்ட பின்னரும், நினைவு பற்றுக் கோடாக உயிர்த்துள்ளேன் என்பதாம். உரம் – வலிமை. ஈண்டு வலிமை என்றது, நிறையுடைமையை. அஃது உனத்தின்மையேயாகலின், அந்நிறை முழுதும் அழிந்த தென்பாள், 'செத்தும்' என்றுள். 'உளெனே' என்றது, இறந்துபடாது உளனுகின்றேன் என்றவாறு.

## பாட்டு – கரு௪ : தலைவி கூற்று

துறை :—வரைவிடை ஆற்றுளாய தலைமகள், ஆற்றுவிக்கும் தோழிக்குச் சொல்லியது. அஃதாவது, வரைதற்கு வேண்டிய பொருளீட்டும் பொருட்டுத் தலைவன் பிரிந்தமையால் வரைவு நீட்டித்ததாக ஆற்றுத தலைவியைத் தோழி ஆற்றுவித்தாள்; அத்தோழியை நோக்கித் தலைவி கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'நாடனுடைய நட்பு, பிரிவென்று ஒன்றில்லையாயின் நன்றேயாகும்; பிரிவுடையதுமாகலின் இன்னுதுமன்னே' என்று அது கூறு கின்றுள்.

கருசு. அம்ம வாழி தோழி நம்மோடு
பிரிவின் ருயின் நன்றுமற் றில்ல
குறும்பொறைத் தடைஇய நெடுந்தாள்
வேங்கைப்
பூவுடை அலங்குசினை புலம்பத் தாக்கிக்
கல்பொரு திரங்கும் கதழ்வீழ் அருவி
நிலங்கோள் பாம்பின் இழிதரும்
விலங்குமலை நாடனோடு கலந்த நட்பே.
—கோவேங்கைப் பெருங்கதவனூர்.

(இ-ள்.) அம்ம வாழி தோழி-தோழி யான் கூறுவதனைக் கேட்பாயாக, குறும் பொறைத் தடைஇய நெடுந்தாள் வேங்கை-குறிய கற்களினிடையே வளர்ந்து பருத்த நெடிய தாளினை யுடைய வேங்கை மரத்தினது, பூவுடை அலங்குசினை புலம்பத் தாக்கி-பூக்களையுடைய அசைகின்ற கொம்பு பூக்களுதிர்ந்து தனிக்குமாறு மோதி, கலபொருது இரங்கும் கதழ்வீழ் அருவி-மலையினை அலைத்து ஒலியாநின்ற விரைந்த வீழ்ச்சியினையுடைய அருவி, நிலங்கொள் பாம்பின் இழிதரும் - மலையினின்றும் நிலத்தின்கண் செல்லாநின்ற பாம்பைப் போன்று செல்கின்ற தற்குக் காரணமான, விலங்குமலை நாடனொடு கலந்த நட்பு-ஒன்றனை ஒன்று குறுக்கிட்டுக் கிடக்கும் மலைகளையுடைய நாட்டையுடைய தலைவனோடே யாம் நெஞ்சு கலந்து நட்டகேண்மை, நம்மொடு பிரிவு இன்றாயின் நன்று மன்றில்ல - நம்மிடத்தினின்றும் அவர் பிரிதல் என்னும் ஒரு செயல் மட்டும் இல்லையாயின் மிகவும் நன்மையுடையதாம்; அப்பிரிவின்மையைப் பெற்றிலேமே.

விளக்கம் :—அம்ம, கேட்பித்தற்கண் வந்தது. நம்மொடு, வேற்றுமை மயக்கம். நம்மிடத்தினின்றும் பிரியும் பிரிவு இன்றாயின் என்க. 'இன்றாயின் நன்றுமன்' என்றது, பிரிவின்மையை யாம் பெற்றிலேமே என்று இரங்கியபடியாம். பிரிவுண்டாயவழி நட்பு மிகத்தீதுடைத் தென்பது குறிப்பு. தில்ல: அசை. விழைவின்கண் வந்தது எனக் கொண்டு, 'இது என் விருப்பம்' என்பாருமுளர். மன், ஒழியிசை. அப்பிரிவின்மையை யாம் பெற்றிலேமே என்னும் பொருட்டு. குறும் பொறை - சிறுமலை. தடைஇய - பருத்த. "அம்பணைத் தடைஇய மென்றோள்" (கசுசு.) எனவரும் நெடுநல்வாடையினும் அஃதப் பொருட்டாதல் அறிக. வேங்கையின் வளன் தெரித்தோதுவாள், 'நெடுந்தாள் வேங்கைப் பூவுடை அலங்குசினை' என்றாள். குறும் பொறையினிடையே வளர்ந்த பூவுடை அலங்குசினை வேங்கை, வலிய குடியிற் பிறந்த தலைவியாகவும், அருவி தலைவனாகவும், புலம்பத்தாக்கு தல், தலைவியின் நலங்கெடத் தனித்துறையும்படி செய்தல் எனவும், பாம்புபோன்று இழிதருதல், தலைவன் அருளானே என்று அஞ்சும்படி ஒழுகுதலாகவும் உள்ளுறை காண்க. 'விலங்கு மலைநாடன்' என்றது,



நட்பிற்கு இடையூறுகள் பலவுளவாக வரைந்து கொள்ளாத தலைவன் என்னும் குறிப்புடையதென்க. நிலங்கொள் பாம்பென்றது, மலையுச்சியி னின்றும் நிலம் சேர இழிதரும் பாம்பு என்றவாறு. பாம்பின் இழி தரும் என்ற வுவமை உள்ளுறைக்கு ஆக்கமாகவந்த வினையுவமை.

## பாட்டு - கஙரு : தோழி

கூற்று

துறை :—தலைவன் பிரியும் என வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. அஃதாவது, தலைவனுடைய ஒழுகலாற் றினின்றும் இவன் நம்மைப்பிரிவான்கொல் என்று ஐயுற்று மெலிந்த தலைவிக்கு அவன் நின்னைப் பிரியான் என்று கூறித் தோழி ஆற்றுவித்தது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, "அவர் நம்மைப் பிரிவர் என்று எண்ணி நீ கலங்கவேண்டா; அவர் நம்மைப் பிரிய மாட்டார் என்பது தேற்றம; அஃதெற்றா லெனின்? அவர் ஒருநாள் 'ஆடவர்க்குயிர் வினை; மனையுறை மகளிர்க்கு அவர்தம் கொழுநரே உயிர் ஆவர்' என்று, நமக்குக் கூறினர் அல்லரோ" என்று தேற்றுகின்றாள்.

கரு௫. வினையே ஆடவர்க் குயிரே வாணுதல்
மனையுறை மகளிர்க் காடவர் உயிரென
நமக்குரைத் தோருந் தாமே
அழாஅல் தோழி அழுங்குவர் செலவே.

—பாலைபாடிய பெருங் கடுங்கோ.

(இ - ள்.) தோழி அழாஅல் - தோழி நீ தலைவர் பிரிவர் என்று எண்ணி அழுதலை ஒழிவாயாக, அழுங்குவர் செலவே- நந் தலைவர் தாமே செல்லுதலைத் தவிராநிற்பர் அஃது எற்றா லெனின், வினையே ஆடவர்க்கு உயிர் - தொழிலே ஆடவர்க்கு உயிராகும், வாணுதல் மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர் - ஒளிபொருந்திய நுதலையுடைய இல்லிருந்து வாழும் மகளிர் களுக்கு அவர்தம் காதலரே உயிர் ஆவர் என்று, நமக்குரைத் தோரும்தாமே - நமக்கு முன்னர் எடுத்துக் கூறியவரும் அவரே ஆகலான்.

**விளக்கம்:**—பிறவுயிர்க்கு இன்னு செய்யாமை மாசற்றார் கோள் ஆகலான், சான்றோராகிய நந்தலைவர் நம்மைப் பிரிந்து நம்முயிர்க்கு இறுதிசெய்யக் கருதார் ஆகலின், அவர் செலவழுங்குவர் நீ அழாதே கொள், என்றாள் என்க. "வினைக்குறை தீர்ந்தாரிற் றீர்ந்தன்று உலகு." அஃதாவது வினையாகிய குறையைச் செய்யாது விட்டவரை உலகம் விட்டது என்றோதுபவாகலான், வினை செய்யாவழி உலகத்தால் விடப்பட்டுப் பெருமையின்றிச் செத்தாரொப்பர் என்பான்

## மூலமும் உரையும்

கசுஎ

வினையை உயிராக உருவகித்தான். வினை தமக்குயிர் போல்வது என்றுரைத்தவர், அப்பெருமை நோக்கி வினையின்மேற்செல்லற்கு நம்மைப் பிரியார் கொல் என்னின்? நின்னைப் பிரியாதிருந்தேயும் செயற்பால வினைகள் அவர்க்குள; அவற்றைச் செய்தமைவர். தமக்குயிராகிய வினை கருதி நினக் குயிராகிய அவர், பிரிந்த பொழுதே நீ இறந்துபடுவாய் என்பதை நன்குணர்வர். ஆகலின், நின்னைப் பிரியார் காண் என்றவாறு. வினையே என்புழி ஏகாரம் பிரிநிலை.

ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தாமடங்காப் பேதைமையுடையர் அல்லர், தாம் பிறர்க் கோதியவாறே ஒழுகுவர் ஆகலாற் பிரியார் என்பாள், 'உரைத்தோரும் தாம்' என உம்மை கொடுத்தோதினாள்.

அழாஅல் - அழாதேகொள். மகளிர்க்கு ஆடவர் உயிர் என்பதனை "இன்னுயிரன்ன பிரிவருங்காதலர்" (உ௩எ.) எனவரும் நற்றிணையானும் உணர்க.

" தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்
பிறி
தின்னுயிர் நீக்கும் வினை "
என்பதுபற்றி நம்முயிர் நீக்கும் வினையாகிய பிரிவினை நங்காதலர் செய் யார் என்றாளுமாம்.

## பாட்டு - கரு.சு : தலைவன் கூற்று

துறை :—தலைமகன் பாங்கற்குரைத்தது. அஃதாவது, "காமநோயாற் கலங்குதல் நின் பெருமைக்குத் தகவன்று" என் றிடித்துரைத்த பாங்கனுக்குத் தலைவன் அதன் இயல் எடுத்துக் கூறியது.

இதன்கண், காமம் என்பது பிறர் கருதுமாறு போலப் புதியதோர் வருத்தமும் அன்று; நோயும் அன்று; மிகுதலும் குறைதலும் உடையதுமன்று. அது, தனக்குரிய காலத்தே தானே மலர்வது என்று தலைவன் பாங்கனுக்குக் கூறு கின்றான்.

கரு.சு. காமங் காமம் என்ப காமம்
அணங்கும் பிணியும் அன்றே நுணங்கிக்
கடுத்தலுந் தணிதலும் இன்றே யானை
குளகுமென் றாள்மதம் போலப்

பாணியும் உடைத்தது காணுநர்ப்
பெறினே.

—மிளைப்பெருங் கந்தனுர்.

(இ - ள்.) காமம் காமம் என்ப - உலகினுள்ளவர்கள் காமம் காமம் என்று தீயதொன்றிற்கு அஞ்சிக் கூறுவார் போலக் கூறுகிற்பர், காமம் அணங்கும் பிணியும் அன்று - அக்காமம் அங்



ஙனம் அஞ்சுதற்குக் காரணமான வருத்தமும் அன்று நோயும் அன்று, நுணங்கி - கூரிதாகி, கடுத்தலும் தணிதலும் இன்று - மிகுவதும் அன்றிக் குறைதலும் உடையதன்று, யானை குளகு மென்று ஆள் மதம் போல - யானை அதிங்கத்தின் கவளந் தின்றவழித் தோன்றி அதனை ஆளாநின்ற மதத்தைப்போல, காணுநர்ப்பெறின் - தான் தோன்றுதற்குக் காரணமாவாரைக் காணப் பெற்றால், பாணியும் உடைத்து - தான் தோன்றுமொரு செவ்வியையும் உடையதாகும்.

**விளக்கம்** :—பாம்பு பாம்பு, தீத்தீ, என்பன போன்று தீமை செய் வனவற்றைக் கண்டால் அடுக்கி மொழிதல் உலகினர் இயல்பு. அங் ஙனமே காமத்தையும் தீதாகக் கருதி உலகினர் காமம் காமம் என அதனை அஞ்சுகின்றனர் என்பான், 'காமம் காமம் என்ப' என்றான். என்ப என்னும் பயனிலைக்கு உலகினர் என்னும் வினைமுதல் வருவித் துக் கொள்க. அணங்கு - புறத்திருந்து தீண்டி வருத்துவது. அஃ தாவது பேய் முதலியன. எனவே, காமம் பேய் முதலியன போல்வ தன்று என்றவாறு. பிணி - உடலின்கண் உண்டாகும் குறையால் தோன்றி வருத்துவன. எனவே, காமம் உடலில் உண்டாகுமொரு நோய் அன்று என்றவாறு.

உடற்குறையற்ற யானை, குளகை மென்றவுடன் அதன் உள்ளுறை யும் மதம் தான் வெளிப்படுதற்குரிய ஏதுப்பெற்றமையால், வெளிப் பட்டு, அவ்வியானையைத் தன்வயத்ததாக்கி ஆளுதல் போலக் காமமும், ஒவ்வொருவர் உளத்தும உறைவதாய்த் தான் தோன்றுதற்குரிய ஏதுத் தோன்றுழித் தோன்றியும், எஞ்சிய காலத்தே அடங்கியும் இருப்பதொன்று. அது தோன்றும் செவ்விபெற்று வெளிப்படுங்கால், அதன் வழிப்படுவதல்லது அதனை அடக்கவொண்ணாது என்பான், 'காமம் பாணியும் உடைத்து' என்றான். பாணி - காலம். அஃதாவது செவ்வி. பாணியும் உடைத்து என்பதன்கண் உம்மை எதிர்மறை. பாணி பெருமையும் உடைத்து என்றவாறு. எனவே, இத்தகைய காமம் நின்னிடத்தும் பாணி பெறுமாயின், அதனியல்பை நீ உணர் வாய். அது பெருமையால் காமம் தீது; அதனை மேற்கோடல் தக வன்று என்று கூறுகின்றனை எனக் கழறிய பாங்கனை மறுத்துரைத்த வாறுணர்க.

காணுநர் - தான் தோன்றுதற்கேதுவாய்க் காணப்படுபவர்;

என்றது, தலைவியை என்க. குளகு, அதிங்கமாகிய யானையுணவு. அதனைத் தின்றுழி யானை மதங் கொள்ளும் இயல்பிற்று. இதனை "நாறு மும்மதத்தினாலே நாகத்தையிரிக்கும் நாகம்......அதிங்கத்தின் கவளங் கொண்டால்...யாவர்க்கும் விடுக்கலாகா" (எ௫௦.) எனவரும் சீவகசிந்தாமணியானும் உணர்க. குளகு: தலைவிக்குவமை. மென்று ஆள் மதம் என்றது, மென்றவழித்தோன்றி அதனை ஆளும் மதம் என்றவாறு.

தோழ! நின்பா லுறையும் காமம் செவ்வி பெற்றதில்லை. பெறின், அதனியல்பு உணர்வாய். இப்பொழுது உணராமையின் இங்ஙனம் கழறுகின்றனை என்றானாகக் கொள்க.

## மூலமும் உரையும்

கசுசு

## பாட்டு - கநஎ : தலைவன் கூற்று

துறை :—இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த தலைமகன், பிரி வச்சம் உணர்த்தியது. அஃதாவது, பால்வரை தெய்வத்தின் ஆணையால் தலைவியைக் கண்டு கூடிய தலைவன், பின்னர்த் தான் பிரிதல் இன்றியமையாமையின் புணர்ச்சிக் கினமாய்ப் பிரிவு என்பதும் ஒன்றுண்டு என்பதனைத் தலைவி புணர்ந்து அஞ்சு

மாறு கூறியது. பிரிவினை ஆற்றுமாறு தேற்றுதற்கு அவளைப் பிரிவென்று ஒன்றுண்டென உணர்த்தி அஞ்சுவித்தல் இன்றியமையாமையின், அங்ஙனம் அஞ்சுவிப்பன் என்க.

இதன்கண், தலைவன் தலைவியை நோக்கி "நீ பெரிதும் வருந்தும்படி யான் நின்னைப் பிரியேன். பிரிவேனாயின், என் பால் இரவலர் எய்தாத நாள்கள் பலவுண்டாவதாக" என்கின்றான்.

கரு௭. மெல்லியல் அரிவைநின் னல்லகம் புலம்ப
நிற்றுறந் தமைகுவே னாயின் எற்றுறந்
திரவலர் வாரா வைகல்
பலவா குகயான் செலவுறு தகவே.
—பாலை பாடிய பெருங் கடுங்கோ

(இ - ள்.) மெல் இயல் அரிவை நின் நல்லகம் புலம்ப - மென்மைத்தன்மையுடைய நங்காய் நின்னுடைய நன்றாகிய நெஞ்சம் தனிமையானே வருந்தும்படி, நின் துறந்து அமை

குவன் ஆயின் - நின்னைப் பிரிந்து நெடிது இரேன்காண் அங்ஙனமன்றிப் பிரிந்து நெடிது அமைந்திருப்பேனாயின், செலவுறு தகவு - யான் செலுத்தாநின்ற வாழ்க்கையாகிய தகுதியின்கண், இரவலர் வாரா வைகல் பலவாகுக - என்பால் இரப்போர் வருதலில்லாத வறுநாட்கள் பல உளவாகுக.

விளக்கம் :—பிரிவுதுன்பத்தை ஆற்றும் வன்மையிலள் என்பான், 'மெல்லியல் அரிவை' என்றான். அரிவை என்றது, பருவங் குறித்ததாகாது நங்கை என்னும் பொருட்டாய் விளியேற்றது. அவளது ஆரா அன்புமிகுதியைப் பாராட்டுவான், 'நின் நல்லகம்' என்றான். நல்லகம் - நன்னெஞ்சம்; அஃதாவது அன்பானே நிறைந்த நெஞ்சம். தனிமையுணர்ந்து வருந்துவது நெஞ்சமே யாகலான், புலம்பினை அதற்கேற்றியுரைத்தான். புலம்புதல் - தனிமையானே வருந்துதல், 'நிற்றுறந்து அமைகுவன் ஆயின்'' என்றது, நிற்றுறந்தமைகலேன் இம்மொழி பிறழ்ந்து அமைகுவேனாயின் என்றவாறு. துறந்து மீண்டும் வருவேன் நெடிது தங்கியிரேன் என்பது தோன்ற 'அமைகுவனாயின்' என்றான். அமைதல் - நெடிது தங்குதல். அமையேன் எனவே நின்னை யான் இப்போது பிரிவேன்; உடனே மீண்டு வருவேன் என்று குறிப்பால்

உணர்த்தியவாறு. இதனால் பிரிந்தமைதலும் உண்டென்று உணர்ந்து தலைவி அதற்கு அஞ்சுவள் என்பதும் உணர்க. அங்ஙனம் அச்சம் உணர்த்தியவன், இனி அஞ்சற்க எனத் தேற்றும்பொருட்டுச் சூள் மொழிகின்றான். செலவுறுதகவு என்றது, செலுத்தப் பொருந்திய வாழ்க்கை என்றவாறு. அறத்திற்குத்தக வாழ்வதே வாழ்க்கையாக லின், அதனைத் தகவென்றான். செலவுறுதகவு என்பதற்குச் செல்வதற் குற்ற தக்க வினை என்பாரும் உளர். வினையின்கண் இரவலர் வாரா வைகல் பெறுதல் இயல்பாகலின், அது கருத்தன்றென்க. 'ஈதலிசை பட வாழ்தலே' வாழ்க்கையின் ஊதியம் ஆகலின், அவ்வீகைக்கு யான் இரவலர்ப்பெறாது ஊதியம் இழந்தேனாகுக என்றவாறு. இதனால் தெளிவகப்படுத்து ஆற்றியவாறும் உணர்க.

## பாட்டு - கஎஅ : தோழி கூற்று

துறை :—(க) குறிபிழைத்த தலைமகன், பிற்றை ஞான்று இரவுக்குறி வந்துழித் தோழி சிறைப்புறமாகக் கூறியது.

அஃதாவது, முதல்நாள் இரவு வந்து அல்ல குறிப்பட்டமை யானே தலைவியைப் பெறாது வறிதே மீண்ட தலைவன், மறுநா ளிரவு மனைப்படப்பையருகே வந்துநின்றதனை உணர்ந்த தோழி, கூறியது.

(உ) இரவுக்குறி நேர்ந்ததுமாம். அஃதாவது, பகற்குறியின்கண் வந்தொழுகுந் தலைவனை 'இனிப் பகலிலே வாரற்க; இரவில் வருக' என்று குறிப்பால் உணர்த்தியதுமாம்.

இதன்கண், 'தோழி, இவ்வூரிலுள்ளோர் எல்லாரும் இரவின்கண் உறங்கி விடுகின்றனர்; நாம் மட்டுமே உறங்காது கிடக்கின்றேம்; மேலும் மனையயலே உள்ள நொச்சிப்பூ உதிர்ந்து வீழும் சிறிய ஒலியையும் ஓர்ந்து கேளாநின்றேம்', என்று கூறுகின்றாள்.

கரு அ. கொன்னூர் துஞ்சினும் யாந்துஞ் சலமே
எம்மி லயல தேழி லும்பர்
மயிலடி யிலைய மாக்குர னொச்சி
அணிமிகு மென்கொம் பூழ்த்த
மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே.
—கொல்லன் அழிசி.

(இ - ள்.) எம் இல் அயலது ஏழில் உம்பர் மயில் அடி இலைய மா குரல் நொச்சி - எம்முடைய இல்லத்தின் பக்கத்துள்ள ஏழிலைப்பாலை மரத்திற்கும் அப்பால் மயிலினது அடியைப் போன்ற இலைகளையுடைய கரிய பூங்கொத்துக்களையுடைய நொச்சியினது, அணி மிகு மென்கொம்பு ஊழ்த்த - அழகு

மிக்க மெல்லிய கொம்புகளிடத்தே மலர்ந்த, மணிமருள் பூவின்- நீலமணிபோன்ற நிறமுடைய மலர்களின் உதிர்வாலுண்டாகும், பாடுஎனி கேட்டு - ஓசையைத் தானும் மிகவும் கேட்டு, கொன்

ஊர் துஞ்சினும் யாந் துஞ்சலம் -இப் பெரிய ஊரார் எல்லாரும் உறங்கும் நடுயாமத்தினும் யாங்கள் உறங்காதிராநின்றேம்.

**விளக்கம்**:—தலைவன் "உங்கள் இல்லின் அயலதாகிய ஏழிலைப் பாலைக்கு அப்பாலுள்ள நொச்சியிடத்தே இன்றிரவின்கண் வந்து ஓசையுண்டாக்குவேன், அது கேட்டவுடன் நீயிர் அவண் வருக" என்று கூறிச் சென்றவன், யாதாமொரு காரணத்தால் அவ்விடத்தே சென்று அக்குறிசெய்யத் தவறினன். அல்லது பிறிதோரிடத்தே சென்று குறிசெய்து தலைவியைப் பெறாது வறிதே மீண்டானாக, அன்றிரவு முழுதும் அவ்வோசையை எதிர்பார்த்து உறங்காது வருந்திய தோழியும், தலைவியும் வருந்தினராகக் குறிபிழைத்தமை தங்கள் பிழைப்பன்று என்பதைத் தலைவனுக்கு உணர்த்தும் பொருட்டுத் தோழி இங்ஙனம் கூறினள் என்க. ஏழில் என்பதனை ஏழின் மலையின் உச்சி என்பாருமுளர். மலையுச்சியின்கண் நொச்சிப்பூ வுதிரும் ஒலியை இல்லில் இருப்போர் கேட்டல் இயலாதாகலானும், இரவுக்குறியிடம் மனைப்படப்பை அகத்ததாகலானும் ஏழிலைப்பாலை என்பதே பொருந்தும் என்க. உம்பர் - அப்பால். ஏழிலும்பர் நொச்சியிருக்கும் சூழலே இரவுக்குறியிடமாகத் துணிந்தமைபற்றி அவ்விடத்தைக் கூறினள். நொச்சிப்பூ வுதிரும் ஓசையையும் கேட்டேம் என்றது, மிக நுணுகிய ஓசையையும் விழிப்புடன் கேட்டிருந்தேம் எனத் தங்கள் பிழைப் பின்மை தெரித்தவாறென்க. மயிலின் அடியின்கண் அமைந்த விரல் களும், உள்ளங்காலும் போன்றமைந்த இலைகளையுடைய நொசசி என்க நொச்சிப்பூங் கொத்தும் மலரும் கருநிறமுடைமையால் மாக் குரல் என்றும் மணிமருள் பூ என்றும் ஓதினள் மணி - நீலமணி. ஊழ்த்த - மலர்ந்த. பாடு - ஓசை. பூவின் பாடு - பூவுதிர்தலான் உண்டாகும் ஓசை.

நெருநல் இரவு, குறிபிழைத்தது நின் தவறன்றி எங்கள் தவறில்லை என்பது கருத்து. இரண்டாவது துறைக்கு, இப்பகற்குறி இடையூறு பலவுடைத்து, நினது பிரிவானே யாங்களும் உறங்காது வருந்திக் கிடக்கின்றேம்; ஆதலின, இரவின்கண் மாக்குரல் நொச்சியின்பால் வந்து ஓசையுண்டாக்குக என்று குறிப்பாற் கூறியதாகக் கொள்க. கொன்னூர் - பெரிய ஊர். ஊர் துஞ்சினும் யாந் துஞ்சலமே என்றது, நள்ளியாமத்தினும் துஞ்சேம் என்றவாறு.

## பாட்டு - கஙக : தோழி கூற்று

துறை :—வாயில்வேண்டிப் புக்க தலைமகற்குத் தோழி வாயில மறுத்தது. அஃதாவது, தனது பரத்தமையால் ஊடியிருந்த தலைவியின் ஊடல் தீர்தது, அவளைக் கூடும்பொருட்டு அதற்குத் துணை செய்யுமாறு தோழியை வேண்டிய தலைவனுக்கு அவள் அதற்குடன்படாது கூறியது.



இதன்கண், 'தலைவ! நீ அடாது செய்கின்றனை; நின்னை இவ்வூரவர் பழிதூற்றுகின்றனர்; நின் வருகை எங்களை நாணும்படி செய்கின்றது; இப்பழியோடே நீ இவ்வில்லிற்கு வாராதொழி,' என்று தோழி கூறுகின்றாள்.

கரு௲. மனையுறை கோழிக் குறுங்காற் பேடை
வேலி வெருகின மாலை யுற்றெனப்
புகுமிட னறியாது தொகுபுடன் குழீஇய
பைதற் பிள்ளைக் கிளைபயிர்ந் தாஅங்
கின்னா திசைக்கும் அம்பலோடு
வாரல் வாழிய ரையவெந் தெருவே.

—ஒக்கூர் மாசாத்தியார்.

(இ - ள்.) ஐய - பெருமானே! மனையுறை கோழிக் குறுங்காற் பேடை - வீட்டின்கண் தங்கும் இயல்புடைய கோழியினது குறிய காலையுடைய பெடை, மாலை வெருகு இனம் வேலி யுற்றென - மாலைப்பொழுதின்கண் காட்டுப்பூனைகளின் கூட்டம் தன்னையும் குஞ்சுகளையும் இரையாகப் பற்றும் பொருட்டு வேலியின் அருகே வந்ததாக, புகுமிடன் அறியாது தொகுபு உடன் குழீஇய - அதற்கு அகப்படாது புகுந்து தப்புதற்குரிய இடத்தை அறியாமல் சேர்ந்து ஒருங்கே கூடிய பொருட்டு, பைதல் பிள்ளைக்கிளை பயிர்ந்தாங்கு - துன்பத்தையுடைய குஞ்சினத்தை அழைக்கும் ஓசைபோன்று, இன்னாது இசைக்கும் அம்பலோடு - செவிக்கின்னாதாகத் தூற்றப்படும் பழிச்சொல்லோடே, எம் தெரு வாரல் - எமது தெருவிடத்தே வாராதே கொள், வாழியர் - நீ வாழ்வாயாக.

**விளக்கம்:**—காட்டுக் கோழியும் உண்மையால், மனையுறை கோழி என்றாள். மனையுறை கோழி, காட்டுப் பூனையின் வருகையை அறிவித்துக் கூவும் ஓசை அக் குஞ்சுகட்கு இன்னாதாவது போன்று, இத் தெருவிலுள்ளோர் நின் வருகையை எமக்கு அறிவிக்கக் கூறுஞ்சொல், எமக்கு இன்னாதாகின்றது. ஆதலானே வாரல் என்றவாறும். குஞ்சுகளை வஞ்சனையாற் கொள்ள வேலியின் மறைந்துவரும் காட்டுப் பூனைபோல, நீயும் தலைவியை வஞ்சித்துக் கொள்ள நல்லன்போன்று நடித்து அந்நன்மையுள் மறைந்து வருகின்றாய் என்றாள் என்க.

வெருகு - காட்டுப்பூனை. தலைவன் பாணரும், இளைஞரும் சூழ வருகின்றானாகலின் வெருகினம் என்றாள். காட்டுப் பூனையின் வரவு கேட்டுக் குஞ்சு துன்புறுதல் போல, நின் வரவு கேட்டு நின்பழிக்கு யாங்கள் வருந்தாநின்றேம் ஆதலின் வாரற்க என்றாள் என்க.

அம்பல் - உதோ நின் தலைவர் வருகின்றார் என்று ஊரவர் தமக்குக் கூறுஞ் சொல். அவர் நின் தலைவர் என்புழி நின் தலைவரல்லாத பரத்தர் என்னும் பொருள்பட மொழிகின்றாராகலின், அதனை நாணு

# மூலமும் உரையும்

**உ0கூ**

நின்றேம் என்றாள் என்க. இனிப் பரத்தையர் கூறும் பழிக்கு நாணு நின்றேம் என்றாள் என்பாருமுளர். அங்ஙனம் கூறின் பரத்தையரை மனையுறை கோழி என்றல் முதலியன பொருந்தாமை யுணர்க. அம்ப லொடு வருதல் - பழிபட வருதல். புகழின்றித் தோன்றலிற் றோன் றாமை நன்றென்பாள், 'அம்பலொடு வாரல்' என்றாள். ஐய என்னும் விளி, ஏதிலான் என்பதுபட நின்றது. எந்தெரு என்றது, நின் தெரு பரத்தையர் தெரு ஆண்டுச்செல் என்பதுபட நின்றது.

## பாட்டு - கசுo : தலைவி கூற்று

துறை:—பொருள்வயிற் பிரிந்த விடத்து, 'நீ ஆற்று கின்றிலை' என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது. அஃ தாவது, தலைவன் பொருளீட்டப் பிரிந்தானாக, ஆற்றியிருக்க வேண்டிய தலைவி ஆற்றாளாயினமை கண்டு, 'நீ ஆற்றாததென்?' என வினவிய தோழிக்குத் தலைவி கூறியது

இதன்கண், 'இப்போது கொடிய பாலைநிலவழியே தலைவர் என்னைப் பிரிந்து சென்றனர்: யான் வலியழிந்து இவ்விடத்தே ஆற்றொணாத் துன்பத்தை அகத்தே அடக்கிக் கிடக்கின்றேன்; என் துன்பத்தை இவ்வூர் எப்படியோ அறிந்துகொண்டது' என்று தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

கசம. வேதின வெரிநின் ஓதிமுது போத்து
ஆறுசெல் மாக்கள் புட்கொளப்
பொருந்தும்
சுரனே சென்றனர் காதலர் உரனழிந்து
ஈங்கியான் தாங்கிய எவ்வம்
யாங்கறிந் தன்றிவ் வழுங்க லூரே.

—அள்ளூர் நன்முல்லையார்.

(இ - ள்.) காதலர் - தலைவர், வேதினம் வெரிநின் - ஈர்
வாள் போன்ற முதுகையுடைய, ஓதி முது போத்து - முதிய ஆண் ஓந்தி, ஆறு செல் மாக்கள் புள்கொளப் பொருந்தும் - வழிச் செல்லும் மனிதர்கள் நன்னிமித்தமாகக் கொள்ளும்படி அவ்வழிக்கண்ணே தங்காநின்ற, சுரனே சென்றனர் - பாலை
நிலத்தே சென்றனர், ஈங்கு யான் உரன் அழிந்து தாங்கிய எவ்வம் - இவ்விடத்தே யான் அவருடைய பிரிவானே வலி
மிழந்து மேற்கொண்டுள்ள துன்பத்தைமட்டும், இவ்வழுங்கல் ஊர் - இரக்கத்தையுடைய இவ்வூரிலுள்ளோர், யாங்கு அறிந்தன்று - எவ்வாறு அறிந்து கொண்டனரோ அறிகிலேன்.

விளக்கம் :—வேதினம் - ஈர்வாள். (பிங்கல-கஙஉக.) அஃதாவது ரம்பம்' என்று இக்காலத்தாரால் வழங்கப்படும் கருவி. ஈர்வாளின் வாய்போன்று முட்களமைந்த முதுகையுடைய ஓந்தி என்க. ஓந்தி,

ஓதி என இடைகுறைந்து நின்றது. முதுபோத்தோதி எனமாறுக. போத்தோந்தி - ஆண் ஓந்தி. ஆறுசெல்வோர்க்கு எதிரே ஓந்தி வலமாதல் நன்னிமித்தம் என்று நிமித்த நூலோர் கூறுப. அறிவுடையோர் வருவன வரும், வாராதன வாரா என்றுணர்ந்து நிமித்தம் பாரார் ஆகலின், 'மாக்கள் புட்கொளப் பொருந்தும்' என்றாள். ஆறுசெல் மாக்கள் - வழிப்போவார். புள் - நிமித்தம். ஓந்தி ஆறு செல்வோர்க்கு நன்னிமித்தம் கொள்ளுமாறு வழியிற் சென்று பொருந்தும் என்றது, தலைவர் பிரியுங்கால் செலவழுங்குவியாது அவர் பிரிதற்கு இயைந் தொழுகினை என உள்ளுறையானே தோழியை இடித்துரைத்தவாறு.

சுரன் - பாலைநிலம். உரன் - வலி. ஈங்கு என்றது, அவரையின்றித் தனித்துறைதற்குரிய இவ்வின்னலிருக்கையில் என்பதுபட நின்றது. யான் தாங்கிய - என்னால் மேற்கொள்ளப்பட்ட. எவ்வம் - துன்பம். அழுங்கலூர்-இரங்குதலையுடைய ஊர். தோழியை எதிரதாக் காவாது, இப்போது என்னிலைக்கு இரங்குதல் பேதைமை என்பாள், ஊர் மேலிட்டு 'அழுங்கல் ஊர்' என்றாள். 'தலைவர் சென்றால் இங்ஙனம் ஆகும் என்று முன்னமே அறிந்து ஆவன செய்யாத ஊர், இப்பொழுதும் அறியாதாயின் நன்று,' என்பாள், 'யாங்கு அறிந்தன்று,' என்றாள்.

எனவே, தலைவர் பிரியுங்கால் அறிந்து செலவழுங்குவியாது இப்போது என்னை ஆற்ற முயல்வதால் யாதுபயன் எனத் தலைவி தோழியைக் கடிந்தவாறுணாக.

## பாட்டு - கசுக : தலைவி கூற்று

துறை :— இற்செறிக்கப் பட்டுழி இரவுக்குறி வந்தொழுகும் தலைமகற்கு வரும் ஏதம் அஞ்சிப் பகற்குறி நேர்ந்த வாய் பாட்டான் அது(வு) மறுத்துச் சிறைப்புறமாகத் தோழிக்குத் தலைமகள் சொல்லியது. அஃதாவது, தலைவியை வீட்டின்

புறம் போகாது தமர் காவல்செய்கின்ற காலத்தே இரவுக்குறி யிடத்தே தலைவன் வந்தொழுகுவானாக, அவன் இருளில் ஏதமிக்கவழியில் வரும்போது விலங்கு முதலியவற்றால் அவனுக்குத் தீங்கு நேரினும் நேரும் என்றஞ்சிய தலைவி, தலைவன் தன் மனையயலே இரவில் வந்துநிற்றலை அறிந்து, இரவுக்குறி மறுத்துப் பகலின்கண் வருமாறு குறிப்பாலே தோழிக்குக் கூறுவாளாய் அவன் கேட்பக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'நம் அன்னை தினைப்புனத்தே கிளிகடியும் பொருட்டுச் செல்லுதிர்' எனக் கட்டளை யிட்டுள்ளாள் என்றும், 'அஞ்சத்தகுந்த இவ்விடையாமத்தே இனி வாரற்க' என்றும், 'நீ தலைவர்க்குச் சொல்லின் அது குற்றமோ?' என்றும் கூறுகின்றாள்.

கசக. வளைவாய்ச் சிறுகிளி விளைதினைக் கடீஇயர்
செல்கென் றோளே அன்னை எனநீ





சொல்லின் எவனோ தோழி கொல்லை
நெடுங்கை வன்மான் கடும்பகை யுழந்த
குறுங்கை யிரும்புலிக் கோள்வல் ஏற்றை பைங்கட்
செந்நாய் படுபதம் பார்க்கும்
ஆரிரு ணடுநாள் வருதி
சாரல் நாட வாரலோ எனவே.

—மதுரைப் பெருங்கொல்லனுர்.

(இ - ள்.) தோழி—, வளைவாய்ச் சிறுகிளி விளைதினைக் கடிஇயர் - வளைந்த அலகினையுடைய சிறிய கிளிகள் விளைந்து முதிர்ந்த தினையின்கண் வீழாதபடி கடியும் பொருட்டு, அன்னை செல்க என்றோள் என - எம் மன்னை நீவிர் செல்வீராக என்று கூறியுள்ளாள் என்றும், கொல்லை - புனத்தின்கண் உள்ள, நெடுங்கை வன்மான் கடும்பகை உழந்த - நெடிய கையையுடைய வல்விலங்காகிய யானையினது கடிய பகையினாலே வருந்திய, குறுங்கை இரும்புலிக் கோள்வல் ஏற்றை - குறிய கையை யுடைய கொல்லுதல் வல்ல பெரிய ஆண்புலி, பைங்கண் செந் நாய் படுபதம் பார்க்கும் - பசிய கண்ணையுடைய செந்நாய் தனக்கு இரையாக அகப்படும் செவ்வியை ஆராயாநின்ற, ஆர் இருள் நடுநாள் வருதி - வருதற்கரிய ஏதமுடைய இருள்செறிந்த இடையிரவின்கண்ணே நீ வாராநின்றனை ஆகலின், நின் வருகையை யாங்கள் அஞ்சுகின்றேம், சாரல் நாட - மலைச்சாரலை யுடைய நாட்டையுடையோனே, வாரல் என - இங்ஙனம் இரவின் கண் வருதலைத் தவிர்க எனவும், நீ சொல்லின் எவன் - நீ தலைவனுக்கு எடுத்துக் கூறினால் அதனால் வரும குற்றம் யாது.

விளக்கம்:—வளைவாய் : வினைத்தொகை. கதிர் விளைந்து

முதிர்ந்த தினை என்பாள், விளைதினை என்றாள். கடீஇயர் - கடியும் பொருட்டு. அன்னை நம்மைத் தினையின்கட் படியும் கிளிகடியும் பொருட்டு நாளை செல்க என்றாளன்றே, அச் செய்தியை நீ சொல்லின் எவன் என்க. இது தினையிற் கிளிகடிதற்குப் புனத்திற்கு யாங்கள் வருவேமாகலின், ஏதமற்ற பகற்குறியிடத்தும் நாங்காணலாம். ஆதலிற் பகலில் வருக என்பதை உணர்த்துக என்றவாறு. இரவுக்குறி மறுக்க எண்ணியவள் முன்னர்ப் பகற்குறி நேர்ந்தாள் என்க.

நெடுங்கை வன் மான் - யானை. யானையைப் புலி எளிதில் வெல்ல

மாட்டாமையும், ஒரோவழித் தோல்வியடைதலும் உண்மையின் நெடுங்கைவன்மான் கடும்பகை என்றாள். கடும்பகைக்கண் அகப்பட்டு வருந்திய புலி என்பாள், 'கடும்பகை யுழந்த புலி' என்றாள். இது புலி சினங்கொண்டிருத்தற்கு ஏதுக் கூறியவாறு. இனி எண் பகையாகிய செந்நாயைப் படுபதம் பார்க்கும் என்றது, அத்தகைய புலிக்கு அவ வழி வருவோர் தப்புதல் அரிதென்றவாறு.



ஆர் இருள் - வழிகண்டு செல்லற்கரிய பேரிருள். நடுநாள் வரு, என்றது, நினக்குப் புலி முதலியவற்றால் ஏதம் உண்டாதற்கு யாங்க அஞ்சுகின்றோம் என்று குறிப்பாற் கூறியபடியாம்.

வாரல் - வருதலைத் தவிர், எனவும், சொல்லின் எவனோ எனவு என்க. ஈரிடத்தும் உம்மை விகாரத்தாற்றொக்கன.

'பொழுதும் ஆறும் புரைவதன்மையின் அழிவுதலைவந்த சிந்தை கண் தலைவி கூறியது' (தொல். களவு. உக.) என்பர், இளம்பூரண

அடிகள்.

கூற்று

துறை :—(க) இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்கு
தலைமகன் சொல்லியது. அஃதாவது பாலதாணையாற் றலை
யைப் பூம்பொழிலிடத்தே கண்டு களவிற் புணர்ந்து நீங்கு
தலைவன், 'என் உள்ளத்தின் தன்மையை அவள் உணர்
தனளோ ? இலளோ' எனத் தனக்குட் சொல்லியது,

(உ) தோழிக்குத் தலைமகன் தன்குறை கூறியதூஉமாப்
அஃதாவது, தலைவியைப் பெறுதற்குத் தோழியின்பாற் குறை
யிரக்கும் தலைவன் தன்னிலையை அவட்குக் கூறியது எனினு
பொருந்தும்.

இதன்கண், தலைவன், தலைவி தன்பால் என் நெஞ்ச
உறைவதனை உணர்ந்தனளோ இலளோ என்று கூறுகின்றான்.

கசஉ. சுனைப்பூக் குற்றுத் தொடலை தைஇப்
புனக்கிளி கடியும் பூங்கட் பேதை
தானறிந் தனளோ இலளோ பானாட்
பள்ளி யானையி னுயிர்த்தென்
உள்ளம் பின்னுந் தன்னுழை யதுவே

—கபில

(இ - ள்.) சுனைப்பூக்குற்றுத் தொடலை தைஇ - சுனையிலே கண் மலர்ந்த பூக்களைப் பறித்துத் தொடையல் புனைந்து, புன கிளி கடியும் பூங்கண்பேதை - தினைப்புனத்தின் கண்ணே பய யும் கிளிகளையும் கடியாநின்ற தாமரை மலர்போலும் கண்ணை யுடைய அத்தலைவி, பானாள் - நடு இரவின் கண்ணும், பள்ள யானையின் உயிர்த்து - படுக்கைகொண்ட யானை பெருமூச்செறி

மாறு மூச்செறிந்து, என் உள்ளம் பின்னும் தன்னுழையது என் நெஞ்சம் மீண்டும் அவளிடத்தே நிற்குமதனை, தான் அறி தனளோ இலளோ-அவள் உணர்ந்துகொண்டாளோ அல்லளே அறிகிலேன்.

# மூலமும் உரையும்

உ0எ

விளக்கம் :— சுனைப்பூ - நீல முதலியன. குற்று - பறித்து. தொடலை ஒருவகை மாலை. இதனை இக்காலத்தே தொடைமாலை என் பர். தைஇ - புனைந்து. குற்றும் தைஇயும் என உம்மை விரிப்பினு மாம். புனக்கிளி - புனத்தின்கட்படியும் கிளி என்க. கடிதல் - தட்டை கவண் முதலிய கருவிகளால் ஓட்டுதல். பூ, ஈண்டுத் தாமரைப்பூ. இங்ஙனம் விளையாட்டுத் தன்மையுடைய சிறுமியாகலின், என்னிலையை ஊகித்துணர்வாளோ மாட்டாளோ? என்றவாறு.

பின்னும் என்றது, அவளை முன்னர்ப் பொழிலிடத்தே கண்ட பொழுது என்னெஞ்சம் என்வழி நில்லாது, அவளுழைச் சென்று நின்றது; அவளைக் கூடிப் பிரிந்த பின்னரும் அஃது என்னுழை நில்லாது என்று இரங்கியவாறு. ஊர் துஞ்சும நடு இரவினும் யான் துஞ்சுகின்றிலேன் என்பான், 'பானாள்' என்றான். பள்ளியானை - படுக்கை கொண்டயானை. படுக்கை கொண்டயானை பேருயிர்ப்புடைத் தாதல் இயல்பு.

'பின்னுந் தன்னுழையதுவே' என்றும் பாடம்; இப்பாடத்திற்கு என்னெஞ்சம் அவளது பின்னலிடத்தது என்று பொருள் கூறுக. என்னிலை யறிவாளாயின் எனக்கு இயைய நடந்து இன்புறுத்துவள். இன்றேல் யான் என் செய்வேன்! எனத் தன்னுள் இரங்கினான் என்க.
இனித் தோழிக்குக் கூறியதாகக் கொள்ளுமிடத்து, 'என்னிலை இன்னது; நீ தலைவியை என்பாற் சேர்த்து எனனை அருளுக' என்று இரந்தானாகக் கொள்க.

## பாட்டு - கசரு : தோழி கூற்று

துறை :—வரைவிடைவைத்துப் பிரிந்த விடத்துத் தலை
மகட்குத் தோழி கூறியது அஃதாவது, தலைவன் வரைந்து கோடற்கு வேண்டிய பொருளீட்டுதற்குப் பிரிந்தானாக, அப் பிரிவினைப் பொறாது வருந்திய தலைவியைத் தோழி ஆற்று வித்தது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'நந்தலைவர் நம்மைப் போன்றே பெரிதும் ஆற்றுமையுடையர்; மேலும், பழியை அஞ்சும் இயல்புடையர்; ஆகலின், விரைவில் வந்துவிடுவர்; நீ அவர் வருந்துணையும் ஆற்றியிரு,' என்று கூறுகிறாள்.

கசரு. அழிய லாயிழை அழிபு பெரிதுடையன்

பழியும் அஞ்சும் பயமலை நாடன்
நில்லா மையே நிலையிற் றாகலின்
நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சிற்
கடப்பாட் டாள னுடைப்பொருள்

போலத்

தங்குதற் குரிய தன்றுநின்
அங்கலுழ் மேனிப் பாய பசப்பே.

—மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார். ௨௦௮

குறுந்தொகை

(இ - ள்.) நில்லாமையே நிலையிற்று ஆகலின் - எப்பொருளும் நிலையுதலின்றி அழிதலே இவ்வுலகத்தே நிலைபெற்றது ஆதலாலே, நல் இசை வேட்ட நயன் உடை நெஞ்சின் கடப்பாட்டாளன் - என்றும் பொன்றாது நின்று நிலவும் நன்றாகிய புகழைவிரும்பின நன்மையுடையநெஞ்சினையுடைய ஒப்புரவுமேற் கொண்ட ஒருவன் பெற்றுள்ள, உடைப்பொருள் போல-உரிமையுடைய செல்வத்தைப் போன்று, தங்குதற்கு உரித்தன்று-தங்கும்உரிமையுடையதன்று, நின் அம்கலுழ் மேனிப்பாயபசப்பு-நின்னுடைய அழகு ஒழுகும் மேனியின்கண் பரவிய பசலை நோய் அஃதெற்றாலெனின்? பயமலை நாடன் அழிபு பெரிதுடையன்-பயன் கெழுமிய மலைநாட்டையுடைய நந்தலைவர் பிரிவானே நின்னினும காட்டில் பெரிதும் அழிகின்ற தன்மையர், பழியும் அஞ்சும் - மேலும் தனக்குப பழிவருதலைப் பெரிதும் அஞ்சுப வர் ஆகலான் விரைவின் மீள்வர், ஆயிழை ஆதலின்-ஆராய்ந்த அணிகலன்களையுடையோய் நீ, அழியல் - வருந்தாதேகொள.

**விளக்கம்**:—பிரிவினால் நீ வருந்துவதினும் காட்டில் நந்தலைவர் பெரிதும் வருந்தும் இயல்பினர் என்பாள், '**அழிபு பெரிதுடையன்**' என்றாள். மேலும் தமது பிரிவாலே பெண்பாலாகிய நீ இறந்துபடு வாயோ, அங்ஙனம் ஆயின் தனக்கு வரும் பழி பெரிதென அஞ்சும் இயல்புடையர் என்பாள் 'பழியும் அஞ்சும்' என்றாள். இவ்விரு ஏதுக் களானும் 'தலைவர் காலநீட்டியாது வந்து விடுவா; நீ அழியற்க' என்று தேற்றினாள் என்க.

அழியல்-வருந்தாதே. ஆயிழை - ஆராய்ந்த அணிகலன்களையுடை யாய். **ஆயிழை**: அன்மொழித் தொகை, விளியேற்று நின்றது. அழிபு- வருத்தம். பயம் - பயன். பயமலை நாடன் என்றது, அவன் நினக்கு அருள் செய்து பயன் படுவன் என்னும் குறிப்புடையது.

நல்லிசை, ஈகையால் உண்டாகும் புகழ்.

பற்பல துறையினும்
புகழ் உண்டாயினும், ஈதலால எய்தும் புகழே சிறந்ததாகலின் அதனை நல்லிசை என்றாள்; திருவள்ளுவனாரும்,

"ஈத லிசைபட வாழ்தல் அதுவல்ல

ஊதிய மில்லை உயிர்க்கு" (குறள். உ௩௧.)

என்று, புகழுண்டாக்கும் காரணங்கள் பலவற்றுள்ளும் ஈதலே சிறந்த தென்பதனை உணர்த்தினாராதலாலும், மேலும், அப்புகழ் ஒன்றே நிலை யுதலில்லா வுலகத்தே நிலைத்து நிற்கும் பெருமையுடைய தென்பார்,

"ஒன்றா வுலகத்து உயர்ந்த புகழல்லாற்

பொன்றாது நிற்பதொன் றில்" (குறள்

உ௩௩.)

என ஓதுதலாலும் உணர்க.

பொன்றுது நிற்கும் புகழ்வேட்கும் உள்ளமாதலின், 'நயனுடை நெஞ்சின்' என்றாள். கடப்பாடு - ஒப்புரவு. இது கைம்மாறு கருதாது செய்யும் உதவி. "கைம்மாறு வேண்டா கடப்பாடு" என்றார் வள்ளுவ

## மூலமும் உரையும்

உ0கூ

)ரும். நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சினன் எல்லோர்க்கும் ள்ளி உள்ளி உவந்தீயும் தொழிலுடையனுகலின், அவனுடைய பொருள் அவன்பாற் றங்குதல் இலதாயிற்று. கடப்பாட்டாளன் கைப் பொருள் தங்காது போதல் போல உன்னுடைய பசலையும் தலைவர் 'ரைவில் வருவராகலின் தங்காதுபோம் என்று விரித்துக் கொள்க.

அங்கலுழ் மேனி - அழகொழுகும் மேனி. அங்கலுழ் மேனிப் ாய பசப்புத் தங்காது எனவே, அவ்வங்கலுழ் மேனியை நீ விரைவில் ய்துவை என்று உணர்த்தியவாறுதலறிக.

தங்குதற்குரிய தன்றென்றது, போதற்குரியது என்னும் பொருள் பந்து நின்றது.

## பாட்டு - கசச : செவிலித்தாய் கூற்று

துறை :—மகட்போக்கிய செவிலித் தாய் சொல்லியது. அஃ ாவது களவு மணத்தாற் கற்புக் கடம்பூண்ட தலைவி, தமரறியா ற் றலைவனோடு சென்று விட்டாளாக, அவளை நினைந்து செவிலி ருநதிக் கூறியது.

இதன்கண், 'அந்தோ! என்மகள் மலர்
கொய்தும்,

_லாடியும், ஆயமகளிரோடே விளையாடுதலையும் வெறுத்து
ந தலைவனோடே வெம்பரல்கள் தன் மெல்லடிகளை வருத்தும்
ட போயினளே!' என்று தன்னுட் செவிலித்தாய் நொந்துரைக்
ன்றாள்.

கசச. கழிய காவி குற்றும் கடல
வெண்டலைப் புணரி யாடியும் நன்றே
பிரிவி லாய முரியதோன் றயர
இவ்வழிப் படுதலும் ஒல்லாள் அவ்வழிப்
பரல்பாழ் படுப்பச் சென்றனள் மாதோ
சென்மழை தவழும் சென்னி
விண்ணுயர் பிறங்கல் விலங்குமலை
நாட்டே.

—மதுரை ஆசிரியர் கோடன் கொற்றனார்.

(இ - ள்.) கழிய காவி குற்றும் - கழியின்கண் மலர்ந்த
நக்குவளைமலர்களைப் பறித்தும், கடல வெண்தலைப் புணரி
டியும்-கடலின்கண் எழும் வெள்ளிய தலையையுடைய அலை
ன்கண் விளையாடியும், பிரிவு இல் ஆயம் உரியது நன்று ஒன்று
பர - தன்னோடே என்றும் பிரிதலில்லாத ஆயமகளிர் தத்
க்குரிய நன்றாகியதொரு விளையாட்டை அயரா நிற்ப, இவ்
ிப் படுதலும் ஒல்லாள் - இவ்விடத்தே பொருந்துதலும்
_ம்படாளாய், அவ்வழி - அக்கொடிய பாலைநில வழியிலே,

பரல் பாழ்படுப்பச் சென்றனள் - பருக்கைக்கற்கள் தன் அடியைச் சிதைக்கும்படி போயினள், செல் மழை தவழும் சென்னி விண் உயர் பிறங்கல் விலங்கு மலை நாட்டு-விசும்பின்கட் செல்லாநின்ற முகில்கள் தவழ்தற்கிடமான உச்சியையுடைய வானத்தை யளாவ வுயர்ந்த விளக்கமுடைய குறுக்கிட்டுக்கிடக்கும் மலைகள் மிக்க நாட்டிடத்தே.

விளக்கம் :—கழி - கடலருகிலுள்ள நீரோடை. கழிய - கழியின் கண்ணுள்ள. காவி - கருங்குவளை; செங்கழுநீருமாம். குற்றும்-பறித்தும். கடல - கடலின் கண்ணவாகிய. அலைகள் உயருங்கால் அவற்றின் தலை துளிகளானே வெள்ளிதாய்த் தோன்றுதலின், 'வெண்டலை' எனப்பட்டது. புணரி - அலை. ஆயம் - விளையாட்டுமகளிர். இவர்கள் தலைவியைப் பிரியாது எப்பொழுதும் அவளோடே ஆட்டயாவாராகலின், 'பிரிவில் ஆயம்' என்றாள். பிரிவில் ஆயம் என்றது, பிரியவொண்ணாத ஆயத்தையும் அவள் பிரிந்து போயினமை குறித்து நின்றது. உரியது நன்று ஒன்று அயர என இயைத்துக் கொள்க. இவ்வழி, விளையாட்டு அயரும் இவ்வழி என்க. அவ்வழி என்றது, அக்கொடிய பாலைநில வழி என்பதுபட நின்றது. பரல் - பருக்கைக் கற்கள். பாழ்படுப்ப என்றது, அவள் மெல்லிய அடியின் அழகினை அழிக்க என்றவாறு. மழைதவழும் இம்மலைநாட்டின்கண் வேறு நல்ல வழியினும் செல்லாது பாலைவழிப் பரல் பாழபடுப்பச் சென்றாள் என்று இரங்கியவாறு.

## பாட்டு - கசரு : தலைவி கூற்று

துறை:—வரைவிடை யாற்றாது தோழிக்குத் தலைமகள் சொல்லியது. அஃதாவது, களவுமணம் நிகழ்ந்த பின்னர் வரைந்து கோடற்பொருட்டுப் பொருளீட்டச் சென்ற தலைவன் காலம் நீட்டித்தானாக, அப்பிரிவினை ஆற்றாது வருந்திய தலைவி தோழிக்குத் தன் ஆற்றாமையை உணர்த்தியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'இவ்வூர் இனி யாம் இனிதிருந்து வாழ்தற்குத் தகுதியுடையதன்று. அஃதெற்றாலெனின், தலைவனுடைய பிரிவாலே பெரிதும் துன்புற்று வருந்தும் என்னை உசாவித் தேற்றுதற்கு நினையாது, உறங்குகின்ற மக்களும், நீண்ட இரவும் உடைத்து ஆகலான்' என்று கூறுகின்றாள்.

கசரு. உறைபதி யன்றித் துறைகெழு சிறுகுடி
கானலஞ் சேர்ப்பன் கொடுமை எற்றி
ஆனாத் துயரமொடு வருந்திப் பானாள்
துஞ்சா துறைநரொ டுசாவாத்
துயிற்கண் மாக்களொடு நெட்டிரா
வுடைத்தே

—கொல்லனழிசியார்.

(இ - ள்.) இத் துறை கெழு சிறுகுடி-கடற்றுறை பொருந்திய இச் சிற்றூர், உறைபதி அன்று - இனி யாம் தங்கியிருத்தற்குத் தகுந்த ஊர் அன்று; அஃதெற்றாலெனின், கானலம் சேர்ப்பன் கொடுமை எற்றி - கடற்கரைச் சோலையினையுடைய தலைவனது பிரிவுக்கொடுமையை நினைந்து, ஆனாத் துயரமொடு வருந்தி - அமையாத துன்பத்தோடே வருத்தமுற்று, பானாள் துஞ்சாது உறைநரொடு உசாவா - நடுஇரவினும் துயிலாது கிடப்பவரை நீயிர் என்னுற்றனிர் என்று வினவியறிதலும் செய்யாமல், துயில்கண் மாக்களொடு நெட்டிராவுடைத்து - உறங்குகின்ற கண்களையுடைய அறிவில்லாரோடு நெடிய இராக்காலத்தையும் இவ்வூர் உடையதாகலான்.

**விளக்கம்:**—உறைபதி-தன்கண் வாழ்வார் இன்புற்று வாழ்தற்குத் தகுந்த ஊர். கடல் அலையும், தன் காம நோயை மிகுதிப்படுத்தலின் துறை கெழு சிறுகுடி என்றமையானும் ஓசோதக் கூறியவாறுணர்க. பிறர் வருத்தம் நோக்காது துயில்வோர் உறைகுடியாகலின் சிறுகுடி என்றது, பண்பற்றகுடி என்னும் ஒருபொருளும் தோன்ற நின்றது. கானலம் சேர்ப்பன் - நெய்தனிலத்தலைவன். கொடுமை-பிரிவு நீட்டித்தல். எற்று - நினைவு, உரிச்சொல். "எற்றம் நினைவும் துணிவுமாகும்" (உரி-௬௬) என்பது தொல்காப்பியம். இனி, எற்றி என்பதை, எற்றல் என்னும் வினைச் சொல்லடியாகப் பிறந்த எச்சமாகவே கொண்டு, கொடுமை எற்ற எனச் செயவெனெச்சமாகத் திரித்து ஏதுவாக்கலுமாம்.

ஆனு - அமையாத. பானுளும் - என்னற் பாலதாகிய சிறப்பும்மை செய்யுள் விகாரத்தாற் ரெக்கது. கழுதும் கண்ணுறங்கும் பானுளினும் உறங்காதுறைவோர் என்றவாறு. உசாவுதல் - வருத்தமுற்ரேரை அண்மி அவ் வருத்தத்திற்குக் காரணம் வினவித் தேற்றுதல். பிறர் வருத்தம் நோக்காது இனிதே உறஙகுவார் ஆகலின், கண்ணேட்டம் முதலிய மக்கட்பண்பிலாக் கயவர் என்பாள், 'துயிற்கண் மாக்கள்' என்ருள். ஈண்டு மாக்கள் என்றது, தோழியை அயலார் போன்று கூறிய குறிப்புச் சொல் எனக.

நான் தலைவன் பிரிவாலே வருந்தி இரவெல்லாம் துயிலாது கிடப் பவும் அதனை அறியாது நீ நன்கு துயிலாநின்றனை என்று,கடிந்தபடியாம். நெட்டிரா - நீண்ட இரவு. பிரிவாற்ருது வருந்துவார்க்கு இரவு நீளி தாய்த் தோன்றும் என்பதனை,

> "கொடியார் கொடுமையிற் ருங்கொடிய விந்நாள்
> நெடிய கழியு மிரா" (குறள் : ககசுக.)

என்னுந் திருக்குறளானும் அறிக.

## பாட்டு - கசுரு : தோழி கூற்று

துறை: தலைமகன் தமர் வரைவொடுவந்து சொல்லாடுகின் றுழி வரைவு மறுப்பவோ எனக் கவன்ற தலைமகட்குத் தோழி

சொல்லியது. அஃதாவது, தலைவனுடைய உறவினர் தலைவன் வேண்டுகோட் கிணங்கித் தலைவியின் பெற்றோரிடத்தே வந்து மகட் பேசும்பொழுது, 'தலைவி ஒருகால் தன் தமர் மகட் கொடை மறுப்பரோ?' என்று நினைந்து வருந்தினளாக, அவளைத் தோழி, தமர் வரைவுடன்பட்டமைகூறி மகிழ் வித்தது.

இதன்கண், 'இன்று நம் மில்லத்தின்கண் கூடிய அவை யிடத்தே பிரிந்தோரைக் கூட்டி மகிழும் சான்றோரும் உளரா யினர். அஃதெற்றாலறிந்தாய் எனின்? நந்தமர் கூற்றிற்கெல் லாம் நன்று நன்று என்று கூறிமகிழும் தலைவன் தமரோடு நும் வருகை இன்று எமக்குப் பெரும் பேறாயிற்று என்று முகமன் கூறும் நந்தமரையும் அவ்வவை யுடைத்தாகலான்' என்று, தோழி தலைவிக்குக் கூறுகின்றாள்.

கசசு. அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பிரிந்தோர்ப் புணர்ப்போர் இருந்தனர்
கொல்லோ
தண்டுடைக் கையர் வெண்டலைச் சிதவலர்
நன்றுநன் றென்னு மாக்களோ
டின்றுபெரி தென்னும் ஆங்கண தவையே.

—வெள்ளி வீதியார்.

(இ - ள்.) அம்ம வாழி தோழி - தோழி நீ வாழ்க, யான் கூறுவதனைக் கேட்பாயாக, ஆங்கணது அவை - அவ்விடத்தே உள்ளதாகிய நம்மவர் குழீஇய அவை, தண்டுடைக் கையர் வெண்தலைச் சிதவலர் - தண்டினைப் பிடித்த கையினை யுடை யாரும் வெள்ளிய நரையினையுடைய தலையின்கண் துகிலை யுடை
யாருமாகிய, நன்று நன்று என்னும் மாக்களோடு - நந்தமர் மொழிக்கெல்லாம் நன்று நன்று என்று கூறிமகிழும் தலைவன் தமரோடு, இன்று பெரிது என்னும் - இந்நாள் நும் வருகை யால் பெருமையுடையதாம் என்று முகமன் கூறுநிற்கும், நம் மூர்ப் பிரிந்தோர்ப் புணர்ப்போர் இருந்தனர் - ஆதலால் நம் மூரின் கண்ணும் பிரிந்தோரைச் சேர்த்து வைக்கும் சான்றோர் உளர் என்று அறிகின்றேன்.

**விளக்கம்** :—அம்ம - கேட்பித்தற்கண் வந்தது. நற்செய்தியை அறிவிக்கின்றாளாகலின் நீ வாழ்க என வாழ்த்தினள் என்க.

ஆங்கணவை மாக்களோடு இன்று பெரிதென்னும், ஆதலால் நம் மூரினும் பிரிந்தோர்ப் புணர்ப்போர் இருந்தனர் என இயைபு காண்க. கொல் - ஓ, அசைகள். மாக்கள், ஈண்டுத் தலைவன் தமராய முதி யோர். முதியோராகலின், 'தண்டுடைக்கையர் வெண்டலைச் சிதவலர்' என்றாள். வெண்டலை, நரைத்த மயிரையுடைய தலை. சிதவல் -

துகில். ஈண்டு தலைக் கட்டுக் கட்டிய துகில் என்க. இதனால் பண்டு மகட்பேசுதற்கு ஆண்டானும் அறிவானும் முதிர்ந்த சான்றோர் செல்லும் வழக்கம் உண்மையும் அறிக. நந்தமர் கூறுவனவற்றிற் கெல்லாம் தலையசைத்து நன்று நன்று என்று தலைவன் தமர் கூறு தலும், நந்தமர் இன்று பெரிது என முகமன் கூறலும் வரைவுடன் பட்டமைக்கு அறிகுறிகள் ஆகலின், இது வரைவுடன்பட்டமை தலை விக்கு உணர்த்தியதாதல் அறிக.

முன்னர் இற்செறித்தல் முதலியவற்றாலே புணர்ந்தோர்ப் பிரிப் போராக இருந்த நந்தமர், இன்று வரைவுடன்பட்டுப் பிரிந்தோர்ப் புணர்ப்போராயினர் என்பாள், 'நம்மூர் பிரிந்தோர்ப் புணர்ப்போர் இருந்தனர்' என்றாள். நம்மூரினும் எனவேண்டிய சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது.

ஆங்கணது அவை என்றது, நம்மில்லிலே அவை கூடுதற்குரிய தலைவாயிற் புறத்தே கூடிய நம்குழு என்றவாறு. தலைவியும் தோழியும் மனையகத்தாராகலின், ஆங்கணவை என்று சுட்டினாள். இனி ஆங் கணவை என்பதற்கு ஊரம்பலம் எனினும் ஆம்.

## பாட்டு - ௧௪௭ : தலைவன் கூற்று

துறை — தலைமகன் பிரிந்தவிடத்துக் கனாக்கண்டு சொல்லியது. அஃதாவது, தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன், தான் சென்றவிடத்தே துயிலுங்கால் தலைவியைக் கனவிற் கண்டு விழித்து ஆற்றாமையாலே கூறியது.

இதன்கண், கனவுகண்டு விழித்த தலைவன் அக்கனவை நோக்கிக் 'கனவே நின்னை உலகத்துக் காதலர் இகழமாட்டாரோ? நீ மடந்தையைத் தந்தாய் போல இனிய துயிலினின்றும் எடுப்பி, ஏமாற்றுகின்றனையே', என்று கூறுகின்றான்.

கசஎ. வேனிற் பாதிரிக் கூன்மல ரன்ன
மயிரேர் பொழுகிய வங்கலுழ் மாமை
நுண்பூண் மடந்தையைத் தந்தோய்
போல
இன்றுயில் எடுப்புதி கனவே
எள்ளார் அம்ம துணைப்பிரிந் தோரே.

—கோப்பெருஞ் சோழன்.

(இ - ள்.) கனவே—, வேனில் பாதிரிக் கூன்மலர் அன்ன- வேனிற்காலத்தே மலரும் பாதிரியினுடைய வளைந்த மலரின்

ன் துய்போன்ற, மயிர் ஏர்பு ஒழுகிய - மயிர் எழுச்சியுற்று

ழங்குபட்ட, அங்கலுழ்மாமை - அழகு ஒழுகும் மாமை பயும், நுண்பூண் மடந்தையை - நுணுகிய வினைத்திற மமைந்த



அணிகலன்களையும் உடைய தலைவியை, தந்தோய் போல இன் றுயில் எடுப்புதி - தரமாட்டாயா யிருந்தும் தருகின்றாயைப் போலக் காட்டி இனிய துயிலைக் கெடுத்து எழுப்பா நின்றனை, அம்ம - கேட்பாயாக, துணைப் பிரிந்தோர் எள்ளார் - இவ்வே மாற்றச் செயலாலே நின்னைத் துணையைப் பிரிந்துறைவோர் இகழமாட்டாரோ?

விளக்கம் :—துணைப்பிரிந்தோர் துயிலுதல் அரிதாகலான் அரிதிற்

பெறுந்துயில் என்பான், இன்றுயில் என்றான். இனிய துயிலை எடுப்பி மீண்டும் பிரிவாற்றாது 'வருந்தச் செய்கின்றனை. அதனால் நீ எள்ளப் படுவை என்பான், 'எள்ளார்' என்றான். எள்ளார்: வினா. எள்ளுவர் என்றபடி. தரமாட்டாயா யிருந்தும் தந்தாய்போல எடுப்பிப் பொய்க்கின்றனை என்பான், 'தந்தாய்ப்போல எடுப்புதி' என்றான். ஒன்றனைத் தரமாட்டாதார் தருவார் போல நடித்துப் பின் தாராதிருப் பின், அவரை உலகம் பொய்யர் என்றிகழ்தலின், அங்ஙனமே நீயும் இகழப்படுவை என்றவாறு.

"நனவினால் நல்காக் கொடியார் கனவினான்

என்எம்மைப் பீழிப் பது'' (குறள் - கஉகஎ.)

என்னுந் திருக்குறளின்கண்ணும், கனவு வருத்துவதாதலுணர்த் தினமையறிக. "விழித்தழிக் கரத்தலின் அதனுனும் துன்பமாகா நின்றதென்பாள், பீழிப்பதென்றுங் கூறினுள்,'' என்பர் பரிமேலழகர்.

இனி இங்ஙனம் கூருது கனவில் தலைவியைக் கொணர்ந்து காட்ட லால் நின்னைத் துணைப்பிரிந்தோர் எள்ளாது புகழ்வர் என்பது கருத் தாகக் கூறுவாருமுளர். தந்தோய்போல இன்றுயில் எடுப்புதி என்ற குறிப்பானும், புகழ்வார் என்பது கருத்தாயின் எள்ளார் என்பது அக் கருத்தை நன்கு விளக்காமையானும், துயிலெடுப்புதல் துன்பத்திற்கே காரணமாதலானும், அது கருத்தன்றென்க. இககளு தலைவன் தலை வியர் இருவர்க்கும் ஒத்தலான் பொதுவில் துணைப்பிரிந்தோர் என்ருன்.

## பாட்டு - கசஅ : தலைவி கூற்று

துறை :—பருவங் கண்டழிந்த தலைமகளைத் தோழி பருவ மன்றென்று வற்புறுத்தத் தலைமகள் சொல்லியது. அஃதாவது,

தலைவன் பிரிந்த பொழுது, 'யான் கார்ப்பருவம் தொடங்குங் கால் வருவன் ஆற்றியிரு' எனக் கூறிச் சென்றுனுக, அப்பருவம் வந்தும் அவன் வந்திலாமையால், தலைவி ஆற்ருது வருந்தினள் ; அவளை நோக்கித் தோழி இஃதவர் கூறிச்சென்ற பருவம் அன் றென்ருளாக அவட்குத் தலைவி கூறியது.

இதன்கண், 'கார்ப் பருவத்திற்குரிய அறிகுறிகள் நன்கு காணப்படாகிற்பவும், இது கார்ப்பருவம் அன்றென்று கூறு

ன்றாய். அங்ஙனம் இது கார் அன்றாயின்,
இக்காட்சிகள் னவோ! கூறுக' என்று தலைவி
தோழியைச் சினந்து கூறு ன்றாள்.

கசஅ. செல்வச் சிறாஅர் சீறடிப் பொலிந்த
தவளை வாய பொலஞ்செய் கிண்கிணிக்
காசி னன்ன போதீன் கொன்றை
குருந்தோ டலம்வரும் பெருந்தண்
காலையும்
காரன் றென்றி யாயிற்
கனவோ மற்றிது வினவுவல் யானே.

—இளங் கீரந்தையார்.

(இ - ள்) தோழீ—, செல்வச் சிறாஅர்
சீறடிப் பொலிந்த- செல்வமிக்க சிறுவர்களுடைய
சிறிய அடியின்கண்ணே பாலிந்து
விளங்காநின்ற, தவளை வாய பொலஞ்செய்
கிண் ணிக் காசின் அன்ன - தவளையினது

வாய்போன்ற வாயை டையவாய்ப் பொன்னாற் செய்யப்பட்ட கிண்கிணியணியின் ாசுபோன்ற, போது ஈன் கொனறைக் குருந்தோடு அலம் ரும் - அரும்பினைத் தோற்றுவிக்கும் கொன்றைமரங்கள் ருந்த மரஙகளோடே சுழலாநின்ற, பெருந்தண் காலையும் - 'க்க குளிர்ச்சியையுடைய இப் பருவத்தையும், கார் அன்று ன்றியாயின் - கார்ப்பருவம அன்று என்று நீ துணிந்து றுவையாயின், யான் வினவுவல் - நின்னையான் கேட்பன்; து கனவோ - இக்காட்சி கனவுகொல்லோ கூறுக.

விளக்கம்:—செல்வக்குடியிற் றோன்றிய சிறுவரைச் 'செல்வச் ரர்' என்றாள் பொன் கிண்கிணி அணியும் தகுதியுடையார் அவர் கலின். "அரிபெய் கிண்கிணி ஆர்ப்பத் தெருவில் தேர் நடையயிற் ம்தேமொழிப் புதல்வன்" (நற் - உ௫0.) எனப் பிறரும் ஓதுதல் ாண்க. சீறடி – சிறிய அடி. பொலிந்த காசு, தவளைவாய காசு, பாலஞ்செய் காசு எனத் தனித்தனிக் கூட்டுக. கிண்கிணி – சதங்கை. வளைவாய் போன்ற வாயையுடைய காசு என்க. இது கொன்றைப் பாதிற்கு உவமை. கொன்றை கார்காலத்தே மலரும் இயல்புடை து, "கண்ணி கார்நறுங் கொன்றை" (புறம் – க.) எனப் பிறரும் றுதல் காண்க. குருந்து – ஒருவகை மரம். குருந்தமரம் கார்ப் நவத்தே தழைத்து மலரும். இதனை, "குரவுந்தளவும் குருந்தும் ாடலும் அரவு கொண்டரும்ப.........கார்வளம் பழுனிக் கவினிய 'னத்து' (க, சக: கூஅ. க0க.) எனவரும் பெருங்கதையினும் 'ண்க. பெருந்தண் காலை – மிக்க குளிர்ச்சியையுடைய பருவம். ர்ப்பருவத்திற்குரிய அடையாளங்களைக் கண்கூடாகக் கண்டு வத்தும் இது கார் அன்று என்பது அறிவுடைமையோ என்றிகழ்ந்த 'றென்க.

## பாட்டு - கசஉ : தலைவி கூற்று

துறை : உடன்போக்குணர்த்திய தோழிக்குத் தலைவி சொல்லியது. அஃதாவது, தோழி தலைவியை நீ தலைவனுடனே தமர் அறியாமற் செல்லவேண்டும் என்றுணர்த்திய தோழிக்குத் தலைவி நாணழிவிற் கிரங்கிக் கூறியது.

இதன்கண், 'அந்தோ! நமது நாண் இரங்கத்தக்க தொன்றாயிற்று; அது நம்மோடு நெடுதுநாள் துயருழந்து கிடந்தது; இப்போதோ காமநோய் மிகுதலாலே என்னை நீத்து அகலாநின்றது; யான் என் செய்வேன்!' என்று தலைவி இரங்கித் தோழிக்குக் கூறுகின்றாள்.

கசஉ. அளிதோ தானே நாணே நம்மொடு
நனிநீ டுழந்தன்று மன்னே இனியே
வான்பூங் கரும்பின் ஓங்குமணற்
சிறுசிறை
தீம்புனல் நெரிதர வீய்ந்துக் காஅங்குத்
தாங்கு மளவைத் தாங்கிக்
காம நெரிதரக் கைந்நில் லாவே.

—வெள்ளி வீதியார்.

(இ - ள்.) தோழி—, நாண் நம்மொடு நனி நீடு உழந்தன்று- நாணம் நம்முடனே மிகவும் நீண்டகாலம் கிடந்து வருந்தா நின்றது, இனி வான் பூங்கரும்பின் ஓங்கு மணல் சிறுசிறை - இனிமேல் வெள்ளிய பூவையுடைய கரும்பினையுடைய உயர்ந்த மணலாகிய சிறியகரை, தீம்புனல் நெரிதர வீய்ந்து உக்காங்கு - இனிய நீர்பெருகி நெரித்தலைச் செய்யக் கரைந்து வீழ்ந்தாற் போன்று, தாங்கும் அளவைத் தாங்கி - பொறுக்குந துணையும் பொறுத்து, காமம் நெரிதர - காமநோய் மிக்குப் பெரிதும் நெருக்குதலானே, கை நில்லாது - நம்பால் நிற்றலாற்றாது நீத் தொழிந்தது, அளிது - அந்நாணம் இரங்கத்தக்கதாயிருந்தது.

**விளக்கம்** :—நாணம், மகளிர்க்கு இயல்பாகவுள்ள தொரு பண்பு.

"அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த,
நிச்சமும் பெண்பாற் குரிய என்ப"

என்பது தொல்காப்பியம். இக்குணம் மகளிரோடு உடன்பிறந்து எஞ்ஞான்றும் நீங்காது வளர்தலின், 'நனிநீடுழந்தன்று' என்றாள். உழந்தென்றது இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த நாள் தொடங்கி இற்றைநாள் வரை நாணம் தன்னோடு பெரிதும் உழந்தமை கருதிக் கூறியதென்க. தன்னோடு அல்லற்காலையும் செல்வக்காலையும் உடனுறைந்த நாண், இன்று அழிவதாயிற்றே என்று வருந்துவாள், 'அளிது' என்றாள். கற்பைக் காக்கும் பொருட்டு நாணம் விடப்

படவேண்டும். நாண் காவல் கொண்டு கற்பும் காக்கப்படின் நன்று, காமநோய் மூக்கலால் இப்பொழுது கற்புக் கடம் பூணற்கு நாண் துறந்து உடன்போக் கிசைகின்றேன் என்பாள், 'காமம் நெரிதரக் கைந்நில்லாதே' என்றாள். கரும்புகளையுடைய மணற்கரை வெள்ளம் மிக்குழிக் கரைந்து அழியுமாறு போலக் காமம் மிக்குழி நாண் அழிவ தாயிற்று என, உவமையை விரித்துக் கொள்க. ஏனைப் பெண்மை நல னெல்லாவற்றிற்கும் நாணம் ஆக்கமாய் நின்று அவற்றை நிலை பெறுத்தலின் 'கரும்பு நின்ற மணற்சிறு சிறை' என்றாள். காம வெள்ளத்தைத் தாங்கலாற்றாது அழிதலின் 'சிறு சிறை' என்றாள். "சிறையும் உண்டோ செழும்புனல் மிக்குழி, நிறையும் உண்டோ காமம் காழ்க் கொளின்" (ு: கக- உ0) என்றார் மணிமேகலையினும். உயிரினும் நாண் சிறந்தது; நாணினும் கற்புச சிறந்தது ஆகலின், கற்பின் பொருட்டு நாண் துறத்தல் அறக்கழிவன்றாயிற்று.

"என் கண்மணி போன்

றொருநாள்பிரியா துயிரிற் பழகி உடன்

வளர்ந்த

அருநாண்" (திருக்கோவையார்: சச)

என்னை அகன்றொழியலாயிற்றே என்றிரங்குவாள். நாண்' என்றாள்.

'அளிதோ தானே

இதனால் உடன் போகவேண்டுமென்ற

தோழிக்குத் தான் உடம் பட்டமை

உணாததபபட்டமையும உணாக.

# பாட்டு - கரு௦: தலைவி கூற்று

துறை : இரவுக்குறி நேர்ந்த தோழிக்குத் தலைமகள் கூறியது. அஃதாவது, தலைவியின் உடம்பாடுணராமலே தலைவ வனுக்கு இரவுக்குறியிடம் கூறி, ‘அவண் வருக’ என்று குறி நேர்ந்த தோழி, அதனைத் தலைவிக்குணர்த்திய பொழுது தலைவி, ‘நீ நேர்ந்தமை நன்றே’ என்பதுபடத் தோழிக்குக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, ‘மலைநாடனுடைய மார்பினை யான் எண்ணுங்கால் என்னுள்ளத்தே நோய் பெருகாநின்றது; அம்மார்பினைப் புல்லுமிடத்து அந்நோய் இல்லையாகின்றது; இஃதொரு வியப்பிருந்தவாறு,’ என்று கூறுகின்றாள்.

கரு௦. சேணோன் மாட்டிய நறும்புகை ஞெகிழி
வான மீனின் வயின்வயின் இமைக்கும்
ஓங்குமலை நாடன் சாந்துபுல ரகலம்
உள்ளின் உண்ணோய் மல்கும்
புல்லின் மாய்வ தேவன்கொல் அன்னாய்.

—மாடலூர் கிழார்.

(இ - ள்.) அன்னாய் சேணோன் மாட்டிய நறும்புகை ஞெகிழி - தோழீ பரண்மேலிருப்போன் கொளுத்திய நறு

மணங்கமழும் புகையையுடைய கொள்ளி, வான மீனின் வயின் வயின் இமைக்கும்-விண் மீனைப் போன்று இடந்தோறும் இடந் தோறும் ஒளி வீசாநின்ற, ஓங்குமலை நாடன் சாந்து புலர் அக லம் - உயர்ந்த மலைநாட்டையுடைய தலைவனது சந்தனம் பூசிப் புலர்ந்த மார்பினை, உள்ளின் உள்நோய் மல்கும் - யான் நினைத் தக்கால் எனது உள்ளத்தின்கண் காமநோய் மிகாநிற்கும், புல்லின் மாய்வது எவன் - அம்மார்பினைத் தழுவுங்கால் அந் நோய் இல்லையாகும்; இஃதென்ன வியப்பு?

விளக்கம் :—சேணோன் - உயரத்திலிருப்பவன். என்றது, பரண் மிசை இருப்பவன் என்றவாறு. குறவர்கள் புனங்காத்தற் பொருட்டு உயர்ந்த மரத்தின் உச்சியிற் பரண்கட்டி அதன்கண் தங்குவர் என்க. விலங்குகள் வாராதபடி ஆண்டுக் கொள்ளியை எரித்தல் வழக்கம். உயரத்தே எரியும் கொள்ளிகள் விண்ணின் விளங்கும் மீன்கள் போல் ஒளி வீசும் என்க. ஞெகிழி - கொள்ளி. மாட்டுதல் - கொளுத்து தல். வயின் வயின் - இடந்தோறும் இடந்தோறும். இமைத்தல் - ஒளி வீசுதல். சாந்து - சந்தனம். சந்தனம் பூசிப் புலர்ந்த மார்பு என்க. முன்னரும் அதனை அணைந்தவளாகலான், அதனியல்பை விதந்தோதி னாள். அகலம் - மார்பு. நினைக்குங்கால் வருத்துவதும் நுகருங்கால் வருத்தந்தீர்ப்பதுமாகிய ஒரு பொருள் வேறு காண்டலின்மையின், இது வியப்பென்றாள். இது புதுமை பொருளாகப் பிறந்த மருட்கை என்க.

இதனால், யான், 'தலைவரைப் புல்லாது ஆற்றகிலேன்; ஆகலின் நீ இரவுக்குறி நேர்ந்தமை சாலவும் நன்றாயிற்று,' என்று உணர்த்தப்பட்டமை உணர்க.

## பாட்டு - கருக : தலைவன் கூற்று

துறை :—பொருள் வலிக்கப்பட்ட நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது. அஃதாவது, இன்மையதிளிவும் உடைமைய துயர்ச்சியும் எடுத்துக்காட்டித் தலைவியைப் பிரிந்து பொருளீட் டக் கடைக்கூட்டிய தன்னெஞ்சிற்குத் தலைவன் கூறியது.

இதன்கண், " நெஞ்சே ! பாலைநிலவழி கடத்தற்கரிய

தென்பதும் கருதாமல், பிரிதற்கரிய தலைவியையும் பிரிந்து, 'பொருளீட்டச் செல்வேன்' என்று நீ நினைப்பதை ஆராயின், இந்நினைவு நமது இளமைக்கு முடிவாக அமையும் என்று எனக்குத் தோன்றுகின்றது," எனத் தலைவன் கூறுகின்றான்.

கருக. வங்காக் கடந்த செங்காற் பேடை

எழாஅலுற வீழ்ந்தெனக் கணவற் காணது
குழலிசைக் குரல குறும்பல அகவும்

## மூலமும் உரையும்

உ௧௬௪

குன்றுகெழு சிறுநெறி அரிய என்னது
மறப்பருங் காதலி யொழிய
இறப்ப லென்பதீண் டிளமைக்கு முடிவே

—தூங்கலோரியார்.

(இ - ள்.) வங்காக் கடந்த செங்காற் பேடை - சேவலாகிய வங்காப் பறவையால் நீங்கப்பட்ட சிவந்த கால்களையுடைய பெடைவங்கா, எழாஅல் உற வீழ்ந்தென - புல்லூறென்னும் பறவை தம்மேல் நெருங்க வீழ்ந்ததாக, கணவற் காணது - தம் சேவலைக் காணமையால், குழல் இசைக் குரல குறும்பல அகவும் - வேய்ங்குழலின் இசை போன்ற குரல் உடையன வாய்க் குறிய பலவாகிய ஓசைகளாலே கூப்பிடா நிற்கும், குன்று கெழு சிறு நெறி அரிய என்னது - மலைகள் பொருந்தின சிறிய வழிகள் கடத்தற்கு அரியன வாதலையும கருதாமல், மறப்பரும காதலி ஒழிய - மறத்தற்கரிய தலைவியும் ஈண்டுத் தனித்துத் தங்க, இறப்பல் என்பது ஈண்டு இளமைக்கு முடிவே- நான் செல்வேன் என்று துணிவது

இவ்விடத்தே நம் இளமைக்கு இறுதியே யாகும்.

**விளக்கம் :**—வங்கா - ஒருவகைப் பறவை. (௩௨௪) என நற்றிணையினும் வருதல் காண்க.

"வஙகா வரிப்பறை" வககா என்று இதனை இக்காலத்தார் வன் பறவை.

வழுஙகுவா. எழாஅல - புலலூறு எனனும ஒருவகை இது பறவைகளை அடித்துண்ணும் இயல்புடைய தென்ப. இக்காலத்தே வல்லூறு என்று வழங்கப்படும் பறவை இதுவே போலும். வீழ்ந்தென - இரையாகக் கொள்ளும் பொருட்டுத் தம்மேல் வீழ்ந்ததாக. தமக்கு இடையூறுற்றுழித் தங்கணவனை காணப் பெருமையால் அகவும் என்க. அகவுதல் - அழைத்தற் பொருள்படக் கூவுதல். கோழிச் சேவல் குயில் முதலியன கூவுதல் போன்று நெடுங்குரலின்றிக் குறுஙகுரலாய்க் கூவு மென்பாள், 'குறும்பல அகவும்' என்றாள். பல என்றது பன்முறையும் என்ற வாறு. எழால் வீழ்ந்த பேடை கணவற்காணது கூவும் என்றது, நம் பிரிவு வருத்துகையாலே நம்மை நினைந்து தலைவி அழுவாள் என்ப தனை நினைவுறுத்தும் செயல் ஆண்டுளது என்றவாறு. குறிஞ்சி திரிந்தபாலை என்பான், 'குன்றுகெழு சிறு நெறி' என்றான். சிறுநெறி-ஒடுங்கிய வழி. குன்றுகளின் இடையே இட்டிதாகக் காணப்படும் நெறி, ஆறு செல்வோர்க்குத் துன்பந்தருதலின், 'அரிய' என்றான். அருமை ஊடுபோய்க் கடத்தற்கருமையைக் கருதியதாம்.

மேலும் காதலியின் நினைவு மறத்தற்கரிதாகலின், போதலும் அரிதென்பான், 'மறப்பருங் காதலி' என்றான். ஒழிய என்னுஞ்சொல், அவள் இறந்துபடுவாள் என்னும் பொருள்படவும் நின்றதுணர்க. கழிந்த இளமை மீண்டும் பெறவியலாதாகலின் அப்பொருளீட்டற்கண் நம்மிளமையும் கழிந்தொழியும் என்றிரங்குவான், இது நம் இளமைக்கு முடிவேயாகும் என்று தேற்றேகாரமிட்டுரைத்தான். ஆகலின் யான் உடம்படேன் எனச் செலவழுங்கினது இது.

## பாட்டு - கரு௨ : தலைவி கூற்று

துறை :—வரைவு நீட்டித்தவழி ஆற்ருளாகிய தலைமகள் 'நீ ஆற்றுகின்றிலை' என்று நெருங்கிய தோழிக்குச் சொல்லியது. அஃதாவது, தலைவன் வரைதற் கருத்தின்றி ஒழுகியவழி ஆற்ருமை கொண்ட தலைவியை 'நீ ஆற்றியிருத்தல் வேண்டும்; இங்ஙனம் ஆற்ருமை அழகன்று' என்று கழறிய தோழியை, 'நீ அதனியல்பறிந்திலை' எனத் தலைவி கடிந்துரைத்தது.

இதன்கண், தலைவி முன்னிலைப் புறமொழியாக, 'ஆற்ருமை நன்றன்று' என்று இடித்துரைப்போர், அக்காமத்தின் இயல்பறியாத மடவோரே ஆவர் ; தலைவரைக் காணுங்கால் வளரும் இயல்புடைய காமம் அவர் கைவிட்ட காலத்தே மெலிவதன்றிப் பிறிதென்னும்!' என்று கூறுகின்ருள்.

கரு௨. யாவதும் அறிகிலர் கழறு வோரே
தாயின் முட்டை போலவுட் கிடந்து
சாயின் அல்லது பிறிதெவ னுடைத்தோ
யாமைப் பார்ப்பி னன்ன
காமங் காதலர் கையற விடினே.

—கிளிமங்கலங் கிழார்.[1]

(இ - ள்.) யாமைப் பார்ப்பின் அன்ன காமம் - தாய் யாமையின் முகம் நோக்கி வளரும் இயல்புடைய யாமையின்
பார்ப்பினைப் போன்று தலைவர் அருளுணுக்கங்கண்டு வளரும் இயல்புடைய காமமானது, கையற விடின் - அவர் செயலறவு கொள்ளும்படி விட்டவிடத்தே, தாயில் முட்டைபோல உட் கிடந்து - தாய் இல்லாத முட்டை கிடந்து உள்ளே அழிவது போன்று, சாயின் அல்லது - உள்ளத்துள்ளே கிடந்து மெலிவ தல்லது, பிறிது எவன் உடைத்து - வேறு என்ன உறுதியை
உடைத்தாகும், கழறுவோர் யாவதும் அறிகிலர் - நீ ஆற்றுயா கின்றாய் என என்னை இடித்துரைப்போர் காமத்தின் இயல்பை ஒரு சிறிதும் உணர்கின்றிலர்.

**விளக்கம்**:—யாமைப்பார்ப்புத் தாய்முகம் நோக்கி வளரும் புடையது; இதனை,
இயல்

"தீம்பெரும் பொய்கை யாமையிளம் பார்ப்புத்
தாய்முகம் நோக்கி வளர்ந்திசி னுஅங்
கதுவே ஐயநின் மார்பே

அறிந்தனை ஒழுகுமதி அறனுமா ரதுவே.

(ஐங்குறு: சச)

என்னும் ஐங்குறு நூற்றுப் பாடலானும் அறிக.

1. (பாடம்) கிழிமங்கலங்கிழார், கலங்கிழார்.

கழிமங்கலங்கிழார், கிள்ளிமங்

## மூலமும் உரையும்

உஉக

தாய் இல் முட்டை - தாய்ப்பறவை இறந்துபடக்கிடந்த முட்டைகள் என்க. தாய்ப்பறவை அடிக்கடி அடைகிடந்து முதிர்விக்கற்பாலனவாகிய முட்டை, அஃதில்வழித் தம்முள்ளே அழுகிக் கெடுமாறு போல, இடையறாதுடனிருந்து தலைவர் அருளாது விட்டபொழுது காமம் கெடும் என்க.

உட்கிடந்து என்றது, நெஞ்சினுள்ளே கிடந்து என்றவாறு. எனவே களவுக்காலம் என்பது பெற்றாம். என்னை? கற்புக்காலமாயின் தலைவனைத் தூது முதலியவற்றாற் பெறற்பொருட்டுக் காமத்தை வெளிப்படுத்தவும் கூடும்; களவுக்காலத்தே நெஞ்சினுள்ளே நினைந்தழிவதன்றிப் பிறிது செயலின்மையின் என்க. அவன் வரைவு நீட்டித்த வழி, 'யாம் செயற்பாலது யாதும் இல்லை' என்பாள், 'கையற விடின்' என்றாள். கையறவு - செயலற்றநிலை.

'தலைவர் கையற விடின், காமமுற்றோர் இங்ஙனம் அழிந்து ஆற்றாதலே இயல்பாம்; அதனியல்பை நீ அறியாது கழறுகின்றனை' எனக் கடிந்தவாறு.

## பாட்டு - கருரு : தலைவி கூற்று

துறை :—வரையாது நெடுங்காலம் வந்து ஒழுகுகின்றுழி "நாம் அவரை வேறுபடுத்தற்குக் காரணம் என்னை?" என்ற தோழிக்கு "அவர் வரவு நமக்கு ஆற்றாமைக்குக் காரணமாம்" எனத் தலைமகள் கூறியது. அஃதாவது, தலைவன் வரைந்து கொள்ளக் கருதாது இரவின்கண் நீண்டகாலம் வந்தொழுகுதலை மாற்றக் கருதிய தோழி, மாற்றுதற்கு ஏதுவாக எதனைக் கூறுவது என்று தலைவியை வினவ, அவள் தலைவன் ஏதமிக்க நெறியில் இரவில்வருதலை யான் அஞ்சுகின்றேன் ஆகலின், அவ் வேதுவாலேயே அவ்வொழுக்கத்தை மாற்றி வரைவுகடாவுக என்று தோழிக்கு ஏதுவுண்மை கூறியது

இதன்கண், 'என் நெஞ்சம் முன்பெல்லாம் கூகை குழறினும், குரங்கு மரக்கிளையிலே பாய்ந்து ஓசையுண்டாக்கினும் அஞசும. இப்பொழுதோ சாரல் நீளிடையில் இரவில் செல்லா நின்றது' என்று தலைவி கூறுகின்றாள்.

கருரு. குன்றக் கூகை குழறினும் முன்றிற்
பலவி னிருஞ்சினைக் கலைபாய்ந்
துகளினும்
அஞ்சுமன் அளித்தெ னெஞ்ச மினியே
ஆரிருட் கங்குல் அவர்வயிற்
சாரல் நீளிடைச் செலவா னதே.

—கபிலர்.

(இ - ள்.) தோழீ—, குன்றக்கூகை குழறினும் - மலையின் கண்வாழும் பேராந்தை ஒலிசெய்யினும், முன்றிற் பலவின்



இருஞ்சினைக் கலைபாய்ந்து உகளினும்-நம் முன்றிலிடத்தேயுள்ள பலாமரத்தினது பெரிய கிளையின் கண்ணே ஆண்குரங்கு தாவித்துள்ளினும், என் நெஞ்சம் அஞ்சுமன் - பண்டெல்லாம் என் நெஞ்சம் அஞ்சுவதொன்றாயிருந்தது; அது கழிந்தது, இனி - இப்பொழுதோ, அவர் வயின் ஆர்இருட் கங்குல் சாரல் நீள்இடைச் செலவு ஆனது-அவர் பக்கல் செல்வதாகிச் செல்லுதற்கரிய இருளையுடைய இரவின்கண் மலைப்பக்கத்தே கிடந்த நெடிய வழியின்கட் செல்லுதலைத் தவிர்ந்திலது, அளித்து - ஆதலின்

அஃது இரங்கத் தக்கதாயிற்று.

**விளக்கம்** :—குன்றக்கூகை - மலையில் வாழுமியல்புடைய கூகை என்க. கூகை - பேராந்தை. கூகை கத்துவதைக் குழறுதல் என்பது மரபு. முன்றில்: இல்முன். வீட்டின் முற்றத்தே நிற்கும் பலாவின்கண் இரவில் குரங்கு பாயும் ஓசை கேட்பினும் என் நெஞ்சம், அஞ்சும் என்றபடி. அஞ்சவேண்டாதவற்றிற்கெல்லாம் அஞ்சிய நெஞ்சம், இப்பொழுது அஞ்ச வேண்டியவற்றிற்கும் அஞ்சிற்றில்லை என்றவாறு. பண்டு இல்லத்துள் தமருடன் இருக்கும்போதே அஞ்சியது, இப்பொழுது வழிதெரிந்து செல்லவியலாத இருளில் சாரலின் ஊடே கிடந்த ஏதமிக்க வழியில் அவர் வரும்போதும் போம் போதும் தளரடி தாங்குதற்பொருட்டு அவர் பக்கலிலேயே செல்லத்துணிந்தது என்க. ஆனாது - தவிராது.

'இதனால் யான் தலைவர் இரவின்கண் வருதலை எண்ணி அவர்க்கு ஏதம் வருமோ என்று அஞ்சுகின்றேன்; ஆகலின், இதனைக் கூறியே நீ இரவின்கண் வாரற்க என்னுமுகத்தானே வரைவு கடாவுக' என்று உணர்த்தப்பட்டமை யுணர்க.

## பாட்டு - கருசு : தலைவி கூற்று

துறை :—பொருள் வயிற் பிரிந்த தலைமகனை நினைந்து தலை

மகள் தோழிக்கு உரைத்தது. அஃதாவது, பொருளீட்டற்பொருட்டுச் சென்ற தலைவன், காலம் நீட்டித்த வழி அவனது வன்கண்மையை நினைந்த தலைவி, அதனியல்பைத் தோழிக்குக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'இங்ஙனம் நம்மைப் பிரிந்து தனித்துறைதலைத் தலைவர் எவ்வாறு கற்றனரோ? என்று கூறுகின்றாள்.

கருச. யாங்கறிந் தனர்கொல் தோழி பாம்பின்
உரினிமிர்ந் தன்ன உருப்பவி ரமையத்
திரைவேட் டெழுந்த சேவல் உள்ளிப்
பொறிமயிர் எருத்திற் குறுநடைப்
பேடை
பொரிகாற் கள்ளி விரிகா யங்கவட்டுத்

மூலமும் உரையும்

உஉகூ

தயங்க விருந்து புலம்பக் கூஉம்
அருஞ்சுர வைப்பிற் கானம்
பிரிந்துசே ணுறைதல் வல்லு வோரே.

—மதுரைச் சீத்தலைச் சாத்தனார்.

(இ - ள்.) தோழி-, பாம்பின் உரி சிமிர்ந்தன்ன உருப்பு அவிர் அமையத்து - பாம்புரித்த தோல் மேலே எழுந்தாற் போன்று கானல் விளங்குகின்ற நண்பகற் பொழுதின்கண், இரை வேட்டு எழுந்த சேவல் உள்ளி - இரையை விரும்பிப் பிரிந்துபோன தன் சேவலை நினைத்து, பொறிமயிர் எருத்தில் குறுநடைப் பேடை - புள்ளிகளையுடைய மயிர் பொருந்திய கழுத்தினையும குறியதாய் அடியிட்டு நடக்கும் நடையினையும் உடைய புறவுப்பேடை, பொரி கால் கள்ளி விரிகாய் அம் கவட்டு - பொரிந்த அரையினையுடைய கள்ளிமரத்தினது வெடித்த காயையுடைய அழகிய கிளையின்கண், தயங்க இருந்து- விளங்கும்படி இருந்து, புலமபக் கூஉம - தன் தனிமை தோன் றும்படி கூவாநிற்கும, அருஞ்சுர வைப்பில் கானம் - கடத்தற் கரிய பாலை நிலமாகிய இடத்தையுடைய காட்டின்கண், பிரிந்து சேண் உறைதல் வல்லுவோர் - நம்மைப் பிரிந்துசென்று தூரிய நாட்டிடததே தங்கும வன்மையையுடையர், யாங்கு அறிந்தனர் - அவ்வன்மையுடையராதற்கு எவ்வாறு அறிந் தனர்.

**விளக்கம்** :—தனித்து வருந்தாதுறையும் வன்மையை யான் அறிதற்கியலாது இங்ஙனம் வருந்துவேனாகவும், என்னோடு ஒத்த அன்புள்ள உள்ளமுடைய தலைவர் மட்டும் அதனை எவ்வாறு பயின்றனர் என்றவாறு. யாங்கு - எவ்வாறு. பாம்பின் உரி, கானல் தோற்றத்திற்கு உவமை உருப்பு - பேய்த்தேர். அவிர்தல் - விளங்குதல். நண்பகலிலே பேய்த்தேர் கட்புலனாய் விளங்கித் தோன்றுதல் கண்டறிந்தது. உருப்பவிர் அமையம் - நண்பகல்.

வேட்டெழுந்த - விரும்பிப் பறந்து சென்ற. பேடை - பெண்புறா. 'பொறி மயிர் எருத்திற் குறுநடைப் பேடை' என்றதனால், புறா என்பது பெற்றாம் புறா - பாலைநிலக் கருப்பொருள். நண்பகற் போதிற் பிரிந்த சேவலை நினைந்து கள்ளிமரக் கிளையிலிருந்து பேடை தனிமை தோன்றக் கூஉம் என்றது, பண்டு தலைவன் தனக்குக் கூறியதாகும், அதனைக் கொண்டு கூறினள் என்க. தனிமைத் துயரைப் பறவைகளிடத்தும் கண்டிரங்கும் அருளுடையார், இப்பொழுதும் அக்காட்சியைக் காணுங்கால் நம்மை நினைந்து மீள்வரன்றே! அங்ஙனம் மீளாது தங்கும் வன்மை அவர்பால் பண்டு கண்டேமில்லை! புதுவதாக அதனை யாங் கறிந்தனரோ என்று இரங்கினள் என்க.

கள்ளியங் கவட்டிற் புறவிருத்தல் காண்பார்க்கு விளங்கித் தோன்றுமாகலின், தயங்க இருந்து என்றாள். இதுவும் தலைவன் கூற்றைக் கொண்டு கூறியதேயாம். புலம்பக் கூவுதலாவது - தனிமையாலுற்ற



அவலந்தோன்றக் கூவுதல். வைப்பு - இடம். அருஞ்சுரவைப்பாகிய கானம் என்க. வல்லுவோர் - வன்மையுடையோர்.

## பாட்டு - கருரு : தலைவி கூற்று

துறை :—தலைமகள் பருவங்கண்டு அழிந்து சொல்லியது. அஃதாவது, தலைவன், 'யான் கார்ப்பருவத் தொடக்கத்தே நின்னை மீண்டுவந்து காண்பன்; அதுகாறும் ஆற்றியிரு' என்று சென்றவன், அப் பருவம் வந்தும் வாராமையாற் றலைவி வருந்திக்

கூறியது.

இதன்கண், 'கார்ப்பருவம் விதைத்து மீளும் உழவர் வட்டில் பூவானே நிரம்பும்படி வந்துவிட்டது! தலைவருடைய தேர் வருகின்றது என்று கூறும் சொல்மட்டும் இன்னும் வந்திலது' என்று தலைவி கூறுகின்றாள்.

கருரு. முதைப்புனங் கொன்ற ஆர்கலி உழவர்
விதைக்குறு வட்டி போதோடு பொதுளப்
பொழுதோ தான்வந் தன்றே மெழுகான்
றா துலைப் பெய்த பகுவாய்த் தெண்மணி
மரம்பயில் இறும்பி னார்ப்பச் சுரனிழிபு
மாலை நனிவிருந் தயர்மார்
தேர்வரும் என்னும் உரைவா ராதே.
—உரோடகத்துக் காரத்தனார்.

(இ - ள்) முதைப் புனங் கொன்ற ஆர்கலி உழவர் விதைக் குறுவட்டி - பழைய புனத்தை வெட்டிப் பண்படுத்திய ஆரவாரத்தையுடைய உழவர்களுடைய வித்தினை விதைத்தற்குரிய குறிய வட்டிகள், போதொடு பொதுள-முல்லைப்பூவானே நிறையும்படி, பொழுதோ வந்தன்று - அவர் கூறிச் சென்ற கார்ப்பருவத்து மாலைப் பொழுதோ இதோ வந்துவிட்டது,

மெழுகு ஆன்று ஊதுலைப் பெய்த பகுவாய்த் தெண்மணி-மெழு காலியற்றிய கருவின்கண் அமைத்து ஊதுகின்ற கொல்லுலைக் கண் வைத்து இயற்றிய பிளவுபட்ட வாயையும் தெளிந்த ஓசை யினையும் உடைய மணி, மரம் பயில் இறும்பின் ஆர்ப்ப-மரங்கள் நெருங்கி வளராநின்ற காட்டின்கண்ணே ஆரவாரிப்ப, சுரன் இழிபு - அருவழியைக் கடந்து, மாலை நனி விருந்து அயர்மார்- இம்மாலைக்காலத்தே மிகவும் விருந்து அயர்தற்பொருட்டு, தேர் வரும் என்னும் உரை வாராதே - உதோ தலைவருடைய தேர் வாராநின்றது என்று கூறும் உரை இன்னும் வந்திலதே; யான் என்செய்வேன்.

## மூலமும் உரையும்

### உஉ௫

விளக்கம்:—முதைப் புனம் - பழைதாகிய கொல்லை - கொல்லுதல்- வெட்டிப் பண்படுத்துதல். 'காடுகொன்று நாடாக்கி' என்புழிப் போலக் கொன்று என்பது வெட்டிப்பண்படுத்தி என்னும் பொருள் குறித்து நின்றது. ஆர்கலி - ஆரவாரம். உழவர், ஈண்டு முல்லைநிலத்தே உழுதுண்ணும் இடையர் என்க. வட்டி - ஓலையாற் செய்த சிறு கொட் டம். விதைவிதைப்போர் சிறிய கொட்டங்களிலே விதையைப் பெய்து கையிலேந்தி விதைப்பர். விதைக் குறுவட்டி - விதைத்தற் குரிய குறிய வட்டி என்க. கார்ப்பருவத் தொடக்கத்தே முதைப்புனத் தில் விதைத்த உழவர்கள், அப் பருவத்தே புதிதாகமலர்ந்த முல்லைமல ரைப் பறித்து வட்டிலை நிரப்பிக் கொண்டு வரும்படி, கார்ப்பருவம் வந்தது என்க. அவர் கூறிய பருவம் வந்ததென்பாள், 'பொழுதோ வந்தது' என்றாள். வந்தன்று - வநதது. மெழுகு - ஈண்டு மணி வார்த் தற்கு அரக்காலியற்றிய கரு. ஆன்று - அமைத்து என்க. ஊதுலை- துருத்தியால் ஊதப்படும் கொல்லுலை. பகுவாய் - பிளவுபட்ட வாய். தெண்மணி - தெளிந்த ஓசையையுடைய மணி.

தலைவர் மீண்டு வந்தவுடன் தலைவியர் அவர்க்கு விருந்து செய்தல் வழக்கம். இதனை, "அரிவை விருந்தயர் விருப்பொடு வருந்தினள் அசைஇய முறுவலின்னகை காண்கம்" (நற்-அக) என்றும் "வினை கலந்து வென்றீக வேந்தன் மனை கலந்து, மாலை யயர்கம் விருந்து" (குறள்-கஉசுஅ.)என்றும் பிறர் கூறுமாற்றானும் உணர்க. இறும்பு குறுங் காடு. அயர்மார் - அயர்தற் பொருட்டு.

உரைவருதலாவது - தலைவன் தேர் வருதலைச் செய்மையிற் கண்டோர் விரைந்து வந்து தலைவிக்குக் கூறுதல்.

## பாட்டு - கருசு : தலைவன் கூற்று

துறை :—கழறிய பாங்கற்குக் கிழவன் அழிந்து கூறியது. அஃதாவது, 'நீ காமநோய்கொண்டு வருந்துதல் தகவன்று' என்று இடித்துரைத்த பாங்கனைத், தலைவன் 'நீ இடித்துரைத்தல் தகவன்' றென உள் அழிந்து கூறியது.

இதன்கண், தலைவன், 'பார்ப்பன மகனே! பார்ப்பன மகனே! நீ ஓதும் வேதத்திலேனும் என் நோய்க்கு மருந்துண்டாயிற் கூறுக; வீணே நீ இடித்துரை வழங்குவதாற் பயன் என்?' என்கின்றான்.

கருசு. பார்ப்பன மகனே பார்ப்பன மகனே'
செம்பூ முருக்கி னன்னார் களைந்து
தண்டொடு பிடித்த தாழ்கமண் டலத்துப்
படிவ உண்டிப் பார்ப்பன மகனே
எழுதாக் கற்பி னின்சொல் உள்ளும்
பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின்

மருந்தும் உண்டோ மயலோ விதுவே.
—பாண்டியன் ஏறுதி நெடுங்கண்ணனார்.

கு.—'5



(இ - ள்) பார்ப்பன மகனே பார்ப்பன மகனே—,செம்பூ முருக்கின் நன்னார் களைந்து தண்டொடு பிடித்த தாழ்கமண்டலத்து - சிவந்த பூவினையுடைய முருக்க மரத்தினது நல்ல பட்டையை நீக்கி அதன் தண்டோடே பிடித்த தாழ்கின்ற கரகத்தையும், படிவ உண்டிப பார்ப்பன மகனே-விரதவுணவையும் உடைய பார்ப்பன மகனே, எழுதாக்கற்பின் நின் சொல்லுள்ளும் - எழுதாதே கற்றலையுடைய நினக்குரிய மறையின் கண் உள்ள சொற்களினகத்தேனும், பிரிந்தோர்ப் புணாக்கும் பண்பின் மருந்தும உண்டோ - தம்முட் பிரிந்தோரைச் சேர்த் தற்குரிய தன்மையுடைய மருந்தாம சொல் உளதோ உளதாயிற் கூறிக்காண், இது மயல் - அதனை ஒழிதது என்னை இடித்துரைக்கும் இச்சொல் நின் மயக்கததானே எழுநததாம்.

விளக்கம் :—பார்ப்பனன் ஆயினும் நீ பேதை என்பான், 'பார்ப்பன

மகனே' என்னும விளியை மும்முறை அடுக்கினன். முருக்கந்தண்டு பார்ப்பனர்கள் பிடிப்பதொன்று. கரகமும் பார்ப்பனார்க் குரியது, இதனை.

"நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க் குரிய (மர
பு-எ().)

எனவரும் தொல்காப்பியத்தானும் அறிக. "உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்" (கலி-க) என்றார் பிறரும்.

நார் - பட்டை. படிவ உண்டி - விரதவுணவு. எழுதாக் கற்பு என்றது, வேதங்களை. ஆரியதத்திற்கு எழுத்தில்லை யாகலின 'எழுதாக் கற்பு' எனப்பட்டது கற்பு - கல்வி வேதம் பார்ப்பனர்க்கே உரிய தாகலின், நின் சொல் என்றான். வேதம் மந்திரங்களையுடைமையின் அதன்கண பிரிந்தோாப் புணாக்கும் மந்திரம் உண்டோ? உண்டாயின் அதனைக் கூறு என்றான். இஃது பாங்கனை அசதியாடியது என்க. படிவ உண்டியை உடையை யாகலின் காமத்தின் இயல்பினை அறியாது இடித்துரைத்தனை என்பான், 'படிவ உண்டிப்பார்ப்பன மகனே என்றான். இது – நீ இடித்துரைக்கும் புசசொல். மயல் என்று காரியததைக் காரணமாக உபசரித்தான். "வேதத்தை அறிந்த நின் சொல்" என்பாரும் உளர்.

தலைவியை யன்றி, யான் கொண்ட நோய்க்கு நின் வேதத்துள்ளும் மருந்தில்லை என்றபடியாம்.

துறை:—பூப் பெய்திய தலைமகள் உரைத்தது. அஃதாவது, பூப் பெய்திய தலைமகளை அக்காலத்தே தலைவன் தன்னைப் பிரிந்துறைவன் என்பது கருதி, அச்சிறு பிரிவும் ஆற்றாது கவன்று கூறியது.

## மூலமும் உரையும் 

இதன்கண், 'குக்கூஉ' என்று கோழிகூவிற்று! அதைக் கேட்டதும் 'காதலரைப் பிரிக்கும் வாள்போன்ற அந்நாள் வந்ததே'! என்று என்னெஞ்சம் துட் கென்றது,' என்று தலைவி தன்னுட் கூறிக் கொள்கிறாள்.

கருஎ. குக்கூ வென்றது கோழி அதன்எதிர்
துட்கென் றன்றென் தூய நெஞ்சம்
தோடோய் காதலர்ப் பிரிக்கும்
வாள்போல் வைகறை வந்தன்றால்
எனவே.

—அள்ளூர் நன்முல்லையார்.

(இ - ள்.) கோழி குக்கூ என்றது - கோழிச்சேவல் குக்கூ என்று கூவா நின்றது, அதன் எதிர் என் தூய நெஞ்சம் துட்கு என்றது - அக் குரல் கேட்டவுடனே எனது தூய்மை யுடைய நெஞ்சம் துட்கென அஞ்சா நின்றது; அஃதென்றெனின்? தோள் தோய் காதலர்ப் பிரிக்கும் வாள் போல் வைகறை வந்தன்று என - எனது தோளை மணந்த தலைவரை என்னிடத்து நின்றும் பிரித்துவைக்கும் வாளைப்போலக் கொடிய வைகறைப் பொழுது வந்தது என்று நினைத்தலானே.

விளக்கம்:—பூப்பெய்திய மூந்நாளும் தலைவியோடு தலைவன் கூடுதல் கூடாதென்ப. இதனை, "மூந்நாளும் கூடி உறையப்படும் குற்றம் என்னோ வெனின், பூப்புப் புறப்பட்ட ஞான்று நின்ற கரு வயிற்றில் அழியும்; இரண்டாநாள் நின்ற கரு வயிற்றிலே சாம்; மூன்றாநாள் நின்ற கரு குறுவாழ்க்கைத்தாம்; வாழினும் திருவின்றாம், அதனால் கூடப்படாதென்பது." (சஉ.) எனவரும் இறையனார் களவியல் உரையானும் அறிக.

அதன் எதிர், அந்நிகழ்ச்சிக்கு முன்னே என்க. துட்கு - அச்சம். அன்பால் ஆதரவுபட்ட நெஞ்சமாகலின், 'தூய நெஞ்சம்' என்றாள். தோள் தோய் காதலர் என்றது, இடக்கரடக்கல். பிரிக்கும் செயல் பற்றி வைகறைக்கு வாள் உவமை என்க. கோழி கூவுதல் பொழுது விடிதற்கு அறிகுறியாகலின், அது கேட்டதும் நெஞ்சம் அஞ்சிற்றென்க. அச்சம் பிரிவரோ என்னும் நினைவானே உண்டாயது. ஆல்: அசை. "உயிரீரும் வாள்" (குறள் - ௩௩௪.) என வள்ளுவனாரும் காலத்தை வாள் என்றோதுதல் அறிக.

## பாட்டு - கருஅ: தலைவி

கூற்று

துறை :—தலைமகன் இரவுக்குறி வந்துழி அவன் கேட்பத் தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. அஃதாவது, தலைமகன் இரவுக்கண் வருதலை எதிர்பார்த்திருந்த தலைவி, அவன் வருகைக்கு முன் மழை வந்து விட்டமையால் இம் மழை யாலே தலைவன் வருகை தடைப்படுங் கொல் என்று அஞ்சி



யிருந்தாள் ; அம் மழையினூடேயும் தலைவன் வந்து தன் மனை யயல் நிற்றலை அறிந்தும் அறியாதாள் போல மழைக்குக் கூறியது.

இதன்கண், 'மழையே! நீ இமயம் துளக்கும் ஆற்ற லுடையை; நீ இரக்கமில்லாதாய் போலும்! நின் ஆற்றற் கேற்ற இடத்தே செல்கின்றிலையாய்த் துணையின்றி வதியும் பெண்டி ராகிய எம்பால் இடர் செய்ய வந்தனை! இஃதென கொலோ!!' என்று தலைவி கூறுகின்றாள்.

கருஅ. நெடுவரை மருங்கிற் பாம்புபட இடிக்கும்
கடுவிசை உருமின் கழறுகுரல் அளைஇக்
காலொடு வந்த கமஞ்சூல் மாமழை

ஆரளி யிலையோ நீயே பேரிசை
இமயமும் துளக்கும் பண்பினை
துணையிலர் அளியர் பெண்டிர்
இஃதேவனோ ?

—ஔவையார்.

(இ - ள்.) நெடுவரை மருங்கின் பாம்புபட இடிக்கும் - நெடிய மலைப்பக்கத்தே உறையும் பாம்புகள் இறந்துபடுமபடி இடிக்கின்ற, கடுவிசை உருமின் கழறுகுரல் அளைஇ - கடிய வேகத்தையுடைய உருமேற்றின் வன்குரலோடு கலந்து மேலும், கடுவிசைக் காலொடு வந்த - கடிய வேகததையுடைய காற்றோடே வந்த, கமம சூல் மா மழை - நிறைந்த சூலினை யுடைய பெரிய மழையே, நீ ஆர் அளியிலையோ - நீதான நின் பெருமைக் கேற்ற பேரருளை உடையை அல்லையோ, பேர் இசை இமயமும் துளக்கும் பண்பினை - நீதான் பெரும்புகழையுடைய இமய மலையையும் அசைக்கும் ஆற்றலுடையை ; அங்ஙனமிருந்தும், துணையிலர் அளியா பெண்டிா - யாங்களோ ஆற்றுந் துணையைப் பிரிந்திருப்போரும நின்னால் இரங்கத் தக்காரும எளிய பெண்பாலாரும் ஆவோம், இஃதெவன் - எமமேல் சினந்து எம்மை இடர் செய்ய வரும் நின்னுடைய இச்செயல் எத்தன்மைத்தாம்.

**விளக்கம்** :—ஔவை மூதாட்டியாரின் புகழ்போல இச் செய்யுள் சொல்லானும் பொருளானும் சிறந்து நிற்றல் உணர்ச்சி கருவியாக உணர்ந்தின்புறுக. அருமையுடைய அரண் சேர்ந்த பாம்பும் பட இடிக்கும் அதிர்ச்சியோடு வருகின்றனை என்பாள், 'நெடுவரை மருங்கிற் பாம்பு பட இடிக்கும்' என்றாள். "விரிநிற நாகம் விடருள தேனும் உருமின் கடுஞ்சினம் சேணின்றும் உட்கும்" (கஉசு.) என்றார் நாலடியினும். இடி, மிக்க வேகமுடையதாகலின் கடுவிசை உருமின் என்றாள். கழறுகுரல் - வன்குரல் என்பதுபட நின்றது கடுவிசை என்பதனைக் காலொடும் கூட்டுக. நின்குரல் கேட்டே யாங்கள் நடுங்கா நின்றேம்

என்பது குறிப்பு. கமம்-நிறைவு. சூல், நீரானே நிறைதல். மாமழை - பெரிய மழை. மழை : விளி. நீ உலகெலாம் புரக்கும் தொழிலுடையை என்று கேட்டுள்ளோம்; அப் புரத்தற் றொழிற்கு இன்றியமையா அருள் நின்பால் இல்லையோ! என்று வியப்பாள், 'ஆரளி யிலையோ நீயே' என்றாள். ஆர் அளி - நின் பெருமைக்குப் பொருந்திய அருள் என்க. உலகிலுள்ள மலைகளில் தலைசிறந்த மலையாகலின், 'பேரிசை இமயம்' என்றாள். நடுக்கின்றி நிலைஇய இமயத்தையும் நடுங்கச் செய்யும் ஆற்றலுடையை என்பாள், 'பேரிசை இமயமும் துளக்கும் பண்பினை' என்றாள். இத்தகைய பேராண்மையுடைய நீ துணையிலாரும், இரங்கத்தக்காரும், பெண்டிருமாகிய எமக்கு இடர் செய்ய வருதல் தகவோ? என்பாள், 'இஃது எவன்?' என்றாள். இஃது என்றது, இச் செயல் என்றவாறு. துணையிலாதார் அளியர் பெண்டிர் என்னும் மூத்திறத்தார்க்கும் வீரர்கள் இடர் செய்யக் கருதார். மூத்திறப் பண்பும் எம்பாற் கண்டு வைத்தும் இச செயல் என்னும் என்று இகழ்ந்தவாறு.

## பாட்டு – கரு௬ : தோழி கூற்று

துறை :—(க) தலைமகன் சிறைப்புறமாகத் தோழி செறிப்பறிவுறுத்தது. அஃதாவது, தலைவன் அணியனாக வந்த பொழுது தமர் தலைவியை வீட்டின் புறம்போகாது காவல்செய்யக் கருதியிருப்பதை அவன் கேட்கும்படி அவன் வருகையை உணராதாள் போலத் தலைவிக்குத் தோழி கூறியது.

(உ) உயிர் செல வேற்றுவரைவு வரினும் அது மாற்றுதற்கு நிகழ்ந்ததூஉமாம்; அஃதாவது, கற்புக் கடம் பூண்ட தலைவிக்கு இறந்து பாடுறும்படி பிறர் மகட் பேசி வந்த காலத்தே அச் செய்தியை அதனை மாற்றற் பொருட்டுத் தலைவி தோழிக்குரைத்ததுமாம்.

கருகூ. தழையணி அல்குல் தாங்கல் செல்லா
நுழைசிறு நுசுப்பிற் கெவ்வ மாக
அம்மெல் ஆக நிறைய வீங்கிக்
கோம்மை வரிமுலை செப்புடன் எதிரின
யாங்கா குவள்கோல் பூங்குழை

என்னும்

அவல நெஞ்சமொ டுசாவாக்
கவலை மாக்கட்டிப் பேதை யூரே.

—வடம வண்ணக்கன் பேரிசாத்தனூர்.

(இ - ள்.) இப் பேதையூர் - இப் பேதைமை யுடைய ஊர்,

அல்குல் தழை அணி தாங்கல் செல்லா - அல்குலிடத்தே அணி யாகின்ற தழை அணியையும் பொறுக்கலாற்றாத, நுழை சிறு நுசுப்பிற்கு எவ்வமாக - நுணுகிய சிறிய இடைக்குத் துன்பமாகும்படி, அம்மெல் ஆகம்

யுடைய மார்பகம் நிறையும்படி பருத்து, கொம்மை வரி முலை செப்புடன் எதிரின - பெருமையையும் தேமலையும் உடைய முலைகள் செப்போடு மாறுபட்டன, பூங்குழை யாங்காகுவள் என்னும் அவல நெஞ்சமொடு - பூத்தொழிலையுடைய குண்டலத்தையுடைய இவள் எந்நிலையை எய்துவளோ என்னும துன்பத்தையுடைய நெஞ்சத்தோடே, உசாவாக் கவலை மாக்கட்டு - ஆராயா நின்ற கவலையையுடைய அறிவிலிகளை யுடைத்தா யிருந்தது.

**விளக்கம்** :—தழையணி - தழையாலாய உடை. தழையுடையை அழகின் பொருட்டு மகளிர் அணிவது பண்டை வழக்கம். "சாரல் தழையணி யல்குன் மகளி ருள்ளும்" (குறு - கஉ௫.) என, முன்னும் வந்தமை காண்க. நுழை - அறிவு நுழைந்து நோக்குதற்குக் காரண மான சிறுமையையுடைய நுசுப் பென்க. நுணுகிய நுசுப்பு என்றவாறு. அல்குல் தழையணி என மாறுக. தழையை அணிந்த அலகுலை என் பாருமுளர். இடை அல்குலைத தாங்குதலன்றுதல் அறிக. அல்குலிடத்தே அணியும் தழை இடையில் யாக்கப்படுதலின் அதனைப் பொறுக்க லாற்றாத என்க. எவ்வம் - துன்பம. அம் மெல் ஆகம் - அழகும் மென்மையும் உடைய மார்பு. கொம்மை - பெருமை ; வட்டமுமாம். வரி - தேமல் ; தொய்யிலுமாம். எதிரின - மாறுபட்டன. யாங்காகுவள்- இங்ஙனம் பருவம் வரப்பெற்றாள் எந்நிலையை எய்துவாளோ பூங்குழை: அன்மொழித் தொகை, அவலம் - துன்பம். உசாவா : செய்யா என்னும்

வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம்; உசாவி என்னும் பொருட்டு. மாக்கள் என்றது, தாய் முதலிய தமரை. இவள் களவானே கற்புக் கடம் பூண்டமை யறியாத ஊர் என்பாள், 'பேதையூர்' என்றாள். கற்புக்கடம் பூண்டமையறியாது இவள் பருவநிலை நோக்கி என்னுகுவள் என்று கவலைகொண்டு ஆராய்வார் என்றலின், இவளை இற்செறிக்க எண்ணுகின்றனர் என்று குறிப்பான் உணர்த்தியவாறு.

இனி, உசாவாக் கவலை மாக்கட்டு என்பதன்கண், உசாவா என்பதனை எதிர்மறைப் பெயரெச்சமாகக் கொண்டு, "உசாவாத (ஏனென்று கேளாத) கவலை மாக்கட்டு எனக்கூறி, கவலையில்லாத மாக்கட்டு என்பது குறிப்பு" என்பாருமுளர். உசாவாத வழியும் கவலை கொள்ளாத வழியும் இற்செறிததற்கிடனின்மையால் இச் செய்யுட்கோதிய துறையொடு படாமையறிக.

உசாவுகின்றனர் கவல்கின்றனர் என்பனவே ஏதுவாதலும் உணர்க

இனி, இரண்டாவது துறைக்குத் தலைவி கூற்றாகக்கொண்டு, என்பருவம் நோக்கி உசாவிக் கவல்கின்றனர் ஆகலின், ஒருகால் வேற்றுவரைவு நேரின் நமர் உடன்படுவர் ஆகலின், அந்நிகழ்ச்சியையும் நாம் விழிப்புடனிருந்து நிகழாமற் பரிகரித்தல் வேண்டும் எனத் தலைவி தோழிக்குணர்த்தினளாகக் கொள்க.

இக்கருத்தறியாதார் "நொதுமலர் வரைவு நேரின் இவள் எந்நிலையினள் ஆவளெனச் சிறிதும் ஆராயாத மாக்களையுடையது என்று பொருள் கொள்க" எனத் துறையொடு சிறிதும் பொருந்தாது கூறினாரும் உளர்.

## மூலமும் உரையும்

**௨௯௧**

## பாட்டு - கசுo : தலைவி கூற்று

துறை :—வரைவு நீட்டிப்ப ஆற்றாளாய தலைமகளை நோக்கித் தோழி, வரைவர் என ஆறறுவிப்புழித் தலைமகள் சொல்லியது. அஃதாவது, வரைதற்கு வேண்டிய பொருளீட்டற் பொருட்டுச் சென்ற தலைவன், காலநீட்டித்தமையால் வருந்திய தலைவியை நோக்கி 'அவர் விரைவில் வந்து நின்னை வரைகுவர் வருந்தற்க !' எனத், தோழி ஆற்றுவித்தாளாகத் 'தலைவர் அங்ஙனம் வரைந்து கொள்வாரல்லர்' எனத் தலைவி கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'தோழி நீ நங் காதலர் விரைவில் வந்து வரைந்து கொள்வர் என்கின்றாய்; அவரோ துன்பமிக்க இப் பெருந்தண் வாடைக்காலத்தும் வாராராயினர் ! இதுதான் தலைவர் வரைந்து கோடலோ !' என்று கூறுகின்றாள்.

கசுo. நெருப்பி னன்ன சேந்தலை யன்றில்
இறவி னன்ன கொடுவாய்ப் பேடையொடு
தடவின் ஓங்குசினைக் கட்சியிற் பிரிந்தோர்
கையற நரலு நள்ளென் யாமத்துப்
பெருந்தண் வாடையும் வாரார்
இஃதோ தோழிநங் காதலர் வரைவே.

—மதுரை மருதனிள நாகனர்.

(இ - ள்) தோழி—, நெருப்பின் அன்ன செந்தலை அன்றில் - நெருப்பை ஒத்த சிவந்த தலையையுடைய அன்றிற்சேவல், இறவின் அன்ன கொடுவாய்ப் பெடையொடு - இறாமீனைப் போன்று வளைந்த வாயினையுடைய பெடையன்றிலோடே, தடவின் ஓங்குசினைக் கட்சியில் - சுடாமரத்தினது உயர்ந்த கிளையின் கண்ணுள்ள சேக்கையிலிருந்து, பிரிந்தோர் கையற நரலும நள் என்னும யாமத்துப் பெருந் தண் வாடையும் வாரார் - துணை வரைப் பிரிந்துறைவோர் செயலற்று வருந்தும் படி ஒலியாநின்ற நள் என்னும் ஓசையையுடைய இக் கூதிர் காலத்து இடையிரவின்கண் மிக்க குளிர்ச்சியுடைய வாடைக் காற்று எறியும் அமையத்தும் வந்திலர், நம் காதலர் வரைவு இஃதோ - நம்முடைய காதலர் விரைந்துவந்து செய்த வரைவு இதுதானோ ?

**விளக்கம்** :—நெருப்பு, அன்றிலின் தலையிலுள்ள சூட்டிற்கு உவமை. தலை - ஆகுபெயர். இறவு - இறாமீன். நெருப்பின், இறவின், என்பவற்றுள் இன் சாரியை தவிர்வழி வந்தன. கொடுவாய் - வளைந்த அலகு. இறவு - அன்றிற் பெடையின் அலகிற்கு உவமை. தடவு -

யுடைய மார்பகம் நிறையும்படி பருத்து, கொம்மை வரி முலை செப்புடன் எதிரின - பெருமையையும் தேமலையும் உடைய முலைகள் செப்போடு மாறுபட்டன, பூங்குழை யாங்காகுவள் என்னும் அவல நெஞ்சமொடு - பூத்தொழிலையுடைய குண்டலத்தையுடைய இவள் எந்நிலையை எய்துவளோ என்னும் துன்பத்தையுடைய நெஞ்சத்தோடே, உசாவாக் கவலை மாக்கட்டு - ஆராயா நின்ற கவலையையுடைய அறிவிலிகளை யுடைத்தா யிருந்தது.

**விளக்கம்** :—தழையணி - தழையாலாய உடை. தழையுடையை அழகின் பொருட்டு மகளிர் அணிவது பண்டை வழக்கம். "சாரல் தழையணி யல்குன் மகளி ருள்ளும்" (குறுங் - கஉ௬.) என, முன்னும் வந்தமை காண்க. நுழை - அறிவு நுழைந்து நோக்குதற்குக் காரண மான சிறுமையையுடைய நுசுப் பென்க. நுணுகிய நுசுப்பு என்றவாறு. அல்குல் தழையணி என மாறுக. தழையை அணிந்த அலகுலை என் பாருமுளர். இடை அல்குலைத் தாங்குதலன்றுதல் அறிக. அல்குலிடத்தே அணியும் தழை இடையில் யாக்கப்படுதலின் அதனைப் பொறுக்க லாற்றாத என்க. எவ்வம் - துன்பம. அம் மெல் ஆகம் - அழகும் மென்மையும் உடைய மார்பு. கொம்மை - பெருமை ; வட்டமுமாம். வரி - தேமல் ; தொய்யிலுமாம். எதிரின - மாறுபட்டன. யாங்காகுவள்- இங்ஙனம் பருவம் வரப்பெற்றாள் எந்நிலையை எய்துவாளோ பூங்குழை: அன்மொழித் தொகை, அவலம் - துன்பம். உசாவா : செய்யா என்னும்

வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம்; உசாவி என்னும் பொருட்டு. மாக்கள் என்றது, தாய் முதலிய தமரை. இவள் களவானே கற்புக் கடம் பூண்டமை யறியாத ஊர் என்பாள், 'பேதையூர்' என்றாள். கற்புக்கடம் பூண்டமையறியாது இவள் பருவநிலை நோக்கி என்னுருவள் என்று கவலைகொண்டு ஆராய்வார் என்றலின், இவளை இற்செறிக்க எண்ணுகின்றனர் என்று குறிப்பான் உணாத்தியவாறு.

இனி, உசாவாக் கவலை மாக்கட்டு என்பதன்கண், உசாவா என்பதனை எதிர்மறைப் பெயரெசசமாகக் கொண்டு, "உசாவாத

(ஏனென்று கேளாத) கவலை மாக்கட்டு எனக்கூறி, கவலையில்லாத மாக்கட்டு என்பது குறிப்பு" என்பாருமுளர். உசாவாத வழியும் கவலை கொள்ளாத வழியும் இற்செறிததற்கிடனின்மையால் இச் செய்யுட்கோதிய துறையொடு படாமையறிக.

உசாவுகின்றனர் கவல்கின்றனர் என்பனவே

ஏதுவாதலும் உணர்க

இனி, இரண்டாவது துறைக்குத் தலைவி கூற்றாகக்கொண்டு, என்பருவம் நோககி உசாவிக் கவல்கின்றனர் ஆகலின், ஒருகால் வேற்றுவரைவு நேரின் நமர் உடன்படுவர் ஆகலின், அந்நிகழசசியையும் நாம் விழிப்புடனிருந்து நிகழாமற் பரிகரித்தல் வேண்டும் எனத் தலைவி தோழிக்குணர்த்தினளாகக் கொள்க.

இக்கருத்தறியாதார் "நொதுமலர் வரைவு நேரின் இவள் எந்நிலையினள் ஆவளெனச் சிறிதும் ஆராயாத மாக்களையுடையது என்று பொருள் கொள்க" எனத் துறையொடு சிறிதும் பொருந்தாது கூறினரும் உளர்.

## மூலமும் உரையும்

௨௬௧

## பாட்டு - கரு0 : தலைவி கூற்று

துறை :—வரைவு நீட்டிப்ப ஆற்றாளாய தலைமகளை நோக்கித் தோழி, வரைவர் என ஆற்றுவிப்புழித் தலைமகள் சொல்லியது. அஃதாவது, வரைதற்கு வேண்டிய பொருளீட்டற் பொருட்டுச் சென்ற தலைவன், காலநீட்டித்தமையால் வருந்திய தலைவியை நோக்கி 'அவர் விரைவில் வந்து நின்னை வரைகுவர் வருந்தற்க !' எனத், தோழி ஆற்றுவித்தாளாகத் 'தலைவர் அங்ஙனம் வரைந்து கொள்வாரல்லர்' எனத் தலைவி கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'தோழி நீ நங் காதலர் விரைவில் வந்து வரைந்து கொள்வர் என்கின்றாய்; அவரோ துன்பமிக்க இப் பெருந்தண் வாடைக்காலத்தும் வாராராயினர் ! இதுதான் தலைவர் வரைந்து கோடலோ !' என்று கூறுகின்றாள்.

கரு0. நெருப்பி னன்ன செந்தலை யன்றில்
இறவி னன்ன கோடுவாய்ப் பேடையொடு
தடவின் ஓங்குசினைக் கட்சியிற் பிரிந்தோா
கையறு நரலு நள்ளென் யாமத்துப்
பெருந்தண் வாடையும் வாரார்

இஃதோ தோழிநங் காதலர் வரைவே.

—மதுரை மருதனிள நாகனர்.

(இ - ள்) தோழி—, நெருப்பின் அன்ன செந்தலை அன்றில் - நெருப்பை ஒத்த சிவந்த தலையையுடைய அன்றிற்சேவல், இறவின் அன்ன கொடுவாய்ப் பேடையொடு - இறாமீனைப் போன்று வளைந்த வாயினையுடைய பெடையன்றிலோடே, தடவின் ஓங்குசினைக் கட்சியில் - தடாமரத்தினது உயர்ந்த கிளையின் கண்ணுள்ள சேக்கையிலிருந்து, பிரிந்தோர் கையற நரலும நள் என்னும யாமத்துப் பெருந் தண் வாடையும் வாரார் - துணைவரைப் பிரிந்துறைவோர் செயலற்று வருந்தும் படி ஒலியாநின்ற நள் என்னும் ஓசையையுடைய இக் கூதிர் காலத்து இடையிரவின்கண் மிக்க குளிர்ச்சியுடைய வாடைக் காற்று எறியும் அமையத்தும் வந்திலர், நம் காதலர் வரைவு இஃதோ - நம்முடைய காதலர் விரைந்துவந்து செய்த வரைவு இதுதானே?

**விளக்கம்** :—நெருப்பு, அன்றிலின் தலையிலுள்ள சூட்டிற்கு உவமை. தலை - ஆகுபெயர். இறவு - இறுமீன். நெருப்பின், இறவின், என்பவற்றுள் இன் சாரியை தவிர்வழி வந்தன. கொடுவாய் - வளைந்த அலகு. இறவு - அன்றிற் பெடையின் அலகிற்கு உவமை. தடவு -

தடாமரம் - குறியதன்கீழ் ஆக்குறுகி உகரமேற்றுத் தடவு என்றாயிற்று. மேலே: இறவும் அது. கட்சி - கூடு. அன்றிற் பறவைகள் இணை பிரியாது, வாழும் இயல்புடையன. இவற்றின் குரல் துணை பிரிந் தோர்க்குத் துணையை நினைவூட்டி வருத்தும் ஆகலின், பிரிந்தோர் கையற நரலும் என்றாள். நரலும் - ஒலிக்கும். "சேவலோடுறை செந் தலை அன்றிலின் நாவினால் வலி எஞ்சநடுங்குவாள்." (கம்ப சூர்ப்ப-எசு) என்றார் பிறரும். பிரிந்தோர் கையற நரலும் என்று படர்க்கையிற் கூறினாளேனும் நான் அன்றிற் குரலாலே வருந்தாநிற்க என்றுணர்த்து தல் அவள் கருத்தென்க. நள்என் என்பது, ஒலிக்குறிப்பு. செறிந்த இருளையுடைய எனினுமாம். வாடைக்காற்று மிக்க குளிருடைத்தாய்ப் பிரிந்தாரை நலிதலின், பெருந்தண் வாடை என்றாள். வாடையெறியும் போதும் வந்து அருளாதார் வருவர் என்றெண்ணுதல் பேதைமை என்பாள், 'இதுவோ வரைவு' என்றாள். இங்ஙனம் அருளாமை தானே நின்றாற் கூறப்படும் வரைவு என்றிகழ்ந்தவாறாம்.

## பாட்டு - ககசுக : தலைவி கூற்று

துறை :—இரவுக்குறிக்கண் வந்த தலைமகனைக் காப்பு மிகுதி யான எதிர்ப்படப் பெறாத தலைமகள், பிற்றை ஞான்று தலைமகன் சிறைப்புறத்தானாக, தோழிக்குச் சொல்லியது. அஃதாவது, இரவின்கண் வந்த தலைவனைத் தலைவி சென்று காண வாய்ப்புப் பெறாமையால், தலைவன் வறிதே மீண்டான்; மறுநாள தலைவன் இரவின்கண் வந்து மனையயலே நிற்றலை அறிந்த தலைவி, முதனாள் தான் அவனைக

காணவியலாமைக்குக் காரணங் கூறுவாளாய் அவன் வருகையறியாதாள் போன்று தோழிக்குக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'நெருநல் விரா அந்தோ மழையின் நனைந்து நம்மனையயலே வந்துநின்ற தலைவர் என்பட்டனரோ ; யான் அவரைச் சென்று காணற்கோ, பற்பல இடையூறுடையனாயினேன்' என்று இரங்கிக் கூறுகின்றாள்.

கசுக. பொழுதும் எல்லின்று பெயலும் ஓவாது
கழுதுகண் பனிப்ப வீசும் அதன்றலைப்
புலிப்பல் தாலிப் புதல்வர்ப் புல்லி
அன்னா வென்னும் அன்னையு மன்னே
என்மலைந் தனன்கோல் தானே தன்மலை
ஆரம் நாறு மார்பினன்
மாரி யானையின் வந்துநின் றனனே.

—நக்கீரனார்.

(இ - ள்.) தோழி—, பொழுதும் எல்லின்று பெயலும் ஓவாது கழுது கண்பனிப்ப வீசும் - பொழுதோ இருண்டுவிட்—து, மழையோ ஒழிவின்றிப் பேய்களும கண் சிம்புளித்து



நடுங்கும்படி வீசாநின்றது, அதன் தலைப் புலிப்பல் தாலி புதல் வன் புல்லி - அதற்குமேலும் புலிப்பல் கோத்த தாலியையுடைய

மகனைத் தழுவிக்கொண்டு, அன்னை அன்ளு என்னும் - நற்தாயும் என்னை அன்னையே என்று அடிக்கடி விளியா நின்றாள், தன் மலை ஆரம நாறும் மார்பினன் - தனது மலைக்கண் தோன்றிய

சந்தனம் கமழும் மார்பையுடைய நந்தலைவன், மாரியானையின் வந்து நின்றனன் - அவ்வமயத்தே மழையில் நனைந்து வரும் யானைபோல வந்து நம்மனைப்புறத்தே நின்றிருந்தான், அன்னோ என் மலைந்தனன் தான் - அந்தோ பின்னர் அவன் தான் என் செய்தனனோ அறியேன்.

விளக்கம் :—பொழுது - ஈண்டுக் காலம் என்னுந் துணையாய் நின்றது. எல் என்னும் பெயரடியாய் எல்லின்று என்னும் வினைச

சொல் பிறந்தது எல் - இரவு. இருளுக்கு ஆகுபெயராய் நின்று எல்லின்று என வினைசசொல்லாயிற்று. பொழுதும் எல் இன்று எனக் கண்ணழித்துச "சூரியனும் விளக்கம் இலனாயினன்" என்பாரும் உளர். இரவின்கண சூரியன் விளக்கமிலனாயினன் என்பது சிறவாமை உணர்க. பெயல் - மழை. ஓவாது - ஒழிவின்றி. பேய்கள் அருவுடம் புடையன அவைகளும் கண்பனிப்ப வீசும் என்றது, மழையின் வேகம் குறித்து நின்றது. கண் பனிப்ப - கண் சிம்புளித்து நடுங்க என்க. மழைத் தாரை முகத்திலறையுங்கால் கண் சிம்புளித்தல் இயல்பாதல் அறிக. அதன்றலை - அப்பெயல் வீசும் இடையூற்றின் மேலும் என்ற வாறு. பொழுது இருண்டதாயினும், பெயல் பனிப்ப வீசியதாயினும் இவற்றிற்கிடையாமல் யான் சென்று தலைவனைக் காண்பல். அந்தோ அதன்மேலும் செல்லற்கியலாத இடையூறுளளாயினேன் என்பாள், 'அதன்றலை' என்றாள்.

புலிப்பல்தாலி - புலிப்பல் கோத்தியற்றிய ஒருவகையணி. இத் தாலியணி சிறுவர்க்கணியும் அணி யென்க. "புலிப்பல் தாலிப் புன் றலைச் சிறாஅர்" (புறம். உஎச) எனப் பிறரும் கூறுதலறிக.

புதல்வன் - ஈண்டுத் தலைவியின் தம்பியாகிய சிறுவன் போலும். இருட்பொழுதில் மழை பெய்தலானே புதல்வனையும் புல்லியமையாது என்னையும் அடிக்கடி விளித்துக்கொண்டிருந்தாள் என்பாள், அன்னை யும் அன்னா வென்னும் என்றாள். அன்னா - விளி.

இனிப் புதல்வனைப் புல்லி உறங்காதவளாய் அவனை அடிக்கடி அன்னா என விளிப்பள் எனினுமாம். ஆண்மகவினைப் பெண்மகவு போலவும் பெண்மகவினை ஆண்மகவுபோலவும் விளித்தல் தாயர் வழக்கமாதலை இன்றும் காணலாம்.

மலைதல் - செய்தல். 'இத்தகைய இடையூறுண்மையால் அவன் வந்து நின்றமையை உணர்ந்தும் யான் செல்ல வியலாது கிடந்தேன்; பின்னர் அவன் என் செய்தானோ?' என்று இரங்குவான், 'அன்னோ என் மலைந்தனனோ' என்றாள். அன்னோ: இரக்கக் குறிப்பிடைச் சொல்.

அவன் வருகையை நுண்ணிதின் உணர்ந்து கிடந்தேனாகலின் அவன் பூசிய சந்தன மணத்தாலே அவன் வரவினை உணர்நதேன்



என்பது தோன்ற, 'தன்மலை ஆரம் நாறுமார்பினன்' என்றாள். மாரி யானையின் என்றது, அவன் அப்பெயலின் கண்ணும் வந்தமைக்கு இரஙகியபடியாம்.

## பாட்டு - கசுஉ : தலைவன் கூற்று

துறை :—வினைமுற்றி மீளுந் தலைமகன் முல்லைக்குரைப்பா னுய் உரைத்தது. அஃதாவது, தலைவியைப் பிரிந்து தான் மேற் கொண்டு சென்ற தொழில் முற்றிய பின்னர், மீண்டு வரும் தலைவன் வழியின்கண் மலர்ந்த முல்லையை நோக்கிக் கூறியது.

இதன்கண், ' முல்லாய் ! முல்லாய் ! நீ என்னைக் கண்டு எள்ளி நகைப்பாய் போலே

இருந்தாய் ; துணையிலாரை எள்ளி நகுதல் சால்புடைமையாமோ சாற்றுதி !' என்று தலைவன் மலர்ந்த முல்லையை நோக்கி மொழிகின்றான்.

கசுஉ. கார்புறந் தந்த நீருடை வியன்புலத்துப்
பலர்புகு தரூஉம் புல்லென் மாலை
முல்லை வாழியோ முல்லை நீநின்
சிறுவெண் முகையின் முறுவல்

கோண்டனை

நகுவை போலக் காட்டல்
தகுமோ மற்றிது தமியோர் மாட்டே.

—கருவூர்ப் பவுத்திரனார்.

(இ - ள்) முல்லை வாழி ஓ முல்லை - முல்லாய் நீ வாழ்வாயாக ஓ முல்லாய், கார் புறந்தந்த நீர் உடை வியன் புலத்து - முகிலாலே காக்கப்பட்ட நீர்வளம் மிக்க அகன்ற இம்முல்லை நிலத்தே, பலர் புகுதரூஉம் புல்லென்மாலை - உலகிற் பலரும்

தத்தம நாள்வினை முடித்துத் தம இல்லத்தே புகுதற்குக் காரண மான புற்கென்ற இம்மாலைப் பொழுதின்கண்ணே, நீ நின சிறு வெண்முகையின் முறுவல் கொண்டனை - நீ நினது சிறிய வெள்ளிய அரும்புகளாலே புன்னகை செய்வாயாய், தமியோர் மாட்டு நகுவைபோலக் காட்டல் - துணைவரைப் பிரிந்து தமியராயோரி டத்தே அவரை எள்ளி நகைத்தல் போன்று காட்டாதேகொள்,

இது தகுமோ - இங்ஙனம் பிறரை எள்ளி நகைத்தல் நின் பெரு மைக்குத தகுதியாகுமோ?

விளக்கம் :—முல்லை நிலமாகலின் யாற்றுநீர் புறந்தாராமை தோன் றக் 'கார் புறந்தந்த நீர்' என்றான். புறந்தருதல் - பாதுகாத்தல். வியன்புலம் - அகன்ற நிலம். ஈண்டு முல்லை நிலத்தின் மேற்று. தானுந் தன் வினைமுடித்து வருகின்றானாகலின், அந்நினைவால் பலர் புகு தரும் மாலை என்றான். மாலைக்காலத்தே எவ்வுயிரும் தத்தம் சேக்கை புகுதல் உண்மையின், பலர் என உயர்திணையின்மேல் வைத்தோதினும்

## மூலமும் உரையும்

உ௩டு

எவ்வுயிரும் எனக்கொள்க. தலைவியைக் காணப்பெறாது புற்கென்ற நெஞ்சம் உடையனாதலின் அதனை மாலைமேலேற்றிப் 'புல்லென் மாலை' என்றான் என்க. துணையுடன் இருப்பார்க்கு அம்மாலையே இன்மாலை யாதலும் உணர்க. முல்லை - விளி. முல்லையரும்பு பல்லிற் குவமை யாதலின், 'சிறுவெண்முகை முறுவல்' என்றான். முறுவல் - புன்னகை கொண்டனையாய்க் காட்டல் என்க. காட்டல் - அல்லீற்று எதிர் மறை வியங்கோள். காட்டற்க என்றவாறு. இது என்றது, இங்ஙனம் காட்டுவது என்று அசசெயலைச் சுட்டிநின்றது. இஙஙனமன்றி, காட்டல்

என்பதனை உடன்பாட்டு வினையாகக்கொண்டு காட்டலாகிய இது என்று கூறுவாருமுளர்.

முல்லை கற்புடைமைக்கு அடையாளப்பூ என்பதுபற்றி அத்தகைய சால்புடைய நினக்கு எள்ளிப் பிறரை இகழ்ந்து நகுதல் தகுமோ என்றான் என்க. எள்ளிப்பிறரை இகழாமை, சான்றாண்மையாதலும் அறிக.

முல்லை தலைவனை எள்ளுதற்கு ஏது, கார்த்தொடக்கத்தே மீண்டு வருவல் என்று கூறி அப்பருவம் கடந்தபிற் சேறல் என்க. தலைவிக்கு யான் கார்ப் பருவத் தொடக்கத்தே வருவன் என்ற வாய்மை தவறி அப்பருவம் நெடுநாள் நிகழ்ந்தபின் வருகின்றானாகலின், தன்னைப் பிறர் எள்ளல்கூடும் என்னும் நினைவுடையனாய் முல்லை தன்னை எள்ளுவதாக எண்ணினன் என்று நுண்ணிதின் உணர்க.

## பாட்டு - கசுஈ : தலைவி கூற்று

துறை :—தன்னுட் கையாறெய்திடு கிளவி. அஃதாவது, தலைவன் பிரிவாலே வருந்தி ஆற்றாமை கொண்ட தலைவி காம மிகுதியாற் செயலற்றுக் கூறியது,

இதன்கண், தலைவி நள்ளிரவின்கண் முழங்கும் கடலை நோக்கி 'அந்தோ! நீயும் என்போல நள்ளிரவின்கண்ணும் உறக்கமின்றிக் கதறுகின்றனை; நீ யாராலே இங்ஙனம் வருத்த மடைகின்றனை?' என, இரங்கிக் கூறுகின்றாள்.

கசுரு. யாரணங் குற்றனை கடலே பூழியர்
சிறுதலை வெள்ளைத் தோடுபரந்

தன்ன

மீனார் குருகின் கானலம்

பெருந்துறை

வெள்வீத் தாழை திரையலை
நள்ளென் கங்குலுங் கேட்கு

நின்குரலே.

—அம்மூவனார்.

(இ - ள்.) கடலே பூழியர் சிறுதலை வெள்ளைத் தோடு பரந்தன்ன - கடலே கூறுக பூழி நாட்டினரது சிறிய தலையையுடைய வெள்ளாட்டின் தொகுதி பரவினாற்போன்ற, மீன் ஆர் குருகின் கானலம் பெருந்துறை - மீனைத் தின்னும் கொக்குகள் பரவிய



சோலைசூழ்ந்த அழகிய பெரிய துறையிடத்தே, வெள் வீத் தாழை திரையலை - வெள்ளிய பூவையுடைய தாழையை அலைகள் அலைக்கின்ற, நள் என் கங்குலும் நின் குரல் கேட்கும் - நள்ளென்னும் ஓசையையுடைய இடையிரவிலும் நின் ஆரவாரம் கேட்கப்படுகின்றது, யார் அணங்கு உற்றனை - நீ யாராலே வருத்தமுற்றனை?

விளக்கம் :—அணங்கு - வருத்தம். பூழியர் - பூழி நாட்டினர். பூழி செந்தமிழ் நிலம் சேர் பன்னிரு நிலத்தினுள் ஒன்று. இதனை,

"தென்பாண்டி குட்டம் குடங்கற்கா
வேண்பூழி
பன்றி யருவா வதன்வடக்கு—நன்றாய
சீத மலாடு புனனாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிருநாட் டெண்.

என்னும் வெண்பாவானும் அறிக.

அந்நாடு வெள்ளாடு மிக்க நாடென்பதனை, "பூழியர் உருவத் துருவின் நாண்மேயலாரும்" எனவரும் நற்றிணையானறியலாம். வெள்ளை - வெள்ளாடு; "தகர்விரவு துருவை வெள்ளையொடு விரவி" (௬௧௬.) எனவரும் மலைபடு கடாத்தினும் அஃதப் பொருட்டாதலறிக. தோடு - தொகுதி வெள்ளையாட்டின் தொகுதி கொக்குத் தொகுதிக்கு உவமை பரந்தன்ன - பரவினாற்போல. குருகு - கொக்கு. கானலம் பெருந்துறை என்பதன்கண் அம் சாரியை எனலுமாம்

வெள்வீ - வெள்ளைமலர். வெள்வீத் தாழையைத் திரையலைக்கும் என்றது, காதல் மலர்ந்த என் உள்ளத்தைத் துன்பம் அலைக்கும் என்னும் குறிப்பிற்று. 'உலகமெல்லாம் துஞ்சும் இந் நள்ளென் யாமத்தும், தலைவர் அணங்குற்று யான் துயிலாது அழிகின்றேன்; என்போல நீயும் இவ்வியாமத்தே அரற்றுகின்றாய் நீ யாராலே அணங்குற்றனையோ?' என்று இரங்கியவாறு.

"பாய்திரை பாடோவாப் பரப்புநீர்ப் பனிக்கடல்
துவறத் துறந்தனன் துறைவனென்
றவன்றிறம்
நோய்தெற வுழப்பார்க ணிமிழ்தியோ
எம்போலக்

காதல்செய் தகன்றூரை யுடையையோ நீ''
(கலி-௧௨௬.) எனவரும் கலித்தொகைச் செய்யுள் ஈண்டு கருதற்பாலது.

## பாட்டு - ௧௯௪ : காதற்பரத்தை கூற்று

துறை :—காதற்பரத்தை தலைமகட்குப் பாங்காயினர் கேட்ப உரைத்தது. அஃதாவது, தலைவி தன்னைப் புறங்கூறினாள் எனக்கேட்ட காதற்பரத்தை, 'தலைமகட்குப் பாங்காயினர் உளராயவழி அவர் கேட்கும்படி யான் தலைவிக்குத் தீது புரிந்திலேன்', எனத் தெரித்தோதியது.

### மூலமும் உரையும்

௨௫௭

இதன்கண், 'தலைவி தன் அறியாமையாலே புலந்து என்னைப் புறங்கூறுகின்றனள்; அவள் புறங்கூறுமளவு யான் ஏதம் உடையேனல்லேன்; உடையேனாயின் இப்பெருங்கடல் என்னை விழுங்குவதாக' என்று காதற்பரத்தை ஓதுகின்றனள்.

கஞ௪. கணைக்கோட்டு வாளை கமஞ்சூல் மடநாகு
துணர்த்தேக் கொக்கின் தீம்பழம் கதூஉம்
தொன்றுமுதிர் வேளிர் குன்றூர்க் குணாது
தண்பெரும் பவ்வம் அணங்குக தோழி
மனையோள் மடமையிற் புலக்கும்
அனையே மகிழ்நற்கியா மாயினம் எனினே.

—மாங்குடி மருதனார்.

(இ - ள்.) தோழி - தோழியே! மனையோள் மடமையில் புலக்கும் - தலைவி தன் அறியாமையாலே புலந்து கொள்ளற்குக் காரணமாகும், அனையேம் யாம் மகிழ்நற்கு ஆயினம் எனினே - அத்தன்மை யுடையேமாய் யாம் தலைவன்றிறத்து ஆயினேமாயின், கணைக்கோட்டு வாளை கமம் சூல் மடநாகு - திரண்ட கொம்பையுடைய வாளைமீனினது நிறைந்த கருவையுடைய மடப்பமுடைய பெண்மீன், துணர்த்தேம் கொக்கின் தீம் பழம் கதூஉம் - கொத்துக்களையுடைய தேமாமரத்தினது இனிய பழத்தினைக் கௌவித் தின்றற்கிடமான, தொன்றுமுதிர் வேளிர் குன்றூர்க்குணாது - பழமை முதிர்ந்த வேளிருடைய குன்றூருக்குக் கிழக்கின்கண் கிடக்கின்ற, தண் பெரும் பவ்வம் அணங்குக - தண்ணிய பெரிய கடல் என்னை வருத்துவதாக.

**விளக்கம் :**—கணை - திரட்சி. கோடு - கொம்பு. கமஞ்சூல் - நிறைந்த கரு. நாகு - இளமை. ஈண்டு மடநாகு என்றதனால் பெண்மை இளமை யிரண்டனையும் குறித்துப் பெண்மீனுக் காயிற்று. துணர் - கொத்து. இலை, பூ, காய், பழம் என்னும் இவற்றின் கொத்து கட்குத் துணர் பொதுவில் வரும். கொக்கு - மாமரம். புளிமாவின் நீக்குதற்குத் தேக்கொக்கு என்றாள். தேக்கொக்கு - தேமாமரம் என்க. தேமாவின் பழமாகலின் '**தீம்பழம்**' என்றாள்.

குளத்தின்கண் வாழும் வாளைமீன், கனிந்து தான் வாழும் குளத்தின்கண் வீழ்ந்த கனியைமட்டும் உண்ணுவதல்லது, அம்மரத்திலேறிக் கனி பறித்துண்ணுதன்றே! அங்ஙனமே யாமும் எம்பால் வலிய வந்துழித் தலைவனை நுகர்தல் அல்லது யாமே வலிந்து சென்று அவனை மடக்கிக்கொண்டு நுகர்கின்றேமில்லை! தன்னயல் வீழ்ந்த கனியை உண்ணும் அம்மீன், குற்றமுடைய தாகாமை போல், யாமும் குற்றமுடையேம் அல்லேம் என்பாள், 'வாளை மடநாகு கொக்கின் தீம்பழம் கதூஉம்' என **உள்ளுறை உவமம்** எடுத்தோதினள் என்க. பவ்வம் -



கடல். தன்பால் குற்றமில்லா திருக்கவும் தன்னைப் புறங்கூறல் அறியாமை என்பாள், 'மடமையிற் புலக்கும்' என்றாள். அனையேம் - அத்தகைய குற்றமுடையேம், குற்றமாவது, தலைவனை வலிந்து பற்றிக் கோடல்.

கடல் அணங்குதலாவது, மூழ்குவித்துக் கொல்லுதல். யாம் குற்றமிலேம் தலைவி அறியாமையாற் புறங்கூறுகின்றாள் என்பது கருத்து.

## பாட்டு - கசுரு : தலைவன் கூற்று

துறை :—பின்னின்ற தலைமகன் மறுக்கப்பட்டுப் பெயர்த் தூங் கூடலுறு நெஞ்சிற்குச் சொல்லியது. அஃதாவது, தலைவியைப் பெறுதற்குத தோழியின்பால் ஆற்றவும் இரந்தும் அவளாற் குறைநேரப்படாத தலைவன், அரியளாய தலைவியைப் பெரிதும அவாவும் தன் நெஞ்சை நோக்கிச் சொல்லியது.

இதன்கண், தலைவன் நெஞ்சை நோக்கி 'நெஞ்சமே! கள்ளுண்டு களித்த பின்னரும், களுண்டாற் போன்று, நீ அரிய ளாய தலைவியை விருமபியதன்மேலும், அவள் அழகு கண்டு கழிகாமம் கொள்ளா நின்றனை; இது தகவன்று,' என்று கடிந்து கூறுகின்றான்.

கசுரு. மகிழ்ந்ததன் றலையும் நறவுண் டாங்கு
விழைந்ததன் றலையும் நீவெய் துற்றனை
அருங்கரை நின்ற உப்போய் சகடம்
பெரும்பெய றலையவீங் தாங்கிவள்
இரும்பல் கூந்தல் இயலணி கண்டே.

—பரணர்.

(இ - ள்.) நெஞ்சே ! நீ அளியைகாண் அஃதெற்றால் எனின், இவள் இரும் பல் கூந்தல் இயல் அணி கண்டு - பெறற் கரியளாகிய இத் தலைவியினது கரிய பலவாகிய கூந்தலின் இயற் கையழகைக் கண்டு, அருங்கரை நின்ற உப்பு ஒய் சகடம் பெரும் பெயல் தலைய வீந்தாங்கு - செல்லுதற்கரிய மணற்கரையிடத்தே செல்லவியலாது நின்ற உப்பைச் செலுத்துகின்ற வண்டி பெரிய மழை பெய்தலாலே அழிந்தாற்போன்று இவள் மறுக்கப்பட்டமையானே அழிந்து மேலும், மகிழ்ந்ததன் தலையும் நறவு உண் டாங்கு - முன்னரே கள்ளுண்டு களிப்பேறிய பின்னரும் கள்ளை உண்டாற்போல, விழைந்ததன் தலையும் - அவளை முன்னரே விழைந்தமையாலே வெய்துற்ற பின்னரும், வெய்துற்றனை - மேலும் விரும்பா நின்றனை ஆகலான்.

**விளக்கம்** :—மகிழ்தல் - கள்ளுண்டு களித்தல். முன்னரே நிரம்பக் கள்ளுண்டு களித்தவன், அக் களிப்பாலே தூண்டப்பட்டு மேலும் கள்ளுண்டு உள்ள அறிவும் ஒழிந்தாற்போல என்று விரித்தோதுக. காமத்தாலே பெண் விழைந்து அப் பெண்மை நலம் தூண்டலாலே மேலும் கழிகாமம் கொண்டனே என்றான் என்க. கழிகாமம் கொண்ட வழியும் நன்னிலை யறியாது தோழி மறுக்கின்றாளாகலின், அக் காமத்தால் நாண், ஆண்மை முதலியன அழியப்பெற்றனே என்பான், கடத்தற்கரிய மணற்கரையிடத்தே நின்று அதனைக் கடத்த இயலாத உப்பு வண்டி மேலும் மழை பெய்யப் பெற்றமையால் தன் ஆக்கமாக வமைந்த உப்பெல்லாம் அழிந்து வறிதானாற் போன்று, முன்னரே எய்தவியலாக் காமத்துறை நின்று மேலும் மறுக்கப்பட்டமையால் உள்ளழிந்து வெய்துற்றனே என்றிரங்கினான் என்க.

ஐந்து பகுதியவாகக் கை செய்யப்படும் கூந்தல் ஆகலின் பல்கூந்தல் என்றான். இயல் அணி - இயற்கை யழகு. அவையாவன, நெடுமை, அறல்படல், ஒளியுடைமை, அடர்வு, கடை குழலுதல், கருமை முதலியன எனக.

பெரும் பெயல் - பெரிய மழை.
வெனெசசம். வீதல் - அழிதல்.

தலைய - பெய்யா நிற்ப; செய

இன்னையாகலின் நீ அளியை என்பது குறிப்பெசசம். "கடல் விளை யமுதம் பெயற்கேற்றாஅங கு குருகி யுகுதல்" (நற் அஅ) என்றும், "நெடுவெள்ளுப்பின் நிரம்பாக் குப்பை பெரும்பெயற் குருகியாஙகு" (அகநா - உ0௬) என்றும் பிற சான்றோர் கூறுமாற்றானும் உபபு பெயலாலே வீயும் என்பதறிக.

## பாட்டு - கசுசு : தோழி கூற்று

துறை :—காப்பு மிகுதிக்கண் தோழி தலைமகட்கு உரைத்தது. அஃதாவது, தலைவி தாய் முதலியோரானே இற்செறித்துப் புறம் போகாதபடி காவல் செய்யப்பட்ட இன்னல் நிலையினை எய்தியபோது, தோழி அந்நிலையின் தன்மையைக் கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கிப் 'பண்டெல்லாம் நாம் வதிதற்கு இனிதாயமைந்த இவ்வூர், இப்பொழுதோ நாம வதிதற்கு இயலாத இன்னாதாயிற்று' என்று கூறுகின்றாள்.

கசசு. தண்கடற் படுதிரை பெயர்த்தலின்
வெண்பறை

நாரை நிரைபெயர்ந் தயிரை யாரும்
ஊரோ நன்றுமன் மாந்தை
ஒருதனி வைகிற் புலம்பா கின்றே.

—கூடலூர் கிழார்.

(இ - ள்.) தோழீ—, தண்கடல் படுதிரை பெயர்த்தலின் - தண்ணிய கடலின்கண்ணே தோன்றிய அலைகள் மோதிப் உசப

பெயர்த்தலானே, வெண்பறை நாரை நிரை பெயர்ந்து அயிரை ஆரும் - ஆண்டிருந்த வெள்ளிய சிறகுகளையுடைய நாரை வரிசையாகப் பறந்து வேறிடத்திற்குப் போய் ஆண்டு அயிரைமீனை இரையாகப் பெற்றுண்ணுகின்ற, மாந்தை ஊரோ நன்று மன் - இம் மாந்தையூர் தன்கண் வாழ்வார்க்கு மிகவும் இனியது அத்தன்மை கழிந்தது, ஒருதனி வைகில் புலம்பாகின்று - இப்பொழுதோ துணைவரைப் பிரிந்து தனித்திருப்பார்க்கு வருத்தத்தைத் தருவதாயிருந்தது.

**விளக்கம்** :—திரை பெயர்த்தலின் என்றது, கடலருகே அமர்ந்திருக்கும் நாரையைக் கடலலை மோதி நிலை பெயர்த்தலால் என்றவாறு. அந் நாரையினம் பறந்து வேறிடம் சென்று அயிரையாரும் என்றது, இற்செறிப்பாலே நம்நிலை பெயர்த்த தமரின் நீங்கித் தலைவனோடே சென்று அவன் மனையில் இன்பம் நுகர்தலன்றி வேறு வழியிலேம் என்றவாறு. இனி, இவ்வூர் இருந்து வாழ்தல் அரிதென்பாள் 'மாந்தை தனிவைகிற் புலம்பாகின்று' என்றாள். ஊரோ நன்று மன் என்றது, தலைவனைக் காணுத பண்டைக் காலமெல்லாம் இவ்வூர் நமக்கு எத்துணையின்பமா யிருந்தது; அத்தன்மை இன்றிலது என்று கழிந்ததற் கிரங்கியவாறு.

மாந்தை, ஒரு கடற்கரைப் பட்டினம். அஃது இக்காலத்தே மாதை என்று வழங்கப்படுகின்றது. "மல்லனீர் மாந்தையார் மாக்கடுங் கோதைக்கு" என வரும் முத்தொள்ளாயிரச் செய்யுளடியானும் மாந்தை என்பதே பெயராதல் அறிக. மாந்தை என்று பாடமோதுவாருமுளர். மாந்தை இந்நூல் ௩௪-ம் செய்யுளினும் ஓதப்பட்டிருத்தல் அறிக. மேற்றிசை யாத்திரிகரால் இவ்வூர் மாதை எனப் பிற்காலத்தே வழங்கப்பட்ட தென்பர். ரா. இராகவ ஐயங்கார் அவர்கள், மாந்தையென்னும் ஊர் பட்டினமன்ற அகநாட்டுள்ளது என்ப.

தனிமை - ஈண்டுத் தாய் முதலிய தமர் சூழ இருந்தும் தலைவனின்மையால் காட்டினூடே தனித்துறைவாள் போல்வதொரு உணர்ச்சி உடையளாதல்.

## பாட்டு - கசூஎ : செவிலித்தாய் கூற்று

துறை:—கடிநகர்ச் சென்ற செவிலித்தாய் நற்றாய்க்கு உரைத்தது. அஃதாவது, கற்புக் காலத்தே தலைவி தலைவனுடன் இல்லறம் நடத்துழி ஆண்டுச் சென்று வந்த செவிலித்தாய், தலைவி தற்கொண்டாற் பேணும் சிறப்பை நற்றாய்க்கு எடுத்துக் கூறியது.

இதன்கண், 'பண்டு நம்மனையிலே ஆயத்தோடு ஆட்டயர்ந்து திரிந்த நம் மகள், இப்போது அவள் கணவனில்லத்தே ஊக்கத்துடன் அட்டில் புகுந்து, விழிப்புடன் சுவைபட அடிசில் இயற்றிப் பொழுதறிந்து தன் கணவற்கிட அவன் இனிதென

### மூலமும் உரையும்

உசுக

மகிழ்தல் கண்டு, அகமகிழா நின்றனள்,' செவிலி கூறுகின்றாள்.

என்று தாய்க்குச்

கசூஎ. முளிதயிர் பிசைந்த காந்தண் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கழுமத்

தான்றுழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவ னுண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதல்
முகனே.

—கூடலூர்கிழார்.

(இ - ள்.) தோழி—, முளி தயிர் பிசைந்த காந்தள் மெல் விரல் - முதிர்ந்த தயிரைப் பிசைந்த செங்காந்தள் மலரின் இதழ் போன்ற மெல்லிய விரல்களை, கழாது கழுவுறு கலிங்கம் உடீஇ - நீரானே கழுவாமலே தோய்த்துத் தூய்மையுற்ற ஆடையை உடுத்திக்கொண்டு, குவளை உண்கண் குய்ப்புகை கழும - குவளை மலர்போன்ற மையுண்ட கண்களிலே தாளிப்பாலுண்டாய புகை கதுவாநிற்ப, தான் துழந்து அட்ட தீம் புளிப் பாகர் - தானே துழாவிச் சமைத்த இனிய புளிப்பையுடைய குழம்பை, இனி தெனக் கணவன் உண்டலின் - இது மிக இனிதாயிருப்பதொன்
றென்று கூறித் தன் கணவன் உண்ணுதலானே, ஒண்ணுதல் முகன் நுண்ணிதின் மகிழ்ந்தன்று - ஒள்ளிய நெற்றியையுடைய நம் மகளினது முகம் நுண்ணிதாக மகிழாநின்றது.

**விளக்கம் :**—முளி தயிர் - முதிர்ந்த தயிர். முளிதல் - உலர்தல். அஃதாவது, நீர்த்தன்மை அறுதல். ஈண்டு தயிர் முதிர்தலாவது, பாலை வற்றக் காய்ச்சி நீர்சுண்ட நன்கு தோய்ந்து இறுகுதல் என்க. இறுகிய தயிராகலின், பிசைதல் வேண்டிற்று. பண்டு தொழில் செய்து காழ்ப் பேறாத மெல்விரல் என்பாள், 'காந்தள் மெல்விரல்,' என்றாள். காந்தள்- இதழ்க்கு ஆகுபெயர். காந்தள் மலரின் இதழ்போன்ற மெல்விரல் என்க. தாளித்தற்கிட்ட நெய் முறுக வெந்தமையின் தயிர் பிசைந் தவள் தாளித்தற் கெழுந்தாளாக, அப்போது உடுத்திய ஆடை நெகிழ்ந் த்து ; நெகிழ்ந்த ஆடையை உடுத்தற்கு விரலை நீராற் கழுவச்செல்லின் நெய் முறுகிப் பதனழியும். ஆதலின், விரலைக் கழுவாமலே நெகிழ்ந்த ஆடையை உடுத்திக்கொண்டு தாளிப்பாளாயினள். கழுவுறு கலிங்கம் என்றது, அவள் அப்பொழுது உடுத்தியிருந்த ஆடை நன்கு தோய்த் துத் தூய்மை செய்யப்பட்டிருந்த ஆடை என்றவாறு. தூய்தாக உள்ள ஆடையைத் தயிர் தோய்ந்த விரலாலே உடுக்க இசையார் ஆகவும், அடிசில் பதன் கெடாமைப் பொருட்டு அதனைச் சிந்தியாது உடுத்தாள் என்றவாறு. இங்ஙனம் கூறவறியார் தயிர் பிசைந்த கையைத் துடைத்த ஆடையைத் துவையாது உடுத்து என்று உரை விரிப்பாராயினர். விரல் கழாஅது கழுவுறு கலிங்கத்தை உடுத்தென்க. கண்ணின் அழ கும் மென்மையும் கூறுவாள், 'குவளையுண்கண்' என்றாள். புகை கது வலைப் பொறாத கண்கள் என்பது குறிப்பு. கழும - அஃதாவது கண்





ணிற் புகை நிறைய என்றவாறு. கமழ என்று பாடமோதி கண்களில் புகை மணப்ப என்பாருமுளர். இதனினும் கழும என்ற பாடமே சிறப்புடைத்தாதலுணர்க. 'தான் துழந்தட்ட' என்றது, ஏவற் சில தியர் இருப்பவும் தானே துழாவி அட்ட என்றவாறு. புளிப்பாகர் - ஒருவகைக் குழம்பு. கணவற்கிட்டு அவன் உண்ணுங்கால் அதன் சுவையைப் பாராட்டுவானாய், 'இனிது இனிது' என்று கூறி உண்ண என்க. கணவன் மகிழ்ந்துண்ணக் கண்டதால் உண்டாய உள்ள மகிழ்ச்சி, மெய்ப்பாடு மாத்திரையானே முகத்தே தோன்றலின் ' நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகன் ' என்றாள்.

துறை :—பொருள் வலிக்கும் நெஞ்சிற்குக் கிழவன் உரைத்தது. அஃதாவது 'இன்மையதிளிவும் உடைமையதுயர்ச்சியும்' எடுத்துக்காட்டித் தலைவியைச் சிறிது பிரிந்துபோய்ப் பொருளீட்டல் இன்றியமையாதெனத் தூண்டா நின்ற தன் நெஞ்சிற் குத் தலைவன் கூறியது.

இதன்கண், 'நெஞ்சே! நறுமையும் தண்மையும் உடையாளும், நல்ல மேனியையுடையாளும, பணைத்தோளினளும் ஆகிய தலைவியின் தோள்களை யாம என்றும் தணத்தலின்மையால் புணர்தலும் இலமாயினேம்; அவளைப் பிரியின் வாழ்தலோ அதனினும் இலம்; ஆகலின், யாம் உடம்படேம்' எனத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

கசுஅ. மாரிப் பீத்திகத்து நீர்வார் கொழுமுகை
இரும்பனம் பசுங்குடை பலவுடன் போதிந்து
பெரும்பெயல் விடியல் விரித்துவிட் டன்ன
நறுந்தண் ணியளே நன்மா மேனி
புனற்புணை யன்ன சாயிறைப் பணைத்தோள்

மணத்தலுந் தணத்தலு மிலமே
பிரியின் வாழ்தல் அதனினும் இலமே.

—சிறைக்குடி யாந்தையார்.

(இ - ள்.) நன் மா மேனி - நெஞ்சே நந்தலைவி நல்ல மாமையை உடைய மேனி, மாரிப் பித்திகத்து நீர் வார் கொழு முகை - கார்காலத்து மலரும் பிச்சியினது நீர் ஒழுகும் கொழுவிய அரும்புகளில், இரும்பனம் பசுங்குடை பலவுடன் பொதிந்து - கரிய பனையின் குருத்தாலே செய்த பசிய குடையில் பலவற்றையிட்டு மூடி, பெரும் பெயல் விடியல் விரித்து விட்டன்ன - பெரிய மழைபெய்தலையுடைய விடியற் காலத்திலே விரித்து விட்டாற்போன்ற, நறுந்தண்ணியள் - நறுமணமும் தண்மையும் உடையவள், புனற்புணை அன்ன சாயிறைப்



பணைத்தோள் - நீரில் விடும் தெப்பத்தை ஒத்த மெலிந்த சந்தினையுடைய பருத்த அவள் தோள்களை, மணத்தலும் தணத்தலும் இலம் - பொருந்துதலும் பிரிதலும் இலமாயினேம், பிரி யின் வாழ்தல் அதனினும் இலம் - அவளைப் பிரிந்தாலோ உயிர் வாழ்தல் அதனினும் காட்டில் இலமாவேம்.

**விளக்கம் :**—மாரிப்பித்திகம் - கார்காலத்தே மலரும் இயல்புடைய பிச்சி. மழைக்காலத்தே முகை எடுத்தலின் நீரொழுகும் கொழுமுகை யாயிற்று. கொழுமுகை - கொழுத்த அரும்பு. பனம் பசுங்குடை என்றது, பனங்குருத்தாற் செய்த பூங்குடலையை. முதல்நாள் மாலைக் காலத்தே பிச்சிக் கொழுமுகைகளைப் பனங்குடையிலே யிட்டு மூடி வைத்து மறுநாள் மழைபெய்யா நின்ற காலையிலே அப்பூங்குடலையைத் திறந்து பரப்பிவிட்டால் அக்குடையும் அரும்பும் நறுமையும் தண்மையும் உடையவாதல் போன்று நறுமையும் தண்மையும் உடைய மேனியள் என்றவாறு.

புணை - தெப்பம். சாய் இறை - வளைந்த சந்துமாம். பணைத் தோள் - மூங்கில் போன்ற தோளுமாம். எப்பொழுதும் ஒருவா துறையா நின்றேம் என்பான், 'மணத்தலும் தணத்தலும் இலம்' என்றான். இங்ஙனமாக உடனுறைதலாலே யாம் இனிதே வாழா நின்றேம் என்பது குறிப்பு.

பிரிந்தால் வாழ்தல் இலம் என்றது, தணத்தலும் மணத்தலும் இலமாயினமன்றே அவ்வின்மையினும் பிரிந்தால் தேற்றமாக வாழ்தல் இலமாதல் உறுதி என்பான், 'அதனினும் இலம்' என்றான்.

## பாட்டு - கசுசு : தலைவி கூற்று

துறை :—(க) கற்புக் காலத்துத் தெளிவிடை விலங்கியது. அஃதாவது, பரத்தமை காரணமாகத் தலைவி ஊடியிருந்த காலத்து, தான் தீதிலன் ஆதல் கூறித் தலைவன் தெளிவிக்க முயன்றானாக; அதனானும் ஊடல் தீராத தலைவி புலந்து கூறியது.

## (உ) இனி, தோழி வரைவு

நீட்டித்தவழி வரைவு

கடாயதூஉமாம். அஃதாவது, தலைவன் வரையாது ஒழுகுதல் கண்ட தோழி வரைந்து கோடற்பொருட்டுத் தலைவனுக்குக் கூறியது எனினுமாம்.

கசுகூ. சுரஞ்செல் யானைக் கல்லுறு கோட்டிற்
றெற்றென இறீஇயரோ ஐய
மற்றியாம்
நம்மோடு நக்க வால்வெள் ளெயிறே
பாணர், பசுமீன் சோரிந்த மண்டை
போல
எமக்கும் பெரும்புல வாகி
நம்மும் பெறேஎம் இறீஇயரெம் முயிரே.

—வெள்ளிவீதியார்.



(இ - ள்.) ஐய யாம் நம்மொடு நக்க வால் வெள் எயிறு -
ஐயனே! யாம் பண்டு நம்மோடே சிரித்த தூய வெள்ளிய பற்கள், சுரம் செல் யானைக் கல்லுறு கோட்டில் தெற்றென இறீஇயர்-பாலைநிலத்தே செல்லுகின்ற யானையினது மலையைக் குத்திய கொம்பைப்போல விரைவாக முறிந்து கெடுவனவாக, பாணர் பசுமீன் சொரிந்த மண்டைபோல - பாணர் தாம்

பிடித்த பச்சை மீனைப் பெய்துவைத்த மண்டையைப் போன்று, எமக்கும் பெரும்புலவு ஆகி - எமக்கும் பெரிய வெறுப்பைத் தருவதாகி, நும்மும் பெறேம் - நும்மையும் அடையப் பெறேமாகி, எம் முயிர் இறீஇயர் - நும்மொடு நட்ட எம்முயிர் கெடுக.

**விளக்கம்** :—தெளிவிடை விலங்கல் என்னும் இத்துறை களவுக் காலத்தும் உண்மையின் அதனின் விலக்குதற்குக் கற்புக்காலத்துத் தெளிவிடை விலங்கல் என்று துறைப்பெயர் கூறினர். இஃது 'இன்ன தல்லதிது வென மொழிதல்' என்னும் உத்தி என்க. கல் உறுகோடு - மலையிலே குத்தப்பட்ட கொம்பு. யானைகள் கோட்டானே மலைகளைக் குத்திப் பெயர்த்தல் இயல்பு. நீர் வறண்ட பாலைநில மலையாகலின் மலை பெயராது கோடு முறிந்தது என்பாள், 'சுரஞ் செல் யானை' என்றாள். சுரஞ்செல் யானை என்புழி, சுரஞ்செல் என்னும் அடை குறிப் பேது வென்க. தெற்றென - விரைவாக "தெற்றெனச செலவு கடைக் கூட்டுதிர்" (பொருநரா - கஎசு) என்புழியும் அஃதப் பொருட் டாதல் அறிக.

பண்டு, தலைவி தன்னேடு நகைத்து விளையாடி வேற்றுமையின்றிக் கலந்த நட்புடையளாயிருந்தமையைத் தெளிவிக்குங்கால் தலைவன் கூறினுகை, அது கேட்ட தலைவி, 'பன்மாயக் கள்வனுகிய நும்மியல் உணராது நும்மொடு நக்க எயிறு கெடுக!' என்றும், 'நட்ட உயிர் கெடுக' என்றும் புலந்தாளாகக் கருதுக. 'நும்மொடு நக்க வால்வெள் ளெயிறு' என்ற குறிப்பால் நும்மொடு நட்ட எம்முயிர் என்றும் விரித்துக் கொள்க. 'நும் பொய்மாயக் கூத்தை யாம் பண்டு உணராதிலேம்'

என்பது குறிப்பு.

பாணர் தாம் பிடித்த மீனையிட்ட மண்டை அப்பாணர்க்கே பிறி

தொன்றற்கும் பயன்படாது புலவு நாறிக் கெட்டாற் போன்று, எமக்கும் வெறுக்கத் தக்கதாய் விட்ட வுயிர் மக்கும் ஆகாது கெடுக என்றாள் என்க.

இனி, இரண்டாவது துறைக்குத் தோழி கூற்றாகக்கொண்டு, 'நீயோ வரைந்து கொள்கின்றாயில்லை; தலைவி பெரிதும் இன்னற்கு ஆளாயினள்; பண்டு நம்மோடு நக்க அவள் எயிறும் நட்ட வுயிரும் அழிக' என்று தலைவனை வெறுத்துரைத்தாளாகக் கொள்க.

## பாட்டு - கஎ0 : தலைவி கூற்று

துறை:—வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. அஃதாவது, தலைவன் வரைபொருள் நி.பித்

மூலமும் உரையும்

தம் பிரிந்து போனகாலத்தே, 'தலைவி ஆற்றாது இறந்து படுவாளோ?' என்று கவலை கொண்ட தோழிக்குத் தலைவி 'யான் ஆற்றுவன் நீ கவலற்க' என்பதுபடச் சொல்லியது.

இதன்கண், 'தலைவனுடைய நட்பு, கெடாப் பெருநட்பு என்பதை யான் நன்கு அறிவேன்; அதன சிறப்பறியா மாக்கள் பற்பல பேசிற் பேசுக; அந்நட்பை நினைந்தே யான் ஆற்றுவல்' என்று தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

கஎ௦. பலவும் கூறுகவஃ தறியா தோரே
அருவி தந்த நாட்குர லெருவை
கயனு டியானை கவள மாந்தும்
மலைகெழு நாடன் கேண்மை
தலைபோ காமைநற் கறிந்தனென் யானே.
—கருவூர்கிழார்.

(இ-ள்.) அருவி தந்த நாட் குரல் எருவை - மலையருவியாலே கொணர்ந்து தரப்பட்ட புதிய கதிரையுடைய கொறுக்

கைச்சியை, கயன் ஆடியானை கவளம்மாந்தும் - குளத்தின்கண் நீராடாநின்ற யானை உணவாக வுண்ணுகின்ற, மலைகெழு நாடன் கேண்மை - மலைகள் பொருந்திய நாட்டையுடைய தலை வனது நட்பு, தலை போகாமை யான் நற்கு அறிந்தெனன் - கெடாமையை யான் நன்றாக அறிந்துள்ளேன், அஃது அறியா

தோர் - அக் கேண்மையினியல்பறியாதோர்,

பலவும் கூறுக - தத் தமக்குத் தோன்றியவாறே

பலவும் கூறுக அதனாலென் ?

**விளக்கம்:**—அறியாதோர் என்றது, ஈண்டுத் தோழியை முன்னி லைப்புறமொழியாகக் கூறியதாம். தான் நாடன் கேண்மை தலை

போகாமை நற்குணர்ந்து ஆற்றியிருப்பவும், ஆற்றாளாய்க் கருதி ஆற்றும் பொருட்டுத்தோழி பலப்பல கூறுகின்றாளாகலின், அஃதறியா தோர் பலவும் கூறுக என்றாள். அஃது என்றது யான் அறிந்ததனை

எனறவாறு.

அருவி தந்த நாட்குரல் எருவை கயனாடு யானை கவள மாந்தும் என்றது, 'யான் முயலாது வைத்தும் பால்வரை தெய்வம் கொணர்ந்து தந்த கேண்மையைச் சுவைக்கின்றேன்', என்னும் உள்ளுறை உடைய தென்க. எருவை - கொறுக்கைச்சி. புதிது பூத்தகேண்மையாகலின், நாட்குரல் எருவை என்றாள். நாட்குரல் - புதிய கதிர். கயநாடியானை என்றும் பாடம். தலை போகாமை - அழியாமை. தலை - அசைநிலை: தலை நின்றது என்புழிப்போல. மலைகெழுநாடன் கேண்மை என்ற தும் அம்மலை போன்று நின்று நிலவிய கேண்மையுடையான் என்னும் குறிப்பிற்று. பலரும் என்றும் பாடம்.

# பாட்டு - கஎக : தலைவி கூற்று

துறை :—வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் உரைத்தது. அஃதாவது, தலைவன் வரைபொருள் நிமித்தம் பிரிந்து சென்றுவிட்டபின்னர்ப் பிறர் மகட்பேசி வந்தாராக அவர் திறத்துத் தலைவி தோழிக்குக் கூறியது.

இதன்கண், பிறர் வரையப்புக்கமை அறிந்த தலைவி, 'தோழீ ! மீன்படுததற்குக் குளத்திலிட்ட வலையின்கண் விலங்குபட்டாற் போன்று இவ்வயலோர் வரைவுமேற்கோடல் என்ன பயனுடைத்து' என்று கூறுகின்றாள்.

கஎக. காணினி வாழி தோழி யாணர்க்
கடும்புன லடைகரை நெடுங்கயத் திட்ட
மீன்வலை மாப்பட் டாஅங்
கிதுமற் றெவனோ நொதுமலர் தலையே.

—பூங்கணுத்திரையார்.[1]

(இ - ள்.) தோழி இனிக் காண் - தோழியே இப்பொழுது நிகழ்வதனைக் காண்பாயாக, யாணர்க் கடும்புனல் அடைகரை நெடுங்கயத்து இட்ட - புது வருவாயையுடைய கடிதாயொழுகும் புனல் நிரம்பிய நெடிய குளத்திலே போகட்ட, மீன்வலை மாப் பட்டாங்கு - மீன் பிடித்தற்குரிய வலையிலே வேண்டாத விலங்கு அகப்பட்டாற் போல, நொதுமலர் தலை - இவ்வயலாரிடத்து, இது எவன் - இவ்வரைவு

முயற்சி யாது பயனுடைத்து.

**விளக்கம்** :—இனி - இப்பொழுது. காண் என்றது இப்பொழுது அயலார் மகட்பேசி வந்துள்ள நிகழ்ச்சியை நோக்கு என்றவாறு. தலைவனுக்கென இருக்கும் என்திறத்து நொதுமலர் அஃதறியாது வந்து வரைவு முயல்வது, மீன் வலையில் மாபட்டது போலும் என்றாள் என்க. எதிர்பாராததொன்று வாளா நேர்ந்தது என்று வருந்தியபடி. இது - இம்முயற்சி. எவன் - யாது பயன்உடைத்து. பயனில் முயற்சி என்றவாறு. யாணர்க் கடும்புனல் அடைகரை நெடுங்கயத்து என்றது, திருவும் ஒழுக்கமும் நிறைந்த உயர்குடி எனத் தன் குடிப் பெருமை கருதிக் கூறியது என்க. உயர்குடிப் பிறப்புடைய யாம் கற்புக் கடம்பூண்டமை யறியார் வீணே முயல்கின்றனர் என்றிரங்கிய வாறு. இதற்கு நமர் உடன்படாமைக்கு வேண்டிய அறத்தொடு நிற்றல் முதலியன செய்க என்பது குறிப்பு. நொதுமலர் - அயலார். நொதுமலர் தலை இது எவன் என்றியைத்துக் கொள்க.

## பாட்டு - கஎ௨ : தலைவி கூற்று

துறை :—வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. அஃதாவது வரைபொருள் நிமித்தம்

(பாடம்) 1. பூங்கண்ணுத்திரையார்

## மூலமும் உரையும்

உ௬எ

தலைவன் பிரிந்தானாக ஆற்றாமை மிக்க தலைவி அவன் திறத்து இரங்கித் தோழிக்குக் கூறியது.

இதன்கண், 'துன்பமிக்க இம்மாலைக் காலத்தே யாம் துய ருழந்து கிடக்கும்படி பிரிந்துசென்ற நந்தலைவர், அவர் போய விடத்துத் தனிமை வருத்தத்தாலே என்னுற்றனரோ!' என்று எண்ணி என் னெஞ்சம இடையறாது வருந்தா நின்றது, எனத் தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

கஎ௨. தாஅ வஞ்சிறை நொப்பறை வாவல்
பழுமரம் படரும் பையுண் மாலை
எமிய மாக ஈங்குத் துறந்தோர்
தமிய ராக இனியர் கொல்லோ
ஏழூர்ப் பொதுவினைக் கோரூர் யாத்த
உலைவாங்கு மிதிதோல் போலத்
தலைவரம் பறியாது வருந்துமென்
னெஞ்சே.

—கச்சிப்பேட்டு நன்னாகையார்.

(இ - ள்) தோழி—, தாஅ அஞ்சிறை நொப்பறை வாவல்- வலிமிக்க அழகிய சிறகினையும் நொய்தாகப் பறத்தலையும் உடைய வௌவால்கள், பழுமரம படரும் பையுள் மாலை - பழுத்த மரங்களைத் தேடிச் செல்லாநின்ற இடும்பையுடைய மாலைப்

போழ்தினும், எமியம் ஆக ஈங்குத் துறந்தோர் -

யாம் தமியே

மாகும்படி இவ்விடத்தே நம்மை விட்டுப் பிரிந்துபோன நந்தலைவர், தமியராக இனியர் கொல்லோ - தாம் சென்று தங்குமிடத்தே தனித்துறைவோராயிருப்பவும் இனிமையுடையராய் இருத்தலமையுமோ, என் நெஞ்சு - இதனை எண்ணு நின்ற என் நெஞ்சம், ஏழ் ஊர்ப் பொதுவினைக்கு ஓர் ஊர் யாத்த உலைவாங்கு மிதிதோல் போல - ஏழு ஊர்களில் உள்ள மக்கட்குச் செய்யவேண்டிய பொதுவாகிய கொற்றொழிலுக்கு இவற்றுள்

ஒரே ஊரிடத்தே அமைக்கப்பட்ட

கொல்லுலையிலே செறித்த துருத்தியைப்

போன்று, தலை வரம்பு அறியாது வருந்தும -

எல்லையறியாமல் வருந்தா நிற்கும்

**விளக்கம்** :—என் வருத்தத்திற் கன்று யான் ஆற்றேனுவது என்பது குறிப்பு. தா என்பதற்குத் தாவிப்பறத்தலையுடைய எனினுமாம். பிற பறவைகள் போலாது வெளவால் உயர்ந்தும் தாழ்ந்தும் தாவித்தாவிப் பறக்கும் இயல்புடைத்து. இறகுகளானன்றித் துகிலாற் செய்தது போன்று அழகிதாகலின் அஞ்சிறை என்றார். பிற பறவை போலாது மெத்தென மெத்தெனப் பறத்தலின் 'நொப்பறை', என்றார். நொ - நொய்வுடைமை. பழுமரம் - ஆலமரம் முதலியன. வாவல் இரவின் கண் இரைதேடியுண்ணும் இயல்பினவாகலின் மாலைப் போதின்கண்;

தத்தம் சேக்கையினின்று பழுமரங்களைத் தேடிப் பறந்து செல்வன; ஆதலால் வாவல் பழுமரம் படரும் மாலை என்றாள். 'குறுஞ்சினை வேம்பின் நறும்பழம் உணீஇய, வாவல் உகக்கும் மாலையும்'' (குறு-

௩௩௩) என்றார் பிறரும்.

" காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகிய

காமநோய் மாலை மலரு''தலானே 'பையுண் மாலை'

என்றாள். மாலையும் எனவேண்டிய

சிறப்பும்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது. பையுள் - துன்பம். எமியம் - யாம்தமியம்; தன்மைப் பன்மை. யாம் பிரிவாலே தமியராய் வருந்துமாறு போல அவரும் வருந்துவர் அல்லரோ என்பாள், 'இனியர் கொல்லோ' என்றாள். இனியராதல் எங்ஙனம்? என்றவாறு.

கொல்லர்கள் ஊர்தொறும் உழவர் முதலியோர்க்கு வேண்டிய கருவிகளை அவ்வப்போது செய்துகொடுத்து ஆண்டு முடிவில் ஊதியம் பெறும் வழக்கமும் அவர்கள் ஊரவர்க்குப் பொதுத் தொழில் செய்வோர் ஆகிய வழக்கமும் இன்றும் காணப்படுகின்றன. ஏழூர்க்குத் தொழில் பொதுவிற் செய்யவேண்டிய கொல்லுலையிற் றுருத்தி இடையறாது இரவு பகல் பரபரப்போடு இயங்கும் அன்றோ அவ்வாறு என் நெஞ்சம ஓயாது துன்பம் உழக்கும் என்றபடி. தலை, அசைநிலை.

## பாட்டு - ௬௩: தலைவன் கூற்று

துறை :—குறைமறுக்கப்பட்ட தலைமகன், தோழிக்கு

உரைத்தது. தலைவியைப் பெறுதற்குத் துணைசெய்யும்படி தோழியின்பால் இரந்துநின்ற தலைவனுக்குத் தோழி உடம்படா

ளாய் மறுத்தவழித் தலைவன் 'இனி எனக்கு மடலல்லதில்லை வலி,' என்று அறிவித்தது.

இதன்கண், தலைவன் தோழியை நோக்கி, 'நீ குறைமறுத் தொழிந்தனை; தலைவியை எய்துதற்கு எனக்கொரு வழி தோன்றுகின்றது; அஃதென்னையோ எனின், மடன்மா வேறி நாணுத் துறந்து, யானுற்ற நோயை எதிருரும உணரத தெருவினின்று இன்னல் செய்தது இது என்று யான் தூற்றுநிற்ப, இவ்வூரினர் அவள் பழியை யாண்டும் கூறுநிற்பர்; அவ்வழி இவளை யான் எய்துதலேயாப ; அது செய்ய யான் போகின்றேன்' என்று கூறுகின்றான்.

கள௫. பொன்னோ ஆவிரைப் புதுமலர் மிடைந்த

பன்னூல் மாலைப் பனைபடு கலிமாப்
பூண்மணி கறங்க வேறி நாணட்
டழிபடர் உண்ணோய் வழிவழி சிறப்ப
இன்னள் செய்த திதுவென முன்னின்
றவள் பழி நுவலு மிவ்வூர்
ஆங்குணர்ந் தமையினீங் கேகுமா றளனே.

—மதுரைக் காஞ்சிப்புலவன்.

(இ - ள்.) 'தோழீ —, பொன்னேர் ஆவிரைப் புதுமலர் மிடைந்த - பொன்னை ஒத்த நிறமுடைய ஆவிரையினது புதிய பூக்களைச் செறித்துப் புனைந்த, பல் நூல மாலைப் பனைபடு கலிமாப பூண் மணி கறங்க ஏறி - பலவாகிய நூல்களையுடைய மாலைகளாலே ஒப்பனை செய்யப்பட்ட பனைமடலாலே இயற்றிய குதிரையை அதன் கழுத்திற் பூட்டிய மணி ஆரவாரிக்குமபடி ஏறி, அழிபடர் உள்நோய் நாண் அட்டு வழிவழி சிறப்ப - மிக்க நினைவாகி நெஞ்சினுள்ளே உள்ள காமநோய் தன் பகையாகிய நாணத் தைக் கொன்று மேலும மேலும் மிக்கு வளரா நிற்ப, இன்னள் செய்தது இது என - இக்கிழியின்கண எழுதபபட்ட இவள் என்னைச் செய்த தீங்கு இது என்று யான் எடுததுக் கூறுநிற்ப, இவ்வூர் முன்னின்று இவள் பழி நுவலும் - இவ்வூரில் வாழ்வோர் என் முன்னே நினறே இவள செய்த பழிச்செயலை யாவரும அறியக் கூறுநிற்பர், ஆங்கு உணர்ந்தமையின்- அவ்வாறு செய்து தலைவியை எய்தும் வழியை யான் இபபொழுது அறிநதமையாலே, ஈங்கு ஏகுமாறு உளன் - இவ்விடததினின்றும் அச் செயலைச் செய்யும் பொருட்டுப் போதற்கிருக்கின்றேன் ; யான் செலவவல்.

**விளக்கம்** :—பொன், ஆவிரை மலர்க்கு நிறத்தால் வந்த உவமை. நோ - உவம உருபு. புதுமலர் - அன்றலர்ந்த மலர். மிடைதல் - மாலையிற் செறியப் புனைதல். மடற்குதிரைக்கு ஆவிரம்பூமாலை சூட்டுதல் மரபு. "அணிப்பூளை ஆவிரை எருக்கொடு பிணித்து யாத்து" என்றும், "அணியலங் காவிரைப் பூவோ டெருக்கின் பிணையலங் கண்ணி மிலைந்து" என்றும் வரும் கலித்தொகைப் பாக்களானும் உணர்க. பனைபடு கலிமா - பனைமடலால் இயற்றிய குதிரை. பூண்மணி : வினைத்தொகை. கறங்குதல் - ஒலித்தல்.

காமநோய்க்கு, நாணம் பகைப்பண்பாதலின், பகைவருள் பகைவர் எளியரைக் கொன்று வழி வழிச சிறத்தல் இயல்பாகலின், 'உண்ணோய் நாணட்டு வழிவழிச சிறப்ப' என்றான். சிறிது நாண் நின்ற வழியும் மடலேறல் கூடாமையின், அதனைத் துவர அழித்து என்பான், 'நாணட்டு' என்றான். அடுதல் - கொல்லுதல். காமத்திற்கு நாண் பகைக்குணமாதலை,

> "காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
> யானோ பொறேனிவ் விரண்டு" (குறள் - ௧௨௪௭.)

எனவரும் திருக்குறளானும், இதற்குப் பரிமேலழகர் எழுதிய "ஒன்றற் கொன்று மறுதலையாய இவ்விரண்டனையும்" என்னும் உரையானும் உணர்க. மடலேறுவார் நாணினைத் துவரத் துறந்தே ஏறல் வேண்டும்

என்பதை,

> "நோனா வுடம்பும் உயிரு மடலேறும்
> நாணினை நீக்கி நிறுத்து" (குறள். ௧௧௩௨)

எனவரும் திருக்குறளானும் உணர்க.

அழிபடர் - மிக்க நினைவு. காமநோய் நினைவு மாத்திரையே யாகலின் அழிபடர் என்றான். அழிபடராகிய நோய், உண்ணோய் எனத் தனித்தனி கூட்டுக. உண்ணோய் அகத்தில் நெஞ்சினின்று வருத்தும் நோய். வழிவழி என்றது - மேலும் மேலும் என்றவாறு. சிறத்தல் - புறத்தார்க்கு விளங்கித் தோன்றல்.

மடலேறுவார் தலைவியின் உருவைக் கிழியிலெழுதி அதனைக் கைக்கொண்டு நின்று போவார் வருவார்க்கு அதனைச் சுட்டி 'இவள் இது செய்தவள்' என்று கூறுவாராகலின், அக்கிழியைச் சுட்டுவான் போல 'இன்னள்' என்றான். இது - இக்காமநோய், இம்மடன்மா வேறுதலை எனினுமாம். ஊர் - ஆகுபெயர். ஆங்குணர்ந்தமையின் - அவ்வாறு செய்தலை உணர்ந்தமையாலே. ஈங்கு ஏகுவேன் என்றது, அம்மடன்மா ஏறற்கு இவ்விடத்தினின்றும் போவேன் என்றவாறு.

## பாட்டு - ௧௭௪ : தலைவி கூற்று

துறை :—பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது. அஃதாவது, பொருளீட்டல் நிமித்தம் தலைவன் பிரிந்து போன செய்தியைத் தோழி தலைவிக்கு கூறிய பொழுது தலைவி தன்னுட் புலந்து தோழிக்குக் கூறியது.

இதன்கண் 'சால்புடையராகிய தலைவர், நம்மைப் பிரிந்து கடத்தற்கரிய பாலைநில வழியிலே பொருளை நினைந்து செல்வாரா யின், இப்பொருளே பொருளாக மதிப்பவரல்லால் இவ்வுலகில் அருளைப் பொருளாக மதிப்பார் யாரும் இலர் போலும்' என்று தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

களச. பேயன்மழை துறந்த புலம்புறு கடத்துக்
கவைமுட் கள்ளிக் காய்விடு கடுநொடி
துதைமென் தூவித் துணைப்புற விரிக்கும்
அத்தம் அரிய என்னார் நத்துறந்து
பொருள்வயிற் பிரிவா ராயினிவ்
வுலகத்துப்
பொருளே மன்ற பொருளே
அருளே மன்ற ஆருமில் லதுவே.

—வெண்பூதியார்.

(இ - ள்.) தோழி—, பெயல் மழை துறந்த புலம்பு உறு கடத்து-முகில் மழைபெய்தலைத் தவிர்ந்தமையாலே தனிமைத் தன்மை பொருந்திய பாலை நிலத்தே, கவை முள் கள்ளிக் காய் விடு கடுநொடி - கவர்த்த முள்ளையுடைய கள்ளியினது காய்

பக்குவிடுதலால் உண்டாகும கடிய ஒலி, துதைமென் தூவித் துணைப் புறவு இரிக்கும் - நெருங்கிய மெல்லிய சிறகரையுடைய காதற்றுணைகளாகிய புறுக்களைப் பிரிந்தோடச் செய்யும், அத்

## மூலமும் உரையும்

உ௲௬

தம் அரிய என்னார் - அருவழிகள் கடத்தற்கு அரியன என்று

கருதாராய், நம் துறந்து - பிரியவொண்ணாத நம்மையும் நீத்து, பொருள் வயின் பிரிவாராயின் - நந்தலைவர் பொருளீட்டற் பொருட்டுப் பிரிந்து போவாரெனின், இவ்வுலகத்து - இம்மண் ணுலகத்தின்கண்ணே, பொருளே மன்ற பொருள் - பொருள் ஒன்றே தேற்றமாக உறுதிப் பொருளாவது போலும், மன்ற ஆரும் இல்லது அருளே - தேற்றமாகத் தன்னை மேற்கொள்ளு வோர் யாரும் இல்லாத பயனில் பொருள் அருளே போலும்.

**விளக்கம் :**—பெயல் - முகில் : ஆகுபெயர். மழை துறத்தலாவது - பெய்யாது தவிர்தல். புலம்பு - தனிமை; அஃதாவது பசும்புற்றலை காணாது கருப்பொருள்கள் அழிந்து முதற்பொருளாகிய நிலமாத்திரை யாய்த் தனித்தல். கடம் - பாலை நிலம். கள்ளிமுள் கவர்த்திருத்தலின், 'கவைமுட்கள்ளி' என்றாள். விடுதல்-பக்குவிடுதல்; அஃதாவது வெடித் தல். வெடிக்கும் ஒலி கடியதாகலின், 'கடுநொடி' என்றாள். நொடி - ஒலி. துணைப்புறவு என்ற குறிப்பால் காதற்றுணையாகிய ஆண் பெண் புறவுகளை என்க. கூடிமகிழ்ந்திருந்த துணைப்புறவுகளைக் கடுநொடி இரிக் கும் என்றது, காதலன்பாலே கூடியிருந்த எம்மைத் தலைவரின் கொடிய பொருள் வேட்கை பிரித்தது என்பதாம். இனிய இவ்வுள்ளு றையைப் பிறர் காணாது வாளா போயினர்.

துணைப்புறவு இரிக்கும் என்ற குறிப்பால் துணைப்புறவுகளைப் பிரிந்து ஓடச்செய்யும் என்று விரித்துக் கொள்க. அத்தம் - அருவழி; அரிய - கடத்தற்கு அரியன என்க. நம் துறந்து என்றது, துறத்தற் கொண்ணாத நம்மைத் துறந்தும் என்னும் பொருள்பட நின்றது. நந் தலைவர் மிக்க சால்புடையர்; அவரே தாம் மேற்கொள்ளவேண்டிய அருளைத் துறந்து பொருளாசையாலே பிரிவாராயின், ஏனையோர் அப்பொருளாசை துறந்து அருளை மேற்கோடல் இயலாதென்பது ஒருதலை என்பாள், 'அருள் யாரும் இல்லது' என்றாள். தன்னை மேற்கொள்வார் யாரையும் இல்லாதது என்க. மன்ற, ஈரிடத்தும் தேற்றப் பொருளில் வந்தது.

பொருளாசையைத் துறத்தலும், அருளை மேற் கோடலும் வேண்டும் என்று அறநூலோர் கூறுப; அது கூற்றளவிலேயே உள்ளது; செயலளவில் எத்தகைய சான்றோரும் அருளைத் துறந்து பொருளையே அவாவி உழல்கின்றனர் என, எண்டுத் தலைவி கூறும் நுணுக்கம் உணர்ந்து இன்புறற்பாலது.

## பாட்டு - ௧௭௫ : தலைவி கூற்று

### துறை :—பிரிவிடைக் கடுஞ்சொற் சொல்லி வற்புறுத்து

வாட்குக் கிழத்தியுரைத்தது. அஃதாவது, தலைவனது பிரிவாற்றாது பெரிதும் தலைவி வருந்தினளாக, 'நீ இங்ஙனம் வருந்துதல் ஊரார் அம்பலுக் கிடனாகலின் சால்பன்' றென்று தோழி கடிந்துரைக்க, அவட்குத் தலைவி கூறியது.

இதன்கண், தலைவி, தோழியை நோக்கி, 'யான் தலைவன் பிரிவு குறித்து வருந்துகின்றேனில்லை; நீ என்னைக் கடியாதே கொள்; ஊரார் அம்பல் கூறிற் கூறுக; அவரம்பலால் நமக்குறும் ஏதம் யாது?' என்று கூறுகின்றாள்.

களரு. பருவத் தேனசைஇப் பல்பறைத் தொழுதி
உரவுத்திரை பொருத திணிமணல்
அடைகரை
நனைந்த புன்னை மாச்சினை தொகூஉம்
மலர்ந்த பூவின் மாநீர்ச் சேர்ப்பற்
கிரங்கேன் தோழியிங் கென்கொ லென்று
பிறர்பிறர் அறியக் கூறல்
அமைந்தாங் கமைக அம்பலஃ தெவனே.

—உலோச்சனார்.

(இ - ள்.) தோழீ—, பருவத் தேன் நசைஇப் பல் பறைத தொழுதி-செவ்வியுற்ற தேனை விரும்பிப் பலவாகிய வண்டினங் கள், உரவுத் திரை பொருத திணிமணல் அடைகரை - வலிய அலைகளாலே மோதப்பட்ட திணிந்த மணலையுடைய அடைகரை யின்கண் நின்ற, நனைந்த புன்னை மாச்சினை தொகூஉம் - நீரான் நனைந்த புன்னையினது பெரிய கொம்புகளிடத்தே கூடாநிற்றற்

குக் காரணமான, மலர்ந்த பூவின் மாநீர்ச் சேர்ப்பற்கு - மலர்ந்த மலர்களையும் கரிய கடலையுமுடைய தலைவன்பொருட்டு, இரங் கேன் - யான் வருந்துகின்றேனில்லை; அங்ஙன மிருந்தும், இங்கு என்கொல் என்று - இவ்விடத்தே நீ ஆற்றுயாகின்ற தென்னை என்று, பிறர் பிறர் அறியக்கூறல்-அயலோர பலரும் அறியும்படி என்னை இடித்துரையாதே கொள், அம்பல் அஃது எவன்-இஃது அம்பற்குக் காரணமாம் என்கின்றனை; அவ் வம்பல் நம்மை யாது செய்யும், அமைந்தாங்கு அமைக - அஃது இருந்தவாறே இருப்பதாக.

**விளக்கம்** :—"நான் அருள் கெழுமிய தலைவர் விரைவில் வந்தருளுவர் என்னுந் துணிவானே ஆற்றியிருக்கின்றேன் ஆகவும், நீ அஃதுணராது ஆற்றேன் போலக் கருதி, 'ஆற்றுயாகின்றதென் ? இந்நிலை அம்பற்கு ஏதுவாம் ஆற்றியிரு!' எனக் கடியாநின்றனை ; நின்னுரையே பிறரை அறிவிப்பதாகின்றது ; ஆகலின், அங்ஙனம் கூறுதே கொள் ; நீ கூறுகிறபடி அம்பல் எழின் எழுக ! அது நம்மை என் செய்யும்," என்றவாறு.

இக் கருத்தறியாது, இங்கென் கொலென்று என்பது முதல் எவனே என்னுந்துணையும பொருள் விளக்கமின்றி "இவ்விடதது இவள் ஏன் இங்ஙனம் ஆயினளென்று பிறர் பிறர் அறியும்படி கூறுதல் அவர்கள் மனம் அமைந்தபடி அமைக அவர்கள் கூறும் அம்பல் என்ன

## மூலமும் உரையும்

உ௫௩.

துன்பத்தைச் செய்யும்," என்று துறையொடு பொருந்தாதவாறு விரித்தாரும் உளர்.

உரை

பருவத் தேன் - செவ்வித் தேன். நசைஇ - விரும்பி. தேனசை என்னும குறிப்பால் பறைத்தொழுதி வண்டினம் என்னும் பொருட்டாய் நின்றது. பறை - வண்டிற்கு ஏதுப்பெயர் ; பறத்தலையுடையது என்பதாம். உரவுத்திரை – வலிய அலைகள், பேரலைகளுமாம். தொகுதல் - கூடுதல். செவ்வித் தேனை விரும்பிப் புன்னைக்கிளையில் வண்டினங்கள் தொகூஉம் என்றது, அங்ஙனம் தொக்க வண்டுகள் தேனைப் பெற்றவுடன் தம் சேக்கையாகிய இருலை நாடி வருதல் ஒருதலையாதல் போலப் பொருள்நசைஇச் சென்ற நந்தலைவரும் அஃதீட்டியவுடன் மீண்டு வந்து அருளுவர் என்னும் துணிவாலே யான் இரங்காதிருக்கின்றேன் என்பதற்கு உவமம் என்க.

யான் இரங்கேன் ஆகவும் என்கொல் என்று பிறர் பிறர் அறிய நீ கூறுகின்றாய்; அங்ஙனம் கூறாதே கொள் என்றாள் என்க. கூறல் - அல்லீற்று எதிர்மஃற வியங்கோள் வினைமுற்று; "மகனெனல்," என் புழிப்போல. நீ இங்ஙனம் ஆற்றாயாகின்றது அம்பலெழ எதுவாம் எனத் தோழி கூறினாள் ஆகலின். 'அது அமைந்தாங்கு அமைக; அம்பல் எழுந்தால் என்? நீ மட்டும் பிறர் பிறர் அறியக் கூறாதே,' என நயம்பட இடித்தமை யறிக.

'அம்பலுக்குக் காரணம் என் ஆற்றாமையன்று நீ கூறும் கடிந் துரையே,' என்பது குறிப்பு.

## பாட்டு - கஎசு : தோழி கூற்று

துறை :—தோழி கிழத்தியைக் குறைநயப்பக் கூறியது. அஃதாவது, தன்பாற் பன்முறையும் வந்து குறை யிரந்து செல் லும் தலைவனுக் கிரங்கித் தோழி தலைவியிடத்தே சென்று, 'நீ தலைவனை ஏற்றுக்கொளளல் வேண்டும்,' என்பதுபடக் கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி,

'அந்தோ தலைவன்,
ஒருநாள் வந்தானலன்; இருநாள் வந்தானலன்; எத்துணையோ பலநாட்கள் நம் பக்கல் வந்து வறிதே மீண்டான்; அவன் வருந்தோறும் என்னோடு பேசிய பணிமொழிகள் என் உள்ளத்தை உருக்கிவிட்டன. இப்பொழுதோ அவன் யாண்டோ போய்விட்டான்! எந் நாட்டிலே இருக்கின்றனனோ அறியேன்! அவனை எண்ணி என் நெஞ்சம் கலங்காநின்றது!'
என்று கூறுகின்றாள்.

கஎசு. ஒருநாள் வாரலன் இருநாள் வாரலன்
பன்னாள் வந்து பணிமொழி பயிற்றியென்
நன்னர் நெஞ்ச நெகிழ்த்த பின்றை
வரைமுதிர் தேனிற் போகி யோனே

## உருச குறுந்தொகை

ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
வேறுபுல னன்னாட்டுப் பெய்த
ஏறுடை மழையிற் கலிழும்என் னெஞ்சே.
—வருமுலையாரித்தியார்.

(இ - ள்.) தோழி—, ஒருநாள் வாரலன் இருநாள் வாரலன் - ஒருநாள் வந்தானலன் இரண்டுநாள் வந்தானலன், பன்னாள் வந்து பணிமொழி பயிற்றி - பற்பல நாளும் என்பால் வந்து பணிவுடைய மொழிகளைப் பலகாலும் சொல்லி, என் நன்னர் நெஞ்சம் நெகிழ்த்த பின்றை - எனது நன்மையுடைய நெஞ்சத்தை இளகச்செய்த பின்னர், வரை முதிர் தேனிற் போகியோனே - மலையின்கண் முதிர்ந்த தேனிறாலைப் போன்று மனம் அழிந்து சென்றான், ஆசாகு எந்தை யாண்டுளன்கொல் - பலர்க்கும் பற்றுக்கோடாகும் தகுதியுடைய என் தந்தை போல்வான் இற்றைநாள் எந் நாட்டின்கண் இருந்தனனோ அறிகின்றிலேன், என் நெஞ்சு - அவன் பணிமொழியாலே நெகிழ்ந்த என் நெஞ்சமோ, வேறுபுலன் நன்னாட்டுப் பெய்த ஏறுடை மழையில் கலிழும் - அயற்புலமாகிய நல்ல நாட்டின்கண் பெய்த இடியேற்றினையுடைய மழையினது நீர் கலங்கினாற்போன்று கலங்கா நிற்கும்.

**விளக்கம்** :—'ஒருநாளா ! இரண்டு நாளா ! எத்தனையோ நாட்கள் முயன்றோம்,' என்பதோர் உலக வழக்குப்பற்றி, 'ஒருநாள் வாரலன் இருநாள் வாரலன் பன்னாள் வந்து,' என்றாள். ஓய்வின்றி வந்து எனறபடி.

> "ஒருநாட் செல்லலம் இருநாட் செல்லலம்,
> பலநாள் பயின்று பலரொடு செல்லினும்"

(புறம் - ௧0௧)

என்றூர் பிறரும்.
மொழிகள்.

பணிமொழி - பணிவுடைமையைப் புலப்படுத்தும்

"இரவன் மாக்களிற் பணிமொழி பயிற்றி"

(அகநா - கூஉ)

என்றூர் பிறரும். என் நன்னர் நெஞ்சம் என்றது, வருந்தும் பிறர்க்கு ஆற்றவும் இரங்கும் இயல்புடைய நெஞ்சம் என்றவாறு. பயிற்றுதல் - பலகாலும் கூறுதல். 'இவ்வாறு இடையறாது வந்து பணிமொழி பயிற்றினன்; என் னெஞ்சமும் அவன் திறத்துப் பெரிதும் நெகிழ்ந்தது; அந்தோ யான் நெஞ்சம் நெகிழ்ந்தது தான் அறியாமையாற் போலும் வெறுத்துப் பின்னர் வாராதவனாய் யாண்டோ சென்று விட்டான்,' என்பாள், 'நெகிழ்த்த பின்றைப் போகியோன்,' என்றாள்.

இதுகாறும் கூறியது கவர்பொருள் நாட்டம் என்க. என்னை? தலைவி தான் ஒரு தலைவனைக் கூடிக் கற்புக்கடம் பூண்டமை தோழி அறியாள் எனக் கருதி மறைத்தொழுகு கின்றாளாகலின் ஈண்டுத் தோழி தான் ஒருவனைக் காதலித்து நெஞ்சம் நெகிழ்ந்தாள் போன்று

## மூலமும் உரையும்



தோன்றக் கூறுகின்றனள் ஆகலான். ஆசாகு எந்தை என்றது - யாவர்க்கும் பற்றுக் கோடாகும் தலைமைத் தன்மையுடையான் என்று பொது வாகக் கூறுவாள் போன்று தலைவனுடைய தலைமைத் தன்மையை

யானும் கண்டு மகிழ்கின்றேன் எனத் தன் உடம்பாடு குறிப்பா லுணர்த்திய வாறும். ஏதை என்றது, என்னால் காதலிக்கப்படுவான் செய்தியன்று யான் கூறுவது அவன் எனக்குத் தந்தை போல்வான் நின்னாற் காதலிக்கப்பட்ட தலைவனையே யான் கூறுகின்றேன் என்று குறிப்பா லுணர்த்தியவாறு. யாண்டுளன் கொல்லோ என்றது, தலைவி யின் மனநிலை அறியும்பொருட்டுப் படைத்துக்கொண்டு கூறியது. வேற்றுப் புலம் - அயல் நாடு - வேற்றுப் புலமாகிய நன்னாடு என்க. நெடுங் தொலைவிற் பெய்த மழைநீர் பெரிதும் கலங்கி வருதலின் அங்ஙனம் கூறினாள்.

நின்னை இவ்வாறு பெரிதும் விரும்பும் தலைவன் உள்ளம் செவ்வி கெட்டழியாமல் அவனை ஏற்றுக்கோடல் நன்றென்பது குறிப்பு. கலிழுதல் - கலங்குதல்.

## பாட்டு - கஎஎ : தோழி கூற்று

துறை :—கிழவன் வரவுணர்ந்து தோழி கிழத்திக்கு உரைத்

தது. அஃதாவது, இரவுக் குறிக்கண் மனையயலே தலைவன் வந்து நிற்றலை உணர்ந்த தோழி, தலைவன் வரவை எதிர்நோக்கி அலமரும் தலைவியின் நிலையை அவன் உணரும்பொருட்டு அவன் வரவுணராதாள் போன்று தலைவியை வருவர் ஆற்றுக என்று கூறியது.

இங்ஙனம் கூறாது, "தலைவன் மாலைக்காலத்தில் வருவானென்று தோழி தலைவிக்குக் கூறியது," என்று பொருட் சிறப்பின்றிக் கூறினாரும் உளர்.

இதன்கண், 'கடல் ஒலியவிந்தது; கழிகள் புற்கென்றன; அன்றிலும் ஒலிக்கின்றன; நந்தலைவரோ தணப்பரும் காமம் தண்டியோர்; ஆதலின் இன்று வருவர் என்பது தேற்றம்; வருந்தேல்,' என்று தோழி தலைவியை ஆற்றுவிக்கின்றாள்.

கஎஎ. கடல்பா டவிந்து கானல் மயங்கித்
துறைநீர் இருங்கழி புல்லென் றன்றே
மன்றவம் பெண்ணை மடல்சேர் வாழ்க்கை
அன்றிலும் பையென நரலும் இன்றவர்
வருவர்கொல் வாழி தோழி நாந்தப்
புலப்பினும் பிரிவாங் கஞ்சித்
தணப்பருங் காமம் தண்டி யோரே.

—உலோச்சனார்.

(இ - ள்.) தோழி—, கடல் பாடு அவிந்து கானல் மயங்கித் துறைநீர் இருங் கழி புல்லென்றன்று-கடல் ஓசையின்றி அடங்கக் கடற்கரைச் சோலை இருளானே மயங்கத் துறைகளையும் நீரினையும் உடைய கரிய கழி பொலிவழியா நின்றது, மன்ற அம் பெண்ணை மடல்சேர் வாழ்க்கை அன்றிலும் பையென நரலும் - அம்பலத்தின்கண் நின்ற அழகிய பனைமரத்தினது மடலிலே பொருந்திய வாழ்க்கையையுடைய அன்றிற்பறவையும் மெல்லக் கூவாநிற்கும், இன்று அவர் வருவர் - இன்று நந்தலைவர் வருவர், எற்றாலெனின், நாம் தம் புலப்பினும் - யாம் அவரைப் புலந்த பொழுதும், பிரிவு ஆங்கு அஞ்சி - அப்புலவி காரணமாகப் பிரிவுண்டாகுமே என்பதற்கு அஞ்சி, தணப்பரும் காமம் தண்டியோர் - நம்மைப் பிரிதற்கரிய மிக்க காமம் அமையப் பெற்றோர் ஆகலான்.

**விளக்கம்** :—கடல் பாடவிதலாவது, அலையொழிந்து முழக்கமின்றிக் கிடத்தல். கடல், இங்ஙனம் சிற்சில சமயம் பாடவிந்து கிடத்தல் இயல்பு. "கடல்பாடவிந்து தோணி நீங்கி நெடுநீர் இருங்கழி கடுமீன் கலிப்பினும்," (அகநா - ௫0) எனப் பிறரும் ஓதுதல் அறிக. துறையையும் நீரையும் உடைய கழி என்க. கானல் - கடற்கரைப் பரப்பு. கழி தன்பாலுள்ள பூக்கள் தோன்றாது இருளில் மறைதலின், பொலிவிழப்ப என்பாள், 'புல்லென்றன்று' என்றாள். புல்லென்றற்குப் பூக்கள் கூம்பலின் என எதுக்காட்டினாரும் உளர். இரவிடை மலரும் நீர்ப் பூவே பலவாகலின் அது பொருந்தாமை யறிக. மன்றம் - ஊரம்பலம். அம்பெண்ணை - அழகிய பனை. பனைமடலிலே அன்றிற் பறவை

வாழும் என்ப. இதனை, "மன்றப் பெண்ணை வாங்கு மடற் குடம்பைத் துணைபுணர் அன்றில்" (நற் - கூ0௩) எனப் பிறர் கூறுமாற்றானும் உணர்க. அன்றிற் பறவையின் ஒலி, காமநோயை மிகுவிக்கும் என்பர் ஆகலின், அது நின் நோயை மிகுவிக்க நீ வருந்துகின்றனை என்பது குறிப்பு. இவ்வாறே தலைவர் இருக்குமிடத்தும் அன்றில் நரலுமாகலின் அவர் நின்னை நினைந்து வருவர் என்றாள் எனினுமாம். இதனானும் அவர் இன்று வருதற்கு ஏதுக் காட்டியவாறுணர்க.

பிரிதற்கு ஏதுக் கண்டவிடத்தும் பிரிவஞ்சிப் பிரியாச் சிறந்த காமம் அமைந்தாராகலின், தனித்துறைதலை அவர் விரும்பமாட்டார்; இன்னே வருகுவர் வருந்தற்க என்பாள், 'நாம் தப்புலப்பினும் பிரிவஞ் சித் தணப்பரும் காமம் தண்டியோர்' என்றாள். தண்டியோர் - அமைந் தோர்; இஃதிப் பொருட்டாதல், - 'தண்டாக் காமம்' என்னும் அதன் எதிர்மறையானும் உணர்க.

இனித் தண்டுதல் என்னும் இத்தமிழ்ச் சொல்லைத் தண்டம் என் னும் வடமொழியடியாக வந்ததென்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் பிறழக்கருதி "பராஅரை வேவை பருகெனத் தண்டி" எனவரும் பொருநராற்றுப் படையின்கண் தண்டி என்பதற்குப் "பலகாலலைத்து" என்று பொருள் கூறினர். ஆண்டு அவர் கூறியதனால் இப்பாட்டிற் றண்டியோர் என்றதற்கு அலைத்தும் பெற்றோர் எனப் பொருள் கூறி னர் உ. வே. சா. ஐயரவர்கள். அவர் கருதியபடி கருதினும் காமத்தை

## மூலமும் உரையும்

# உருள

அலைத்தோர் என்பதல்லால் அலைத்தும் பெற்றோர் என்பதற்கு இட மின்மை யறிக. பொருநராற்றுப் படையினும் "பருகெனத்தண்டி" என்றவிடத்துப், பருகுக என்று கூற அதற்கமைந்து ஒற்றி முனிகுவ மெனினே என்று பொருள் கூறலே சாலப் பொருந்துதல் அறிக.

## பாட்டு - கஎஅ : தோழி கூற்று

துறை :—கடிநகர் புக்க தோழி தலைமகன் புணர்ச்சி விதும் ்ல் கண்டு முன்னர்க் களவுக்காலத்து ஒழுகலாற்றை நினைந்து வுழிந்து கூறியது.

அஃதாவது, தலைவன் தலைவியை வரைந்து கொண்டு
பாழ்க்கை நடத்துழி ஆண்டுச் சென்ற தோழி, தலைவன் தலைவி
ின்பாற் கொண்டுள்ள புணர்ச்சி வேட்கையின் ஆராமை கண்டு
இத்தகைய ஆராமையுடையோர் களவுக் காலத்தே எவ்வாறு
ஆற்றியிருந்தனரோ?' என்று இரங்கிக் கூறியது.

இதன்கண், தோழி தலைவனை நோக்கி, 'ஐய ! நீயிர் இப் ்பாது தலைவியோடே இடையறாது உடனுறையும் வாய்ப் ்டையராயிருந்தும், நீர்நிலையினின்று ஆம்பல் கொய்வோர் நீர் ்வட்கை கொண்டாற் போன்று ஆராமையாலே விதுப்புறு ின்றீர் ; இத்தகையீர், களவுக்காலத்தே புணர்வுப்போதினும பிரிதற்போதே பெரிதாயிருந்தபோது என் பட்டீரோ !' என்று ்றுகின்றாள்.

கஎஅ. அயிரை பரந்த அந்தண் பழனத்

தேங்தெழின் மலர தூம்புடைத்

திரள்கால்

ஆம்பல் குறுநர் நீர்வேட் டாங்கிவள்

இடைமுலைக் கிடந்து நடுங்க லானீர்

தொழுதுகாண் பிறையிற் றோன்றி

யாநுமக்

கரிய மாகிய காலைப்

பெரிய நோன்றனிர் நோகோ யானே.

—நெடும்பல்லியத்தையார்.

(இ - ள்.) ஐய—, *அயிரை பரந்த அம் தண் பழனத்து* - அயிரை மீன்கள் பரவா நின்ற அழகிய தண்ணிய பொய்கை

யிடத்தே, ஏந்து எழில் மலர தூம்புடைத் திரள்கால் ஆம்பல் குறுநர் - எடுத்த அழகையுடைய மலர்களையுடையனவாகிய [து]ளையுள்ள திரட்சிபொருந்திய தண்டினையுடைய ஆம்பலைப் [ப]றிப்போர், நீர் வேட்டாங்கு - நீரினுள் நின்றேயும் நீர் வேட்கை [ய]ாலே வருந்தினாற் போன்று, இவள் முலையிடைக் கிடந்தும் - [இ]வளுடைய முலைகளினிடையே ஓவாது துயிலப் பெற்றும்,

நடுங்கல் ஆனீர் - நடுங்குதலை ஒழிகின்றிலீர் இத்தகைய வேட்கைப் பெருக்கமுடையிர், யாம் நமக்குத் தொழுதுகாண் பிறையில் தோன்றி அரியமாகிய காலை - யாங்கள் நீவிர் விரும்பியாங்குத தோன்றாது, தொழுது காண்டற்குரிய பிறை நாளிடையிட்டுத் தோன்றுமாறுபோலத் தோன்றி எய்துதற் கரியேமாய் இருந்த அக் களவுக்காலத்தே, பெரிய நோன்றனிர - மிகப் பெரிதும் வருத்தத்தைப் பொறுத்தமைந்தனிர் போலும், யான் நோகு - அதனை எண்ணி யான் வருந்துகின்றேன்.

**விளக்கம்** :—பண்டைய நல்லிசைப் புலவர்களின் கலையுள்ளம், எத்துணை நுணுகிய வழிகளிலே சென்று கலையின்பம் கண்டு காட்டுகின்றன என்பதற்கு இவ்வினிய செய்யுள் ஒரு சிறந்த எடுத்துக்காட்டெனலாம். இதன்கண் எடுத்துக்கூறும் உவமையும் அத்தகைய நுணுக்கமுடையதே. இதனைப் பொழுது மறுப்பாக்கம் என்னும் மெய்ப்பாடென்பர் பேராசிரியர் (தொல-மெய்ப் - கச). அவர் கூறுவதாவது.

"தொழுதுகாண்பிறையிற் றோன்றின வென்பது, களவுக்காலத்து இடையீடு பெருகிற்றெனக் கூறி அங்ஙனம் வரைந்த பொழுதினை மறுத்த காலத்து நடுங்கலானீர் என்றமையின் இஃது அப்பொருட்டாயிற்று," என்பதாம்.

அயிரை - ஒருவகை மீன். பருகுதற்கினிய நீருடைய பொய்கை என்பாள், 'அந்தண் பழனம்' என்றாள். பழனம் - பொய்கை. மலர - மலர்களையுடையன. தூம்பு - தொளை. ஆம்பற்றண்டு உட்டுளையுடைத்தாதல் கண்டது. கால் - தண்டு. குறுநர் - பறிப்போர். அயலே இருத்தலின் இவள் என்று தலைவியைச் சுட்டினாள். முலையிடை என்பது இடைமுலை என முன் பின்னாக மாறி நின்றது. ஆனீர - அமைகின்றிலீர் ஆனுதல் என்பதன் எதிர்மறை. பிறையை மணமாகாத மகளிரும் சான்றோரும் அமரரும் தொழுதலுண்டாகலின், 'தொழுது காண் பிறை' என்றாள். பிறைகாண்போர அதோ இதோ என்று தடுமாறிக் காண்டலின், 'காண் பிறை' என்றாள். பிறை சில செவ்விகளில் முகிலில் மறைந்து காணப்படாமையானும் அரிதாதல் அறிக.

களவுக்காலத்தில் பல இடையூறுகள் உண்மையின், பிறை போன்று இடையீடுற்றுக் காணப்படுவேமாய ஏனைப்பொழுதிற் காணப் படேமாய் இருந்தேமன்றே, அக்காணப்படாத போழ்தெல்லாம் என் பட்டீரோ எனறிரங்கியவாறு. பெரிய நோன்றனிர் - பெரியவாகிய வருத்தங்களைப் பொறுத்தீர் என்றவாறு. நோகு - நோகின்றேன்: தன்மை யொருமை.

## பாட்டு - களகூ : தோழி கூற்று

துறை :—பகல் வருவானை இரவுக்குறி

நேர்ந்தாள் போன்று
வரைவு கடாயது. அஃதாவது, களவின்கண் பகற்குறியிடத்தே வந்தொழுகும் தலைவனை நின்னைப் பிரிந்துறையும் பொழுது நீளிதாகலின், தலைவி ஆற்றாளாகின்றாள்; ஆதலின் வரைந்து

## மூலமும் உரையும்

உருகூ

கொள் என்றுணர்த்துவாளாய் இரவினும்
ான்று தலைவனைத் தோழி வேண்டியது.

ஈண்டுத் தங்குக

இதன்கண், 'ஐய! பொழுதும் இருண்டது; நின் நாய் ளும் இளைத்தன; உதோ தோன்றுவதே எம்மூர்; ஆதலின், தங்கிச் செல்க!' என்று தோழி தலைவனை வேண்டுகின்றாள்.

கஎகூ. கல்லென் கானத்துக் கடமா வாட்டி
எல்லும் எல்லின்று ஞமலியும்
இளைத்தன
செல்லல் ஐஇய உதுவெம் மூரே
ஓங்குவரை யடுக்கத்துத் தீங்தேன்
கிழித்த
குவையுடைப் பசுங்கழை தின்ற
கயவாய்ப்
பேதை யானை சுவைத்த
கூழை மூங்கிற் குவட்டிடை யதுவே.
—குட்டுவன் கண்ணனார்.

(இ - ள்.) ஐய—, கல் என் கானத்துக் கடமா ஆட்டி - ல்லென்னும் ஓசையையுடைய காட்டிடத்தே கடமாவை லையாநிற்ப, எல்லும் எலலின்று - பொழுதும் இருளா நின் து, ஞமலியும் இளைத்தன - நின் நாய்களும் வேட்டமாடி ளைப்படைந்தன, ஓங்கு வரை அடுக்கத்துத் தீந்தேன் கிழித்த வையுடைப் பசுங்கழை தின்ற - உயர்ந்த மலைப்பக்கத்தே னிய தேனிறாலைக் கிழித்த திரளையுடைய பசிய மூங்கிலைத் ன்ற, கயவாய்ப் பேதை யானை சுவைத்த - பெரிய வாயையும் பதைமையையும் உடைய யானை தின்றமையாலே, கூழை ங்கில் குவட்டிடையது - கூழையாகிய மூங்கிலையுடைய உச்சி ன் இடையே உளதாகிய, உது எம் ஊர் - இவ்வூரே எமது ராகும், செல்லல் - நீ நின்னூர்க்குச் செல்லாமல் தங்கு யாக.

விளக்கம் :—கல்]- ஒலிக்குறிப்பு. கடமா - ஒருவகை விலங்கு. ட்டுதல் - காட்டினூடே புகுந்து அலைத்துத் துன்புறுத்தல். எல் - பாழுது. எல்லின்று - இருண்டது. ஞமலி - நாய்; தலைவனோடு த வேட்டை நாய்கள்.

தலைவன் வேட்டை நாய்களுடன் வரும் வழக்கத்தை,

> "முனைபாழ் படுக்கும் துன்னருந் துப்பிற்
> பகைபுறங் கண்ட பல்வே லிளைஞரின்
> உரவுச்சினஞ் செருக்கித் துன்னுதொறும் வெகுளும்
> முளைவா ளெயிற்ற வள்ளுகிர் ஞமலி
> திளையாக் கண்ண வளைகுபு நெரிதர" (கஉஅ -

கூஉ.)

எனவரும் குறிஞ்சிப்பாட்டானும் அறிக. இளைத்தன - நின்னோடு வேட்டமாடி இளைத்தன என்றவாறு. வரையடுக்கம் - மலைப்பக்கம். மூங்கில் தன் வளர்ச்சியாலே மலையடுக்கத்துள்ள தேனிறாலைக் கிழித்த தென்க.

உது - உதோ தோன்றும் ஊர் என்க. உது எம்மூர் செல்லல் என்றது, அணித்தே உள்ள எம்மூரின் கண்ணே இன்றிரவு தங்குக என்றவாறு.

## பாட்டு - க௯0 : தோழி கூற்று

துறை :—பிரிவிடை வேறுபட்டாளைத் தோழி வற்புறுத்தியது அஃதாவது, பொருள்வயிற் றலைவன் பிரிந்தானாக, ஆற்றாமை மிக்க தலைவியை, 'அவன் வருந்துணையும் ஆற்றியிருத்தலே நின்கடன்' எனத் தோழி ஆற்றுவித்தது

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'நங்தலைவர் பொருளீட்டச் சென்ற நாட்டின்கண் இன்னும் அவ்வினை முற்றப்பெற்றார் இலர் போலும்; வினை முற்றியவுடன் மீண்டு வருவர்; அதுகாறும் நீ ஆற்றுக!' என்று கூறுகின்றாள்.

க௯0. பழூஉப்பல் அன்ன பருவகிர்ப் பாவடி

இருங்களிற் றினநிரை

யேந்தல் வரின்மாய்ந்

தறைமடி கரும்பின் கண்ணிடை
யன்ன

பைத லொருகழை நீடிய சுரனிறந்து
எய்தினர் கொல்லோ பொருளே யல்குல்
அவ்வரி வாடத் துறந்தோர்
வன்ப ராகத்தாஞ் சென்ற நாட்டே.

—கச்சிப்பேட்டு நன்னுகையார்.

(இ - ள்.) அல்குல் அவ் வரி வாடத் துறந்தோர் - அல்குலிலே பரந்த அழகிய தேமல்நிறங் கெடும்படி பிரிந்து சென்ற நந்தலைவர், பழூஉப்பல் அன்ன பரு உகிர்ப் பா அடி - பேயினது பல்லை ஒத்த பருத்த நகத்தினையும பரந்த அடியினையும் உடைய, இருங் களிற் றின நிரை ஏந்தல் வரின் - பெரிய களிற்றியானைத திரளின் வரிசையினது தலைவனாகிய களிறு வந்து புக்கவிடத்து, மாய்ந்து அறை மடி கரும்பின் கண் இடையன்ன - அதனால் துகைப்புண்டு அழிந்து பாத்தியின்கண் விழுந்த கரும்புகளின் இடையே மாயாது நின்ற ஒற்றைக் கரும்பு போன்ற, பைதல் ஒரு கழை நீடிய சுரன் இறந்து - துன்பத்தையுடைய ஒற்றை மூங்கில் வளர்ந்த பாலைநிலத்தைக் கடந்து, வன்பராகத தாம் சென்ற நாட்டு-வன் னெஞ்சினராகத்தாம் பொருளீட்டச் சென்ற



நாட்டின் கணணே, பொருள் எய்தினர் கொல் - தாம் கருதிச் சென்ற பொருளை ஈட்டினரோ

இலரோ? அவர் அளியர்!

**விளக்கம்:**—'பொருள் இன்றியமையாமை கருதி அன்பராயிருந்தும் வன்பராகத் தன்னெஞ்சை வலித்துக் கொண்டு வன்பாலையிற் சென்ற நங்காதலர், அப் பொருளை ஓரளவு ஈட்டியவுடன் விரைந்து மீள்வார்; அவர் இன்னும் பொருளீட்டப் பெருமையே வாராமைக்கு ஏதுவாம். அவர் மேற்கொண்ட வினை முற்றி வருதலே நன்று; நீ ஆற்றியிருத்தலே கடன்' என்று வற்புறுத்திய வாறும்.

பழூஉ - பேய். "பழுவும் பாந்தளும் உளப்படப் பிறவும்" (உருக) எனவரும் குறிஞ்சிப்பாட்டினும் அஃது அப்பொருட்டாதல் அறிக. பேயின் பல், யானை நகத்திற்கு உவமை. "பேய்மகள் பிணனுண்டு சிரித்த தோற்றம் போலப், பிணன் உதைத்துச் சிவந்த பேருகிர்...... யானை" (கஉஎ-உ00) எனச் சிறுபாணாற்றுப் படையினும் வருதல் அறிக. பாவடி-பரந்த அடி. இருங்களிறு-கரிய களிறுமாம். களிற்றினம் நிரை என்றது, களிறுகளையுடைய யானையின் வரிசை. ஒவ்வொரு யானைக் கூட்டத்திற்கும், தலைமையானை ஒவ்வொன்றிருக்கும் என்ப, இத்தலைமையானையை 'யூதநாதன்' என்ப. ஏண்டு ஏந்தல் என்றது அத்தலைமையானையை ஏந்தல் - தலைமைத் தன்மை என்னும் பொருட்டு.

கரும்பின் கண் இடை - கரும்புகளின் இடையே நிற்கும் ஒற்றைக் கரும்பு. இடை - ஆகு பெயர் கண் - ஏழாவதனுருபு. இங்ஙனமன்றி கரும்பின்கண் இடையன்ன என்பதற்கு "கரும்புகளின் கணுக்களின் இடையேயுள்ள பகுதியைப் போன்ற" என்றும், அஃதாவது. "யானை யால் முறிக்கப்பட்ட கரும்பின் ஒரு கணுவுக்கும் மற்றொரு கணுவுக்கும் இடையிலுள்ள அளவே வளர்ந்த மூங்கில்" என்று கூறினருமுளர். இஃது சிறவாமை யுணர்க. பாலைநிலத்தே வேனிலானே அழிந்த மூங்கிற் புதர்களின் இடையே ஆண்டாண்டு ஒற்றை மூங்கில்கள் சில வாடி நிற்றல், யானையாலே அழிக்கப்பட்ட கரும்பின்கண் இடையே மாயாது உய்ந்து மெலிந்து நிற்கும் ஒற்றைக் கரும்புபோலும் என்பதே சிறத்தல் அறிக.

எய்தினர் கொல்லோ என்றது, இன்னும் எய்திற்றிலர் என்னும்

குறிப்புடையது. வன்பராக என்றது, உண்மையில் அன்பராயிருந்தும், பிரிதற்பொருட்டு வன்பர்போல வலிந்து கொண்டு என்றவாறு. எனவே பொருள் நிரம்பிய உடன் மீள்வர் என்பது குறிப்பாக வுணர்த்தினாளாயிற்று.

## பாட்டு - கருஅக : தலைவி

கூற்று

துறை :—தலைமகன் பரத்தையிற் பிரிந்தவழி ஆற்றாளாகிய தலைமகள் ஆற்றல் வேண்டித் தோழி இயற்பழித்தவழி, தலைமகள் இயற்பட மொழிந்தது. அஃதாவது, தலைவன் பரத்தையிற் பிரிந்தமையாலே ஆற்றாமை மிக்க தலைவியின் நெஞ்சை மற்றொன்றில் ஈடுபடுத்தற்பொருட்டுத் தலைவனைத் தோழி பழித்



துரைக்கத் தொடங்கினாளாக அப் பழிச் சொல்லைப் பொறாத தலைவி அவனைக் கடிந்து கூறியது.

இதன்கண், தலைவி, இயற்பழித்த தோழியை நோக்கி,

'ஏடி, இஃதென்ன? தலைவர் சால்பிலர் என்னும் இன்னாக்கிள வியை இனிக் கிளவாதேகொள்; அவரது திருமனையின்கண்ணே யாம் செய்தற்குரிய பல கடமைகள் உள்ளன; அவற்றைச் செய்தலொழிந்து பிறர்பழி தூற்றல் எற்றுக்' கெனக் கடிந்து கூறுகின்றாள்.

கஅக. இதுமற் றெவனோ தோழி துனியிடை
இன்னர் என்னும் இன்னாக் கிளவி
இருமருப் பெருமை ஈன்றணிக் காரான்
உழவன் யாத்த குழவியி னகலாது
பாஅற் பைம்பயிர் ஆரு மூரன்
திருமனைப் பலகடம் பூண்ட
பெருமுது பெண்டிரேம் ஆகிய நமக்கே
—கிள்ளிமங்கலங் கிழார்.[1]

(இ - ள்) தோழி—, இரு மருப்பு எருமை ஈன்று அணிக் கார் ஆன் - பெரிய கொம்பினையுடைய எருமையாகிய ஈன்றணி மையுடைய கரிய ஆன், உழவன் யாதத குழவியின் அகலாது - உழுதொழிலாளனாலே பிணிக்கப்பட்டுள்ள தன் கன்றைப் பிரிந்து சேய்மைக்கட் செல்லமாட்டாமல்,

பாஅல் பைம்பயிர் ஆருமா ஊரன் - பக்கத்தேயுள்ள பசிய பயிர்களை மேயாநின்ற ஊரையுடைய நந்தலைவனது, திருமனைப் பலகடம் பூண்ட-செல்வமிக்க இல்லத்திருந்து இல்லறத்தார்க்குரிய பற்பல கடமைகளையும் மேற்கொண்டுள்ள, பெருமுது பெண்டிரேம் ஆகிய நமக்கு - பெரிய முதுமையினையுடைய பெண்டிராகிவிட்ட நமக்கு, துனியிடை இன்னர் என்னும் இன்னாக் கிளவி - நாம் ஊடியிருக்குமிப் புலவிக் காலத்தே இன்னின்ன தன்மையர் என்று கூறுகின்ற கேட்டற் கின்னாவாகிய சொற்களைக் கூறுதலாகிய, இது எவன் - இச்செயல் யாது பயன் உடைத்து.

**விளக்கம்** :—ஆதலால் இவ்வின்னாக் கிளவியை இனிக் கூறுதொழி என்பது குறிப்பெச்சம். செய்யுளாகலின் சுட்டுச சொல் முன்னர் வந்தது. துனி-புலவி. புலவிக்காலத்தே தலைவர் இத்தகையர் எனத் தோழி அவனது குறைகளை எடுத்தோதினளாகலின், 'இன்னர் என்னும்...கிளவி' என்றாள். அங்ஙனம் அவரைப்பழிக்கும் சொல்லை யான் பொறேன் என்பாள், 'இன்னாக்கிளவி' என்றாள். ஈன்றணி - ஈன்றணித்தாய காலத்தையுடைய என்க. ஆன் என்பது, பெற்றம்

(பாடம்) 1. கிள்ளிக்கிழார்.

எருமை மரை என்பனவற்றிற் பெண்மை சுட்டிய பெயராகலின்; எருமைக்காரான் என்றாள். இதனை, "பெற்றமும் எருமையும் மரையும் ஆவே" (தொல்-மரபியல் - கo) என்னும் ஒத்தானும் உணர்க. "சேற்று நிலைமுனைஇய செங்கட் காரான்" (அகம் - சக.) எனப்பிறரும் கூறுதலுணர்க. எருமையாகிய காரான் என்க. உழவன் - அவ்எருமையை உடைய உழவன் என்றவாறு. இளங்கன்றை உழவன் பிணித்து விட்டானாக, அதனைப் பிரியலாற்றாது அயலிலுள்ள பயிர்களை மேயும் என்க. கன்றை அகலாதே எருமை பக்கத்துள்ள பைம்பயிர் ஆரும் என்றது, இல்லறத்திற்குரிய நம்பாலும் அன்பு மிக்காராய் ஒரோவழிப்பரத்தமையொழுக்கமுடையராதல் அவர்க்குப் பழியன்று; அஃது ஆடவரியல்பே காண் என மறுத்தோதியவாறு என்க.

பால் - பக்கம். பைம்பயிர் - நீஞ்சாலிப் பசும்பயிர் என்க. இருமனை - செல்வம் நிறைந்த இல்லம். எனவே, யாம் அப்பொருளாலே செய்தற்குரிய கடமைகளைச் செய்யத் தடையின்று என்றவாறு.

கடம் - கடமை. அவை, அறவோர்க்களித்தல் முதலியன. பெருமூது பெண்டிர் என்றது, 'யாம் இப்போது மகப்பேறடைந்து தாய்மை எயதினேம்; இனி யாம் இன்பத்தினும் காட்டிலும் அறத்தையே போற்றுதல் வேண்டும்' என்றுணர்த்தியவாறு.

தனக்கும் தோழிக்கும் வேற்றுமை காணளாகலின் நமக்கு என்றாள்.

## பாட்டு - கஅஉ : தலைவன் கூற்று

துறை :—தோழியாற் குறைமறுக்கப்பட்ட தலைமகன் தன் னெஞ்சிற்கு உரைத்தது. அஃதாவது, தலைவியைப் பெறுதற்குத துணை புரியும்படி தோழியைத தலைவன் வேண்ட,

அவள் மறுத்த வழி இனி மடலேறுவல் என்பது படத் தலைவன் கூறியது.

இதன்கண், 'நெஞ்சே! தலைவியும் நம் நிலை கண்டு இரங்கினாளல்லள்; தோழியோ நம்மைப் பனைமடற் கலிமாவேறி, நாண நீக்கிப் பிறர் எள்ளத் தெருவிலே செல்லுமபடி தூண்டுகின்றாள்; பின்னர் யாம் மடலேறாது என் செய்கேம்!' என்று தோழி கேட்கக் கூறுகின்றான்.

கஅ௨. விழுத்தலைப் பெண்ணை விளையன் மாமடல்

மணியணி பெருந்தார் மரபிற் பூட்டி
வெள்ளேன் பணிந்துபிறர் எள்ளத் தோன்றி
ஒருநாண் மருங்கிற் பெருநா ணீக்கித்
தெருவின் இயலவும் தருவது கொல்லோ
கலிந்தவிர் அசைநடைப் பேதை
மெலிந்தில ளாம்விடற் கமைந்த தூதே.

—மடல் பாடிய மாதங்கீரனார்.

(இ - ள்) கலிழ்ந்து அவிர் அசை நடைப் பேதை-நெஞ்

சமே அழகு ஒழுகி விளங்கா நிற்ப அசைந்தியங்கும் நடையை யுடைய தலைவியோ, மெலிந்திலள்-நகநிலை கண்டு நம்திறத்துச் சிறிதும உளம நெகிழ்ந்தாளில்லை, நாம் விடற் கமைந்த தூது-நம் குறைமுடிப்பான் அவள்பால் யாம செலுத்தற் கமைந்த தூதோ வெனில, விழுத்தலைப் பெண்ணை விளையல் மா மடல்-சிறந்த தலை யினையுடைய பனையின்கண்ணே தோன்றி முதிர்ந்த பெரிய மடலானே இயற்றிய குதிரைக்கு, மணி அணி பெருந்தார் மரபில் பூட்டி-ஒலிக்கின்ற மணியினையும அழகிய பெரிய மாலையினையும் முறைமையோடே பூட்டி, வெள்ளென்பு அணிந்து-யாம வெள் ளிய என்பு மாலையை அணிந்துகொண்டு, பிறர் எள்ளத் தோன்றி - நம்மைக் கண்ட ஏதிலர் எல்லாம இகழும்படி அவர்

முன்னர் அம்மாவின்மேல் தோன்றி, ஒருநாள் மருங்கில பெருநாண் நீக்கி - ஒரோ ஒரு நாள் மட்டில் நமது பெரிய நாணை நீக்கி நியுத்தும், தெருவின் இயலவும தருவது - தெருவினிடத்தே செல்லும செயலைத் தருவதொன்றுயிருநதது

விளக்கம்: —ஆதலால் யாம் மடலேறுதல் அன்றி வேறென் செய்

கோம் என்பது குறிப்பு. பனைமரம் தலையிலே சிறப்புடையதாகலின் விழுத்தலை என்றான். விழுத்தலை என்றது, கொழுத்ததலை என்னும் பொருள் படநின்றது. மடன் மாச செய்தற்குச்சிறந்த மடல்வேண்டும் ஆகலின், விழுத்தலைப் பெண்ணை எனல் வேண்டிற்று. விளையல்-நன்கு முதிர்ந்து விளைதலையுடைய. மாமடல் பெரிய மடல். மணி-மடன் மாவின் கழுத்திற் பூட்டும் ஒலிமணி. "பூண்மணி கறங்கவேறி" (குறுங்-கஎ௩.) என முன்னும் வந்தமை அறிக. மணியும் அணிபெருந்தாரும் என்க. பெருந்தார் என்றது, ஆவிரம்பூ எருக்கம்பூ முதலியவற்றாலாய மாலைகளை. "அணியலங் காவிரைப் பூவோடு எருக்கின், பிணையலங் கண்ணி மிலைந்து" (கங்அ.) என்றார் கலியினும்.

மடலேறுவார் என்புமாலையணிதல் மரபு. இதனை, "என்பணி வேன் மடல் மேல் வருவேன்"(௧0௩) எனவரும் தஞ்சைவாணன் கோவையானும் அறிக. பிறர் எள்ளினும் தோன்றவே வேண்டும் என்பான், பிறர் எள்ளத் தோன்றி என்றான். நம்மனோர் புகழொடு தோன்றுதலே சால்பாகவும், இதன்கண் எள்ளத்தோன்ற நேர்ந்தது என்றிரங்கியவாறு. நீக்கலாகாமைபற்றிப் பெருநாண் என்றான், இம் மடன்மாவின் பொருட்டு ஒருநாள்மட்டும் நீக்கவே வேண்டும் என்பான், 'ஒருநாண் மருங்கில் நீக்கி' என்றான். நாணீக்கியல்லது மடலேறலா காமையை (கஎ௩) ஆம் செய்யுள் விளக்கத்தினும் காண்க. கொல்ஓ. அசைகள்; வினவாக்குவாருமுளர்.

'பேதை மெலிந்திலள்; தூது இயலவுந்தருவது;
யாம் அது செய் யாது வேறென் செய்கோம்?'
என்றவாறு.

*

மூலமும் உரையும்

உ௬௱௫

## பாட்டு - ௧௮௩ : தலைவி கூற்று

துறை :—பருவ வரவின்கண் ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தியுரைத்தது அஃதாவது, பிரியும் பொழுது 'யான் கார்ப்பருவத் தொடக்கத்தே தேற்றமாக மீண்டு வருவேன்; நீ அதுகாறும் ஆற்றியிரு' எனக் கூறிச் சென்ற தலைவன, அப்பருவம் வந்த பின்னரும் வாராமை கண்ட தோழி, 'இவள் இனி ஆற்றுதல் அரி'தெனக் கவலை கொண்டாளாக, அதுகண்ட தலைவி, 'யான் ஆற்றுவல்' என்பதுபடச் சொல்லியது

இதன்கண், 'தோழி! தலைவர் நம்மைப் பிரிந்து சென்ற நாட்டினும் இக்கார்ப்பருவம உண்மையால், ஆங்குள்ள கொன்றை மலர்கள், நமது பசப்பினை அவர்க்கு நினைவூட்டும் என்றும, பெண் மானைப் பிரிந்த ஆண்மானையும் அவர் ஆண்டுக் காண்பா ரல்லரோ? என்றும், ஆதலால் அவர் நம்மை நினைந்தனராய் விரைவில் மீண்டு வருவர் என்றும, யான் ஆற்றியிருக்கின் றேன்; நீ கவலற்க,' என்றும் தலைவி கூறுகின்றாள்.

௧௮௩. சென்ற நாட்ட கொன்றையம் பசுவீ

ம்போற் பசக்குங் காலைத் தம்போற்
சிறுதலைப் பிணையிற் றீர்ந்த நெறிகோட்
டிரலை மானையுங் காணபர்கொல் நமரே
புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை
மென்மயில் எருத்தில் தோன்றும்
கான வைப்பிற் புன்புலத் தானே.

—ஔவையார்.

(இ - ள்.) தோழி—, புல் என் காயாப் பூக்கெழு பெருஞ்சினை மென்மயில் எருத்தில் தோன்றும் - முதுவேனிலாலே பொலிவழிந்திருந்த காயாவினது பூக்கள் பொருந்திய பெரிய கொம்புகள் கார்பருவ வருகையாலே மயிலினது கழுத்தைப் போன்று தோன்றாநின்ற, கான வைப்பின் புன்புலத்தான்- காட்டிடத்தையுடைய புல்லிய நிலத்தின்கண், நமர் சென்ற நாட்ட - நந்தலைவர் சென்று தங்கிய நாட்டிடத்தனவாகிய, கொன்றை அம் பசுவீ நம்போல் பசக்குங் காலை - கொன்றையினது அழகிய பசிய பூக்கள் நம்மைப் போல் பசலைநிறம் கொள்ளும் இக்கார்காலத்தே, தம் போல் சிறுதலைப் பிணையின் தீர்ந்த நெறி கோட்டு இரலை மானையும் காண்பர் கொல்-தம் மைப் போலச் சிறிய தலையையுடைய பெண்மானைப் பிரிந்து தனித்திருக்கும் நெறிந்த கொம்பினையுடைய ஆண்மானையும் காண்பாரோ?

காணமாட்டாரன்றே.



**விளக்கம்** :—'தோழி! நந்தலைவர் சென்ற நாட்டின்கண் இக்கார் கால வரவாலே கொன்றைகள் மலருங்கால், அம்மலரின் நிறம் நமது பசலையை அவர்க்கு நினைவூட்டுவதாகும்;மேலும், ஆண்டுப் பிணைமானொடு இரலை மான் இணைந்து விளையாடுதலையும் அவர் காண்பர்; அப்போது அவர் நம்மை நினைந்து வருவர் என்னும் நினைவாலே யான் ஆற்றியிருக் கின்றேன்.' என்றவாறு.

நாட்ட-நாட்டிலுள்ளனவாகிய. கொன்றை, கார்காலத்தே மலரும் இயல்புடைய வாகலின், கார்காலத்தைக் 'கொன்றைவீ பசக்கும் காலை' என்றாள். அம்பசுவீ - அழகிய பசிய மலர். பசலை - பொன்னிற முடைத்தாகலின் கொன்றை மலர் தன்னிறத்தாலே தலைவர்க்கு நம் பசலையை நினைவூட்டும் என்பது குறிப்பு. நெறி கோடு: வினைத் தொகை. நெறிந்த கொம்பென்க. அஃதாவது, அறல்பட்ட கொம்பு.

தம்போல் என்றது, தாம் தம் காதலியைப் பிரிந்து தனித்துறை யுமாபோல் என்றவாறு. பிணை - பெண்மான், இரலை - ஆண்மான். கார்காலத்தே புன்புலவைப்பிற் புல்லருந்தி ஆணும் பெண்ணுமாகத் துள்ளியாடும் இணைமானைக் காண்பரன்றிப் பிணை பிரிந்த மானைக்

காணல் இயலாதாகலின், 'காண்பர் கொல்' என்பது,

காணமாட்டார்

என்னும் பொருள் பயந்து, இணைமானையே காண்பர், காணுங் கால்நம்மை நினைந்து மீள்வர் என்னும் குறிப்புப் பொருளையும் தந்து

நின்றது.

கார்ப்பருவத்தின் முன்னர்ச சென்ற முதுவேனிலின் வெம்மையால் உலர்ந்த புற்கென்ற காயா, இப்போது மயிலெருத்துப் போல மலர்ந்தன என்பாள், 'புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை' என்ருள். "கருநனைக் காயா கணமயில் அவிழ" (கசுகு.) என்றூர், சிறுபாணற்றுப் படையினும்.

'கானவைப்பிற் புன்புலம்' என்றது, முல்லை நிலத்தை. கார் காலத்தே மான்கள் இணைபிரியாது துள்ளி விளையாடும் என்பதை,

"வன்பரற் றெள்ளறல் பருகிய விரலை
இன்புறு துணையொடு மறுவந் துகளத்
தான்வந் தன்றே தளிதரு தண்கார்" (சுந.)

என இந்நூலில் முன்னர் வந்துள்ளமையானும் உணர்க.

## பாட்டு - கஅச : தலைவன் கூற்று

துறை :—கழறிய பாங்கற்குக் கிழவன் உரைத்தது. அஃதாவது, 'காமநோயால் வருந்துதல் நினக்குத் தகவன்று' எனத் தன்னை இடித்துரைத்த நண்பனைத் தலைவன் மறுத்துக் கூறியது.

இதன்கண், 'தம்நெஞ்சம் அறிந்ததனைச் சான்றோர் பொய்யார்; யாவரும் அப்பரதவர் சிற்றூரின்கண் செல்லுதல் ஒழிமின்!

ஏனெனில் யான் ஆண்டுச் சென்று என் நெஞ்சத்தை இழந்தேன்; நீயிரும் செல்விரேல் நும் நெஞ்சமும் ஆண்டுறையும்

பரதவர் மடமகள் கண்வலைப்படுதல் ஒருதலை'
என்று தலைவன் பாங்கனுக்குக் கூறுகின்றான்.

கஅச. அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க் கில்லை
குறுக லோம்புமின் சிறுகுடிச் செலவே
இதற்கிது மாண்ட தென்னா ததற்பட்
டாண்டொழிந் தன்றே மாண்டவென்

நெஞ்சம்

மயிற்கண் அன்ன மாண்முடிப் பாவை
நுண்வலைப் பரதவர் மடமகள்
கண்வலைப் படூஉம் கான லானே.

—ஆரிய வரசன் யாழ்ப்பிரமதத்தன்.

(இ - ள்.) மயில் கண் அன்ன மாண் முடிப் பாவை-மயி லினது பீலியின்கட் கண்ணை ஒத்த மாட்சிமையுடைய முடியை யுடைய பாவை போல்வாளாகிய, நுண் வலைப்

பரதவர் மட மகள் - நுண்ணிய வலையையுடைய நெய்தனில மாக்களின் மடப் பதத்தையுடைய மகளினது, கண்வலைப்படூஉம் கானலானே - கண்ணாகிய வலையின்கண் ஆண்டுச் செல்வோர் நெஞ்சம் அகப்படுதற்கிடமான கடற்கரைச் சோலையிடத்துள்ள, சிறுகுடிச் செலவு குறுகல் ஓம்புமின் - சிற்றூரின்கண் சென்றடைதலைப் பரிகரியுங்கோள்; ஏனெனில், மாண் தகை நெஞ்சம் - எனது மாட்சிமைப்பட்ட தகுதியையுடைய நெஞ்சம், அதன் பட்டு இதற்கு இது மாண்டது என்னாது ஆண்டொழிந்தன்று - அக் கண் வலையின்கட் சிக்கி, இப்பொருளுக்கு இப்பொருள் தக்க மாட்சிமையுடையது என்னும் ஆராய்ச்சியின்றி திலேயே தங்காநின்றது, அறிகரி பொய்த்தல் அவ்விடத் ஆன்றோர்க் கில்லை - தாம் நெஞ்சறிந்ததனை மறைத்துப் பொய்கூறுதல் சான்றோர்க் கியல்பில்லை யாகலான், அந்நெறி நின்று யான் உணர்ந்த தொன்றனை நுமக்குக் கூறுகின்றேன்.

விளக்கம் :— அறிகரி - அறியப்பட்ட உண்மை.

> "கள்ளார் கள்ளுண்ணார் கடிவ கடிந்தொரீஇ
> எள்ளிப் பிறரை யிகழ்ந்துரையார்—தள்ளியும்
> வாயிற்பொய் கூறார் வடுவறு காட்சியார்
> சாயிற் பரிவ திலர்," (நாலடி-கடுள.)

என்ப வாகலான், "அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க்கில்லை," என்றான். எனவே யானும் அவ் வான்றோர் நெறிபற்றி என் னெஞ்சறிந்த தொன்றனைப் பிறர் நலங் கருதிக் கூறுகின்றேன் என்றானாயிற்று. சிறுகுடி - சிற்றூர். ஓம்புதல் - பரிகரித்தல். குறுகுதலைப் பரிகரிமின் என்க. இனைக் கிது மாண்டது அன்று எனப் பாங்கன் இடித்துரைத்தானாகலின், அதனைக் கருத்துவகையானே கொண்டு கூறுவான் இதற்கிது மாண்ட



தென்றது அதற்பட்டதென்றான். இப் பொருட்கு இப் பொருள் ஏற்ற மாண்புடையது இதற்கிது பொருந்துவதன்று என்னும் ஆராய்ச்சியறிவு அவளைக் காணாத நின் போல்வார்க்கே உளதாம். கண்டாலோ நெஞ்சம் அவள் கண்வலைப்பட்டு மயங்குதலன்றி ஆராயும் வன்மையுடையதாகாது என்று பாங்கனை மறுத்தவாறும். அதற் பட்டு - அதன்கட் பட்டு. அது என்றது, கண்வலையை. ஆண்டு: அக் கண் வலையினிடத்தே. மயிற்கண் - மயிலினது பீலியின்கட் கண். இது மயிர்முடிக் குவமை.

'மாண்டகை நெஞ்சம்,' என்றான், அவளைக் காணுமுன்பெல்லாம் 'தக்க வின்ன தகாதன இன்ன,' என்று ஆராயும் மாண்புடைய நெஞ்சமே யானும் உடையேன், என்றுணாததற்கு. நுண்வலை - நுண்ணிய நூலாலாய வலை. அவள் குடித் தொழிலிலே அவள் மிகவும் வன்மையுடையள் என்றவாறு.

'நண்பனே நீ அவ வழகியைக் கண்டிருப்பையாயின் என்னை இங்ஙனம் இடித்துரையாய்,' என்பது குறிப்பு.

## பாட்டு - கஅரு : தலைவி

கூற்று

துறை :— தலைமகன் இரவுக்குறி வந்து ஒழுகாநின்ற காலத்து வேறுபட்ட தலைமகளை "வேறுபட்டாயால்," என்றாட்குக் கிழத்தி யுரைத்தது. அஃதாவது, தலைவன் இரவின்கண் ஏதமிக்க இருள்நெறியில் வருதலை அஞ்சி, உடல் மெலிந்த தலைவியைத் தோழி தலைவன் வருவானாகவும், 'நீ எற்றுக்கு மெலிகின்றனை ?' என்று வினவ, தன் மெலிவிற்குக் காரணங் கூறி, தலைவனை 'இங்ஙனம் வரல்வேண்டா,' என்று கூறுக எனத் தலைவி கூறியது.

இதன்கண், 'தோழி நீ எனது நன்மா மேனி அழிகின்ற துன்ப நிலையைத தலைவருக்கு எடுத்துக் கூறி, இம் மெலிவு நீயிர் இருள் நெறியில் வருதலானே அவட் கெய்தியது என்றுணர்த்தி, அங்ஙனம் வருதலைப பரிகரித்தால் என்னும் !' என்று தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

கஉரு. நுதல்பசப் பிவர்ந்து திதலை வாடி
நெடுமென் பணைத்தோள் சாஅய்த்
தொடிநெகிழ்ந்
தின்ன ளாகுத னும்மி னாகுமெனச்
சொல்லி னெவனாந் தோழி பல்வரிப்
பாம்புபை அவிழ்ந்தது போலக் கூம்பிக்
கோணடலிற் றேலந்த வொண்செங்
காந்தள்
கன்மிசைக் கவியு நாடற்கென்

நன்மா மேனி யழிபடர் நிலையே.

—மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனூர்.

## மூலமும் உரையும்

உ சாக்

(இ - ள்.) தோழி—, பல் வரிப் பாம்பு பை அவிந்தது போலக் கூம்பி - பலவாகிய கோடுகளையுடைய பாம்பின்படம் குறைந்தாற்போன்று குவிந்து, கொண்டலில் தொலைந்த ஒண் செங்காந்தள் - கீழ்காற்றாலே வீழ்த்தப்பட்ட ஒள்ளிய செங்காந்தள மலர், கல் மிசைக் கவியும் நாட்டு - பாறையின்மேலே கவியாநின்ற நாட்டையுடைய தலைவருக்கு, என் நல் மா மேனி அழி படர் நிலை - எனது நன்றாகிய மாமையுடைய மேனியினது மிக்க துன்பமுடைய நிலையினை, நுதல் பசப்பு இவர்ந்து திதலை வாடி நெடு மென் பணைத்தோள் சாஅய்த் தொடி நெகிழ்ந்து இன்னள் ஆகுதல் - நுதலின்கண்ணே பசப்பூரப்பட்டு சுணங்கு நிறங்குன்றி நெடிய மெல்லிய பருத்த தோள்கள் மெலிந்து வளையல் கழன்று இத்தன்மையை உடையள் ஆகுதல், நும் மின் ஆகும் என - நுமமுடையதொரு செயலாலே உண்டாயது என்று எடுத்துக் கூறி, சொல்லின் எவனும் - நீ அறிவுறுத்தினால் அதனால் வரும் ஏதம் யாது?

விளக்கம் :—'தோழீ! நாடற்கு இன்னளாகுதல் நும்மின் ஆகும் எனச சொல்லின் எவன்?' என இயைபு காண்க. இவர்ந்து வாடிச் சாஅய் நெகிழ்ந்து என்னும் சினைவினை எச்சங்கள் முதல் வினையாகிய ஆகுதல் என்னும் வினைகொண்டு முடிந்தன. இவர்தல் - ஊர்தல். திதலை தேமல். இது மெலிவின்கண் நிறங் குன்றித் தோன்றுதலை வாடி என்றாள் பணைதோள் - மூங்கில் போன்ற தோளுமாம். சாய்- மெலிந்து. தோள் சாய்தலின் தொடி நெகிழ்ந்ததென்க.

இன்னள் - இத்தன்மை யுடையள். இத் துன்ப ஆக்கத்திற்கு நும் செயல் ஏது என்றவாறு. அவன் செயல் என்றது,

அசச மிக்க இருள்

நெறியில் வருதலை. இருள் நெறியில் நீவிர் வருங்கால் விலங்கு முதலிய வற்றால் நுமக்கு ஏதம் விளையுங்கொல் என்று அஞ்சி அஞ்சி இவள் இந் நிலையினள் ஆகின்றாள் என உய்த்துணரக் கூறியதென்க.

பை - படம். பாம்புப் படம் சுருங்கினாற் போன்று இதழ் சுருங்கிய செங்காந்தள் என்க. காந்தள் காற்றாலலைப்புண்டு கல்லிற் படியும் என்றது, தலைவி நினக் கேதமுறுமே என்னும் அச்சத்தாற் குலைக்கப் பட்டுத் துன்பத்திலே வீழ்ந்தாள் என்றவாறு. அழிபடர்-மிக்க துன்பம். வினைத் தொகையாகக் கொள்ளினுமாம்.

நாடோறும் வாராநிற்பவும் இவள் மெலிவிற்கு யான் ஏதுவென்றல் எங்ஙனம் என, ஆராய்ந்து தான் இருள்நெறி வருதலே இதற்குக் காரணம் எனத்தெளிவான்; தெளிந்துழி வரைந்துகொள்ள முன் வருவான்; வரவே நலமாம் என்பாள், 'எவனும்' என்றாள். என்ன தீங்குடைத்தாம் என்று வினவுமுகத்தானே தீங்குண்டாகாது நலனே விளையும் என்றுணர்த்திய படியாம.

## பாட்டு - கஅசு : தலைவி கூற்று

துறை :—பருவ வரவின்கண் ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது. அஃதாவது, தலைவன் மீண்டு

வருவதாகக் குறித்துச் சென்ற பருவம் வந்தபின்னரும் வந்திலனாகத் தலைவி இனி ஆற்றாள் என்று கவலைகொண்டவழி, அவளுக்குத் தோழி கூறியது.

இதன்கண், 'தோழி! என் கண்கள் தலைவரைக் காணப் பெறாது துயில் துறந்தன,' என்று தலைவி கூறுகின்றாள்.

க௯௬.

ஆர்கலி யேற்றொடு கார்தலை மணந்த
கொல்லைப் புனத்த முல்லை மென்கொடி

எயிறென முகைக்கு நாடற்குத்
துயிறுறந் தனவால் தோழியென் கண்ணே

—ஒக்கூர் மாசாத்தியார்.

(இ - ள்.) தோழி—, என் கண் - என்னுடைய கண்கள், ஆர்கலி ஏற்றொடு காதலை மணந்த - ஆரவாரத்தையுடைய இடியேற்றோடே முகில் மழைபெய்து கலந்த, கொல்லைப் புனத்த முல்லை மென்கொடி - முல்லை நிலத்தனவாகிய முல்லையினது மெல்லிய கொடி, எயிறு என முகைக்கும் நாடற்கு - பற்கள் போன்று அரும்பாநிற்கும் நாட்டையுடைய தலைவன் பொருட்டு, துயில் துறந்தன - உறங்குதலை யொழிந்தன.

**விளக்கம் :**—ஆர்கலி - ஆரவாரம். ஏறு - இடி. கார்தலை மணந்த என்றது, முகில்கள் மழை பெய்து கலந்த என்றவாறு. கொல்லை - புன்செய். கொல்லைகளாகிய புனம் என்க. கார்தலை மணந்த புனத்த முல்லை முகைக்கும் என்றது, அது கார்ப்பருவம் ஆதலை நினைந்து கூறியது. தான் கூறிய கார்ப்பருவ வரவினைக் கண்டும் வந்திலர் தானை நினைந்து இப்பேதைக் கண்கள் துயில் துறந்தன என்றவாறு. என் கண் என்றது, என்னுடைய பேதைமையுடைய கண்கள் என்றவாறு. பேதைமையாவது தஙகண் அன்பிலாதாரைக் கருதி வருந்துதல். 'முகையும்,' என்றும் பாடம். அதற்கும் அரும்புதலைச் செய்யும் என்றே பொருள் கூறுக.

## பாட்டு - கஅ௭ : தலைவி கூற்று

துறை :—வரைவு நீட்டித்தவழி ஆற்றாளாகிய தலைமகளை ஆற்றுவிக்க வேண்டித் தலைமகனை இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் இயற்பட மொழிந்தது அஃதாவது, வரைதற்கு வேண்டிய பொருளீட்டச் சென்ற தலைவன், கால நீட்டித்தமையால் ஆற்றாமை மிக்க தலைவியின் நினைவை வேறு வழியிலீர்த்து ஆற்றுவிக்க வெண்ணிய தோழி, தலைவனைக் குறைகூறிப் பழித்தாளாக அது பொறாத தலைவி அவள் கூற்றை மறுத்துத் தலைவனைப் புகழ்ந்தது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'மலைப்பக்கத்தே வருடைமான் கன்றுகள் தன் தாயின் பாலை நிரம்ப வுண்டு மலை

நீழலிலே துள்ளாநின்ற நாட்டையுடைய தலைவர், தாம் மேற்கொண்ட வினையிடத்தே வன்மையுடைய நெஞ்சினர்; அவர் வன்மை நினைந்து மகிழாமல் என் னெஞ்சம் தன் பேதைமையாலே நெகிழாநின்றது,' என்று கூறுகின்றாள்.

கஅஎ. செவ்வரைச் சேக்கை வருடை மான்மறி

சுரைபொழி தீம்பால் ஆர மாந்திப்
பெருவரை நீழ லுகளு நாடன்
கல்லினும் வலியன் தோழி
வலிய னென்னாது மேலியுமென்

னெஞ்சே.

—கபிலர்.

(இ-ள்.) தோழி—, செவ்வரைச் சேக்கை வருடைமான் மறி - செவ்விய மலைச் சாரலிடத்தே உறைதலையுடைய வருடைமானினது குட்டி, சுரை பொழி தீம்பால் ஆர மாந்தி - தன் தாயின் மடியினின்றும் சுரந்து ஒழுகும் இனிய பாலை வயிறு நிரம்பப் பருகி, பெருவரை நீழல் உகளும் நாடன் - பெரிய மலைப் பக்கத்து நீழலிலே துள்ளியாடாநின்ற நாட்டையுடைய தலைவன், கல்லினும் வலியன் - ஆள்வினையின்கண் மலையைக் காட்டினும் திண்மையுடையன், வலியன என்னாது - அவன் வலியன் என்பது கருதி மகிழாமல், என் நெஞ்சு மெலியும - எனது பேதை நெஞ்சம் அவன் திறத்து மெலியாநின்றது.

**விளக்கம்** :—செவ்வரை - செங்குத்தான மலை எனினுமாம். சேக்கை - தங்குமிடம். வரையின்கண் தங்குமிடத்தையுடைய வருடை
மான் என்க. சுரை - சுரத்தல் ஆர - நிரம்பும்படி. மாந்துதல் - பருகுதல். செவ்வரையாகலின் நீழலுடைத்தாயிற்றென்க. உகளு தல் - துள்ளி விளையாடுதல்.

வருடைமான் மறி தீம்பாலுண்ணுங்கால் ஆரவுண்டு, பின்னர் மலை நீழலிலே உகளும் என்றது, தலைவன் இல்வாழ்க்கைக்கு இன்றியமை யாத பொருளீட்டுங்கால் நிறைய ஈட்டிக்கொண்டு, பின்னர் இல்லின் கண் இருந்து அறஞ்செய்யும் இயல்புடையான் என்றவாறு. "இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர், துன்பந் துடைத்தூன்றுந் தூண்" என ஆன்றோர் கூறுதற்கிணங்க, நந்தலைவர் இன்பம் விழை யாத் திண்மையராய்க் குறித்த பருவம் வரினும் வினைக்குறைவுண்மை யால் மேலும் முயன்று பொருளீட்டுவாராயினர். வினையே ஆடவர்க் குயிர் அவவினைக்கண் வினை கெடலோம்பாவழி இல்லறம் இனிது நடவாமையின் அவர் சிறிது காலந் தாழ்த்தது தவறாகாது. இன்பம் விழையாது வினைவிழையும் திண்மையில் அவர் கல்லினும் வலியரா தற்கு அவர் வாழ்க்கைத் துணையாகிய யான் மகிழ்ந்து ஆற்றியிருத்தலே அறிவும் கடமையும் ஆகும். அங்ஙனமின்றி என்னெஞ்சம் மெலிவ தற்கு அதன் பேதைமையே ஏதுவாம் எனத் தலைவன் சான்றாண்மை யைப் புகழ்ந்தாள் என்க.



வலியன் என்னாது என்றது, வலியன் என்று மகிழாமல் என்ற வாறு. வலியனாதற்கு யான் மகிழவேண்டும் என்றபடி.

இனி, தலைவன் அன்பிலன் தான் குறித்த பருவத்தே வந்திலன் எனத் தோழி இயற்பழித்தாளாகக் கொள்க. "தலைவன் தான் நினைந்து சென்ற பொருளைப் பெற்றிலன்போலும். உரிய காலத்தே அதனைப் பெற்று வருதற்குரிய வன்மையிலன் போலும்" என்று தோழி இயற்பழித்தாள் என்பாருமுளர். அங்ஙனம் கூறுதல் அவன் தலைமைக்கு இழுக்காம் என்க. அன்பிலன் என்றே தோழி குறைகூறத் தலைவி அன்பிலாமையால் அவர் வாராராயினரல்லர் ஆளவினைக்கண் திண்ணியராதலிற் றாழ்த்தனர் என்றாள் என்பதே நன்கு சிறத்தலறிக.

## பாட்டு - கஅஅ : தலைவி கூற்று

துறை :—பருவங் கண்டழிந்த கிழத்தி தோழிக்கு உரைத்தது. அஃதாவது, தலைவன் மீண்டு வருவதாகக் குறித்த கார்ப் பருவம் வந்தும் அவன் வந்திலாமையால் துன்புற்ற தலைவி, கார்காலத்து மாலை கண்டு அழிந்து

தோழிக்குரைத்தது.

இதன்கண், 'தோழீ! முல்லைகள்

மலர்ந்தன ; முல்லை நிலம் கார்ப்பருவத்தாலே

சிறந்து விளங்கிற்று ; நந்தலைவரோ

இன்னும் வந்திலர் ; உதோ என் நலத்தை அழித்தற்கு மாலைக் காலம் வந்துவிட்டதே! யான் என்செய்கேன்?' என்று தலைவி

கூறுகின்றாள்.

கஅஅ. முகைமுற் றினவே முல்லை

முல்லையோடு

தகைமுற் றினவே தண்கார்

வியன்புனம்

வாலிழை நெகிழ்த்தோர் வாரார்
மாலை வந்தன்றென் மாணலங் குறித்தே.
—மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார்.

(இ - ள்) தோழி—, முல்லை முகை முற்றின - முல்லைக் கொடிகளில் அரும்புகள் முதிர்ந்தன, தண்கார் வியன்புனம் முல்லையொடு தகை முற்றின - தண்ணிய கார்ப்பருவ வருகையைப் பெற்ற அகன்ற முல்லைநிலங்கள் அம் முல்லைகளோடே ஏனை அழகுகளும் முதிரப்பெற்றன, வால் இழை நெகிழ்த்தோர் வாரார் - இன்னும் எனது தூய அணிகலன்களை நெகிழ்த்த தலைவர் வந்தாரிலர், என் மாண் நலம் குறித்து மாலை வந்தன்று - எனது மாட்சிமையுடைய பெண்மை நலத்தை அழிக்கக் குறிக்கொண்டு உதோ மாலைக்காலம் வந்துவிட்டது.

**விளக்கம்** :—முகை - அரும்பு. அரும்பு முற்றுதலாவது, அன்று மாலையிலே அலரும் செவ்வியை எய்துதல் என்க. முல்லையொடு - அம்முகை முற்றிய முல்லையோடே என்க. தகை - அழகு. முல்லையோடே ஏனைய கார்காலத்திற்குரிய அழகெலாம் என்க. அவையாவன:-



"செறியிலைக் காயா அஞ்சன மலர

முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்
கோடற் குவிமுகை அங்கை அவிழத்
தோடார் தோன்றி குருதி பூப்ப”

(முல்லைப் - கூ௩ - எ )

இன்னோரன்ன பிறவும் நிகழ்தலால் உண்டாகும் அழகுகள் என்க. வாலிழை நெகிழ்த்தோர் என்றது, யான் இங்ஙனம் மெலியும்படி பிரிந்து சென்ற வன்கண்ணர் என்றவாறு வாரார் என்றது, அவர் குறித்துசசென்ற பருவம் இங்ஙனம் நிகழாநிற்பவும் வந்திலாதார் என்றவாறு. வால்இழை - தூய அணிகலன். மாலைக்காலம் பிரிந்துறைவார்க்குக் கொன்றன்ன இன்ஞ செய்யும் கொடுமைத்தாகலின், ‘மாலை வந்தன்று’ என்றாள். மாலையில எஞ்சிய நலனும் அழியுமே என்றஞ்சுவாள், அதன் வரவினைத் தன் நலத்தை அழித்தல் கருதி வருவதாக உரைத்தாள். ‘யான் இம்மாலையில் எங்ஙனம் ஆற்றுவேன்!’ என்றிரங்கியவாறும்.

## பாட்டு - க௩௬ : தலைவன் கூற்று

துறை :—வினை தலைவைக்கப்பட்ட விடத்துத் தலைமகன் பாகற்கு உரைத்தது. அஃதாவது, அரசனல் வினையின்கண் ஏவப்பட்ட தலைவன், தன் தேர்ப்பாகனை நோக்கிக் கூறியது.

இதன்கண், தலைவன் பாகனை நோக்கி, ‘பாகனே நின் செயற்கண் அமைதி! யாம் அரசன் ஏவிய வினைக்கண் இன்றே

விரைந்து சென்று அதனைச் செய்து முற்றி, நாளை அந்தி மாலைப்போதின் முன்னரே சின்னிரை வால்வளைக் குறுமகளை எய்தி உவத்தல் வேண்டும்,' என்று கூறுகின்றான்

கஉகூ. இன்றே சென்று வருவது நாளைக்
குன்றிழி அருவியின் வெண்டேர் முடுக
இளம்பிறை யன்ன விளங்குசுடர் நேமி
விசும்புவீழ் கொள்ளியிற் பைம்பயிர்
துமிப்பக்
காலியற் செலவின் மாலை எய்திச்
சின்னிரை வால்வளைக் குறுமகள்
பன்மாண் ஆகம் மணந்துவக் கும்மே.

—மதுரை ஈழத்துப் பூதன்தேவனார்.

(இ - ள்.) வலவ—, இன்றே சென்று நாளை வருவது - யாம் வினையின்மேல் இன்றே சென்று நாளையே வரல்வேண்டும், குன்றிழி அருவியின் வெண் தேர் முடுக - மலையினின்று வீழும் அருவிபோல வெள்ளிய தேர் விரையா நிற்ப, இளம் பிறை அன்ன விளங்கு சுடர் நேமி - இளைதாகிய பிறையை ஒத்து விளங்குகின்ற உருள்கள், விசும்பு வீழ் கொள்ளியின்

கு.—18



பைம்பயிர் துமிப்ப - வானினின்றும்

வீழ்கின்ற கொள்ளி

அழிக்குமாறு போலப் பசிய பயிரினை அழியாநிற்ப, கால் இயல் செலவின் - காற்று இயங்கினாற் போல்வதொரு விரைவுடைய இயக்கத்தோடே வந்து, மாலை எய்தி - மாலைப்போதிலேயே நமமனையை அடைந்து, சில் நிரை வால் வளைக் குறுமகள் - சிலவாகிய வரிசையையுடைய வெள்ளிய வளையலை அணிந்த தலைவியினது, பன் மாண் ஆகம் மணந்து உவக்கும் - பலவாகிய மாட்சிமையுடைய மார்பத்தை அணைந்து உவப்போம்.

**விளக்கம்** :—இது தலைவி கேட்பப் பாகற்குக் கூறியது என்க. 'அரசன் ஏவிய வினையை விரைவில் முடித்து நாளையே வருகுவன்; அது காறும் வருந்தாதிரு' எனக் குறிப்பானே உணர்த்தியவாறு. இன்றே சென்று என்பதன்கண் ஏகாரம் பிரிநிலை. நாளையே எனற்பாலதாகிய பிரிநிலை ஏகாரம் செய்யுள் விகாரத்தால் தொக்கது. வருவது என்பது,

வியங்கோள். "இங்கு நாம் இயம்பும் தத்துவங்களின் வைத்து அறிவது" (சிவஞான சித்தியார், சுப - உ௬௦) என்புழி அறிவது என்பது வியங்கோள். வியந்துணர்க. யானை மருப்பானுய தோராகலின், வெண்டோ என்றான். விரைவின் மிகுதிக்கு அருவிநீர் இழிதலை உவமை எடுத்துக்காட்டினான். மூடுகுதல் - விரைதல். இளமபிறை - உருளையின் விளிம்பு. மண்ணின் மறைந்த பகுதி போக எஞ்சிய பகுதிக்குவமை என்க. வெண்பொன்னலாய உருளைபோலும் விசும்பினின்றும் வீழும் கொள்ளியால் பயிர்கள் அழிதல், அக்கொள்ளி சில சமயத்தில் நிலத்தில் வீழ்ந்த பின்னரும் எரிவதனால் நிகழ்வது போலும். விண் வீழ் கொளளி நிலத்தில் வீழ்தல் இன்றும அறியப்பட்டதேயாகும். அல்லது விண்வீழ் கொள்ளியின் ஒளியாலே பயிர்கள் அழியும் என்னும் கருத்தாயினும் அமையலாம். இக் கருத்தை "நுண்கொடி மின்னிற் பைம்பயிர் துமிய" (உருச) எனவரும் அகநானூற்றுப் பாடல் வலியுறுத்தல் உணர்க. சின்னிரை - சிலவாகிய வரிசை. மணமாகாத மகளிர் பன்னிரை வளையல் உடையராதலும் மணமான மகளிர் சின்னிரை வளையலே அணிதலும் மரபு 'சின்னிரை வால வளைக் குறுமகள்' என்றது, யாம் அங்ஙனம் விரைந்து வாராக்கால் அச்சின்னிரை வளையலும் கழன்று வீழ்ந்தொழியும் என்னும் நினைவினுற் கூறப்பட்டதென்க. ஆகம் - மார்பு. உவக்கும் - உவப்பேம்: தன்மைப்பன்மை.

இன்று சென்று நாளை வருவது
உவக்குமாகற்கு எனினுமாம்.

எற்றுக்கெனின்? மணந்து

## பாட்டு - ௧௬௦ : தலைவி கூற்று

துறை:—பிரிவிடை ஆற்றாளாய தலைமகள் தோழிக்குச் சொல்லியது. அஃதாவது, தலைவன் பிரிந்த காலத்தே ஆற்றாமை மிக்க தலைவி, 'என் துன்பத்தைத் தலைவர் எண்ணியும் அறியாரோ?' எனத் தோழிக்குக் கூறியது.

இதன்கண், தலைவி நள்ளிரவில் தோழியை விளித்து, 'நம்மை நீத்துச்சென்ற நந்தலைவர், பிரிந்துறைவார்க்குத்



தொழுவத்துள்ள ஆன்மணிக் குரல் எத்தகைய துன்பம் செய்ய வல்லதென்பதை அறியார் கொல்லோ?' என்று கூறுகின்றாள்.

கசூ௦. நெறியிருங் கதுப்பொடு பெருந்தோ
ணீவிச்
செறிவளை நெகிழச் செய்பொருட்
ககன்றோர்
அறிவர்கொல் வாழி தோழி பொறிவரி
வெஞ்சின அரவின் பைந்தலை துமிய
உரவுரும் உரறும் அரையிருள் நடுநாள்
நல்லே றியங்குதோ றியம்பும்
பல்லான் தொழுவத் தொருமணிக்
குரலே.

—பூதம் புலவனார்.[1]

(இ - ள்.) தோழி—, நெறி இருங் கதுப்பொடு பெருந் தோள் நீவி - எனது நெறிப்பினையுடைய கரிய கூந்தலோடே

பெரிய தோளினையும் தமது கையாலே தடவித் தேற்றினராய்,

செறிவளை நெகிழச் செய்பொருட்கு அகன்றோர் - செறிய இடப் பட்ட வளைகள் நெகிழும்படி பிரிந்து ஈட்டும் பொருள் நிமித்தம் போன நந்தலைவர், பொறி வரி வெஞ்சின அரவின் - புள்ளிகளை யும் கோடுகளையும் வெவ்விய சினத்தையும் உடைய பாம்பு களின், பைந்தலை துமிய - பசிய தலைகள் துணிபடும்படி, உர உரும் உரறும் - வலிமிக்க இடியேறு முழங்காநின்ற, அரை யிருள் நடுநாள் - பாதியாகிய இருள்செறிந்த நள்ளிரவின்கண், நல் ஏறு இயங்குதொறு இயம்பும் - நல்ல ஆனேறு செல்லுந் தோறும ஒலியாநின்ற, பல் ஆன் தொழுவத்து ஒரு மணிக் குரல் - பலவாகிய ஆன்களையுடைய தொழுவத்தின்கண் ஒற்றை மணியினது ஓசையை, அறிவர் கொல் - கேட்டறிவரோ?

**விளக்கம்** :—ஆன்மணிக் குரல் பிரிந்துறைவோர்க்குத் துணையா வாரை நினைவூட்டி வருத்துமியல்புடைத்து,

> "பிறரும் கேட்குநர் உளர்கொல்.........
> ஊரதை தூற்றும் கூதிர் யாமத்
> தானுளம் புலம்புதொ றுளம்பும்
> நாநவில் கொடுமணி நல்கூர் குரலே"

(அகூ.) என இந்நூலின்கண் முன்னரும் ஓதப்பட்டமை காண்க.

நெறி - நெறிப்பு. அஃதாவது அறல்பட்டிருத்தல். இருமை - கருமை. கதுப்பு - கூந்தல. தலைவியைப் பிரியக்கருதிய தலைவன் அவளைக் கதுப்புளரி நுதல்நீவித் தலையளி செய்தல் இயல்பு. அவனுட னுறையுங்கால் செறியக்கிடந்த வளை நெகிழ என்பாள், 'செறிவளை' என்றாள். செய்பொருள்: வினைத்தொகை. பொருட்கு - பொருளீட்

1. (பாடம்) பூதம்புல்லன்.



டற்கு. இடிமுழக்கத்தால் அரவம் இறக்குமாகலின், 'அரவின் பைந் தலை துமிய உரும் உரறும்' என்றாள. அரையாகிய நடு இரவு என்க. பாதியாகிய இருள் நடுவே உள்ள இரவு எனினுமாம்.

தலைவனைப் போன்று துணை பிரியாது ஆனோடே இயங்கும் ஏறு

என்பாள், 'நல்லேறு' என்றாள். இயங்கும் என்றது, இடக்கரடக்கல். ஆன் தொழுவத்தே ஒற்றை மணியே கட்டியிருத்தல் வழக்கம்போலும். ஆன்மணிக் குரல் ஏற்றுடன் இணைந்தின்புறும் பசுவினை நினைப்பூட்டு முகத்தானே தன் துணைவனின்மையை எண்ணி வருந்தச் செய்தலின், இன்னாதாயிற்று. இத்தகைய ஆன்மணிக்குரலைத் தலைவர் நடுநாள் அறிவராயின் நம்மை நினைந்து மீள்வர் அவர் அறிந்திலர் போலும் என்றிரங்கியபடியாம். தலைவா என்னை நினையாது மறந்தனர் என்பது கருத்து.

## பாட்டு - ககூக : தலைவி கூற்று

துறை :—பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, தலைவன் பிரிவினாலே பெரிதும் வருந்திய தலைவியின் நிலை கருதிக் கவலைகொண்ட தோழிக்குத் தலைவி, 'யான் ஆற்றுவன்' என்பதுபடக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, "நந்தலைவர் ஈண்டுத் துணையோடு உறைபுமு பறவைகள் தமமில் மகிழ்ந்து இன் குரலால் அகவாநிற்பதைக் கேட்டிருந்தேயும, 'நாம் பிரியின் இவள் நிலை என்னும' என்று கருதாது பிரிந்தனா அல்லரோ! 'அவர் வருகமன்; வந்தால் எம்மோதியும் புனையேல்! எம்மைத் தொடுதலும் ஒழிக!' என்று புலந்து மறுப்பேம்" என்று கூறுகின்றாள்.

கககக. உதுக்கா ணதுவே யிதுவென் மொழிகோ
நோன்சினை யிருந்த இருந்தோட்டுப் புள்ளினம்
தாம்புணர்ந் தமையிற் பிரிந்தோ ருள்ளார்
தீங்குரல் அகவக் கேட்டு நீங்கிய
ஏதி லாள ரிவண்வரிற் போதிற்

பொம்ம லோதியும் புனையல்
எம்முந் தோடாஅ லென்குவே மன்னே.

1

——..............................

(இ - ள்.) தோழி—, இது என் மொழிகோ - தலைவரின் இச்செயலை எத்தன்மைத்தென்று சொல்லுவேன், நோன் சினை யிருந்த இருந்தோட்டுப் புள் இனம் - வலிய கிளையின்கண் சேக்கை கொண்டிருந்த பெரிய கூட்டத்தையுடைய பறவை 1. ஆசிரியர் பெயர் காணப்பட்டிலது.

## மூலமும் உரையும்

உஎஎ

யினங்கள், தாம் புணர்ந்தமையின் பிரிந்தோர் உள்ளா - தாம் தந்துணைகளோடு கூடியிருத்தலாலே துணை பிரிந்தார் நிலை என்னும் என்று நினையாதனவாய், தீங்குரல் அகவக் கேட்டும் - இனிய குரலாலே அழைத்தலைத் தாமே கேட்ட பின்னரும், நீங்கிய ஏதிலாளர் இவண் வரின் - எம்நிலை கருதாது பிரிந்து

சென்ற அயன்மையுடையோர் இவ்விடத்திற்கு மீண்டு வந்துழி,

போதின் பொம்மல் ஓதியும புனையல் - ஐய பூவாலே எம்முடைய பொங்குதலுடைய கூந்தலேயும் கைசெய்யா தொழி, எம்மும் தொடாஅல் - எம்மையும் தீண்டாதேகொள், என்குவெம் - என்று யாம் கூறு நிற்பேம், உதுக் காண்அது - அப்புலவி நிலேயே, இது என்பதை நீ காண்பாயாக.

**விளக்கம்** :—அவன் பிரிந்தமை எண்ணி வருந்தி ஆற்றேன் ஆகின்றேன் அல்லேன் ; அவன் செய்தமை எண்ணிப் புலந்தமைகின்றேன் ; ஆகலின், 'ஆற்றேன் என்று நீ கவலற்க' என்றவாறு.

உது - என்றது, இந்த நிலே என்றவாறு. தான் ஆற்றுநிலே எய்தி விட்டதாகத் தோழி கருதுகின்றனள் ஆகலின், உது நீ கருதும் ஆற்று நிலேயன்று ; ஊடல்நிலே என்பாள், அது உது என்றாள். அப் புலவி நிலேயே உது என்றவாறு. உது என்பதனை உவவிடத்தே என்று இடம் சுட்டியதாகக் கொள்வாருமுளர்.

அது உது என்றாளாக, அது என்றது எதனை என அறிய அவாவிய

தோழியை நோக்கி, இது என் மொழிகோ, அதனை என்னென்று கூறுகேன் எனத் தொடங்கி, அஃதாவது நீங்கிய எதிலாண்மை என் றுணர்த்துகின்றாள். அத்தகைய எதிலாண்மையுடையோர் வரின்,

யாம், புனையல் தொடாஅல் என்குவம் என்கின்றாள். அவவேதி
லாண்மையை நினைந்தவுடன் செற்றம் எழுந்தமையால் எதிலாளர்
எனப் பன்மையாற் கூறினவள் புனையல் தொடால் என ஒருமையாற்
கூறினள் என்க. 'என் மொழிகோ' என்றது, அவரது புன்செயலை
யாம் எங்ஙனம் கூறுவோம் என்றவாறு.
கூறற்குமொல்லாத புன்செயல் அஃது என்பது கருத்து.
நோன் சினை-வலிய கொம்பு. தான் நோலாத் தலைவனைப்
பற்றியிருந்தமை போலாது பறவையினங்கள்
தம்மைத்
தாங்கும் சினையறிந்திருந்தன என்று பறவையைப்
றன்னை இழித்துக கூறிய நுணுக்கம் உணர்க.
பாராட்டு முகத்தாற்

தாம் தத்தம் துணையோடுறைதலின் பிரிந்தோர்க்குத் தங்குரல்
இன்னா செய்யும் என்பதை அறிவு குறைந்த அஃறிணையவாகலான்
அவைகள் உள்ளாமல் அகவுகின்றன. ஆராயும் அறிவுமிக்க நந்தலைவர்
யாம் பிரிந்த பின்னரும் இப்பேதைப் பறவைகள் இஙஙனமே தீங்குரல்
அகவுமாயின் அப்போது இவள் நிலை என்னும் என்றுள்ள வேண்டிய
வர் உள்ளிற்றிலர் என்பாள், உள்ளற் றொழிலைப் பறவைகட்கேற்றி,
'உள்ளா அகவும்' என்றாள். கேட்டும் என்றதன்கண், உம்மை
சிறப்பு. எதிலாளர் - அயன்மையுடையோர். பொம்மல் - பொங்குதல்.
ஓதி - கூந்தல். புனையல், தொடால் - முன்னிலை ஒருமைகள். எம்மும்-
எம்மையும். என்குவம் - என்போம்.



தலைவன் பிரியுங்கால் கதுப்புளரி நுதல் நீவித் தலையளி செய்து
பிரிவன் என்பதை (கக0.) மூற்செய்யுளாலறிந்தாம். தலைவன் மீண்டு
வந்தவுடன் ஆராமையாலே ஓதி புனைந்து மெய்தொட்டுப் பயிலுவன்
என்பதை இச செய்யுளான் உணரலாம். மேலும்,

"பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
......................................... ...........
மென்றோள் பெறனசைஇச சென்றவென்
னெஞ்சே" (அகம்-கூ) எனவரும் அகநானூற்றுச
செய்யுளானும் உணர்க

## பாட்டு - கசுஉ. : தலைவி கூற்று

துறை :—பிரிவிடை வற்புறுத்த வன்புறை எதிரழிந்து கிழததி உரைத்தது. அஃதாவது, தலைவன் பிரிந்திருநத

காலததே ஆற்றாமை எய்திய தலைவியைத தோழி, 'நீ ஆறறுதல் வேண்டும்' என வற்புறுத்தியபொழுது அததோழி கூற்றிற்குத் தலைவி உளளம் அழிந்தவளாய் 'யான் எங்ஙனம் ஆற்றுவேன் ?' என்று கூறியது.

இதன்கண், 'தோழீ ! நீ, என்னை வருந்தாதிரு ' என்று

வற்புறுத்துகின்றனை ; குயில்கள் மாம்பூவின்கண் தாது குடைந்துதிர்க்கும் இவ் விளவேனிலின்கண்ணும வறுங கூந்தல் தைவருவேன் எங்ஙனம் ஆற்றுகேன் !' என்று தலைவி கூறுகின்றாள்.

கசுஉ. ஈங்கே வருவர் இனையல் அவர்என
அழாஅற்கோ இனியே நோய்நொந்

துறைவி

மின்னின் றூவி இருங்குயில் பொன்னின்
உரைதிகழ் கட்டளை கடுப்ப மாச்சினை
நறுந்தாது கோழுதும் பொழுதும்
வறுங்குரற் கூந்தல் தைவரு வேனே.

—கச்சிப்பேட்டு நன்னாகையார்.

(இ - ள்.) நோய் நொந்து உறைவி - என் நோயின் பொருட்டு உளம் நொந்து என்னோடே தங்குகின்றவளாகிய தோழியே!, இனி அவர் ஈங்கே வருவர் இனையல் என - நீ இப்போது தலைவர் இவ்விடத்தே வந்துவிடுவர் வருந்தாதே கொள் என்று அடிக்கடி வற்புறுத்து மாத்திரையானே, மின் இன் தூவி இருங்குயில் - மின்னுகின்ற இனிய தூவியையுடைய கரிய குயில், பொன்னின் உரை திகழ் கட்டளை கடுப்ப - பொன்னினை உரைத்த பொடி விளங்குகின்ற உரைகல்லை ஒக்கும்படி, மாச் சினை நறுந் தாது கொழுதும் - மாவினது கிளையின்

கண்ணே நறிய பூந்தாதைக் கோதாகின்ற, பொழுதும் - இவ் விளவேனிற் பருவத்தேயும், வறுங் கூரல் கூந்தல் தைவருவேன் - வறிய கொத்தாகிய கூந்தலைத தடவாநிற்கின்ற யான், அழாஅற்கு - அழாமலமைவேனோ?

**விளக்கம்:**—'இளவேனிற் பொழுதினும் தலைவனைக் காணப்பெறாது வறுங் கூந்தல் தடவும் யான், நீ இனையல் என்றமைக்காக அழாதிருத்தல் இயலுமோ?' என்றவாறு.

"இனி, ஈங்கே வருவர் இனையல் என்பது, தோழி ஆற்றற்பொருட்டுக் கூறியதைத் தலைவி கொண்டு கூறியது. நோய் நொந்துறைவி

என்றது, தலைவி தோழியின் இயல் கூறி விளித்தது. என் நோயின் பொருட்டு நீ உளம் நொந்து என்னோடே உறைகின்றாய் எனப் பாராட்டியவாறு உறைவி - விளி. நோய் நொந்துறைவி அவர் ஈங்கே

வருவர் இனையல் எனக் கூட்டித் தோழி கொள்ளினுமாம்.

தலைவியை விளித்ததாகக்

குயிலின் தூவி உரைகல் போன்று மின்னும் என்றது, பூந்தாது படியும் பொழுது குயில் பொன்னிறம் பெறினும் அந் நிறம் அதன் நிறமன்று; அது பறக்கும்போது உதிர்ந்துவிட எப்பொழுதும் அது கருங்குயிலாதலே இயல்பு. அதுபோல நினது வன்புறைச சொற்கள் கேட்கும்பொழுது யான் சிறிது ஆற்றுவேன் போலக் காணப்படுகின்றேன். பின்னர் உன் உரை மறைந்துவிட என் னெஞ்சின்கண் இயல்பாயுள்ள துன்பமே வெளிப்படுகின்றது யான் அழாது என் செய்வேன் என்னும் குறிப்புடையது.

இனையல் - வருந்தாதே. அவர் - தலைவர். அழாஅற்கு - அழேனே. தன்மை ஒருமை எதிர்மறை வினைமுற்று. குயில் நறுந்ாது கொழு தும் பொழுது என்றது, இளவேனிற் பொழுது என்றபடி. உம்மை: சிறப்பு.

இளவேனிற் றொடக்கத்தே வருவேன் என்று சென்றவர், அப் பருவம் வந்து மாச்சினை அரும்பெடுத்து மலர்ந்து குயில் குடையும் இப்பொழுதும் வந்திலர் என்பாள், 'குயில் கொழுதும் பொழுதும்,' என்றாள். தலைவன் தோளைத் தைவந்தின்புற வேண்டிய இப் பொழு திலே வறிய கூந்தலையே தைவருகின்றேன் என்பாள், 'வறுங்குரற் கூந்தல் தைவருவேன்' என்றாள். வறுங் கூந்தல், குரற்கூந்தல் எனத் தனித்தனிக் கூட்டுக. தலைவனின்மையால் நெய்யிட்டு மலரிட்டுப் பேணாது வறிதாகிய கூந்தல் என்பாள், 'வறுங் கூந்தல்,' என்றாள். குரல் - கொத்து. நெய்யிடாமையால் கொத்தாகத் திரண்ட கூந்தல் என்க.

## பாட்டு - கக௬ : தலைவி கூற்று

துறை :—தோழி, 'கடிநகர் புக்கு நலந் தொலையாமே நன் காற்றினாய்,' என்றாட்குக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, தலைவியை வரைந்துகொண்டு தலைவன் இல்லறம் இனிது நடத் தும் மனைக்குச் சென்ற தோழி ஆண்டுத் தலைவனைப் பிரிந்தும்

ஆற்றியிராநின்ற தலைவியை நோக்கி, 'நீ நினது நலம் கெடாத வாறு இங்ஙனம் ஆற்றியிருந்தது நன்றே' என்று கூறத் தலைவி தான் ஆற்றியிருந்தமைக்குக் காரணம் உணர்த்தியது.

இதன்கண், 'தோழி ! பண்டு தலைவன் செய்த தண்ணளி யானே இன்றும் இனிதே இன்புற்று இருக்கின்றேன்,' என்று தலைவி கூறுகிறாள்.

ககரு. மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன
இட்டுவாய்ச் சுனைய பகுவாய்த் தேரை
தட்டைப் பறையிற் கறங்கு நாடன்
தொல்லைத் திங்கள் நெடுவெண் ணிலவின்
மணந்தனன் மன்னெடுந் தோளே
இன்று முல்லை முகைநா றும்மே.

—அரிசில் கிழார்.[1]

(இ - ள்.) தோழி, மட்டம் பெய்த மணிக் கலத்து அன்ன- தேறலைப் பெய்துவைத்த நீலக்குப்பிகளைப் போன்ற, இட்டு வாய்ச் சுனைய பகுவாய்த் தேரை - இட்டிதாகிய வாயையுடைய சுனையின்கண்ணவாகிய பிளந்த வாயையுடைய தேரைகள், தட்டைப் பறையிற் கறங்கும நாடன் - தட்டையாகிய . பறை யைப்போல ஒலிக்கின்ற நாட்டையுடைய தலைவன், தொல்லைத் திங்கள் நெடுவெண் ணிலவின் - முந்திய திங்களின்கண் வளர் பிறைக் காலத்தே, நெடுந் தோள் மணந்தனன் - எனது நெடிய தோளைத் தழுவினன், இன்றும் முல்லை முகைநாறும் - அதனல் இற்றைநாளினும் அவனது மேனியின் இயற்கைமணமாகிய முல்லைப்பூவின் மணம் என் தோள்கள் கமழாநிற்கும்.

விளக்கம்:—மட்டம் - தேறல். மட்டு என்பது, அம்முச சாரியை பெற்றது. மட்டம் பெய்த மணிக்கலம் என்றது, நீலக் குப்பியை. பண்டைக்காலத்தில் கள்ளைக் குப்பியிற் பெய்துவைத்தல் வழக்கம். இதனை,

"சோலைக் கமுகின் சூல்வயிற் றன்ன
நீலப் பைங்குடம்." (பெரும்பாண் -

௩அ௧-௨) என்றும்,

"கள்ளி னிரும்பைக் கலஞ்செல வுண்டு."

(மதுரைக் - உஉஅ) என்றும் பிற சான்றோர் கூறுமாற்றானும் உணர்க.

மணிக்கலம் - நீலமணிபோன்ற நிறமுடைய கலம் என்க. இட்டு வாய் - ஒடுங்கிய வாய். தெளிந்த நீர் நிரம்பிய சுனைக்கு, தேறல் நிறைந்த

1. (பாடம்) அரிசிற் கிழார் ; அழிசிற் கிழார்.

## மூலமும் உரையும்

உஅக

மணிக்கலம் உவமை. பகுவாய் - பிளந்த வாய். தவளையின் வாய் பிளவுபட்ட வாயாதலறிக. தேரை - தவளை. தட்டைப் பறை என்றது, கிளிகடி கருவிகளுள் ஒன்றாகிய தட்டை என்னும் கருவியை. தட்டி ஒலிப்பித்தலின் தட்டைப்பறை எனப்பட்டது.

நீர் நிரம்பிய சுனையின்கண் தவளை மகிழ்ந் தொலிக்குமாறு போன்று செல்வம் நிறைந்த தலைவனில்லத்தின்கண் இப்போது யான் மகிழ்ந்து உறையாநின்றேன் என்பதாம். கறங்குதல் - ஒலித்தல். ஈண்டுக காரணத்தைக் காரியமாக உபசரித்தாள. 'தொல்லைத் திங்கள்,' என்றது, சென்ற மாதம என்றவாறு. வளர்பிறைப் பக்கம் என்பாள், 'நெடுவெண் ணிலவின்,' என்றாள. சிறந்த ஆடவன்மேனி, முல்லைப்பூ மணமுடைத்து ஆகலின், அவன் அன்று தழுவியதனால் என் மேனியிற் றோய்ந்த அவன் திருமேனி நறுமணம் இன்றும் கமழ் கின்றது என்றவாறு. தலைவனாற் றழுவப்பட்டுத் தழைகரும் தோள் என்பாள், 'நெடுந்தோள்,' என்றாள்.

யான் இற்றைநாள் பண்டு தலைவன் செய்த தண்ணளியை எண்ணி இனிதுறைகின்றேன் என்பது கருத்து.

# பாட்டு - ககூச : தலைவி கூற்று

துறை:—பருவ வரவின்கண் ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, தலைவன் 'கார்ப் பருவத்தே மீண்டு வருவேன்,' எனக் கூறிச் சென்றவன், அப் பருவம் வந்தபின்னரும் வாராமையானே தலைவி ஆற்றாளாயினள். அவள் நிலை கண்டு தோழி கவன்றாளாக, அவட்குத் தலைவி தன் ஆற்றாமைக்குக் காரணங் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'வானத்தே முகில்கள் குமுறி ஒலியாநிற்கும்; கானத்தே மயில்கள் களித்து அகவாநிற்கும்; இவ்விரண்டற்கும் என் பேதை நெஞ்சம் பெரிதும் கலங்காநின்றது; இஃதென் கொலோ!' என்று கூறுகின்றாள்.

ககூச. என்னெனப் படுங்கோல் தோழி மின்னுபு
வானோ பிரங்கும் ஒன்றே அதனெதிர்
கான மஞ்ஞை கடிய ஏங்கும்
ஏதில கலந்த இரண்டற்கென்
பேதை நெஞ்சம் பெருமலக குறுமே.

—கோவத்தனார்.[1]

(இ - ள்.) தோழி—, வான் மின்னுபு ஏர்பு இரங்கும் - முகில்கள் மின்னி எழுந்து முழங்கா நிற்கும், ஒன்றோ - அஃ தொன்றுமட்டுமோ, அதன் எதிர் கான மஞ்ஞை கடிய ஏங்கும் -

1. (பாடம்) கோவதத்தன்.



அம் முழக்கத்திற்கு எதிராகக் காட்டகத்து மயில்கள் விரைவன வாகி அகவாநிற்கும், ஏதில கலந்த இரண்டற்கும் - தம்முள் அயன்மை யுடையனவாகிக் கலந்த இவ் விரண்டு ஒலிகளானும், என் பேதை நெஞ்சம் பெருமலக்கு உறும் - என்னுடைய பேதைமையுடைய நெஞ்சம் பெரிய கலக்கத்தை எய்தாநிற்கும், என் எனப் படும் - இந் நெஞ்சின்றன்மை எத்தகையதென்று சொல்லப்படும்?

விளக்கம் :—மின்னுபு - மின்னி. வான் - முகில்; ஆகுபெயர். ஏர்பு - எழுந்து. இரங்கும் - முழங்காநிற்கும். என்துயர்க்குக் காரணம் இம்முகில் முழக்கம் ஒன்று மட்டுமோ என்றாள் என்க. அதன் எதிர் - அம்முழக்கத்திற் கெதிராக. என்றது, முகில் முழங்கிய வுடனே மயில் அகவும் என்றவாறு. ஒன்று, அறிவில் பொருளாகிய முகிலின் முழக்கம்; மற்றொன்று, உயிர்ப்பொருளாகிய மயில் ஆரவாரம். ஆகலின் இவ்விரண்டும் தம்முள் தொடர்பிலாத அயன்மையுடையன என்பாள், 'ஏதில' என்றாள். ஏதில - அயன்மையுடையன; தொடர் பில்லாதன. மயிலின் குரல் கேட்டற்கு இன்னாவாகலின், 'கடிய' என்றாள் எனினுமாம். ஏங்குதல் - ஆரவாரித்தல். இவ விரண்டற்கும் எனச் சுட்டுவருவித்து உம்மை விரித்தோதுக. இருவகை முழக்கத் திற்கும் என்க. இனி, ஏதில என்றதற்கு, எனக்கு அயன்மையுடையன எனினுமாம். தன்னோடே தொடர் பொன்றுமிலாத ஒலிகட்கு இந் நெஞ்சம் கலங்குதல் பேதைமை என்பாள், 'என் பேதை நெஞ்சம்' என்றாள். பெருமலக்கு - பெருந்துன்பம். இவை பருவ வரவின் அறிகுறியாய்த் தலைவன் கூறிப்போனதை நினைவூட்டுதலானே என் நெஞ்சம் பெரிதும் துன்புறுகின்றது என்பது கருத்து. இங்ஙனம் கலங்க வேண்டாதவற்றிற் கெல்லாம் கலங்கும் எண்மையுடைய என் நெஞ்சம் வியத்தற்குரியதொன்றாயிருந்தது என்பாள், 'என்னெனப் படும்' என்றாள்.

## பாட்டு - ககரு : தலைவி கூற்று

துறை :—பிரிவிடைப் பருவ வரவின்கண் கிழத்தி மெலிந்து கூறியது. அஃதாவது, 'மீண்டு வருவன்' எனத் தலைவன் குறித்த பருவம் வந்ததாகத் தலைவன் வாராமை கண்ட தலைவி, ஆற்றாமை மிக்கு உள்ளழிந்துரைத்தது.

. இதன்கண், "அந்தோ! ஞாயிறு மேற்றிசையில் மறையா நின்றது; துன்பஞ் செய்யும் இப் பொல்லாத மாலையோ புக்கது;

‘ இன்று வருவன் ’ எனக் கூறிச் சென்ற தலைவரோ வந்திலர்;

அவர் இருக்குமிடமும் அறிகிலேன். ‘யான் துன்புறுவேன்’ என்று அவர் நினையாதொழிந்தனர்; யான் என் செய்வேன்!” எனத் தலைவி இரங்குகின்றாள்.

கசுடு. சுடர்சினங் தணிந்து குன்றஞ் சேரப் படர்சுமந் தெழுதரு பையுள் மாலை



யாண்டுளர் கொல்லோ வேண்டுவினை முடிநர்
இன்ன திரங்கும் என்னார் அன்னோ
தைவரல் அசைவளி மெய்பாய்ந் தூறுதரச் செய்வுறு
பாவை யன்னவென்
மெய்பிறி தாகுதல் அறியா தோரே.

—தேரதரனார்.[1]

(இ - ள்.) தோழீ, தைவரல் அசைவளி மெய்பாய்ந்து
ஊறு தர - தடவுதலையுடைய அசைந்தியங்கும் வாடைக்காற்று உடலை மோதித் துன்பம் செய்யா நிற்ப, செய்வுறு பாவை அன்ன என் மெய் - அரக்காலே செய்த பாவை வெப்பத்திற்கு
உருகுமாறு போல உருகும் எனது உடல், பிறிது ஆகுதல் அறியாதோர் - வேறுபாடடைதலை அறியாத தலைவர், சுடர் சினந் தணிந்து குன்றம் சேர - ஞாயிறு வெப்பந் தணிந்து மலையினை எய்தா நிற்ப, படர் சுமந்து எழுந்த பையுள் மாலை - துன்பத்தை மேற்கொண்டு தோன்றிய துன்பத்தையுடைய இம் மாலைப் பொழுதிலே, வேண்டுவினை முடிநர் - தாம் வேண்டும் வினை
முடித்தற்பொருட்டு, அன்னோ இன்னுதிரங்கும் என்னார் - அந்தோ இம்மாலைப்பொழுது பெரிதும் துன்பந்தருவதாம் அவள் பெரிதும் வருந்துவள் என்று நினையாதார், யாண்டுளர் கொல்லோ - எவ்விடத்தே உள்ளனரோ? யான் அறிகின்றிலேன்.

விளக்கம் :—சுடர் - ஞாயிறு சினம் என்றது, அதன் வெப்பத்தை. குன்றம் - மேற்றிசையின்பாலுள்ள தொருமலை. இம்மலையின்கட் சென்று ஞாயிறு மறையும் என்பது பாடல் சான்ற புலனெறி வழக்கு; இதனை,

"விடர்கால் அருவி வியன்மலை மூழ்கிச்
சுடர்கால் மாறிய செவ்வி" (கஎ௦ - க)

எனவரும் சிறுபாணாற்றுப் படையானும்,

“ ஒண்சுடர் உருப்பொளி மழுங்கச்
சினந்தணிந்து
சென்ற ஞாயிறு நண்பகற் கொண்டு
குடமுதற் குன்றஞ் சேர ” (௫௪௫ - ௭)

எனவரும் மதுரைக் காஞ்சியானும் அறிக.

படர் - துணைபிரிந்துறைவோர் நினைந்து படும் துன்பம். அஃதாவது தங்கேளிரை, இடையறாது நினைத்து வருந்துதல். காலை, நண்பகல், மாலையாகிய பகற்கூறு மூன்றனுள்ளும், மாலைப்பொழுதே நினைவினை மிகுதியும் தூண்டவல்லதாகலின், அத்துன்பத்தை அது சுமந்து வந்ததாகக் கூறினள். பையுள் - துன்பம். தாம் கூறிச் சென்ற சொல்லை நிறைவேற்றக் கருதாது மேற்கொண்ட வினைமுடித்

(பாடம்) 1. தோதரன், தாமோதரன்.



தலையே கருதுவார் என்பாள், ‘வேண்டுவினை முடிநர்’ என்றாள். முடிநர் - முடிப்பாராய எனக.

தைவரல் - தடவுதல். வளி என்றது, ஈண்டு வாடையை. மெய் - உடல். பாய்தல் - மோதுதல். உறு - ஊறு. தன் புலனாகிய ஊற்றாலே துன்புறுத்த என்றவாறு. வளி - ஊற்றுப்புலன் உடையது.

பிரிவுத்தீயாலே உடல் உருகுதற்கு, அரக்குப்பாவை உவமை. செய்வுறு பாவை - அரக்காணியறறிய பாவை என்க. பிறிதாகுதல் - அழிந்து உருமாறுதல். அழிந்து உருமாறுதலை அறிவராயின் மீள்வர். மீண்டு வாராமையினால் அஃதறிகிலர் வன்கண்ணர் என்றவாறு.

அன்னோ: இரக்கக் குறிப்பு. இன்னாது இம்மாலை இதன்கண் இரங்கா நிற்பள் என்று கருதுபவராயின், அவர் குறித்த இப்பருவத்தே ஈண்டுளராதல் வேண்டும். அங்ஙனம் கருதாமையானே இப்பொழுது யாண்டுளரோ என்றாள் என்க.

தலைவர் அன்பிலராய்த் தம் வாய்மையினிற் பிறழ்ந்தார் என்பது கருத்து.

## பாட்டு - கசுசு : தோழி கூற்று

துறை :—வாயில்வேண்டிப் புக்க கிழவற்குத் தோழி கூறியது. அஃதாவது, தனது பரத்தமையாலே ஊடியிருந்த தலைவியின் ஊடல் தீர்த்து உடம்படச் செய்யும்படி தோழியை வேண்டிய தலைவனுக்கு அவள் கூறியது

இதன்கண், தோழி தலைவனை நோக்கி, "ஐய! நும்மன்பு பண்டிருந்தபடித்தன்றி வேறுபட்டது. பண்டு, தலைவி வேம்பின் பசிய காயைத் தரினும், அதனைத் 'தேம்பூங்கட்டி' எனப் பாராட்டிச் சுவைத்தீர்; இன்றோ, பாரி பறம்பின் சுனைநீர் தரினும், இவை, 'வெய்ய உவர்க்கும்' என்பீராயினிர்! நுமமன்பிருந்தவாறிது" எனக் கூறுகின்றாள்.

கககூ. வேம்பின் பைங்காயென் தோழி தரினே
தேம்பூங் கட்டி என்றனிர் இனியே
பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்
தைஇத் திங்கள் தண்ணிய தரினும்
வெய்ய உவர்க்கும் என்றனிர்
ஐய அற்றால் அன்பின் பாலே.

—மிளைக் கந்தனார்.

(இ - ள்.) ஐய - ஐயனே, என் தோழி வேம்பின் பைங்காய்தரின் - யாம் அரியமாயிருந்த களவுக்காலத்தே தலைவி வேம்பினது பசிய காயை நுமக்கு உண்ணக் கொடுப்பினும்,

தேம்பூங் கட்டி என்றனிர் - இனிய அழகிய கருப்புக் கட்டி என்று பாராட்டிக் கூறினிர், இனியே - எண்மையமாகிய இக்கற்புக்காலத்திலோ, பாரி பறம்பின் பனிச் சுனைத் தெண்ணீர் தைத் திங்கள் தண்ணிய தரினும் - என் தோழி பாரிவள்ளலின் பறம்புமலைக்கண்ணதாகிய குளிர்ந்த சுனையின் கண் உள்ள தெளிந்த நீரைத் தைத்திங்களிலே தண்ணியவாம் பொழுது நமக்குக் கொடுத்தாலும், வெய்ய உவர்க்கும் - இவை வெப்ப முடையன மேலும் உவர்ப்பன என்று கூறுகின்றனிர், அன்பின் பால் அற்று - நமது அன்பின்பகுதி அத்தன் மைத்து.

**விளக்கம்:**—வேம்பின் கனி சிறிது இனிப்புச் சுவையுடைத்தாகலின், அதனை விலக்கற்குப் 'பைங்காய்' என்றாள். வேப்பங்காய் மிகவும் கைப்புச சுவையுடைய தென்பது உலகறிந்தது. தரினும் என்றதன்கண் சிறப்பும்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது. தலைவிக் கும் அவனுக்கும் உள்ள அயன்மை தோன்ற என் தோழி என்றாள். தேம்பூங்கட்டி - இனிய அழகிய கருப்புக் கட்டி; அஃதாவது, கற்கண்டு என்க.

இனியே - இப்பொழுது. இப்பொழுது என்றதனால் அது பண்டென்பது போந்தது. யாம் அரியராயிருந்த களவுக் காலத்தே என்றவாறு.

பாரி - தமிழ்நாட்டு வள்ளல் எழுவருள் ஒருவன். பறம்பு மலை என்ப. இதனை,

இவன் மலை,

“கடந்தடு தானை மூவிருங்கூடி
உடன்றனி ராயினும் பறம்பு கொளற் கரிதே”
(கக0)

எனவரும் புறநானூற்றுப் பாடலானும் உணர்க.

பாரி பறம்பின்கண் இனிய தண்ணிய சுனைகள் உள்ளன என்பதும், அசசுனைநீர் புலவராற் பாராட்டப் பட்டதென்பதும்,

“பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்
ஓரூர் உண்மையின் இகந்தோர் போல” (கஎசு)

எனவரும் புறநானூற்றுப் பாடலானும் அறிக.

பாரி பறம்பின் சுனை வேனிலினும் தண்ணிது என்பாள், ‘பனிச சுனை’ என்றாள். இயற்கையிலேயே தண்ணிதாகிய நீர், தண்ணிய திங்களில் மிகவும் தண்ணிதாம் என்பாள், ‘தைஇத் திங்கள் தண்ணிய’ என்றாள். சுனையின் பன்மையை நீர்க்கேற்றித தண்ணிய வெய்ய எனப்பட்டன. வெய்ய - வெப்பமுடையன.

பண்டு அரியமாகியபோது கைப்பனவும் யாம் தரின் நுமக்கு இனியவாயின. எளியமாகிய இப்பொழுதோ இனியனவும் தண்ணியனவும், உவர்ப்பனவும் வெய்யனவுமாயின. இதற்கு நம் அன்புத்திரிபே காரணமன்றிப் பொருட்டிரிபன்று. ஆதலால் நீயிர் நல்லர் அல்லீர் என வாயில் மறுத்தனள் என்க.



## பாட்டு - ககஎ : தலைவி கூற்று

துறை —பருவ வரவின்கண் வற்புறுத்தும் தோழிக்குக் கிழத்தி யுரைத்தது. அஃதாவது, தலைவன் கூறிச்சென்ற பருவம் வந்தபின்னரும் தலைவன் வாராமையால் ஆற்றாமை எய்திய தலைவியைத் தோழி ஆற்றியிருக்கத் தேற்றுரை கூறிய பொழுது அவளை நோக்கித் தலைவி கூறியது.

இதன்கண், தலைவி, 'ஆற்றுக' என்ற தோழியை நோக்கி, 'என் உயிரைக் கவர்தற் பொருட்டுக் கூற்றம், மழையும் வாடையும் மலிந்த இக் கூதிர் உருக்கொண்டு, காதலர் இல்வழி நோக்கி வந்ததுகாண். யான் எங்ஙனம் ஆற்றுகேன்!' என்றிரங்கு கின்றாள்.

ககஎ. யாதுசெய் வாங்கொல் தோழி நோதக
நீரெதிர் கருவிய காரெதிர் கிளைமழை

ஊதையங் குளிரோடு போதுற்று மயங்கிய
கூதிர் உருவிற் கூற்றம்
காதலர்ப் பிரிந்த எற்குறித்து வருமே.

—கச்சிப்பேட்டு நன்றாகையார்.

(இ - ள்.) தோழி—, நோதக நீர் எதிர் கருவிய கார் எதிர் கிளை மழை - துன்பம் தக்கிருக்கும்படி நீரை ஏற்றுக் கொண்ட மின் முதலிய தொகுதியை உடையதாகிய கார்ப்பருவத்தை ஏற்றுக்கொண்ட கிளைத்த மழை, ஊதையங்குளிரொடு
போதுற்று மயங்கிய - வாடைக்காற்றினது குளிரோடே வருத லுற்றுக் கலந்த, கூதிர் உருவிற் கூற்றம்-கூதிர்ப்பருவம் என்னும் உருவத்தையுடைய கூற்றம், காதலர்ப் பிரிந்த எற்குறித்து வரும் - காதலரைப் பிரிந்துறையும் அற்றம் நோக்கி என் உயிர் கவர்தலைக் குறிக்கொண்டு வாராநின்றது, யாது செய்வாம்-
அதற்கு அகபபடாது தப்பற்கு யாம் என்ன மாட்டுவேம்.
உபாயம் செய்ய

**விளக்கம்** :—நோ - துன்பம். தக என்றது, அதற்குப் பொருந்த என்றவாறு. நீர் எதிர் கருவிய கார் என்றது, கடலின்கண் நீரை ஏற்று மின் இடி முதலிய தொகுதிகளோடே வந்த கார்காலம். கார்ப் பருவத்தே யாண்டும் மழை ஒரேயெனத் தோன்றுதலுண்மையின் கிளைமழை என்றாள். கிளைமழை - மேலும் மேலும் மிக்குத் தோன்றும் மழையுமாம்; கிளைத்தல் - தோன்றுதல். கார்காலத்திற் குரிய மழையைத் தனக் குரிய ஊதையங் குளிரோடே கலந்து கூதிர் வந்தது என்பாள், 'கார் எதிர்கிளை மழை ஊதையங் குளிரொடு போதுற்று மயங்கிய' என்றாள். பேதுற்று என்று பாடமோதுவாருமுளர். அது பொருள் பொருந்தாமை யுணர்க. ஊதை - வாடைக் காற்று - அம்,

## மூலமும் உரையும்



சாரியை. மயங்கிய - கலந்த. கூற்றம் - உயிர்களின் வாழ்நாளைக் கூறுபடுத்தும் ஒரு கடவுள். என் உயிரைக் கவர்தற்கெண்ணிய கூற்றமே இக் கூதிர் உருக்கொண்டு அற்றம் பார்த்து வந்தது. அதற்குச் சிற்றுயிராகிய யாம் தப்பல் இயலாது யான் இறந்துபடுதல் ஒருதலை என்றவாறு.

## பாட்டு - ககூஅ : தோழி கூற்று

துறை :—தோழி குறியிடம் பெயர்த்தது.

அஃதாவது,

களவின்கண் மனையயல் வந்தொழுகும் தலைவனை, 'நீ இவண் வரின் இடையூறுள; ஆகலான், இவண் வருதலொழித்து இன்ன

இடத்திற்கு வருக' எனத் தோழி இடம்பெயர்த்துக் கூறியது.

இதன்கண், 'சந்தன மணங் கமழும் மார்பினையுடைய தலைவனே! இனி நீ இவ்விடம் வருதலைத் தவிர்க; ஏனெனின், ஈண்டு எந்தாய் அடிக்கடி வரும் வழக்க முடையள்; யாங்களும் இனித் தினைப்புனததே கிளிகடிதற் பொருட்டு இவண்விட்டுச் செல் வோம்காண்,' என்று கூறுகின்றாள்.

கஙஅ. யாஅங் கொன்ற மரஞ்சுட் டியவிற்
கரும்புமருண் முதல பைந்தாட் செந்தினை
மடப்பிடித் தடக்கை யன்னபால் வார்பு
கரிக்குறட் டிறைஞ்சிய செறிகோட்
பைங்குரற்
படுகிளி கடிகஞ் சேறும் அடுபோர்
எஃகுவிளங்கு தடக்கை மலையன் கானத்
தார நாறு மார்பினை
வாரற்க தில்ல வருகுவள் யாயே.

—கபிலர்.

(இ - ள்.) ஐய, யாஅம் கொன்ற மரஞ் சுட்ட இயவில்- யாமரத்தை வெட்டிய மரங்களைச் சுட்ட வழியின்கண், கரும்பு மருள் முதலைப் பைந்தாள் செந்தினை-கரும்பை ஒத்த அடியையுடையனவாகிய பசிய தாளையுடைய சிவந்த தினைகளினது, மடப் பிடித் தடக்கை அன்ன - மடப்பமுடைய பிடியானையினது வளைந்த கையை ஒத்தனவாகி, பால் வார்பு-பால்நிறைந்து, கரிக் குறட்டு இறைஞ்சிய - உலைக்கரியை எடுக்கும் குறடுபோல

வளைந்த, செறிகோள் பைங்குரல் - செறிந்த குலைகளையுடைய பசிய கதிரின்கண், படுகிளி கடிகம் சேறும்-வீழ்கின்ற கிளிகளை ஓட்டுவேமாய் ஆண்டுச் செல்வேம், அடுபோர் எஃகுவிளங்கு தடக்கை மலையன கானத்து ஆரம் நாறு மார்பினை-பகைவரைக் கொல்லும் போர்க்குரிய வேல் திகழாநின்ற பெரிய கையையுடைய



மலையனது காட்டின் கண்ணதாகிய சந்தனங் கமழும் மார்பினையாகிய நீ, வாரற்க தில்ல - ஈண்டினி வாராதேகொள்; இஃது எங்கட்கு விருப்பம், யாய் வருகுவள் - மேலும் ஈண்டு அடிக்கடி எம்மன்னையும் வாராநிற்பள்.

**விளக்கம்** :—'யாம் கிளிகடிகஞ் சேறும்; ஆரநாறும் மார்பினே; யாய் வருகுவள்; ஆதலால் வாரற்க!' என்று இயைத்துக் கொள்க.

யாஅம் - ஒருவகை மரம். தினைவிதைக்கு முன்னர் ஆண்டுள்ள மரங்களை வெட்டிச சுட்டெரித்துப் பின்னர் அவ்விடத்தைப் பண் படுத்தி விதைத்தல் வழக்கம். இதனை, "தொடுதோற் கானவன் சூடுறு வியன்புனம், கரிபுறங் கழீஇய பெரும்பாட் டீரத்துத் தோடுவளர் பைந்தினை நீடு குரல்." (அகம்-௩௯௪) என்றும் "கானவர் கரிபுன மயக்கியஅகன்கட் கொல்லை" (புறம்-௧௫௯.) என்றும் பிறசான்றோர் கூறுமாற்றானும் அறிக.

சுட்ட இயவு-சுட்டியவெனப் பெயரெச்சத்தின் அகரம் கெட்டது.
இயவு - வழி. கரும்பு என்று கண்டோர் மருளுதற்குக் காரண மான முதல என்க. முதல் - அடி. பைந்தாட் செந்தினை என்னுந் தொட ரில் முரண் தோன்றிச் செய்யுளின்பம் மிகுதலுணர்க.

தினைக் கதிர்க்கு யானையின் வளைந் தகை உவமை. "உறங்கு பிடித் தடக்கை ஒருங்கு நிரைத்தவைபோல் இறங்கு குரல் இறடி" (பெருங்-க. ௪௯. ௧0௩-௪.) என்றார் பிறரும். பால் - கதிரின்கட்பால். கரிக் குறடு - கொல்லுலைக்கண் கரி எடுக்கும் ஒருகருவி. இது தினைக் கதிர் வளைந்து கிடந்தமைக்கு உவமை. கோள்-குலை. படுகிளி-கதிரின் கண் வீழ்ந்து படியும் கிளிக்கூட்டம் கடிகம் - ஓட்டுவேமாய். சேறும்- செல்வேம். 'யாம் கிளிகடிகம் சேறும்' என்றது, 'இனி நீ ஆண்டு வரக்கடவை' என்று குறிப்பானுணர்த்தியவாறு. மலையன்-மலைய மான் திருமுடிக்காரி என்னும் வள்ளல். ஆரம் - சந்தனம். ஆரம் நாறும் மார்பினை என்றது, அந்நாற்றமே நின் வரவினை அன்னை முதலி யோர்க்கு அறிவிக்கும் என்றுணர்த்தியவாறு. 'யாய் வருகுவள்'

என்றது, ஈண்டாயின் யாய் வருகுவள். ஆண்டுக் கிளிகடியும் இடத்திற்கு அவள் வரமாட்டாள் என்றவாறு. இதனால் இது குறியிடம் பெயர்த்தலாதல் அறிக.

## பாட்டு - ககூகூ : தலைவன் கூற்று

துறை :—தோழி செறிப்பறி வுறுப்ப, நெஞ்சிற்குக் கிழவன் உரைத்தது. அஃதாவது, 'தலைவியை இல்லத்தின் புறம் போகாது காத்தல் வேண்டும்' எனத் தாய் முதலியோர் கருதியிருப்பதைத் தோழி தலைவனுக்கு உணர்த்தினளாகத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவானாய் இரங்கியது.

இதன்கண், 'நெஞ்சே! இனித் தலைவியைப் பெறுதல் நமக்கு இயையாது. எனினும் இந்நட்பாலுண்டாய நோயோ இம்மையுலகத்தும் தீர்வதன்று; இம்மை தீர்ந்த மறுமையினும்

### மூலமும் உரையும்

உஅகூ

இது நம்பால் இல்லையும்; ஆகலின், அவளை மறுமையிலேனும் பெறுதல் ஒருதலை' என்று தலைவன் தன்னுட் கூறுகிறான்.

ககூகூ. பெறுவ தியையா தாயினும் உறுவதோன்
றுண்டுமன் வாழிய நெஞ்சே திண்டேர்க்
கைவள் ளோரி கானந் தீண்டி
எறிவளி கமழு நெறிபடு கூந்தல்
மையீ ரோதி மாஅ யோள்வயின்
இன்றை யன்ன நட்பி னிந்நோய்
இறுமுறை எனவொன் றின்றி
மறுமை யுலகத்து மன்னுதல் பெறுமே.

—பரணர்.

(இ - ள்.) நெஞ்சே—, திண் தேர் கைவள் ஓரி-திண்ணிய தேரையுடைய கைவண்மைமிக்க ஓரிவளளலினது, கானந் தீண்டி - காட்டினைத் தோய்ந்து, எறி வளி - வீசாநின்ற காற்றுப்போலக் கமழும் நெறிபடு கூந்தல் - கமழாநின்ற நெறிப் பினையுடைய கூந்தலாகிய, மை ஈர் ஓதி மாயோள் வயின-மையை ஒத்த கருமையினையும்

நெய்ப்பினையும் உடைய மயிரையுடைய மாமைநிற முடைய தலைவியிடத்தே, இன்றை அன்ன நட்பின் இந்நோய் - இற்றைக்குளது போனறு என்றும் பிறழாது நிலை
பெறும் காதலையுடைய இக்காமநோய், இறுமுறை என ஒன்று இன்றி - அழியும் முறைமை என்னும் ஒன்று தனக்கில்லாமல், மறுமை உலகத்தும் மன்னுதல் பெறும் - இம்மை மாறிப்
பிறந்து வாழும் மறுமை யுலகத்தும் நிலைபெற்றிருப்பதொன்றும் ஆகலின். பெறுவது இயையாதாயினும் - இம்மையுலகத்தே இவளை யாம் பெறுதல் கூடாதாயினும், உறுவது ஒன்று உண்டு- மறுமையில் பெறுதல் ஒருதலை என்னும் உறுதி ஒன்றும் இதன்கண் உளது காண்.

**விளக்கம்** :—திண்டேர் கைவள் ளோரி என்பதற்குத், திண்ணிய தேரையும் வீசும் கைவண்மையையுமுடைய ஓரி எனினுமாம். ஓரியின் கொல்லியைச் சூழ்ந்த கானம், மழைவளம் பெற்றுப் பல்வேறு மலர் களும் மலர்ந்திருக்கப் பெறுதலாலே அக் கானத்தை அளாவி வருங் காற்று மணக்குமாறு போல மணக்கும் கூந்தல் என்றான்.

இயற்கைப்புணர்ச்சிக்கண், அக் கூந்தலே பாயலாகக் கிடந்து நுகர்ந்தானாகலின், அதன் மணம் நிறம் நெறிப்பு நெய்ப்பு முதலிய வற்றையே விதந்து பாராட்டினான். நெறி - நெறிப்பு. எறிவளி : வினைத்தொகை. மாயோள் - மாமை நிறமுடையோள். ஒதி - மயிர். இன்றை யன்ன நட்பு - இன்றிருப்பதுபோன்று என்றும் நின்று நிலவும் காதல்.

"எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்,
திண்ணிய ராகப் பெறின்." (குறள் - சுசுசு)

என்னும் முறைபற்றியும், அவாவழிப் பிறப்பு என்பது பற்றியும் இம்மையிற் பெறேமாயினும் மறுமையிற் பெறுதல் உறுதிஎன்றான் என்க.

இந் நோய் - இக்காமநோய். அழியாது நிலைபெறும் காதல்

போன்று, இக்காமமும் அதனுடன் நிலையுமாகலின் இதற்கு இறுமுறை இல்லை என்றான். தோன்றிய வெல்லாம் இறும் என்னும் உலகியல் இதற்கு இல்லை என்றவாறு.

மறுமை யுலகம் என்றது, மறுபிறப்பின் வாழுதற் கிடமான உலகம என்றவாறு.

## பாட்டு - ௨00 : தலைவி கூற்று

துறை.—பருவ வரவின்கண் ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி 'பருவமன்று வம்பு' என்றவழித் தலைமகள் சொல்லியது. அஃதாவது, 'மீண்டு வருவேன' எனத தலைவன் குறித்துச்சென்ற பருவம் வநத பின்னருமம தலைவன் வநதிலாமையால்

ஆற்றுமைகொண்ட தலைவியைத் தேற்றும்பொருட்டு, 'இது பருவ மழையன்று; முதுவேனிலின்கட் புதிது தோன்றிய மழை ஆகலின், நீ ஆற்றுக' என்று தோழி ஆற்றுவித்தாளாக, அவட்குத் தலைவி கூறியது.

இதன்கண், இது வம்பென்ற தோழியைத் தலைவி நோக்கி,

'இது வம்பன்று; காலமாரியே காண்! முகில்கள் முழங்காநின்றன; நீர் பெருக்கெடுத்து இழிதருகின்றது; அவர் கூறிய பருவமே இது; அவர் நம்மை மறந்தனர் போலும்; நாமே அவரை மறவாது வருந்துகின்றோம்' எனஇனாள்.

உ௦௦. பெயத குன்றத்துப் பூநாறு தண்கலுழ்
மீமிசைத் தாஅய வீஇ சுமந்துவந்
திழிதரும் புனலும் வாரார் தோழி
மறந்தோர் மன்ற மறவா நாமே
கால மாரி மாலை மாமழை
இன்னிசை யுருமின முரலும்
முன்வரல் ஏமம் செய்தகன் றோரே.

—ஔவையார்.

(இ - ள்.) தோழி -, கால மாரி மாலை

மாமழை இன் இசை

உருமின முரலும் - கார்ப்பருவத்தக்குரிய மழையையுடைய மாலைப்பொழுதின்கண் வரும் இக் கரிய முகில்கள் இனிய இசையையுடைய இடிகளையுடையனவாய் முழங்காநிற்கும், பெய்த குன்றத்துப் பூ நாறு தண்கலும் மீமிசைத் தாஅய வீ சுமந்து புனலும் இழிதரும் - அம்முகில்கள் பெய்த மலையின் கண்ணவாகிய பலர் மணங்கமழும் தண்ணிய கலங்களின் மேலே

மூலமும் உரையும்

உசக்க

பரந்த மலர்களைச் சுமந்து கொண்டு வந்து வெள்ளமும் வீழா

நிற்கும், முன் வரல் ஏமம செய்து அகன்றோ - தாம இக் கார்ப் பருவம தொடங்குமுன்னரே மீண்டு வருவேம் எனறதொரு காவலை நமக்குச் செய்து பிரிந்து சென்ற நந்தலைவர், வாரார் - வந்திலர், மன்ற மறந்தோர் - தேற்றமாக அவர் நம்மை மறந்தவரே ஆவர், நாமே மறவாம் - நாம் மட்டுமே அவரை மறவாதே

மாய்த் துன்புறுகின்றேம.

**விளக்கம்:**—தோழி வம்பமாரி என்றாளாகலின், அற்றன்றென்பாள், காலமாரி என்றாள். வம்பமாரி - கார்ப்பருவ மல்லாத ஏனைப் பருவங்களில் அவ்வப்போது பெய்து மறையும் மழை கார்ப்பருவத்து முதல்நாள மாலைப்பொழுதிலே வருவன் என்றான் ஆகலின், 'மாலை மாமழை' என்றாள். புணர்ந்தோர்க்கு முகில் முழக்கம் இனிதாய் இன்பத்தை மிகுவிக்கும் இயல்பு பற்றி, 'இன்னிசை உருமின' என்றாள். எம்மளவில அது மாறுபட்டது என்னும் கருததாலே இங்ஙனம கூறினாள். உருமின - இடியை உடையன. முரலும் - முழஙகும்.

ஏமம் - பாதுகாப்பு. தலைவன் பிரியும் பொழுதே ஆற்றாமை கொண்ட தலைவியை யான் பருவத்தொடஙகுமுன் வருவன் எனக் கூறி ஆற்றியிருக்கக் கற்பிததுச சென்றானாக, அசசொல்லையே உயிர் காவலாகக் கொண்டு ஆற்றியிருந்தேன் என்பாள், 'முன் வரல் ஏமம் செய்தகன்றோர்' என்றாள். முன் வரல் ஆகிய ஏமம் என்க. இப்போது அவ் வேமமும் இன்றாய் வருந்தாநின்றேன் என்பது கருத்து

முகிலும் முழங்கும்; அவை மலையிடைப் பெய்த நீரும் மலர் சுமந்து மணமேற்ற இழிதரும் என்றமையால், இது காலமாரியே காண் என்று அறிவுறுத்தினளாயிற்று. குன்றத்தே மழைத்தாரை வீழுங்கால் ஆண்டு மலர்ந்துள்ள புதுமலரிற் றோய்ந்து வீழ்தலின் பூநாறுகலும் என்றும், புனல் பெருகியவழி உதிர்ந்த மலர்களைச சுமந்து வருதலின் 'மீமிசைத் தாஅய வீ சுமந்து இழிதரும் புனல்' என்றும் கூறினாள் வாராமைக்குக் காரணம் கூறுவாள், 'மன்ற மறந்தோர்' என்றாள் அவர் மறந்தவழி யாமும் மறகக வல்லோம் எனின் துன்பமின்றாம்; அதுவும் மாட்டேம் அளியமே? அளியம்!! என்பாள், 'மறவாம் நாமே' என்றாள். ஏகாரம், பிரிநிலை.

நமது துன்ப நீக்கத்திற்கு ஒன்று, அவர் நினைந்து மீளுதல் வேண்டும்; அல்லது, யாம் மறந்தமைதல் வேண்டும்; இரண்டுமின்றித் துன்பத்திற்கே ஆளாயினேம், என்றிரங்கியவாறு.

## பாட்டு - ௨௦க: தலைவி கூற்று

துறை :—கடி நகர் வேறுபடாது நன்கு ஆற்றினை யென்ற தோழிக்குக் கிழத்தியுரைத்தது. அஃதாவது, தலைவன் தலைவியை வரைந்து கொண்டு இல்லறம் நடத்தும் மனைக்குச் சென்ற தோழி தலைவியை நோக்கி, 'நீ வரைந்து கொள்ளுந்துணையும் நன்கு ஆற்றியிருந்தாயல்லையோ?' என்று வினவ, அங்ஙனம் ஆற்றினமைக்குத் தலைவி காரணங் கூறியது.

உகூஉ. குறுந்தொகை

இதன்கண், 'தோழி! தலைவர் வரைவொடு வருவார் என்று எனக்கு அயல் மனைக்கிழத்தி அறிவுறுத்தினள்; அவ்வறிவுரை பற்றுக் கோடாக யான் வரையுந் துணையும ஆற்றியிருந்தேன்; அந்நற்செய்தி கூறிய அயன் மனைக்கிழத்தி அமிழ்துண்டு வாழ்வாளாக!' எனத் தலைவி வாழ்த்துகின்றாள்

உ௦க. அமிழ்த முண்கநம் அயலி லாட்டி
பால்கலப் பன்ன தேக்கோக் கருந்துபு
நீல மென்சிறை வள்ளுகிர்ப் பறவை
நெல்லி யம்புளி மாந்தி யயலது
முள்ளி லம்பணை மூங்கிற் றூங்கும்
கழைநிவந் தோங்கிய சோலை
மலைகெழு நாடனை வருமென் றோளே.

1
................................................

(இ-ள்) தோழி! நம் அயல் இல்லாட்டி அமிழ்தம் உண்க- நம்முடைய அயன்மனைக் கிழத்தி அமிழ்தம் உண்பாளாக! அஃது எற்றுக் கெனின், பால் கலப்பு அன்ன தேக் கொக்கு அருந்துபு - பாலைக் கலந்தாலொத்த இனிமையுடைய தேமாங் கனியினை உண்டு, நீல மென் சிறை வள் உகிர்ப் பறவை - நீல நிறமுடைய மெல்லிய சிறகினையும் வளைந்த உகிரினையும் உடைய வெளவால்கள், நெல்லியம் புளி மாந்தி - நெல்லியினது புளித்த கனியினையும் உண்டு, அயலது முள் இல் அம்பணை மூங்கில்

தூங்கும் - அதனயலே உள்ள முள்ளில்லாத அழகிய பருத்த மூங்கிலின் கிளையிலே தூங்கா நின்ற, கழை நிவந்து ஓங்கிய சோலை - மூங்கிற் கோல்கள் உயர்ந்து வளர்ந்த சோலைகளை யுடைய, மலை கெழு நாடனை வரும என்றோள் - மலைபொருந்திய நாட்டையுடைய தலைவனை வரைவொடு வருவான் என்று எனக்கு அறிவுறுத்தினளாகலான்.

விளக்கம்:—''அமிழ்தம் உண்க'' என்று வாழ்த்துவது அக்காலத்து வழக்கம் போலும், இந்நூலின் அ௬-ஆம் செய்யுளினும் "அரும் பெற லமிழ்தம் ஆர்பத மாகப், பெரும்பெய ருலகம் பெறீஇயரோ அன்னை" என வந்தமை காண்க.

அயலிலாட்டி - அடுத்த வீட்டிற்குரியவள்; அயல் வீட்டுச் செய்தி களை அறிந்து கொள்ளுதலும் தாம் அறிந்த செய்திகளை அயல் வீட்டி னர்க்கு அறிவித்தலும் மகளிர்க் கியல்பாவதை இக்காலத்தும் காண லாம். தேக்கொக்கு - தேமாமரம், கனிக்கு ஆகு பெயர். பழமாத் திரையாய் இனிதாத தலன்றியும் அதனோடே பாலுங் கலந்தது போலும் இனிய தென்பாள், 'பால் கலப்பன்ன' என்றாள். அருந்துபு-

(பாடம்) 1. ஆசிரியர் பெயர் காணப்பட்டிலது.

அருந்தி. 'நீல மென்சிறை வள்ளுகிர்ப் பறவை' என்றது, வௌவாற் பறவையை. நெல்லியம்புளி - நெல்லிக்கனி. புளி: ஆகுபெயர். நெல் லிக்கனி புளிப்புச சுவையுடையதாகவின் புளி எனப்பட்டது. அம்- சாரியை. இனிப்பும் புளிப்பும் கலந்துண்டென்றது, தலைவன் கள வொழுக்க நிகழ்ச்சியைக் குறித்தோதியதென்க. 'முள்ளில் அம்பணை மூங்கிலிற் றூங்கும்' என்றது, இப்பொழுது வரைந்துகொண்டு துன்ப மில்லாத தன் மனையிலே இன்புற்றுறைகின்றான் என்றவாறு. தூங்கும்- தொங்கும். வௌவால் தலைகீழாய்த் தூங்கும் இயல்பினதாகலான், 'தூங்கும்' என்றாள். கழை-மூங்கில். நிவந்தோங்கிய-உயர்ந்து வளர்ந்த என்க.

அயலிலாட்டி, தலைவன் வரைவொடு வருவான் என்ற செய்தியை அறிவுறுத்தலானே யான் ஆற்றியிருப்பேனாயினேன் என்றவாறு.

## பாட்டு - ௨0௨ : தலைவி கூற்று

துறை :—வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைமகள் வாயில் மறுத்தது. அஃதாவது, 'பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனை ஏற்றுக் கொள்ளல்வேண்டும்' என்று, தன்பால் வேண்டிய தோழிக்குத் தலைவி மறுத்துக் கூறியது.

இதன்கண், வாயில் வேண்டிய தோழியை நோக்கித் தலைவி, 'கண்ணுக்கு இனிதாகிய நெருஞ்சிப்பூ துன்புறுத்தும் முள்ளை ஈன்றாற் போன்று, பண்டு நமக்கு இன்பஞ் செய்த காதலர் இன்று பெரிதும் இன்னா செய்வாராயினர்; ஆகலின் என் நெஞ்சம் மிகவும் நோகாநின்றது; நின் வேண்டுகோட் கிணங்கேன்' என்கின்றாள்.

௨0௨. நோமென் னெஞ்சே நோமென் னெஞ்சே
புன்புலத் தமன்ற சிறியிலை நெருஞ்சிக்
கட்கின் புதுமலர் முட்பயந் தாஅங்
கினிய செய்தநங் காதலர்
இன்னா செய்தல் நோமென் னெஞ்சே.

—அள்ளூர் நன்முல்லையார்.

(இ - ள்.) தோழீ! என் நெஞ்சு நோம் என் நெஞ்சு நோம் - என்னுடைய நெஞ்சம் வருந்தாநிற்கும்; என்னுடைய நெஞ்சம் வருந்தாநிற்கும்; அஃதெற்றுக் கெனின், புன் புலத்து அமன்ற சிறியிலை நெருஞ்சி - முல்லைநிலத்தில் அடர்ந்து படர்ந்த சிறிய இலையையுடைய நெருஞ்சியினது, கட்கு இன் புது

மலர் முள் பயந்தாங்கு - முன்னர்க் கண்ணுக்கு இனிமையைச் செய்த புதிய மலர் பின்னர் உடலுக்கு இன்னாசெய்யும் முள்ளை ஈன்றாற் போன்று, இனிய செய்த நம் காதலர் - முன்னர்



இனியவே செய்த நந்தலைவர், இன்னா செய்தல் - இப்பொழுது இன்னாதன வற்றைச் செய்தலானே, என் நெஞ்சு நோம் - என் நெஞ்சம் பெரிதும் வருந்தா நிற்கும்.

**விளக்கம்** :—வருத்த மிகுதியைத் தெரியக் கூறுவாள் நோமென்

னெஞ்சே என்பதனை மும்முறை யடுக்கினாள். 'இனிய செய்யுங் காதலரை ஏற்றுக் கோடலே நின் மாண்பிற்குத் தகுதியாம்' என்ற தோழிக்குக் கூறுகின்றாளாகலின், அவள் கூற்றை வழிமொழிந்து, 'இனிய செய்த நங்காதலர்' என்றாள். 'பண்டு இனியவே செய்தார்; இப்பொழுதோ பெரிதும் இன்னா செய்பவராயினர்; அசசெயலை என் னெஞ்சம் பொறுது மிகவும் வருந்தா நின்றது. ஆதலின், அவரை நெஞ்சார ஏற்றுக் கோடல் எங்ஙனம்?' என்று மறுத்தவாறு தலுணர்க.

நெருஞ்சி மலர் கட்கினிதாயிருந்தே பின்னர் முட்பயத்தல் போல, இவர் பண்டு இனியராயிருந்தே பின்னர் இங்ஙனமாயினர் இவவியல் பினை யாம் பண்டறியே மாயினேம் என்றிரங்கியவாறும். இன்னா-தன்னைப் பிரிந்து பரத்தைமை செய்தொழுகுதல்.

புன்புலம் - முல்லை நிலம். புன்செய் என்றவாறு. நெருஞ்சி புன்செய் நிலத்திலே படர்ந்து அடரும் இயல்பிற்றாகலின் 'புன்புலத் தமன்ற நெருஞ்சி' என்றாள். அமலுதல்-அடர்தல். சிறுஇலை, ிறியிலை என விகாரப்பட்டது

## பாட்டு : உ0௬. : தலைவி கூற்று

துறை :—வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது; இதற்கும் முன் செய்யுள் துறைக்குக் கூறிய விளக்கமே கொள்க.

இதன்கண், தலைவி வாயில் வேண்டிய தோழியை நோக்கி,

'தோழி! நந் தலைவர் சேணுட்டுறைவாருமல்லர்; செய்தொழிய ஊரினுறைவாருமல்லர்; அண்மையிலே உறைபவராயிருந்தும், கடவுளை எய்தும் பகுதியுடைய துறவியர் போன்று நம்மைப் புறக்கணித்தொழுகாநின்றனர். இத்தகையர் என்றறியாமையானே யான் பண்டு இவர்க்கு இரங்கி வாயில் நேர்ந்தமைக்கு வருந்துகின்றேன்' என்று கூறுகின்றாள்.

உ0௬. மலையிடை யிட்ட நாட்டரு மல்லர்
மரந்தலை தோன்றா ஊரரு மல்லர்
கண்ணிற் காண நண்ணுவழி யிருந்தும்
கடவுள் நண்ணிய பாலோர் போல
ஒரீஇ ஒழுகும் என்னைக்குப்
பரியலென் மன்யான் பண்டொரு

காலே.

—நெடும் பல்லியத்தனார்.[1]

(பாடம்) 1. நெடும்பல்லியத்தை.

## மூலமும் உரையும்

உகரு

(இ - ள்.) தோழி! மலை இடை இட்ட நாட்டரும் அல்லர்-மலைகள் இடைக் கிடத்தலானே சேய்த்தாகிய நாட்டிடத்தே உறைபவரும் அல்லர், மரந்தலை தோன்றா ஊரரும் அல்லர்- மரங்கள் தோன்றாது மறைதற்குக் காரணமான சேய்மையை யுடைய வேற்றூரின்கண் உறைபவருமல்லர், கண்ணிற் காண

நண்ணுவழி இருந்தும் - கண்ணாலே காணும் அளவிற்றாய் வருதற்குரிய அண்மையிடத்தே இருப்பவரே ஆகியும், கடவுள் நண்ணிய பாலோர் போல-கடவுளை உளத்தாலே அணுகிய துறவிப்பகுதியினர் போன்று, ஒரீஇ ஒழுகும் என்னைக்கு - நம்மைப் புறக்கணித்து ஒழுகாநின்ற தலைவனுக்கு, யான் பண்டொருகால் பரியலென் - யான் பண்டொரு காலத்தே இரங்குமியல்புடைய ளாயிருந்தேன், மன் - அது இப்பொழுது கழிந்தது.

**விளக்கம்** :—ஊரிடையிட்டும், நாடிடையிட்டும் பிரிந்துறைவாரு

மல்லா என்பாள், 'மலையிடையிட்ட நாட்டருமல்லர்; மரந்தலை தோன்றூ ஊராரும் அல்லர்' என்றாள். கண்ணிற்காண நண்ணுவழி என்றது, அவரிருக்குமிடம் இங்கிருந்தே காணத்தகுவதாகிய அணைமையிடத்தது என்றவாறு. கடவுள் நண்ணிய பால் என்றது, இறையடி நீழலைக் கருதிய பகுதி என்றவாறு. அஃதாவது துறவறம். துறவறத்தார் மனைவி முதலாயினாரை ஒரீஇ ஒழுகுதல் மரபாகலின், அவரை உவமை எடுத்தோதினாள். பால என்றாள், அறத்தினும் அஃதொரு பகுதியாதனோக்கி. இனி, அருளொடு புணர்ந்த அகற்சியும், காமத்தபாலும், எனப் புறத்தே ஓதிய கடவுளை நண்ணிய பகுதி எனினுமாம்.

என்னை - தலைவன். ஒரீஇ யொழுகுதல் - புறக்கணித்து நடத்தல்.

இங்ஙனம் ஒரீஇ ஒழுகும் தலைவனுக்குப் பண்டெல்லாம் நீ வாயிலாக வந்து வேண்டிய வழிப் பரிவு கூர்ந்து யானும் நோவேனாயினேன்; அவன் ஒழுக்கம் மேலும் மேலும் தீயதாகக் காண்டலின் யான் இப்போது பரிவேனல்லேன்; அப்பரிவு நிலை கழிந்தது என்பாள், 'பரியலென் மன்' என்றாள் பரியலென் - பரியலை உடையேன். மன் - அது கழிந்தது என்னும் பொருட்டு. கடவுள் என்றதனை முனிவர் என்பாரு முளர்.

## பாட்டு - ௨0௪ : பாங்கன் கூற்று

துறை :—தலைமகற்குப் பாங்கன் உரைத்தது. அஃதாவது, காமநோயானே வேறுபட்டு மெலிந்த தலைவனைப் பாங்கன் இடித்துரைத்தது.

இதன்கண், பாங்கன் தலைவனை நோக்கிக், 'காமநோய் காம நோய் என்று அதனால் வேறுபட்டு மெலிவர் உலகினர்; அதன் இயல்பை ஆராயின், காமம் அணங்குமன்று; பிணியும் அன்று; அஃதொரு புத்தின்பம் என்பது விளங்கும; அதற்கு நீ மெலிவானேன்!' என்று கூறுகின்றான்.

உகசு

## குறுந்தொகை

உ0ச. காமம் காமம் என்ப காமம்
அணங்கும் பிணியும் அன்றே நினைப்பின்
முதைச்சுவற் கலித்த முற்றா இளம்புல்
மூதா தைவந் தாங்கு
விருந்தே காமம் பெருந்தோ ளோயே.

—மிளைப்பெருங் கந்தனர்.

(இ - ள்) பெருந்தோளோய் - பெரிய தோளையுடைய தலைவனே, காமம் காமம என்ப - காமநோய் காமநோய் என அதனியல்பறியார் அதறகு அஞசி மெலியாநிற்பர்; காமம் அணங்கும் பிணியும் அன்று - அது புறத்திருந்து

வந்து தீண்டி வருத்து மொரு தெய்வமுமன்று ; அகத்தே தோன்றி வருத்து மொரு நோயும அன்று, நினைப்பின் - அதனியல்பை ஆராயின், முதைச் சுவல் கலித்த முற்றா இளமபுல் - பழைதாகிய மேட்டு

நிலத்தே தழைத்த முதிராத இளம புலலை, மூதா தைவந்தாங்கு- முதிய ஆ நாவானக்கிளுற் போன்றதொரு, விருந்தே காமம - புதுமையுடையதே காமம என்பது புலனும்.

**விளக்கம் :**—காமம் நம் நினைப்பளவானே இன்ப துன்பங்கட்குக்
காரணமாவதொரு புதுப்பண்பன்றி, புறத்தினின்றுதல் அகத்திஞதல் நின்று வருத்துமொரு பொருளன்று ; அந்நினைப்பை மாற்றிஞல் ஆறு தல் பெறலாம் என்றவாறு.

அணங்கு - தீண்டி வருத்தும் தெய்வம். நோய் - உடலின் குறை யாற் றேன்றும் பிணி. உடலின்கண் வளி முதலிய மூன்றனது மிகை குறைகளாலே தோன்றி வருத்தும் நோயன்று காமம் ; அணங்கு போலப் புறத்திருந்து தீண்டி வருத்துவதும் அன்று ; அது கணிக மாத்திரையாய் உள்ளதொரு பண்பென்றுன் என்க.

முதைச்சுவல் - பழைதாகிய மேட்டு நிலம். ஈண்டு மேட்டுநிலம் என்றது, பண்படுத்தப்படாத நெஞ்சத்திற்கு உவமை. காமம் பற்பல பிறவிகளினும் அடிப்பட்ட பயிற்சியாலே மனத்தின்கண் நினைவுரு வாய்க் கிடந்து, தான் தோன்றுதற்குரிய பிற ஏதுக்கள் நேர்ந்த வழி அவ்வேதுக்களைப் பற்றி வளர்வதாகலின், பண்படுத்தப்படாத மேட்டு

நிலத்தே தோன்றுதொட்டுக்கிடந்த விதை, மழை முதலிய ஏதுக்கள் உண்டாயவழி முளைத்துத் தழைத்த இளம் புல்லை உவமை கூறினான். காமம் பிறவிகடோறும் நெஞ்சத்தின்கண் கிடந்து செவ்வி பெற்ற போது எண்ணமாகத் தழைக்கின்றது. அவ்வெண்ண முதிர்ச்சியாலே யாம் இன்பதுன்பமுறுவதல்லால் அதற்கேதுவாம் பொருளிடத்தே அவ்வின்பதுன்பம் கிடந்ில என்றவாறு. எனவே, அவவெண்ணங்களை மாற்றக் காமநோய் போம்; நீ அது செய்கின்றிலை; மேலும் மூதா அப் புல்லை நாவால் நக்கு மாத்திரையானே இன்புறுமாறு, அவ்வெண்ணங் களைத் தழுவு மாத்திரையானே இன்பம் அல்லது துன்பம் எய்து கின்றனை என்றான் என்க. மூதா என்றது, பண்டும் பண்டும் புல் மேய்ந்து பயின்றமை தோன்ற நின்றது. அறிந்தோர் அதனால் எய்தும்

## மூலமும் உரையும்

உசுஎ

இன்பத்தை நுகர்வர்; எய்தாதவழித் துன்ப முறுதலிலர். ஆகலின், அஃது அவர்க்கு விருந்தாம்; ஏனையோர்க்கு அணங்கும் பிணியுமாம் என்பது கருத்து. 'பெருந் தோளோய்' என்றது அவன் ஆண்மையை நினைவூட்டி நின் ஆண்மைக்குத் தக மனவடக்கம் உடையையல்லை என்றிகழ்ந்தவாறென்க.

மேட்டு நிலத்துப் புல்லென்றது, காமம் யாண்டும் நிலைத்து நின்று இன்பம் பயக்கும் நற்பண்பு மன்று என்றும், ஏதோ ஒருசில செவ்வியிற் றோன்றி அழிவது என்றும் உணர்த்தற்கு. என்னை, மேட்டு நிலத்தே நீர் நிற்கப் பெருமையின் மழைபெய்தக்காற் றோன்றி மறுத்தக்கால் அழிவது அப்புல்லுக்கு இயல்பாகலின் என்க.

## பாட்டு - உ௦ரு : தலைவி கூற்று

துறை :—வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைததது. அஃதாவது, வரைவிற்குப் பொருளீட்டற் பொருட்டுத தலைவன் பிரிந்தானாகத் தலைவியின் ஆற்றாமை கண்டு 'இச்சிறு பிரிவையும ஆற்றுகின்றிலளே' எனக் கவலை யுற்ற தோழிக்கு, ஆற்றாமைககுக் காரணம் காட்டித் தலைவி கூறியது.

இதன்கண், 'தோழி! இதோ பார்! இப்பொழுதுதான் நந்தலைவர் நம்மைப் பிரிந்து சென்றனர்; அவர் பிரிவானுற்ற வருத்தத்தை என் நெஞ்சங்கூட இன்னும் அறிந்திலது; இப் பசலைநோய் மட்டும் எங்ஙனம் அறிந்ததோ அறிகிலேன்; அது என் நெற்றி முழுதும் விரைவில் பரவிவிட்டது; யான் எங்ஙனம் ஆற்ற வல்லேன்' என்கின்றாள்.

௨0௫. மின்னுச்செய் கருவிய பெயன்மழை தூங்க
விசும்பா டன்னம் பறைநிவந் தாங்குப்
பொலம்படைப் பொலிந்த வெண்டேர்
ஏறிக்
கலங்குகடல் துவலை ஆழி நனைப்ப
இனிச்சென் றனனே இடுமணற்
சேர்ப்பன்
யாங்கறிந் தன்றுகொல் தோழியென்
தேங்கமழ் திருநுதல் ஊர்தரும் பசப்பே.

—உலோச்சனார்

(இ- ள்.) தோழி—, மின்னுச் செய் கருவிய பெயல் மழை தூங்க - மின்னுதலைச் செய்யும் தொகுதிகளையுடைய பெய்தலை
யுடைய மழைபெய்யா நிற்ப, விசும்பு ஆடு அன்னம் பறை நிவந்தாங்கு - வானத்தின்கண்ணே அசைதலையுடைய அன்னப் பறவை பறத்தலில் உயர்ந்தாற் போன்று, பொலம் படைப்

உகூஅ குறுந்தொகை

பொலிந்த வெண்டேர் ஏறி - பொற்றட்டாலே பொலிவுடைய வெள்ளிய தேரின்கண் ஏறி, கலங்கு கடல் துவலை ஆழி நனைப்ப - அலையாற் கலங்கிய கடலினது நீர்த்துளி தேருருள்களை நனையா நிற்ப, இனிச் சென்றனன் இடுமணல் சேர்ப்பன - இப் பொழுதுதான் நம்மைப்பிரிந்து செல்லாநின்றான் அலை கொணர்ந்து குவித்த மணலையுடைய கடற்கரைத் தலைவன், பசப்பு யாங்கு அறிந்தன்று - இப்பசலை அவர் பிரிவினை எங்ஙனம் இத்துணை விரைவில் அறிந்து கொண்டதோ, என் தேங் கமழ் திருநுதல் ஊரும் - அறிந்தமையாலன்றே எனது தேன் மணங் கமழும் அழகிய நுதலிடத்தே பரவா

நின்றது.

**விளக்கம்** :—பசப்பு - மகளிர்க்குக் கணவர் பிரிவானுண்டாகும் நிற வேறுபாடு. தலைவர் பிரிந்தணித்தாயிருக்கவும் ஆற்றுகின்றிலை என்று தோழி கூறினாளாகலின், பசலை நோயின் கொடுமை கூறி அங்ஙன மாக யான் எங்ஙனம் ஆற்றுவல் என்பது படத் தலைவி கூறினள் என்க.

"உவக்காண் எங்காதலர் செல்வார் இவக்காண் என்

மேனி பசப்பூர் வது" (குறள், ௧௩௮௫)

"விளக்கற்றம் பார்க்கும் இருளேபோற் கொண்கன்

முயக்கற்றம் பார்க்கும் பசப்பு" (குறள் - ௧௧௮௬) என்னுந் திருக்குறட்பாக்கள் ஈண்டு நினைக்கற் பாலன.

பறை - பறத்தல். பறத்தலில் உயர்ந்த என்க. விண்ணிடத்தே அசைந்து செல்லும் அன்னம் என்பாள், 'விசும்பாடன்னம்' என்றாள். அன்னம் மறைந்து துளியூடே விண்ணிற் பறத்தல், தலைவனுடைய வெண் புரவிபூட்டிய வெண்டேர் கடற்றுவலையினூடே செலலற்கு உவமை எனக.

பொலம்படை - பொன்னாலாய தேர்த்தட்டு; படுத்து வைத்தலிற் படை எனப்பட்டது இதனால் தலைவனுடைய திருநலம் கூறப்பட்டது வெண்டேர் - யானை மருப்பாலியற்றிய தேர் என்க கலங்கு கடல் - அலையாலே கலங்கா நின்ற கடல் என்றவாறு. அவன் பிரியுங் கால் தன்னெஞ்சம் கலங்குமாறு போலக் கலங்கும் கடல் என்னும் நினை வினளாய அங்ஙனம் கூறினள் என்க. இனி - இப்பொழுது இடு மணல் - அலை கொணர்ந்திட்ட மணல் சேர்ப்பன்- நெய்தனிலத் தலை வன். தலைவன் தன் தேரினை அலைவாய் வழியே செலுத்திச் செல்வன் என்பதை,

"நேர்ந்தநங் காதலர் நேமி நெடுந்திண்டேர்
ஊர்ந்த வழிசிதைய வூர்ந்தாய் வாழி
கடலோதம்"

(கானல்வரி : ௩௯)

எனவரும் சிலப்பதிகாரத்தானும் உணர்க. தேங்கமழ் என்றது, அதன் பண்டைநிலை கருதி இரங்கியவாறு.

திருநுதல்

மூலமும் உரையும்



## பாட்டு – ௨௦௬ : தலைவன் கூற்று

துறை :—கழறிய பாங்கற்குக் கிழவன் உரைத்தது. அஃதாவது, 'காம நோயானே வருந்துதல் நிற்கழகன்று,' என்று, இடித்துரைத்த நண்பனுக்குத் தலைவன் கூறியது.

இதன்கண், 'அமிழ்தம் போன்ற அழகும் இனிமையும் உடைய சொல்லாளாகிய தலைவியினது குணமும், இன்னா செய்யுமியல்பிற்றாயின், காமம் உடனுறைவும அரிதாயின், நின் போலும் அறிஞர் அதனை அடைதலைப பரிகரித்தல் நன்று!' என்று தலைவன் பாஙகனுக்குக் கூறுகின்றான்.

உ0௬. அமிழ்தத் தன்ன அந்தீங் கிளவி
அன்ன இனியோள் குணனும் இன்ன
இன்னா அரும்படர் செய்யு மாயின்
உடனுறை வரிதே காமம்
குறுக லோம்புமின் அறிவுடை யீரே.

—ஐயூர் முடவனார்.

(இ - ள்) அறிவுடையீரே - அறிஞரே, இனியோள் அந் தீங் கிளவி அமிழ்தத்தன்ன - இனிமையுடையாளது அழகிய தீவிய மொழிகளோ அமிழ்தத்தை ஒப்பன, குணனும அன்ன - அவளின் குணங்களும் அமிழ்தமே போல்வன, இன்ன இன்னா அரும படர் செய்யுமாயின் - இவைகளே இத்தகைய இன்னாதன வாகிய பொறுத்தற்கரிய துன்பங்களைச்

செய்யும ஆயின், காமம் உடனுறைவு அரிது - ஆராயிற் காமந்தானும் தன்னையுடையோர் பிரிவினறி உடனுறையப் பெறுதலும அரியதாகும் ஆகலான், குறுகல் ஓம்புமின் - அதனை அணுகுதலைப பாதுகாமின்.

**விளக்கம்** :—காமமுடையோர் பிரிவின்றி உடனுறைதலை என்

ஞான்றும் பெறுவராயின் இனிதாம். காமமுடையோர் அஙஙனம் உடனுறைதல் இவவுலகததே அரிதாகின்றது. பிரிந்த வழித தமக்கு முன்னர்ப் பேரின்பமளித்த மொழிகளும், குணங்களுமே இன்னுவரும் படர் செய்வனவாகின்றன. ஆதலால் அறிவுடையோர் காமநெறிப் படராமையே நன்று என்றவாறு.

இனியோள் என்றது, கண்டுகேட்டுண்டுயிர்த்து உற்றறியும் ஐவகை யின்பமும் ஒருஙகே உடையோள் என்று தலைவியைத் விடத்தே நுகர்ந்தமையைக் கருதிக் கூறியவாறு.

தான் பொழி

அவளுடைய சொற்களும் குணனும் பிரிந்துறைவுழி நினைவிற் றோன்றி அருமபடர் செய்தலின், 'இன்னு அரும்படர் செய்யும்' என் றான். படர் - நினைவினுற்றுன்புறுதல். அதனுல் மெலிவுற்ற தன்னிலை யைச சுட்டிக் காட்டுவான், 'இன்ன அரும்படர்' என்றான். உலகியலில்

காமுற்றோர் உடனுறைதற்கு இடையூறுகள் பல வுளவாகலின், காமம் உடனுறைவும் அரிதென்றான். உடனுறைவும் என்புழிச் சிறப்பும்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது. குறுகியபின் வீடில்லையாகலின் குறுகலோம்புதலே அறிவென்பான், 'குறுகலோம்புமின் அறிவுடையீரே' என்றான். யான் அத்தகைய காமத்தைத் தலைப்பட்டுவிட்டேன்; இனி எனக்கு அத் தலைவியைப் பெறுதலின்றி வீடில்லை ஆகலான், நீ கழறுதல் பயனில் செயலாம் என்று பாங்கனைக் கடிந்தான் என்க. அறிவுடையீர் என்றது, இகழ்ச்சிக் குறிப்பு.

காமம் உடனுறைவு அரிதென்றது - காமங் கொண்டோர் இவ் வுலகத்தே பிரிவின்றிக் கூடியுறைதலும் அரியர் என்றவாறு.

## பாட்டு - உ0எ : தலைவி கூற்று

துறை :—செலவுக் குறிப்பறிந்து அவர் செல்வார் என்று தோழி சொல்லக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, தலைவன் பிரிந்து செல்வான் என்பதை குறிப்பானறிந்த தோழி, 'அவர் பிரிவர் போலும்' எனத் தலைவிக்கு அறிவுறுத்தாளாக, அவளைத் தலைவி புலந்து கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'நீ மட்டும் அல்லை; தலைவர் சென்றார என்று என்னிடம் கூறிய ஆர்வலர் பலராவர்.' என்று புலந்து கூறுகின்றாள்.

உ0எ. செப்பினஞ் செலினே செலவரி தாகுமென்
றத்த வோமை அங்கவட் டிருந்த
இனந்தீர் பருந்தின் புலம்புகோள்
தெள்விளி
சுரஞ்சேல் மாக்கட் குயவுத்துணை யாகும்.
கல்வரை யயலது தோல்வழங்கு சிறுநெறி
நல்லடி பொறிப்பத் தாஅய்ச்
சென்றெனக் கேட்டனம் ஆர்வலர் பலரே.

—உறையலூர்.

(இ - ள்.) தோழி—, செப்பினம் செலினே செலவு அரிதாகும் என்று-யாம் பிரிந்து செல்வதைத் தலைவியினிடத்தே கூறிச் செல்வோமாயின் செல்லுதல் இயலாதாம் என்று கருதி, அத்த
ஓமை அம் கவட்டிருந்த இனந்தீர் பருந்தின் புலம்புகொள் தெள் விளி - பாலைநிலத்திலுள்ள ஓமைமரத்தினது அழகிய கிளையின் கண்ணே இருந்த தன் கூட்டத்தினின்றும் பிரிந்து வந்த பருந்தினது தனிமைத்தன்மையைத் தன்னிடத்தே கொண்டமை
தெளிதற்குக் காரணமான ஓசை, சுரஞ் செல் மாக்கட்கு உயவுத் துணையாகும் - அப் பாலை நிலத்தினூடே செல்லும் மனிதர்கட்கு

அளவளாவும் துணையாக அமையாநின்ற, கல்வரை அயலது
தொல் வழங்கு சிறு நெறி - கற்களையுடைய மலையின் பக்கத்திற் கிடந்ததாகிய பழைதாய் நடத்தலையுடைய சிறு வழியின்கண், நல் அடி பொறிப்பத் தாஅய்ச் சென்று என - நன்றாகிய அடிச் சுவடுபட விரைந்து சென்றார் நின் தலைவர் என்று கூற, கேட்டனம் - யாம் முன்னரே கேட்டுள்ளேம், ஆர்வலர் பலர் - இச் செய்தியை அறிவித்தற்குரிய அன்புடையோர் பலராவார்.

**விளக்கம்** :—தலைவன் கூறாது பிரிந்து சென்றமையை அறிந்த தோழி, அவன் சென்றான் எனக் கூறின், தலைவி ஆற்றாள் எனக் கருதியவளாய், 'இனிச் செல்வான் போலும்' எனக் கூறினள் ஆகவின், அவரைச் செலவழுங்குவியாது வாளா வந்து ஏதிலார் போலக் கூறினை என்று கடிவாள், 'செல்வார் என்று நீ கூறுவதென்?' 'சென்றார் என்றே நினக்கு முன்பலா என்பால் வந்து கூறியதை யான் கேட்டுள்ளேன்' என்று கூறினாள் என்க.

தோழி தனக்குத் துணையாய் நின்று செலவழுங்குவியாது, செலவுணர்த்தியவழித் தான் உசாத்துணையும் இன்றித் தனித்தவளானேன் என்று குறிப்பானுணர்த்துவாள், நம்மைப் பிரிந்து சென்ற தலைவர்க்கேனும் ஆண்டொரு துணையுண்டு எனக் கதுவுமின்றென்பது தோன்ற 'அத்த வோமை அங்கவட்டிருந்த இனந்தீர் பருந்தின் புலம்புகொள்

தெள்விளி, சுரஞ் செல் மாக்கட்கு உயவுத் துணையாகும்' என்றாள். இது பண்டு தலைவன் கூறியதைக் கொண்டு கூறியதென்க. உயவுத் துணை - அளவளாவிச் செல்லும் துணை. இனந்தீர் பருந்து தன் தனிமை தோன்றக் கூவுதல் கேட்டலும் அவ்வொலிபற்றி ஆறு செல் மாக்கள் நெஞ்சத்தே பற்பல எண்ணங்கள் தோன்றுதல் இயல்பாக லின் 'விளி உயவுத் துணையாகும்' என்றாள்.

'தோல் வழங்கு சிறு நெறி' என்றும் பாடம். இதற்கு யானைகள் வழங்கும் சிறு நெறி என்று பொருள் கூறுக.

ஆர்வலர் என்றது குறிப்புமொழி; எதிலர் என்னும் பொருட்டு. செல்வார் என்று அறிவிப்போர் எதிலர் ஆதல் தகும். நீ அதனை அறி வித்தலாகாது என்பதாம். உசாத்துணைத் தோழியாகிய நீயும் எதிலர் கூறியதே கூறினை செலவழுங்குவித்து இனிச் செல்லார் என்று உணர்த்தினை அல்லை எனப் புலந்தவாறு. 'கேட்டனம்' என்று பாட மோதி அதற்கியையக் கூறுவாருமுளர்.

## பாட்டு - உ௦அ : தலைவி கூற்று

துறை :—வரைவிடை ஆற்றல் வேண்டுமென்ற தோழிக் குக் கிழத்தி யுரைத்தது. அஃதாவது, தலைவன் வரைதற்கு வேண்டிய பொருளீட்டனிமித்தம் பிரிந்த வழி, ஆற்றாமை மிக்க தலைவியைத் 'தோழி! நீ இங்ஙனம் ஆற்றுயாகின்றது அறிவன்று; ஆற்றுக!' என்றாளாகத் தலைவி, 'யான் ஆற்றேனுவது பிரிவிற் கன்று மற்றென்றற்கென்று' கூறியது.

இதன்கண், 'வரைபொருள் நிமித்தம் பிரிந்த தலைவன் செயற்குப் பொருந்தியிராதே, ஆற்றுமை கொள்வதென்?' என்ற தோழிக்கு, 'யான் பொருந்தி ஆற்றியிருப்பேன்! ஆற்றேனுகேன்! யான் நாடன் செயற்குப் பொருந்தேனுய் வருந்துவது, அவன் பிரிவிற்கன்று; அவன் காலந்தாழ்க்கின் நொதுமலர் வரைவு நேருமே என்பதற்கே ஆற்றுமை யுடையேனுயினேன்' எனறு கூறுகின்றுள

௨0௪. ஒன்றே னல்லேன் ஒன்றுவேன் குன்றத்துப்
பொருகளிறு மிதித்த நெரிதாள் வேங்கை
குறவர் மகளிர் கூந்தற் பெய்ம்மார்
நின்றுகொய மலரும் நாடனொ
டொன்றேன் றோழி ஒன்ற னேனே.

—கபிலர்

(இ - ள்.) தோழி—, ஒன்றேன் அல்லேன் ஒன்றுவென் - யான் தலைவன் செயலுக்குப் பொருந்தி ஒழுகாதேன் அல்லன், பொருந்தி ஒழுகும் இயல்புடையேனே ஆவன், குன்றத்துப் பொரு களிறு மிதித்த நெரிதாள் வேங்கை - மலையினகண்ணே தம்முட் போர் செய்த களிற்றியானைகளாலே மிதிக்கப்பட்ட நெரிந்த அடியினையுடைய வேங்கைமரம், குறவர் மகளிர் கூந்தற் பெய்ம்மார்-குறவருடைய மகளிர்கள் தங் கூந்தலிலே சூடும் பொருட்டாக, நின்று கொய மலரும் நாடனொடு - ஏற வேண்டாமல் நிலத்தே நின்றபடியே பறித்துக்கொள்ளும்படி தாழ்ந்து மலராநிற்கும் நாட்டையுடைய தலைவன் செயலோடே, ஒன்றனே ஒன்றேன - அவன் வரைவுநீட்டித்தவிடத்து நொதுமலர் வரைவுநேருமாயின் என் செய்வதென்னும் அவ்வோரிடையூற்றிற்கே யான் பொருந்தி ஆற்றேனுவது.

**விளக்கம்** :—ஒன்றுதல், தலைவன் செயலுக்குப் பொருந்த ஒழுகுதல். வரைபொருட்குப் பிரிந்தான் வருந்துணையும் அஃதவன் கடமையாதல் கருதி ஆற்றியிருத்தல் தலைவி கடனுகவும், அவள் ஆற்ருளாதல், பொருந்த ஒழுகாமை என்க.

'தலைவன் பிரிந்தமைக்குப் பொருந்தியே இருக்கின்றேன்: அவன் காலம் நீட்டித்தவழி ஏதிலார் வரைவிற்குத் தாய் முதலியோர் உடம்படின் என்னும்' என்று எண்ணுங்கால், 'ஆற்ருமை கொள்கின்றேன்'

என்ருள் என்க.

இதனுல், தலைவன் தமர் வரைவுடன் வந்தபொழுது தலைவியின் தமர் வரைவிற்கு உடன்படுவாரும் மறுப்பாருமாகி மாறுபட்டனர் என்பது புலனும். தலைவியின் தமர் இவள் களவின்கண் கற்புக்கடம் பூண்டமை அறியாராகலின், தலைவன் தமர் வரைவொடு வந்தமையை நொதுமலர் வந்தாங்குக் கொண்டு உடன்படுவாரும் மறுப்பாருமாயினர்

என்க. தலைவி கற்புக் கடம்பூண்டாள் என்னுந் துணிவானே தலைவன் வரைபொருட்குப் பிரிந்தான்; பிரிந்தவன் விரைந்துவந்து ஏனை யோரையும் உடம்படுவித்து வரைந்துகோடல் நன்றாம்; தாழ்ப்பின் நொதுமலர்க்குத் தமர் வரைவுடம்படின் யாம் என் செய்கேம் என அஞ்சுகின்றேன என்றாள் என்க.

தமர் கற்புக்கடம் பூண்டமை அறியாதாராய்த் தன் பருவநலம் ஒன்றே கருதி, இனி இவட்கு மணவினை நிகழ்த்தல் வேண்டும் என்று கருதியிருக்கின்றாராகலின், தகுதி கண்டவிடத்து நொதுமலர்க்கும் வரைவுடன்படுதல் கூடும்; இவ்வாற்றால் யான் வரைவொடு வருவார்கு எளியளாயிருந்தேன் என்பாள், களிற்றால் பிறிக்கப்பட்ட நெரிதாள் வேங்கை குறவர் மகளிர் நின்று கொய மலரும் எண்மையுடைத்தானாற் போன்று, யான் இருந்தேன் என்றாள் என்க.

இச செய்யுட்குத் தொல்லாசிரியரும் பிற ஆசிரியரும் தத்தம் கருத்திற் கேற்கப் பற்பலவாறு உள்ளுறைப் பொருள் கண்டோதியுள்ளனர். துறையும் வேறு வேறு கூறுப.

தலைவன் பிரிவால் வேறுபட்டமை யறியாது பருவத்தானே வேறுபட்டனர் என்று தமர் கருதுகின்றனராகலின், களிற்றால் பிறிக்கப்பட்டுத் தாள் நெரிந்த வேங்கையைத் தனக்கு உவமை கூறித் தன் மெலிவே நொதுமலர் வரைவிற்கு ஏதுவென்பாள், 'நின்று கொய மல ரும்' என்றாள்.

## பாட்டு – உ0கூ : தலைவன் கூற்று

துறை :—பொருள்முற்றி மறுத்தரும் தலைமகன் தோழிக்கு உரைப்பானாயக் கிழத்தியைத் தெருட்டியது. அஃ தாவது, பொருளீட்டப் பிரிந்த தலைவன், நன்கு பொருளீட்டிக் கொண்டு தன மனைக்கு மீண்டுவந்த பின்னர்த் தோழியை நோக்கித் தான் பிரிந்துறைந்த காலத்தே இருந்த நிலையினைக் கூறுவான் போலத் தலைவிக்குத் தன் அன்பின் நிலைமையை உணர்த்தியது.

இதனகண், தலைவன் தலைவி கேட்கும்படி தோழியை நோக்கி, 'யாம் பொருளீட்டும் பொருட்டு இறப்பரும் குன்றம் கடந்தவிடத்தும், ஆண்டு நினைதற்குரியன அவையிற்றை நினையேமாய்த் தலைவியின் பற்பல இருந்தும்,
நட்பொனறையே
இடையறுது நினைந்திருப்பே மாயினேம்,' என்று கூறுகின்ருன்.

உ௦௯. அறந்தலைப் பட்ட நெல்லியம் பசுங்காய்
மறப்புலிக் குருளை கோளிடங் கறங்கும்
இறப்பருங் குன்ற மிறந்த யாமே

குறுநடை பலவுள் ளலமே நெறிமுதற்
கடற்றிற் கலித்த முடச்சினை வெட்சி



தளையவிழ் பல்போது கமழும்
மையிருங் கூந்தன் மடந்தை நட்பே.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

(இ - ள்.) குறுநடை - குறிய நடையினையுடைய தோழி கேள், அறந்தலைபபட்ட நெல்லி அம் பசுங்காய் - அறச்செய லிலே தலைப்பட்ட நெல்லியினது அழகிய பசிய காய்கள், மறப்
புலிக் குருளை கோள் இடம் சறவகும் - வலியையுடைய புலிக் குட்டிகள் கொள்ளற்குரிய இடத்தின்கண்ணே வீழ்ந்து உருளா நிற்கும், இறப்பு அரும் குன்றம் இறந்த யாம் - கடத்தற்கரிய மலைகளைக் கடந்துசென்ற யாம், பலவுள்ளலம் - ஆண்டிருந்து நினைத்தற்குரிய பலவற்றையும் நினைந்தோமில்லை, பின்னர் எதனை நினைந்தோமெனின், நெறிமுதல் கடற்றிற் கலித்த முடச்சினை வெட்சி - வழியினகண்ணே

காட்டிடத்தே தழைத்த வளைந்த கொம்புகளையுடைய வெட்சியினது, தளை அவிழ் பல் போது கமழும் மைஇருங் கூந்தல் மடந்தை நட்பே - கட்டவிழ்ந்து மலர்ந்த பலவாகிய மலர்கள் மணங்கமழ்தற்கிடமான மை போன்று கறுத்த கூந்தலையுடைய தலைவியினது நட்பொன்றனையே இடையறாது நினைந்திருந்தேம்.

**விளக்கம் :**—நெல்லிக்கனி நீர் வேட்கை தணிக்கும் இயல்புடையது;

ஆகலின், பாலைநிலத்தே ஆறுசெல்வோர் தம் நீர்வேட்கை தணிக்கும் நெல்லியினது காய் என்பான், 'அறந்தலைப்பட்ட நெல்லியம் பசுங்காய்' என்றான்; ஆறுசெல்வோர்க்கு நீர் வழங்குதல் சிறந்த அறமாதலும் அறிக. நெல்லிக்காய் கட்கினிமை பயத்தலான், 'அம்பசுங்காய்' என்றான்.

நெல்லி, பாலைநிலத்தே செல்வோர் நீர்வேட்கையைத் தணித்துப் புரக்கும் என்பதனைக்,

"குறும்பொறை மருங்கிற் கோட்சுரம் நீந்தி
நெடுஞ்சேண் வந்த நீர்நசை வம்பலர்
செல்லுயிர் நிறுத்த சுவைக்காய் நெல்லி,"

எனவரும் அகநானூற்றுச் செய்யுளானும் அறிக. நெல்லிமரம் பாலைக் கருப் பொருளாதலை,

"பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி
மோட்டிரும் பாறை ஈட்டுவட் டேய்ப்ப
உதிர்வன படூஉம் கதிர்தெறு கவாஅன்" (அகம்
ரு.)

எனவரும் செய்யுளானறிக.

மறப்புலிக் குருளை என்றது இளம்புலியை. நெல்லி அறந்தலைப் படுமிடமே அக்கனியை உண்ணவரும் நீர்நசை வம்பலரைப் புலி



பாய்ந்து கொல்லும் இடமுமாம் என்பான், 'மறப்புலிக் குருளை கோள் இடம் கறங்கும்' என்றான்; கறங்குதல் உருளுதல் என்க. இதனால் ஆற்றினது தீங்குணர்த்தியவாறுணர்க. குறிஞ்சி திரிந்தபாலை என்பது பட, 'இறப்பரும் குன்றம்' என்றான். இறப்பருங்குன்றம் - கடத்தற் கரிய மலை அரிதிற் கடந்தேம் என்றவாறு. குறுநடை - அன் மொழித் தொகையாய் விளியேற்று நின்றது. பொருளீட்டற்குச் சென்றோர் அதுபற்றி நினைதற்குரியன பற்பல உளவாகலின் பலவுள் ளலம் என்றான். நெறி - வழி. முதல்: ஏழாவதன் சொல்லுருபு. முட்சினை என்றும் பாடம். முள்போன்ற கூர்த்த கொம்பெனப் பொருள் கூறுக.

மீண்டு வந்த காலம் கார்கால மாதலின், தலைவி

கூடுதலிலே அக

காலத்தே மலர்ந்த வெட்சி மலா கமழ்தலை நுகாந்தானுகலின் அந்நிலை
வான் வெட்சி தளையவிழ் பல்போது கமழும் கூந்தல் என்றான் என்க.

இஃது, எம்மை நினைத்துமறிதிரோ என்று வினைய தோழிக்குத் தலைவி அண்மையளாயகாலைத் தலைவன் கூறியதாகக் கொள்க.

## பாட்டு - உ௧0 : தோழி கூற்று

துறை :—பிரிந்து வநத தலைமகன் நன்கு ஆற்றுவித்தாய்
என்றாற்குத தோழி உரைததது. அஃதாவது, பிரிந்து சென்ற தலைவன் மீண்டு வநத பின்னாத் தோழியை நோக்கி, 'யான் வருந்துணையும தலைவியைப பெரிதும முயனறு ஆற்றுவித்தனை' என்று பாராட்டினனாகத தோழி அத் தலைவனுக்குக் கூறியது.

இதன்கண், தோழி தலைவனை நோக்கித, 'தலைவி, ஆற்றி
யிருக்குமாறு விருநது வருதலைக் கரையுமுகததானே முனனர் அறிவித்த காக்கைக்கு நள்ளி கானத்து ஆயரின் ஆன்கள ஈந்த நெய் முழுவதையும, தொணடியில் விளைந்த வெண்ணெல் அரிசி முழுதையும ஆக்கிய சோற்றோடே கலந்து பல கலத்திலே ஊட்டினும் தகுந்த கைமமாறாகாது,' என்கின்றாள்

உ௧0. திண்டேர் நள்ளி கானத் தண்டார்
பல்லாப் பயந்த நெய்யிற் றொண்டி
முழுதுடன் விளைந்த வெண்ணெல்

வெஞ்சோ
றெழுகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி
பெருந்தோ ணெகிழ்த்த செல்லற்கு
விருந்துவரக் கரைந்த காக்கையது
பலியே.

—காக்கை பாடினியார் நச்செள்ளையார்.

(இ - ள்.) தலைவ! திண் தேர் நள்ளி கானத்து அண்டர் - திண்ணிய தேரையுடைய நள்ளி என்னும் வள்ளலுடைய





முல்லை நிலத்திலே வாழும் இடையர்களினது, பல் ஆ பயந்த நெய்யில் - பலவாகிய ஆக்கள உதவிய நெய் முழுதுடன், தொண்டி முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோறு - தொண்டி என்னும பேரூர் முழுவதும் ஒருசேர விளைந்த வெள் ளிய நெல்லரிசியானுய விரும்புதற்குக காரணமான சோறு முழு வதையும

கலந்து, எழுகலத்து ஏந்தினும - நாடோறும ஏழேழ் உண் கலங்களிலே ஏந்தி ஊட்டினும, என் தோழி பெருநதோள் நெகிழ்தத செல்லற்கு - தலைவியினது பெரிய தோள்களை மெலிவித்த துன்பததிற்கு உய்தியாக, விருந்து வரக் கரைந்த காக்கையது பலி - விருநதினா வருமாறு கரைநத அக்காக்கைக் கிடும் அப்பலி, சிறிது - சிற்றளவினதுவே ஆகும.

**விளக்கம** :—'நும் வருகையைக் காக்கை கரைந்த நன்னிமித்தத்
தாலே உணர்ந்து தலைவி ஆற்றியிருந்தனள்; என்னுடைய தேற்றுரையானன்று,' என்று தோழி தலைவனுக்குக் கூறினள் என்க.

நள்ளி - தமிழ வள்ளல எழுவருள் ஒருவன். இவன் வண்மையிற் சிறந்தவாறே வீரத்தினும்மேம்பாடுற்றிருநதமை தோன்றத 'திண் தேர் நளளி,' என்றாள்.

"..............................ஆர்வமுற்று,
உள்ளி வருநர் உலைவுநனி தீரத
தள்ளா தீயும் தகைசால் வண்மைக்
கொள்ளார் ஓட்டிய நள்ளி." (புறம் - கருஅ)

என்றும்,

"..............................கரவாது
நட்டோர் உவப்ப நடைப்பரி காரம்
முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்

துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு
நளிமலை நாடன் நள்ளியும்.'' (சிறுபாண் - ௧0௭-௭)

என்றும், பிறசான்றோரும் இவன் வள்ளன்மையோடு மறச் சிறப்பையும் சேர்த்தே புகழ்தலறிக

கானம் - காடு; முல்லைநிலம். நள்ளியின் காட்டில் வளமிக்கு ஆடரும் ஆனும் சிறந்தமையானே அவ் விடையர் ஆனின் நெய் மிகுதி என்பாள், 'நள்ளி கானத்து அண்டர் பல்லா பயந்த நெய்,' என்றாள். நெய்யில்: வேற்றுமை மயக்கம். நெய்யோடு என்க. தொண்டி முழு துடன் விளைந்த நெல் என்ற குறிப்பானே பல்லா முழுதுடன் பயந்த நெய்யென்றும் ஓதுக. சோற்றினும், வெண்ணெல் வெஞ்சோறு சிறந்ததாகலின் அங்ஙனம் கூறினள். காக்கையைத் தெய்வமாகக் கருதியிடுதலின் பலி என்றாள். தொண்டி - ஒரு சிறந்த பூதூர். ஒரு மூதூர் முழுதும் விளைந்த நெற் சோற்றையும், நெய்யையும் எழுகலத் தேந்தல் இயலாதாகலின் நாடோறும் எவ் வேழு கலங்களிலே ஏந்தி னும் என்றும். தெய்வத்திற்கு மடை கொடுப்போர் ஒன்று மூன்று

## மூலமும் உரையும்

௲0௭

ஐந்து எழு என்னும் ஒற்றை எண்பட்ட கலங்களில் இடுதல் மரபாக லின் அக் கலங்களின் பேரெல்லையாகிய ஏழு கலம் கூறினள்.

செல்வல் - துன்பம் - செல்லற்குக் கரைந்த என்றது நோய்க்கு மருந்தென்றாற்போல வந்தது. செல்லற்குத் தீர்வாகக் கரைந்த என்க. தீர்வு - விருந்து வருதல். காக்கை இல்லத்திருந்து கரையின் விருந்து வரும் என்பது ஒரு நம்பிக்கை.

தலைவ! தலைவியை ஆற்றுவித்தாரைப்
கையே பாராட்டற்பாலது என்றவாறு.

பாராட்டவேண்டிற் காக்

"காலத்தி னாற்செய்த நன்றி,"
பெரிய பலியும் சிறிதாயிற் றென்க

யாகலின் காக்கைக்கு இத்துணைப்

## பாட்டு - உகக: தோழி கூற்று

துறை —இடைச் சுரத்துக் கவலுவன கண்டு, 'நம்மை
ஆற்றூர்,' என நினைந்து, 'மீள்வர் கொல்?' எனக் கவன்ற கிழத்திக்குத் தோழி சொல்லியது. அஃதாவது, தலைவன் பொருள் வயிற் பிரிந்து சென்றபின்னர், அவன் செல்லுகின்ற வழியின் கண்ணே துணை பிரிந்து வருந்தும பறவை விலங்கு முதலியன கண்டு, 'யாமும் அங்ஙனம் வருந்துவோம்,' என்று கருதி, 'மீள்
வனோ?' என்று கவன்ற தலைவிக்கு,
னல்லன்,' என்று தோழி கூறியது.
'அவன் அங்ஙனம் மீள்வா

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'நீரில் வைப்பிற் சுரன் இறந்த வரோ என்று நந்தலைவா, நம்மை ஆற்ருர் எனக் கருதி மீள் நீ அஞ்சவேண்டா, நம்மைப் பிரிந்து செல்லத் துணிந்து போனவர், அங்ஙனம் மீள்வர் என்று நினைத்தல் எங்ஙனம்?' என்று கூறுகின்ருள்.

உகக. அஞ்சி லோதி யாய்வளை நேகிழ
நேர்ந்துநம் அருளார் நீத்தோர்க் கஞ்சல்
எஞ்சினம் வாழி தோழி யெஞ்சாத்
தீய்ந்த மராஅத் தோங்கல் வெஞ்சினை
வேனி லோரிணர் தேனோ டூதி
ஆராது பெயருந் தும்பி
நீரில் வைப்பிற் சுரனிறந் தோரே.

—**காவன்முல்லைப் பூதனர்.**

(இ-ள்.) தோழி—, எஞ்சாத் தீய்ந்த மராஅத்து ஓங்கல் வெஞ்சினை வேனில் ஓர் இணர் - எஞ்சி நின்ற வேனிலால் வெம்பிய மராமரத்தினது உயர்தலையுடைய வெவ்விய கிளையின்கண்

வேனிற்காலத்தே மலர்ந்த ஒற்றைப் பூங்கொத்திற் றேனை,
தும்பி தேனொடு ஊதி ஆராது பெயரும் - தும்பி என்னும் வண்டு தேன் என்னும் வண்டுடனே ஊதி அதன்கண் தேனின் மையின் உண்டு நிரம்பாது வறிதே மீளாநின்ற, நீர் இல் வைப்பில் - நீரில்லாத இடங்களையுடைய, சுரனிறந்தோர் - பாலை நிலத்தைக் கடந்து சென்றவரும, அஞ்சில் ஓதி ஆய் இழை நெகிழ - அழகிய சிலவாகிய கூந்தலையுடைய நின்னுடைய அழகிய வளைகள் நெகிழும்படி, நோநது நம் அருளார் நீத்தோர்க்கு - உடப்பட்டு நமமை அருளாது பிரிந்தோருமாகிய தலைவர் பொருட்டு, அஞ்சல் எஞ்சினம் - அஞ்சுதலைத் தவிர்ந் தோம்.

**விளக்கம்:**—அம் சில் ஓதி - அழகிய சிலவாகிய கூந்தல். கூந்தல் ஐந்து பகுதியாக ஒப்பனை செய்யப்படுதலால் சில் லோதி என்றாள். தாம் பிரிந்தவுடன் நின் வளை நெகிழும் என்பது அறிந்து வைத்தும் அருளின்றிப் பிரிந்த வன்கண்ணா இடைசசுர மருஙகில் நம்மை நினைந்து மீள்வர் என்று நினைதலும் வருந்துதலும், 'பேதைமை,' என்பாள், 'அஞ்சல் எஞ்சினம்,' என்றாள். எஞ்சினம் - தவிர்ந்தேம்.

எஞ்சாச வினை, தீய்ந்த மராத்துச வினை எனத் தனித்தனிக் கூட்டுக. எஞ்சா, செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினை யெசசம் ; தீய்ந்த மராதரில் தீயாது எஞ்சிய வினையில்

மலர்ந்த ஒற்றை
இணர் என்க. தேன் - ஒருவகை வண்டு, தும்பி - ஒருவகை வண்டு, இருவகை வண்டும் பசி மிகுதியால் தம்முட் போர் செய்யாமல் ஒத்து ஊதின என்க. ஊதியும் பசி தீராது வறிதே மீளும் என்பாள், 'ஆராது பெயரும்,' என்றாள். ஆராது - வயிறு நிரம்பப் பெறாது. பசியோடே என்றவாறு.

ஒரு தும்பிக்கும் தேன் கிடைக்கப்பெறாத வறிய பாலை நிலத்தே செலவத்துணிதல் பொருளீட்டற்கண் உள்ள ஊக்கத்தானே யாகலின், அத்துணை ஊக்கமுடையோர் இடைச்சுரத்தே மீளமாட்டார் என்னும் ஏதுவானும், நம்மியல் தெரிந்தும் நமக் கருளாது பிரிய வல்லுநர் இடைச்சுரத்தே கவல்வன கண்டு மீளார் என்னும் ஏதுவானும், 'யாம் அவர் இடைச்சுர மருங்கில் நீள்வரோ,' என்று கவல வேண்டா என்பாள், இரண்டு ஏதுக்களும் கூறி, 'அஞ்சல் எஞ்சினம்,' என்றாள் என்க.

தலைவி அங்ஙனம் அஞ்சுதலைக் குறிப்பானறிந்த தோழி அஃதறியாதாள்போல, அதற்கு அஞ்சவேண்டாமை உணர்த்தியவாறு.

# பாட்டு - உகஉ : தோழி கூற்று

துறை :—குறை நேர்ந்த தோழி, குறை நயப்பக் கூறியது. அஃதாவது, தலைவியைக் கூட்டுவித்தற்பொருட்டுத் தோழியினிடம் தலைவன் வேண்டிக்கொண்டானாக, அதற்கிணங்கிய தோழி தலைவியின்பால் வந்து தலைவனை ஏற்றுக்கொள்ளும்படி கூறியது.

## மூலமும் உரையும்

நூ௦௬

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'கொண்கனுடைய நெடுந்தேர் மணி யொலிக்கும்படி காண வந்து நாணப் பெயரும், காமம் இரங்கத்தக்கது; அஃது அழியக் கடவது; யான் தலைவன் நிலை கண்டு இரங்குகின்றேன்,' என்று கூறுகின்றாள்.

உகஉ. கோண்கன் ஊர்ந்த கொடுஞ்சி நெடுந்தேர்
தெண்கட லடைகரைத் தெளிமணி யொலிப்பக்
காண வந்து நாணப் பெயரும்
அளிதோ தானே காமம்
விளிவது மன்ற நோகோ யானே.

—நெய்தற் கார்க்கியன்.

(இ - ள்.) தோழி—, கொண்கன் ஊர்ந்த கொடுஞ்சி நெடுந்தேர் - தலைவன் ஊராநின்ற கொடுஞ்சியையுடைய நெடிய தேர், தெண் கடல் அடை கரைத் தெளிமணி ஒலிப்ப - தெள்ளிய நீரையுடைய கடலை யடைந்த கரையின் கண்ணே, காண வந்து நாணப் பெயரும் - யாம் காணும்படி வந்து பின்னர் யாம் நாணும்படி மீளாநிற்கும், காமம் அளிது - இங்ஙனம்

தலைவனை அலைக்கும் காமநோய் இரங்கத் தக்கது, மன்ற விளிவது - அது தேற்றமாக அழியற்பாலதொன்றாம, யான் நோகு - யான் அவனிலையை எண்ணி வருந்தாநின்றேன்.

விளக்கம் .—கொண்கன் - தலைவன் ; நெய்தனிலத தலைவன்.

கொடுஞ்சி - தாமரைமுகை வடிவிற் செய்து தேர் முகப்பே நடப் படுவதோர் உறுப்பு. இதனைத் தேரூருந தலைவர் கையாற் பற்றிக் கொள்வர் என்பது, "மணித்தேர்க் கொடுஞ்சி கையாற பற்றி," (௪-௪அ) என வரும் மணிமேகலையானும் உணரலாம். தம்பால் குறையிரந்து வந்தோர் அது பெறாமல் வறிதே மீள்வது சான்றோர்க்கு நாணுத் தருவ

தொன்றாகலின், 'காண வந்து நாணப் பெயரும்,' என்றாள். பன்னாளும் இஙஙனமே வந்து வறிதே மீள்பவன் மீணடும் வருதலை எண்ணின், அவன் மனத்துறையும் காமநோய் எத்தகைய கொடுமை யுடையதோ என்று இரஙகுகின்றேன் என்பாள், 'காமம் அளிது,' என்றாள் "செற் றார்பின் செல்லாப் பெருந்தகைமை," காமத்திற் கின்றாகலான், அது அளித்தென்றவாறு.

"செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
எற்றென்னை யுற்ற துயர்." (குறள் - ௧௨௫௬)

என்னும் திருக்குறளையும நினைவு கூர்க.

இங்ஙனம் அவன் நிலை நீடுமாயின் அவன் இறந்து படுவன் என் பாள், இறந்துபாட்டைக் காமத்திற்கேற்றி, 'மன்ற விளிவது,' என்றாள். மன்ற - தேற்றப் பொருளது. இங்ஙனமாகலின், 'யான் பெரிதும் வருந்துகினறேன்' என்பாள், 'யான் நோகு' என்றாள். நோகு: தன்மை ஒருமை வினைமுற்று. ஆகலின் தலைவனை இந்நிலைக்கண் நீடிக்கவிடாது நீ ஏற்றுக் கோடல் வேண்டும் என்பது குறிப்பு.

## பாட்டு - உ௪௬ : தோழி கூற்று

துறை :—'நம்பெருமான் நம் பொருட்டு இடைநின்று மீள்வர்' எனக் கவன்ற தலைமகட்குத் தோழி உரைத்தது. அஃதாவது, வினைவயிற் பிரிந்து சென்ற தலைவர், நம்நிலை யுணர்வராகலின், தாம் மேற்கொண்ட வினையின்கட் செல்லாது இடையில் மீண்டு விடுவரோ என்று கவலை கொண்ட தலைவிக்கு அவர் அங்ஙனம் மீளார் எனத் தோழி கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'நந தலைவர் சென்ற பாலைநில வழியின்கண், ஆண்மான் தன் குட்டிக்குத் தன் கடமையை வழுவாது செய்வதைக் காண்பர் ஆகலின், அக்காட்சியே அவரைக் கடமையின்கண் ஊக்க, அவர் தம வினை முற்றியே மீளவர்; நீ கவலறக!' என்று தேற்றுகின்றாள்.

உ௪௬. நசைநன் குடையர் தோழி ஞெரேரெனக்

கவைத்தலை முதுகலை காலின் ஒற்றிப்
பசிப்பிணிக் கிறைஞ்சிய பரூஉப்பெருந்

ததரல்

ஒழியின் உண்டு வழுவி னெஞ்சிற்
றெறித்து நடை மரபிற்றன் மறிக்குநிழ

லாகி

நின்று வெயில் கழிக்கு மென்பநம்
இன்றுயின் முனிநர் சென்ற வாறே.

—கச்சிப்பேட்டுக் காஞ்சிக் கொற்றனார்.

(இ - ள்) தோழி—, நசை நன்கு உடையர் - தலைவர் நின்பால் விருப்பம் மிகவும் உடையராயினும், நம இன் றுயில் முனிநர்-நின் தோளின்கண் துயிலும் இனிய துயிலையும் கடமை நினைந்து வெறுத்தனராய், சென்ற ஆறு - நம்மைப் பிரிந்து சென்ற பாலைநில வழியின்கண், ஏரோனக் கவைததலை முது கலை காலின் ஒற்றி - விரைந்து கவைதத கொம்புகளையும் தலையையுமுடைய முதிய ஆண்மா ன் தனது காலாலே உதைத்து, பசிப்பிணிக்கு இறைஞ்சிய பரூஉட் பெருந்ததரல்-பசிநோயைத் தீர்க்கும் பொருட்டு வளைத்த பரிய பெரிய

மரப்பட்டையினை, ஒழியின் உண்டு - தன் குட்டி உண்டெஞ்சியதனைப் பின்னர்த்
தான் உண்டு, வழு இல் நெஞ்சின் - குற்றமற்ற நெஞ்சினோடே, தன் தெறித்து நடைமரபின் மறிக்கு நிழலாகி நின்று வெயில் கழிக்கும் என்ப - தன்னுடைய துள்ளிய நடையினையுடைய இயல் பிற்றாகிய குட்டிக்கு நிழல் உண்டாகுமாறு நின்று அதன் மேற்படும வெயிலைப் போக்கும் என்று கூறுவர்.

## மூலமும் உரையும்

கூகக

**விளக்கம்:**—'தலைவர் நின்பாற் கொண்ட விருப்பம் ஒன்றனையே கருதி, நீ, இடையின் மீள்வரோ? என்று கவல்கின்றனை; அவர் அத் தகைய நசையுடையரே' என்பாள், 'நசைநன்குடையர்' என்றாள். நசையினும் கடமை பேணல் பெரிதும் உடையர் என்பாள், 'நம் இன் றுயில் முனிநர்' என்றாள். என்னை? ஒப்பற்ற பேரின்பமாகிய நின் றோட் டுயிலையும் முனியச செய்தது, 'வினையே ஆடவர்க் குயி'ரென்னும் தங கடமை உணர்சசியின் தூண்டுதலேயாம் என்றவாறென்க மேலும் இடைசசுரததேயும் இக்கடமையை வலியுறுத்தும் காட்சியையும் பெறு வராகலின், ஊக்கந்தளராது வினைமேற் செவ்வர் என்பாள், 'ஆற்றின் கண் கலைமான் தன்மறிக்குப் பட்டையுரித்துண்ணக் கொடுத்து வெயிற்

குத் தன்னிழலையே கொடுத்தளிக்கும் என்ப' என்றாள். இக்காட்சியும் பண்டு தலைவரே சொல்ல யாம கேட்டிருநதே மல்லமோ என்பாள், 'என்ப' என்றாள்.

நும்மிருவர்க்கும் பொதுவினின்ற நசையினும்

தாிமையுடைய
தமக்கே சிறந் ஆகலின், அவர்
கடமையுணர்ச்சியிற் குறைந்தவரல்லர் நந்தலைவர் இடைநின்று மீள்வர் எனக் கவலவேண்டா என்று ஆற்றுவித்த வாறும்.

நசை - விருப்பம் ஒருரோனை-விரைவுக குறிப்பு. கவைத்தலை- கவர்த்த கொம்புகளையுடைய தலை முதுகலை - அகவை முதிர்ந்த ஆண்மான் ஒற்றி - உதைத்து. இறைஞ்சிய - வளைத்த. ததரல்- சிதைந்த மரப்பட்டை. தன்குட்டியை முன்னா ஊட்டி ஒழிந்த துண

ணல் அறமாகலின், 'வழுவில் நெஞ்சின்' என்றாள். மறி - குட்டி. நிழலாகி நின்று - தன் உடல் நிழல் குட்டிககு ஆகும் படி வெயிலை மறைத்து நின்றென்க. தாஎ வருந்தியும கடமை பேணற்கு இது நல்ல எடுத்துக் காட்டாதல் அறிக. தலைவர் நசையால் வருந்தியும தங்கடமையை வழுவாது செய்வர் என்றுணர்த்தியவாறு.

"தாம்வீழ்வார் மென்றோட் டுயிலின் இனிது கொல்
தாமரைக கண்ணா னுலகு" (குறள் :- ககப௫)

என்பவாக லான், ஈண்டுத் தலைவி தோட்டுபிலை நம் இன்றுயில் என்றாள் தலைவியோடு தனககு வேற்றுமை கருதாது 'நம் இன்றுயில்' எனறாள எனக.

## பாட்டு - உகச : தோழி கூற்று

துறை :—தோழி வெறியாட்டெடுத்துக் கொண்ட விடத்து அறத்தொடு நின்றது. அஃதாவது, தலைவி இயற்கைப்புணர்ச்சிக்குப்பின் இடையூறுகளால் தலைவனைக் காணப்பெறாது மெலிந்தமையைச் செவிலி தெய்வத்தான் வந்ததெனக் கருதி, வேலற்கு வெறியாட்டெடுத்த பொழுது,'தலைவியின் மெலிவு தெய்வத்தான் ஆயதன்று; ஒருதலைவனால் ஆய' தெனத் தோழி செவிலிக்கு அறிவித்தது

இதன்கண், 'தலைவியின் மெலிவிற்குக் காரணமான தழையுடையைத் தலைவிக்கு ஈந்த செயலை மரம் வாளா நிற்க, அவள்

ரு கஉ குறுந்தொகை

நோயோடு யாதும் தொடர்பிலாத பிறிதொன்றற்கு மாலை சூட்டி இவ்வூர் மயங்கா நின்றது' என்று, தோழி செவிலி கேட்பக் கூறுகின்றாள்.

உகச. மரங்கோல் கானவன் புனந்துளர்ந்து வித்திய

பிறங்குகுரல் இறடி காக்கும் புறந்தாழ்
அஞ்சி லோதி அசையியற் கொடிச்சி
திருந்திழை அல்குற்குப் பெருந்தழை
உதவிச்
செயலை முழுமுதல் ஒழிய அயல
தரலை மாலை சூட்டி
ஏமுற் றன்றிவ் வழுங்க லூரே.

—கூடலூர்கிழார்.

(இ - ள்.) மரங்கொல் கானவன் புனம் துளர்ந்து வித்திய- மரங்களை வெட்டி அழித்த குறவன் கொல்லையைக் கொத்தி விதைக்கப்பட்ட, பிறங்கு குரல் இறடி காக்கும - விளங்குகின்ற கதிரையுடைய தினையைக் காவல் செய்யாநின்ற, புறம் தாழ் அம் சில் ஓதி அசை இயல் கொடிச்சி - முதுகிலே சரிந்துகிடக் கும் அழகிய சிலவாகிய கூந்தலையும் கட்புலனுகியியக்கும சாய லினையும உடைய தலைவியினது, திருந்து இழை அல்குற்குப் பெருந்தழை உதவி-திருந்திய அணிகலனையுடைய அல்குலுக்கு இயையப் பெரிய தழையுடையை அளித்து, செயலை முழுமுதல் ஒழிய - அசோக மரமாகிய பரிய மரம் தன்கட்குப் புலனுகாது

ஒழியாநிற்ப, இவ்வாழங்கள் ஊர் - இவ்வா ரவாரத்தையுடைய ஊர், அயலதா அரலை மாலை சூட்டி - தலைவியோடு அயன்மை யுடைய மறறொரு மரத்திற்கு அரலை மலா மாலையை அணிந்து, ஏமுற்றன் று - மயஙகா நின்றது

**விளக்கம் :—** தலைவியின் மெலிவிற்குக் காரணம் இன்னதென்று அறியாது இவ்வூர் மயங்கி வெறியாடா நின்றது, என்றவாறும்.

மரங் கொல்லுதல் - மரங்களை வேரோடு களைந்தழித்தல். குறிஞ் சிக்கண் தினைப்புனம் பண்படுத்தும் குறவர் ஆண்டுள்ள மரஙகளை வெட்டி அழித்துப் பின்னர்க் கொத்திப் பண்படுத்தி விதைப்பது மர பாகலின், 'மரங்கொல் கானவன் புனம் துளர்ந்து வித்திய இறடி' என்றாள். இறடி - தினை. தினை, கதிரீன்ற பின்னரே கிளிகடிதல் இயல் பாகலின், 'பிறங்கு குரல் இறடி காக்கும் கொடிச்சி' என்றாள். கொடிசசி - குறிஞ்சிநிலப் பெண். ஈண்டுத் தலைவி என்னும் பொருட்டு. தலைவி, தினைப்புனம் காக்குமிடத்தே ஒருதலைவனை மணந் தாள் என்பதுணர்த்தற்கு 'இறடி காக்கும் கொடிசசி அல்குற்குப் பெருந்தழை யுதவி' என்றாள். தலைவன் அசோகந் தழையுடை அளித் தமையை அசோகின் செயலாக்கி, 'செயலை தழை உதவி ஒழிய' என் றாள். தழையுதவியதே தலைவி மெலிவிற்குக் காரணமாதலை ஊரவர்

## மூலமும் உரையும்

ரு கரு

அறிந்திலார் என்பாள், 'உதவி ஒழிய' என்றாள்; ஒழிய என்றது, காணப் படாது மறைய என்றவாறு. செயலை பெரிய மரமாயிருந்தும், அது உதவிய உடை பெருந்தழையாயிருந்தும், காணப் படாமையின் 'முழு முதல் ஒழிய' என்றாள். முழுமுதல் என்பதற்கு முழுமரமும் என்க. உணர்வாரேல் தழையுதவிய தலைவர்க்குத் தலைவியை மாலை சூட்டுவிக்க முயல்வார் மன்' உணராமையாலே தொடர்பிலாத பிறிதோர் மரத்திற்கு மாலை சூட்டலாயினர் என்பாள், 'அயலது அரலை மாலை சூட்டி' என்றாள். அயலது என்றது, ஈண்டுக் கடப்பமரத்தை. வெறியாடுவார் அதற்கே மாலை சூட்டுதல் மரபாகலின் என்க.

அயலது என்றற்கு "முருகனுக்கு" என்பாரு முளர். அரலை-அரளி. ஏமமுற்றன்று என்பது ஏமுற்றன்று என்று விகாரப்பட்டு நின்றது. ஏமம் - மயக்கம்; "ஏமுற்றவரினும் ஏழை" (திருக்குறள்-அஎ௫) என்புழிப் பரிமேலழகர், ஏமுற்றார் - பித்துற்றவா என்று உரை கூறுதல் அறிக. ஊர் என்றது, செவிலியை.

இதனால் தலைவிக்குத் தழைபுடை நல்கிய தலைவன் ஒருவனுளன்; அவனாலாயது இம்மெலிவு; தெய்வத்தாலாயதன்று, எனக் குறிப்பா னுணாததபபடடமை உணாக.

## பாட்டு - உரு : தோழி கூற்று

துறை :—பிரிவிடைக் தோழி வற்புறு கநியது அஃதாவது, தலைவன் பிரிந்திருந்த காலத்தே ஆற்றாமை எய்திய தலைவியைத் தோழி ஆற்றுவித்தது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'நீ வருந்தாதே கொள் ! இனறே தலைவா மீண்டுவருவதாகக் கூறிச்சென்ற நாளாகும்; ஞாயிற்று மண்டிலமுட மறையாநின்றது ; பிரிந்த

தலைவா இப்பொழுதே வந்துவிடுவர்,' என்று கூறுகின்றாள்.

உகரு படரும் பைப்பயப் பெயருஞ் சுடரும்
என்றூழ் மாமலை மறையும் இன்றவர்
வருவர்கொல் வாழி தோழி நீரில்
வறுகயந் துழைஇய விலங்குமருப் பியானை
குறும்பொறை மருங்கின் அமர்துணை
தழீஇக்
கோடுவரி இரும்புலி காக்கும்
நெடுவரை மருங்கிற் சுரனிறந் தோரே.
—மதுரை அளக்கர்ஞாழார் மகனார் மள்ளனார்

(இ - ள்.) தோழி -, வாழி-, படரும் பைப்பயப் பெயரும்-நினது பிரிவாற்றாத் துன்பமும் நின்னைவிட்டு மெல்லமெல்லக் கழியா நிற்கும், சுடரும் என்றூழ் மாமலை மறையும்-ஒளிர் இன்ற ஞாயிறும் பெரிய மலையிடத்தே சென்று மறையாநிற்கும் ஆகலின்,

நீர் இல் வறு கயந் துழைஇய இலங்கு மருப்பு யானை-நீர் இல்லாத

வறிய குளத்தைத் துழாவிய விளங்குகின்ற கொம்புகளையுடைய யானை, குறும்பொறை மருங்கின் அமர் துணை தழீஇ - சிறிய மலையின் பக்கத்தே தன்னால் விரும்பப்பட்ட பெண் யானையைத் தழுவிக்கொண்டு,

கோடுகளையுடைய கொடுவரி இரும்புலி காக்கும் - வளைந்த பெரிய புலி தாக்காமல் பாதுகாவாநின்ற,

நெடுவரை மருங்கில் சுரன் இறந்தோர் - நெடிய மலைப்பக்கத்ததாகிய பாலையைக் கடந்து சென்றவராகிய, அவர் இன்று வருவர் - நந்தலைவர் இன்றே வருவர்.

**விளக்கம்:**—படர் - பிரிந்தோர் துணைவரை இடையறாது நினைந்து வருந்தும் துயர். பைப்பய - மெல்லமெல்ல. பெயர்தல் - நீங்குதல். சுடரும் - ஒளிர்கின்ற. என்றூழ் - ஞாயிறு மாமலை - ஞாயிறு மறைதற்கிடமான பெரிய மலை என்க. தலைவர் மீண்டு வருதற்குக் குறித்துச் சென்ற நாள் இன்றேயாகலின், 'இன்று வருவர்' என்றாள் என்க. கொல் - அசை. நீரில் வறுங் கயத்தைத் துழவிய களிற்று யானை குறும்பொறை மருங்கில் பிடியைப் புலி தாக்காமல் காக்கும் என்றது, பொருள்நிமித்தம் வறிய பாலைநிலத்தே சென்ற தலைவர் விரைவில் மீண்டுவந்து நின்னைப் பிரிவுத்துன்பம் வருத்தாமல் அருளுவர் என்னும் குறிப்பிற்று. குறும்பொறை - சிறுமலை; குண்டுக்கல்லுமாம். அமர்துணை - விரும்புதற்குக் காரணமான பிடியானை. தழீஇ - தழுவி. பிரிவுத் துன்பத்திற்குக் கொடுவரி இரும்புலி உவமை. நெடுவரை மருங்கிற் சுரன் என்றது, குறிஞ்சி திரிந்த பாலையை. தலைவர் இன்று வருவர் என்று ஆற்றுவித்தபடியாம்.

## பாட்டு - உகசு : தலைவி கூற்று

குக்

துறை:—பருவ வரவின்கண் ஆற்றாளெனக் கவன்றதோழிக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, தலைவன் மீண்டு வருவன் எனக் குறித்த காரப்பருவம் வந்த பின்னரும தலைவன் வாராமையால் ஆற்றாளாய தலைவியைக் கண்டு தோழி வருந்தினளாக, அவளை நோக்கித் தலைவி கூறியது.

இதன்கண், தன்னிலை கண்டு கவன்ற தோழியை நோக்கித் 'தலைவி, நந்தலைவரோ சிறந்த பொருளீட்டலைக் கருதிப் பிரிந்து போயினர் ; அவரை நினைந்து நினைநது நான் வருந்தாநின்றேன்; இவ்வமயத்தே, மழையோ எனக்கு இரங்காது என் உயிர் குறித்து மின்னு நின்றது; யான் எங்ஙனம் ஆற்றுகேன்?' என்று கூறுகின்றாள்.

உகசு. அவரே, கேடில் விழுப்பொருள் தருமார்
பாசிலை

வாடா வள்ளியங் காடிறந் தோரே
யானே, தோடார் எல்வளை நெகிழ ஏங்கிப்
பாடமை சேக்கையிற் படர்கூர்ந் திசினே

கரு

அன்னள் அளியள் என்ஞது மாமழை
இன்னும் பெய்ய முழங்கி
மின்னுந் தோழியேன் இன்னுயிர் குறித்தே.

—கச்சிப்பேட்டுக் காஞ்சிக் கொற்றனூர்.

(இ - ள்.) தோழி—, அவரே கேடு இல் விழுப்பொருள் தருமார் - நந்தலைவரோ கேடில்லாத சிறந்த பொருளைக் கொணரும்பொருட்டு, பாசிலை வாடா வள்ளியங் காடு இறந்தோர் - பசிய இலைகளையுடைய வாடாத வள்ளிக்கொடி படர்ந்த காட்டைக் கடந்து சென்றூர், யானே தோடு ஆர் எல்வளை நெகிழ ஏங்கிப் பாடு அமை சேக்கையில் படர்கூர்ந்திசின் - யானோ தொகுதிபொருந்திய ஒளியையுடைய வளையல்கள் நெகிழும்படி கவலையுற்றுப் படுத்தலமைந்த படுக்கையின்கண்ணே கிடந்து அவரை நினைந்து வருத்தம் மிகாநின்றேன், மாமழை - கரிய முகில், அன்னள் அளியள் என்ஞது - அத்தகைய துனபநிலையினள் இரங்கததக்காள் என்று கருதாது, என் இன்

உயிர் குறித்து - எனது இனிய உயிரைக் கொள்ள எண்ணி, பெய்ய முழங்கி மின்னும் - மழைபெய்தற்கு முழங்கி மின்னுதலைச் செய்யா நிற்கும்; யான் என்செய்கேன்.

**விளக்கம்** :—அவர் : நெஞ்சறிசுட்டு. கேடில் விழுப்பொருள் என்றது, குறிப்பு மொழி. நிலையுதலற்ற பொய்ப்பொருள என்பது கருத்து. தருமார் - கொணர்தற் பொருட்டு வள்ளியங்காடு - வள்ளிக்கொடி படர்ந்த காடு ; அம் - சாரியை; அழகிய காடுமாம் தோடு - தொகுதி. வளை நெகிழ்தல், உடன்மெலிவா னிகழ்ந்ததென்க. பாடு அமை சேக்கை - ஐந்துவகைப்படப் படுத்தலமைந்த படுக்கை ; அவை யாவன—" சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேணம், உறுதூவி சேக்கையோ ரைந்து " என்பன. படர் கூர்தல் - நினைவுத்துன்பம் மிகுதல். இசின் - அசைநிலை. அன்னள் என்னுது என்றது, துணையிலள் பெண் துன்புறுநிலையினள் என்று இரங்காமல் என்றவாறு. பகைவரும் இததகையோர்க்கு அருளுதல் இயல்பாகவும் அருட்டொழிலே உடைய மழை இரங்காதாயிற்று என்றிரங்கியவாறு. மாமழை - சிறந்த மழையுமாம். முன்னர்ப் பெய்ததோ டமையாது பின்னரும் பெய்யும் என்பாள், 'இன்னும் பெய்யும்' என்றாள் 'பெய்ய முழங்கி மின்னும்' என்றது, என் உயிர் கோடற்குத் தன்னுலாய எல்லா உபாயங்களானும் முயலாநின்றது என்றவாறு. பெய்ய முழங்கி மின்னுதலால், 'என்னுயிர் கவர முயலும்' என்றாள் என்க.

## பாட்டு - உகஎ : தோழி கூற்று

துறை:—உடன்போக்கு நயப்பத தோழி தலைமகட்குக் கூறியது அஃதாவது, இற்செறிப்பு முதலிய காவன்மிகுதி யானே இடையூறு மிக்கவழித், தோழி தலைவியைத தலைவனோடு



போக்குதலன்றி வேறு வழியின்மைகண்டு, 'தலைவனோடு நீ செல் லக் கடவை' என்று குறிப்பாற் றலைவிக்குக் கூறியது.

இதன்கண், தலைவியை நோக்கி, "யான் பகற்குறி, இரவுக் குறிகட்கு நேரும் இடையூறு எடுத்தோதி, 'இனி யாம் செய்வ தென்?' என தலைவனை வினவினேன்; அப்பொழுது அவன் உடன்போக்கினை உட்கொண்டவனாய்க் கூறமாட்டாது நெட்டு யிர்ப்பெய்தினன்; அக்குறிப்பறிந்த யான். அங்ஙனம் செய்தல் பழிக்கிடனாயினும, அறிவுக்குப் பொருந்துவதேயாம் என்று என் உடம்பாட்டையும் உணர்த்தினேன்" என்று தோழி கூறு கின்றாள்.

உ௧எ. தினைகிளி கடிகேனிற் பகலும் ஒல்லும்

இரவுநீ வருதலி னூறு மஞ்சுவல்

யாங்குச் செய்வாமெம் இடும்பை

நோய்க்கென

ஆங்கியான் கூறிய அனைத்திற்குப்

பிறிதுசெத்

தோங்குமலை நாடன் உயிர்த்தோன்

மன்ற

ஐதே காமம் யானே

கழிமுதுக் குறைமையும் பழியுமேன்

றிசினே.

—தங்கால் முடக்கொல்லனார்.[1]

(இ - ள்.) தோழீ—, தினை கிளி கடிக என்னில் பகலும் ஒல்லும் - தினையின்கட் படியும் கிளிகளை ஓட்டுக என்று அன்னை ஏவுவாளாயின் பகற்பொழுதினும நின்னை யாங்கள் காண்டல் கூடும், இரவு நீ வருதலின் ஊறும் அஞ்சுவல் - அஃதின்மையின் நீ இராக்காலத்தே வருதலால் நினக்கு வழியிடையூறுகள் உண்டாம் என்று யான் அஞ்சுகின்றேன், யாங்குச் செய்வாம் எம இடுமபை நோய்க்கு என - இங்ஙனமாதலின் எவ்வாறு பரிகாரம செய்வோம் யாமுற்ற துன்பமாகிய காமநோய்க்கு என்று,

ஆங்குயான் கூறிய அனைத்திற்கு - அங்ஙனம் யான் சொன்ன அதற்கு, ஓங்கு மலை நாடன் பிறிது செதது உயிர்த்தோன் - உயர்ந்த மலை நாட்டையுடைய தலைவன் இந்நிலைக்குப் பரிகாரமா கும் வேறொன்றினைக் கருதி அது கைகூடுங்கொல் கூடாது கொல் என்று அயிர்த்து வெய்துயிர்த்தான், மன்ற காமம

ஐ.து-

தேற்றமாகக் காமம் நுண்ணிதாம் ஆதலின் அந்நுணுக்க நிலைவை நுண்ணிதின் அறிந்து, யான் கழி முதக்குறைமையும் பழியும் என்றிசின் - அச்செயல் மிக்க அறிவுடைமையும் பழியும் ஆவதாம் என்று கூறினேன்.

(பாடம்) 1. முடிக் கோவலனர்; முடக் கோவலனர்.

## மூலமும் உரையும்

கூகள

**விளக்கம்** :—தினை கிளி கடிகெனிற் பகலும் ஒல்லும் என்றது, அன்னை அங்ஙனம் எம்மை ஏவுவாளுமல்லள் ஆகலின், பகலும் ஒல்லா தாயிற்று என்பதுபட நின்றது. பகலும் ஒல்லும்-பகற் பொழுதும் யாம் அளவளாவப் பொருந்தும்; அஃதொல்லாமையினால் நீ இரவில் வரல் வேண்டிற்று; அதற்கும் அஞ்சுவல் என்பாள், 'இரவு நீ வருதலின் ஊறும் அஞ்சுவல்' என்றாள். ஊறு - விலங்கு முதலியவற்றானே வழியில் நேரும இடையூறு. இடும்பை நோய - இடையறாது துன்பஞ் செய்யும் காமநோய் என்க. யாங்கு - எவவாறு. செய்தல் - பரிகாரஞ்

தேடுதல். இதற்குப் பரிகாரங் காணுது அவனை வினவினேன் என்பாள், 'யாங்குச் செய்வாம் எம் இடும்பை நோய்க்கென வினவ' என்றாள். எனவே, உடன்போக்குதல் என் கருத்தன்று; தலைவன் கருததே என்றுணர்த்தினுளாயிற்று. அனைத்திற்கு - அவ்வளவிற்கு எனினுமாம். அவனுடைய கருத்து உயர்ந்ததே என்பாள், 'ஓங்குமலை நாடன்' என, உயர்ச்சியை அவன் மலைக்கேற்றிப் பாராட்டினுள். செத்து - கருதி. கருதியவன் சொல்லமாட்டாளுய் வருந்தினுன் என்பாள், 'உயிர்த்தோன்' என்றாள். உயிர்த்தல் - பெருமூசசெறிதல். இக கருத்திற்கு யாம் உடம்படுவோம் கொல்? படேங் கொல்? என அயிர்த்து வெய்துயிர்த்தான் என்றவாறு.

ஒருவர் உளக்கருத்தை மற்றொருவா கூறுமலே குறிப்பான் உணர வேண்டுவன பல, க ாமத்தின்கண்ணே வதிதலின், 'மன்ற ஐதே காமம்' என்று காமவியல்பு கூறினுள் யான் அவன் ...ண்ணிதின் அறிந்து கொண்டேன் என்பது கருத்து. கருதியதனை

தலைவன் கருதிய உடனபோககினை யல்லால இப்போது உய்தி பிறிதில்லை என்பாள், அக்கருத்துத் தோன்ற, 'நின் செயல் கழி முதுக் குறைமை' என்று பாராட்டினேன் என்றாள் எனவே, அறிவொடு பொருந்திய இச செயற்கு நீ உடமபடல் வேண்டும் என்பது குறிப்பு. அச செயலால் உண்டாகும் திமை அறிவிலிகளின் பழிச சொல் மட்டுமே என்றுணர்த்துவான், 'பழியும் என்றேன்' என்றாள். 'அறிவிலார் இழிப்பும் எடுத்தேத்தும் பொருளல; நீ தலைவனுடன போதலே அறிவுடைமை' என்று உணாத்தினள் என்க.

## பாட்டு - உகஅ : தலைவி கூற்று

துறை :—பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது. அஃதாவது தலைவன் பிரிந்துறைதலை ஆற்றாத தலைவிக்கு இரங்கிய தெய்வம் பராவுதல் முதலியவற்றால் அவள துயர் தணிக்கக் கருதிய தோழிக்கு அச்செயல்களால் யாது பயன் எனத் தலைவி மறுத்துக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி 'நம் உயிர்க்குயிரா யமைந்த தலைவர், ஓர் இமைப்பொழுதும் தம்மைப் பிரிந்து யாம் ஆற்றேமாதலை அறிந்து வைத்தும், அன்பொரீஇ ஆண்டே தங்கவல்ல வன்கண்ணராயின பின்னர், யாம் கொற்றவையைப் பராவுதல் முதலிய செயல்களைச் செய்வதனால் யாது பயன் உண்டாம்!' எனக் கூறுகின்றாள்.



உகஅ. விடர்முகை யடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்
கடனும் பூணுங் கைந்நூல் யாவாம்
புள்ளும் ஓராம் விரிச்சியு நில்லாம்
உள்ளலு முள்ளா மன்றே தோழி

உயிர்க்குயிர் அன்ன ராகலிற் றம்மின்
றிமைப்புவரை யமையா நம்வயின்
மறந்தாண் டமைதல் வல்லியோர்
மாட்டே.

—கொற்றனூர்.

நம்
(இ - ள்.) தோழி—, உயிாக்கு உயிர் அன்னர் ஆகலின் - உயிருக்கும உயிர்போன்றவா ஆகலின், தம் இன்று இமைபபுவரை அமையா நம் வயின் - தமமை இன்றி ஓர் இமைப் பொழுதளவேனும் பிரிநதிருத்தலைப் பொருந்தாத நம்மை, மறநது ஆண்டு அமைதல் வலலியோர் மாட்டு - மறந்துவிட்டு அவ்விடததிலேயே தஙகுதல் வன்மையுடைய தலைவர் திறத்தே, விடர் முழுகை அடுக்கத்து விறல் கெழு சூலிக்கு - வெடிப்பையும் முழைஞ்சினையுமுடைய மலைப்பக்கததிலுள் ள வெற்றிபொருந் திய கொற்றவைக்கு, கடனும பூணும் - பலிக்கடன் நேருதலும் செய்யோம், கைநூல் யாவாம - காப்புநூலும் கட்டிக் கொள்ளேம், புள்ளும ஒராம் - நிமித்தமும் ஆராயேம், விரிச்சி யும் நில்லாம - வாயப்புள் கேட்டற்கும் எதிாபார்த்து நிற்றலைச் செய்யேம, உளளலும் உள்ளாம் - இவையிற்றை

நினைத்தலும் செய்யேம்

**விளக்கம்** :—விடர் - பிளப்பு ; வெடிப்பு முழை - மலைமுழைஞ்சு. சூலி - சூலப்படையேந்திய கொற்றவை. மாமயிடற் செற்றாளாகலின், 'விறல் கெழு சூலி' என்றாள். விறல் - வெற்றி. படைத்தல் முதலிய ஐந்தொழிலினும் வெற்றி பொருந்திய சூலி எனினுமாம். கடன் - பலிக் கடன் : தலைவன் தீதின்றி வருதல் வேண்டும் எனப் பிரிந்த மகளிர் கொற்றவை முதலிய தெய்வங்களுக்குப் பலியிட்டுப் பராவுதல் வழக்கம்.

கைந்நூல் யாத்தல் - நோன்பு மேற்கொண்டு காப்புநூல் கையிற் கட்டிக் கோடல்: தலைவனைப் பிரிந்துறையும் மகளிர், நோன்புமேற் கொண்டு கைந்நூல் யாத்தல் மரபு. இதனை,

"பொலந்தொடி தின்ற மயிர்வார் முன்கை
வலம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து"

(கசக - உ.)

எனவரும் நெடுநல் வாடையானும் அறிக.

புள் - நன்னிமித்தம். விரிச்சி - நற்சொல். அஃதாவது, ஒன்று நன்றாமோ தீதாமோ என அறிய விரும்புவார் ஊர்ப்புறத்தே சென்று நெல்லும் மலரும் தூவித் தெய்வம் பரவி அயலிலே உண்டாகும் எதிரார் சொல்லை ஓர்ந்து நிற்பர்; அங்ஙனம் நின்றுழி அயலில் எழும் சொல்

மூலமும் உரையும்

ருகக

தங்கருத்திற்கு இயைபுடையதாய வழி நன்றாம் வழித தீதாம் என்றுங் கொள்வர் இதனை,

என்றும், முரணிய

" அருங்கடி மூதூர் மருங்கிற் போகி
யாழிசை இனவண் டார்ப்ப நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
அரும்பவிழ் அலரி தூஉய்க் கைதொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்பச்
சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்
உறுதுயர் அலமர நோக்கி யாய்மகள்
நடுங்குசுவ லசைத்த கையள் கைய
கொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர
இன்னே வருகுவர் தாயர் என்போள்
நன்னர் நன்மொழி கேட்டனம் அதனால்
நல்ல நல்லோர் வாய்ப்புள்," (எ - கஅ.)

எனவரும் முல்லைப்பாட்டுப் பகுதியானே

நன்குணரலாம்.

குலமகளிர்க்குக் கணவனே கடவுளாகலின், இறைவன் எவ்வுயிர்க்கும் உயிராதல் போன்று, அவர் உயிர்க்குக் கணவன் உயிர் ஆயினன் என்க. இமைப்புவரை - இமைக்குமளவுப் பொழுது. வல்லியோர் - வன்மையுடையோர்.

பாட்டு - உகக : தலைவி

கூற்று

துறை :—சிறைப்புறம். அஃதாவது தலைவன் சிறைப் புறத்தே வந்து நிற்றலை அறிந்த தலைவி, அவன் வருகையறியா தாள் போன்று தனது துன்பமிகுதியை அவன் உணரும் பொருட்டுத் தோழிக்குக் கூறுவாளாய்க் கூறியது.

இதன் கண், தலைவி தோழியை நோக்கி, 'என்மேனி முழுதும் பசலை பாய்ந்தது ; என் உள்ளம் நம்மை நயவாத தலைவரின் பாலது ; அடக்கமும் நில்லாது அழிந்தது ; அறிவோ தலைவர் பாற் செலக எனத் தூண்டாநின்றது; தலைவர் நம்மை அருளும் கருத்தினராயின் அருளுதற்கேற்ற செவ்வி இதுவேயாம்' என்று கூறுகின்றாள்.

உ௧௯. பயப்பென் மேனி யதுவே நயப்பவர்
நாரில் நெஞ்சத் தாரிடை யதுவே
செறிவுஞ் சேணிகந் தன்றே யறிவே
ஆங்கட் செல்கம் எழுகென வீங்கே
வல்லா கூறியிருக்கு முள்ளிலைத்

தடவுநிலைத் தாழைச் சேர்ப்பர்க்
கிடமற் றேழியெந் நீரிரோ வெனினே.

—வெள்ளூர்கிழார் மகனார் வெண்பூதியார்.

(இ - ள்) தோழீ-, பயப்பு என் மேனியது - பசலைநோய் என் மேனியின்கண்ணது, நயப்பு அவர் நார்இல் நெஞ்சத்து ஆர் இடையது - விருப்பமோ தலைவருடைய அன்பில்லாத நெஞ்சமாகிய செல்லற்கரிய இடத்தின் கண்ணது, செறிவும் சேண இகந்தன்று - என் அடக்கமுடைமையோ என்னை விட்டு நெடுந்தொலையில் நீங்கிற்று, அறிவு ஆங்கண் செல்கம் எழுகென - என் அறிவுதானும் தலைவர் இருக்குமிடத்திற்கே செல்வேம் இன்னே எழுக என்று, ஈங்கே வல்லா கூறி இருக்கும் - இவண் நம்மாற் செய்யவியலாத தொன்றனைச் சொல்லி என்னோடே இராநின்றது, முள் இலை தடவுநிலைத் தாழைச் சேர்ப்பர்க்கு - முள்ளையுடைய இலை பொருந்திய முடங்கிய நிலையினையுடைய தாழைகளையுடைய நெய்தனிலத் தலைவருக்கு, எந் நீரிரோ எனின் இடம் - என்னிலை இங்ஙனமாகலின் நீயிர் எத்தன்மையீர் என்று நம்மை உசாவி நங்குறைதீர்க்க நினையின் அதற்குத் தகுந்த செவ்வி இஃதேயாம்

**விளக்கம்** :—இந்நிலை நீங்கின் யான் அற்றேன் என்பது குறிப்பு.

பயப்பு - பசலை; துணைவரைப் பிரிந்த மகளிர் மேனியிற் றோன்றும் நிற வேறுபாடு. இத்தகையதோர் வேறுபாடு அவர்கண் இல்லையாகலின் ஆவன செய்ய முயன்றிலர் என்பது குறிப்பு. நயப்பு - விருப்பம். யாம் நயத்தல் பயனின்று அவர் நயப்பே வலியுடைத்து. அவர் நெஞ்சத்தே அன்பில்லையாதலான், அந்நயப்பும் பயனின்றாயிற்றென்றவாறு நார் - அன்பு. ஆரிடை - செல்லுதற்கரிய இடம். நயப்புத்தான் சேறலாகாத விடத்தேயுளது என்க. நயப்புச செல்லுதற்குரிய இடம் அன்புடை நெஞ்சம் என்க. அன்பின்மையால் அவர் நம்மைப் புறக்கணித்த விடத்தும் யாம் அடக்கமுடையம் எனின், வருந்தாதிருக்க வல்லேம் அவ்வடக்கமும் நம்மைக் கைவிட்டதென்பாள், 'செறிவும் சேணிகந் தன்று' என்றாள். முற்றும் அழிந்தொழிந்தது என்று இரங்கியவாறு. அறிவு - செற்றார் பின் சேறல் பெருமையன்று என்னுது அவர் இருக்குமிடத்திற்கேனும் யாம் சென்றுய்வேம் எழுதி! எழுதி! என இடையறாது என்னைத் தூண்டி வருத்தா நிற்கும் என்பாள், 'ஆங்கட் செல்கம் எழுகென வல்லா கூறியிருக்கும்' என்றாள்.

அன்பற்ற ஆடவனிருக்கைக்குப் பெண்டிர் வலிந்து சேறல் பீடன்றாகலின், அது நம்மாற் செய்யமாட்டாத தொன்றென்பாள், 'வல்லா கூறி' என்றாள். வல்லா - மாட்டாத. 'முள்ளிலைத் தடவுநிலைத் தாழைச் சேர்ப்பர்' என்றது, வருத்துமியல்பும் மனக்கோட்டமும் உடையன் என்னும் குறிப்பிற்று.

எந்நீரிர் - எத்தன்மையீர். ஒருவரைப் பாதுகாப்போர் முன்னர் அவர் நிலைதெரிந்தே பாதுகாத்தல் வேண்டுமாகலின், தலைவர் நம்மைப் பாதுகாக்கும் கருத்துடையராயின் வினவுவாராயின் என்றாள். என்பாள், எந்நீரிர் என்று

## பாட்டு - உஉ0 : தலைவி கூற்று

துறை :—பருவ வரவின்கட் கிழத்தி தோழிக்கு உரைத்தது. அஃதாவது, 'கார்ப்பருவத்தே மீண்டு வருவேன்; அதுகாறும் ஆற்றியிரு' என்று கூறிச் சென்ற தலைவன் அப்பருவம் வந்த பின்னரும் வாராமையால் ஆற்றாமை மிக்க தலைவி தோழிக்குக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'நந்தலைவர் தாம் கூறிச்சென்ற கார்ப்பருவம் வந்ததாகவும் இன்னும் வந்தாரிலர் யான் எங்ஙனம் ஆற்றுகேன?' என்று கூறுகின்றாள்.

உஉ0. பழமழைக் கலித்த புதுப்புன வரகின்
இரலை மேய்ந்த குறைத்தலைப் பாவை
இருவிசேர் மருங்கிற் பூத்த முல்லை
வெருகுசிரித் தன்ன பசுவீ மென்பிணி
குறுமுகை அவிழ்ந்த நறுமலர்ப் புறவின்
வண்டுசூழ் மாலையும் வாரார்
கண்டிசிற் றோழி பொருட்பிரிந் தோரே.

—ஒக்கூர் மாசாத்தியார்.

(இ - ள்.) தோழி—, பொருள் பிரிந்தோர் - பொருளீட்டனிமித்தம் நம்மைப் பிரிந்து சென்ற தலைவர், பழமழைக் கலித்த புதுப்புன வரகின் - பண்டு பெய்த மழையாலே தழைத்த புதிய புனத்தின் கண் ணுள்ள வரகினது, இரலை மேய்ந்த குறைத்தலைப் பாவை இருவிசேர் மருங்கில் - ஆண்மான் மேய்ந்தமையானே குறைந்த நுனியையுடைய கதிர் அரிந்த தாள் சேர்ந்த பக்கத்தில், பூத்த முல்லை - மலர்ந்த முல்லைக் கொடியினது, வெருகு சிரித்தன்ன பசுவீ - காட்டுப்பூனை சிரித்தாற்போன்ற தோற்றமுடைய பசிய பூவினது, மென் பிணிக் குறுமுகை அவிழ்ந்த நறுமலர்ப் புறவின் - மெல்லிய பிணிப்பையுடைய குறிய அரும்புகள் மலராநின்ற நறிய மலர்களையுடைய முல்லை நிலத்தில், வண்டு சூழ் மாலையும் வாரார் - அம்மலருதம் பொருட்டு வண்டுகள் சுற்றுகின்ற இம்மாலைப் பொழுதினும் வாராராயினர், கண்டிசின் - இக்கொடுமையை நீ அறிவாயாக.

**விளக்கம்** :—பழமழை - பண்டு பெய்த மழை என்க. மழை பெய்தமையால் கதிர் அரியப்பட்ட புனம் மீண்டும் தழைத்த தென்றவாறு. புதுப்புனம் — அவ்வாண்டிலே புதிதாகப் பண்படுத்தப்பட்ட புனம். குறைத்தலை, கதிர் அரிந்தமையாலே குறைந்த நுனி. பாவை- மான் மேய்ந்தொழிந்த தாள். பாவையாகிய இருவி என்க. இருவி - கதிர் கொய்தெஞ்சிய தட்டை. வேனிற் பருவத்தே கதிர் கொய்யம்

பட்ட வாகிருவியின் பக்கத்தே படர்ந்து முல்லைக்கொடிகள் மலர்ந்தன என்க. முல்லைக்கொடி மலர்ந்தன என்றது, தலைவர் கூறிச் சென்ற கார்ப்பருவம் வந்தமையை உணர்த்தியபடியாம். வெருகு - காட்டுப் பூனை. காட்டுப்பூனை கத்துதலைச் சிரிக்கின்றது என்று கூறுதல் மரபு. காட்டுப்பூனை வாய் திறந்து சிரிக்கும்போது தோன்றும் பற்கள் முல்லை அரும்புகளுக்கு உவமை என்க. "வெருகு வேட்பச் சிரிப்பனபோன் முகைத்த முல்லை" (சீவக - கசுஙக.) என்று பிறரும் கூறுதல் உணர்க. மாலையாந் துணையும் வருவர் வருவர் என வழிமேல் விழிவைத்து எதிர் பார்த்திருந்தாளாதலின், 'மாலையும் வாரார்' என்றாள். இனி வருவா ரல்லர் எனறவாறு பொருட் பிரிந்தோர், பொருளீட்டற்பொருட்டு நம்மைப் பிரிந்தோர் என்க.

பழமமையாலே குறைத்தலைப் பாவை யிருவி தழைத்ததென்றது, "பண்டு அவா 'கார்ப்பருவத்தொடக்கத்தே வருவன்' என்று ஆற்றிச் சென்றமையாலே பிரிவுததுன்பததையும் ஒருவாறு ஆற்றி உயிர்த்திருப் பேன் ஆயினேன்" என்னும் குறிப்பிற்று.

## பாட்டு - ௨௨௧ : தலைவி கூற்று

துறை :—பிரிவிடைப் பருவ வரவின்கண் வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி உரைசதது. அஃதாவது, 'தலைவன் கூறிச்சென்ற பருவம் வந்தும், அவன் வாராமை கண்ட தோழி ஆற்றாளாய தலைவியை ஆற்றுவித்தல் வேண்டும்' என வற் புறுதத அவட்குத் தலைவி கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கிக் '

காட்டில் முல்லைகள் மலர்ந்தன; பால் கொணர்ந்து வந்து, கூழோடே செல்லும் இடைமகன், தன் தலையிற் சூடியவெல்லாம் முல்லை அரும்புகளே யாதல்காண்; இன்னும தலைவர் வந்திலரே! யான் எங்ஙனம் ஆற்றுகேன்?' என்று வருந்திக் கூறுகின்றாள்.

உஉக. அவரோ வாரார் முல்லையும் பூத்தன
பறியுடைக் கையர் மறியினத் தொழியப்
பாலொடு வந்து கூழொடு பெயரும்
யாடுடை இடைமகன் சென்னிச்
சூடிய வெல்லாம் சிறுபசு முகையே.

—உறையூர் முதுகொற்றனார்.

(இ - ள்) தோழி—, முல்லையும் பூத்தன - நங்காட்டிடையே முல்லைக்கொடிகள் எல்லாம் பூத்தனபோலும் அஃதெற்றாலறிந்தாயெனின், பறியுடைக்கையர் மறியினத்து ஒழிய- பறியோலையை உடைய கையினையுடைய இடையர்கள் குட்டிகளையுடைய ஆட்டுத்திரளோடே சென்று தங்காநிற்ப, பாலொடு வந்து கூழொடு பெயரும் - நிரையினின்றும் பாலைக்கொணர்ந்து

இல்லத்திற்கு வந்து மீளும்போது பாற்சோற்றோடே மீண்டு போகின்ற, யாடுடை இடைமகன் - ஆடுகளையுடைய இடையன், சென்னிச் சூடிய எல்லாம் சிறுபசு முகை - தன் தலையின்கட் சூடியிருப்பன எல்லாம அம்முல்லையின் சிறிய பசிய அரும்பு களே ஆதல் காண்பாயாக.

**விளக்கம்** :—அவரோ என்றதன்கண் ஓகாரம் பிரிநிலை; அவர் குறித்த பருவம்மட்டும் வந்துவிட்டது அவர் வந்திலர் என்பதுபட நின்றமையான் என்க. பறி - பனையோலையாற் செய்த தடுக்கு. இது மழைக்குக் குடையாகவும், படுக்கைக்குப் பாயாகவும் உதவுமொரு கருவி என்க. ''பாய், பறிகள்'' என்னும் வழக்குண்மை இன்றுங் காண் கின்றோம். ''பறிப்புறத்திட்ட இடையன்'' (நற் - கசஉ.) என்றும், ''பறிப்புற இடையன்'' (அகம் - கூச.) என்றும், பிறரும் ஓதுதல் அறிக. மறியினம் - குட்டிகளையுடைய ஆட்டினம். ஆட்டினத்தே ஆயர் சிலர் இருப்ப அவர்க்குக் கூழ்கொடு போகும் இடையன் என்ற வாறு. ஆட்டினத்தினின்றும் வரும்பொழுது பாலொடு வந்து வீட்டி னின்று போகும்பொழுது கூழொடு பெயரும் இடையன் என்க.

இடைமகன் - தலையில் வழியில் மலர்ந்துள்ள முல்லை அரும்புகளைப் பறித்துச் சூடி வந்தானைக் கண்ட தலைவி, 'இது கார்ப்பருவம் போலும்' என்று கவன்றாள் என்க. முல்லை கார்காலத்தே மலரும் இயல்புடை யது ஆதலின், 'முல்லையும் பூத்தன' என்றது, 'கார்ப் பருவமும் வந்தது' என்னும் குறிப்பிற்று.

## பாட்டு - உ௨௨ : தலைவன் கூற்று

துறை :—பெட்ட வாயில் பெற்று இரவு வலியுறுத்தல். அஃதாவது, இயற்கைப்புணர்ச்சி எய்திய தலைவன், மீண்டும்
அவளை எய்துதற்கு வாயில் நாடுவான் குறிப்பானே இன்னள் தோழி என்றுணர்ந்து அவளைக் குறையிரப்ப நினைந்தது.

இதன்கண், தலைவி நீராடுமிடத்து உடனாடும் ஆயமகளிர் பலருள்ளும் அவட்கு உசாத்துணைத் தோழியாவாள் இவள் எனக்கண்ட தலைவன் அங்ஙனம் கண்டமைக்கு ஏதுக்கூறுவான், 'தளிரன்னோள் தோழி தலைப்புணைக் கொள்ளின் தானும் தலைப் புணைக் கொள்ளும்; கடைப்புணைக் கொள்ளின், தானும் கடைப்
புணைக் கொள்ளும்; ஒருகால் புணை நழுவித் தோழி நீரோடு ஒழுகின், இவளும் நீரோடு ஒழுகுவள் போலும். இன்னளாகலின், இவளே நந்தலைவிக்கு உயிர்த்தோழியாதல் ஒருதலை,' எனத் தன் னெஞ்சிற்குத் தலைவன் கூறுகின்றான்.

உ௨உ. தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளும்
கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும்
புணைகை விட்டுப் புனலோ டொழுகின்

ஆண்டும் வருகுவள் போலு மாண்ட
மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகைச்
செவ்வெரி நுறமும் கொழுங்கடை மழைக்கட
டுளிதலைத் தலைஇய தளிரன் னோளே.

—சிறைக்குடி யாந்தையார்.

(இ - ள்.) மாண்ட மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை - மாட்சிமைப்பட்ட மழைக்காலத்தே மலரும் பிச்சியினது நீர் ஒழுகும கொழுவிய அரும்பினது, செவ்வெரிந் உறமும் கொழுங்கடை மழைக்கண் - செவ்விய புறத்தை ஒத்த கொழுவிய கடையையும் குளிர்ச்சியையும் உடைய கண்களையும், துளி தலைத் தலைஇய தளிர் அன்னோள் - மழைத்துளி தன்னிடத்தே பெய்யப்பெற்ற மாந்தளிரை ஒத்த மேனியையும் உடைய நந்தலைவி, தலைப்புணை கொள்ளின் தலைப்புணை கொள்ளும் - நீர் விளையாடுங்கால் தெப்பத்தின் தலைப்பை அத் தோழி கைக்கொண்டால் தானும் அத்தலைப்பைக்

கைக் கொள்ளா நின்றாள், கடைப் புணை கொள்ளின் கடைப் புணை

கொள்ளும் - இத்தோழி தெப்பத்தின் கடைப்பகுதியைப் பற்றின் தலைவியும அப்பகுதியையே பற்றுநின்றாள், புணை கை விட்டுப் புனலோடு ஒழுகின் - ஒருகால தெப்பத்தைத் தப்ப விட்டு இததோழி நீரோடு செல்வாளாயின், ஆண்டும் வருகுவள் போலும் - தலைவியும அவள் சென்ற இடத்திற்கே செல்வாள் போலே இருந்தாள.

**விளக்கம்** :—செயல் மனத்தின் வழித்தாகலின் செயலொப்புண்மை தேர்ந்து நெஞ்சு ஒத்தல் தெளிந்தவாறு. புணைத்தலை புணைக்கடை என்பன முன்பின்னாக மாறி நின்றன. புணை - தெப்பம், தெப்பத்தின் முன்பகுதி, பின்பகுதி என்க. இத்துணை மகளிரில் இவளொருத்தியையே பின்பற்றி நீராடுகின்றாளாகலின், 'இவளே நந்தலைவிக்கு உயிர்த்தோழி யாவள்' என நெஞ்சிற்குக் கூறுகின்றான் என்க. புணை கைவிட்டுப் புனலோடு ஒழுகின் என்றது, 'இத்தோழி தவறி நீரோட்டத்தாலீர்க்கப்பட்டு மூழகி இறப்பாள் எனின் இவளும் அங்ஙனமே சென்று இறப்பாள் போலும்' என அவர் ஒற்றுமை கண்டு வியந்தவாறு.

மாரியால் மாண்ட பித்திகம் என்க. பித்திகம் - பிச்சி. பிச்சி, மாரிக் காலத்தே தழைத்து மலரும் இயலபுடையதாகலின், 'மாரி மாண்ட பித்திகம்' என்றான். மழைக் காலமாகலின், 'நீர்வார் கொழுமுகை' என்றான். கொழுத்த கடைக் கண்ணிற்குப் பிசசிக் கொழுமுகையின் புறம் உவமை. வெரிந் - புறம்.

தளிர் - மாந்தளிர். தளிரின் மேல் மழைத்துளிபட்டு ஒழுகுங்கால் அதன் நிறம் மேலும் பொலிவுடையதாதல் பற்றி வாளா தளிரென்னாது 'மழைத்துளி தலைஇய தளிர்' என்றான். இனித் தலைவியின் மேனி

நீராட்டினால் நனைந்திருந்தபோது கண்டமைக்கு நீரானனைந்த தளிரை உவமையாகக் கண்டோதினன் எனினுமாம்.

துளி - மழைத்துளி. தலைஇய - பெய்த; பெய்யப்பெற்ற. தளிரன்னோள் - தளிர் போன்ற மேனியை உடையோள் என்க. தளிர், நிறம், மென்மை, தண்மைகளால் மேனிக்குவமையாயிற்று.

## பாட்டு - ௨௨௩ : தலைவி கூற்று

துறை :—வரைவிடை வேறுபட்ட கிழத்தியது வேறுபாடு கண்டு, வற்புறுத்தும்தோழிக்குக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, வரை பொருள் நிமித்தம பிரிந்த தலைவன் கால நீட்டிப்ப, ஆற்றாளாகிய தலைவியைத் தோழி ஆற்றுவித்தாளாக அவட்குத் தலைவி கூறியது.

இதன்கண், ஆற்றாளாய தலைவியை ஆற்றுதனிமித்தம் பேரூர் கொண்ட ஆர்கலி விழவிற்குச் செல்வாம் புறப்படுக என்று கூறும் தோழியை நோக்கித் தலைவி, 'நீ விழவிற்குப் போவோம் புறப்படுதி ! புறப்படுதி ! என்று

என்னை வற்புறுத்து,

இன்றாய்! யானோ, பலர் குழுஉம் விழவினுக்குச் செல்லும் தகுதியை இழந்துவிட்டேன்; யாயாற் பேணப்பட்ட என் பெண்மை நலனெல்லாம், தலைவன் கவர்ந்து போயினன்; ஆகலின் வேறுபாடு மிக்க யான் எங்ஙனம் விழவிற்கு வருவேன்?' என்று கூறுகின்றாள்.

உஉரு. பேரூர் கொண்ட ஆர்கலி விழவில்
செல்வாம் செல்வாம் என்றி அன்றிவண்
நல்லோம் நல்ல பலவாற் றில்ல
தழலும் தட்டையும் முறியுந் தந்திவை
ஒத்தன நினக்கெனப் பொய்த்தன கூறி
அன்னை யோம்பிய ஆய்நலம்
என்னை கொண்டான்யாம் இன்னமா
லினியே.

—மதுரைக் கடையத்தார் மகனார் வெண்ணாகனார்.

(இ - ள்.) தோழி—, பேரூர் கொண்ட ஆர்கலி விழவில்- நமது இப்பெரிய ஊரினர் மேற்கொண்டு நிகழ்த்துகின்ற திருவிழாவிற்கு, செல்வாம் செல்வாம் என்றி-போவோம் போவோமென்று வற்புறுத்தா நின்றனை, அன்று இவண் நல்லோம் நல்ல பல தில்ல - பண்டு யாம் விழாக்காணச் சென்ற காலத்தே

வேறுபடுதலின்றி நன்மையுடையேமா யிருந்தோம்; பிற பல நலங்களும் நம்பா லிருந்தன; அந்நன்மைகள் இப்போதிலே மாயி



னேம், தழலும் தட்டையும் முறியும் தந்து இவை ஒத்தன நினக் கென - கிளிகடி கருவிகளாகிய தழலும் தட்டையுமாகியவற் றோடே தழையையும் நமக்குத் தந்து இப்பொருள்கள் நுமக்குப் பொருந்துவன என்று, பொய்த்தன கூறி - பொய்யாயவற்றை மெய்போல நமக்குச் சொல்லி, அன்னை ஓம்பிய ஆய்நலம் - நம்

மன்னையாலே பாதுகாக்கப்பட்ட நமது ஆராய்தற்குக் காரண மான பெண்மை நலத்தை, என்னை கொண்டான் - நந்தலைவர்

முழுதும் கவர்ந்து கொண்டனராகலான், யாம் இனி இன்னம்- யாமோ இப்பொழுது இந்நிலைமையினேம் ஆயினேம்.

விளக்கம் :—'ஆற்றாமையாலே பெரிதும் மெலிந்துள்ள யான், வம்ப மாக்கள் குழுமிய விழாக்களத்திற்கு எவ்வாறு செல்வேன்! யான் ஆண்டு வருவேனல்லேன்; நீ வாளா வற்புறுத்தா தொழிக.' என்று தோழியை

மறுததவாறும.

பேரூர் என்றது, பல்வேறு மக்களும், வம்பமாக்களும் கூடுதற் குரிய பெருங்களம் என்றவாறு. மாக்கள் குழுமி தம்மோடு தொடர் பில்லாதவற்றையும் பாரித்துப் பேசுமிடம் என்பாள், 'ஆர்கலி விழ வென்றாள். ஆர்கலி - ஆரவாரம், ஈண்டு வம்பலா பேசசையே குறித்து நின்றது. என்னை? தன்னைக் கண்டு தன் வேறுபாடுபெற்றிப் பலரும் பலவும் பேசுதற் கிடனும் என்பதே ஈண்டுத் தலைவி கருத்தாகலான் எனக.

நீ இடையறாது வற்புறுத்துகின்றனை என்பாள், "செல்வாம் செல் வாம் என்றி" என அடுக்கிக் கூறினாள். என்றி - என்று கூறுகின்றனை. அன்று என்றது பண்டு தோழியுடன் பேரூர்ப் பெருவிழவிற் சென்று மகிழ்ந்த காலத்தைச சுட்டியதாம் பண்டு யாம் விழாக்காணச சென்ற நிலையில் இன்றில்லை என்றிரஙகுவாள், 'அன்று இவண் நல்லோம் நல்ல
பல தில்ல' என்றாள். நல்லோம் என்றது, 'பெண்மை நலம் முழுதும் உடையமாயிருந்தேம்' என்றவாறு. நல்லபல என்றது, பிற ஏதுக்களும் அன்று நன்மையாயிருநதன என்றவாறு. தில்ல-ஒழியிசைப்பொருட்டு. 'அந்நன்மைகள் இன்றிலமாயினேம்' என்னும் பொருள் குறித்து நின்ற தென்க.

நெஞ்சம் மகிழ்ச்சியுறுதல் நலம்வளர்தற்கு ஏதுவாகலான், நம் மன்னை தழல் தட்டை முதலியவற்றைத் தந்து நம் மனமகிழச செய்து நமது நலததை ஓம்பினாள் என்பாள், 'தழலுந் தட்டையும் முறியுந் தந்து, அன்னை ஓம்பிய ஆய்நலம்' என்றாள். தழல் தட்டை என்பன, கிளிகடிகருவிகள். முறி-தழை. தழல் தட்டை முதலியனவும் பிற விளை யாட்டுக் கருவிகளும் பண்டு நம் மனத்துக்கொத்தனவாய்ப் பேரின் பம் நல்கின; இன்று அவைகள் நம்பாலிருந்தும் நமக்கு ஒத்தன வாகா வறும் பொருளாயின; பண்டு நம் பேதைமைக் கேற்ப நம் அன்னையும் நினக் கொத்தன இவை எனக் கூறினது இன்று பொய்யாதல் அறிந் தனம் என்பாள், 'அன்னை பொய்த்தன கூறி' என்றாள். இன்று தலை வனையன்றி இவ்வுலகப் பொருளனைத்துமே நமக்கு ஒவ்வாதன வாயின என்பது கருத்து. ஆய்நலம் - பலரும் ஆராய்ந்து நன்றென்றற்குக் காரணமான பெண்மை நலம். என்னை-தலைவன். தலைவனை என்னை என்று கூறும் வழக்க முண்மையை,

"அன்னை என்னை என்றலும் உளவே
தொன்னெறி முறைமை சொல்லினு மெழுத்தினும்
தோன்றா மரபின என்மனார் புலவர்."
(தொல் பொருளியல் - ௩௨)

எனவரும் தொல்காப்பிய நூற்பாவானும் உணர்க. தலைவன் தன் பிரிவானே நம்நலங்கெடச் செய்தான் என்பாள், "நலம் என்னை கொண்டான்" என்றாள். இன்னம் இத்தகையேம், தன்மைப்பன்மை. இப்பொழுது. ஆல் - அசை.

இனி-

## பாட்டு - ௨௨௪ : தலைவி கூற்று

துறை:—'பிரிவிடை இறந்துபடும்' எனக் கவன்ற தோழி கேட்பக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, தலைவன் பிரிந்திருந்த காலத்தே ஆற்றாமை மிக்க தலைவியை, 'இறந்துபடுவாளோ!' எனக் கருதித் தோழி பெரிதும வருந்தினளாகத் தலைவி அவள் வருத்தங்கண்டு கூறியது.

இதன்கண், தோழியின் வருத்தத்தைக் கக்

கண்ட தலைவி அவள் கேட்ப, 'யான் நீளிடைச் சென்ற தலைவர் செய்த கொடுமையை எண்ணி எண்ணி நோகின்றதுமல்லாமல், என்னிலைக் குப் பெரிதும வருந்தாநின்ற இததோழியின் நிலைக்கும் வருந்த வேண்டியவளாய் விட்டேன்; பிரிவு நோயை ஒருவாறு ஆற்று வேன் ஆயினும, இவள நிலையே எனக்கு ஆற்ருெணுத் துன்பம் தருகின்றது' என்று கூறுகின்ருள.

உஉச. கவலை யாத்த அவல நீளிடைச்
சென்ருேர் கொடுமை யெற்றித் துஞ்சா
நோயினு நோயா கின்றே கூவற்
குராலான் படுதுயர் இராவிற் கண்ட
உயா திணை ஊமன் போலத்
துயர்பொறுக் கல்லேன் தோழி நோய்க்கே.

—கூவன் மைந்நூர்.

(இ - ள்.) கூவல் குரால் ஆன் படுதுயர் இராவில்கண்ட- கிணற்றினுள் வீழ்ந்துவிட்ட குரால நிறமுடைய ஆன் படுகின்ற துன்பத்தை இராவின்கண்ணே கண்ட, உயர்திணை ஊமன் போல- மக்களினததது ஊமன் அத துனபத்தை வெளியிடமுடியாமல்

வருந்துமாறுபோல, தோழி நோய்க்கு - என் பொருட்டுத் தோழி படுந் துயர் கண்டு, துயர் பொறுக்கல்லேன் - எனக்
குண்டாகும் துன்பத்தை யான் ஆற்றுதேன் ஆகின்றேன்;
கவலை யாத்த அவல நீள் இடை - (அத்துன்பமோ) கவர்த்த வழி



களிலே யா மரங்களை உடையனவாகிய துன்பமிக்க நீண்ட பாலை நிலத்திலே, சென்றோர் கொடுமை எற்றி - என்னைப் பிரிந்து சென்ற தலைவருடைய கொடுமையை நினைந்து, துஞ்சா நோயி
னும் நோய் ஆகின்று - உறங்காது வருந்தும் காட்டில் மிக்க துன்பமாக இராநின்றது.
துன்பத்தினும்

**விளக்கம்**:—கவலை - கவர்த்த வழி யாத்த-யாமரங்களையுடையன வாகிய. நீளிடை - நீண்ட இடமாகிய பாலை நிலம் என்க. கொடுமை-தன்பிரிவினைத் தலைவி ஆற்றுளாவது அறிந்தும், ஆற்றுமை எய்தவிட்டுச் சென்ற கொடுஞ்செயல் என்க. எற்றி - நினைந்து. எற்றம் என்னும் உரிசசொல்லடியாகப் பிறந்த வினையெச்சம்.

"எற்றம் நினைவும் துணிவும் ஆகும்." (உரி - ௯௧)

என்பது தொல்காப்பியம்.

"கானலஞ் சேர்ப்பன் கொடுமை எற்றி." (௧௪௫)

என, இந்நூலில் இச்சொல் இப்பொருட்டாகவே முன்னரும் அறிக.

வந்தமை

துஞ்சாநோய் - துஞ்சாமைக்குக் காரணமான நோய், என்றது பிரிவுத்துன்பத்தை. துஞ்சாநோய் ஆயினும் ஒரோவழி ஆற்றியிருப் பேன், என்பொருட்டு இவள்படுந்துன்பங்கண்டே பெரிதும் வருந்தா நின்றேன் என்பாள், 'துஞ்சாநோயினும் நோயாகின்று,' என்றாள். 'யான் பிரிவுத்துன்பததை ஆற்றுவேன் நீ கவலாதிரு' என்று தோழியை ஆற்றியவாறு.

கூவல் - கிணறு. குரால் - ஒருவகை நிறம். "பெரும்பெயர்க் கணிச்சியோன் மணிமிடற்று அணிபோல, இரும்பிணர் எருத்தின் எந்திமிற் குராலும்," (கலி - ௧0௫.) என்றார் கலியினும்.

உயர்திணை ஊமன் - மக்கட்பண்புடைய ஊமன் என்க. மாவும் மாக்களும் ஐயறிவுயிர் என்பவாகலான், மாக்களினத்து ஊமன் அல் லன் என்பா, 'உயர்திணை ஊமன்' என்றார். என்னை ? பிறவுயிர்களின் துன்பங்கண்டு இரங்குதல் மக்கட்பண்புடையோர்க்கே இயல்பாகலின். ஈண்டு ஆன் கூவலின்கண் வீழ்ந்து துன்புறுதல் கண்டதற்கே பெரி தும் துன்புறுதற்கு ஏதுக் கூறுவார்,'உயர்திணை ஊமன்' என்றா என்க. இனி ஊமன் என்பது, கோட்டானுக்கும் பெயராகலின் அதனின் நீக்குதற்கு வெளிப்படைகூறினர் எனலும் ஒன்று.

## பாட்டு - ௨௨௫ : தோழி கூற்று

துறை :—வரைவிடை வைத்துப் பிரிவார்க்குத் தோழி சொல்லியது.

அஃதாவது—வரைவிடைவைத்துப பொருளீட்டப் பிரியுந் தலைவனுக்குத் தோழி விரைவின் மீண்டு வருதல் வேண்டும் எனக் கூறியது.

இதன்கண், தோழி தலைவனை நோக்கி, "ஐய! உற்றுழி நண்பன் செய்த உதவியை அரசுகட்டில் பெற்ற பின்னர்

மூலமும் உரையும்

கூஉக

மறந்து விட்ட நன்றி தேரா நயனில் மன்னன் போலாது, நீ

நன்றி யறியும் நல்லோன் ஆயின், காலம் நீட்டியாது விரைவின் மீண்டு வருதல் வேண்டும், இவள் கூந்தல் நினக்கே உரிமை யுடையனவாம்" என்று கூறுகின்றாள்

உஉரு. கன்றுதன் பயமுலை மாந்த முன்றில்
தினைபிடி உண்ணும் பெருங்கல் நாட

கேட்டிடத் துவந்த உதவி கட்டில்
வீறுபெற்று மறந்த மன்னன் போல
நன்றிமறந் தமையா யாயின் மென்சீர்க்
கலிமயிற் கலாவத் தன்ன இவள்
ஒலிமென் கூந்தல் உரியவா நினக்கே.

—கபிலர்.

(இ - ள்.) *கன்று தன் பயமுலை மாந்த - தனது கன்று தனது பாற்பயன் உடைய முலை குடியா நிற்பவே, பிடி முன்றில் தினை உண்ணும் பெருங்கல் நாட - பெண் யானை முற்றத்தின் கண்ணுள்ள தினையை உண்ணுதற்குக் காரணமான பெரிய மலை களையுடைய நாட்டையுடைய தலைவனே, கெட்டிடத்து வந்த உதவி கட்டில் வீறுபெற்று மறந்த மன்னன் போல - தனக்குக் கேடுவந்தபொழுது தாமே வலிந்து வந்து பிறர் செய்த உதவியினை, அவ்வுதவியின் பயனாகத் தான் அரசு கட்டில் ஏறிச் சிறப் புற்றபின்னர் மறந்துவிட்ட அரசனைப் போன்று, நன்றி மறந்து அமையாய் ஆயின் - யாம் நினக்குச் செய்த உதவியை மறந்து விடா திருப்பையாயின், இவள் மென் சீர்க் கலிமயில் கலாவத்து அன்ன ஒலி மென் கூந்தல் - இத தலைவியினுடைய மென்மை யானே சிறப்புடைய ஆரவாரமுடைய மயிலினது தோகை போன்ற தழைத்த மென்மைமிக்க*

கூந்தல், நினக்கே உரிய ஆம் - நினக்கே உரிமையுடையன வாகும்.

விளக்கம் :—பய மூலை - பயன் உடைய மூலை ; என்றது, பாலுடைய மூலை. என்னை ? அதன் பயன் அஃதாகலான். கன்றும் பசியாலே வருந்தாதபடி ஊட்டிக் கொண்டே, தனக்கு வேண்டிய தினையையும் பிடி உண்ணும் என்றது, ' தலைவியும், பிரிவுத்துன்பம் உழவாதவாறு அருள் செய்தவாறே, வரைவிற்கு வேண்டிய பொருளும் ஈட்டிக் கொள் வாயாக' எனனும் குறிப்புடையது. 'எனவே, காலம் நீளிதாகத் தங்கிவிடாமல் விரைந்துவந்து வரைந்து கொள்ளுக' என்பது குறிப்பாலுணர்த்தியவாறுயிற்று. முன்றிற் றினை என்றதும், வரை பொருள்நிமித்தம் சேய்மைக்கட் சேறற்க என்று குறித்தவாறென்க.

கெட்ட இடம் என்பது, பெயரெச்சத் தகரம் கெட்டுக் கெட்டிடம் என்று ஆயிற்று. வந்த உதவி - தாமே வலிந்து வந்து செய்த உதவி. எனவே, 'செய்யாமற் செய்த உதவி' என்று அதன்



சிறப்பைத் தெரித்தோதியவாறும். பல்வேறு வகை உதவிகளினும் வைத்துச் செய்யாமற் செய்த உதவி மிகவும் சிறந்தது என்பதைச்,

"செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது." (குறள். ௧0௧)

என்னுந் திருக்குறளானும் உணர்க.

உவந்த உதவி எனக் கண்ணழித்து "மகிழ்ந்த உதவி" என்று கூறுவாருமுளர். கட்டில் - அரசு கட்டில்; என்றது அரசவுரிமை. கட்டில் வீறுபெற்றுயர்தற்கும் அவ்வுதவியே காரணம் என்பாள், 'கெட்டிடத்து வந்த உதவி' என்றும், 'கட்டில் வீறு பெற்று' என்றும் கூறினள். எனவே, ஒரு மன்னன் தனது அரசு கட்டிலை இழந்து விடும்படி கேடுற்ற பொழுது, பிறர் தாமே வலிய வந்து உதவி செய்து அவ்வரசு கட்டிலை அவனுக்கு உரியதாக்கினராக, அவ்வுதவியாலே அரச உரிமை பெற்றுச் சிறந்த பின்னர், அவ் உதவியை மறந்து விட்டான். அங்ஙனம் மறந்த அம் மன்னனைப் போல நீயும் யாஞ் செய்த உதவியை மறந்துவிடாயாயின், என உவமையை விரித்துக் கொள்க.

நன்றி மறந்தமையாயாயின், என்பது, நன்றியை மறந்து ஆண்டே தங்கிவிடாது மீண்டு வந்து வரைந்து கொள்வாயாயின் என்றவாறு. மறந்தமையாயாயின் இவள் கூந்தல் நினக்கு உரிய எனவே, மறந்தமை வாயெனின் இவள் இறந்து படுவள் காண் என்று குறிப்பானுணர்த்திய வாறு. கலிமயில் - அகவும் மயில். ஒலி - தழைத்தல். கூந்தலை ஐம்பால் என்பவாதலின் உரிய எனப் பன்மை கூறினள் தலைவி உரியள் ஆவள் என்பதனைக் கூந்தல் உரிய என்றது சிறப்பு நோக்கி என்க. என்னை? தலைவியின் உறுப்புக்களுள் தலைவன் முதன் முதலாக உரிமை பாராட்டுவது கூந்தலே யாகலான். இதனை வண்டோச்சி மருங்கணைதல், பின்னலைத் தீண்டல் முதலிய செயல்களானும் உணர்க. "யாரிவன் எங் கூந்தல் கொளவான்," "ஒரூஉநீ எங் கூந்தல் கொள்ளல்," (கலி அகூ - அஎ.) எனவரும் கலியானும உணர்க.

## பாட்டு - உஉகூ : தலைவி கூற்று

துறை :—வரைவிடைவைத்து
ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி
யுரைத்தது, அஃதாவது, தலைவன் வரை
பொருளீட்டற்குப் பிரிந்த காலத்தே, மிகவும்
துன்பமுற்ற தலைவியை நோக்கி, ' இவள்
இறந்துபடுவாளோ ?' எனக் கவலை யுற்ற
தோழிக்குத் தலைவி தன் துன்பத்தைத்
தெரித்தோதியது.

இதன்கண், 'தோழி! யான் விரிநீர்ச்
சேர்ப்பனைக் காண்பதற்கு முன்பெல்லாம்,
தாமரை போன்ற கண்களும், வேய்த் தோளும்,
பிறைமதி மயக்குறும் நுதலும்
உடையளாய்த்
திகழ்ந்தேன்; இப்பொழுதோ, அவ்வுருப்புகலன் முழுதும்
ஒழிந்து வறியளானேன்,' என்று தலைவி தோழிக்குக் கூறு
கின்றாள்

## மூலமும் உரையும்

௩௩௧

உ உ௬. பூவொடு புரையுங் கண்ணும் வேயென

விறல்வனப் பெய்திய தோளும்
பிறையென
மதிமயக் குறூஉ நுதலு நன்றும்
நல்லமன் வாழி தோழி அல்கலும்
தயங்குதிரை பொருத தாழை வெண்பூக்
குருகென மலரும் பெருந்துறை
விரிநீர்ச் சேர்ப்பனொடு நகாஅ வூங்கே.

—மதுரை எழுத்தாளனார் சேந்தம்பூதனார்.

(இ - ள்.) தோழி—, அல்கலும் தயங்கு திரை பொருத தாழை வெண்பூ - இரவுதோறும் விளங்கிய அலைகளாலே மோதப்பட்ட தாழையினது வெள்ளிய பூ, குருகு என மலரும்- அன்னம் போல மலரா நிற்கும், பெருந் துறை விரிநீர்ச் சேர்ப்பனொடு - பெரிய துறையினையுடைய அகன்ற நீர்ப்பரப்பினை யுடைய நந் தலைவனோடே, நகா ஊங்கே - யாம் நகுதற்கு முன்னர், பூவொடு புரையும் கண்ணும - தாமரைப் பூவை ஒத்த இக் கண்களும், வேய் என விறல் வனப்பு எய்திய தோளும் - மூங்கிலைப் போல வெற்றிமிக்க அழகு பொருந்திய இத்தோள் களும், பிறை என மதி மயக்குறூ நுதலும் - கண்டோர் இது பிறையோ

என்று அறிவு மயக்குறுதற்குக் காரணமான நுதலும், நன்றும் நல்ல மன் - பெரிதும நன்மையுடையனவா யிருந்தன; அந்நன்மை இப்பொழுது இலவாயின.

**விளக்கம்:**—பூ - சிறப்பால் தாமரைப் பூவிற்காயிற்று; புரையும் - ஒக்கும் வேய் - மூங்கில். விறல் - வெற்றி. வனப்பு - அழகு; வேறொன்றற்கில்லாத அழகென்பார், விறல் வனப்பென்றூர். பிறை - வளர்பக்கத்து இளந்திங்கள். மதி மயக்குறூஉம் - கண்டார் மதியை மயக்குறுத்தும் என்க. மயக்குறூஉம்; உறூஉம்: பகுதிப் பொருள் விகுதி. இயற்கைப புணர்ச்சிக்குப் பின்னர், 'பூவொடு புரையும் கண்' என்றும், 'வேயென விறல்வனப் பெய்திய தோளும்' என்றும், 'பிறை'யென மதி மயக்குறூஉம் நுதலும்' என்றும், தலைவன் இவள் நலம் பாராட்டியவற்றையே ஈண்டுக் கொண்டு கூறினள் எனக் கருதுக. இங்ஙனம் தலைவன் நலம் பாராட்டுதலை,

"நில்லென நிறுத்தான் நிறுத்தே வந்து
நுதலும் முகனும் தோளும் கண்ணும்
இயலும் சொல்லும் நோக்குபு நினைஇ
ஐதேய்ந் தன்று பிறையும் அன்று,
மைதீர்ந் தன்று மதியு மன்று
வேயமன் றன்று மலையு மன்று
பூவமன் றன்று சுனையு மன்று
மெல்ல இயலும் மயிலும் அன்று

சொல்லத் தளருங் கிளியு மன்று
[எனவாங்கு, அனையன பல பாராட்டி."

(கலி. ருரு)

எனவரும் குறிஞ்சிக் கலியானும் உணர்க.

நன்றும் - பெரிதும்; மிக்வும் என்றவாறு. "நன்று பெரிதாகும்,"

(உரி - சரு) என்பது தொல்காப்பியம். மன் - ஒழியிசைப் பொருள் குறித்து நின்றது. இப்பொழுது அந் நன்மையெல்லாம் இழந்தேன் என்றவாறு. அல்கல் - இரவு. குருகு - அன்னம்; நாரை என்பாரு முளர். விரி நீர் - கடல். அன்மொழித்தொகை.

தாழையினது முள்ளுடைய மலர், தூய அன்னம்போல் மலரும் துறைவன் என்றது, இங்ஙனம் பிரிந்துறைவானாகவும் 'நின்னைப் பிரியேன், பிரியின் வாழேன்' எனத் தூயன்போன்று கூறினன் என்னும் குறிப்பிற்று.

நகுதலே தனது உடம்பாட்டை முதன் முதலாகத் தலைவனுக்கு அறிவித்ததாகலின், இயற்கைப் புணர்ச்சியை அதன்மேலிட்டு 'நகாஅ ஊங்கே' என்றாள். ஊங்கு என்னும் சுட்டு - காலங்குறித்தது. பூவொடு - இரண்டாவது மூன்றுவதனுருபாய் வந்த மயக்கம்.

## பாட்டு - உஉஎ : தோழி கூற்று

துறை :—சிறைப்புறம். அஃதாவது, முதனாள் வந்து அல்ல குறிப்பட்டுத் தலைவியைப் பெறுமல் வறிதே மீண்ட தலைவன், மறுநாள் மனையயலே வந்தமை கண்ட தோழி, தலைவிக்கு உரைப்பாளாய் அவன் கேட்பக் கூறியது.

இதன்கண், "தலைவன் நெருநல் இரவு இவண் வந்து மீண்டான் என்பது உண்மை; அஃதெற்றாலறிந்தனை யெனின் அவனது தேர் உருள்கள் துணித்தமையானே கானலிடத்தே கூழை
யாய்விட்ட நெய்தல்கள் காணப்படுகின்றன ஆதலான்" எனத் தோழி தலைவிக்குக் கூறுகின்றாள்.

உ௨எ. பூண்வனைந் தன்ன பொலஞ்சூட்டு நேமி
வாண்முகந் துமிப்ப வள்ளிதழ் குறைந்த
கூழை நெய்தலு முடைத்திவண்
தேரோன் போகிய கான லானே.

—ஓதஞானியார்.

(இ - ள்.) தேரோன் போகிய கானலான் - தேரேறி வந்த நந்தலைவன் மீண்டு சென்ற கடற்கரையின்கண், இவண் - இவ்விடம், பூண் வனைந்தன்ன பொலம் சூட்டு நேமி - பூண் கட்டினாற் போன்ற பொன்னாலியன்ற விளிம்பையுடைய உருளின், வாள் முகம் துமிப்ப - வாள் போன்ற வாய்

துணித்தலானே,

## மூலமும் உரையும்

௩௩௩

வள் இதழ் குறைந்த - வளவிய இதழ்கள் குறைக்கப்பட்ட, கூழை நெய்தலும் உடைத்து. கூழையாகிய நெய்தலையும் உடையது.

**விளக்கம்** :—தேரோன் போகிய கானலில் இவண் நேமி முகம் துமிப்பக் குறைந்த கூழை நெய்தலும் உடைத்து என இயைபு காண்க. தேரில் வந்து மீண்டமை தோன்றத் தலைவனைத் தேரோன் என்றாள். பூண் - தடிமுதலியவற்றிற் கட்டும் வளையம. பொலம் - பொன். சூடு - விளிம்பு. தலைவன் தேருருள் பொன்னாலே கட்டப்பட்ட விளிம் புடையன என்க. வாண்முகம்-வாள் போன்ற கூரிய வாய். துமித்தல்- துணிபடுத்தல். வள் இதழ் - பெரிய இதழுமாம். கூழை - குறைந்து போனது. கானலான் - வேற்றுமை மயக்கம். ஏ அசைநிலை.

எனவே தலைவன் முதல்நாள் இரவு தலைவியைக் காணாது மீண்ட தற்கு அவன் குறிவாய்ப்பச செய்யாமையே காரணம் ஆவதன்றித் தலைவியின் தவறு அன்று; அவள் ஊக்கத்துடன் எதிர்நோக்கியே இருந்து வருந்தினள் என்று அவற்குக் குறிப்பான் உணர்த்தியவா றாயிற்று.

## பாட்டு - ௨௨அ : தலைவி கூற்று

துறை :— கடிநகர் வேறுபடாது நன்கு ஆற்றினாய் என்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது அஃதாவது, கற்புக்

காலத்தே தலைவி தலைவன் மனையிலிருந்தாளைத் தோழி, 'நீ வரைவு நிகழுந்துணையும் நன்கு ஆற்றியிருந்தனை!' என்று பாராட்டினளாக, அவட்குத் தலைவி தான் ஆற்றியிருந்தமைக்குக் காரணம் கூறியது.

இதன்கண், 'தலைவர் சேணிடைப் பிரிந்துறைந்த பொழுதும் என் நெஞ்சிற்கு அணியரா யிருந்தமையானும், அவர் நாட்டுக் கடற்றிரை நமதூர்க்கு வந்து பெயர்தலானும, யான் ஆற்றியிருந்தேன் காண்;' என்று தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

உஉ௪. வீழ்தாழ் தாழை யூழுறு கோழுமுகை
குருகுளர் இறகின் விரிபுதோ டவிழும்
கானல் நண்ணிய சிறுகுடி முன்றில்
திரைவந்து பெயரும் என்பநத் துறந்து
நெடுஞ்சே ணாட்டார் ஆயினும்
நெஞ்சிற் கணியர் தண்கட னாட்டே.

—செய்தி வள்ளுவர் பெருஞ்சாத்தனார்.

(இ - ள்.) தோழி—, நம் துறந்து நெடுஞ் சேண் நாட்டாராயினும் - நந்தலைவர் நம்மைப் பிரிந்து மிகவும் சேய்மையிலுள்ள நாட்டிடத்தே உறைவாராய பொழுதும், நெஞ்சிற்கு

அணியர் தண் கடல் நாட்டே - நம் நெஞ்சிற்கு மிகவும் அணி

மையிடத்துள்ளாராகிய அவருடைய குளிர்ந்த கடலையுடைய நாட்டிடத்தே, வீழ் தாழ் தாழை ஊழுறு கொழுமுகை - விழுது கள் தூங்கும் தாழையினது மலர்தலையுடைய கொழுவிய அரும்பு, குருகு உளர் இறகின் விரிபு தோடு அவிழும் - அன்னங்கள் தஞ்சிறகைக் கோதுமிடத்தே விரியாநின்ற இறகுகள் போன்று மடலவிழாநிற்கும், கானல் நண்ணிய சிறுகுடி முன்றில் - கடற்கரைச் சோலையிடத்தே பொருந்திய நமது சிற்றூரின் முன்றிலிலே, திரை வந்து பெயரும் - அலைகள் வந்து மீளாநிற்கும்.

விளக்கம் :—வீழ் - விழுது. ஊழுறு - மலர்தலுறுகின்ற. குருகு - அன்னம். உளர்தல் - அலகானே சிறகினைக் கோதுதல். குருகுளர் இடத்தின் என்றும் பாடம். விரிபு: செய்புஎன் வாய்பாட்டு வினையெசசம்; விரிந்தென்க. கானல் - கடல் சார்ந்த சோலை. சிறுகுடி - சிற்றூர்.

தலைவன்நாட்டுத்திரை நம் சிறுகுடி முன்றிலில் வந்து பெயரும் என்றியைபு காண்க. என்ப: அசைநிலை. தலைவனது உடைமை அவன் நாட்டுப்பொருள் முதலியவற்றைக் கண்டுழித் தலைவனையே கண்டாற்போன்று மகிழ்வது அன்புமிக்க குலமகளிரின் பண்பு ஆகலான், அவர் நாட்டுக் கடற்றிரை நமமுன்றிலிலே வரும்போதெல்லாம் அவர் வந்தாற்போன்றே மகிழவேனும் ஆற்றியிருநதேன் என்பாள், 'அவர்தண் கடற்றிரை நம் சிறுகுடி முன்றிலில் வந்து பெயரும்' என்றாள்.

அன்பர்களுடைய பொருளைக் கண்டவுடன் அவரைக் கண்டாற் போன்றதொரு மகிழ்ச்சி உண்டாதலை அநுபவத்தானும் உணரலாம்.

மெய்யுறுபுணர்சசி ஒன்றே அவர் பிரிந்துறையும்பொழுது இல்லையானதன்றி உள்ளப்புணர்ச்சி தவிர்ந்திலேன் என்பாள், 'சேணுட்டாராயினும் நெஞ்சிற் கணியர்' என்றாள். இதனானும் தான் ஆற்றியிருந்தமைக்கோர் ஏதுக் கூறியவாறுணர்க.

காதலர், உடன் மாத்திரையே ஒருவரை ஒருவர் பிரிவரன்றி உளத்தானே யாண்டும் பிரிவுடையாராகாமை ஈண்டு நன்கு விளக்கப்பட்டமை யுணர்க. தலைவனது தண்ணளியைக் கருதுவாள் அத்தண்மையைக் கடற்கேற்றித், 'தண்கடல் நாடு' என்றாள்.

காதலன் நெஞ்சிற் கணியனுதலை,

"நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து"

(குறள்-ககஉஅ.) என்றும்,

"உவந்துறைவர் உள்ளத்துள் என்றும்
இகந்துறைவர்
ஏதிலர் என்னுமிவ் வூர்." (குறள்-ககங0.)

என்றும் வரும் அருமைத் திருக்குறட் பாக்களானும் உணர்க.

# பாட்டு - ௨௨௯ : கண்டோர் கூற்று

துறை :—இடைச்சுரத்துக் கண்டோர் தம்முள்ளே சொல்லியது. அஃதாவது தலைவன் தலைவியைத தமர் அறியாதே உடன்கொண்டு
பண்டறிந்தோர்
பாலைநிலத்தே சென்றபொழுது, இவரைப்
இடைச்சுரத்தே கண்டு தம்முட் கூறியது.

இதன் கண், 'இவன் இளமையிலே
இவளுடைய கூந்தலைப்
பிடித்திழுப்பான்; இவளும் இவன்றலைமயிரைப பிடித்திழுத்து விட்டு ஒடிவிடுவாள்; இருவர் செவிலியரும் எத்துணை தடுத்தும் இருவரும அடிககடி சிறு கலகங்கள் புரிந்த வண்ணமே இருப் பர். இததகையோரை இணைபிரியாக் காதலராக்கி வைத்த ஊழ் மிகவும இனிய தொன்றாயிருந்தது' என்று
இடைச்சுரததுக் கண்டோர் தம்முட் கூறிக் கொள்கின்றனர்.

உ௨௯. இவனிவ ளைம்பால் பற்றவும் இவளிவன்
புன்றலை யோரி வாங்குநள் பரியவும்
காதற் செவிலியர் தவிர்ப்பவுந் தவிரா
தேதில் சிறுசெரு வுறுப மன்னோ
நல்லைமன் றம்ம பாலே மெல்லியல்
துணைமலர்ப் பிணைய லன்னவிவர்
மணமகிழ் இயற்கை காட்டி யோயே.

—மோதாசானுர்.

(இ - ள்.) இவன் இவள் ஐம்பால் பற்றவும் - பண்டு இந் நம்பி இந்நங்கையினது கூந்தலைப் பிடித்து இழுப்பவும், இவள் இவன் புன்றலை ஓரி வாங்குநள் பரியவும் - இவளும் இவனது புல்லிய தலையின்கண் மயிரைப்பற்றி வளைப்பாளாய் ஓடா நிற்ப வும், காதற் செவிலியர் தவிர்ப்பவும் தவிராது - இவ்விருவ ருடைய அன்புமிக்க செவிலித்தாயர் இடைமறித்து விலக்கா நிற்பவும் விலகாமல், ஏதில் சிறு செரு வுறுப - அயன்மை யுடைய சிறிய போரினைச் செய்வர், பாலே மன்ற நல்லை அம்ம - ஊழே தேற்றமாக நீ மிகவும் நன்மையுடையை; அஃதெற்று லெனிற் கேட்பாயாக, மெல் இயல் துணை மலர்ப் பிணையல்

அன்ன இவர் - இப்பொழுதோ மென்மையுடைய இயல்பு பொருந்திய பொருத்தப்பட்ட இரட்டை மலர்மாலை போன்ற இவர்கள், மணம் மகிழ் இயற்கை காட்டியோய் - தம்முள் இயற்கை மணம் புரிந்துகொண்டு மகிழா நிற்கும் இயல்பினை எமக்குக் கண்கூடாகக் காட்டாநின்றனை ஆகலான்.



**விளக்கம்** :—அண்மையிலே எதிர்செலக் கண்டனராகலின் 'இவன்' என்றும், 'இவள்' என்றும் சுட்டினர். ஐம்பால் - ஐந்து பகுதியாக ஒப்பனை செய்யப்படும் கூந்தல். சிறூர்கள் ஒருவரை ஒருவர் மயிர் பிடித்தீர்த்துச் சிறு போர் செய்தல் யாவரும் கண்டது. சிறுஉக விருக்குங் காலத்தே என்பது படப் புன்றலை ஓரி என்றார். என்னை? நெய் முதலியன இட்டுச் சிறார்கள் தம் தலைபேணுதல் இலராகலான் என்க. ஓரி - ஆண்பால் மயிர். வாங்குநள் - வளைப்பாளாய். இவன் அவள் கூந்தலைப் பிடித்து இழுத்துவிட்டு ஓடினனாக, இவளும் அவன் தலை மயிரைப் பற்றி வளைத்தற்குத் துரத்திச் செல்வாள் என்றவாறு.

காதற் செவிலியர் - இருவருடைய அன்புகெழுமிய செவிலியரும் என்றவாறு. இதனால் இருகுடியின் ஒப்புமையும் தோன்றுதல் அறிக. இத்தலைவனும் தலைவியும் ஒரூரினுட் பிறந்தோர் என்க. இஃதறியார் "ஐவகையினராகலின் செவிலியர் எனப் பன்மையாற் கூறினார்" என்றார். கலாம் செய்யன்மின் எனச் செவிலியர் தடுத்தபொழுதும் தவிராராய்ச் சிறுசெரு வுறுப என்க.

சிறுசெரு - தகுந்த காரணமில்லாத சிறிய போர். மன்ற அம்ம என்பன, 'மன்றம்ம' என, அகரங் கெட்டுப்புணர்ந்தன; விகாரம். மன்ற - தேற்றமாக; ஒருதலையாக. அம்ம, கேட்பித்தற் பொருட்டு. பால் - ஊழ். துணைமலர் - வினைத்தொகை; துணைத்த மலரையுடைய மாலையாகக் கொள்ளினுமாம் என்க. எதின்மை -

அயன்மை. துணை

மலர்ப் பிணையல் இருவரும் ஆதரவுபட்டு ஒன்றிச் செல்லற்கு உவமையாகலின் பண்புத்தொகையாகக் கோடலே சிறப்பு, இரட்டைமாலை என்னும் பொருட்டு.

மணம், ஈண்டுக் களவு மணம். சிறு பருவத்தே மனமொன்றுது இடையறாது சிறு செருவுற்றவர் மனத்தை ஒன்றுபடச் செய்து தம் முட்டாமே மணம் புரியும்படி செய்த ஊழ் பெருவலியுடைத் தென்பார், 'நல்லை மன்ற' என்ருர். பகைக்குணத்தை அன்புடைமையாகத் திருத்தும் செயல் பெரிதும் சிறப்புடையதாகலின் நின் செயல் ஆற்றவும் நன்றென்பார், 'நல்லை' என்ருர். இயற்கை - இயல்பு.

## பாட்டு - உகூ0 : தோழி கூற்று

துறை :—வலிதாகக் கூறிக் குறை நயப்பித்தது. அஃதாவது

தன் பாற் குறையிரந்த தலைவனை ஏற்றுக்கொள்ளும்படி தலைவியை வேண்டக்கருதிய தோழி, தலைவியின் நெஞ்சந் துட்கென்னும்படி வல்லிதாய்க் கூறி உடம்படுவித்தது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'தலைவன் நம்பால் ஆர்வததுடன் வந்துகொண்டிருந்தவன், சில நாட்களாக வாராதொழிந்தான்; அங்ஙனம் வாராதிருத்தற்கு அவன் அன்பின்மை முதலிய ஏதுக்கள் உடையனும் அல்லன்; ஒருகால் யான் அவனுடைய பெருந்தகையுள்ளத்திற்கு ஏலாத செயல்களைச் செய்திருப்பேன் போலும்; அதனுற்றான் அவன்

இனி உங்கே வருதல் கூடாதென மனமாறி அமைந்து விட்டான் என்று கருதுகின்றேன்' என்று தோழி தலைவிக்குக் கூறுகின்றாள்.



௨௫௦ அம்ம வாழி தோழி கோண்கன்
தானது துணிகுவ னல்லன் யானேன்
பேதை மையாற் பெருந்தகை கெழுமி
நோதகச் செய்ததோன் றுடையேன்
கோல்லோ
வயச்சுறு வழங்குநீர் அத்தம்
சின்னாள் அன்ன வரவறி யானே.
—அறிவுடை நம்பியார்.

(இ - ள்.) அம்ம தோழி-தோழீ யான் கூறுவதொன்றனைக் கேட்பாயாக, கொண்கன் வயச் சுறு வழங்கும் நீர் அத்தம் - நந் தலைவன் வலியுடைய சுறுமீன் திரிகின்ற நீர்நிலைகளையுடைய அருவழியின் கண்ணே, சின்னாள் அன்ன வரவு அறியான் - பண்டு சில நாட்கள் வந்தாற் போன்ற வரவினை

இற்றைநாள் அறிகின்றிலன், தான் அது துணி குவன் அலலன் - அவன் தன்னியல்பானே அங்ஙனம வாராதிருத்தலைத் துணிந்து அமை யும் தன்மையுடையானும் அல்லன், யான் என் பேதைமையால்

பெருந்தகை கெழுமி - ஒருகால் யானேதான் எனக்கியல்பா யுள்ள அறியாமையாலே எனக்கொவ்வாத பெருந்தகைமை யோடே பொருந்தி, நோதகச் செய்தது ஒன்று உடையேன் கொல்-அவன் நெஞ்சம வருந்தும்படி செய்த செயல் யாதேனும் ஒன்றை உடையேனோ அல்லனோ அறிகின்றிலன்.

**விளக்கம்** :—அம்ம: இடைசசொல்; கேட்பித்தற்கண்வந்தது. வாழி அசைநிலை. தலைவன் தவறிலன் ஆகலின் அவன் வாழ்க என வாழ்த் தினாள் எனக் கோடலுமாம். கொண்கன் - நெய்தனிலத்தலைவன். பெருங்குடிச செம்மலாகலின் நட்டாரைக் கைவிடுங் கீழ்மை அவன் பாலுளதாகாது என்பாள், 'தான் அது துணிகுவன் அல்லன்' என்றாள். அது என்றது வரவறியாமையைச சுட்டி நின்றது. செய்யுளாகலின் சுட்டு முன் வந்தது அவன் வாராமைக்குக் காரணம் அவன் சிறுமைக் குணமன்று என்றவாறு. பேதைமை மகளிர்க்கியல்பாக உள்ளமையின்

என் பேதைமை எனக் கிழமைப்பொருளிற் கூறினாள். பேதைமை யால் பெருந்தகை கெழுமி என்று ஏதுக்காட்டியமையால் எனக்கொவ் வாத பெருந்தகைமையை மேற்கொண்டு என்றாளாயிற்று. பெருந் தகைமையாவது ஈண்டுத் தலைமைப்பண்பு. இஃதென் சொல்லிய வாறோ எனின், யான் தலைவனோடு ஊடாடிச் செயல் புரியுங்கால் என் தகுதிக்கேற்ற சொற்செயல்களை மேற்கொள்ளாமல், தலைமையாளர்க் குரிய சொற்செயல்களை மேற்கொண்டு ஒழுகிவிட்டேனோ என்றவாறும். எனவே எனது மிகைச செயல் அவன் உளத்தைப் புண்படுத்தினமை

யால் இக்கீழ்மகள் கேண்மை நமக்கொவ்வாதென நம் நட்பைத் தன் பெருந்தன்மையால் சொல்லாதே சோரவிட்டனன் போலும் என்று தன் பிழைக்கு இரங்கியவாறுதலும், இதனைக் கேட்ட தலைவியின் உளத்தே ஒரோவெனை இவள் நங்கணவனை இனி ஈண்டு வாராதபடி ஏதோ தவறுசெய்து கெடுத்தொழிந்தாள் போலும் என அச்சந்

கு.—22



தோன்ற, அவள் விரைந்து அங்ஙனமாயின் அப்பெருமகனை இனி யாம் எங்ஙனம் காண்பாம் என்று ஆராய்வாளாயத் தோழியை உபாயம் வினவ முற்படுவாளாதலும் அங்ஙனம் தலைவனைப் பெறத் தலைவி முற்பட்டவழி, குறைநயப்பித்தல் தோழிக்கு எளிதாம் என்பதும் நுண்ணிதின் உணர்க.

இங்ஙனம் நுண்ணிதாய்ச் செய்யுளமைத்த அருமை நோக்கியே இதனை யாத்த நல்லிசைப் புலவரை அறிவுடை நம்பி என நம்முன்னோர் ஏதுப் பெயரானே வழங்கினர் போலும்.

தலைவன் நின்பால் பேரன்புடையன் என்பதனைக் குறிப்பான் உணர்த்துவாள், 'வயசுறா வழங்கு நீர் அத்தம் வருவோன்' என்றாள். சின்னாள் அன்ன வரவு - முன்னர்ச சில நாட்கள் வந்தது போலும் வரவென்க. வரவறியான் - வாராதவன் ஆயினன என்றபடி. வயச் சுறா - வலிய சுறாமீன். தலைவன் வருவழியில் நீர்நிலைகளில் இறங்கி வருதல் வேண்டும் என்பாள், 'நீர் அத்தம்' என்றாள். நின்பாற் கழி பெருங்காதலன் என்பாள், 'வயசுறா வழங்கும் நீரத்தம் சின்னாள் வரலானன்' என்றாள். பெருந்தகைமையை உரிமை என்றாருமுளர். உரிமையாற் றகாத செய்தவழி அதனைப் பொறுத்தலே தலைவற்குச் சிறப்பாகலின் அது கருத்தன்றென்க.

# பாட்டு - உ௬௧ : தலைவி கூற்று

துறை .—வாயிலாகப்புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது. அஃதாவது, பரத்தமை மேற்கொண்ட தலைவனபால் ஊடியிருந்த தலைவியைத் தன்பால் குறையிரந்த தலைவற்கிரங்கிக் குறை நயப்பிக்கப்புக்க தோழிக்குத் தலைவி மறுத்துக் கூறியது.

இதன்கண், 'தலைவர் நல்லர்' என்ற தோழியை நோக்கி, 'ஏடி, அவர் இவ்வூரின்கண்ணே உறைபவராயிருந்தும், நம்முடைய தெருவிற்கு வருவாரல்லர்; எப்போதாவது வந்தால் நம்மொடு அளவளாவுதலும இலர்; ஆகலின் என் நாணத்தைக் கொன்று நலத்தினை இழப்பித்த அப்பொல்லாக் காமமும் சேட்சென்று கழிந்தது; இங்ஙனம் ஒழுகுவோர் நல்லராதல் எங்ஙனம்?' என்று தலைவி கடிந்து கூறுகின்றாள்.

உ௬௧. ஓரூர் வாழினும் சேரி வாரார்
சேரி வரினும் ஆர முயங்கார்
ஏதி லாளர் சுடலை போலக்
காணக் கழிப மன்னே நாணட்டு
நல்லறி விழந்த காமம்

வில்லுமிழ் கணையிற் சென்றுசேட்
படவே.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

## மூலமும் உரையும்

௩௩௬

(இ - ள்.) தோழி ஓர் ஊர் வாழினும் சேரி வாரார் -

தோழி! நந்தலைவர் நாம் இருக்கும் இவ்வூரிலேயே வாழ்பவராயிருந்தும் நம தெருவிடத்தே வருவாரல்லர், சேரி வரினும் ஆர முயங்கார் - எப்பொழுதாவது அவர் இத்தெருவிடத்தே வருதலுண்டெனினும் அப்பொழுதும் தம நெஞ்சு பொருந்த நம்மைத் தழுவுவாருமல்லர், ஏதிலாளர் சுடலை போலக் காணாக் கழிப - அவர் சேரியிடத்தே வரும்பொழுதும் அயலாருடைய சுடுகாட்டைக் கண்டு செல்லுவார் போல நம்மைக் காணாத் திரையானே வாளா செலலாநிற்பர், நாண் அட்டு நல்லறிவு இழந்த காமம் - பண்டு அவரைக் கண்டதுணையானே எனது நாணத்தைக் கொன்று நல்லறிவை இழப்பித்த என் காமம், வில் உமிழ் கணையிற் சென்று சேண் பட - வில்லால் எய்யப்பட்ட அம்புபோன்று போய் நெடுந்தூரத்தே வீழ்ந தொழியும்படி.

**விளக்கம்** :—'தலைவர் இங்ஙனம் ஒழுகவின், அவர் நம்பால் அன்புடையாரல்லர்; அவர் பொருட்டு நீ பரிவது நன்றன்று!' என்று வாயில் மறுத்தாள் தலைவி என்க. சேரி-தெரு. 'சேரிக்கு வருதலிலர்; எப்பொழுதேனும் வந்தவிடத்தும் முயங்கார்' என்க. ஆரமுயங்குதல்-வேட்கை தீரத்தழுவுதல்.

கண்டவழி வெறுத்து ஒதுங்கிச் செல்லாநின்றனர் என்பாள், ஏதிலாளருடைய சுடலை காண்பாரை உவமை எடுத்தோதினள். ஏதிலாளர் - அயலோர். காணக் கழிப - கண்டு செல்வார். காண: செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். காணுமளவானே செல்வர் பிறிதொன்றும் செய்யார் என்று புலந்தபடியாம். நம்பால் அன்பிலாரைப் பண்டு கண்ட பொழுது நம் உயிரினும் சிறந்த நாணத்தையும், நல்லறிவினையும் அழித்து வளர்நதது இக்காமம்; அஃது இப்பொழுது கையற்று அழிகின்ற தென்பாள், 'நாணட்டு நல்லறி விழுந்த காமம் சென்று மீசேட்பட' என்றாள். நாணமும் நல்லறிவும இழந்தவர் கையறவு கொள்வது இயற்கையாதலுணர்க.

தொடக்கத்தே மிகவும் விசையுடன் எழுந்து செல்லச் செல்ல விசையவிந்து இறுதியில் இயக்கமற்று வீழ்ந்து கிடக்கும் அம்பினைத் தலைவன்பால் தொடக்கததே வேணவாவுடன் தோன்றி, நாட்கள் கழியக் கழிய அவவிழைவு குன்றி, இறுதியில்செயலற்றுப்போன தன் காமத்திற்கு உவமை எடுத்தோதிய அழகு பெரிதும் பாராட்டத் தக்கதாதல் அறிக.

இக் காமம் இந்நிலையை எய்தியது எனக்கும் மகிழ்ச்சியே என்பாள் போல, அதன் கொடுஞ்செயலை விதந்து கூறினள் என்க. இங்ஙனமே திருக்குறளினும்,

> "ஓஒ இனிதே எமக்கிந்நோய் செய்தகண்
> டாஅ மிதற்பட் டது." (குறள் - ககஎசு)

என வள்ளுவனாரும் ஓதுதலுணர்க.

இது தலைவி தலைவனை விரும்புகிலாள் போன்று

கூறியது.



## பாட்டு - உ௬உ : தோழி கூற்று

துறை —பிரிவிடைத் தோழி வற்புறுத்தியது

அஃதாவது
தலைவன் வினைவயிற் பிரிந்த காலத்தே ஆற்றாளாய தலைவிக்கு, 'நீ ஆற்றல் வேண்டும்' என்பதுபடத் தோழி கூறியது

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'நந்தலைவர் நின்னை மறப்பாரல்லர் ; இடையறாது நின்னை நினைந்தே இருப்பர் ;
ஆடவர்க்கு வினையே உயிரன்றோ! தாம் மேற்கொண்ட வினை முற்றாமையாலே அவர் இன்னும் வந்திலர் ; நீ ஆற்றியிருத்தலே அறிவாம்' என்று கூறித் தேற்றுகின்றாள்.

உ௬உ. உள்ளார் கொல்லோ தோழி உள்ளியும்
வாய்ப்புணர் வின்மையின் வாரார்
கொல்லோ
மரற்புகா வருந்திய மாவெருத் திரலை
உரற்கா லியானை யொடித்துண் டெஞ்சிய
யாஅ வரிநிழல் துஞ்சும்

மாயிருஞ் சோலை மலையிறந் தோரே.

—ஊண் பித்தையார்.

(இ - ள்.) தோழி—, மரல் புகா அருந்திய மாஎருத்து இரலை - மரலாகிய உணவை உண்ட பெரிய பிடரையுடைய ஆண் மான், உரல கால் யானை ஒடித்து உண்டு எஞ்சிய - உரல் போன்ற கால்களையுடைய யானையால் முறித்து உண்ணப்பட்டு எஞ்சி நின்ற, யாஅ வரிநிழல் துஞ்சும் - யாமரத்தினது வரிவரியான நிழலிலே துயிலாநின்ற, மா இருஞ் சோலை மலை இறந்தோர் - மிகப் பெரிய சோலைகளையுடைய மலைகளைக் கடந்து சென்ற நந்தலைவா, உள்ளார் கொல் - நம்மை நினையாரோ; நினைந்தே இருப்பர், உள்ளியும் - நம்மை நினைத்தும், வாய்ப்பு உணர்வு இன்மையின் - தாம் மேற்கொண்ட வினைமுற்றற்கு வாய்ப்பு உணரப்படாமையானே, வாரார் - இன்னும் வந்திலர்; அதனையே காண்.

**விளக்கம்** :—தலைவர் தாம் மேற்கொண்ட வினைமுற்றியவுடனே வருதல் ஒருதலை ; அதுகாறும் ஆற்றுக என்பது குறிப்பு.

உள்ளுதல் - நினைதல். கொல்: வினவின்கண் வந்தது. தலைவி 'நம்மைத்தலைவர் உள்ளார் கொல்?' என்று ஐயுற்றுக் கூறத் தோழி உள்ளாதிரார் என்பது பட அவள் வினாவையே கொண்டு கூறுகின்றாள் என்க. 'உள்ளார் கொல்' என்ற வினா, உள்ளுவர் என்னும் பொருள் பட நின்றது.

வாய்ப்புணர்வு - வினைமுற்றுமிடனறிதல். 'வினையே ஆடவர்க் குயிர்' ஆகலின், நம்மை எண்ணி வினைமுற்றாது மீளலும் அவர்க்குத்

## மூலமும் உரையும்

௩௪௧

தகவன் றென்பான், 'உள்ளியும் வாரார்' என்றாள். வாய்ப்புணர் வின்மையின் வாரார் எனவே, 'வாய்த்தவுடன் வருதல் ஒருதலை' என்று குறிப்பாலுணர்த்தினாளாயிற்று.

மரல் - ஒருவகைக் கொடி. இதனை மான்கள் தின்னும். இதனை "மடமா னசாவினத் திரங்குமரற் சுவைக்கும்," (அகம்-௪௬.) என்றும், "வரிமரல் கறிக்கும் மடப்பிணை (அகம் - ௧௩௩.) என்றும் பிறர் கூறு மாற்றானும உணாக.

வாரார் கொல்லோ என்பழிக்'கொல்,' - அசைநிலை என்க. புகா- உணவு. மரற்புகா: பண்புத்தொகை. இரலை - ஆண்மான்.

உண்டு என்னும் எச்சத்தை உண்ண என்று

திரித்துக் கொள்க.

எஞ்சிய என்பதை எஞ்சுவித்த எனப் பிறவினை ஆக்கினும் அமையும். உண்டு எஞ்சுவித்த யாநிழல் என்க. யா - ஒரு வகைமரம். வரிநிழல் - கிரம்பா நிழல். இரலை புகாவுண்டு நிழலிலே துஞ்சும் சோலை என்றது, அதனைக் காணுந் தலைவர் யாமும் இவ்விரலை போன்று வினைமுடித்து மீண்டும் மனையிற் சென்றின்புறவேம் எனககருதுவர் என்றவாறு.

## பாட்டு - உஙங: தலைவன் கூற்று

துறை :—பட்டபின்றை வரையாது சென்று வினைமுற்றி மீளுந் தலைமகன் தோப்பாகற்குச் சொல்லியது. அஃதாவது, களவு வெளிப்பட்டபின்னர் வரைந்து கொள்ளாதே வினைமேற் சென்ற தலைவன் வினைமுற்றி மீண்டு வரும் பொழுது தலைவியின் ஊரைப் பாகற்குக் காட்டிக் கூறியது.

இதன்கண், தலைவன் பாகனை நோக்கி, 'அதோ கவலைக் கிழங்ககழ்ந்த சிறுகுழிகணிறையக் கொன்றைப் பொன்மலர் உதிர்ந்து பொற்பேழை திறந்தாற்போல் தோன்றுகின்ற முல்லை நிலத்தின் கண்ணே தோன்றுவதுதான் நந்தலைவியின் வண்மை மிக்க தந்தையின் ஊராகும்' என்று அறிவிக்கின்றான்.

உ௲௲. கவலை கெண்டிய அகல்வாய்ச் சிறுகுழி
கொன்றை யொள்வீ தாஅய்ச் செல்வர்
பொன்பெய் பேழை மூய்திறந் தன்ன
காரெதிர் புறவி னதுவே உயர்ந்தோர்க்கு
நீரொடு சொரிந்த மிச்சில் யாவர்க்கும்
வரைகோ ளறியாச் சொன்றி
நிரைகோற் குறுந்தொடி தந்தை யூரே!

—பேயனார்.

(இ - ள்.) பாகனே!, உயர்ந்தோர்க்கு நீரொடு சொரிந்த மிச்சில் - அந்தணர்க்கு நீரோடே வழங்கி எஞ்சிய பொருளையும்,



யாவர்க்கும் வரைகோ ளறியாச் சொன்றி - எத்தகையோர்க்கும் தடைசெய்தலை அறியாத சோற்றையும் உடைய, நிரை கோல் குறுந்தொடி தந்தை ஊர் - நிரல்பட்ட திரண்ட குறிய வளையலை யுடைய நந்தலைவியினுடைய தந்தையினது ஊர், கவலை கெண்டிய அகல் வாய்ச் சிறுகுழி - கவலைக் கிழங்கைக் கல்லி எடுத்தமையா லுண்டான அகன்ற வாயையுடைய சிறிய குழிகள், கொன்றை

ஒள் வீ தாஅய் - கொன்றையினது ஒளளிய மலர்கள் உதிர்ந்து பரக்கப்பட்டு, செல்வர் பொன் பெய் பேழை மூய் திறந்தன்ன - செல்வர்கள் பொன் பெய்துவைத்த பேழையினது மூடியைத் திறந்தாற் போன்ற தோற்றத்தையுடைய, கார் எதிர் புறவினது- கார்காலத்தை ஏற்றுக் கொண்டுள்ள இம் முல்லைநிலத்தின் கண்ணதாம்.

**விளக்கம்** :—வரைந்துகோடலுக்கு முன்னர்க் யும் வினைமேற் பிரிந்துசேறல் உண்டென்பதனை,

களவுக்காலத்தே

"வெளிப்படை தானே கற்பினொ டொப்பினும்
ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக
வரையாது பிரிதல் கிழவோற் கில்லை" (களவு - ௫௦)

என்னும் தொல்காப்பியக் களவியற் சூத்திரவுரையில் ஆசிரியர் நச்சினார்க்கினியர், "மூன்றுமென முற்றும்மை கொடாது கூறினமையின், ஏனைப்பிரிவுகளின் வரையாது பிரியப் பெறும் என்ற வாறாயிற்று; அவை வரைதற்குப் பொருள்வயிற் பிரிதலும், வேந்தற்குற்றுழியும், காவற்குப் பிரிதலும் என மூன்றுமாம்." என்று கூறியதனானும் அறியலாம்.

இச் செய்யுளைக் கற்பின்கட் பிரிவாகக் கருதுவாரும் உளர்.

கவலை - ஒருவகைக் கிழங்கு. கெண்டுதல் - கல்லுதல். கொன்றைப்பூ உதிர்ந்து கிழங்ககழ்ந்த குழிகளின் நிறைந்திருத்தல் பொற்பேழை திறந்தாற் போன்று தோன்றும் என்க. மூய் - மூடி. கொன்றை கார்ப்பருவத்தே மலர்தலின், 'காரெதிர் புறவு' என்றான். புறவு - முல்லை நிலம். உயர்ந்தோர் என்றது அந்தணரை. மிசசில் - எஞ்சிய பொருள். தனக்குத் தலைவியைத் தந்த நன்றி கருதி, அவள் தந்தையைப் பாராட்டினான் என்க. வரைகோள் - தடுத்தல். சொன்றி - சோறு. எத்தகையோர்க்கும் வரையாது சோறுவழங்கும் வள்ளல் என்று பாராட்டியவாறும். குறுந்தொடி: அன்மொழித்தொகை. வினைமுற்றி மீண்டு வரும் தலைவன், தலைவியின் ஊரைக் காண்டலும் மகிழ்ந்து பாகனுக்குக் கூறினான் என்க.

## பாட்டு - உ௩௪ : தலைவி கூற்று

துறை:— பருவ வரவின்கண் தோழிக்குக் கிழத்தியுரைதது. அஃதாவது, 'கார்ப்பருவத் தொடக்கத்தே மீண்டு வருவேன்' எனக் கூறிப் பிரிந்த தலைவன், அப்பருவம் வந்த

### மூலமும் உரையும்

௩௪௩

பின்னும் வாரானாக, ஆற்றாமைமிக்க தன்னிலைமை தெரித்துக் கூறியது.

தலைவி தோழிக்குத்

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'மயக்கமுடையோர் வானம் சிவந்து ஞாயிறுபட்டு முல்லை மலரும் காலமே அந்திக் காலம் என்று கூறுகின்றனர்; பிரிந்துறைவோர்க்கோ, கோழி கூவும் விடியலும், நண்பகலும், எல்லாம் மாலைக்காலமே ஆகின்றன' என்று கூறுகின்றாள்.

உ௬௪. சுடர்செல் வானஞ் சேப்பப் படர்கூர்ந்
தெல்லறு பொழுதின் முல்லை மலரும்
மாலை என்மனா மயங்கி யோரே
குடுமிக் கோழி நெடுநக ரியம்பும்
பெரும்புலர் விடியலு மாலை
பகலும் மாலை துணையி லோர்க்கே.

—மிளைப்பெருங் கந்தனார்.

(இ - ள்.) தோழி!, மயங்கியோர் - அறிவு மயக்க முடைய மாந்தர்கள், சுடர் செல வானம் சேப்பப் படர்கூர்ந்து - ஞாயிறு மறைந்து போன வானம் சிவப்பத் துன்பமிக்கு, எல் அறு பொழுதின் - ஒளி அற்ற பொழுதினையே, முல்லை மலரும மாலை என்மனர் - முல்லைப்பூ மலருகின்ற

மாலைக்காலம என்று கூறு நிற்பர், துணை இலோர்க்கு - காதலரைப் பிரிந்து தமியராயி ஞர்க்கோ, குடுமிக் கோழி நெடுநகா இயம்பும-குட்டினையுடைய சேவற்கோழி நெடிய நகரததின்கண்ணே கூவா நின்ற, பெரும் புலர் விடியலும் மாலை-பெரிய இருள் புலர்கின்ற விடியற் காலமும் மாலைக்காலமேயாகும், பகலும மாலை - அஃதான்று நண்பகற் பொழுதும மாலைக்காலமே யாகும்.

**விளக்கம்:**—'மாலைக்காலத்தில் மட்டுமே காமநோய் மிக்கு வருத்தும்' என்பர் அறிவு மயக்கமுடையோர்; 'காதலர்ப் பிரிந்து தமியராயினார்க்கு எல்லாச சிறுபொழுதுகளும் அம்மாலைக்காலம் போன்றே நோயை மிகுவிககின்றன' எனபது கருத்து. மாலைப்பொழுதின்கண் காமநோய் மிகுமென்பதை,

"மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது." (குறள் - கஉஉக)

"காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்." (குறள் - கஉஉஎ)

என்றற் றொடக்கத்துத் திருக்குறட் பாக்களான் உணர்க.

சுடர் - ஞாயிறு. ஞாயிறு மறைந்து போன வானம் என்க. ஞாயிறு மறைந்தவுடன் மேலைவானம் சிவத்தல் இயல்பு. எல் - ஒளி. ஞாயிறு

மறைந்து செக்கர்வானந் தோன்றி ஒளி மங்கும் ஒரு சிறு பொழுதை மட்டுமே காமநோய் மிகும் மாலை என்பர் அறியார். பிரிந்தோர்க்கு எல்லாப் பொழுதும் மாலைப்பொழுதே என்றாள் என்க. குடுமி - சூட்டு, கொண்டை; கோழிச் சேவல் என்றவாறு. இயம்பும்-கூவும். நெடுநகர்-நெடிய வீடுமாம்.

என்மனார் - என்று கூறுவார்கள். மன் : அசைநிலை. பிரிந்தோர்க்கு எல்லாப் பொழுதுமே பெருந்துன்பம் செய்வனவாக மாலை ஒன்றுமே துன்பஞ் செய்வது என்று கூறுகின்றனர். அவர் உண்மை உணராதார் என்பாள், 'மயங்கியோர்' என்றாள்.

## பாட்டு - உகரு : தலைவன் கூற்று

துறை :—வரையாது பிரிந்து வருவான் வாடைக்கு உரைப் பாணுப் பாகற்கு உரைத்தது அஃதாவது, களவுக் காலத்தே வினைமேற் பிரிந்து செல்கின்ற தலைவன், 'தன் பிரிவாலே தலைவி வருந்துவள் விரைவில் மீளுதல் வேண்டும்' என்று பாகனுக்குக் குறிப்பானே உணர்த்தும் பொருட்டு அவன் கேட்ப வாடையை விளித்துக் கூறியது.

இதன்கண், தலைவன் வாடையை விளித்து 'காற்றே அதோ அருவி தாழ்கின்ற மலையின் உச்சியிலே இருப்பதுதான் தலைவி
யின் ஊர்; ஆண்டு அவள் தனித்துறைகின்றாள்; ஆகலின், அவளை நீ வருத்தாதே பாதுகாப்பாயாக' என்று கூறுகின்றான்.

உ௭௫. ஓம்புமதி வாழியோ வாடை பாம்பின்
தூங்குதோல் கடுக்குந் தூவெள் ளருவிக்
கல்லுயர் நண்ணி யதுவே நெல்லி
மரையின மாரு முன்றிற்
புல்வேய் குரம்பை நல்லோ ளூரே.

—மாயெண்டனூர்.

(இ - ள்.) ஓ வாடை - ஓ வாடைக்காற்றே!, மரையினம் நெல்லி ஆரும் முன்றில் - மரையின் கூட்டம் நெல்லிக்காயைத் தின்னுகின்ற முற்றத்தையுடைய, புல்வேய் குரமபை ஊர் - புல்லால் வேயப்பட்ட குடில்களையுடைய தலைவியினது ஊர், பாம்
பின் தூங்குதோல் கடுக்கும் தூவெள் அருவி - பாம்பினது தூங்காநின்ற உரியினை ஒக்கும தூய வெள்ளிய அருவிகளை உடைய, கல் உயர் நண்ணியது - மலையின் உச்சியிலே பொருந்
தியது, ஓம்பு மதி வாழி - ஆண்டுத் தனித்துறையும் நீ வருத்தாமற் பாதுகாப்பாயாக; நீ வாழ்க.

விளக்கம் :— இதனை, "தலைவன் நெட்டாறு சேறலின்றி அணிமைக் கட் பிரிந்தவழிக் கூறியது" (தொல் - களவு - கஎ. உரை.) என்பர்

## மூலமும் உரையும்

௩௪௫

இளம்பூரண அடிகளார். இதன்கண் வாடைக்குக் கூறு முகத்தான், தாவொரு தலைவியைக் களவுமணம் புணர்ந்துள்ளதனையும், அவள் தனது பிரிவாலே பெரிதும் வருந்தியிருப்பள் என்பதையும், அவள் ஊர் இவ்விடத்தது என்பதையும், பிரிந்துறைவார் ஆற்றொணாத கூதிர்காலம் இஃது என்பதையும், ஆதலால் நாம் விரைந்து மீளல் வேண்டும் என் பதையும் தலைவன் பாகனுக்கு உணர்த்தியவா றுணர்க.

ஓம்புமதி 'மதி' முன்னிலை யசை. வாடை ஓம்புதலாவது, தான் வருத்தாதே ஒழிதல். பிரிந்தாரை வாடை பெரிதும் வருத்தும் என்ப தனை "இன்னுநெதிதரும் வாடையொடு, என்னு யினள்கொல் என்னு தோரே." (குறுந் - ககo.) எனப் பிறர் கூறுமாற்றானும் உணர்க.

தூங்கு தோல் - நாலுகின்ற உரி. இது அருவிக்குவமை. உயர் - உச்சி. நண்ணியது - பொருந்தியது. ஏகாரம் : பிரிநிலை.

மரை - ஒருவகை விலங்கு. நெல்லி-ஆகுபெயர்; நெல்லிக்காய். நல்லாரை நலிதல் பெரும்பாவமென்பான், 'நல்லோள்' என்றான். நலியாமைக்கு ஏதுக்காட்டியவாறு குரம்பை - குடில்.

## பாட்டு - உ௩௬ : தோழி கூற்று

துறை :—வரைவிடைவைத்துப் பிரிவான், 'இவள் வேறு படாமை ஆற்றுவி' என்றாற்குத் தோழி நகையாடி உரைத்தது. அஃதாவது, வரைவிடைவைதது த் தலைவியைப் பிரிந்து செல லக் கருதிய தலைவன், தோழியை நோக்கி, 'யான் வருந்துணையும் இவளை மேனி நலனழியாமல் ஆற்றுவாயாக' என, தோழி நகைத்து அஃதியலா தென்பதுபடக் கூறியது.

இதன் கண், 'இவளை ஆற்றுவித்திடுக' என்ற தலைவனைத்

தோழி 'ஐய இவளை வேறுபடாது ஆற்றுவிக்கவெனில், பிரிகின்ற நீ இவள்பாலுண்ட பெண்மைநலனை எல்லாம் தந்து போதல் வேண்டும்; இன்றேல் ஆற்றுவித்தல் கின்றாள்

அரிது' என்று கூறு

உ௬௬. விட்டனை விடுக்குநாள் வருக அதுநீ
நேர்ந்தனை யாயின் தந்தனை சென்மோ
குன்றத் தன்ன குவவுமணல்
அடைகரை
நின்ற புன்னை நிலந்தோய் படுசினை

வம்ப நாரை சேக்கும்
தண்கடற் சேர்ப்பநீ உண்டவென்

னலனே.

—நரிவெரூஉத் தலையார்.

(இ - ள்.) குன்றத்து அன்ன குவவுமணல் அடைகரை - மலையைப் போன்ற குவிந்த மணலையுடைய நீரடை கரையின்



கண்ணே, நின்ற புன்னை நிலந்தோய் படுசினை - வளர்ந்து நின்ற புன்னைமாத்தினது நிலத்தைத் தொடுமாறு தாழ்ந்த கிளையின் மேல், வம்ப நாரை சேக்கும் - புதிதாக வந்த நாரை தங்கா நின்ற, தண் கடல் சேர்ப்ப-தண்ணிய கடலையுடைய தலைவனே, விட்டென விடுக்கும் நாள் வருக - இவளை நீ கைவிட்டாய் என்று அறியும்படி நீ பிரிந்து போகும நாள் வருவதாயின் வருக, அது நீ நேர்ந்தனையாயின் - அந்நாள் வருதலை நீ உடம் படுவாயாயின், நீ உண்ட என் நலன் தந்தனை சென்மோ - நீ நுகர்ந்த எனது பெண்மை நலத்தை முழுதும் தந்து செல்வா

யாக.

**விளக்கம்**:—“மாணலங் தாவென வகுத்தற் கண்ணும்” (கற்பு-கூ.)
எனவரும் தொல்காப்பிய விதி கற்பின்கண் ஓதப்பட்டதாயினும் அது களவிற்கும் உரித்தென்பார், துறை வரைந்தவர் “வரைவிடை வைத்துப் பிரிவான்” என்று விதந்து கூறினர்.

விட்டென விடுக்கும் நாள் என்றது, முழுதும் கைவிட்டாய் என, யாங்கள் அறிந்து கொள்ளும்படி நீ எம்மை விட்டகலும் நாள் என்றவாறு அந்நாளே தலைவி இறந்துபாடுறுநாள் ஆகும் என்பாள், ‘விட்டென விடுக்கும் நாள்’ என்றாள். அத்தகைய தொரு கொடிய நாள் எமக்கு வருதலை நீயும் உடம்படுவாயாயின் என்பாள், ‘அது நீ நேர்ந்தனை யாயின்’ என்றாள். நேர்ந்தனையாயின் என்றது, நேராமையே நினக்குத் தகவாம்; அத் தகவின்றி நேர்வாயெனின் என்பதுபட நின்றது. “இங்ஙனமொரு கேடு எங்கட்குச செய்யத்துணிந்த நீ, ‘அவளை ஆற்றுக’ என்கின்றனை. நின் கட்டளைப் படி யான் ஆற்றுவித்தற்கு உறுதுணையாக நீ நுகர்ந்த அவள் நலனை மீண்டுங் கொடுததுச் செல்க” என்பாள், ‘நலன் தந்தனை சென்மோ’ என்றாள். நலன் தந்து சேறல் நினக்கியலாதாற் போன்று, நின்பிரிவின்கண் அவளை ஆற்றுவித்தலும் எனக்கியலாதாம் என்பது குறிப்பு.

வம்பநாரை - வேற்று நிலத்திருந்து புதிதாக வந்த நாரை. அஃது
அந்நிலத்தியல்பறியாது தனக்கு இரைகிடைக்கப் பெறாத புன்னைப் படுசினையி லிருந்தாற் போன்று, புதுவணுகிய நீயும் அவளியல்பறியாது பிரிந்துபோய் ஈட்டும் பொருளின்கண் மனம்வைததனை என்பது குறிப்பு. நின்னைப் பிரிந்து தலைவி உயிர்வாழ்வாள் அல்லள் என்றுணர்த்தியவாறும். நின்கடலே தண்ணிது! நீ வெய்யை என்பாள், ‘தண்கடற் சோப்ப’ என்றாள். தலைவிக்கும்
கருதாது ‘நீ உண்ட என் நலன்’ என்றாள்.
தனக்கும் வேற்றுமை

## பாட்டு - உ௩எ : தலைவன் கூற்று

துறை :—பொருள்முற்றி மீள்வான் தேர்ப்பாகனுக்கு உரைத்தது. அஃதாவது, தலைவியைப் பிரிந்து பொருளீட்டச் சென்ற தலைவன், அதனை ஈட்டிக்கொண்டு மீண்டு வரும்போது, 'தன் நெஞ்சிற் கியையத் தேர் விரைந்திலது; விரைந்து



செலுத்துக!' என்று பாகனுக்குக் விதுப்புறுதலைக் கூறியது.

கூறுவான், தன் நெஞ்சு

இதன்கண், 'பாகனே கேள்! இடையே அஞ்சத் தகுவன உளவாதலை ஆராயாது என் நெஞ்சமோ தான் விரும்பிய தலைவியைத் தழுவும் பொருட்டு என்னைப் பிரிந்து அவள்பாற் சென்றுவிட்டது; ஈண்டு எஞ்சிநின்ற கைகளானே பிணித்துத் தழுவுதலை அஃது விடுமாயின் அத் தழுவுதலால் யாது பயன்; பயனுறக் கைபிணி நெகிழாது தழுவிக்கொள்ள அவள் இருக்கு மிடத்திற்கும் எமக்கும் இடையே கிடந்த இடையூறுகள் தாம் எத்தனையுள்ளனகாண்' என்று தலைவன் கூறுகின்றான்.

உ௱எ. அஞ்சுவ தறியா தமர்துணை தழீஇய
நெஞ்சுநப் பிரிந்தன் றாயினும் எஞ்சிய
கைபிணி நெகிழின்அஃ தெவனோ நன்றும்
சேய வம்ம இருவா மிடையே
மாக்கடல் திரையின் முழங்கி வலனேர்பு
கோட்புலி வழங்குஞ் சோலை
எனைத்தென் றெண்ணுகோ முயக்கிடை
மலைவே.

—அள்ளூர் நன்முல்லையார்.

(இ - ள்.) பாகனே!, அஞ்சுவது அறியாது அமர்துணை தழீஇய - அஞ்சுதலை அறியாமல் தான் விரும்பிய தலைவியைத் தழுவிக்கொள்ளும் பொருட்டு, நெஞ்சு நம்

பிரிந்தன்று - நெஞசம் நம்மைப் பிரிந்து அவள்பாற் சென்றுவிட்டது, ஆயினும - அஃது அவ்வாறு சென்றதாயினும், எஞ்சிய கை பிணி நெகிழின் அஃது எவன் - ஈண்டு நம்மோடு எஞ்சிநின்ற கைகள் அது தழுவுங்கால் தம் பிணித்தற்றொழிலை விட்டுவிடு மாயின் அததழுவுகையால் யாது பயன், இருவாம் இடை நன்றும் சேய - நெஞ்சின் தழுவுதல் பயன்படுமாறு கையாற் பிணித்துக்கோடற்கோ யாம் இருவரும் உறையும் இடங்கள் ஒன்றற்கொன்று பெரிதும் சேய்மைக்கண் உள்ளன. முயக்

கிடை மலைவு - மேலும் எங்கள் தழுவுகைக்கு இடையே அமைந்த இடையூறுகளாகிய, மாக் கடல் திரையின் முழங்கி வலன் ஏர்பு கோள புலி வழங்கும் சோலை - பெரிய கடலினது

அலை முழங்குமாறு முழங்கி வலமாக எழுந்து கொலைத் தொழிலையுடைய புலிகள் திரியாநின்ற சோலைகள் தாமும், எனைத்தென்று எண்ணுகோ - எத்துணை உள்ளன என்று எண்ணுவேன்.

௩சஅ குறுநதொகை

**விளக்கம்** :—நெஞ்சம் யாதானும் ஒரு பொருளைச் சென்று பற்றுதற்கு அஞ்சவேண்டியதின்றாகலின், அச்சம் அறியாது நெஞ்சு பிரிந்தது என்றான். அமர்துணை - விரும்புதற்குக் காரணமான துணை என்க. தழீஇய - தழுவும் பொருட்டு. பிரிந்தன்று - பிரிந்தது. எஞ்சிய நம்மோடு தங்கிவிட்ட என்க. நெஞ்சம் போனவழி உடல் போகமாட்டாமையின் கை எஞ்சியதென்றான். நெஞ்சம் நம்மைப் பிரிந்து போய வழியும் ஆண்டு அவளைத் தழுவுதற்குரிய கைகள் இன்மையின் அதன் தழுவுதல் பயனின்றெனபான், 'கை பிணி நெகிழின் அஃது எவன்' என்றான். கைபிணி - கையாற்றழுவும் தழுவுகை என்க. நெகிழ்தல் - இல்லையாதல் நெஞ்சம் தழுவுதல், தலைவியையும் அவள் உறுப்புக்களையும் ஊன்றி நினைத்தலே யாகலின், அந்நினைவு மாத்திரையால் துன்பமே உண்டாம். இன்பமுண்டாக வேண்டுமாயின், நெஞ்சு பொருந்துதலோடே உடலானும் பொருந்தித் தழுவுதல் வேண்டும். அதற்கு யாம் இவண மாகலின் நெஞ்சு பிரிந்தமையால் துன்பமே உண்டாயிற்று என்றிரங்கியவாறு.

நம் நெஞ்சு விரைந்து சென்றதற் கேற்ப யாமும் விரைந்து செல்லற்கோ, யாங்கள் இருவரும் இருக்கும் இடங்கள் சேயவாயின; வழியும் கொடிய புலிகளையுடைய சோலைகள் பலவுடைத்தெனபான்,

'முயக்கிடைமலைவு எனைத் தென் றெண்ணுகோ '

என்றான், மலைவு - இடையூறு. கூட்டத்திற்கிடையே கிடந்த இடையூறுகள் என்க. இடையூறுகள் - சேயவாதல், புலி வழங்கும் சோலைகள் இடையில் உளவாதல், நெஞ்சம் பிரிதல், தேர்விரையாமை முதலியனவாம்.

'இதனால் யான் தலைவியைக் கண்டு அளவளாவப் பெரிதும் அவாவி அலமருகின்றேன். ஒல்லும்வகை தேரை விரைந்து செலுத்துக' என்று பாகற்குக் குறிப்பால் உணர்த்தப்பட்டமை உணர்க.

## பாட்டு - உரு அ : தோழி கூற்று

துறை :—தலைமகன் பரத்தையின் மறுத்தந்து வாயில் வேண்டித், தோழியிடைச் சென்று தெளிப்பான், புக்காற்குச் சொல்லியது. அஃதாவது, பரத்தையினிடமிருந்து தலைவியின் பால் மீண்டுவந்த தலைவன், தலைவியின் ஊடல் போக்கித் தன்னை
நயப்பிக்கும் பொருட்டுத் தோழியின்பாற் சூண்மொழிந்து, தன் தீதின்மைமையைத் தெளியக் கூறியபொழுது அத்தோழி வாயில் மறுத்தது.

இதன்கண், சூண்மொழிந்து தேற்றிய தலைவனை நோக்கித்
தோழி, 'ஐய! நின் சூண்மொழியை யான் தேறேன் காண்! அவலிடித்த உலக்கைகளை வயல் வரம்பிற் கிடத்திவிட்டு மகளிர் வண்டலயருதற்கு இடமான தொண்டிப் பட்டினம் போன்ற என்
நலத்தை என்பாற் கொடுத்துவிட்டு நின் பொய்ச் சூளும் நீயும் புறத்தே ஒழிக' என்று கூறி வாயின் மறுக்கின்றாள்.

## மூலமும் உரையும்

ரு௬௬

உருஅ. பாசவ லிடித்த கருங்கா ழுலக்கை
ஆய்கதிர் நெல்லின் வரம்பணைத் துயிற்றி
ஒண்டொடி மகளிர் வண்ட லயரும்
தொண்டி யன்னவென் நலந்தந்து
கொண்டனை சென்மோ மகிழ்நநின்
சூளே.

—குன்றியனார்.

(இ - ள்.) *மகிழ்ந - தலைவ !, பாசவல் இடித்த கருங்காழ் உலக்கை - பசிய அவலை இடித்த கரிய வயிரம் பொருந்திய உலக்கைகளை, ஆய்கதிர் நெல்லின் வரம்பு அணைத் துயிற்றி - பலரும் நன்றென்று ஆராய்கின்ற கதிரையுடைய நெற்கழனியின் வரம்பாகிய அணையின் கண்ணே வாளாகிடத்தி, ஒள் தொடி மகளிர் வண்டல் அயரும் - ஒள்ளிய வளையலை அணிந்த மகளிர்கள் விளையாடுதற்கிடமான, தொண்டி அன்ன என் நலம் தந்து - தொண்டிப் பட்டினத்தை ஒதத என்னுடைய பெண்மை நலத்தை என்பால் தநதுவிட்டு, சென்மோ - நினது சூண்மொழியை நின் சூள்கொண்டனை நீயே பெற்றுக்கொண்டு செல்வாயாக.*

**விளக்கம்** :—பாசவல் - நெல்லை வறுத்திடியாதே பசசையாக இடித்தியற்றிய அவல். பாசவல் கருங காழலக்கை என்பனவற்றில் முரண் தோன்றிச செய்யுளின்பம் மிக்கமை உணர்க. காழ் - வயிரம். ஆய்கதிர் - அழகிய கதிருமாம். நெல், கழனிக்கு ஆகுபெயர். வரம் பணை - பண்புத் தொகை. துயிற்றி என்றது, வாளாகிடத்தி என்ற வாறு. வண்டல் - விளையாட்டு, "தகைமிகக், கோதை யாயமொடு குவவு மணலேறி, வீததை கானல் வண்டல் அயர" (அகம் - கஅ0.) என்றார் பிறரும்.

தொண்டி - மேல் கடற்கரையிலுள்ளதொரு சிறந்த துறைமுகப் பட்டினம். தொண்டி சிறந்த பட்டினததிற்குரிய மாண்புகளெல்லாம் உடைத்தாதல் போலத் தலைவியும் மகளிர்க்குரிய பெண்மை நலததிற் குரிய எல்லா மாண்புகளும் உடையாள் என்பாள், 'தொண்டியன்ன என்னலம்' என்றாள். "வளாஙகெழு தொண்டியன்ன இவணலனே" (அகம் - க0) எனப் பிற சான்றோரும் ஓதுதலுணர்க. நலம் - பெண்மை நலம். தோழி தனக்குந் தலைவிக்கும் வேற்றுமை கருதா ளாகலின் தலைவியின் நலத்தை என்னலம் என்றே கூறினாள் என்க.

'தலைவியின் நலங் கெடுமாறு நீ பரத்தமை மேற்கொண்டொழுகா நின்றனை; நின் சூளை யாங்கள் நம்பகிலோம்; ஆகலின் வந்த வழியே மீண்டுச் செல்' என்று வாயில் மறுத்தாள் என்க.

## பாட்டு - உ௩௯ : தலைவி கூற்று

துறை :—சிறைப்புறம்; அஃதாவது, களவின்பமே விரும்பி வரைந்து கோடற் கருத்தின்றி ஒழுகும் தலைவன், ஒருநாள் தம்

மனையயலே வந்து நின்றமை கண்ட தலைவி, அவன் வருகையை அறியாதாள் போன்று தோழிக்குக் கூறுவாளாய்த் தன்னிலையைத் தலைவனுக்குணர்த்தி வரைவு கடாயது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, ' நந்தலைவர் பொருட்டு என் வளையல்கள் நெகிழ்ந்தன; தோள்கள் மெலிந்தன; என் நாணமும் அழிந்தொழிந்தது; இனி யான் என் செய்வேன்' என்று கூறுகின்றாள்.

௨ ௯ ௯. தொடிநெகிழ்ந் தனவே தோள்சா யினவே
விடுநாண் உண்டோ தோழி விடர்முகைச்
சிலம்புடன் கமழு மலங்குகுலைக் காந்தள்
நறுந்தா தூதுங் குறுஞ்சிறைத் தும்பி
பாம்புமிழ் மணியின் தோன்றும்
முந்தூழ் வேலிய மலைகிழ வோற்கே.

—ஆசிரியர் பெருங்கண்ணனூர்.

(இ - ள்.) தோழி—, விடர் முகைச் சிலப்புடன் கமழும் அலங்கு குலைக் காந்தள் - பிளப்பையும் முழைஞ்சுகளையும் உடைய மலை முழுதும் மணக்கும் அசைகின்ற பூங்கொத்துக் களில் உள்ள காந்தள் மலரின்கண், நறுந்தாது ஊதும்

குறுஞ் சிறைத் தும்பி - நறிய தாதினை ஊதாநின்ற குறிய சிறகினையுடைய வண்டு, பாம்பு உமிழ் மணியின் தோன்றும் - பாம்பு உமிழ்கின்ற மணிபோலத் தோன்றாநின்ற, முந்தூழ் வேலிய மலை கிழவோர்க்கு - மூங்கில் வேலியை உடைய மலைகளை யுடைய நந்தலைவன் பொருட்டு, தொடி நெகிழ்ந்தன - என் வளை யல்கள் கழன்று வீழ்ந்தன, தோள் சாயின - தோள்கள் மெலிந் திளைத்தன, விடு நாண் உண்டோ - இனி யான் விடுதற்கு என் பால் எஞ்சிய நாணம் ஒரு சிறிதும் உளதேயோ; இல்லையே.

**விளக்கம்** :—'என்னிலை இங்ஙனமாகலின் விரைவில் தலைவன் வரைந்து கொள்ளுதல் வேண்டும்; இன்றேல் யான் இறந்துபடுவன்' என்பது குறிப்பு.

தொடி - வளையல். சாயின - மெலிந்தன. தொடி நெகிழ்ச்சி, தோள் மெலிவையும் உடல் வேறுபட்டமையையும், நாணழிவு உள்ளத்தின் வேறுபாட்டையும் விளக்கின.

'விடு நாணுண்டோ?' என்னும் வினா, என் நாணம் முழுதும் அழிந்தொழிந்தது; இனி விடுதற்கு நாண் இல்லை என்றிரங்கியவாறு. நாணம் மகளிர்க்குச் சிறந்ததாகலின், அதன் அழிவினை விதந்தோதினாள். "உயிரினும் சிறந்தன்று நாணே" (தொல் - களவு - உஉ.) எனத் தொல்காப்பியனாரும் ஓதுதல் காண்க.

## மூலமும் உரையும்

கூ௫க

தலைவி இங்ஙனம் தன்னிலை கிளத்தல் நாணழிவாகலின், நாண் முற்றும் நீத்தே இதனைக் கூறுகின்றேன் என்பாள், 'விடுநாண் உண்டோ' என்றாள். 'நாணினும் செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்த' தாகலின், இங்ஙனம் நாண் விடுத்துரைத்தலும், அன்பொடு மரீஇய அகத்திணைக்குப் பொருந்துவதாயிற் றென்ப.

விடர் - பிளப்பு. முகை - முழைஞ்சு; விடரையும் முகையையும் உடைய சிலம்பு என்க. காந்தண் மலரைத் தும்பி ஊதுங்கால், அதன் மணம் மலைமுழுதும் கமழும் என்றது, நங்களவு மணம் ஊரெங்கும் அலராய்ப் பரவுகின்றது என்றுணர்த்தியவாறும். காந்தள் மலரில் தும்பி யிருக்கும் தோற்றம், பாம்பும் அஃதுமிழ்ந்த மணியும் போற் றோன்றும் என்றது, நம் மணம் தூயதாகவும் வம்பமாக்களால் தூற்றப் படுவதொன்றாயிருந்தது என்றுணர்த்தியவாறு.

## பாட்டு - உசo : தலைவி கூற்று

துறை :—வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது அஃதாவது, வரைந்து கொள்ளற்குப் பொருளீட்டும்பொருட்டுத் தலைவன் பிரிந்தானாக, அப்பிரிவினை

யும் ஆற்ருத தலைவியின் பொருட்டுத் தோழி வருந்தினுள். அவள வருததஙகண்ட தலைவி அவட்குத் தன் ஆற்ருமைக்குக் காரணம கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'யான் பகற்பொழுதெல்லாம நந்தலைவருடைய மணிநெடுங்குன்றத்தைக் காண்பதன் வாயிலாய் ஆறறியிருக்கின்றேன்; இம்மாலைப் பொழுதிலே கொடிய வாடைக்காற்று வீசா நிற்கும்; மேலும் யான் ஆற்றுதற் கேதுவாயிருந்த குன்றமும மறைந்து விடுகின்றது; ஆகலின், ஆறறேனுகின றேன்; நீ கவலற்க!' என்று கூறுகின்ருள்.

உ௪௦. பனிப்புத லிவர்ந்த பைங்கொடி யவரைக்
கிளிவா யொப்பின் ஒளிவிடு பன்மலர்
வெருக்குப்பல் லுருவின் முல்லையொடு கஞல
வாடை வந்ததன் றலையும் நோய்பொரக்
கண்டிசின் வாழி தோழி தொண்டிரைக்
கடலாழ் கலத்திற் ருேன்றி
மாலை, மறையுமவர் மணிநெடுங்

குன்றே.

—கொல்லனழிசியார்.

(இ - ள்.) தோழி—, பனிப் புதல் இவர்ந்த பைங்கொடி அவரை - குளிர்ந்த புதலின்கட் படர்ந்த பசிய கொடியாகிய அவரையினது, கிளி வாய் ஒப்பின் ஒளி விடு பல் மலர் - கிளியினது அலகை ஒத்த ஒளியைக் காலுகின்ற பலவாகிய மலர்கள்,



வெருக்குப் பல் உருவின் முல்லையொடு கஞல - காட்டுப்பூனையினது பல்போன்ற உருவத்தையுடைய முல்லை மலர்களோடே செறியும்படி, வாடை வந்ததன் தலையும் - வாடைக்காற்று வீசுங் காலம் வந்ததன் மேலும், நோய்பொர - காமநோய் என்னை வருத்தும்படி, தெண் திரைக் கடல் ஆழ் கலத்தின் தோன்றி - தெளிந்த அலைகளையுடைய கடலின்கண்ணே மூழ்கா நின்ற மரக்கலம் போலே காணப்பட்டு, அவர் மணி நெடுங் குன்று மாலை மறையும் - நந்தலைவருடைய நீலமணிபோன்ற நிறமுடைய நெடிய மலைதானும் மாலைப் பொழுதிலே மறையா நிற்கும், கண்டிசின்-இதனை நீ காண்பாயாக.

**விளக்கம்** :—பனிப் புதல் - குளிர்ந்த புதல் - கொடியாகிய அவரை என்க அவரை மலருக்குக் கிளி அலகு உவமை. வெருகு - காட்டுப் பூனை. வெருக்குப்பல், முல்லைமுகைக்கு உவமை என்க. அவரை மலரும் முல்லை மலரும் புறவின்கட் செறிந்து மலரும் என்றது, இது கார்காலத்து இறுதி என்றுணர்த்தியவாறு. கார்காலத்திறுதியில் வாடை வீசுதல் இயல்பு. கார்ப்பருவமும், அப் பருவத்து மாலைப் பொழுதும், வாடைக்காற்றும் பிரிந்துறைவாரைப் பெரிதும வருத்தும் இயல்பின; இவ்வருத்தத்தைத் தலைவருடைய மணி நெடுங்குன்றக் காட்சியில் மனம் போக்கி ஆற்றியிருந்தேன்; இப்பொல்லாத மாலை, அவ்வொரு பற்றுக் கோட்டையும் கெடுத்ததென்பாள், 'மாலை மறையும் அவர் குன்று' என்றாள். கூற்றும் எனச சிறப்பும்மை விரித்தோதுக.

இருளிலே மலை மெல்லமெல்ல மறைதற்குக் கடலிலே மெல்ல மெல்ல மூழ்கும் மரக்கலம் உவமை. தலையன்புடைய மகளிர்கள் தலைவனுடைய பொருளைக் காண்புழித் தலைவனையே கண்டாற் போன்று மகிழும் இயல்புடையர்; இதனை இந்நூலின்கண் "அவர் நாட்டுக் குன்றம் நோக்கினென் றோழி பண்டையற்றோ கண்டிசின் நுதலே" (உசுக) என்று ஓதப்படுதலானும், இராமன் கொடுதத மணி யாழியை மாருதி சீதைக்குக காட்டிய பொழுது அவள் உற்ற நிலையைக் கம்பா ஓதும் "இறந்தனர் பிறந்த பயன் எயதினர்கொல் என்கோ" (கம்ப - உருக்காட்டு - கூச.) என்றற் றொடக்கத்துச செய்யுள்களானும் உணர்க.

## பாட்டு - உசக : தலைவி கூற்று

துறை :—பிரிவிடை ஆற்றுளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, தலைவன் பிரிந்த காலத்தே தலைவியின் ஆற்றாமை கண்டு வருந்திய தோழிக்குத், தலைவி, தன் ஆற்றாமைக்குக் காரணம் தெரிதோதியது.

இதன்கண், 'யான் என் நோயைப் பொறுத்து ஒருவாறு ஆற்றுவேனாகவும், குன்றநாடனைக் கண்ட என் கண்களோ, என் வரை நிற்றலின்றித் தலைவன்பால் தமக்குரிய உரிமையாலே தாமாகவே அழாநின்றன; யான் என்செய்வேன்!' என்று தலைவி தோழிக்குக் கூறுகின்றாள்.

## மூலமும் உரையும்

கூறுந்

உ௬௧. யாமெங் காமந் தாங்கவும் தாந்தம்
கெழுதகை மையி னழுதன தோழி
கன்றாற் றுப் படுத்த புன்றலைச் சிறாஅர்
மன்ற வேங்கை மலர்பத நோக்கி
ஏறா திட்ட ஏமப் பூசல்
விண்டோய் விடரகத் தியம்பும்
குன்ற நாடற் கண்டவெங் கண்ணே.

—**கபிலர்.**

(இ - ள்.) தோழி—, யாம் எம் காமம் தாங்கவும் - யாமோ எமக்குற்ற காமநோயை வல்லிதிற் பொறுத்திருக்கவும், கன்று ஆற்றுப்படுத்த புன்றலைச் சிறார்-கன்றுகளை மேய்த்தற்குரிய வழிகளிலே செலுத்திவிட்ட பொலிவிழந்த தலையையுடைய சிறுவர்கள், மன்ற வேங்கை மலர் பதம் நோக்கி - ஊரம்பலத்தின்கண்

உள்ள வேங்கைமரம் அரும்பெடுத்து மலரும் செவ்வியுடைத் தாதலைக கண்டு, ஏறூது இட்ட ஏமப் பூசல் - அம்மரததின்கண் ஏறுமலே நின்று மகிழ்ச்சியாலே எடுத்த ஆரவாரம், விண் தோய் விடரகத்து இயமபும - வானத்தே தோய்ந்துள்ள மலைமுழைஞ்சு களிலே எதிரொலி செய்யாநின்ற, குன்றநாடன் கண்ட எம் கண் - குன்றங்களையுடைய நாட்டுக்குத் தலைவனைக் கண்ட எம் கண்கள், தங்கெழுதகைமையின் - தமக்கு உண்டான சிறப்புரிமை யானே, தாம் அழுதன - தாமே அழாநின்றன.

விளக்கம் :—"யாமே காமந்தாங்கவும்" என்றும் பாடம். கெழுதகைமை - உரிமை "விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகை யாற், கேளாது நட்டார் செயின்" என்னுந்திருக்குறளினும் அஃது அப்பொருட்டாதல் அறிக. கண்களே தலைவனை முதன்முதலாகக் கண்டனவாதலின், அவைகட்குத் தலைவன் சிறந்துரிமையுடையன்; ஆதலால் அவ்வுரிமைபற்றி அவ்வுரிமையில்லாத என்வழி நில்லாது கண்கள் தாமே அழுகின்றன என்றவாறு.

யான் ஆற்றுதற்கு எத்துணை முயன்றும், அவனைக்காணவேண்டும் என்னும அவாப பெரிதும் மீதூர்ந்து என்னை அலைக்கின்றது என்பது குறிப்பு. 'அங்ஙனம் அலைப்பினும் ஒருவாறு யான் ஆற்றுவல் நீ கவலற்க' என்று தேற்றினளாயிறறு.

கன்று மேய்க்கும் இடைச்சிறுவர் அக்கன்றுகளை மேயும்வழிச் செலுத்தி மன்றத்தின்கண் வேங்கைநீழலிலே வந்து குழுமினோர், அவ்வேங்கை புதிதாக அரும்பியிருந்தமை கண்டு மகிழ்ச்சியால் ஆரவாரித்தனர் என்க. மன்றமரத்தில் தெய்வ முறைதலின் ஏறாராயினர் என்க. பூசலைப் புலிபுலி என்னும் பூசல் எனினுமாம். வேங்கை மலர் பறிப்போர், 'புலிபுலி' என்று பூசலிடுதல் வழக்கம்; மகிழ்ந்து எடுத்த பூசல் என்பான், 'ஏமப் பூசல்' என்றான். ஏமம் - இன்பம்.

கு—23



" கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்

தாகாட்ட யாங்கண் டது." (குறள் - க௧௭௧) என்ற திருக்குறள் ஈண்டு நினைக்கற்பாலது.

## பாட்டு - உ௬உ : செவிலித்தாய் கூற்று

துறை :—கற்புக்காலத்துக் கடிநகர்சென்ற செவிலித்தாய் நற்றாய்க்குச் சொல்லியது. அஃதாவது, தலைவனும் தலைவியும் இல்லறம் நடத்தும் மனைக்குச்சென்று மீண்ட செவிலித்தாய் அவர்கள் வாழ்க்கைச் சிறப்பை நற்றாய்க்குக்

கூறியது.

இதன்கண், 'நம் மகள் மலர்மணங்கமழும் முல்லை நிலத்தே அமைந்த ஒரு அழகிய சிற்றூரின் கண்ணே, தன் தலைவனோடே இனிது உறைகின்றாள். மற்று அச்செம்மலோ, அரசன் ஏவல் பெற்று வினைமேற்சென்றுழியும் ஆண்டுத் தங்குதலின்றி விரைந்து மீண்டுவந்து தலைவியோடே உறையும் பேரன்புடையனாகத் திகழ்கின்றான்' என்று செவிலி நற்றாய்க்கு அறிவிக் கின்றாள்.

உசஉ. கானங் கோழி கவர்குரற் சேவல்
ஒண்பொறி எருத்தின் தண்சிதர் உறைப்பப்
புதனீர் வாரும் பூநாறு புறவிற்
சீறூ ரோளே மடந்தை வேறூர்
வேந்துவிடு தொழிலொடு செலினும்
சேந்துவரல் அறியாது செம்மல் தேரே.

—குழற்றத்தனார்.

(இ - ள்.) மடந்தை - நம் மகள், கானம் கோழி கவர் குரற் சேவல் - காட்டுக்கோழியினது தன் பெடைகளைக் கவர்கின்ற இனிய குரலையுடைய சேவலினுடைய, ஒண்பொறி எருத்தில் தண் சிதர் உறைப்ப - ஒள்ளிய புள்ளிகளையுடைய பிடரில் தண்

ணிய துளிகள் துளிக்குமாறு, புதல் நீர் வாரும் பூ நாறு புறவில் - புதலின்கண் நீர் ஒழுகாநின்ற மலர் மணங்கமழும் முல்லை நிலத்தின்கண் உள்ள, சிறாரோள் - சிறிய ஊரிடத்தே உள்ளாள், செம்மல் தேர் - தலைவனுடைய தேரோ, வேறார்வேந்து

விடு தொழிலொடு செலினும் சேந்து வர

லறியாது - வேற்றாரி

னிடத்தே மன்னன் ஏவிய வினையை மேற்கொண்டு சென்றவிடத்தும் ஆண்டும் தங்கிப் பின்னர் வருதலை அறியாது; உடனே மீண்டு வந்துவிடும்.

விளக்கம் :—தலைவி மழைவள மிக்க உறைதற்கினியதொரு முல்லை நிலத்தூரின்கண்ணே தலைவனோடே பிரிவின்றி இனிதே வாழ்கின்

## மூலமும் உரையும்

கூகு

றான். தலைவனோ இன்றியமையாத செயலின் பொருட்டும் அவளைப் பிரியவொண்ணாத பேரன்பினன் ஆவான் என்று, நற்றாய்க்குத் தலைவியின் நல்வாழ்க்கை நிலையினைச் செவிலி உணர்த்தினாள் என்க.

கானங்கோழி - காட்டுக்கோழி. கவர் குரல் - கவர்த்த குரல் எனினுமாம். புதல் கானக்கோழியின் எருத்தில் தண் சிதர் உறைக்கும் என்றது, தன்பால் அடைக்கலம் புக்க தலைவியின்பால் தலைவன் பெரிதும் தண்ணளியுடையன் என்னும் குறிப்பிற்று.

வேந்து விடுதொழில் அவ்வேந்தன் கட்டளையிட்டபடியே செய்யற்பாலதாம். அவன் கட்டளை ஆண்டுத் தங்கியிருந்து செய்க என்பதாயின் வினைமேற் சென்றோர் தங்கியே இருத்தல்வேண்டும். அத்தகைய நிலையினும்கூட அவன் தலைவியைப் பிரிந்து தவகுதல் இல்லை என்பாள், 'வேந்துவிடு தொழிலொடு செலினும்' என்றாள். உம்மை: சிறப்பின்கண் வந்தது. ஏனைப்பிரிவிற் றங்கான் என்பது கூறாமலே அமையும் என்றுணர்த்தியவாறு. சேந்து - தங்கி. உடனே மீளும் என்பதை வலியுறுத்தும் பொருட்டுச் 'சேந்து வரலறியாது' என எதிர் மறை முகத்தாற் கூறினாள்.

இதனால், பண்டை நாளில் தலைவன் தலைவியை அவள் தமரறியாதபடி உடனழைத்துச் சென்று, தன் மனைக்கண்ணே அத் தமர் அறியாதபடி வரைந்துகொண்டு வாழ்தலுண்டென்பதும் பின்னர்த் தலைவியின் தமா, அவன் மனைக்குச சென்று கேண்மைகொளளுதல் உண்டென்பதும் அறியப்படும்.

## பாட்டு - உசரு: தலைவி

கூற்று

துறை :—வன்புறை எதிரழிந்து

சொல்லியது. அஃதாவது, தலைவன்

பிரிந்தமையாலே பெரிதும் வருந்திய தலைவியை

'ஆற்றியிருத்தலே நின் கடன்' என்று வற்புறுத்தோதிய தோழியை நோக்கி, 'இனி யான் ஆற்றியிருக்க முயல்வேன்' என்று தலைவி நெஞ்சழிந்து கூறியது.

இதன்கண், 'தோழி! இனி யான்

பெருங்கடற்சேர்ப்பனை நினையாதிருக்க

முயல்வேன்! என் கண்கள் இனித் துயில்வன

வாக,' என்று தலைவி கூறுகின்றாள்.

உசுரு. மானடி யன்ன கவட்டிலை அடும்பின்
தார்மணி யன்ன ஒண்பூக் கொழுதி
ஒண்டொடி மகளிர் வண்ட லயரும்
புள்ளிமிழ் பெருங்கடற் சேர்ப்பனை
உள்ளேன் தோழி படீஇயர்என்
கண்ணே.

—நம்பி குட்டுவனார்.

(இ - ள்.) தோழி—, மான் அடி அன்ன கவட்டிலை அடும்பின் - மானினது அடியையொத்த பிளவுபட்ட இலைகளையுடைய



அடும்பினது, தார் மணி அன்ன ஒண் பூக் கொழுதி - மாலையின் கண் உள்ள மணியைப்போன்ற ஒள்ளிய பூவை வலிந்து அலர்த்தி, ஒண்டொடி மகளிர் வண்டல் அயரும் - ஒள்ளிய வளையலை அணிந்த மகளிர்கள் விளையாடாநின்ற, புள்ளிமிழ் பெருங்கடல் சேர்ப்பனை - பறவைகள் ஆரவாரிக்கும் பெரிய கடற்கரையையுடைய தலைவனை, உள்ளேன் - நீ வற்புறுத்தபடி இனி யான் நினையாதமைவேன், என் கண் படீஇயர் - என் கண்களும் இனி உறங்குக.

விளக்கம் :—' தலைவனை நினைத்தவழித் துன்பம் உண்டாகின்றது; அவனை மறந்தமைதலும் என்னால் இயல்வதன்று; நீ வற்புறுத்துவதனால் யான் அவரை மறக்கவியலுமோ' என்று வருந்தியவாறும். அடும்பின்மலர் கொடியின்கண் நிரல்பட மலர்வன வாகலின், இலைகளின் இடையிடையே தோன்றும் அம் மலர்கட்குத் தாரின் இடையிடையே பதித்த மணி உவமை கூறப்பட்டது. தார் - மாலை. 'குதிரைக் கழுத்திலிடும் மாலை' என, வேண்டாது விரித்தாரும் உளர். கொழுதி - மலர்த்தி; அஃதாவது அவற்றைத் தம் கையாலே வலிந்து அலர்த்தி என்றவாறு. 'தானே அலராத மலரை மகளிர் விளையாடற் பொருட்டு அலர்த்தின் அது கசங்கிப் போதல்போல, நீயும் தானே மறந்தறியாத என் மனத்தை மறக்கும்படி வற்புறுத்தாநின்றனை; அங்ஙனம் வற்புறுத்தல் நினக்கெளிதாயினும் என் மனமோ மேலும் நலிவதாகின்றது; நீ வற்புறுத்துமாறு போல யானும் என் கண்களை வற்புறுத்துவேன்; அவை துயில்வனவாயின் துயில்க' என்பாள், "படீஇயர் என் கண்ணே" என்றாள். படீஇயர் - படுக: துயில்க என்றவாறு.

## பாட்டு - உசச : தோழி கூற்று

துறை :—இரவுக்குறி வந்தொழுகாநின்ற தலைமகற்குத் தன் காவன்மிகுதியாற் புறப்பட்டு எதிர்கொள்ளப் பெறாதவழி, 'பிற்றை ஞான்று வரைந்து கொள்ளினல்லது, இவ்வொழுகலாற்றின் இனிக்கூடல் அரிது' எனத் தோழி வரைவு கடாயது.

அஃதாவது, தலைவன் தலைவியின்பால் இரவின்கண் வந்தொழுகுங்கால், ஒருநாள் காவன்மிகுதியாலே தலைவி மனையினின்றும் புறம்போந்து அவனைக் காணவியலாது தாழ்த்தமையால் தலைவன் வறிதே மீண்டு போனான் ;

மறுநாள் தலைவனைத்
தோழி கண்டாள்; கண்டபொழுது 'இனி இக்களவொழுக்கத்தால் நீ தலைவியைக் கண்டு அளவளாவுதல் இயலாது; ஆகலின் நீ அவளை விரைந்து வரைந்து கோடலே நன்றென்று' வரைவு

கடாயது.

இதன்கண், 'நெருநல் இரவு வந்தேனை நீயிர் அறிந்திலீரோ?' என்று வினைய தலைவனை நோக்கித் தோழி, 'பெருமானே! நீர் நெருநல் இரவு வந்து கதவுத் தாழ் திறக்க முயன்

## மூலமும் உரையும்

நடுள

றமையால் உண்டாய ஒலியை, யாங்கள்

கேளேமல்லேம் ;
கேட்டே கிடந்தனம்; கேட்டும் என்செய்வேம்! அவ்வொலி கேட்டு யாங்கள் வருந்துந்தோறும் எங்கொடிய அன்னை எம்மை இறுகத் தழுவிக்கொண்டனள்; ஆகலான் யாங்கள் எதிர்கொள்ள இயலாதவராயினேம' என்கின்றாள்.

நம்மை

உசச. பல்லோர் துஞ்சு நள்ளென் யாமத்
துரவுக்களிறு போல்வந் திரவக்கதவ

முயறல்

> கேளே மல்லேங் கேட்டனம் பெரும
> ஓரி முருங்கப் பீலி சாய
> நன்மயில் வலைப்பட் டாங்கியாம்
> உயங்குதோறு முயங்கும் அறனில் யாயே.

—**கண்ணனூர்.**

(இ - ள்.) பெரும - பெருமானே !, பல்லோர் துஞ்சும் நள்ளென் யாமத்து - பலரும துயிலாநின்ற நள்ளென்னும் ஓசையையுடைய நடு இரவின்கண்ணே, உரவுக் களிறுபோல் வந்து இரவுக் கதவு முயறல் - வலியையுடைய களிற்றியானை போலே வந்து இரவின் பொருட்டுத் தாழிடப்பட்ட கதவைத் திறக்க முயன்றதனால் உண்டாகிய ஒலியை, கேளேம் அல்லேம் கேட்டனம் - யாங்கள் கேளாதொழிந்தேமல்லேம்; நன்கு கேட் டேம், ஓரி முருங்கப் பீலி சாய நன் மயில் வலைப்பட்டாங்கு - உச்சிச் சூடு சிதையும்படியும் தோகை மெலியுபடியும் நன்றாகிய

மயில் வலையகத்தே அகப்பட்டாற்போன்று, யாம் தொறு முயங்கும் அறனில் யாய் - யாம் வருந்தி

உயங்கு
அசையுந்
தோறும் எம்மைத் தழுவிக்கொள்வாளாயினள்
அறப்பண்பு இல்லாத எம அன்னை; யாம் என்
செய்வேம்.

விளக்கம் :—பல்லோரும் துஞ்சும் எனற்பால முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. நள்ளென்: ஒலிகுறிப்பு. இருள் செறிந்த எனினுமாம். உரவு-வலிமை. இரவுக்கதவு என்றது, இரவின் பொருட்டு அடைத்த கதவு என்றவாறு. கதவு முயறல் - கதவைத்திறக்க முயலுதலால் உண்டாம் ஒலி என்க. நன்கு கேட்டனம் என்பாள், எதிாமறையானும் உடன்பாட்டானும் ஓதினள். பல்லோர் துஞ்சும் யாமத்து வந்து கதவு திறக்கச செய்த சிறறொலியையும் யாங்கள் கேட்டனம் என்றதனால், நள்ளிரவினும் யாங்கள் உறங்காது கிடந்தேம் என்று தலைவியின் நிலையையும் உணர்த்தினளாதலறிக. கதவு முயறல் - தனது வருகையை அறிவித்துக் கதவைத்திறக்கச செய்தற்கு ஏதேனும் ஒரு சிறிய ஓசையை உண்டாக்குதல். அவ்வோசை கேட்டுத் தோழி வந்து தாழ்நீக்கிக் கதவுதிறப்பள் எனக் கருதுக. 'இன்னவோசை செய்வல்' என, முன்னரே தோழிக்குத் தலைவன் கூறியிருப்பன் என்க. ஓரி - ஆண் தலைமயிர்; ஈண்டு ஆண்மயிலின் சூட்டிற்கு ஆயிற்று. முருங்குதல் - சிதைதல்.



பிறர்க்குறும் இன்பத்தைத் தடைசெய்து துன்புறுத்தும் செயலாகவின் முயங்கிய தாயை, 'அறனில் யாய்' என்றாள். கொடியள் என்றுவைதபடியாம். 'தாயும் அறனிலளாயினள்; நீயும் வரைந்துகோடலாகிய அறத்தைச் செய்யாது அறனிலானே ஆயினை' என்று குறிப்பால் உணர்த்தியவாறு.

உயங்குதல் - வருந்துதல். ஈண்டு யாய் என்றது, செவிலியை. இதனால், இனி இக்களவொழுக்கத்தானே நீ தலைவியை எய்துதல் அரிதென்று உணர்த்தப்பட்டமை அறிக. விரைந்து வரைந்து கொள்க என்பது குறிப்பு.

## பாட்டு - உசரு : தலைவி கூற்று

துறை :—வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது. அஃதாவது, வரைவிடைவைத்துத் தலைவன் பிரிந்த காலத்தே ஆற்றாமை மிக்க தலைவியைக் கண்டு தோழி வருந்தினளாக, அத தோழிக்குத் தலைவி 'யான் ஆற்றுவன்' என்பதுபடச் சொல்லியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'யான் என் பெண்மைநலத்தை யிழந்ததனினுங்காட்டில் தலைவன் செய்த கொடுமையைப் பலரும் அறிந்து அவனைப் பழிதூற்றுதலையே பெரிதும பொறேன்; ஆகலின், அவன் கொடுமையை மறைக்கும் பொருட்டேனும் யான் ஆற்றியிருப்பேன்; நீ கவலற்க,' என்று கூறுகின்றாள்.

உசரு. கடலங் கான லாய மாய்ந்தவென்
நலமிழந் ததனினு நனியின் னாதே
வாள்போல் வாய கொடுமடல் தாழை
மாலைவேல் நாட்டு வேலி யாகும்

மெல்லம் புலம்பன் கோடுமை
பல்லோர் அறியப் பரந்துவெளிப் படினே.

—மாலைபாறனர்.

(இ - ள்.) தோழி—, வாள் போல் வாய கொடுமடல் தாழை - ஈர்வாள் போன்ற விளிம்பையுடைய கொழுவிய மடலையுடைய தாழைகள், மாலை வேல் நாட்டு வேலி யாகும் - நிரலாக வேல்களை நட்ட வேலிபோன்று காவலாகின்ற, மெல்லம் புலம்பன் கொடுமை - மெல்லிய நெய்தனிலத்தையுடைய நந்தலைவனுடைய கொடுஞ்செயல், பல்லோர் அறியப் பரந்து வெளிப் படின் - ஊரார் பலரும் அறியும்படி பரவி வெளிப்படுமாயின் அவ்வெளிப்பாடு, கடல் அம் கானல் ஆயம் ஆய்ந்த - கடல் மருங்குள்ள அழகிய சோலையின்கண்ணே பண்டு ஆயமகளிர் பலரும்

## மூலமும் உரையும்

நடுக

ஆராய்ந்து நன்றென்று பாராட்டியதற்குக் காரணமான, என் நலம் இழந்ததனினும் - என் பெண்மை நலத்தை யான் இழந்ததனினுங்காட்டில், நனி இன்னாது - மிகவும் துன்பந்தருவ தொன்றும்.

**விளக்கம்**:— 'ஆகலின், அவன் கொடுமை வெளிப்படாமைப் பொருட்டேனும் யான் ஆற்றியிருப்பன்; நீ கவலற்க!' என்பது குறிப் பெச்சம். தலைவனைக் காணுமுன்னர் என் பெண்மைநலம், அத்தகைய மாண்புடையதாயிருந்தது. இன்று அதனை இழந்தேன் என்றிரங்கு வாள், 'ஆய்ந்த என் நலம்' என்றிறந்த காலத்தாற் கூறினாள்.

கடல் அங்கானல் - கடல் மருங்குள்ள அழகிய கானல் என்க. ஆயம் - விளையாட்டுமகளிர். பண்டு ஆய மகளிர் என் பெண்மை நலத்தை ஆராய்ந்து பாராட்டுவர் என்றது, கழிந்ததற் கிரங்கலின் தற்புகழ்ச்சியாகாமை யுணர்க. நனி - மிகுதிப் பொருட்டு. இன்னாது- இன்னல் தருவது. வாள் - ஈர்வாள். தாழைமடல் விளிம்பின்கண் முள்ளுடைத்தாதலின், வாள் உவமை கூறப்பட்டது. மாலை - நிரல். போர்வீரர்கள் வேல்களை நிரலாக நட்டு நடுகல்லிற்கு அரண் செய்தல் வழக்கம். அவ்வேலரணையே ஈண்டு, 'மாலை வேல்நாட்டு வேலி' என்றாள். இதனை,

"இடுகுநிரைத் தெஃகூன்றி
நடுகல்லின் அரண்போல." (பட்டின -
எஅ-கூ) எனவரும் பட்டினப் பாலையானும் உணர்க.

கொடுமை என்றது, நொடிப்பொழுதும் பிரிந்து சென்றதனை என்க.

பிரிவாற்றாத தன்னைப்

"யான் ஆற்றேனாயவிடத்துப் பலரும், 'இவள் ஆற்றாமைக்குக் காரணம் என்?' என ஆராய்வர்; ஆராய்ந்தவழித் தலைவன் பிரிந்தமை வெளிப்பட்டுப் பழியாம்; அப்பழி யாண்டும் தூற்றப்படும். அங்ஙனம் அவன்பழி தூற்றல் எனக்குப் பெரிதும் துன்பமாம்," என்பது கருத்து.

## பாட்டு : உசகரு : தலைவி கூற்று

துறை :—சிறைப்புறம். அஃதாவது, வரைந்து கோடற் கருத்தின்றிக் களவின்பமே விரும்பி இரவுக்குறி வந்தொழுகுந் தலைவன், ஒரு நாள் இரவு மனைப்படப்பையி னருகே வந்துநின்ற பொழுது, தலைவி அவன் வருகையை அறியாதாள் போன்று தோழிக்குக் கூறுவாளாய்க் காவன்மிகுதி கூறித் தலைவனை வரைவுகடாயது.

இதன்கண், தலைவி தோழிக்குக் கூறுவாளாய், "நங் கடற் கரையிலே நெருநல் இரவு ஒரு தேர்வந்து மீண்டுளது என்று, இவ்வூரினர் பலரும் கூறுகின்றனர்; இச்செய்திகேட்டு அன்னை என்னைப் பெரிதும் கடிந்து வருத்துகின்றாள்; இவ்வூரில் ஏனை



இளமகளிரின் தாயர் அம்மகளிரை அலைக்கின்றிலர்; அவர்கள் நல்வினையுடையோர் போலும்!" என்று கூறுகின்றாள்.

உசகரு பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை

களிற்றுச்செவி யன்ன பாசடை மயக்கிப்
பனிக்கழி துழவும் பானாள் தனித்தோர்
தேர்வந்து பெயர்ந்த தென்ப வதற்கொண்
டோரு மலைக்கு மன்னை பிறரும்
பின்னுவிடு கதுப்பின் மின்னிழை மகளிர்
இளையரு மடவரும் உளரே
அலையாத் தாயரொடு நற்பா லோரே.

—கபிலர்.

(இ - ள்) தோழீ—. பெருங்கடல் கரையது சிறு வெண் காக்கை - பெரிய கடற்கரையின்கண் உளவாகிய சிறிதே வெள்ளிதாகிய காக்கைகள, களிற்றுச் செவியனன பாசடை மயக்கி - யானையின் செவியைப் போன்ற பசிய இலைகளைக் கலக்கி, பனிக் கழி துழவும் - குளிாநத கழிநீரை இரையின் பொருட்டுத் துழாவாநின்ற, பானாள் தனித்து ஓர் தேர் வந்து பெயர்ந்தது எனப - இடை இரவின்கண்ணே தனியாக ஒரு தேர் வந்து மீண்டுளது என்று பிறர் கூறாநின்றனர், அதன் கொண்டு - அச்செய்தியை ஏதுவாகக்கொண்டு, அன்னை அலைக்கும் - என் அன்னை என்னைத் துன்புறுத்தாநின்றாள், பின்னுவிடு கதுப்பின் மின் இழை மகளிர் இளையருமட மடவரும் பிறரும் உளர் - பின்ன

லை நாலவிட்ட கூந்தலையும் மின்னுகின்ற அணிகலன்களையும் உடைய மகளிர்கள் என்போன்ற இளமை யுடையோரும் மடப்பமுடையோருமாய் இவ்வூரின்கண் வேறு பல மகளிரும் இராநின்றனர், அலையாத்தாயரொடு நற்பாலோர் - அவரெல்லாம் தம்மை வருத்தாத தாயரோடு பொருந்திய நலவினையை உடையர் ஆவார்.

**விளக்கம்** :—பெருங்கடல் சிறுவெண் காககை என்றதன்கண் **செய்யுளின்பம்** உணர்க. சிறு வெண் காககை என்றதன்கண், சிறுமை
வெண்மைக்கு அடையாய் நின்றது. எனவே, சிறிதே வெண்மை நிற

முடைய காக்கை என்றவாறு. அது காக்கையின் கழுத்திலே சிறிது வெண்ணிற மிருத்தலைக் குறித்தபடியாம் காக்கை கரிதென்பதே பெருவழக்காக, அதன்கண் சிறிதே யுள்ள வெண்ணிறத்தை விதந்தெடுத்துக் கூறியது, 'தலைவனே! நின்பால் பெரிதும் நற்குண மிருப்பினும், ஆராயுங்கால் பேதைமையும் சிறிதுடையை; அதனாலன்றோ வரைந்து கோடல் அறமாகவும், அவ்வறங்கருதாது இங்ஙனம் பிறர் பழிதூற்ற ஏதுவாக இரவின்கண் வந்து இடர்விளைக்கின்றனை.' என்று குறிப்பான் உணர்த்தற் பொருட்டென்க.

## மூலமும் உரையும்

௱௨௪

களிற்றுச் செவி ஆம்பலிலைக்கு உவமை என்க. பாசடை - பசிய இலை. பனிக்கழி - குளிர்ந்த கழி. பானாள் - நடு இரவு. என்ப - என்று அயலோர் கூறுகின்றனர் என்க. தேர் வந்து மீண்டமையை அதன் சுவட்டாலே கண்டு கூறுகின்றனர் என்றவாறு. அதற்கொண்டு - அதனை ஏதுவாகக் கொண்டு. எனவே, அன்னை இரவின்கண் ஈண்டொரு தலைவன் வருவான்உளன் போலும், என்று ஐயுற்று என்னைப் புறம்போகாமல் அடிக்கடி தடைசெய்யாநின்றாள் என்ற வாறும். அங்ஙனம் அலைத்தலுண்மையின் இனி இரவுக்குறியிடத்தும் யான் தலைவனைக் காணவியலாதென்று இரவுக்குறி மறுத்தவாறும் உணர்க. பின்னு - பின்னல்; சடை - கதுப்பு, கூந்தல். பின்னுதல் செய்து விட்ட கூந்தல் எனினுமாம் இளைஞர் என்றது, தன்போன்று பன்னீராட்டை அகவையுடையோர் என்றவாறு இவ்வூரிலுள்ள என் போன்ற இளமகளிர்களை அவ்வவர் தாயர் அலைத்திலர் என்றது, தன் தாய் தலைவன் வருகையை நன்கு அறிந்து கொண்டனள் என்பதைக் குறிப்பான் உணர்த்தியவாறு தலைவனை எய்தப் பெற்றும் அவனோடே பிரியாது வாழும்பேறும் பெறாத யான் தீவினையாட்டி என்பாள், 'ஏனைமகளிர் நல்வினைப் பாலார்' என்று கூறி அருத்தாபத்தியாற் கொள்ளவைத்தாள்.

## பாட்டு - உசஎ : தோழி கூற்று

துறை :—(க) கடிநகர்த் தெளிவு விலங்கினமையறியத்' தோழி கூறியது. அஃதாவது, 'காவற்பட்ட மனையின்கண்ணே தோழி, தலைவியின் வாயிலாய்த் தலைவன் தெளித்துக் கூறிய சொல் தவறிவிட்டானோ? இலனோ?' என்பதை அறிந்து கொள்ளும்பொருட்டுத் தலைவன் வரைவுமலிந்தமை கூறியது.

(உ) வரைவுடன்படுத்த தோழி தலைவிக்குக் கூறி யதூஉமாம். அஃதாவது, தலைவனை வரைந்துகொள்ளும்படி தூண்டி உடம்படுத்ததோழி, 'அவன் விரைவின் வரைந்து கொள்வன்' என்பது படக் கூறியது எனினும் பொருந்தும்.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'அன்னாய்! நாடன்

மார்பு உரித்தாகிய நட்புப் பெரிதும அழகுடையதாயிற்று; எற்றாலெனின், அண்மையில் இவ்விடத்தே நிகழும் செயலகள் அறத்தொடு பட்டனவாகும் என்றும, சுற்றத்தையுடைய நம மாந்தர்க்கு அவை பற்றுக் கோடாகும் என்றும் யான் அறிகின்றேன்' என்று கூறுகின்றாள்.

நன்கு

உசஎ. எழின்மிக வுடைய தீங்கணிப் படூஉம்
திறவோர் செய்வினை அறவ தாகும்
கிளையுடை மாந்தர்க்குப் புணையுமா
மிவ்வென
ஆங்கறிந் திசினே தோழி வேங்கை
வீயா மென்சினை வீயுக யானை

ஆர்துயில் இயம்பு நாடன்
மார்புரித் தாகிய மறுவில் நட்பே.

—சேந்தம் பூதனார்.

(இ - ள்.) தோழி—, வேங்கை வீயா மென்சினை வீ உக- வேங்கை மரத்தினது கெடாத மெல்லிய கிளையின்கண்ணுள்ள மலர்கள் உதிரும்படி, யானை ஆர் துயில் இயம்பும் நாடன்-யானை அரிய தன் உறக்கங்காரணமாக உயிர்ப்பெறிந்து ஒலிசெய்யும் நாட்டையுடைய தலைவனது, மார்பு உரித்தாகிய மறு இல் நட்பு- மார்பம் நமக்கு உரியதாதற்குக் காரணமாகிய குற்றமில்லாத நட்பு, எழின் மிக உடையது-மிகவும் அழகுடையதும் ஆயிற்று; அஃதெற்றாலறிந்தாயெனின், ஈங்கு அணிப்படூஉம திறவோர் செய்வினை அறவது ஆகும் - இவ்விடத்தே அணிமைக்காலத்தே நிகழும் திறமையுடையோர் செயல அறத்தொடு பொருந்துவ தாம என்றும், இக்கிளையுடை மாந்தர்க்குப் புணையுமாம என- இந்நட்பும் செயல்களும் சுற்றத்தையுடைய மக்களுக்குப் பற்றுக் கோடுமாம் என்றும், ஆங்கு அறிநதிசின் - அங்ஙனம் யான் அறிந்துள்ளேன் ஆகலான்.

விளக்கம் :—இச்செய்யுள் பூட்டுவிற்பொருள்கோள் உடைத்து. இதுகாறு மார்புரித்தாக்கியதும் மறுவில்லாததுமாகிய நட்பு, இனி எழின் மிக உடையதும் ஆகும் என்பாள், 'மார்புரித்தாகிய மறுவில் நட்பு எழின் மிக உடையது' என்றாள். நட்பு எழிலுடையதாம் என்றது, இதுகாறும் புறத்தார்க்குத தோன்றாமல் ஒழுகி வந்த நட்பு, இனிப் பலரறிமணம் செய்யப்பட்டுச சான்றோர்க்கு அழகுடைக் காட்சியாக வெளிப்படும் என்றவாறு. மறைந்தொழுகுந் துணையும் அந்நட்பின் அழகு புறந்தோன்றாதிருந்து வரைவின்கண் விளங்கித்தோன்றுதலறிக.

'அஃது எங்ஙனம்?' என்று வினைய தலைவிக்குக் கூறுவாளாய், அங்ஙனம் அழகுடைத்தாதற்கு ஏதுக் கூறுகின்றாள். அஃதாவது, 'இவ்விடத்தே அணிமைக்காலத்தே சான்றோர்கள் வரைவிற்குரிய கரணங்களை நிகழ்த்துவார்கள் என்பாள், 'ஈங்கணிப்படூஉம் திறவோர் செய்வினை அறவது ஆகும்' என்றாள். அறவது - அறத்தொடு பொருந்தியது.

நட்பும் செய்வினையும் ஆகிய இரண்டையும் புணையாயின என்றாளாகலின், இவ் எனப் பன்மையாற் சுட்டினாள். கிளையுடைமாந்தா என்றது, தலைவியை என்க.

கரணஞ் செய்யும் முறைகளைத் திறம்படக் கற்றோர் என்பாள், 'திறவோர்' என்றாள். செய்வினை என்றது, மணத்தின்கண் நிகழும் கரணத்தை. கரணம் நிகழ்ந்த பின்னரே இல்லறம் நிகழ்த்தலின் அறவதாயிற்று என்க.

துயில் இயம்பும் என்றது, துயிலாலே உயிர்த்து ஒலிக்கும் என்றவாறு. வேங்கை நீழலிலே துயிலும் யானை ஒலிக்கும்படி வேங்கை

மூலமும் உரையும்

கூ.சா.ந

மலரை அவ்வியானையின்மேல் உதிர்க்க மேலும் அஃதினிதே துயிலும் நாடன் என்றது, வரைந்து கொண்டு இல்லின் கண் இன்புற்றமர்ந்து வாழ அவ்வாழ்க்கை காரணமாகத் தலைவனுக்குப் புகழ் பெருகும் என்றவாறு.

இங்ஙனம் கூறியவழித் தலைவன் வேறுபட்டமையைத் தலைவி உணர்ந்திருந்தாளாயின், நீ கூறுவது தவறு. அவன் தன் சொற் பிறழ்ந்து ஒழுகுகின்றான். அவன் வரைந்து கோட எண்ணிலன் எனத் தலைவி தோழியை மறுத்துரைப்பாள். மறுத்தவழித் தலைவன் தெளிவு விலங்கினமையைத் தோழி அறிந்தாளாவள் ஆகலின், முதற்றுறை யொடு பொருந்திற்றென்க. இனி, இச்செய்யுள் தலைவனை வரைந்து கொள்ளும்படி செய்த தோழி, தலைவிக்கு அந் நற்செய்தியை அறி வுறுத்தற்கும் பொருந்துதலறிக.

## பாட்டு - உசஅ : தோழி கூற்று

துறை :—வரைவு நீட்டித்தவழி ஆற்றாளாகிய கிழத்தியைத் தோழி ஆற்றுவித்தது. அஃதாவது, வரைந்து கொள்ளற் குரிய நிகழ்ச்சிகள் காணப்படாமையான், ஆற்றாமை கொண்ட தலைவியை அண்மையில் வரைவு நிகழ்தற்குரிய ஏதுக்கள் உளவா தலை உணர்த்தித் தோழி ஆற்றுவித்தது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, "அன்னாய்! 'வரைவு நேராதோ?' என்று நீ கவலற்க; வரைதற்குரிய நாள அண்மை யில் வருகின்றது; நந்தாய் நந்தலைவனை அறிந்து கொண்டாள்; இனி அணிதபே மணவினை நிகழ்தல் ஒருதலை" என்று தேற்று கின்றாள்.

உசஅ. அதுவா லன்மையோ அரிதே அவன்மார்

புறுக வென்ற நாளே குறுகி
ஈங்கா கின்றே தோழி கானல்
ஆடரை புதையக் கோடை யிட்ட
அடும்பிவர் மணற்கோ டூர நெடும்பனைக்
குறிய வாகுந் துறைவனைப்
பெரிய கூறி யாயறிந் தனளே.

—உலோச்சனார்.

(இ - ள்.) தோழி—, கானல் ஆடு அரை புதையக் கோடை இட்ட - கடற்கரைச் சோலையிடத்தே அசைகின்ற அடிப்பகுதி புதைந்துபோம்படி மேல்காற்றுக் கொணர்ந்து குவித்த, அடும்பு இவர் மணற் கோடு ஊர - அடும்பங்கொடி படராநின்ற மணற்குவியல் பரவுதலானே, நெடும் பனை குறிய ஆகும்-நெடிய பனைகள் குறிய பனைகளாகத் தோன்றுகின்ற, துறைவனை-கடற்



துறையையுடைய நந்தலைவனை, பெரிய கூறி யாய் அறிந்தனள் -பெரியதாகிய கற்புக்கடம்பூண்டமையை யான் கூறுதலானே நம்மன்னை அறிந்துகொண்டாள், அதுவரல் அன்மையோ அரிது - நீ கூறும் அந்நாள் இனி வாராதிருத்தலோ அரிதாம், அவன் மார்பு உறுக என்ற நாளே குறுகி ஈங்கு ஆகின்று-நந் தலைவனுடைய மார்பினை நீ பொருந்துக என்று வரையறுத்த நாள் அணித்தாகலான் நம்மனைக்கண் இவ்வாறு நிகழ்கின்றது காண்.

**விளக்கம்** :—'வரைந்து கொள்ளும் நாள்தான் இனி வாராது போலும்' என்று இரங்கிய தலைவியை நோக்கிக் கூறுகின்றாளாகலின், 'அது வரலன்மை அரி'தென்றாள். அது என்றது, வரைவு நாளைச் சுட்டி நின்றது. 'அது இனி வந்தே தீரும்' என்று உறுதி கூறுவாள், 'அது வரலன்மை அரி'தென எதிர்மறையை மறுத்தோதினாள். 'அரிது' என்பது, ஈண்டு இன்மை குறித்து நின்றது, "மனக்கவலை மாற்றலரிது" என்னும் திருக்குறளிற் போல. குறுகி என்னும் எச்சத்தைக் குறுக எனச் செயவென்னெச்சமாகத் திரித்து ஏதுப் பொருட்டு ஆக்குக. 'அவன் மார்பு உறுக' என்ற நாள் என்றது, வரைவு நிகழ்த்தற்குச் சான்றோர்கள் வரையறுத்த நாளை என்க. இதனால் 'நின்மண நாள் சான்றோரான் வரையறுக்கப்பட்டது; அதுவும் அணித்து' என்று உணர்த்தினளாதலும் உணர்க. ஈங்கு - இவ்வாறு. இல்லத்துள்ளார் இவ்வாறு முயல்வதெல்லாம் நின் வரைவின் பொருட்டேகாண் என்பாள், 'ஈங்காகின்று' என்றாள். ஆகின்று - நடைபெறுகின்றது. "இவவண்ணம் நின்பால் ஆற்றாமை உண்டாகின்றது" என்று கூறி, "இஃதென்கொல்" என வினவினள் என்பாரும் உளர். நெடிய பனையின் அடியைக் கோடைக் காற்றுப் புதைத்துக் குறியதாக்கும் என்றது, வரைவுக்கு நெடிதாயிருந்த காலத்தை ஊழ் அணித்தே கொண்டு வந்தது என்னும் குறிப்பிற்று.

பெரிய கூற என, இதனையும் செயவென்னெச்சமாக்கி 'யான் பெரியவற்றை அறிவித்தலானே' என ஏதுவாக்குக. பெரிய என்றது, கற்புக்கடம் பூண்டமையை. அதனைக் கூற என்றது, யான் அறத்தொடு நிற்க என்றவாறு. இதற்கு வேறு கூறுவாரும் உளர். யாய்- ஈண்டுச் செவிலி.

'யான் அறத்தொடு நின்று அறிவித்தலானே நந்தலைவனைத் தாய் அறிந்தனள். பின்னர் வரைவுடன்பட்டு அதற்காவன செய்கின்றனர் ஆகலின், திருமணம் அணித்தே நிகழ்தல் தேற்றம். நீ வருந்தாதிரு!' என்று தலைவியைத் தோழி தேற்றினள் என்க.

## பாட்டு - உசஙக : தலைவி கூற்று

துறை:—'வரைவிடை நிற்ப ஆற்றகிற்றியோ?' என்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, 'வரைபொருட் பிரிவு இன்றியமையாதாதல் பற்றி நந் தலைவர் நம்மைப் பிரியக்

கருதியுள்ளார் ; அப்பிரிவினை நீ ஆற்றுதல் இன்றியமையா

## மூலமும் உரையும்

நசுரு

தாகலின், ஆற்றியிருக்க வல்லையோ?' என்று வினவிய தோழிக்குத் தலைவி தான் ஆற்றியிருத்தற்கு ஏதுக்காட்டியது

இதன்கண், 'தோழி இதோ என்நுதலைப் பார் ; யான் நந் தலைவர் நாட்டுக் குன்றத்தை இப்பொழுது நோக்கினேன் ; அங்ஙனம் நோக்கினமையால் என்னுதல் பசப்பொழிந்து பழைய தன்மையுடையதாயிற்றன்றே ! யான் தலைவன் பிரி

வினை அவர் குன்றம் நோக்குதலானே ஆற்றவல்லேன்' தலைவி கூறுகின்றாள்.

என்று

உசசூ. இனமயில் அகவு மரம்பயில் கானத்து
நரைமுக ஊகம் பார்ப்போடு பனிப்பப்
படுமழை பொழிந்த சாரலவர் நாட்டுக்
குன்ற நோக்கினேன் தோழி
பண்டை யற்றோ கண்டிசின் நுதலே.

—கபிலர்.

(இ - ள்.) தோழி—, இனம் மயில் அகவும் மரம் பயில் கானதது - திரளாகக் கூடிய மயில்கள ஆரவாரியாநின்ற மரங் கள் நெருங்கிய காட்டின்கண்ணே, நரை முக ஊகம பார்ப் பொடு பனிபப - வெள்ளிய முகததையுடைய கருங்குரஙகுகள் தங்குட்டி யோடே குளிரானே நடுங் குமாறு, படுமழை பொழிந்த சாரல் - ஒலிக்கின்ற மழை பொழிந்த மலேப்பக்கங்களேயுடைய, அவர் நாட்டுக் குன்றம் நோக்கினென் - நந்தலைவர் நாட்டி னுள்ளதொரு மலேயை யான் இப்பொழுது கண்டேன் ஆதலின், கண்டிசின் - நீ உற்றுப்பாரா, நுதல் பண்டை அற்றோ - என் நுதல் பசபபூராத பண்டை நாளில் இருந்தாற் போன்று இருக்கின்றதோ? கூறுக.

விளக்கம்:—வளமிக்குக் காண்டற்கினிதாயிருக்கும்

சாரல் என்

பாள், 'இனமயில் அகவும் மரம்பயில் கானத்துச சாரல்'

இனமயில் என்றது, மயிலின் மிகுதி குறித்து நின்றது.

என்றாள்.

பயிலுதல் என்றது, நெருங்கிய, அல்லது அடர்ந்த என்னும் பொருளில் வந்தது. நரை - வெண்ணிறம். ஊகம் - கருங்குரங்கு. குரங்குகள் மழையானே மிகவும் வருந்து மியல்புடையன; மயில்கள் மழை கண்டு உவக்குமியல்பின; இவ்வியல்பினைக் கம்பநாடர் கிரலே

கார்காலப் படலத்தில்,

"மந்தி துயில் உற்றமுழை வன்கடுவ னங்கத்

திந்திய மவித்ததனி யோகரி னிருந்த.'

(கார்கா - எகூ) என்றும்,

"தேன வாமலர்த் திசைமுகன் முதலினம் தெளிந்தோர்

ஞான நாயகன் நல்வுற நோக்கின நல்கக்



கானம் யாவையும் பரப்பிய கண்ணெனச் சனகன்

மானை நாடிநின் றழைப்பன போன்றன மஞ்ஞை." என்றும் ஓதுதலானே உணர்க.

(கார்—சச.)

தலைவி தலைவன் நாட்டு மலைகண்டு ஆற்றியிருப்பாள் என்பதனை முன்னர் (கச0) இந்நூலின்கண்ணே "மாலையில் அவர் மலை மறைந்ததனால் யான் ஆற்றுகிலேன்" என்று தலைவி தோழிக்குக் கூறியதனானும் உணர்க.

அவர் நாட்டுக் குன்றத்தைக் கண்டவுடன் அவரையே கண்டாங்கு என் னெஞ்சின்கண் உவகை நிரம்புதலானே அவரைக் கண்டவுடனே என் நுதல் பசப்பு மறைந்து ஒளிகாலுமாறு போல இப்பொழுதும் பசப்பகன்று ஒளியுடைத்தாதல் தப்பாது என்பாள், என்நுதல் பண்டையற்றோ பார் என்றாள். பண்டையற்றோ என்றது, யான் அது பண்டையற்றாயிற்று எனக் கருதலளவையானே உணர்கின்றேன். நீ காண்டல் அளவையானும் அதனை யறிந்து எனக்குக் கூறுக என்றவாறு எனவே, 'அவர் பிரிவினை ஆற்றியிருத்தற்கு ஈண்டோர் சிறந்த உபாயம் பெற்றேன்; யான் அவர் வருந்துணையும் ஆற்றி யிருப்பன்; நீ கவலற்க!' என்று தோழியைத் தேற்றினளாத லறிக.

கண்டிசின், இசின் - அசை; முன்னிலை ஏவலொருமை.

## பாட்டு - உ௫0 : தலைவன் கூற்று

துறை :—தலைமகன் பாகற் குரைத்தது. அஃதாவது, வினைமேற் சென்ற தலைவன் வினைமுற்றி மீண்டு வருவான் தலைவியை விரைந்து காணும் அவாவினாற் பாகனுக்குக் கூறியது.

இதன்கண், தலைவன் தேர்ப்பாகனை நோக்கி, 'பாகனே! கயல் முரணிய கண்ணுடைய தலைவி மிகவும் துன்புறுவாள்

காண்! தன்புறுதற் கேதுவாகிய மாலைப் பொழுது வருமுன்னரே யாம அவளைக் காண்டல் வேண்டும்; ஆகலான், விரைந்து செல்லும் நம் புரவிகளை மேலும் விரையுமாறு தூண்டி நடத்துக!' என்று கூறுகின்றான்.

உ௫0. பரலவல் படுநீர் மாந்தித் துணையோ
டிரலை நன்மா னெறிமுத லுகளும்
மாலை வாரா வளவைக் காலியற்
கடுமாக் கடவுமதி பாக நெடுநீர்ப்
பொருகயன் முரணிய உண்கண்
தெரிதீங் கிளவி தெருமர லுயவே.

—நாமலார் மகனார் இளங்கண்ணனார்.

## மூலமும் உரையும்

கூ௬எ.

(இ - ள்.) நெடுநீர்ப் பொருகயல் முரணிய உண்கண் தெரிதீங்கிளவி - நெடிய நீரினகத்தே ஒன்றனோடொன்று போரிடுகின்ற கயன்மீன்களை மாறுபட்ட மையுண்ட கண்களையும் ஆராய்ந்த இனிய சொற்களையும் உடைய நந் தலைவி, தெருமரல் உய - தான் புற்றுச் சுழலுதலினின்றும் தப்பற்பொருட்டு, பாக - தேர்ப்பாகனே! பரல் அவல் படு நீர் மாந்தி - பருக்கைக் கற்களையுடைய பள்ள நிலத்திலே தங்கிய நீரைப பருகி, நெறிமுதல் இரலை நன்மான் துணையோடு உகளும் - வழியின்கண்ணே

ஆணாகிய நல்ல மான்கள் தத்தம் பெண்மானோடே துள்ளி விளையாடாநிற்றற்குக் காரணமான, மாலை வாரா அளவை - மாலைப பொழுது வருதற்கு முன்னரே, கால் இயல் கடுமாக் கடவுமதி - காற்றின் இயல்பினையுடைய கடிய புரவிகளைச் செலுத்துவாயாக.

**விளக்கம்** :—பரல் - பருக்கைக் கல். அவல் - பள்ளநிலம். "நாடா கொன்றோ காடாகொன்றோ - அவலா கொன்றோ மிசையா கொன்றோ" (புறநா—கஅஎ) என்புழியும் அஃதப் பொருட்டாதல் காண்க. பரலவல் படும் நீர்மாந்தி என்றது, கார்காலம் என்பதனைக் குறிப்பான் உணர்த்தியது. படுநீர் - அகப்பட்டுத் தங்கிய நீர் என்க. மாந்தி - பருகி நெறிமுதல் - வழியில்; முதல் ஏழாவதன் உருபு. துணை - பெண்மான். இரலை - ஆண்மான் : சொல்

"வன்பரற் றெள்ளறல் பருகிய இரலைதன்
இன்புறு துணையொடு மறுவந்துகள." (குறுந்—சூ0)

என முன்னர் இந்நூலிற் போந்தமை யுணர்க. இரலையாகிய நன்மான் என்க. துணையோடிரலைமான் உகளக் கண்டவழித் தானும் தெருமரலுறுவானாகலின் அம் மாலை வருமுன்னர் என்றான். 'கார்ப் பருவத் தொடக்கநாள் மாலைப் போதில் யான் மீண்டு வருவேன்; அதுகாறும் ஆற்றுக' என்று பிரிந்தானாகலின், அம் மாலைக்காலத்தே நம் வருகையை எதிர்பார்ப்பாள். காணாளாயின் பெரிதும் துன்புறுவள்; அங்ஙனம் அவள் துன்புறாவண்ணம யாம் ஆண்டுச் சேறல் வேண்டும் என்பான், 'மாலை வாராவளவைக் கடவுமதி' என்றான். மதி - அசை.

அங்ஙனம் சேறற்கும் நம் புரவிகள் ஏற்றனவே என்பான், "காலியற் கடுமா" என்றான். காலியல் - விரைதற் றொழிலிலே காற்றின் இயல் பினையுடைய என்க. கால் - காற்று - காற்றைப் போன்று இயங்கும் கடுமா எனினுமாம். பொருகயல் - போரிடும் பொருட்டு ஒன்றை ஒன்று எதிர்ந்து இணைந்த கயல்மீன்கள் என்க. இவை, கண் ணிணைக்கு உவமை. உண்கண் - மையுண்ட கண். தெருமரலுறின் அக் கண்ணழகு கெடுமே என்றிரங்குவான், அவையிற்றை நினைந்தான். தெரி கிளவி, தீங்கிளவி எனத் தனித்தனிக் கூட்டுக. தெரி கிளவி - ஆராய்ந்துரைக்கும் சொல். தீங்கிளவி - கேள்விக்கினிய சொல். தெருமரல் - துன்பத்தாற் சுழலும் சுழற்சி. உய - தப்பற்கு.



## பாட்டு : உ௱க : தோழி கூற்று

துறை :—பிரிவிடைத் தோழி 'பருவமன்று பட்டது வம்பு' என்று வற்புறுத்தியது. அஃதாவது, 'கார்ப்பருவத் தொடக்கத்தே வருவன்' எனக் கூறிப் பிரிந்த தலைவன் வாராமை, அப்பருவம் வந்தமை கண்டு வருந்திய தலைவிக்கு, 'இது கார்ப் பருவமழையன்று ; வம்பமழை' என்று தோழி கூறி ஆற்றுவித்தது.

இதன்கண், "அன்னாய் இப்பொழுது பெய்யும் மழை, கார்ப்பருவ மழையன்று. எதிரே வரும் கார்ப்பருவத்தே புதிய மழை பொழிதற் பொருட்டு முகில்கள் புதிய நீரைக் கொள்ளக் கருதித் தம்பாலுள்ள பழைய நீரைப் பெய்யா நின்றன ; அத் துணையேகாண்.

இது கார்ப்பருவமன்று தமது மடமையாலே இதனைக் பிடவம் கார்ப்பருவம் என்று கருதி மயில்கள் ஆடுகின்றன; மலர்ந்தன; நீ கவலாதிரு!" என்று தோழி தலைவிக்குக் கூறுகின்றாள்.

உருக. மடவ வாழி மஞ்ஞை மாயினம்
காலமாரி பெய்தென அதனெதிர்
ஆலலு மாலின பிடவும் பூத்தன
காரன் றிகுளை தீர்கநின் படரே
கழிந்த மாரிக் கொழிந்த பழநீர்
புதுநீர் கொளீஇய வுகுத்தரும்
நொதுமல் வானத்து முழங்குகுரல்
கேட்டே.

—இடைக்காடனூர்.

(இ - ள்.) இகுளை - தோழி!, கழிந்த மாரிக்கு ஒழிந்த பழநீர் புதுநீர் கொளீஇய உகுத்தரும - சென்ற காரகாலத்திற் குப் பெய்து எஞ்சிய பழைதாகிய நீரை இனி வரும் கார்காலத் திற்கு வேண்டிய புதிய நீரை முகந்து கொள்ளும்பொருட்டுப் பெய்யாநின்ற, நொதுமல் வானத்து முழங்கு குரல் கேட்டு - அயன்மையுடைய முகில்களினது முழங்கா நின்ற ஒலியைக் கேட்டு, மஞ்ஞைமாயினம - மயில்களாகிய பெரிய கூட்டங்கள், கால மாரி பெய்தென - கார்ப்பருவ மழை பெய்தது என்று

தவறாகக் கருதி, அதன் எதிர் ஆலவும் ஆலின - அம் மழையின்

எதிரே ஆடாநின்றன, பிடவும பூத்தன - அவைகளேயன்றிப் பிடாவும் அங்ஙனமே கருதி மலராநின்றன, மடவ - அவை அறியாமை உடையன, கார அன்று - இது உண்மையான கார் காலமன்றுகாண், நின் படர் தீர்க-நினது துன்பம் ஒழிவாயாக.

## மூலமும் உரையும்

கூசுஅ

**விளக்கம்** :—இகுளை - தோழி. மடவ - அறியாமையுடையன. பிடவம் ஒன்றறியுயிரும், மயில் ஐந்தறிவுயிரும் ஆகலின், அவை ஆராய்ச்சி அறிவின்றி வம்பமாரியைக் காலமாரியாகக் கருதின. நீயோ மனனுணர்ச்சியாகிய ஆறுவதறிவும் உடையை. சான்றோராகிய நந்தலைவர் சொற்பிறழ நடவார்; அவர் வாராமையே இது காலமாரி அன்றென்றற்குச சான்றாம்; ஆகலின், நீ படர் ஒழிக என்பாள், 'காரன்று நின்படர்தீக' என்றாள். மாயினம் - மாயிருஞாலம் என்புழிப்போல யகரவுடம்படுமெய் பெற்று வந்தது. மா - பெருமை கரிய இனமுமாம். மஞ்ஞை - மயில். பெய்தென - பெய்ததாகக் கருதி என்க. அதனெதிர் - அப்பெயலின் முன்னர். காலமாரி - கார்காலத்து மழை

என்க ஆலலும் ஆலின என்பது, ஆலின என்னும் ஒரு சொன்னீர்மைத்து, "அணியலு மணிந்தன்று" என்புழிப்போல. தோழி தலைவியைத் தேற்றும் பொருட்டு ஈண்டுப் பொய்யே கூறப்புக்காளாகலின், தன் பொய்யைத் தலைவி நம்பும் பொருட்டுக் காரன்று என்றவள், அது காரல்லாமைக்கு மேலும் விளக்கம் கூறப்புகுவாள், கழிந்த மாரிக்கு ஒழிந்த பழநீர் புது நீரை முகக்கும பொருட்டு முகில்கள் பெய்தொழிக்கின்றன என்று நுண்ணிதிற் படைத்து மொழியும் அழகுணர்க. இங்ஙனமே பொய் கூறப்புகுவார் தமது பொய்யைக் கேட்போர் வாய்மையாகக் கருதும் பொருட்டு அப்பொய்க்கு மேலும் பல பொய்களையே விளக்கமாகக் கூறமுற்படுதலை உலகியலிற் காணலாம். கழிந்த மாரிக்குப் பெய்தெஞ்சிய பழநீர் என்க. கழிந்த மாரிக்கு என்றமையால் புதிய மாரிக்குப் புது நீர் கொளீஇய என வருவித்துக் கூறுக.

நீ காலமாரியோ என்று வருந்துவாய் என்று கருதாமல் பெய்தலான், அம்முகில்கள் நமக்கு அன்புடையன அல்ல என்பாள், 'நொதுமல் வானம்' என்றாள். நொதுமல் - அயன்மை. வானம் - முகிலுக்கு ஆகுபெயர் "புரைதீர்ந்த நன்மை" பயத்தலின் ஈண்டுத் தோழி கூறிய பொய்ம்மையும் வாய்மையே என்க.

## பாட்டு - உருஉ : தலைவி கூற்று

துறை :—தலைமகன் வரவறிந்த தோழி, 'அவர் நம்மை வலிந்து போயினார்க்கு எமபெருமாட்டி தீயன கடிந்து நன்காற்றினாய்' என்றாட்குக் கிழத்தி உரைத்தது.

அஃதாவது, பரத்தையிற் பிரிந்தமையானே தனக்குக் கொடுமை செய்த தலைவன் மீண்டு வந்துழித் தலைவி அவனுடன்

ஊடலுமின்றிக குறைகூறலும் இன்றி அவனை ஏற்றுளாகத் தோழி, 'இங்ஙனம ஏற்றுக்கோடல் அறிவோ?' என வினாயி னாட்குத் தலைவி கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, "நின் தோள்வளை நெகிழும்படி நினக்குக் கொடுமை செய்து பிரிந்த தலைவன் வந்த வுடனே முகந்திரியாது ஏற்றனை ஆதலின், நீ அறியாமை யுடையை' என்று என்னைக் கடிகின்றாய். சான்றோர் தம்மைப் புகழும்போதும் நாணும் இயல்பினர்; அத்தகையோர்முன்





அவர் பழியெடுத்துக் கூறின், அவர் அதனைப் பொறுக்கவல் லரோ? ஆதலாற்றான் யான் அங்ஙனம் ஏற்றுக் கொள்வேனாயி னேன்'' என்று கூறுகின்றாள்.

௨௫௨. நெடிய திரண்ட தோள்வளை ஞெகிழ்த்த
கொடிய னாகிய குன்றுகெழு நாடன்
வருவதோர் காலை யின்முகந் திரியாது
கடவுட் கற்பி னவனெதிர் பேணி

மடவை மன்ற நீயெனக் கடவு
துனியல் வாழி தோழி சான்றோர்
புகழு முன்னர் நாணுப
பழியாங் கோல்பவோ காணுங் காலே.

—கிடங்கிற் குலபதி நக்கண்ணனர்.

(இ - ள்.) தோழி - தோழியே!, வாழி - வாழ்வாயாக, நெடிய திரண்ட தோள்வளை ஞெகிழ்த்த - நீண்டனவாய்த் திரண்ட தோள்களை மெலிவித்தது அவற்றிற் செறித்த வளையல்களைக் கழல்வித்த, கொடியன் ஆகிய குன்று கெழுநாடன் - கொடுமையுடையவனாகிய மலைபொருந்திய நாட்டையுடைய தலைவன், வருவதோர் காலை பரத்தையர் சேரியினின்றும் எப்பொழுதேனும நின் மனைக்கு வாராநின்ற காலத்தே, இன்முகம் திரியாது - இனிய முகம மாறுபடாமல், கடவுட் கற்பின் அவன் எதிர் பேணி - தெய்வத்தன்மையுடைய நின் கற்பினாலே அவனை மகிழ்நது எதிர்கொண்டு அழைத்துப் போற்றுதல் செய்து, மன்ற மடவை நீ எனக கடவுபு - தேற்றமாக அறிவிலி யாயினை நீ என் அங்ஙனம் செய்கின்றனை என்று வினவி, துனியல்- வருந்தாதே, சான்றோர் முன்னர்ப் புகழும் நாணுப - அறிவா னிறைந்த பெரியோர் தம் முன்னே பிறர் தம்மைப் புகழ்தலையும்

நாணுகிற்பா, காணுங்கால் பழி யாங்கு ஒல்ப - அத்தகையோர் முன்னின்று யாம் எடுத்துக்கூறும் பழியை யாம் கூறுமிடத்தே எங்ஙனம் பொறுப்பர்.

**விளக்கம்** :—நின்னைப் பிரிந்து பரத்தையர் சேரியிலே தங்குவதன் வாயிலாய் நின் தோள்களை மெலிவித்து, வளைகள் கழலும்படி
செய்த கொடியவன் என்க தோள்கள் பண்டிருந்த நிலையை பிப்பாள் 'நெடிய திரண்ட தோள்' என்றாள்.
நினைப்

அவன் உள்ளமும் கல் போன்றது என்பாள், 'குன்று கெழு நாடன்' என்றாள். 'அவன் கொடுமையை நினைப்பாயேல், நின் முகந் திரிந்து ஊடவேண்டாவோ! அதனை மறந்துவிடுகின்றனை' என்று

கடிவாள்,
கற்பிற்கு

'இன்முகந் திரியாது' என்றாள். இச்செயல் மானிடக்கு உரியதன்றென்பாள், 'கடவுள் கற்பின்' என்றாள். மானி



டர்க்கு ஊடுமாற்றாற் கணவனைத்திருத்துஞ் செயலும் கற்பழிவன்று என்று குறிப்பான் உணர்த்தியபடியாம்.

இன்முகம் - அன்புடையோர் வருகையால் அகத்தே தோன்றும் மகிழ்ச்சி மெய்ப்பட்டுத் திகழும் முகம் என்க. இம் மெய்ப்பாடு கண்டார்க்குப் பேரின்பம் நல்கலின் இன்முகம் எனப்பட்டது. பேணுதல்- தலைவனைக் கண்டபொழுது செய்யக்கடவவெல்லாம் குறைவின்றிச் செய்தல்.

பிழை செய்யும் கணவனோடே அவன் பிழையை எடுத்துக்காட்டி அவனைத் திருத்திக்கோடலே அறிவுடைய மகளிர்க்கு அழகாம். நீ அங்ஙனம் செய்யாது பேணுமாற்றால் அவனை மேலும் தவறு செய்ய விட்டனை. ஆதலால் அறிவிலி என்பாள், 'பேணி மன்ற மடவை' என்றாள்; மடவையாயினை என்று ஆக்கம் வருவித்துரைக்க. எனக் கடவுபு என்ற குறிப்பால் என் அங்ஙனம் ஒழுகுகின்றனை என்று வினவி என விரித்துரைத்துக் கொள்க. இதுகாறும் தோழி கூற்றைத் தலைவி கொண்டு கூறினள். இனித் தன்னொழுக்கத்திற்குக் காரணம் கூறுகின்றாள்.

சான்றோர் புகழும் முன்னர் நாணுப என்றது, தங்கண் முன்னர்ப் பிறர் தம்மைப் புகழும் புகழையும் நல்லோர் நாணுப என்றவாறு. இங்ஙனம் கூறாது 'புகழ்தற்கு முன்னரும் நாணுப' என்பாருமுளர். சான்றோர் புகழும் நாணுவாராதலை,

"தம் புகழ் கேட்டார்போல் தலைசாய்த்து மரந்துஞ்ச (கலி-ககூ.) எனவும், "பரந்தோர் எல்லாம் புகழத் தலைப்பணிந்து இறைஞ்சி யோனே குருசில்" (புறம்-க௫உ.) எனவும் பிறர் கூறுமாற்றானும் உணர்க.

"கணமலை நன்னாட கண்ணின் றொருவர்
குணனேயும் கூறற் கரிதால் - குணனழுங்கக்
குற்றம் உழைநின்று கூறும் சிறியவர்கட்
கெற்றா லியன்றதோ நா" (நாலடி-ங௬க.)

எனவரும் நாலடியானே பிறர் குற்றங் கூறல் சால்புடையோர்க்கு ஒவ்வாமையறிக. இதனால் இங்ஙனம் கூறிய தலைவியின் சான்றாண்மையே பெரிதும் விளக்கமுறுதலுணர்க.

## பாட்டு - உ௫௩ : தோழி

கூற்று

துறை—பிரிவிடைத் தோழி வற்புறுத்தது. அஃதாவது தலைவன பிரிவை ஆற்றாளாகிய தலைவியைத் தோழி ஆற்று

வித்தது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'நீ இங்ஙனம் துயருறுதலை நந்தலைவர் கேட்டிலர்; கேட்டிருப்பரேல் தாம் சென்ற வினை முற்றுவழியும விரைந்து மீள்வர்,' என்னுமாற்றால் அவர் வினை முற்றியவுடன் வந்துவிடுவர்', என்று தேற்றுகின்றாள்.



உருரு. கேளா ராகுவர் தோழி கேட்பின்
விழுமிது கழிவ தாயினு நெகிழ்நூற்
பூச்சே ரணையிற் பெருங்கவின் றொலைந்தநின்
நாட்டுயர் கெடப்பி னீடலர் மாதோ
ஒலிகழை நிவந்த ஓங்குமலைச் சாரற்
புலிபுகா வுறுத்த புலவுநாறு கல்லளை
ஆறுசென் மாக்கள் சேக்கும்
கோடுயர் பிறங்கன் மலையிறந் தோரே

(இ - ள்.) தோழி—, ஒலி கழை நிவந்த ஓங்குமலைச் சாரல்- ஒலிக்கின்ற மூங்கில்கள் உயர்ந்து வளர்ந்துள்ள உயர்ந்த மலைப் பக்கத்தினகண், புலி புகா வுறுத்த புலவு நாறு கல்அளை - புலி தனது இரையைச் செறித்துவைத்தமையாலே புலானாற்றம் வீசுகின்ற மலைமுழைகளிலே, ஆறு செல் மாக்கள் சேக்கும் - வழிச் செல்லும் மாந்தர்கள் தங்குதற்குக் காரணமான, கோடு உயர் பிறங்கல் மலையிறந்தோர் - குவடுகள் உயர்ந்த விளக்கமுடைய மலைகளைக் கடந்து சென்ற நந்தலைவர், கேளார் ஆகுவர் - நின் னிலைமை உணர்த்தற்கு யான விடுத்த தூதர் செய்தியை இன்னும் கேட்டிலா ஆதல்வேண்டும், கேட்பின் - அவர் அச்செய்தியைக் கேட்பாராயின், விழுமிது கழிவது ஆயினும - தாம ஈட்ட மேற்கொண்ட சிறந்த பொருள கைகூடாதொழியினும், நெகிழ் நூல் பூச்சேர் அணையில் - நெகிழ்தலையுடைய நூலினின்றும் மலர்கள செறிந்துள்ள அணையின்கண், பெருங்கவின் தொலைத்த நின் நாள் துயர் - பெரிய அழகினைக் கெடுத்த நின்னுடைய நாடோறும் உழக்கும் துன்பம், கெடப் பின் நீடலர் - கெட் டொழியும்படி பின்னர் ஆண்டுத தங்காது வருகுவர்

**விளக்கம்** :—கேளாராகுவர் என்றதனல் 'யான் நின்னிலை உணர்த்த அவர்பால் தூது விடுத்துள்ளேன்; அத்தூதர் அசசெய்தியை இன்னும் தலைவர்க்குக் கூறவில்லை போலும,' என்று குறிப்பானுணர்த்தப் பட்டது. கேட்பின் என்றது, அத்தூதர் தேற்றமாக அவர்க்குக் கூறுவர் ஆகலின், அவர் இன்று, நாளை, கேட்பர்; அங்ஙனம் கேட்பாராயின் என்றவாறு இது தோழி தலைவன்பால் தூது போக்கியுள்ளமையைக் குறிப்பானுணர்த்தி ஆற்றுவித்ததாகக் கருதுக. தூது போக்கும் வழக்கத்தை, இந்நூல் கஉ0-ஆம் செய்யுட்டுறையானும் உணாக.

ஈண்டு விழுமியது என்றது, பொருளை; என்னை? இல்லறம் நடத்தற்குச் சிறந்தது பொருளே ஆகலான் என்க. விழுமியது - சிறந்தது. தாம் மேற்கொண்டு சென்ற ஈட்டற்றொழில் முற்றுப் பெறாது பொருள் கிடையாதொழியினும் வருவர் என்று தேற்றிய வாறு கழியினும் என்றதன்கண், உம்மை சிறப்பு. இன்னினும் பொருளைச சிறப்பாகக் கருதுவாரல்லர் என்பது குறிப்பு.

## மூலமும் உரையும்

**௩௭௩**

நெகிழ்நாற் பூச்சேர் அணையென்றது, பண்டு தலைவன் உடனுறைந் துழி மலர்மாலை முதலியன தூக்கி ஒப்பனை செய்யப்பட்டதன்றி இப் பொழுது ஒப்பனை செய்யப்படா அணை என்பதைக் குறிப்பானுணர்த் திற்று. என்னை? பண்டு நாற்றிய மாலையின்கண் மலர்கள் வாடிச சுருங்குதலானே கட்டிய நூலின் முடிச்சுகள் நெகிழ்வனவாயின என்றும், நெகிழ்ந்தமையால் அவ் வாடல் மலர்கள் அணையின் கண்ணே நழுவி வீழ்ந்தன என்றும் அத்தொடர் குறிப்பானே உணர்த்தலான் என்க.

அப்பழமலர் சேர்ந்து கிடப்பதன்றிப் புதிதாக மலர் பரப்பப் படாத அணையின்கண் என்றவாறு.

நாட்டுயர்: நாள் + துயர், நாடோறும் வருத்தும் துயர் என்க. நீடாமை துயர் கெட ஏதுவாகலான், 'துயர் கெட நீடலர்' என்றாள். செயவெனெசசம் ஏதுப்பொருட்டு. விரைந்து வருவா என்று வற் புறுத்தற் பொருட்டு நீடலர் என எதிர்மறை முகத்தாற் கூறினாள்.

புகா - உணவு. உறுத்த - செறித்துவைத்த. கல்லளை - மலை

முழைஞ்சு. புலியுறையும் கல்லளையன்றிப் பிற உறைவிடம் பெருமை கூறித் தலைவா சென்ற ஆற்றினது தீமை தெரித்தாள் என்க. அத்தகைய கொடிய ஆறு சென்றும் விழுமிய பொருளீட்டல் அவர் கடனாகலின் அவர் நின்னைப் பிரிந்தார் அன்றி அன்பின்மையானன்று என்றுணர்த்தியவாறு.

பிறங்கல் மலை - விளக்கமுடைய மலை என்க.

## பாட்டு - உருசு : தலைவி கூற்று

துறை .—பருவங்கண்டு வற்புறுத்தும் தோழிக்குக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, 'தலைவர் தாம் கூறிய பருவம் வரு முனனா வருவர்' என்று தன்னை ஆற்றுவித்த தோழியை நோக்கி, அப்பருவவரவு கண்ட தலைவி கூறியது.

(கண்டு உரைத்த தென்று கூட்டுக) இது பழைய குறிப்பு.

இதன்கண், 'அவர் சொன்ன பருவத்தே வருவர்' என்று அதுகாறும் ஆற்றுவித்த தோழியை நோக்கி, "ஏடி உதோ பார் வேங்கைமரத்தின முதன்மலர் தோன்றிவிட்டன; நம் இன் துயில் இன்பத்தினையும் கூந்தற்பாயலின் இன்பத்தையும் சேர மறந்து செனற நநதலைவர், 'உதோ வருகின்றனர்,' என்று

நமக்கு அறிவிக்கும் தூதரே இன்னும் வந்திலாமை காண்" என் கின்றாள்.

உருச. இலையி லஞ்சினை யினவண் டார்ப்ப
முலையோர் மென்முகை அவிழ்ந்த
கோங்கின்
தலையலர் வந்தன வாரா தோழி



துயிலின் கங்குல் துயிலவர் மறந்தனர்
பயினறுங் கதுப்பிற் பாயலு முள்ளார்
செய்பொருள் தரனசைஇச் சென்றோர்
எய்தின ராலென வரூஉந் தூதே.

—பார்காப்பார்.

(இ - ள்.) தோழி—, இலைஇல் அம்சினை இன வண்டு

ஆர்ப்ப - இலையில்லாத அழகிய கொம்புகளிலே திரளாகிய வண்டுகள் ஆரவாரிப்ப, முலை ஏர் மென் முகை அவிழ்ந்த கோங்கின் - முலையினது அழகைக்கொண்ட மெல்லிய அரும்புகள் விரிந்த கோங்கமரத்தினது, தலை அலர் வந்தன - முதல் மலர்கள் தோன்றாநின்றன, செய்பொருள் தரல் நசைஇச் சென்றோர் - ஈட்டுதற்குரிய பொருளை விரும்பி நம்மைப் பிரிந்துசென்ற தலைவர், எய்தினர் என வரூஉம் தூது வாரா - இதோ வந்தனர் என்று அறிவித்தற்கு வரும் தூதுகளோ இன்னும் வந்தில. அவர் துயில் இன் கங்குல் துயில் மறந்தனர் - அத்தலைவர் துயிலுதற்கு இனிய இரவின்கண் நம்மோடு துயிலும் துயிலை மறந்து விட்டனர், பயில் நறுங் கதுப்பின் பாயலும் உள்ளார் - தாம் பயின்றறிந்த நறிய கூந்தலாகிய படுக்கையினிமையையும் நினையாராயினர்.

**விளக்கம்** :—கோங்கமரம் மலரும் பருவத்தே இலைகள் முழுதையும் உதிர்த்து நிற்றலால் 'இலையில் அஞ்சினை' என்றாள். இலையின்றி முழுதும் மலராகவே அழகிதாய்த் தோன்றலின் அஞ்சினை என்றாள் வண்டுகள் புதிதாக மலரும் மலரிடைத் தேனூதற்கு ஆரவாரித்தன என்க. முலையேர் மென்முகை என்புழி, பொருள் உவமமாக வந்தது என்னை?, "பொருளே உமவஞ் செய்தனர் மொழியினும், மருளறு சிறப்பினஃதுவமமாகும்" (தொல் - உவம - ௯.) என்பதோத்தாகலான். "வருமுலை யன்ன வண்முகை உடைந்து, திருமுக மவிழ்ந்த தெய்வத் தாமரை.'' (சிறுபாண் - எஉ - ௩) எனப் பிறரும் ஓதுதல் காண்க. முலை ஏர் - முலையினது அழகைக்கொண்ட என்க. ஏர் உவமவுருபு எனினுமாம்.

மென் முகை - மெல்லிய அரும்பு. அவிழ்ந்த - மலர்ந்த. தலையலர்-முதற்கண் மலரும் மலர். 'கோங்கமரம் மலரும் முன்னர் யான் மீள்வன்' என்று கூறிச்சென்ற தலைவர், 'அது மலர்ந்த பின்னரும் வந்திலரே' என்றவாறு. வந்தன வாரா என்றதன்கண் முரண் தோன்றிச் செய்யுளின்பம் மிகுதல் உணர்க. துயிலுதற்கு இனிய கங்குற்றுயில் என்றது, தன்னோடு ஒரு பாயலிற்றுயிலும் இரவின்கண் துயிலை. தலைவியுடனே துயிலும் துயில், ஆற்றவும் இனிதென்பதை,

"தாம்வீழ்வார் மென்றோட் டுயிலின் இனிதுகொல்

தாமரைக் கண்ணான் உலகு." (குறள் - ககOரு)

எனனும் அருமைத் திருக்குறளானும் உணர்க.

(பாடம்)

1. பாரகாபரன், பாரகரபரன், பாரகாபான்.

## மூலமும் உரையும்

ருஎரு

ஏனைக் கங்குற் றுயிலின் நீக்குதற்குத், 'துயிலின் கங்குற்றுயில்' எனப்பட்டது. உம்மை: உயர்வுசிறப்பு. மறந்தனர் என்றது, மறத்தற்கியலாததொன்றனையும் மறந்தார் என்பதுபட நின்றது.

பயில் நறுங்கதுப்பு என்றது, தாம் அடிக்கடி கோதியும், மலர் சூட்டியும், மோந்தும், படுக்கை கொண்டும், பயின்ற நறிய கூந்தல் என்றவாறு. நறுங்கதுப்பெனப் பண்டு தலைவனாற் பாராட்டப்பட்டமை நினைவாள், அங்ஙனம் கூறினாள். தலைவன் கதுப்பினைப் பாராட்டுதலை,

"யானையந் துறைவோள் தேம்பாய் கூந்தல்

... ... ... ... ...

நுண்மணல் அறல்வார்ந் தன்ன
நன்னெறி யவவே நறுந்தண் ணியவே.”
(கககூ)

என, இந்நூலின்கண் முன்னர்ப்போந்த செய்யுளானும் உணர்க.

பாயல் – படுக்கை. தன் கூந்தலே பாயலாகக் கிடந்தமை பற்றிக் ‘கதுப்பிற் பாயல்’ என்றாள். கதுப்பாகிய பாயல் என்க. இன் சாரியை தவிர்வழி வந்தது.

செய்பொருள்: வினைத்தொகை.
எனினுமாம் நசைஇ – விரும்பி.
அறஞ்செய்தற்குரிய பொருள்

இசசெய்யுட்டுறையின்கண் பருவங்கண்டு வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி உரைத்தது என்றதனை, ஆற்றுவித்த தோழிக்குத்தலைவி பருவம் கண்டுரைத்தது என்று மாற்றிக் கோடல் வேண்டும். பருவம் வருமுன்னர்த தலைவர் வருகுவர் என்று கூறி ஆற்றுவித்த தோழிக்கு அப் பருவஙகண்டு அவா வாராமையைத தலைவி தோழிக்குக் கூறியது என்று பொருள் கொள்ளவேண்டும் என்றற்கே, “கண்டுரைத்தது என்று கூட்டுக,” என்னும் குறிப்பும் பண்டையோரால் தரப்பட்டது. இஃதறியார் “பருவம் கண்டு வருந்திய தலைவியை ஆற்றுவித்த தோழிக்குக் கூறியது” எனவிரிப்பர்.

## பாட்டு – உருரு: தோழி கூற்று

துறை :—‘இடைநின்று மீள்வ’ரெனக்

கவனற கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது. அஃதாவது, 'வினைமேற் சென்ற தலைவன், தன்பாற் கொண்டுள்ள பேரன்பு காரணமாக இடை வழியிலேயே மீண்டுவிடுவனோ?' என்று ஐயுற்றுக் கவலை கொண்ட தலைவிக்கு, 'அவன் வினைமுற்றியே மீள்வன்,' என்பதற்குத் தோழி காரணங் கூறித் தெளிவித்தது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'நந்தலைவர் செல்லும் வழியின்கண்ணே களிற்றியானைகள் யாமரத்தினைக் கோட்டாற் குத்திச் சிதைத்துப் பட்டைகளைப் பிடியானைகட்கு ஊட்டுதலைக் காண்பாராகலின், தாம் மேற்கொண்ட வினையின்கண்ணும் தங் கடமையை எண்ணி வினைமுற்றியே மீள்வர்காண்; இடை நின்று மீளார்,' என்று தேற்றுகின்றாள்.



உருரு. போத்தில் காழ அத்த யாஅத்துப்
பொரியரை முழுமுதல் உருவக் குத்தி
மறங்கெழு தடக்கையின் வாங்கி
உயங்குநடைச்
சிறுகண் பெருநிரை உறுபசி தீர்க்கும்
தடமருப் பியானை சண்டனர் தோழி
தங்கட னிறீஇய ரெண்ணி யிடந்தோறும்
காமர் பொருட்பிணிப் போகிய

நாம்வெங் காதலர் சென்ற வாறே.

—கடுகு பெருந்தேவனார்.

(இ - ள்.) தோழி—, தம கடன் இறீஇயர் எண்ணி - தமது கடமையைச் செய்யும்பொருட்டு நினைந்து, இடந்தொறும காமர் பொருட் பிணி போகிய - ஈட்டற்குரிய இடங்கள் தோறும் தாம் விருமபிய பொருணசையாலே சென்ற, நாம் வெங் காதலர் - யாம் விரும்பாநின்ற காதலையுடைய தலைவர், சென்ற ஆறு - நம்மைப் பிரிந்துசென்ற வழியின்கண், பொததில காழ அத்த யாஅத்து - புரையற்ற காழ்ப்பினையுடைய யாமரத்தினது, பொரி அரை முழுமுதல் உருவக் குத்தி - பொரிந்த அரையினையுடைய திரண்ட அடிப்பகுதியினை உருவிப்போம்படி கோட்டாலே குத்தி, மறங்கெழு தடக்கையின வாங்கி - வலிபொருந்திய பெரிய கையா லே வளைத்து, உயங்கு நடை சிறுகண் பெருநிரை உறுபசி தீர்க்கும் - வருநதாநின்ற நடையையும் சிறிய கண்களையுமுடைய பெரிய திரளாகிய யானைகளின் மிகுந்த பசியினைப் போக்குநின்ற, தடமருப்பு யானை கண்டனர் - பெரிய கொம் பினையுடைய களிற்றியானையைக் கண்டனர்.

**விளக்கம்** :—பொத்து - பொந்து; உட்டுளை. காழ - காழ்ப்புடையன. அத்த - அருவழியின்கண் உள்ளன. யாஅத்து - யாமரத்தினது- பொரியரை - பொரிந்த அடிமரம். குத்தி என்றதனால் கோட்டால் என வருவித்துரைக்க. வாங்கி - வளைத்து. உயங்கு நடை - பசியால் வருந்துகின்ற நடை. சிறுகண் பெருநிரை என்ற தொடரின்கண் செய்யுளின்பம் உணர்க. பெரு நிரை - பெரிய கூட்டம் என்க. ஈண்டுப் பிடிகளும் கன்றுகளுமாகிய கூட்டம். மறங்கெழு தடக்கை என்றது, யா மரத்தினை வளைக்கும் வலிமையுடைமை கருதி என்க. தடக்கை - பெரிய கை. தடமருப்பியானை என்றது, களிற்றினை.

தலைவர் தாம் செல்லும் நெறியின்கண் களிற்றியானை தாம் வருந்தியும் தம் சுற்றம் ஓம்பக் கண்டனர் என்றது, அக் களிற்றின் ஆள்வினைத் திறத்தை எண்ணினராய்த் தாமும் இன்பம் விழையாது வினை விழைந்து தங்கேளிர் துன்பந் துடைத்தற்கு முயல்வார் இடையின்கண் மீளார் என்று கூறியவாறு.

## மூலமும் உரையும்

கூளஎ

தங்கடன் இறீஇயர் - தமது கடமையை இறுக்கும்பொருட்டு. தங்கடன் இறீஇயர் எண்ணிப் பொருள் தேடச் சென்றோர் என்றதும் யானையின் செயலால் அக் கடமை மேலும் வலியுறுத்தப்பட்டு வினை

மேற் செல்வர் என்றற்குக் குறிப்பேதுவாதலுணர்க.

கண்டனர் என்று துணிவு பற்றி இறந்த காலத்தாற் கூறினள். இனி, பண்டு நந்தலைவர் இங்ஙனம் கண்டனர் அன்றோ? இப்பொழுதும் காண்பர் என்றலுமாம். என்னை? இந் நிகழ்ச்சியைத் தலைவன் கூறவே இவள் அறிந்தாளாகலின் என்க. எனவே, பண்டு கண்டதனை அவர் கூறக் கேட்டனம்; இப்பொழுதும் அவர் காண்பர் என்று குறிப்பான் உணர்த்தினளாயிற்று.

ஆகலான் இடைநின்று மீளாது வினைமேற் செல்வர் என்பது குறிப்பெச்சம். காமர் - விருப்பம்; விரும்புதற்குக காரணமான பொருள் என்க. பிணி அதன்கட் பற்று. அப்பற்றின் தூண்டுதலாலே போகிய தலைவர் என்க.

நாம் வெங் காதலர் - நாம் விரும்பும் காதலர்.

## பாட்டு - உருரு : தலைவன் கூற்று

துறை .—பொருள விலக்கப்பட்ட கிழவன் செலவழுங்கி யது. அஃதாவது, பொருள்வயிற்பிரிதலை விலக்கப்பட்ட தலைவன், செலவொழிந்தவழிக் கூறியது.

இதன் கண், தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறுவானய், 'பூங் குழையோய், யாம் வினைமேற் சென்று வருவேம்; யாம் வருந் துணையும் ஆற்றியிருத்தல் வல்லையோ?' எனத் தலைவியை யாம வினவுமுன்னரே அவள் நிலைகலங்கி அழலாயினள். அவள் அழுத கண்கள் வினைமேற் சேறற்குரிய நந் தேரின் செலவைத் தடுத்து நிறுத்தின. இனி யாம் செல்வேமல்லேம,' என்று கூறுகின்றான்.

உருரு. மணிவார்ந் தன்ன மாக்கோடி யறுகை

பிணிகான் மென்கோம்பு பிணையோடு
மார்ந்த
மானே றுகளுங் கானம் பிற்பட
வினைநலம் படீஇ வருது மவ்வரைத்
தாங்கல் ஒல்லுமோ பூங்குழை
யோயெனச்
சொல்லா முன்னர் நில்லா வாகி
நீர்விலங் கழுத லாஞ
தேர்விலங் கினவால் தெரிவை
கண்ணே.

—......................

1. ஆசிரியர் பெயர் காணப்படவில்லை.



(இ - ள்.) நெஞ்சே—, பூங்குழையோய் - பூத் தொழிலை
யுடைய குழையை அணிந்த நங்கையே! மணி வார்ந்தன்ன மாக் கொடி அறுகை பிணி கால் மென்கொம்பு பிணையொடும் ஆர்ந்த-நீலமணியின் கதிர்கள் ஒழுகினாற்போன்ற கரிய கொடிகள் படர்ந்த அறுகம்புல்லினது பிணித்த வேர்களையுடைய மெல்லிய கிளையைத் தம் பெண்மான்களோடே வயிறு நிரம்ப மேய்ந்த,

மான் ஏறு உகளும் கானம் - ஆண்மான்கள் துள்ளித் திரியாநின்ற காடுகள், பிற்பட - பின்னே கிடக்கும்படி சென்று, வினை நலம் படீஇ வருதும் - யாம் தொழிலால் உண்டாகும் நலத்தைப் பெற்று மீண்டு வருவேம், அவ் வரை தாங்கல் ஒல்லுமோ - அங்ஙனம் யாம் வருமளவும் நின்னால் பொறுத்திருத்தல் கூடுமோ எனச் சொல்லா முன்னர் - என்று நங் கருத்தை அவட்கு யாம் கூறுதற்கு முன்பே, தெரிவை கண் - நந் தலைவி யுடைய கண்கள், நில்லாவாகி நீர் விலங்கு அழுதல் ஆன - அவள் வரைத்தாய் நில்லாதனவாகி நீர்த்துளிகள் புறப்பட்டொழுகுதற் குக் காரணமான அழுதலை ஒழியாதனவாகி, தேர் விலங்கின - நந் தேரினது செலவைத் தடுத்தன காண்.

**விளக்கம்** :—ஆதலான் இனி யாம் செல்வேமல்லேம் என்பது குறிப் பெச்சம்.

பூங்குழையோய் வினைநலம் படீஇ வருதும் அவ்வரைத் தாங்கல் ஒல்லுமோ எனச் சொல்லா முன்னர்த் தெரிவை கண் அழுதல் ஆன தேர் விலங்கின என இயைத்துக் கொள்க.

மணி - நீலமணி. மணிவார்ந்தன்ன என்றது, நீலமணிகளின் ஒளிக் கதிர்கள் ஒழுகினாற்போல என்றவாறு. இக் கதிர்கள் அறுகங் கொடி கட்கு உவமை என்க. மா - கருமை. பிணி கால் மென் கொம்பு - பிணித்த வேர்களையுடைய மெல்லிய கொம்பு என்க. அறுகம்புல்

கிளைகடோறும் வேருடையதாய் நிலத்தோடே பிணிக்கப்பட்டிருக்கும் இயல்புடையது.

பிணை - பெண்மான். பிணையொடும் ஆர்ந்த என்பதன்கண் உம்மை உயர்வுசிறப்பு. ஆர்தல் - வயிறுநிரம்ப மேய்தல். ஆண்மான்கள் நிரம்பவுண்டு பிணையோடே துள்ளித்திரியும் காட்சியே நம் தேர்ச் செலவை விலக்குதற்குப் போதியதாம் எனச செலவழுங்குதற்குப் பிறிதுமோர் ஏது குறிப்பாற் கூறியவாறும்.

வினை நலம் - தொழிலால் ஏற்படும் நன்மைகள். அவை பொருளீட்டலும் அறஞ் செய்தலும் துய்த்தலும் முதலாயின என்க. அவ்வரை - அக் காலவரை என்க தாங்கல் - பிரிவானுளதாய துன்பத்தைப் பொறுத்திருத்தல். தனது பிரிவினைச் சிறிதும அவள் பொறாளென்பதனை அவள் தன்னைப் புல்லிக்கிடந்து புடைபெயர்ந்த மாத்திரையின், அள்ளிக் கொள்வற்றுய்ப் பசப்பூர்தல் கண்கூடாக் கண்டானாகலின், 'அவ்வரைத் தாங்கல் ஒல்லுமோ?' என வினுயினன் என்க. நில்லாவாகி நீர் புறப்படும் அழுதல் என்க. அவள வரைத்தாய் நில்லாவாகி என்றவாறு.

## மூலமும் உரையும்

கூஎகூ

### பாட்டு - உ௬எ : தலைவி கூற்று

துறை :—வரைவுணர்த்திய தோழிக்குக் கிழத்தி யுரைத் தது. அஃதாவது, தலைவியின்

தமர் வரைவுடன்பட்டாராகத்,

'தலைவிக்குப் பலரறிமணம் நிகழும்' என்ற செய்தியைத் தோழி, தலைவிக்கு அறிவுறுத்தியபொழுது தலைவி மகிழ்ச்சியாலே கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'ஆர்கலி வெற்பன் வருந்தோறும் வந்து இன்பஞ் செய்து, அவன் பிரிந்துழிப் பிரியாது நம்மைப் பீழிக்கும் காமப்பகை இனி எப்போதும் இன்பமே செய்யும் நண்புடைத்தாம்,' என்று மகிழ்ந்து கூறுகின்றாள்.

உருள. வேஃரு முதலும் கோடு மோராங்குத்
தோடுத்த போலத் தூங்குபு தோடரிக்
கீழ்தாழ் வன்ன வீழ்கோட் பலவின்
ஆர்கலி வெற்பன் வருதோறும் வரூஉம்
அகலினும் அகலா தாகி
இகலுங் தோழிநங் காமத்துப் பகையே.

—உறையூர்ச் சிறுகந்தனூர்.

(இ - ள்.) தோழீ—, நம் காமத்துப் பகை - நமது காம மாகிய பகை, வேரும் முதலும் கோடும் ஓராங்குத் தொடுத்த போல - வேர் அடிமரம கிளேகள் என்னும் மூன்று பகுதிகளிடத்தும் ஒருபடியாகத் தொடுத்து வைக்கப்பட்டன போன்று, தூங்குபு தொடரி - தொங்குதலேச் செய்து தொடர்ந்து, கீழ் தாழ்வு அன்ன வீழ்கோள் பலவின் - கீழே விழுந்துவிடுதல் போன்று வீழ்ச்சியையுடைய குலேகள் மிக்க பலாமரங்களேயும், ஆர்கலி வெற்பன் - ஆரவாரத்தையுடைய மலேகளேயுமுடைய நந்தலேவன், வருதொறும் வரூஉம் - நம்பால் வருந்தோறும் வாராநிற்கும், அகலினும் அகலாதாகி இயலும் - அவன் பிரியும் போதும் தான் பிரியாதாகி மாறுபடும்; இஃதொரு வியப்பு!

**விளக்கம்** :—வெற்பன் வருந்தோறும் வருவது அவன் அகலும் போது அகல்வதே முறையாம்; அவ்வாறன்றி அகலாது இகலுகின்றது. மேலும் அவன் உடனுறையும் போது நமக்கின்பம் நல்கி, அவன் பிரிந்து விட்டாலோ அதுவே துன்பஞ் செய்யாநின்றது. இக்காமத்தின் செயல் வியப்புடைத்து என்றவாறு.

வரைவிற்குப் பின்னர்த் தலேவன் பிரியானுகலின், இக் காமப்பகை இனி நம்மை நலியாது என்று மகிழ்ந்தவாறும்.

களவிற் போன்று பிரிதலும் புணர்தலுமின்றி யாண்டும் ஒருபடியாய் இனித்தலைவன் நம்மோடு உடனுறைந்து இன்பம் செய்வன் என்பாள், 'வேரும் முதலும்கோடும் ஓராங்குத், தொடரிய கோட்பலாவுடைய வெற்பன்' என்றாள். யாண்டும் இடையறவின்றிப் பயன்தரும் பலாப் போல யாண்டும் பிரிவின்றி இன்பஞ் செய்வன் என்பது கருத்து.

ஓராங்கு - ஒன்றுபோல; ஒருதன்மையாக. முதல் - அடிமரம். தூங்குபு - தொங்கி. தொடரி - தொடர்ந்து. கீழ்தாழ்வன்ன - கீழே விழுதல் போன்ற என்றது, காய்கள் தம் பருமையாலே வீழ்ந்து விடுமோ என்று நினைக்கும்படி, என்றவாறு.

ஆர்கலி - ஆரவாரம். மலைகளிடத்தே பல்வேறு ஆரவாரங்கள் உண்டாதலை மலைபடு கடாத்தான் உணரலாம்.

வரும்போது வருவது அகலுங்கால் அகலாதாகலின், இகலும் என்றாள். இகலும் - மாறுபடும். அவன் அகன்றுழித் தன்னைத்துன்புறுத்தலின் பகை என்றாள். இப்பகைக்கினி உய்திபெற்றேன் என்பது கருத்து.

## பாட்டு - உ௫அ : தோழி கூற்று

துறை :—(க) தோழி தலைமகற்கு வாயின் மறுத்தது. அஃதாவது, பரத்தையிற் பிரிந்து மீண்டு வந்து தன்பால் வாயில் இரக்கும் தலைவனை மறுத்துத் தோழி கூறியது.

(உ) வாயில் நோந்ததூஉமாம. அஃதாவது, தலைவனுக்குத் தோழி வாயிலுடம்பட்டது எனினும பொருந்தும்.

இதன்கண், குறையிரந்து நின்ற தலைவனை நோக்கித் தோழி, 'பெரும! நீ எஞ்சேரிககு இனி வாராதேகொள்! மாலை தருதலையும் இனி ஒழிக! பெருமகன் அழிசி என்பானுடைய ஆர்க்காடு போனறு சிறநத இவளின் மாண்புடைய நலங்கெட்டதைப் பறறி இப்போது யாண்டும் அலர் தூறறப் படுகின்றது. அவள நலனிழந்தாள. நினக்காகாள் காண்,' என மறுததுரைக்கின்றாள.

உ௫௮. வாரலெஞ் சேரி தாரனின் றூரே
அலரா கின்றாற் பெரும காவிரிப்
பலராடு பெருந்துறை மருதொடு பிணித்த
ஏந்துகோட் டியானைச் சேந்தன் தந்தை
அரியலம் புகவி னந்தோட்டு வேட்டை
நிரைய ஒள்வாள் இளைஞர் பெருமகன்
அழிசி ஆர்க்கா டன்னவிவள்
பழிதீர் மாணலந் தொலைதல் கண்டே.

—பரணர்.

(இ - ள்.) காவிரிப் பலர் ஆடு பெருந்துறை-காவிரியாற் றினது பலரும் நீராடாநின்ற பெரிய நீர்த்துறையின் கண்ணே, மருதொடு பிணித்த ஏந்து கோட்டு யானைச் சேந்தன் தந்தை - மருதமரத்திலே கட்டப்பட்ட ஏந்திய மருப்பினையுடைய யானை களையுடைய சேந்தன் என்பானுடைய தந்தையும், அரியல் அம் புகவின் அம் தோட்டு வேட்டை - தேறலாகிய இனிய உணவினை
யும், அழகிய தொகுதிகளாகிய விலங்கினங்களை வேட்டையாடுந் தொழிலையும், நிரைய ஒள்வாள் இளைஞர் பெருமகன் - நிரல் பட்ட வாள்களையும் உடைய வீரர்களுக்குத் தலைவனும் ஆகிய, அழிசி ஆர்க்காடு அன்ன இவள் பழிதீர் மாண் நலம் - அழிசி யினது ஆர்க்காடென்னும் நகரதனை ஒத்த இவளுடைய குறற மற்ற மாட்சிமையுடைய பெண்மை நலன் முழுதும, தொலைதல் கண்டு அலராகின்று - அழிதலைக் கண்டு ஊர் முழுதும அலர் தூற்றப்படுகின்றமையான், பெரும - பெருமானே, வாரல் எம சேரி - இனி எம் சேரிக்கு வாராதேகொள்,! நின் தார் தாரல் - நின் மாலையையும் இனி எமகுத் தருதல வேண்டா!

**விளக்கம்:**—'இவள் தன் பெண்மை நலம் முழுதும் இழந்தாள்; இனி நினக்கு ஏற்றவள் ஆகாள்: நீ மீண்டும் பரத்தையர் சேரிக்கே போகக் கடவை,' என்று, தோழி தலைவனைக் கடிந்துரைத்தவாறும்.

' நினக்குப் பரத்தையர் சேரியே சாலப் பொருந்துவதாம்; ஆண்டுச் செல்' என்பாள், 'எம் சேரி வாரல்' என்றாள் 'நின்கையுறை யாகிய மாலை பரத்தையர்க்கே கொடுக்கத் தகும்' என்பாள், 'தாரல்

நின் றார்' என்றாள். வாரல் - வாராதொழி. தாரல் - தருதலைத் தவிர். அலர் - இவள் கணவன் இவளைக் கைவிட்டமையான் இவள் நலனிழந்தாள் என்று ஊரவர் கூறும் பழிச்சொல். இனி, பரத்தையர் தலைவி தலைவனை அகப்படுத்தினாள் என்று கூறும் பழிசசொல் என்பாருமுளர். அது பழியன்மை உணர்க. ஊர் முழுதும் பழிதூற்றல் கண்டும் பரத்தமை கைவிடாய் என்பது கருத்து.
•

மருதமரம், மருதக் கருப்பொருள். மருதத்தில் யானை பிணிக்கப் பட்டன என்பது திணைமயக்கம். தலைவிக்குரிய நீ பரத்தையராற் பிணிக்கப்பட்டனை என்பது குறிப்பு.

இச் செய்யுளிற் கூறப்படும் சேந்தன் தந்தை பற்றி,

அழிசி என்பானை:ப்

"நோவினி வாழிய நெஞ்சே மேவார்

ஆரான் கடந்த மாரி வண்மகிழ்த்
திதலை எஃகிற் சேந்தன் றந்தை
தேங்கமழ் விரிதார் இயறேர் அழிசி
வண்டுமூசு நெய்த னெல்லிடை மலரும்
அரியலங் கழனி ஆர்க்கா டன்ன



காமர் பணைத்தோ ணலம்வீ றெய்திய
வலைமான் மழைக்கட் குறுமகள்
சின்மொழித் துவர்வாய் நகை
க்குமகிழ்ந்தோயே." (நற். ககூ0) எனவரும் நற்றிணைப்
பாட்டினும் கூறப்படுதல் அறிக.

யானையின் மருப்பு முன்பக்கம்
உயர்ந்திருத்தலான் 'ஏந்து கோட்டி யானை'
எனப்பட்டது.

அரியல் - தேனுற் சமைத்த கள். தோடு - தொகுதி, ஈண்டு விலங்குத் தொகுதி என்க. நிரைய - வரிசையுடையவாகிய. நிரையம் எனக் கண்ணழித்து, நரகத்துன்பத்தைத் தருகின்ற எனினுமாம். ஆர்க்காடு- சோணுட்டொரு மூதூர்.

பரத்தையர் நலம் பழியுடைய நலம். அதனை விரும்பித் தூய இவள் நலத்தைக் கெடுத்தொழிந்தனை என்பாள், 'பழிதீர் மாணலம்'

என்றாள்.

இனி இரண்டாவது துறைக்கு, 'இவள் நலம் தொலைதல் கண்டு அலராகின்று; நீ வருதலும தார்தருதலும் எமக்கு உடம்பாடல்ல; அலர்க்கஞ்சினேம் ஆகலின், உடம்பட்டேம்' என்பது கருத்தாகக் கொள்க.

## பாட்டு - உ௫௬ : தோழி கூற்று

துறை :—காப்பு மிகுதிக்கண் ஆற்றாளாகிய தோழி, அறத்தொடு நின்று அவனே பரிகரிப்பனென்று கருதியதனைத் தலைமகளும் நயப்பாளாகக் கருதியது அஃதாவது, இற்செறித்தன் முதலிய காவல் மிக்கவிடத்துப் பெரிதும் மெலிந்த தலைவியின் நிலைக்குத் தோழி கவன்று களவொழுக்கத்தை வெளிப்படுத்தினாள். அங்ஙனம் வெளிப்படுத்தினால் தலைவன் பின்னர் வரைந்து கோடற்கு முன்வந்து தம் வருத்தத்தைப் போக்குவன் என்னும கருத்தாலே தான் வெளிப்படுத்தின செய்தியை அறிந்து தலைவியும் தன்னை வெறாதே நயக்கும் நிகழ்ச்சியைத் தலைவிக்குக் கூறியது.

பொருட்டு அங்

இதன்கண், தலைவியின் உடம்பாடின்றித் தானே அறத்தொடு நின்ற தோழி தலைவியை நோக்கி, 'நின் புரைமை நீயறிவை ; மெய்போலப் பொய் கூறுதலிற் பயனில்லை' என்று

கருதி, 'யான் பொய்கூற இசையாது மெய்யை வெளிப்படுத்தினேன்; இதன் வாயிலாய் நன்மையே விளையும் என்று எண்ணுகின்றேன்.' என்று கூறுகின்றாள்.

௨௫௬. மழைசேர்ந் தெழுதரு மாரிக் குன்றத்
தருவி யார்ந்த தண்ணறுங் காந்தள்
முகையவிழ்ந் தானா நாறு நறுநுதல்



பல்லிதழ் மழைக்கண் மாஅ யோயே
ஒல்லை யாயினுங் கொல்லை யாயினும்
நீயளந் தறிவைநின் புரைமை வாய்போற்
பொய்ம்மொழி கூறலஃ தேவனோ
நெஞ்சு நன்றே நின்வயி னானே.

—பரணர்.

(இ - ள்) மழை சேர்ந்து எழுதரும் மாரிக் குன்றத்து அருவி ஆர்ந்த தண் நறுங்காந்தள்-முகில்கள் தங்கி எழாநின்ற கார்காலத்து மலையினின்றும் வீழும அருவிநீரைப் பருகிய தண்ணிய நறிய காநதளினது, முகை அவிழ்ந்து

ஆறு நாறும் நறு நுதல் - அரும்புகள் மலர்ந்து அமையாதனவாய் மணங்கமழா நின்ற நறிய நுதலினையும், பல் இதழ் மழைக்கண் மாஅயோய்-

பலவாகிய இதழ்களையுடைய தாமரைப் பூப்போன்ற குளிர்ந்த கண்களையும மாமை நிறத்தையும உடையவளே, ஒவ்வை ஆயினும் கொல்வை ஆயினும - நீ யான் செய்தசெயலை நன்றென்று கருதி உடமபடுவாய் ஆயினும் அல்லது பிழையாகக் கொண்டு ஒழுபபாயாயினும், நீ நின் புரைமை அளநதறிவை-நீயே நினது உயர்வினை அளவிட்டறியும தகுதியுடையை ஆகலின, நீவிரும் பியதனைச் செய்வாயாக, நின் வயின் நெஞ்சம் நன்றே-இச்செய லுக்குக் காரணமான என் நெஞ்சம நின்பால் நன்மையே உடைத்து, வாய்போல் பொய் மொழி கூறல் அஃது எவன்-

மேலும் யான் இங்ஙனம் செய்யாவழிப் பொய் கூறவே நேருமா கலின் அப பொய்ம்மொழியை மெய்மமொழிபோலக் கூறுத லால் யாது பயன் உளதாம.

விளக்கம்:—மழை-முகிலுக்கு ஆகுபெயர்.சேர்ந் தெழுதல்-ஆண்டுத் தங்கிக் கிடந்து, பின்னர்த திசைதொறும் போதல். மாரிக் குன்றம்-

கார்காலத்து மலை. கார்ப்பருவததே குளிர்ந்த மலையினது அருவியைப் பருகிக் காந்தள் முகை அவிழ்ந்து ஆனு நாறும் என்றது, 'யான் அறத்தொடு நின்றதனால் நம்நிலையைச செவிலி உட்கொண்டு நற்றாய் முதலியோர்க்கு உணர்த்துவள்; அதனால் தமா வரைவு மலிந்து திருமணம் நிகழும்' என்று குறிப்பான் உணர்த்தியவாறு. இங்ஙனம் இதன்கண் உள்ளுறை காணாது பிறரெல்லாம் வாளா போயினர். மழை சேர்ந்து எழுதரும் மாரிக்குன்றம் தோழியாலே உண்மையறிந்து கொண்ட செவிலி, அக்குன்றத்து அருவி செவிலி அறத்தொடு நிற்றல்; அவ்வருவியைப் பருகிய காந்தள் தலைவியின் தமர், அக்காந்தள் முகையவிழ்ந்து ஆனு நாறுதல் - தமர் காவல் கைவிட்டு வரைவுடம்பட்டுக் கரணம் நிகழ்த்துதல். இங்ஙனம் நுண்ணிதில் உள்ளுறை காணு வழிக் காந்தள் மூகையவிழ்ந்து நாறும் நுதல் என்றற்கு இரண்டடிகள் விரித்தல் வெற்றெனத் தொடுத்தலாமாறுணர்க.

பல் இதழ் - தாமரை: அன்மொழித்தொகை. ஆனு - அமைவின்றி.



மாயோய் - மாமை நிறமுடையவளே. ஒல்வை என்றது, என் செயல் நன்றென்று கருதி உடம்படுவாய் என்றவாறு. கொல்வை என்றது, ஈண்டு ஒறுப்பாயாயினும் என்றவாறு: நடுநிலைமை திறம்பாத உயர்வுடையை யாகலின் 'நீ உன் தகுதிக் கேற்பச் செய்வதைச் செய்க. அச்செயல் நன்றாயினும் தீதாயினும் யான் ஏற்றுக் கொள்வேன்' என்றவாறு.

நின் மெலிவு கண்டு கவன்ற செவிலிக்குக் குறிப்பாகக் களவொழுக்கத்தை வெளிப்படுததினேன் என்பாள், அதன் இன்றியமையாமை தோன்ற எதிர்மறையானே, 'பொய் கூறல் எவனோ?' என்றாள். 'யாம் இன்னும் மறைப்பேமெனின், நம் நிலை இனி ஆற்றொணாததாய் விடும்; ஆதலால், இத்துயர்க்கு உய்திகாணும் நன்னெஞ்சத் தோடே தான் மறை வெளிப்படுத்தேன் என்பாள், 'நெஞ்சம் நன்றே நின்வயின்' என்றாள். என் செயலால் நலமே விளையும் என்பது கருத்து.

# பாட்டு - உசுo : தோழி கூற்று

துறை :—அவர் வரவிற்கு நிமித்தமாயின கண்டு ஆற்றளாய தலைமகட்குத் தோழி சொலலியது. அஃதாவது, ஆற்றளாய தலைமகட்கு அவர் வரவிற்கு நிமித்தமாயின கண்டு தோழி சொல்லியது என மாறுக; இதுபிரிவின்கண் ஆற்றளாகிய தலைவியைத் தலைவன் வருதற்குரிய நிமித்தங்கள் உளவாதல் கண்ட தோழி, அவற்றைக் கூறி ஆற்றுவித்தது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'உதோபார்! குருகுகள் உயர்ந்து பறவாநின்றன; புதற்கண் மலர்களில் வண்டுகள் ஊதா நிற்ப அவை மலராநின்றன; நின் வளைப்பொலிந்த தோள்களும் சிறிது தடிக்கின்றன; இந்நிமித்தங்கள் உண்மையான் சுரனிறந்த நந்தலைவர் இன்னே வருகுவர்; நீ கவலற்க!' என்று கூறித் தேற்றுகின்றாள்.

உசுo குருகும் இருவிசும் பிவரும் புதலும்
வரிவண் டூத வாய்நெகிழ்ந் தனவே
சுரிவளைப் பொலிந்த தோளுஞ் செற்றும்
வருவர்கொல் வாழி தோழி பொருவார்
மண்ணெடுத் துண்ணும் அண்ணல்

யானை

வண்தேர்த் தொண்டையர் வழையம லடுக்கத்துக்
கன்றி லோரா விலங்கிய
புன்று ளோமைய சுரனிறந் தோரே.

—கல்லாடனூர்.

(இ - ள்) தோழி வாழி - தோழி நீ வாழ்வாயாக!; குருகும் இரு விசும்பு இவரும் - நாரைகளும் பெரிய வானத்தின்



கண்ணே உயர்ந்தேறிப் பறவாநின்றன, புதலும் வரி வண்டு ஊத வாய் நெகிழ்ந்தன - புதலின்கண் உள்ள அரும்புகளும் வரிகளையுடைய வண்டுகள் ஊதாநிற்ப மலராநின்றன, சுரிவளைப் பொலிந்த தோளும் செற்றும் - சுரிந்த சங்காலியன்ற வளைகளானே பொலிவுபெற்ற நின் தோள்களும் அவ்வளையலோடே பூரித்துச் செறிவனவாயின, இங்ஙன் ணிமித்தங்கள் தோன்றுதலானே, பொருவார் மண் எடுத்து உண்ணும் அண்ணல் யானை வண் தேர்த் தொண்டையர் - பகைவரது நிலத்தை வென்று கொண்டு அதன்கட் பயன் விளைத்துண்ணுகின்ற

தலைமையை யுடைய யானையையும் வளவிய தேரையும் உடைய தொண்டை மான்களுக்குரிய, வழை அமல் அடுக்கத்து - சுரபுன்னைகள் செறிந்த மலைபக்கத்தே, கன்று இல் ஓர் ஆ விலங்கிய - கன்றில்லாத ஒற்றை ஆவினைப் போகாது தடுத்துக் கொண்ட, புன்தாள் ஓமைய சுரன் இறந்தோர் - புற்கென்ற அடிப்பகுதியை யுடைய ஓமைமரங்களையுடைய பாலைநிலங்களைக் கடந்து சென்ற நந்தலைவர், வருவர்-இன்னே மீண்டு வருகுவர்; நீ வருந்தாதே கொள்.

விளக்கம்:—தம் மனையயலே நாரை வானத்தே உயர்ந்து பறத்தல் நன்னிமித்தம் என்னும் கொள்கை உண்டுபோலும். நாரை உயர்ந்து பறந்தால் மழை உண்டாகும் என்பது இக்காலத்தும் பலருடைய நம்பிக்கையாகவுளது வண்டோதா திறப்புப் புதல் மலர்தல் தலைவர் வருகையை அறிவிக்கும் தூது பெறுவாம் என்னும் குறிப்புடைத்து. தோள்வளை இறுகுதல் நன்னிமித்தமாதலை, "மயிர்வார் முன்கை வளையுஞ் செறாஉம் .. .....பெருநகட ணுடன் வருங்கொல் அன்னாய" (ஐங்-உகஅ.) எனப் பிறர் கூறுமாற்றானும் உணரலாம்.

சுரிவளை: வினைத்தொகை. சுரிந்த சங்கவளையல் பொலிந்த என்னும் எசசததைப் பொலிய எனத் திரிப்பின் நன்கு பொருந்தும். செற்றும் - செறியும். ஆதலால் வருவர் என வருவித்துரைக்க.

பொருவார் - பகைவர். மண் எடுத்து உண்ணலாவது, பகைவர் நிலத்தை வென்று கைக்கொண்டு அதன் பயனை நுகர்தல். மண்ணெடுத்துண்ணும் தொண்டையர், அண்ணல் யானை வண்டேர்த் தொண்டையர் எனத்தனித்தனிக் கூட்டுக. தொண்டையர்-தொண்டை

நாட்டரசர். வழை - சுரபுன்னை. அமலுதல் - அடர்தல். அடுக்கம்- பக்கமலை. தொண்டையர் அடுக்கம் என்றது, வடவேங்கடத்தை, வேங்கடத்தின் அப்பாலான சுரம் என்க.

பாலைநிலத்தின்கண் நிழல்பெறல் அரிதாகலின், அதன்கட் சென்ற ஆன், ஓமைநிழலை அரிதிற் பெற்று அந்நிழலிலேயே தங்கும் என்பாள், 'ஓமை ஆனை விலங்கிய சுரன்' என்றாள். விலங்குதல்-வேறிடம் செல்லாது தடுத்துக்கோடல். இதனால் பாலையின் வெப்பம் உணர்த்தப்பட்டது இனிக் கன்றில்லா மலட்டாவே தங்கும் என்றமையாலே, நின்பாற் பேரன்புடைய தலைவர் நின்னை நினைந்து மீள்வர் என்று குறிப்பான் உணர்த்தினமையும் உணர்க. கன்றில் ஆ—மலட்

கு.—25



டுப்பசு. ஓரா - நிரையுடன் உறையாத தனிப் பசு. தலைவர் அன்பு செலுத்தற்குரிய நம்மையும் மேலும் சுற்றத்தாரையும் உடையராகலின் அவ் ஆப்போன்று தங்கமாட்டார் என்றவாறு.

## பாட்டு - உசுக : தலைவி கூற்று

துறை :—இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தோழிக்குச் சொலலுவாளாய்ச் சொல்லியது அஃதாவது, 'வரைந்து கொள்ளும் கருத்தின்றிக் களவொழுக்கமே விழைந்து ஒழுகும் தலைவன், ஒருநாள் மனையயலே இரவின்கண் வந்தமை யுணர்ந்த தலைவி, அவன் வருகையை உணராதாள் போன்று தன்னிலையினைத் தலைவனுக்குணர்த்தி வரைவுகடாவுவாள் தோழிககுக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி 'என்னுடைய கண்கள் இருள் செறிநத நடுயாமததினும நாழிகைக் கணக்கர் கண் போன்று பெரிதும் வருந்தித் துயிலாவாகின்றன,' என்று கூறுகின்றாள்.

உகூக. பழமழை பொழிந்தெனப் பதனழிந் துருகிய
சிதட்டுக்கா யெண்ணின் சில்பெயற்
சடைநாள்
சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்
நள்ளென் யாமத் தையெனக் கரையும்
அஞ்சுவரு பொழுதி னானு மென்கண்
துஞ்சா வாழி தோழி காவலர்

கணக்காய் வகையின் வருந்தியென்
நெஞ்சுபுண் ணுற்ற விழுமத் தானே.
—கழார்க் கீரனெயிற்றியார்.

(இ - ள்.) தோழி—, காவலர் கணக்கு ஆய் வகையின் - நாழிகைக்கணக்கர் இரவின்கண் வாளேக்கிக் காலக்கணக்கை ஆராய்கின்ற முறையாளே நாழிகையை ஆராய்ந்து, வருந்தி என் நெஞ்சு புண்ணுற்ற விழுமத்தான் - வருத்தமெய்தி என் நெஞ்சப் புண்பட்ட துன்பத்தாலே, பழமழை பொழிந்தெனப் பதன் அழிந்து உருகிய சிதட்டுக் காய் எண்ணின - பழைய மழை பெய்ததாகச் செவ்வியழிந்து உள்ளுருகிப்போன குருட்டுக் காயையுடைய எட் செடிகளையுடைய, சில் பெயல் கடை நாள்-சிறிய மழையையுடைய இக் கார்காலக் கடைநாட்களிலே, சேற்று நிலை முனைஇய செங்கண் காரான் - சேற்றின்கண் நிற்றலை வெறுத்த சிவந்த கண்ணையுடைய எருமை, நள் என் யாமத்து ஐ எனக் கரையும - நள் என்னும் ஓசையையுடைய மூலமும உரையும

௩அ௭

நடுயாமத்தின்கண்ணே ஐ என்று ஒலிக்கும், அஞ்சுவரு பொழுதினும் - அச்சம் உண்டாதற்குக் காரணமான பொழுதின்கண்ணும், என் கண் துஞ்சா - என்னுடைய கண்கள் துயிலாவாயினகாண்.

**விளக்கம்** :—'தலைவன் வருகின்ற நாளினும் வாரா நாளினும் இரவின்கண் வான் நோக்கி நாழிகை ஆராய்ந்தும், வாராமையால் வருத்தமெய்தியும, என் நெஞ்சம் புண்ணாகிவிட்டது; கண்களும் உறங்கிற்றில' என்றுணர்த்தியவாறும். இதனால் தலைவி களவொழுக்கத்தின்கண் தன்னிலை இற்றெனத் தலைவனுக்குணர்த்தினமை காண்க. தலைவன் விரைவில் வரைந்து கொள்ளவேண்டும் என்பது தலைவி கருத்து எட் செடிக்கு மிகையான மழை கூடாது. பெய்யின் காய்கள் கெட்டுப் பயனழியும்; மழையிற்பட்ட காயின் அகத்தேயுள்ள எள் பதனழிந்து உருவின்றி உருகிவிடும்; வெளித்தோற்றத்தில் மட்டும் காய் உருவத் திற் காணப்படும்; இக்காயையே 'சிதட்டுக் காய்' என்றாள் என்க. இக் காலத்தே இதனைப் பொய்க்காய் (பொக்கு) என்று வழங்குகின்றனர். சிதட்டுக்காய் என்பதற்குக் குருட்டுக்காய் எனலே செம்பொருளாகும். ஊமைக்காய் என்பாருமுளர். (சிதடு - குருடு.) எண் - எள். தனக் கொவ்வாத மழை பெய்தமையாலே உருகிச் சிதடாய்ப்போன எள்ளை யுடைய காலம் என்றது, தனக்கொவ்வாத துன்பங்களாலே நெஞ் சுருகி யான் அழியாநின்றேன் என்னும் குறிப்பிற்றென்க

இற்செறிக்கப்பட்ட தன்னிலைக்கு உள்ளுறை உவமமாகச் சேற்று நிலை முனைஇய செங்கட்காரான் கரைதலைக் கூறினள். ஐ என - ஒலிக் குறிப்பு

காவலர் - அரண்மனை காக்கும் காவலர். இவர்கள் இரவில் விண் மீன்களை ஆராய்ந்து நாழிகை காணும் வழக்கமுடையராகலின், அவர் போல இரவில் நாழிகை எண்ணுயிற்று என்று இடையறாது வானோக்கி யானும் வருந்தாநின்றேன் என்பாள், 'காவலர் கணக்காய் வகையின் வருந்தி' என்றாள். வகை - முறை, விதம்; விழுமம் - துன்பம்.

## பாட்டு - உசுஉ : தோழி

கூற்று

துறை :—உடன்போக்கு நேர்ந்த தோழி, கிழத்திக்கு உடன்போக்குணாத்தியது. அஃதாவது, தலைவனோடே அவன் விருமபியபடி தலைவியை உடன்போக்க உடமபட்ட தோழி அச் செய்தியைத தலைவிக்குக் கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி,

'ஊரின்கண் அல ரெழவும, சேரி ஆரவாரிப்பவும், ஒழிவின்றி நம்மை அலைக் கின்ற அறனில்லா அன்னை, தமியளாகத் தன்மனையே உறைவாளாக யானே, நீ இனித்தலைவனோடே இவா அறியாவாறு சென்று, மலையயலே யானைச்சுவட்டின்கண் உள்ள 'நீரைப்பருகுதல் நன்றென்று ஆராய்ந்து முடிவு செய்துள்ளேன்,' என்று அறிவுறுத்துகின்றாள்.

 

உசுஉ. ஊஉ ரலரெழச் சேரி கல்லென
ஆஞ தலைக்கும் அறனி லன்னை
தானே இருக்க தன்மனை யானே
நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க

உணலாய்ந் திசிறு லவரோடு சேய்நாட்டு
விண்தோட நிவந்த விலங்குமலைக்

கவா அற்

கரும்பு நடு பாத்தி யன்ன
பெருங்களிற் றடிவழி நிலைஇய நீரே.

—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

(இ - ள்.) தோழி—, ஊர் அலர் எழச் சேரி கல் என - ஊரின்கண்ணே பழிமொழி உண்டாகாநிற்பத் தெருவின்கண் உள்ளார் கல்லெலன ஆரவாரியாநிற்ப, ஆறு அலைக்கும அறனில் அன்னை - அமையாதே நம்மை வருத்துகின்ற அறப்பண்பில்லாத நம்மன்னை, தன் மனை தானே இருக்க - தனக்குரிய இவ் வில்லத்தின்கண்ணே தான் ஒருத்தியே தனித்து உறைவாளாக, யான் - யானோ, சேய்நாட்டு விண்தொட நிவந்த விலங்கு மலைக் கவான் - தொலைவின்கண் உள்ள நாட்டகத்தே வானத்தைத் தீண்டுமாறு உயாந்த ஒன்றனுக்கு ஒன்று குறுக்கிட்டுக் கிடந்த மலைகளின் தாழ்வரையில் உள்ள, கரும்பு நடு பாத்தி அன்ன - கரும்பு நடுகின்ற பாத்தியை ஒத்த, பெருங்களிறு அடி வழி நிலைஇய நீர் - பெரிய களிற்றியானையினது அடிச்சுவட்டின்கண்

நிலைபெற்ற நீரினை, அவரொடு - நந்தலைவரோடே,
நெல்லிதின்ற முள் எயிறு தயங்க -
நெல்லிக்காயைத் தின்ற முட்போன்ற எயிறுகள்
விளங்கும்படி, உணல் ஆய்ந்திசின் - நீ பருகுதல்
நன்றென்று ஆராய்ந்து துணிந்தேன்

**விளக்கம்:**— தலைவனுடன் தலைவி சென்றவுடன் ஊரினர் பழி தூற்றுதலும், சேரியினர் ஆரவாரித்தலும நிகழ்தல் இயல்பு. அங்ஙனம் நிகழினும், கற்புக் கடம்பூண்ட நினக்குத் தலைவனோடே செல்லலே அறமாம் என்பாள், 'ஊர் அலரெழச் சேரிகல்லென' என்றாள். ஊரினர் நொதுமலர் ஆகலின், பழிதூற்று மாத்திரையே அமைவர். சேரியினர் உறவினர் ஆகலின், சினந்து ஆரவாரிப்பர் என்பது தோன்ற, ஊரினையும் சேரியினையும் வேறு வேறு ஓதினள். தலைவி தலைவனோடே சென்ற பின்னர்த் தலைவியின் தமர் சினங்கொள்வர் என்பதனை, தாய் தன்னையர்க்கு அறத்தொடு நிற்கும்பொழுதும் தன்னையர் சினத்தல் கூறலான் உணரலாம்.

"அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
என்னையர்க் குய்த்துரைத்தாள் யாய்;
அவரும், தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்து
ஒருபக லெல்லாம் உருத்தெழுந் தாறி

இருவர்கட் குற்றமும் இல்லையா லென்று
தெருமந்து சாய்த்தார் தலை." (கலி: ௩௧.)

எனவரும் கலித்தொகையானும் அறிக.

தலைவியின் நிலையை ஊகத்தாலறிந்து அவள் விரும்பிய தலைவற்கு அவளை மணஞ் செய்வித்தற்கு முயறல் போக்கி, இற்செறித்தல் முதலிய வற்றானே அலைத்துக் கொடுமை செய்தலின், 'அறனில் அன்னை' என்றாள். ஈண்டு அறம் என்றது, தலைவியைத் தலைவனோடே கூட்டுவிக்கும் செயலை. அறனிலாரோடு உடனுறைதலுந் தகாதென்பாள், 'தன்மனை தானே இருக்க' என்று வெறுத்தோதினாள்.

நெல்லி - கனிக்கு ஆகுபெயர். பாலை நிலத்தே செல்வோர் நீர் வேட்கை தணியும் பொருட்டு அந்நிலத்துள்ள நெல்லிக்கனியைத் தின்பர். நெல்லிக்காயின் துவராலே பல் மாசுபடுதலின் அது தீரவும், நெல்லிக்காயைத் தின்ற பின்னர் நீர் பருகின் அஃதினிதாதலினானும் 'முள்ளெயிறு தயங்க நீருணல்' என்றாள். தலைவனோடே இருந்து உண்ணப்படுவது வறிய நீரேயாயினும், அமிழ்தினும் இனிதென்பதுபட 'அவரொடு உணல்' என்றாள். இதுதான் நீ இப்பொழுது செய்யக்கிடந்த அறம் என்பாள், 'ஆய்ந்திசின்' என்றாள். இசின் - அசை. ஆராய்ந்து தெளிந்துள்ளேன் என்றவாறு.

கரும்பு நடு பாத்தி, களிற்றடிச் சுவட்டிற்கு உவமை. பாலைநிலத்தின்கண் நீர் அருமை கூறுவாள், 'களிற்றடி வழி நிலைஇய நீர்' என்றாள்.

நீ தலைவனோடே போதலே இப்போது
செய்யற்பாலது என்பது கருத்து.

## பாட்டு - உகூ௩ : தோழி கூற்று

துறை—'அன்னை வெறியாட் டெடுக்கக் கருதாநின்றாள்; இனி யாம் இதற்கு என்கொலோ செயற்பாலது?' எனத் தோழி, தலைமகட்குத தலைமகன் சிறைப்புறமாகக் கூறியது.

அஃதாவது, செவிலி, தலைவியின் மெலிவு தெய்வத்தான் வந்ததாகக் கருதி வெறியாட்டெடுக்கக் கருதியிருப்பதனைத் தோழி தலைவனுக்கு உணர்த்தும பொருட்டு, அவன் மனை யயலே வந்து நின்றபொழுது அவன் வரவறியாள் போன்று தலைவிக்குக் கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, "நாம் தலைவனோடே கொண்டுள்ள தொடர்பறியாத செவிலி முதலியோர், ஆட்டினை அறுத்துத் தினைப் பிரப்புப் பரப்பி, ஆற்றிடைக் குறையின்கண் இசைக்கருவி முழங்க நம் நோய்க்கு மருந்தாக மாட்டாத பிற தெய்வங்களை வாழ்த்தி 'இவள் பேய்க் கோட்பட் டாள்' என்று கூறுநிற்றல், நமக்குப் பெரிதும் இன்னல் தருவதாம்" என்று கூறுகின்றாள்.

உகூரு. மறிக்குர லறுத்துத் தினைப்பிரப் பிரீஇச்
செல்லாற்றுக் கவலைப் பல்லியங் கறங்கத்
தோற்ற மல்லது நோய்க்குமருந் தாகா
வேற்றுப்பெருந் தெய்வம் பலவுடன் வாழ்த்திப்
பேஎய்க் கோளீஇயள் இவளெனப் படுதல்
நோதக் கன்றே தோழி மால்வரை
மழைவிளை யாடு நாடனைப்
பிழையே மாகிய நாமிதற் படவே.

—பெருஞ்சாத்தனுர்.

(இ - ள்.) தோழி—, மால் வரை மழை விளையாடும் நாடனை - பெரிய மலையினிடத்தே முகில்கள விளையாடாநின்ற நாட்டிற்குத் தலைவன்பால், பிழையேம் ஆகிய நாம் இதன் பட - தவறில்லாதேமாகிய யாம் இவ்வியற்கை மணத்திலே

ஒழுகா நிற்ப இவ்வுண்மையறியமாட்டாதாரானே, மறிக் குரல் அறுத்துத் தினைப பிரப்பு இரீஇ - ஆட்டினது கழுத்தை அறுத்துத் தினையையுடைய பிரப்பை வைத்து, செல் ஆற்றுக் கவலைப் பல்லியம் கறங்க - ஒழுகாநின்ற யாற்றினது இடைக் குறையின் கண்ணே பல்வேறு இசைக்கருவிகள் முழங்காநிற்ப, தோற்றம் அல்லது நோய்க்கு மருந்து ஆகா வேற்றுப் பெருந் தெய்வம் பலவுடன் வாழ்த்தி - வேலன்மேல் வந்து தோன்றும் மாத்திரையன்றி நமது காமநோய்க்கு மருந்தாக மாட்டாத பிற பெரிய தெய்வங்கள் பலவற்றையும் ஒருசேர வாழ்த்தி, இவள் பேய்க் கொளீஇயள் எனப்படுதல் - இவள் பேயாற் பற்றப்பட்டாள் என்று கூறுப்படுதல், நோதக்கன்று - வருந்து தற்கு உரியதாம்.

**விளக்கம்** :—மறி - ஆடு. குரல் - கழுத்திற்கு ஆகுபெயர். தினைப் பிரப்பு - தினையாகிய பலி. இரீஇ - இருக்கச் செய்து; வைத்தென்ற படி. செல்லாறு - நீரோடும் யாறு. கவலை - ஆற்றிடைக்குறை. ஆற் றிடைக்குறையில் தெய்வம் உறையும் என்பதை, "கவின்பெறு துருத்தி யும்" (முருகு - உஉ௬.) என்றும், "நல்யாற்று நடுவும்" (பரி - ௪: ௬௭.) என்றும் பிறர் கூறுமாற்றானும் உணர்க. இனி, செல்லாற்றுக் கவலை என்றதற்கு மக்கள் வழங்கும் வழிகள் கவர்க்குமிடத்து என்னினுமாம். தோற்றம் - வேலன்மேல் எறித்தோன்றுதல். காமநோய்க்குத் தலைவன் மார்பையன்றி மருந்து பிறிதில்லை என்பது தேற்றமாகலின், 'நோய்க்கு மருந்தாகாத் தெய்வம்' என்றாள். செவிலி முதலியோர் தலைவியின் நோய்க்கு மருந்தாம் என்றே வாழ்த்துகின்றார் ஆகலின், அவர் கருத்தும் நிரம்புமாறில்லை என்றவாறு.

குலமகளிர்க்குத் தெய்வம் கொழுநனே ஆகலின், 'வேற்றுப்பெருந் தெய்வம்' என்றாள். ஈண்டுப் பெருந்தெய்வம் என்றது, முழுமுதற்

கடவுளாகிய முருகன் கொற்றவை முதலிய கடவுளரை என்க. தெய்வம் வாழ்த்தும் வேன்மகன், பல தெய்வங்களையும் அழைத்து வாழ்த் தலின், 'பல உடன் வாழ்த்தி' என்றாள்.

பேய் கொளப்பட்டாள் என்பதே வெறியாடுவோர் கருத்தாகலின், அங்ஙனம் கருதுதல் நாணுத்தகவுடைத் தென்பாள், 'நோதக்கன்று,' என்றாள். நோ தக்கன்று - நோகும் தகுதியையுடைத்து.

## பாட்டு - உகூச : தலைவி கூற்று

துறை :—'ஆற்று'ளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள், 'ஆற்றுவல்' என்றது. அஃதாவது, தலைவன் பிரிந்துறையுங் காலத்தே பெரிதும் வருந்தி மெலிந்த தலைவியின் நிலை கருதிக் கவன்ற தோழிக்குத் தலைவி, 'யான் ஆற்றுவன்; நீ கவலற்க!' என்றது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'என் உடல் பிரிவாற்றாமையாலே மெலிந்து பசப்பூர்ந்திருப்பினும், என் உள்ளம் அவர் கேண்மையில் பற்றுடைத்தாகலின், அஃது அபபசப்புடனே பொருந்தாது; ஆகலின், நீ வருந்தேல்'! என்று கூறுகின்றாள்.
யான் ஆற்றுவன்;

உகூச. கலிமழை கெழீஇய கான்யாற் றிகுகரை
ஒலிநெடும் பீலி துயல்வர இயலி
ஆடுமயி லகவும் நாடன் நம்மொடு
நயந்தனன் கொண்ட கேண்மை
பயந்தக காலும் பயப்போல் லாதே.[1]

—கபிலர்.

(இ - ள்) தோழி, கலிமழை கெழீஇய கான்யாற்று
இகு கரை - ஆரவாரத்தையுடைய மழை பொருந்திய கான் யாற்றினது தாழ்ந்த கரையிடத்தே, ஒலி நெடும் பீலி துயல்வர இயலி - தழைத்த நெடிய தோகை அசையாநிற்ப நடந்து, ஆடும் மயில் அகவும் நாடன் - கூத்தாடாநின்ற மயில்கள் மேலும் களிப்பாலே அகவுகின்ற நாட்டையுடைய தலைவன், நயந்தனன் நம்மொடு கொண்ட கேண்மை - பெரிதும் விரும்
பியவனாய் நம்மோடே கொண்டுள்ள நட்பு, பயந்தக்காலும் பயப்பு ஒல்லாது - பிரிவாலே என் மேனி பயப்பூர்ந்து ஒளி மழுங்கிய விடத்தும் தான் ஒளிமழுங்குதலைப் பொருந்தாது காண்.

விளக்கம் :—அவர் பிரிவானே என் மேனி வேறுபட்டாலும் உளம் அவர் கேண்மைக்கண் திண்ணிதாகலின், 'யான் ஆற்றுவல், நீ கவலற்க!'

(பாடம்) 1. பசந்தக்காலும் பசப்பொல்லாதே.

கூகை குறுந்தொகை

என்றவாறு. கலிமழை, இரண்டாவதன் உருபு விரித்துரைக்க. வினைத்தொகையாக்கினுமாம் கெழீஇய - பொருந்திய. கான்யாறு - காட்டாறு. காட்டாற்றின் கரைகள் காலந்தோறும் மழையாலே கரைந்து தாழ்தலின், 'இருகரை' என்றாள்.

மயிலினது ஆட்டத்திற்கு அணிசெய்வது அதன் தோகையேயாகலின், அதனை, 'ஒலி நெடும்பீலி' என்றாள். ஒலித்தல் - தழைத்தல், நீண்டு அடர்வுடைத்தாதல் என்க. பீலி - தோகை. துயல்வருதல் -

அசைதல்; மயில் அடியிட்டாடுந்தோறும் பீலி துயல்

வரும் என்க.

மழையின் ஆரவாரத்தையுடைய காட்டாற்றின்

கரைக்கண் உள்ள

மயில், இனி முகில் மழை பொழிதல் உறுதியென எண்ணிக் களித்து ஆடுதலே அன்றி அகவிஞற் போன்று, என் உள்ளம் அவனது கேண்மையை நினையுந்தோறும் களித்து மகிழாநின்றது என்பது

குறிப்பு.

பாட்டு - உகூரு : தோழி கூற்று

துறை :—வரையா து பிரிந்தவிடத்து, 'அவர் பிரிந்தது நின்னை வரைந்து கோடல காரணமா கததா'னெனத் தோழி தலைமகட்குக் கூறியது. அஃதாவது, வரைந்து கோடற்கு இன்றியமையாத பொருளீட்டற்பொருட்டுத் தலைவன் பிரிந்துழி ஆற்றுமைகொண்ட தலைவியை, 'நின்னை மணந்துகொண்டு நின்னேடு எபபொழுது ம உட னுறைதற்பொருட்டன்றே அவன் பிரிந்ததூஉம், அந்நன்மையை யெண்ணி தல் வேண்டும' எனததோழி வற்புறுததியது. நீ ஆற்றியிருத்

இதன் கண்,
கத்தின் கண்ணே
தோழி தலைவியை நோக்கி, 'இக்களவொழுக் நின்னிலை இன்னுதாதலை யானே தலைவற் குரைத்தேன்; அவன் நாணி, இந்நிலையினின் றும நன்னிலையில் நின்னை வைக்கும நன்மையுடைய நெஞசததோடே பிரிந்தான்; விரைவில் வநது வரைவன் ; நீ வருந்தற்க' என்று கூறு கின்றாள்.

உசுரு. காந்தளங் கொழுமுகை காவல் செல்லாது
வண்டுவாய் திறக்கும் பொழுதிற் பண்டும்
தாமறி செம்மைச் சான்றோர்க் கண்ட
கடனறி மாக்கள் போல இடன்விட்
டிதழ்தளை யவிழ்ந்த ஏகல் வெற்பன்
நன்னர் நெஞ்சத்தன் தோழி நின்னிலை
யான்றனக் குரைத்தனெ னாகத்
தானு ணினனிஃ தாகா வாறே.

—கருவூர்க்கதப் பிள்ளை.

## மூலமும் உரையும்



(இ - ள்.) தோழி—, காந்தள் அம் கொழு முகை - காந்தளினது அழகிய கொழுவிய அரும்பு, காவல் செல்லாது வண்டு வாய்திறக்கும் பொழுதில் - தாமே மலருந்துணையும் காத்திருத்தலைச் செய்யாமல் வண்டுகள் அவற்றினைக் கிண்டித் திறக்கும பொழுதில், பண்டும் தாம் அறி செம்மைச் சான்றோர்க் கண்ட கடன் அறி மாககள்போல - முன்னரும் தாம் அறிந்

துள்ள நிவுநிலையுடைய பெரியோரைக் கண்ட தமது கடமைகளை அறிந்த நன்மக்களைப் போல, இடன்விட்டு தளை அவிழ்ந்த ஏகல் வெற்பன் - அவ்வண்டுகட்கு இடனளித்துத் தம் இதழ்களின் கட்டவிழ்ந்து மலராநின்ற உயரிய பக்கைளையுடைய நந் தலைவன், நின்னிலை யான் தனக்கு உரைத்தனென் ஆக - களவொழுக்கத் தின்கண்ணே நினது இன்னல்நிலையை யானே அவனுக்கு வலிந்து கூறினேனாக அதுகேட்டு, தான் இஃது ஆகாவாறு நாணினன் - அவன் இவ்வொழுக்கம் நன்றாகாமையை நினைந்து பெரிதும் நாணமுற்றனன், நன்னர் நெஞ்சத்தன் - இவ்வின்னல்நிலையை விரைவில் மாற்றவேண்டும் என்னும் நல்ல நெஞ்சத்தையுடையன் காண்.

**விளக்கம்:**—அந்நன்னர் நெஞ்சமுண்மையானே விரைவில் வரைதற்குப் பொருளீட்டச் சென்றனன்; நீ ஆற்றவேண்டும் என்பது குறிப்பெசசம்.

காவல் செல்லாது - காத்திராது. காந்தள் அரும்பு தாமே மலராத பொழுதும் வாய் திறக்கும வண்டுகட்கு இடந்தந்து தளையவிழும் என்றது, தலைவன் தானே வரையக் கருதானாக யாம் அவனை வலிந்து வரைவு கடாவியபொழுது அதனை மறுக்காமல் உடம்பட்டு வரைதற்கு முயல்கின்றான் என்னும் குறிப்பிற்று. 'தானே மலரும் பருவத்துக்கு முன் வண்டு மலரைத் திறக்கும்' என்றது, 'களவு வெளிப்பட்டு அலரா தற்குமுன் வரைந்துகொள்ளும் எண்ணமுடையான் தலைவன்

என்ற குறிப்பினது,' என்பாருமுளர்.

செம்மைச சான்றோர் - நடுவு நிலைமையுடைய பெரியோர். பெரியோரைக் கண்டவழி உவந்து வரவேற்று உபசரித்தல் நல்லோர் கடனாகலின், 'கடனறி மாக்கள்,' என்றார். இவ வுவமை உள்ளுறைக்கு ஆக்கமாக வந்த ஏனையுவமை என்க.

ஏசல் - உயர்சசி. நின்னிலை என்றது, 'இக்கள வொழுக்கத் தின்கண் நினகருள்ள இன்னல் நிலைமையை,' என றவாறு எனவே 'தலைவன் நின்னைப் பிரிந்து செல்லத் தானாக எண்ணிலன்; யான் கூரைவு கடாயதனாலே சென்றனன்,' என்றாளாயிற்று.

'நீ இன்னலுறுகின்றனை,' எனக் கேட்டவுடன், 'நின் இன்னலுக்குத் தான் ஏதுவாதலை எண்ணி நாணினன்,' என்பாள், 'தான் நாணினன்,' என்றாள். இஃது ஆகாவாறுதற்குத் தான் நாணினன் என ஆக்கம் வருவித்துரைக்க. இங்ஙனம் கூறாது, இஃது ஆகாவாறு தான் நாணினன் என்றதற்கு இக் களவொழுக்கம் மேலும் நீட்டித்து நிகழாதபடி நாணத்தை யடைந்தான் என்பாருமுளர்.



## பாட்டு - உசுசு : தலைவி கூற்று

துறை :—வரையாது பிரிந்தவிடத்துத் தோழிக்குக் கிழத்தி யுரைத்தது அஃதாவது, வரைந்து கொள்ளாமல் பிரிந்து சென்ற தலைவனை நினைந்து வருந்திய தலைவி தன் வருத்தத்தைத் தோழிக்குக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'நந்தலைவர் நமக்கோர் தூதுவிடாராயினும் ஆகுக; தமக்கு இன்னா இரவின்கண் நற்றுணையாய் நின்ற இவ்வேங்கை மரத்திற்கேனும, பறவைகள் வாயிலாய் விடும் தூது மொழியைவிட மறந்தனர் போலும் ; வன்கண்ணர்,' என்று புலந்து கூறுகின்றாள்.

உகூகூ. நமக்கோன் றுரையா ராயினுந்
தமக்கோன்
றின்னா இரவின் இன்றுணை யாகிய
படப்பை வேங்கைக்கு மறந்தனர்
கொல்லோ
துறத்தல் வல்லியோர் புள்வாய்த் தூதே.
—நக்கீரனார்.

(இ - ள்.) தோழி, துறத்தல் வல்லியோர் - அன்புடையாரைப் பிரிந்து செலலுதற்குரிய வன்கண்மையுடைய நந்தலைவர், புள் வாய்த தூது - பறவைகள் வாயிலாய் விடுகின்ற தூது

மொழி, நமக்கு ஒன்று உரையாராயினும் - நம்மைப் ளாகக் கருதி நமக்கு ஒன்றைக் கூறி விடாராயினும்,
பொரு
தமக்கு
ஒன்று இன்ன இரவின் - தமக்குப்
பொருந்திய இன்னாமை யுடைய
இராக்காலங்களிலே, இன் துணை ஆகிய படப்பை
வேங் கைக்கு - இனிய துணையாகவிருந்த
நம்மனைப்படப்பைக்கண் உள்ள வேங்கை
மரத்திற்கேனும, மறந்தனர் கொல்லோ - ஒரு
தூதுவிடுதற்கு மறந்துவிட்டனரோ?

**விளக்கம்:**—நமக்கு ஒன்று உரையாராயினும் என்றது, அவரைப் பிரிந்திருத்தலாற்றாத நம்மியல்பறிந்த தலைவர், நாம் இறந்துபடுவோம் என்பது கருதி நமக்கோர் ஆறுதலேனும் கூறாதொழிந்தார் நம்மை ஓர் பொருளாகக் கருதிக் கூறாராயினும் வேங்கைக்கு மறந்தனர் கொல் என முடிக்க. 'தன்னைப் பிறர் காண்பரோ? தலைவி வாராளோ.' என்ற ஐயங்களாலே நெஞ்சம் அலைப்புண்டற்குக் காரணமான இரவென் பாள், 'இன்னா இர'வென்றாள். அவ் வின்னா இரவின்கண், பிறர் காணா வாறு மறைந்து வதிதற்கு ஏதுவாய்த் தன்னைத் தலைப்பட்டுழி இன்பம் நுகரும் பள்ளியறையாயிருந்து இன்னா வகற்றி இன்பம் நல்கியது வேங்கை என்பாள், 'இன்றுணை வேங்கை,' என்றாள்.

"எழுமை எழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு."
(குறள்-கoஎ)

என்னும் அறம்பற்றி, தங்கண் விழுமந்துடைத்த வேங்கை எம்மை இகழ்ந்து மறந்தார்போன்று மறக்கற்பாலதன்று என்பாள், 'மறந்தனர் கொல்லோ!' என்றாள். அன்பிலராய் எம்மை மறந்தார்; அறனில ராய் வேங்கையையும் மறந்தனர் என்று இகழ்ந்தவாறு.

இங்ஙனம் அன்பும் அறனும் ஒரீஇத் துறததற்குரிய வன்கண்மை சாலப் பெரிதென்பாள், 'துறத்தல் வல்லியோர்,' எனப் பெயர்போலக் கூறினாள். வல்லியோர் - வன்மையுடையோர், ஈண்டு வன்மை. பின்மை குறித்து நின்றது.

அன்

புள் வாய்த்தூது - பறவை வாயிலாய் விடும் தூது. பறவைகளைத் தூது விடுதல் பாடல் சான்ற புலனெறி வழக்கமாம்.

இரவுக்குறிக்கண் வேங்கைமரத்தின்கீழ் தன்னோடே அளவளா வியதையும் மறந்தனரே என்று வியப்பாள், அந் நிகழச்சிக் கிடனாகிய வேங்கையின் மேலேற்றி இங்ஙனம் கூறினாள் என்க.

## பாட்டு - உகூஎ : தலைவன் கூற்று

துறை : — பண்டைக்காலத்தும் ஆடவர் பொருட்குப் பிரிந்தாராகலின், நாமும் பொருட்குப பிரிதும் என்னும் நெஞ்சிற்கு நாளது சின்மையும் இளமையது அருமையும்

கூறிச் செலவழுங்கியது.

அஃதாவது, பண்டு தொட்டு அன்பு மிக்க சான்றோரும் தந்தலைவியரைப் பிரிந்து பொருள்வயிற் பிரிதல் உண்டாகலின், 'யாமும் அவர் நெறிபற்றிப் பொருளீட்டி வருதும்' என்று தன்னைக் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைவன், வாழ்நாளின் சிறுமையும், இளமையின் அருமையும் எடுத்துககாட்டிச் செலவு தவிர்ந்தது.

இதன்கண், தலைவன் தன்நெஞ்சை நோக்கி, 'இவ்வுலக நிலை யாமையை நன்குணர்ந்த சான்றோர், அன்புசான்ற தங்காதலியை நீத்து மிகப் பெருஞ்செல்வம் எய்துவதாயினும் ஆள்வினைமேற் செல்வாரல்லர்; ஆகலின, யாமும அவ்வழிச் செல்லவேண்டா!' என்று அறிவுறுததுகின்றான்.

உகூஎ. இருங்கண் ஞாலத் தீண்டுபயப் பெருவளம்
ஒருங்குடன் இயைவ தாயினுங் கரும்பின்
காலெறி கடிகைக் கண்ணயின் றன்ன
வாலெயி றூறிய வசையில் தீநீர்க்

கோலமை குறுந்தொடிக் குறுமக
ளொழிய
ஆள்வினை மருங்கிற் பிரியார் நாளும்
உறன்முறை மரபிற் கூற்றத்
தறனில் கோணற் கறிந்திசி னோரே.

—காலெறி கடிகையார்.



(இ - ள்.) நெஞ்சே!, நாளும் உறன்முறை மரபில் கூற்றத்து அறன் இல் கோள் நற்கு அறிந்திசினோர் - ஒவ்வொரு நாளும் நிகழ்தலாகிய முறைமையினையுடைய வழக்கத்தையுடைய கூற்றுவனது கண்ணோட்டமில்லாத கொலைத்தொழிலை நன்றாக அறிந்தவர்கள், இருங்கண் ஞாலத்து ஈண்டு பயப் பெருவளம் - பெரிய இடத்தையுடைய உலகின்கண்ணே தொக்க பயன் மிக்க வளன் முழுவதும், ஒருங்கு உடன் இயைவதாயினும் - ஒருங்கே ஒருபொழுதிலே தமக்குக் கிடைப்பதாகவிருந்தாலும், கரும்பின் கால் எறி கடிகைக்கண் அயின்றன்ன - கரும்பினது அடிப்பகுதியிலே வெட்டிய துண்டத்தை உண்டாற்போன்ற, வால் எயிறு ஊறிய வசை இல் தீநீர் - வெள்ளிய பல்லிடத்தே ஊறிய குற்றமற்ற இனிய நீரையும, கோல் அமை குறுந்தொடிக் குறுமகள் ஒழிய - திரட்சியமைந்த குறிய வளையலையும் உடைய இளையளாகிய தலைவி நீங்கியிருப்ப, ஆள்வினை மருங்கிற் பிரியார்-மேற்கோடற்குரிய பொருளீட்டற் றொழிலினிமித்தம் தாம் பிரிந்து போதலைச் செய்வாரல்லர்.

**விளக்கம்.**— அறிந்திசினோர் ஞாலத்தீண்டு வளம் ஒருங்குடன் இயைவதாயினும் குறுமகள் ஒழிய ஆள்வினை மருங்கிற் பிரியார் என இயைத்துக் கொள்க. இருங்கண் ஞாலம் முழுதும் திரளும் பயனுடைய வளம் முழுதும் ஒருங்கே கூடியவழியும் காதலின்பத்திற்கு இணையாகா தென்பான், 'இருங்கண் ஞாலத்து ஈண்டு பயப் பெருவளம்,' என விதந்து கூறினன்.

கரும்பின் அடிப்பகுதியே மிகவும் இனிதாதல்பற்றிக் 'கரும்பின் கால் எறி கடிகை' என்றான். கடிகை - துண்டம். காலிடத்தே வெட்டப்பட்ட கடிகை என்க. கடிகைக் கண் - இரண்டாவதன்கண் ஏழனுருபு மயங்கிற்று. வால் எயிறு - தூய எயிறுமாம். வசை-குற்றம். தீநீர் - இனிய நீர்.

> "பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
> வாலெயி றூறிய நீர்." (குறள்-ககஉக)

என்னுந் திருக்குறள் ஈண்டு நினைவு கூரற்பாற்று.

கோல் - திரட்சி. குறுந்தொடி - சிறிய வளையல். குறுமகள் என்றது, ஆண்டிளமை யுடையாள் என்பதுபட நின்றது. ஆள்வினை என்றது, ஈண்டுப் பொருளீட்டற் றொழிலை என்க. நாடோறும் கூற்றுவனின் கொலைத்தொழில் நிகழ்தல் காட்சியளவையானே காணப்படுதலின், நாளும் உறல்முறை மரபு என்றான் உறன் முறையையுடைய மரபில்லாத கூற்றம் எனினுமாம். என்னை? முன் தோன்றினரை முன்னர்க் கொல்லலும் பிறரோன்றினரைப் பின்னர்க் கொல்லலு மாகிய மரபின்றிக் கொல்லுதல் அவன் தொழிலாகலான். இளையார் மாதர் அறிஞர் எனச் சிறிதும் கண்ணோட்டமின்றிக் கொல்லலின், 'அறனில் கோள்,' என்றார். அறம் ஈண்டுக் கண்ணோட்டம் என்னும்

## மூலமும் உரையும்

பொருட்டாய் நின்றது. நன்கறிந்தோர் என்பது நற்கென வலித்தல் விகாரம் பெற்றது. இசின் - அசை.

இதனல் இளமையதருமையும், நாளது சின்மையும் நினைக்கப்பட்டமை உணர்க.

## பாட்டு - உகூஅ : தோழி கூற்று

துறை :—தலைமகன் சிறைப்புறத்தானகத் தலைமகட்குத் தோழி சொல்லியது. அஃதாவது, வரைந்துகோடற் கருத்தின்றி இரவுக்குறிக்கண் நாளும் வருந் தலைவன், சிறைப்புறத்தே வந்து நின்றமையறிந்த தோழி, அவனை வரைவு கடாவற்பொருட்டு அவன் வரவறியாள் போன்று தலைவிக்குக் கூறுவாளாய், அவன் கேட்பக் கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, "யாம் நந் தலைவர் நம்பால் வருமபோது, 'செல்கின்றீரோ?' எனச் செப்புதலும், பிரியும்பொழுது, 'வருவீரோ?' என வினவுதலும் செய்யும் வன்மையிலேம் ஆயினம்; ஆகலின், அவர் திறத்து யாம வேறு என் செய்யக கடவேம்" என்று கூறுகின்றாள்.

உகூஅ. சேறிரோ எனச் செப்பலு மாற்றும்
வருவி ரோஎன வினவலும் வினவாம்

யாங்குச் செய்வாங்கொல் தோழி
பாம்பின்
பையுடை இருந்தலை துமிக்கும் ஏற்றேடு
நடுநாள் என்னோர் வந்து
நெடுமென் பணைத்தோள் அடைந்திசி
னோரே.

—கருவூர்ச் சேரமான் சாத்தனூர்.

(இ - ள்) தோழி—, பாம்பின் பையுடை இருந்தலை துமிக்கும் ஏற்றேடு - பாம்புகளின் படத்தையுடைய கரிய தலையைத் துணிக்கின்ற இடியேற்றின் முழக்கத்தோடு கூடிய, நடுநாள் என்னோர் - நடுயாமம் என்றும் கருதாதவராய், வந்து நெடுமென் பணைத்தோள் அடைந்திசினோர் - நம்பால் வந்து நின் நெடிய மெல்லிய மூங்கில் போன்ற தோள்களை எய்தா நின்றனர், சேறிரோ எனச் செப்பலும் ஆற்றும் - அவர் நம்மைப் பிரிந்து செல்லுங்கால் செல்கின்றீரோ என்று செப்பும் வன்மையும் இல்லோம், வருவிரோ என வினவலும் வினவாம் - செல்வாரை நீயிர் மீண்டும் வருவீரோ என்று வினவுதலையும் செய்யாம்; இங்ஙனமாகலின், யாங்குச் செய்வாம் - யாம் எவ்வாறு செய்யவல்லேம்.

**விளக்கம் :**—இது களவொழுக்கமாதலின், நம்பால் வந்த தலைவரை மீண்டு போங்கால் போகவேண்டா எனத்தடுத்து ஈண்டு இருத்திக் கொள்ளவும் இயலாமையின், ஏதமிக்க நள்ளிரவிற் செல்வாரைச் செல்வீரோ என வினவித் தடுக்கவும் மாட்டேமாயினேம் என்பாள், 'சேறிரோ எனச் செப்பலும் ஆற்ரும்' என்ருள். இனித் தலைவனது பிரிவினை ஆற்றமாட்டாமையானே செல்வாரை வருக என வரவேற்பின், இருள் நெறியில் வருங்கால் உண்டாம் ஏதம் மிகப் பெரிதாம் எனறு அஞ்சுதலானே, 'வருவிரோ' என வினவும் துணிவும் இலமாயினேம்; இங்ஙனமாகலின் இவவின்னல் நிலையை மாற்றுதற்கு யாம் என் செய்வது என்று மயங்கியவாருமம்.

இதனுல், இந்நிலையினின்றும் உய்தற்கு யாம் வரைந்து கோடலே வழியாம் என்று தலைவனுக்குச சூழ்சசி பிறக்கும் என்பது உணர்க.

இருள் நெறியின் ஏதத்திற்கே யாம் அஞ்சா நின்றேம் என்று குறிப்பானுணர்த்துவாள், 'பாம்பின் பையுடை இருந்தலை துமிக்கும் ஏற்ருெடு நடுநாள் என்னுர்' என்ருள். பாம்புகள் இரைதேடி இரவில் ஊர்ந்து கொண்டிருக்கும் வழி என்பதையும் நினைப்பித்தாள், தப்புதற்கியலாத பாமபையும் இடியேற்றையும் கூறும் வாயிலாய்ப் பிற இடையூறுகளையும் கொள்ளவைத்தாள. யாங்குச் செய்வாம் என்பதனுல் நின் வருகையால் யாங்கள் கையாறெய்துகின்ருேம் என்பதையும் உணர்த்தினுள்.

ஏற்ருெடு நடுநாள் - ஏற்ருேடு கூடிய நடுநாள் என்க. இடிமுழங்கும் நடுநாளிலே ஆறுசெல்லல் கூடாதென்று கருதாராய் என்பாள், 'நடுநாள் என்னுர்' என்ருள்.

## பாட்டு - உசுசு : தலைவி கூற்று

துறை :—தலைமகன் சிறைப்புறத்தானாகத், தலைமகள் தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. அஃதாவது, தலைவன் தலைவியைக் கண்டு அளவளாவுதற்கு உரிய செவ்வி பெருனுய்ப் பன்னாளும் வந்து வந்து வறிதே மீண்டவன், ஒரு நாள் வந்து தம் மனையயலே நின்றமை கண்ட தலைவி, இன்று அளவளாதற்கு இடையூறுகள் இல்லை என்பதை அவனுக்குக் குறிபபான் உணர்த்தற் பொருட்டு அவன் வரவறியாதாள் போன்று, தோழிக்குக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'இன்று சுறுமீன் எறிந்த புண் ஆறப் பெற்றமையானே, நந்தந்தை மீன் வேட்டம்புக்கனர் ; நம்மன்னையும் உப்பை மாறி நெல் கோடற் பொருட்டு, உப்பளத்திற்குச் சென்றுவிட்டாள் ; தலைவன் நம்மோடளவளாவுதற்கு இது ஏற்ற செவ்வி என்பதை அவனுக்கு யாரேனும் அறிவுறுத்தின் மிகவும் நன்றும்' என்று கூறுகின்றாள்.

மூலமும் உரையும்

நடசுசு

உசுகூ. சேயாறு சென்று துனைபரி யசாவா
துசாவுநர்ப் பெறினே நன்றுமற் றில்ல
வயச்சுறு எறிந்த புண்தணிந் தெந்தையும்
நீனிறப் பெருங்கடல் புக்கனன் யாயும்
உப்பை மாறி வெண்ணெல் தரீஇய
உப்புவிளை கழனிச் சென்றனள் அதனால்
பனியிரும் பரப்பிற் சேர்ப்பற்
கினிவரி னெளியள் என்னும் தூதே

—கல்லாடனூர்.

(இ - ள்.) தோழி—, எந்தையும் வயச் சுறு எறிந்த புண் தணிந்து - நந்தந்தையும் வலிய சுறு மீனால் எறியப்பட்ட புண் ஆறப் பெற்று, நீல் நிறப் பெருங்கடல் புக்கனன் - நீலநிற முடைய பெரிய கடலிடத்தே மீன்படுத்தற்பொருட்டுச் சென்று விட்டனன், யாயும் உப்பை மாறி வெண்ணெல் தரீஇய- நம்மன்னையும் உப்பைவிற்று வெள்ளிய நெல்லைக்கொணரும் பொருட்டு, உப்புவிளை கழனிச் சென்றனள் - அவ்வுப்புப் படுகின்ற அளத்திற்குப் போய்விட்டாள், அதனால் - இங்ஙனமாக லின், பனி இரும் பரப்பிற்

சேர்ப்பற்கு - குளிர்ந்த பெரிய நிலப் பரப்பினையுடைய நாகடற்கரைத் தலைவனுக்கு, இனிவரின்

எளியள் என்னும் தூது - இப்பொழுது நீ வரின் தலைவி அளவளாவுதற்கு எளியளாயிருப்பாள் என்னும் தூதுமொழியைக் கூறி, சேய் ஆறு சென்று துனை பரி அசாவாது - நெடிய வழியைக் கடந்து விரைகின்ற புரவிகள் தளர வேண்டாமலே, உசாவுநர்ப்பெறின் - நின் கருத்தென்னும் என வினவுவாரைப் பெற்றால், நன்றுமன் தில்ல - மிகநன்றாம்; இஃது என் விருப்பம்.

**விளக்கம்** :—சுறா எறிந்த புண் தணிந்து எந்தையும் கடல்புக்கனன்

என்றமையால், சின்னாள் தலைவியின் தந்தை புண்பட்டு வீட்டில் தங்க நேர்ந்தமையே அவள் தலைவனை எதிர்கொள்ளாமைக்கு ஏதுவாம் என்பதும போந்தமையுணர்க. தந்தையைப் பேணும்பொருட்டு இல்லத்திலே தங்கிய தாயும் இன்று வீட்டிலில்லை என்பாள், 'யாயும் உப்புவிளைகழனிக்குப் போயினள்' என்றாள். தந்தை உடனே மீண்டு வருவானல்லன் என்பாள், 'நீனிறப் பெருங்கடல் புக்கனன்' என்றும், தாயும் உடனே மீள்வாளல்லள் என்பாள், 'உப்பைமாறி...தரீஇய சென்றனள்' என்றும் கூறி நுண்ணிதின் உணர்த்தியவாறு காண்க.

தலைவன் சேயனல்லன் நஞ் சிறைப்புறத்தானே என்று தோழிக்கு உணர்த்துவாள், 'சேயாறு சென்று துனைபரி அசாவாது உசாவுநர்ப் பெறின்' என்றாள். என்னை? தூது செல்வார் அங்ஙனம் வருந்தியும் சேறல் உண்டாகலின் என்க. நீயே சென்று உசாவுக என்பது கருத்து.

வயச்சுறா-வலிமிக்கதொரு கடன் மீன்; மகரமீன் என்றும் கூறுப. அது கூறி உசாவுநர்ப் பெறின் என்க. நில்ல - விழைவின்கண் வந்தது. இஃது என் விருப்பம் என்னும் பொருட்டு.

உப்புவிளை கழனி என்றது, அளத்தை. இனி - இப்பொழுது. எளியள் - கண்டு அளவளாவுதற்கு எளியளாயிருப்பாள் என்றவாறு.

சேர்ப்பன்—நெய்தனிலத் தலைவன். பனியிரும்பரப் பென்றது, துன்பத்தாலே நடுங்குதற்குரிய நிலப்பரப்பென ஒரு பொருளும் தோன்ற நின்றது. என்னை? தன்னைக் காணாத தலைவனும் தலைவனைக் காணமாட்டாத தானும் துன்புற்றிருத்தற்கு இடமாகலின் என்க.

நெய்தனிலமாக்கள் உப்பைமாறி நெற்கொண்டுண்பர் என்பதனை,

"நெல்லும் உப்பும் நேரே ஊரீர்
கொள்ளீ ரோஎனச் சேரிதொறும் நுவலும்."
(அகம் - ௩௱௯0)

என்றும்,

"நெல்லி னேரே வெண்கல் உப்பெனச்
சேரிவிலை மாறு கூறலின்.", (அகம் - ௧௪0)

என்றும், பிற சான்றோர் ஓதுமாற்றானுமுணர்க.

## பாட்டு - உஎ0 : தலைவன் கூற்று

துறை :—வினைமுற்றிப் புகுந்த தலைமகன் கிழத்தியோடு உடனிருந்து கூறியது. அஃதாவது, தலைவியைப் பிரிந்து வினை மேற் சென்ற தலைவன், வினைமுற்றிய பின்னர் மீண்டு வந்து தலைவியோடு இன்புற்றிருந்த பொழுது மழை பெய்ததாக ; அம் மழையை நோக்கி உவகையாற் கூறியது.

இதன்கண், தலைவன் மழையை நோக்கி 'பெருவானே ! நீ மின்னிச் சிதறி முழங்கிப் பெய்து இனி வாழ்வாயாக, யாமோ செய்வினை முடித்த தலைமையுடைய உள்ளத் தோடே எந் தலைவியை எய்திக் குறுந்தாள் நாண்மலர் நாறும் நறுமென் கூந்தலாகிய, பாயலிடத்தேம்.' என்று உவகையாற் கூறுகின்றான்.

உஎ0. தாழிருள் துமிய மின்னித் தண்ணென
வீழுறை யினிய சிதறி ஊழிற்
கடிப்பிடு[1] முரசின் முழங்கி
இடித்திடித்துப்
பெய்தினி வாழியோ பெறுவான் யாமே

1.

(பாடம்) கடிப்பிகு முரசம்.

மூலமும் உரையும்

சா0க

செய்வினை முடித்த செம்ம லுள்ளமோ
டிவளின் மேவின மாகிக் குவளைக்
குறுந்தாள் நாள்மலர் நாறும்
நறுமென் கூந்தல மெல்லணை யேமே.

—பாண்டியன் பன்றுடுதந்தான்.

(இ - ள்.) பெருவான் - பெருமையுடைய முகிலே, யாம் செய்வினை முடித்த செம்மல் உள்ளமொடு - யாமோ மேற் கொண்டு சென்று செய்தற்குரிய வினையைச் செவ்வனே முடித் தமையானே தலைமைத்தன்மை பெற்றுச் சிறந்த உள்ளத் தோடே, இவளின் மேவினமாகி - இவள்வயிற் பொருந்தினே மாகி, குவளைக் குறுந்தாள் நாள்மலர் நாறும் - குவளையினது குறிய தாளையுடைய புதிய மலர்மணங்கமழும், நறு மென் கூந்தல் மெல் அணையேம் - நறிய மெல்லிய கூந்தலாகிய மெத் தென்ற படுக்கையின்கண்ணே கிடப்பேமாயினேம ஆகலின், இனி - இனிமேல் நீ, தாழ் இருள் துமிய மின்னி - ஈண்டுத் தங்கிய இருள் கிழியும்படி மின்னி, தண்என வீழ் உறை இனிய சிதறி - குளிரும்படி வீழாநின்ற துளிகளை இனியனவாம்படி வீசி, ஊழில் கடிப்பிடு முரசின் முழங்கி - முறைமையாலே குறுந்தடியால் அடிக்கப்படும் முரசம் முழங்குமாறு போலே இனிதின் முழங்கி, இடித்து இடித்து - இடையிடையே இடித் தலையும செய்து, பெய்து வாழி - மழை பெய்து வாழ்வாயாக!

விளக்கம் :—தாழிருள் - வினைத்தொகை. துமிய - துணிபட. மின்னுங்கால் இருள் கிழிவது போறலின், 'துமிய' என்றான். தண்ணென் - தண்ணியவாக. இனிய சிதறி - இனியவாம்படி சிதறி என்க. மழை பெய்யுங்கால் காட்சிக் கினிதாதலும், செவிக்கினிதாதலும் பற்றி 'இனிய சிதறி' என்றான். வீழுறை - வினைத்தொகை. உறை - மழைத்துளி. வானின் முழக்கம் முரசமுழக்கம் போன்று கேட் டற்கு இனிதாகலின், 'முரசின் முழங்கி' என்றான். கடிப்பு-குறுந்தடி. முரசம், குறுந்தடியாலே முழக்கப்படுவது ஊழ் - முறை ஈண்டு முழக்கும் முறை என்க இடையிடையே இடித்து என்பது தோன்ற 'இடித்திடித்து' என அடுக்கிக் கூறினன்.

தலைவியைப் பிரிந்து வினைமேற் சென்றிருந்தபொழுது பெய்திருப்பையாயின் வினைமுடியாமையானும், தனிமையானும் யாம் பெரிதும் துன்புற்றிருப்பேம்; அங்ஙனம் பெய்யாது, யாம் அணையிடத்தேமாகிய இப்பொழுது நீ மின்னுதலும் பெய்தலும் முழங்குதலும் இடித்தலும் எல்லாம் எமக்கு இன்பத்தின் மேலும் இன்பமாக உள்ளன; இங்ஙனம் செவ்வியறிந்து பெய்யும் நீ, இனி நன்கு பெய்து வாழ்க என்று வாழ்த்தியவாறும். வானத்தை வாழ்த்துதல் கடவுள் வாழ்த்து வகையினுள் ஒன்றாதல், "வாழ்த்தப்படும் பொருளாவன - கடவுளும் முனிவரும் பசுவும் பார்ப்பாரும் அரசரும் மழையும் நாடும் என்பன" (தொல். செய் - கoக) எனவரும் பேராசிரியர் உரையானுமுணர்க.

கு.—26



இனி, இத்தீஞ்சுவைப் பாடல் மழையின் அழகைக் கேட்போர் உணர்ந்தின்புறுமாறு நன்கு வெளிப்படுத்துதல் உணர்க. இதனைப் பாடிய நல்லிசைப்புலவர் பாண்டியன் பன்னாடு தந்தான் எனப்படுதலின் இவரே நாடுதரற்பொருட்டுத் தம் தலைவியைப் பிரிந்து சென்று வினை முற்றி மீண்டு தலைவியோடு இருந்தபொழுது பெய்த மழையாலே உவகையுற்றுச் சுட்டியொருவர் பெயர் கூறாது அகப்பொருட்டுறையில் இப்பாடலை யாத்தனர் என்று கருதுவது மிகையாகாது. குறுந்தொகைப்பாட்டினுள் தலைசிறந்தவற்றுள் இதுவும் ஒன்று.

## பாட்டு - உஎக : தலைவி கூற்று

துறை:— தலைமகற்கு வாயில் நேர்ந்து புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது. அஃதாவது, பரத்தையிற் பிரிந்த

வந்த தலைமகன், தலைவியை ஊடல் போக்கி உடம்படுவிக்குமாறு தோழியை இரந்தானாக, அதற்கு உடம்பட்டுவந்து தலைவியைக் கண்டு, 'அவனை ஏற்கவேண்டும்,' எனக் கூறிய தோழிக்குத் தான் உடம்பட்டமை தோன்றத் தலைவி உரைத்தது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'யான் தலைவ

னோடு கேண்மை கொண்டு பொருந்தியது அவ்வொருநாட் கேண்மையே எனக்கு எந்த

ஒருநாளேயாம்
நாளும் துன்பப்

தருவதொன்றாயிற்று', என்று புலந்து

கூறுகின்றாள்.

உஎக. அருவி யன்ன பருவுறை சிதறி
யாறுநிறை பகரு நாடனைத் தேறி
உற்றது மன்னு மொருநாள் மற்றது
தவப்பன் னாள்தோள் மயங்கி
வௌவும் பண்பின் நோயா கின்றே.

—அறிசி நச்சாத்தனார்

(இ - ள்.) தோழி—, அருவி அன்ன பருவுறை சிதறி மலையருவி போன்ற பரிய துளிகளைச் சிதறி, யாறு நிறை பகரும் நாடனைத் தேறி - யாறுகள் தம் வெள்ளத்தை ஊர்கடோறும் கொடுத்தற்குக் காரணமான நாட்டையுடைய தலைவனை நல்லன் எனத் தெளிந்து, உற்றது ஒருநாள் - அவனோடு கேண்மை கொண்டது ஒருநாளேயாகும், மற்றது - அவ்வொருநாட் கேண்மை கொண்ட செயல், தவப்பல் நாள் தோள் மயங்கி வௌவும் பண்பின் நோயாகின்று - சாலப் பலவாகிய நாட்கள் எல்லாம் நந்தோளோடே கலந்து நமது நலத்தையெல்லாம் கவர்ந்து கொள்ளுமொரு தன்மையையுடைய நோயாக விளைந்தது காண். யாம் என்செய்கேம்!

விளக்கம் :—" நட்டபின் வீடில்லை நட்பாள் பவர்க்கு" (குறள்-உகக -என்ற அறம் பற்றியேனும் யாம் வாயில் நேர்கின்றேம் என்றவாறு.

பருவுறை - பரியதுளி; அருவி வீழுங்கால் அஃதெறியுந் துளி போன்ற பரிய துளி எனக்கோடல் பொருந்தும். யாறு: எழுவாய், நிறை: செயப்படு பொருள், பகரும், பயனிலை. யாறு தனது நிறையைக் கொடுக்கும் என்க. நிறை - வெள்ளம். யாறு நிறையாலே ஆரவாரிக்கும் என்பாருமுளர். யாறு வெள்ளத்தை பகரும் என்றது, தலைவன் தன் னலத்தைப் பரத்தையர்க்கு ஈகின்றவன் என்னும் குறிப்புடையது. நாடனைத் தேறி என்றது, நாடன் கொடியன் ஆதலை அறியாது, நல்லன் எனத் தெளிந்து என்று வருந்தியவாறு. எனவே, நாடாது நட்டுக் கேடுற்றேன் என்றிரங்கியவாறு. தவ: மிகுதி குறித்த உரிச்சொல்

தலைவன் பலநாளாக இங்ஙனம் கொடுமை செய் தொழுகலின், என் தோள்கள் நோயாற் பற்றப்பட்டு மெலிந்தன என்பாள், 'பன்னுள் தோள் மயககி வௌவும் நோய்' என்றாள். வௌவுதல் - நலத்தைக் கவர்ந்து கொள்ளல். பண்பின் நோய் - தன்மையையுடைய நோய்; நற்குணமற்ற நோய் எனினுமாம்.

'நாடனை உற்றது நோய் ஆயிற்று இனி என் செய்தும்!' எனத் தான் ஏற்றுக்கொண்டமையைக் குறிப்பானுணர்த்தியபடியாம். மன், உம் இரண்டும், அசைகள. "கண்டது மன்னும் ஒருநாள்" (குறள் - ககசக.) என்புழிப் போல.

## பாட்டு - உஎஉ : தலைவன் கூற்று

துறை :—கழறிய பாங்கற்குக் கிழவன் உரைத்தது. அஃதாவது, தன் செயல் தகாதெனத் தன்னை இடித்துரைத்த பாங்கனை நோக்கித் தலைவன் தலைவியின் அருமையைக் கூறியது.

இதன்கண், தலைவன் பாங்கனை நோக்கிக், 'கலையினது

மார்பிலே அழுத்திய அம்பைப் பறித்த பொழுது, அதனை ஒப்பான சிவந்த கண்களையுடைய கொடிச்சியின் தோள்களை இன்னும் ஒருகால் யான் தழுவப் பெறுவேனோ?' என்று கூறுகின்றான்.

உஎஉ. தீண்டலும் இயைவது கொல்லோ மாண்ட
வில்லுடை வீளையர் கல்லிடு பெடுத்த
நனந்தலைக் கானத் தினந்தலைப் பிரிந்த
புன்கண் மடமா னேர்படத் தன்னையர்
சிலைமாண் கடுவிசைக் கலைநிறத் தழுத்திக்
குருதியோடு பறித்த செங்கோல் வாளி
மாறுகொண் டன்ன வுண்கண்
நாறிருங் கூந்தற் கொடிச்சி தோளே.

—ஒருசிறைப் பெரியனார்.

(இ - ள்) மாண்ட வில்லுடை வீளையர் - மாட்சிமையுடைய வில்லினையும் சீழ்க்கையினையும் உடையோராய், கல் இடுபு எடுத்த நனந்தலைக் கானத்து - கற்களை வீசி எழுப்பிய அகன்ற இடத்தை யுடைய காட்டிடத்தே, இனந்தலைப் பிரிந்த புன்கண் மடமான் நேர்பட - தனது கூட்டத்தினின்றும் பிரிந்த துன்பத்தையுடைய மடப்பம் பொருந்திய பெண்மான் நேரே இருப்ப, தன்னையர் - தன் தமையன்மார், சிலைமாண் கடுவிசைக் கலைநிறத்து அழுத்திக் குருதியொடு பறித்த செங்கோல் வாளி - ஆரவாரித்தல் மாட்சிமைப்பட்ட கடிய வேகத்தையுடைய ஆண்மானினது மார்பிலே குத்திப் பறிக்கப்பட்ட சிவந்த திரட்சியையுடைய அம்புகள், மாறுகொண்டன்ன உண்கண் - ஒன்றையொன்று மாறுபட்டாற் போன்ற மையுண்ட கண்களையும், நாறு இருங் கூந்தல் - மணங் கமழ்கின்ற கரிய கூந்தலையும் உடைய, கொடிச்சி தோள் தீண்டலும் இனையது கொல்லோ - தலைவியின் தோள்களை மீண்டும் தழுவுதல என்பாற் பொருந்துவதோ ?

**விளக்கம்** :—வில்லிற்குரிய நல்லிலக்கணமமைந்த வில் என்பான்

'மாண்டவில்' என்றான். வீளை - உதட்டைமடித்து எழுப்புவதோர் ஒலி; சீழ்க்கை; இக்காலத்தார் சீட்டி என்ப சீழ்க்கையடித்துக் கொண்டு கற்களை எறிந்து அலைத்து எழுப்பலானே மடமான் இனம் பிரிந்ததாயிற றென்க. மடமான் நேரே மாளும்படி எனினுமாம். இது தலைவியின் தன்னையரின் கொடுமைகூறி அவளை எய்த வியலாமைக்கு ஏது, குறிப்பான் உணர்த்தியவாறு. புன்கண் - துன்பம். இனந்தலைப் பிரிந்தமையால் உண்டான துன்பம் என்க. தன்னையர் - தன் தமையன்மார். சிலை - ஆரவாரம். அஃதாவது, வில்லினின்று எழுங்கால் சிவவென்றொலித்தல். கடுவிசை வாளி, அழுத்திப் பறித்த வாளி, செங்கோல் வாளி எனத் தனித்தனி வாளிக்கே அடையாக்குக. இவ்வடை மொழிகளால் அக்கண்கள் தன் நெஞ்சின்கண் விரைந்து அழுந்தித் துயர் செய்தமை கொள்ளவைததான் என்க. நிறம் - உயிர் நிலையுமாம். உண்கண் அவளைக் கண்டுழித் தன்னை நோய் செய்தமை நினைந்தும், பின்னர் அவளோடு கூடுங்கால் அவளது கூந்தலே பாயலாகக் கிடந்தமை கருதியும், கண்ணின் கொடுமையையும் கூந்தலின் நன்மையையும் எடுத்தோதினான் என்க.

கொடிச்சி தோள் பெறற் கரியது, அதுபெறமாட்டாது வருந்தும் என்னை இடித்துரைக்கும் நீ அறிவிலி என, நண்பனைக் கடிந்தவாறெனக.

ஆசிரியர் நச்சினார்க்கினியர் இசசெய்யுளை "கழறிய பாங்கற்குக் கூறுந்தலைவன், இவனான், இக்குறை முடியாது; நெருநல் இடந்தலைப் பாட்டில் கூடியாங்குக கூடுவல்; அது கூடுங்கொல் என்று கூறுவான், அற்றை ஞான்று மெய்தொட்டுப் பயின்றதே கூறியது" (தொல்-களவு கக-உரை.) என்பர்.

## பாட்டு - உஎஙு : தோழி கூற்று

துறை :—பிரிவரெனக கவன்ற தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. அஃதாவது, 'ஒருகால் தலைவன் நம்மைப் பிரிந்து

செல்வானோ?' என ஐயுற்றுக் கலங்கிய தலைவிக்கு, 'அவன் அங்ஙனம பிரியான்,' எனத் தெளித்து ஆற்றுவித்தது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி "ஒண்ணுதலோய்! 'அவன் பிரிவன்' என்று நீகவல்வாயாயின், யான் உணர்ந்துள தொன்றனைக் கூறக்கேள்; உயரிய மலையுச்சியிற் றூங்கும் தேனிறாலைக் கொள்ளக் கருதிப் பழைதாகிய கண்ணேணியில் ஏறி, முழுதும் ஏறாதே இறங்கிய மடவோன் போல, இவ்வுலகம் இன்று ஏமாந்துளது! நாம் உயிரோடிருக்கும் பொருட்டுத் தலைவன் பிரிவானல்லன்; நீ இதனைத் தெளிந்து கவலாதிரு," என்று கூறுகின்றாள்.

உஎங.
அல்குறு பொழுதில் தாது முகை தயங்கப்
பெருங்காட் டுளரும் அசைவளி போலத்
தண்ணிய கமழும் ஒண்ணுத லோயே
நொந்தனை யாயிற் கண்டது மொழிவல்
பெருந்தேன் கண்படு வரையின் முதுமால்
பறியா தேறிய மடவோன் போல

ஏமாந் தன்றிவ் வுலகம்
நாமுளே மாகப் பிரியலன் தெளிமே.

—சிறைக்குடி யாந்தையார்.

(இ - ள்.) அல்குறு பொழுதில் தாது முகை தயங்க- இரவின்கண் தாதையுடைய முகைகள் மலர்ந்து திகழும்படி, பெருங்காட்டு உளரும் அசைவளி போல - பெரிய காட்டை வருடி இயங்குகின்ற காற்றைப் போன்று, தண்ணிய கமழும் ஒண்ணுதலோயே - குளிர்ந்தனவாகிய நறுமணங்கமழாநின்ற ஒள்ளிய நுதலையுடைய தோழியே!, நொந்தனையாயின் கண்டது மொழிவல் - நீ தலைவன் பிரிவான் என்று கண்டு வருந்துவாயாயின் நான் ஆராய்ந்து கண்டதனைக் கூறுவன் கேட்பாயாக, பெருந்தேன் கண்படு வரையின் - பெரிய தேனிறால் தூங்குகின்ற மலையுச்சியின்கண் ஏறக்கருதி, முது மால்பு அறியாது ஏறிய மடவோன் போல - ஏறுதற்குரிய கண்ணேணி பழைதா தலை அறியாது ஏறிய அறிவில்லாதானைப் போன்று, இவ்வுலகம் ஏமாந்தன்று -இந்த வுலகம் இன்று ஏமாந்துளதுகாண், நாம் உள மாகப் பிரியலன் தெளிமே - யாம் உயிரோடிருத்தற்பொருட்டு நந்தலைவன் செலவழுங்கினன்; இவ்வுண்மையை நீயும் உணர்ந்து கொள்க.

**விளக்கம்** :—அல்கு-இராக்காலம். முகை-அரும்பு. முகை தயங்க வென்றது, மலர்ந்து திகழ என்றவாறு. இரவில் காற்று வருடுதலாே



முகைகள் மலர்ந்து தயங்கின என்க. இது வளி மணமுடைத்தாதற்குக் குறிப்பேதுவாய் நின்றமையுணர்க. காட்டின்கண் முகைதயங்க உளரும் வளி, அசைவளி என்று தனித்தனிக் கூட்டுக. அசைவளி என்றது, மெல்லென இயங்கும் தென்றலே. இதனை "மந்தமாருதம்" என வடவர் கூறலும் உணர்க. காட்டின்கண் பல்வேறு மலர்களையும் அளவிவரும் காற்று, அம்மலரின் பல்வேறு மணமும் விரவிக் கமழுமாறு போன்று, பல்வேறு மணமும் கமழும் நுதல் என்றவாறு. இது தலைவனோடு உடனுறையின்பம் பெற்றிருத்தலைக் கருதிக் கூறியதென்க. வெச்சென்ற மணமும் உண்மையின், 'தண்ணிய கமழும்' என்றாள். தண்ணிய - குளிர்ச்சியுடையன.

தலைவனது ஒழுகலாற்றினை ஆராய்ந்து, இங்ஙனம் ஒழுகுகின்றானாகலின், இவன் பிரிவன் போலும் என்று கருதி, 'நீ வருந்துவாயானால், அவன் செலவழுங்கினன்' என்று யான் அறிந்துள்ளேன்; அதனைக் கூறுவன் என்பாள், 'நொந்தனையாயிற் கண்டது மொழிவல்' என்றாள்.

வரை என்றது, உச்சியை. உச்சியில் தூங்கும் தேனிறாலைக் கொள்ளக்கருதித் தான் ஏறிச் செல்லும் கண்ணேணி பழைதாதலை அறியாது ஏறி, அது முரியும் என்று கண்டு மீண்டும் இறங்கிய அறிவிலி போல, நந்தலைவனும் நம்மைப் பிரிந்து பொருளீட்டச் செல்வான் கருதி அதற்காவன செய்தவன்,அவன்பிரிந்தவுடன்யாம்இறந்துபடுவேம் என்பதையும் குறிப்பான் உணர்ந்து, நாம் உயிருடன் வாழும் பொருட்டுச செலவழுங்கினன் என வுவமையை நுண்ணிதின் விரித்தோதுக. உலகம் என்றது, ஈண்டுத்தலைவனை. நாமுளமாக என்றது, நாம் உயிர்

வாழும் பொருட்டு என்றவாறு. இங்ஙனம் கூற அறியார், நாம் உயிரோடிருக்குந் துணையும் பிரியான் எனப் பொருட்சிறப்பின்றிக் கூறி னுருமுளர். தான் பிரிந்துழி யாம் உயிர்வாழேம் என அவன் தெளிந்து செலவழுங்கினன் ஆகலின், இனிப் பிரியக் கருதான் என்பது ஒருதலை என்பாள் 'பிரியான் தெளி' என்றாள். முதுமால்பு - பழைதான கண்ணேணி மலையேறுவோர் நெடிய மூங்கிலின் கணுக்களைப் படி போல வைத்து ஏறுதற் கியற்றியதொரு ஒற்றைமூங்கில் ஏணியை மால்பு என்ப. இதனை,

> "கலைகை யற்ற காண்பி னெடுவரை
> நிலைபெய் திட்ட மால்பு நெறியாகப்
> பெரும்பயன் தொகுத்த தேன்கொள்

கொள்ளை." (௩கடு-எ.) எனவரும் மலைபடு கடாத்தானும் உணர்க.

## பாட்டு - உஎச : தலைவன் கூற்று

துறை :—பொருள் வலித்த நெஞ்சிற்குக் கிழவன் உரைத்தது அஃதாவது, பொருளீட்டற்குத் தூண்டிய நெஞ்சிற்கு உடம்பட்டுப் பிரியுங்கால் வருந்தாதேக உபாயம் கண்டு தலைவன் அந்நெஞ்சிற்குணர்த்தியது.

இதன்கண், தலைவன் தன்நெஞ்சை நோக்கி, 'நெஞ்சமே!' யாம் செல்லக்கருதிய இன்னாக் கானமும், பொன்னொடு மணி

மிடை யல்குல் மடந்தை அணிமுலை யாகம் உள்கினம் செலின் இனியவாம். யாம் பொருள்வயிற் பிரிவோமாக,' என்றுணர்த்து கின்றான்.

உ௭௪. புறவுப் புறத்தன்ன புன்கா லுகாஅய்க்
காசினை யன்ன நளிகனி யுதிர
விடுகணை வில்லொடு பற்றிக் கோடிவர்பு
வருநர்ப் பார்க்கும் வன்கண் ஆடவர்
நீர்நசை வேட்கையி னார்மென்று தணியும்
இன்னாக் கானமும் இனிய பொன்னொடு
மணிமிடை யல்குல் மடந்தை
அணிமுலை யாக முள்கினஞ் செலினே.

—உருத்திரனார்.

(இ - ள்) நெஞ்சமே!, பொன்னொடு மணிமிடை அல்குல் மடந்தை - பொன்னானும் மணியானும் இயற்றப்பட்ட அணிகலன்களையுடைய அல்குலையுடைய நங்தலைவியினது, அணி முலை ஆகம் உள்கினம் செலின் - அழகிய முலைகளையுடைய மார்பினை நினைந்தேமாய் யாம் செல்வோமெனின், புறவுப்

புறத்து அன்ன புன்கால் உகாஅய் - புறவினது முதுகை ஒத்த புல்லிய அடியையுடைய உகாய் மரத்தினது, காசினை அன்ன நளிகனி உதிர - மணியினை ஒத்த செறிந்த கனிகள் உதிரும்படி, விடுகணை வில்லொடு பற்றிக் கோடு இவர்பு - எய்தற்குரிய அம்புகளை வில்லோடே பிடித்துக் கிளையின்கண்ணே ஏறி நின்று, வருநர்ப் பார்க்கும் வன்கண் ஆடவர் - ஆறுசெல்வோர் உளரோ என்று

ஆராய்கின்ற வன்கண்மையுடைய ஆறலைகள்வர், நீர் நசை வேட்கையின் நார் மென்று தணியும் - தமக்குண்டாகிய நீரை விரும்பும் விருப்பத்தாலே அம்மரத்தினது நாரை மென்று அவ் வேட்

கையைத் தணித்துக் கொள்ளற்குக் காரணமான, இன்னாக் கானமும் இனிய - துன்பமுடைய காடும் நமக்கு இனியவேயாகும்.

**விளக்கம்** :—புறவு-புறா, குறியதன் கீழ் 'ஆ'க்குறுகி உகர மேற்றது. புறா பாலைக்கருப் பொருளாதல் பற்றி அதனையே உவமை கூறினான். புறம் - முதுகு. உகாய் மரத்தின் அடிப்பகுதிக்குப் புறவின் முதுகு உவமை என்க. உகாய்-ஒருவகை மரம்: இதன் கனி நீலமணி போன்றிருக்கும் என்பதனை,

> "மணிக்கா சன்ன மாணிற விருங்கனி
> உகாஅய் மென்சினை உதிர்வன கழியும்."

(அகம்: ௨௬௯.) என வரும் நெடுந்தொகையானும் உணர்க.

காசினை அன்ன என்பதன்கண் ஐகாரம் அசைநிலை. வன்கண் ஆடவர் கணையும் வில்லுங்கொண்டு உகாய்மரத்தின் கோடுபெற்றி எறுங்கால், அதன்கட் செறிந்த கனியுதிரும் என்க. "கனி உதிரும்படி அம்பைவிடுவர்" என வேண்டாத விளக்கங் கூறினருமுளர். வருநர்-ஆறு செல்வோர். ஆறுசெல்வோர் வருவாருளரோ என்று ஆராயும் வன்கண் ஆடவர் என்க. வன்கண் ஆடவர் என்றது, ஆறலை கள்வரை.

அங்ஙனம் ஆராயும் கள்வர், நீர்வேட்டுழி அக்காட்டின்கண்யாண்டும் நீரின்மையின் மரநார்னை மென்று அவவேட்கை தணிவர் என்றது, பாலையின் கொடுமை கூறியவாறு. இதனால் நீரின்மையும் ஆறலைகள்வர் உண்மையும் ஒருசேர உணர்த்திய நுணுக்கமுணர்க.

உடல் உள்ளத்தின் வயத்தது என்பது பற்றித் தலைவியை எண்ணுங்கால் உளத்தே இன்பந்தோன்றலின், புறத்தேயுள்ள இன்னாமை தோன்றாது மறையும் என்பான், 'உள்ளினுஞ் செலின் இன்னாக்கானமும் இனிய' என்றான். என்னை? இன்பதுன்பங்கட்கு நெஞ்சமே காரணமாகலின் என்க.

யாம் தலைவியைப் பிரிந்த வழியும் அவளை உள்ளுமுபாயத்தானே ஆற்றுவேமாகலின் இனிப் பொருள் வயிற்செல்வாம் எனத் தலைவன் தனக்குள் தேறியது இஃதென்க.

## பாட்டு - ௨௭௫ : தோழி கூற்று

துறை :—பருவ வரவின்கண் வரவு நிமித்தம் தோன்றத் தோழி தலைமகட்கு உரைத்தது; அஃதாவது, 'தலைவன் மீண்டு வருவேன்' எனக் கூறிச் சென்ற பருவம் வந்ததாக, அப்பொழுது தலைவனது வருகையை உணர்த்தும் நன்னிமித்தம தோன்றத் தோழி தலைவிக்குக் கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'ஆண்டோர் மணி ஒலி கேட்கின்றது; இன்றே தலைவர் வருவதாகக் குறித்த நாளாகலின், அம்மணி ஒலி ஊர் நோக்கி வரும் ஆனிரைக்கண் நல்லானுக்குப் பூட்டப்பட்ட மணியின் ஒலியோ? அல்லது, நந்தலைவர் ஊர்ந்து வரும் தேர்பூண்ட மணியொலியோ? அறிகிலேன்; யாம் சென்று அக்கல்லின் உச்சியிலேறி நின்று பார்த்து வருகம் வருக,' எனறு அழைக்கின்றாள்.

உஎடு. முல்லை யூர்ந்த கல்லுய ரேறிக்
கண்டனம் வருகஞ் சென்மோ தோழி
எல்லூர்ச் சேர்தரும் ஏறுடை யினத்துப்
புல்லார் நல்லான் பூண்மணி கொல்லோ
செய்வினை முடித்த செம்மலுள்ளமோடு
வல்வில் இளையர் பக்கம் போற்ற

மூலமும் உரையும்

ஈர்மணற் காட்டாறு வரூஉம்
தேர்மணி கொல்லாண் டியம்பிய வளவே.

—ஒக்கூர் மாசாத்தியார்.

(இ - ள்.) தோழி—, ஆண்டு இயம்பிய உள - அங்கே ஒலிப்பனவாக உள்ள மணிகள், எல்லூர்ச் சேர்தரும் ஏறுடை இனத்துப் புல் ஆர் நல்லான் பூண்மணி கொல் - மாலைப்பொழுதின்கண் ஊர்புகுதும் காளையையுடைய ஆனிரைக்கண் உள்ள புல்லை உண்ட நல்ல ஆன்கள் கழுத்திற்பூட்டப்பட்ட மணிகளோ அல்லது, செய்வினை முடித்த செம்மல் உள்ளமொடு - தாம் மேற்கொண்டு சென்று செய்த வினையை முடித்தமையாலே உண்டான தலைமை பொருந்திய நெஞ்சத்தோடே, வல்வில் இளைஞர் பக்கம் போற்ற - வலிய வில்லையுடைய மறவர்கள் அருகே பாதுகாவல் செய்ய, ஈர்மணல் காட்டாற்று வரும் - ஈரிய மணலையுடைய காட்டுவழியிலே வாராநின்ற, தேர்மணி கொல் - தேரிலே கட்டப்பட்ட மணிகளோ, இவையிற்றுள் யாவை என, முல்லை ஊர்ந்த கல் உயர் ஏறிக் கண்டனம் வருகம் சென்மோ - முல்லைக் கொடிபடர்ந்த கல்லின் உச்சியிலே ஏறிக்கண்டு வருவேம்; வருவாயாக

**விளக்கம்** :—எல் - பகல்; ஈண்டு மாலைப் பொழுதினைக் குறித்து நின்றது. எல் - இரவுமாம், இப்பொருட்கு இரவுவருதல் குறித்து ஊர் சேர்தரும் என்க. ஏறு - காளை. இனத்த - திரட்சியை உடை

யன ; என்றது, நிரையை. படுபுல்லார்ந்து பாற்பயன் தரும் ஆகலின், 'புல் ஆர் நல்லான்' என்றாள்.

பூண்மணி: வினைத்தொகை. கொல் - வினவின்கண் வந்தது. செய்வினை: வினைத்தொகை. செம்மல் உள்ளம் - தலைமைத்தனமை பெற்ற நெஞ்சம். அது வினைமுடித்தமையால் உண்டாவதாகலான், 'செய்வினைமுடித்த செம்மல் உள்ளம்' என்றாள். முடித்தமையாலுண் டாய செம்மல் என்க. ஒற்றுமை கருதித்தலைவன் உள்ளத்தைத் தேர்க் கேற்றி யுரைத்தாள். வல்வில் இளைஞர் என்றமையால் போர்மேற் சென்றோன் என்பது பெற்றாம் வல்வில் இளைஞர் என்றது, வென்று வருகின்ற மறவர் என்பது தோன்ற நின்றது.

ஈர்மணல் என்றது, கார்ப்பருவத்தொடக்கம் என்பதைக் குறிப் பானுணர்த்திற்று. காட்டாறு - காட்டுவழி.

ஊர்ந்த - படர்ந்த. சேய்மைக்கண் வருவதைக் காணற்பொருட்டு கல்லுயா ஏறி என்றாள். உயர் - உச்சி கண்டனம் - முற்றெச்சம். கண்டு வருகம் என்க. மோ: முன்னிலை அசை.

## பாட்டு - உ௭௬ : தலைவன் கூற்று

துறை:—தோழிக்குக் குறைமறுமல் தலைமகன் கூறியது. அஃதாவது, தோழியின்பால் தலைவியைக்காணும் பொருட்டுக்

குறையிரந்த தலைவன், அவள் அதனை மறுத்துரையாது ஏற்றுக் கொள்ளும் வகை சூழ்ந்து சொல்லியது.

இதன்கண், தன்னைச் சேட்படுத்திய தோழி கேட்ப முன்னிலைப் புறமொழியாகத் தலைவன், 'இனி, யான் மடலேறிச் சென்று சான்றோர் அறியத் தலைவியால் யான் உற்றதை அறிவிப்பன்; அப்பொழுது அவட்குக் காவலாக அமைந்த அறியாமையுடைய இவ்வூர், யாங்காவதாம்! இவ் வாரவார முடைய ஊர் இரங்கத்தக்க தொன்றாயிருந்தது,' என்று கூறுகின்றான்.

உஎகூ. பனைத்தோட் குறுமகள் பாவை தைஇயும்
பஞ்சாய்ப் பள்ளஞ் சூழ்ந்து மற்றிவள்
உருத்தெழு வனமுலை ஒளிபெற எழுதிய
தொய்யில காப்போர் அறிதலும் அறியார்
முறையுடை யரசன் செங்கோல்
அவையத்
தியான்றற் கடவின் யாங்கா வதுகோல்
பேரிதும் பேதை மன்ற

அளிதோ தானேயிவ் வழுங்கல் ஊரே.

—கூழிக் கொற்றனர்.

(இ - ள்.) பணைத் தோள் குறுமகள் பாவை தைஇயும் - மூங்கிலை ஒத்த தோளையுடைய தலைவியினது பாவையைப் பண்ணிக் கொடுத்தும், பஞ்சாய்ப் பள்ளஞ் சூழ்ந்தும் - அதனைப் பண்ணற் பொருட்டுப் பஞ்சாய்க் கோரை வளர்ந்த நீர்நிலைகளைச் சுற்றித்திரிந்தும, உருத்து எழு வனமுலை ஒளிபெற எழுதிய தொய்யில் - சினந்து வளராநின்ற அழகிய முலைமேலும நிறம் பெறும்படி யான் எழுதிய தொய்யிலை, காப்போர் அறிதலும் அறியார் - அவளைப் பாதுகாத்து நிற்போர் அறிதலும் செய்யார், முறையுடை அரசன் செங்கோல் அவையத்து - நீதியை உடைய மன்னனது செங்கோன்மையையுடைய அறங்கூறவையத்தின்கண் சென்று, யான் தன் கடவின் - யான் அதலைவியைக்
கேட்குங் கால், இவ் அழுங்கல் ஊர் பெரிதும் பேதைமன்ற யாங்காவது அளிது - இவ்வாரவாரத்தையுடைய ஊர் பெரிதும் பேதைமையுடைத்தாயிருந்தது; தேற்றமாக அது எவ்வாறுவது ஆதலின் இரங்கத்தக்கது.

**விளக்கம்** :—பணை - மூங்கில்; பணைத்தோள் - பருத்ததோள் எனினு
மாம். குறுமகள் என்றது, இளையள் என்பதுபடநின்றது. தைஇ - பண்ணி, தலைவி விளையாடற் பொருட்டுப் பாவை செய்து கொடுத்தும் என்றபடி. பஞ்சாய் - ஒருவகைக் கோரை. பஞ்சாய்பறித்தற்கு அவன்,

# மூலமும் உரையும்

சஉகக

பொருட்டு, நீர்நிலைகளைச் சூழ்ந்தும் என்றவாறு. உருத்தெழு என் பதற்கு - வடிவமுற்று எழுகின்ற எனினுமாம். வனமுலை - அழகிய முலை. ஒளி - நிறம். வனமுலை மேலும் ஒளிபெறும்படி என்க. தொய் யில் - மகளிர்முலையில் எழுதப்படும் ஓவியம்.

இங்ஙனமெல்லாம் அவளோடாடியதை நீ அறிந்திலை என்று தோழிக்குக் கூறுவான் முன்னிலைப் புறமொழியாகக் காப்போர் அறிதலும் அறியார் என்றான். காப்போர் என்றது, தோழியை. மட லேறுவோன், அவையத்திலேறிச் சான்றோரை விளித்து இன்னள் என்னைச் செய்தன இவையெனக் கூறி, அவளை எனக்குத் தம்மின் என்பன் ஆகலின் 'யான் தற் கடவின்' என்றான். தன் என்றது, தலைவியை. யாங்காவது என்றது, அதனால் வரும் பழியை எங்ஙனம் தாங்கவியலும் என்றவாறு.

இங்ஙனம் மடலேறாமலே தலைவியை என்னோடு கூட்டுதலே நலமாம். இஃதறியாமையின் நீ பேதையாயினை என்பான், 'இவ்வழுங் கலூர் பேதைமன்ற' என்றான். மன்ற, தேற்றப்பொருளது. அழுங்கல் - ஆரவாரம். ஓ, தான், ஏ, அசைகளாம்.

இதனைக் கேட்ட தோழி பழிக்கஞ்சி அவன் குறைமுடிக்க முன் வருதல் இதன் பயனும் என்க.

நம்மூர் அரசன் முறையுடையன்; செங்கோலன்; ஆகலின், யான் மடலேறியவழித் தலைவியைப் பெறுதல் ஒருதலை என்பான், முறை யுடையரசன் செங்கோல் அவையம் என, அறங்கூறவையத்தைப் புகழ்ந் தான். அறங்கூறவையத்தார் எனக்கு அவளை அளிப்பர். மறுத்ததற்கு யான் கவலேன காண் என்பது குறிப்பு.

நீ குறை

## பாட்டு – உ௭௭ : தோழி கூற்று

துறை :—தலைமகன் பிரிந்தவழி அவன் குறித்த பருவவரவு எப்பொழுது வருமெனத் தோழி அறிவரைக் கண்டு வினயது. அஃதாவது, தலைமகன பிரிந்து செலலுங்கால், 'யான் வாடைக் காற்று வரும் பருவத்தொடக்கத்தே மீண்டு வருவன்' என்று குறித்துச் சென்றுளுகத தோழி 'அப்பருவம் எப்பொழுது வரும்' என்று அறிவனைக் கண்டு வினவியது.

இதன்கண், தோழி, அறிவனை நோக்கிப் 'பெரியீர் ! குற்றமற்ற தெருவின்கண்ணே நாய் இல்லாத முன்றிலில், செந்நெல்லாலாகிய சோற்றை வெண்ணெயோடே ஓரில்லத்தே பிச்சையாகப் பெற்றுச் சேமச் செப்பில் தண்ணீரும் பெற்று மகிழ்வீராக ! நீயிர், எப்பொழுது கடைப்பெயல் வாடைவரும் என்று எமக்குக் கூறுமின்; அஃதெற்றுக்கெனின் ,

அப்பொழுது
தான் எந்தலைவர் எம்பால் மீண்டுவருங்காலம் ஆகலான்,' என்று கூறுகின்றாள்.

உளஎ. ஆசில் தெருவில் நாயில் வியன்கடைச்
செந்நெல் அமலை வெண்மை வெள்ளிழுது



ஓரிற் பிச்சை ஆர மாந்தி
அற்சிர வெய்ய வெப்பத் தண்ணீர்
சேமச் செப்பிற் பெறீஇயரோ நீயே
மின்னிடை நடுங்கும் கடைப்பெயல் வாடை
எக்கால் வருவ தென்றி
அக்கால் வருவரெங் காத லோரே.

—ஓரிற் பிச்சையார்.

(இ - ள்.) அறிவ !, மின் இடை நடுங்கும் கடைப் பெயல் வாடை - மின்னல் போன்ற இடையையுடைய தலைவி நடுங்குதற்குக் காரணமான இறுதியிற் பெய்யும் மழைக்குப் பின்னர்த் தாய் வரும் வாடையையுடைய

காலம், எக்கால வருவது என்றி-
எப்பொழுதுவரும் என்று கூறுவையோ,
அக்கால் வருவர் எங்

காதலோர் - அப்பொழுது எங்காதலரும் வருவர்; ஆதலான் அதனை எமக்கு உணாத்துவாயாக, நீ ஆசில் தெருவில் நாய் இல் வியன் கடை செந்நெல் அமலை வெண்மை வெள் இழுது ஓர் இல் பிச்சை ஆர மாந்தி - நீ குற்றமற்ற தெருவிடத்தே நாய் இல்லாத அகன்ற முன்றிலின் கண சிவந்த நெல்லானாகிய சோற் றுத் திரளும் வெள்ளிய வெண்ணெயும ஆகியவற்றை ஓரில்லி லேயே பெற்ற பிச்சையினை வயிறு நிரம்பவுண்டு, அற்சிர வெய்ய வெப்பத் தண்ணீர் - அற்சிரக்காலத்தே விரும்பத்தக்கதாகிய வெப்பத்தையுடைய நீரை, சேமச்செப்பில் பெறீஇயர் - நீர் சேமித்து வைத்தற்குரிய செப்பின்கண்ணே பெறுவாயாக.

**விளக்கம்** :—நீ தெருவில் முன்றிலில் ஓரில்லிலேயே அமலையும் நெய்யும் பிசசையாகப் பெற்று ஆரமாந்திச செப்பில் நீரும் பெறுக, என்னுந் துணையும் தோழி அறிவனை வாழ்த்தியதென்க. அறிவர் என்போர் துறவுள்ளமும் எதிர்கால அறிவும் உடைய மேலோர். அவர் இவ்வுலகத்தே வேண்டுவன சோறும் நீருமே ஆகலின், அவற்றை நன்கு பெறுக என்றது, வாழ்த்தாயிற்று.

இச் செய்யுளிலே கூறப்பட்ட அறிவர், பண்டைக்காலத்தே தமிழ் நாட்டின்கண் உலகத்தை நீத்து இறைவனுணிய பொருள் ஒன்றனையே பற்றி நின்று வீடுபெறும் சான்றோர் என்பதுணர்க. இவர்கள் முக் காலமும் உணரும் தன்மையையுடையோராதலை,

"மறுவில் செய்தி மூவகைக் காலமும்

நெறியின் ஆற்றிய அறிவன்" (தொல். புறத். உ0)

எனவரும் தொல்காப்பியத்தானும் அறிக. இவ்வறிவர் இல்லறத்தாருள்ளும் கொல்லாமை முதலிய அறங்களைக் கடைப்பிடித்தொழுகும் அந்தணர் முதலியோர் இல்லங்களிலே சென்று ஏற்றுண்ணும் வழக்கமுடையர் என்பது இச்செய்யுளாற் புலனும். இவர்கள் இல்லறத்தார்க்கு ஆக்கமாகும் அறம் பொருள் இன்பங்களின் இயல்பைச் செவ்வி நேர்ந்துழி அவர்க்கு அறிவுறுத்துவர் என்பது,

## மூலமும் உரையும்

சகரு

"சொல்லிய கிளவி அறிவர்க்கு முரிய"
"இடித்துவரை நிறுத்தலு மவர தாகும்
கிழவனுங் கிழத்தியு மவர்வரை நிற்றலின்"
(தொல்-கற்பு-கரு, கச)

எனவரும் தொல்காப்பியச் சூத்திரங்களானும் அவற்றின் உரைகளானும னனுணரலாம.

ஆசில் தெருவில் நாயில் வியன்கடை என்றது அந்தணர் சேரியை; என்னை?

"பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்
மனையுறை கோழியொடு ஞமலி துன்னாது
வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்

மறை காப்பாளர் உறைபதி"

(பெரும்பாண், உகூஅ-கூ0க) எனப் பெரும்பாணாற்றுப்

படையினும் ஓதப்படுதலான் என்க.

ஆசு - புலாலுண்ணல் முதலியன. நாயின்மை: குறித்து நின்றது.
அருளுண்மை

அமலே - சோற்றுத்திரள். வெள்ளிழுது, தண்ணீர் வாளா இழுது, நீர், என்னுமாத்திரையாய் நின்றன.

என்பன,

வாடை, கார்ப்பருவக் கடைநாளில் வருதல்

பற்றிக் 'கடைப்

பெயல் வாடை' என்றாள். இது கடைப்பெயல் வாடை தொடங்குங் கால், 'வருவல்' என்ற தலைவன் கூற்றைக்கொண்டு கூறியபடியாம்.

'அவ்வாடை வருதற்கு இன்னும் எத்துணை வினவியவாறும்.

நாட்கள் உள ?' என்று

பிசைசை ஏற்போர்க்கு ஓரில்லிலேயே வயிறு நிரம்பக்கிடைத்தல் இன்பமாதலின், 'ஓரிற் பிசைசை' என்றாள். இவ்வழகிய தொடரை யாத்த அருமை நோக்கி இதனை இயற்றிய நல்லிசைப்புலவர் 'ஓரிற் பிச்சையார்' என்று வழங்கப்பட்டனர் என்க.

பாட்டு - உஎஅ : தலைவி கூற்று

துறை :—பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் உரைததது. தலைவன் பிரிந்திருநத ஞான்று ஆற்றுது வருந்திய தலைவியை 'நீ ஆற்றியிருத்தல வேண்டு'மென்ற தோழிக்கு அவள் தன் ஆற்றுமைக் காரணம் கூறியது.

இதன் கண், 'தோழீ ! மலையிறந்துசென்ற நந்தலைவர் நமது சிறு பசும்பாவையையும், என்னையும் நினையாது மறந்து கொடியராயினர். யான் எங்ஙனம் ஆற்றவல்லேன்?' என்று தலைவி கூறுகின்றாள்.

உஎஅ. உறுவளி உளரிய அந்தளிர் மாஅத்து
முறிகண் டன்ன மெல்லென் சீறடிச்



சிறுபசும் பாவையும் எம்மும் உள்ளார்
கொடியர் வாழி தோழி கடுவன்
ஊழுறு தீங்கனி உதிர்ப்பக் கீழிருந்

தேற்பன ஏற்பன உண்ணும்
பார்ப்புடை மந்திய மலையிறந் தோரே.

—பேரி சாத்தனார்.

(இ - ள்.) தோழி—, கடுவன் ஊழுறு தீங்கனி உதிர்ப்ப - ஆண்குரங்கு முதிர்ச்சியுற்ற இனிய பழங்களை மரத்தின் மேலிருந்து உதிர்த்ததாக, கீழிருந்து ஏற்பன ஏற்பன உண்ணும பார்ப்புடை மந்திய மலை இறந்தோர் - அம்மரத்தின் கீழிருந்து தங் கையானே ஏற்பனவற்றை ஏற்பனவற்றைத் தின்னு கின்ற குட்டிகளையுடைய பெண் குரங்குகளுள்ளனவாகிய மலைகளைக் கடந்துசென்ற நந்தலைவர், உறுவளி உளரிய அந்தளிர் மாஅத்து - மிக்க காற்றுக்கோதிய அழகிய தளிரையுடைய மாமரத்தினது, முறி கண்டன்ன மெல்லென் சீறடி - தளிரைக் கண்டாற்போன்ற மெத்தென்ற சிறிய அடியையுடைய, சிறு பசும் பாவையும் எம்மும் உள்ளார் - சிறிய பசிய விளையாட்டுப் பாவையினையும எம்மையும் நினையாராயினர், கொடியர் - அவர் கொடுமையுடையோர்காண்.

**விளக்கம்:**—அவர் கொடுமையுடையராயவழி ஆற்றியிருத்தல் கூடும் என்பது குறிப்பு.

யான் எவ்வாறு

உறுவளி - மிகுதியான காற்று. மா - மாமரம். முறி - தளிர். மாந்தளிர் பாவையின் மெல்லடிக்கு உவமை. பாவையைத் தலைவன் தன்னோடிருந்துழி பிள்ளைமை முறைகொண்டு பாராட்டி மகிழ்ந்தான் ஆகலின், அம் மகவன்பையும் மறந்தான் என்பாள், 'சிறுபசும் பாவையும் உள்ளார்' என்றாள். எம்மும் என்றது, 'அவர் பிரிவினைச் சிறிதும் பொறுக்கலாற்றாத இயல்புடைய எம்மையும்' என்பதுபட நின்றது.

ஊழ் - ஈண்டு முதிர்வு என்னும் பொருட்டாய் நின்றது. ஆண் குரங்கு மரத்தின் மேலேறியிருந்து தன் குட்டிகட்கும், பெண் குரங்குக்கும் கனியுதிர்த்து இனிமை செய்தலை அவர் சென்ற நெறியிலே காண்பவராயிருந்தும், தம் பாவையையும் எம்மையும் உள்ளார்; பெரிதும் வன்கண்ணர் என்பாள், 'கடுவன் கனியுதிர்ப்ப ஏற்பன ஏற்பன உண்ணும் பார்ப்புடை மந்திய மலையிறந்தோர்' என்றாள்.

"கோடுவாழ் குரங்குங் குட்டி கூறுப"

"மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பு
மவையு மன்ன வப்பா லான"

(தொல்-மரபு-௧௫, ௧௬) என்னும் விதியானே குரங்குக் குட்டியைப் பார்ப்பெனல் மரபாதலறிக.

மூலமும் உரையும்

௪௧௯

## பாட்டு - ௨௭௯ : தலைவி கூற்று

துறை :—வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி யுரைத்தது.

அஃதாவது, தலைவன் பிரிவை ஆற்றாது வருந்திய தலைவியைத் தோழி, 'ஆற்றுக' என்று வற்புறுத்தினளாக, அவட்குத் தலைவி தன் ஆற்றாமைக் காரணந் தெரித்தோதியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'நந்தலைவன் வருதற்குரிய பொழுது இதுவேயாகவும் வந்திலர்; யானைபோலத் தோன்றும் துறுகல்மிக்க குன்றங்களைக் கடந்து சென்றோர் எமது தோளை மறந்துவிட்டனர்; யான் எங்ஙனம் ஆற்றவல்லேன்?' என்கின்றாள்.

உஎகூ. திரிமருப் பெருமை யிருணிற மையான்
வரிமிடறு யாத்த பகுவாய்த் தெண்மணி
புலம்புகோள் யாமத் தியங்குதொ
றிசைக்கும்
இதுபொழு தாகவும் வாரார் கொல்லோ
மழைகழூஉ மறந்த மாயிருந் துறுகல்
துகள்சூழ் யானையிற் பொலியத்
தோன்றும்
இரும்பல் குன்றம் போகித்
திருந்திறைப் பணைத்தோள் உள்ளா
தோரே.

—மதுரை மருதனிளநாகனுர்.

(இ - ள்) தோழி !, மழை கழூஉ மறந்த மா இருந் துறு கல் - மழை கழுவுதலை மறந்துவிட்ட பெரிய கரிய பொற்றைக் கல், துகள் சூழ் யானையில் பொலியத் தோன்றும் - புழுதி படிந்த யானை போன்று விளக்கமாகத் தோன்றுநின்ற, இரும் பல் குன்றம் போகி - பெரிய பலவாகிய மலைகளைக் கடந்து சென்று, திருந்து இறைப் பணைத்தோள் உள்ளாதார் - நமது திருந்திய இலக்கணமமைந்த முன்கையையுடைய பருத்த தோள் களையும் நினையாதுவிட்டவராகிய நந்தலைவர், திரிமருப்பு எருமை

இருள் நிற மை ஆன் - முறுக்குடைய மருப்புக்களையும் இருள் போன்ற நிறத்தினையும் உடைய காரெருமையாகிய ஆனினது, வரி மிடறு யாத்த பகுவாய்த் தெண்மணி - வரியமைந்த கழுத் தின்கண்ணே கட்டப்பட்ட பிளந்த வாயினையும் தெளிந்த ஓசையினையுமுடைய மணி, புலம்பு கொள் யாமத்து இயங்கு தொறு இசைக்கும் - தனிமைத் துன்பம் உறுதற்குக் காரண

மான நடு இரவின்கண்ணே அது நடக்குந் தோறும் ஒலியா நின்ற, இது பொழுது ஆகவும் - இத்துணைப் பொழுது ஆகா நிற்பவும், வாரார் - வந்திலர்.

**விளக்கம்:**—திரி மருப்பு - முறுக்கேறிய கொம்பு. எருமையி கொம்பு முறுக்குடையவாதல் இயல்பு. மையான் என்றது காரெரு என்னும் பெயர் மாத்திரையாய் நின்றது. ஆன், எருமை பசு இர டற்கும் பொதுவாய்ப் பெண்பாலை உணர்த்துவதாகலின் 'எருமை காரான்' என்றாள். எருமையாகிய கரிய ஆன் என்க. வரிமிடறெ பதே சிறந்த பாடம். எருமையின் கழுத்தில் வரிகள் உளவாத காண்க. வரு மிடறு என்று பாடமோதுவாரும் உளர், பகுவாய் பிளந்தவாய். தெண்மணி என்றது தெளிந்த ஓசையுடைய ம என்றவாறு.

தனிமைத்துன்பம் மிக்குத் தோன்றும் பொழுதென்பாள், 'புலப் கொள் யாமம்' என்றாள். என்னை? உலகத்துயிர்கள் எல்ல உறங்காநிற்பத் தனித்துறைவோர் மட்டுமே உறங்காது கிடந் வருந்தும் பொழுததுவே யாகலின். இதனை,

> "மன்னுயிர் எல்லாந் துயிற்றி அளித்திரா
> என்னல்ல தில்லை துணை."

(குறள்-கககூ. என்னுந் திருக்குறளானும் உணர்க.

மழையினால் துறுகற்கள் கழுவப்பட்டுத் தூய்மையுடையனவாக தோன்றுதல் இயல்பு. தலைவன் சென்ற நிலம் பாலை யாகலின், ஆங் மழையின்மை கூறுவாள், 'மழை கழூஉ மறந்த துறுகல்' என்ற துறுகல் - பொற்றைக்கல். இது கழுவப்படாமையின் துகள்படிந் யானை உவமையாக எடுத்துக் கூறப்பட்டது.

## பாட்டு - உ௲௦: தலைவன் கூற்று

துறை :—கழற்றெதிர்மறை. அஃதாவது, தலைவன் தன்னை இடித்துரைத்த பாங்களை நோக்கித் தலைவியின் அருமையை கூறியது.

இதன்கண், 'நண்பரே! என் நெஞ்சைப் பிணித்து கொண்ட அஞ்சிலோதிப் பெருந்தோட் குறுமகளினுடைய சிறுமெல் ஆகம் ஒரு பொழுதை தக்கு யான் எய்தப் பெறினு இப்பிறப்பானுறுபயன் பெற்றவன் ஆவேன். அங்ஙனம் எய்தி பின்னர், அரைநாளேனும் வாழப் பெறேனாயினும் என்று தலைவன் பாங்கனுக்குக் கூறுகின்றான்.

ஆகு:

உ௨0. கேளிர் வாழியோ கேளிர் நாளுமென்
நெஞ்சுபிணிக் கொண்ட அஞ்சி லோதிப்
பெருந்தோட் குறுமகள் சிறுமெல் லாகம்
ஒருநாள் புணரப் புணரின்
அரைநாள் வாழ்க்கையும் வேண்டலென்
யானே.

—நக்கீரனு

(இ - ள்) கேளிர் வாழியோ கேளிர் - நண்பரே ! நீயிர் வாழ்வீராக நண்பரே ! நாளும் என் நெஞ்சு பிணிக் கொண்ட - எப்பொழுதும் என் உளத்தைத் தன்பாற் பிணித்துக் கொண்ட, அம் சில் ஓதிப் பெருந்தோள் குறுமகள் - அழகிய சிலவாகிய கூந்தலையும் பருத்த தோளகளையும் இளமையையு முடைய தலைவியினது, சிறு மெல் ஆகம் ஒருநாள் புணரப் புணரின் - சிறிய மெல்லிய மேனியை ஒரோ ஒருபொழுது கூடக் கூடுமாயின் பின்னர், யான் அரைநாள் வாழ்க்கையும் வேண்டலென் - யான் அரைநாள் வாழுமளவு வாழக்கையை யேனும் வாழவிரும்புகிலேன் காண்.

**விளக்கம்** :—கேளிர் - அண்மை விளி. தக்கது மொழிந்திலே என்னும் செறலானே இருமுறை விளித்தான். கேளிர்-கேண்மையுடையீர். தலைவியைக் கண்டநாள் தொடங்கி இற்றை நாள் வரை என்னெஞ்சம் அவளையன்றிப் பிறிதொன்றனை நினைந்திலதென்பான், 'என்நெஞ்சு பிணிக் கொண்ட அஞ்சில் ஓதி' என்றான். இயற்கைப் புணர்ச்சிக்கண் அவள் கூந்தலே பாயலாகக் கிடந்து முயங்கினமை தோன்ற 'அஞ்சிலோதிப் பெருந்தோட் குறுமகள்' என்றான். குறுமகள் என்றது, இளையள் என்பதுபட நின்றது. ஆகம் - மேனி; மார்புமாம் புணரப் புணரின் - கூடக் கூடுமெனின் என்க. ஒருநாள் என்றது, ஒருபொழுது என்பதுபட நின்றது. ஒருமுறை அவளைக் கூடுதலே இப்பிறப்பிற்குரிய முழுப்பயனாக அமையும். அக் கூட்டங்காரணமாகப் பின்னர் உயிர் நீகக நேரினும் யான் உடம்படுகின்றேன் என்பான், 'அரைநாள் வாழ்க்கையும் வேண்டலென்' என்றான்.

இடித்துரைத்த பாங்கனுக்கு 'என் வாழ்வினும் அவள் சிறந்தவள்; அவளை மறந்து யான் வாழ்வதெங்ஙனம்?' எனத் தலைவன் மறுத்துரைததான எனக

## பாட்டு - உ௬க : தலைவி கூற்று

துறை :—பிரிவிடை வேறுபட்டாளைக் கண்டு தோழி வற்புறுப்பாட்குக் கிழத்தியுரைத்தது. அஃதாவது, தலைவன் பிரிவன் என ஆற்றாது பெரிதும வருந்திய தலைவியை 'ஆற்றியிருத்தலே நினக்குக் கடமையாம்' என்று வற்புறுத்திய தோழிக்குத் தலைவி, 'தலைவர் என்னைப் பிரிந்து போய்விட்டனரோ,' என்று ஏங்கிக் கூறியது.

இதன்கண், தன்னை வற்புறுத்திய தோழியை நோக்கிச் 'சேயிழை ! நமர் கொடிய பாலைநிலத்தே சென்றனரோ !' என்று வினவுகின்றாள்.

உ௬க. வெண்மணற் பொதுளிய பைங்காற் கருக்கின்
கோம்மைப் போங்கைக் குடுமி வெண்தோட்
டத்த வேம்பி னமலை வான்பூச்
கு.—27

சுரியா ருளைத்தலை பொலியச் சூடிக்
குன்றுதலை மணந்த கானம்
சென்றனர் கொல்லோ சேயிழை நமரே.

—குடவாயிற் கீரத்தனூர்.

( இ - ள்.) சேயிழை - சிவந்த அணிகலன்களையுடைய தோழியே! வெண் மணல் பொதுளிய பைங் கால் கருக்கின் கொடுமைப் போந்தை - வெள்ளிய மணற்பரப்பின்கண்ணே தழைத்த பசிய அடியையும் கருக்கினையும் உடைய திரண்ட பனையினது, குடுமி வெண் தோட்டு - உச்சியின்கண் உள்ள வெள்ளிய மடலிலே வைத்த, அத்த வேம்பின் அமலை வான் பூ - பாலைநிலத்திலே நின்ற வேம்பினது நெருங்கிய வெள்ளிய பூவினை, சுரி ஆர் உளைத்தலை பொலியச் சூடி - சுரிதல் பொருந்திய மயிரையுடைய தலையின்கண் விளங்கும்படி அணிந்து கொண்டு, குன்று தலைமணந்த கானம் சென்றனர் கொல் நமரே- மலைகள் பொருந்திய காட்டிடத்தே நந்தலைவர் சென்று விட்டனரோ! கூறுக.

**விளக்கம்:**—தலைவன் பிரிவான் கொல் என, அவன் ஒழுகலாற்றாலே உணர்ந்த தலைவி, அந்நினைவானே பெரிதும் வருந்தியிருந்த பொழுது அவளறியாதபடி தலைவன் போய்விட்டான். அவன் சென்ற பின்னர்த் தலைவியை உற்ற தோழி, இவள் அவன் பிரிந்தமைக்கு ஆற்றாளாயினள் என்று கருதி, 'நீ ஆற்றுதலே கடன்' என வற்புறுத்தினள். அவள் வற்புறுத்தியமையாலே தலைவன் பிரிந்து போயினன் போலும் என்று எண்ணிய தலைவி, தோழியை இங்ஙனம் வினவினள் என இச்செய்யுளைக் கருதவேண்டும்.

வெண்மணல் பைங்கால் என்பவற்றிற் செய்யுளின்பம் உணர்க. பொதுளுதல் - ஈண்டுத்தழைத்தல் என்னும் பொருட்டு. பைங்காற் கருக்கு என்றதற்குப் பசிய காம்பின்கட் கருக்கு எனினுமாம். கொம்மை - திரட்சி. குடுமி - உச்சி. வெண்தோடு என்றது, வெள்ளிய பனங்குருத்தினை என்க. பனங்குருததிற் பூக்களைக் கட்டி யணியும் வழக்கத்தை,

> " ஓங்குநிலை வேங்கை ஒள்ளிணர் நறுவீப்
> போந்தையந் தோட்டிற் புனைந்தனர்
> தொடுத்து."

(புறம் - உகரு)

எனப் பிறர் கூறுமாற்றானும் உணர்க. வான்பூ - தூய மலருமாம். வேம்பின் வான்பூக் கூறியதனால், அஃது இளவேனிற்காலம் என்பது பெற்றாம். தலைவன் பனங்குருத்தில் வேம்பின் ஒண்பூவைப் புனையுங்கால் தலைவி கண்டாளாகலின், வான்பூச சூடிச் சென்றனரோ என்று எங்கினள் என்க குன்றுதலை மணந்த கானம் என்றது, குறிஞ்சி திரிந்த பாலை என்பது பட நின்றது. 'இனி யான் எங்ஙனம் ஆற்றுவேன்?' என்பது குறிப்பு.

## மூலமும் உரையும்

## பாட்டு - உஅஉ : தோழி கூற்று

துறை:—தலைவன் வினைவயிற் பிரிந்த விடத்துத் தோழி கிழத்திக்கு உரைத்தது. அஃதாவது, தலைவன் தலைவியைப் பிரிந்து சென்ற பின்னர், அவன் மீண்டு வருவதாகக் கூறிச் சென்ற கார்ப்பருவம் வந்தமைகண்ட தோழி, இனித் தலைவர் வருவர் எனத் தலைவிக்குக் கூறியது.

இதன்கண், தோழி, தலைவியை நோக்கி, 'இதோ தலைவர் கூறிச்சென்ற கார்காலம் வந்தது; இக்காலத்தே ஒருங்கே மலர்ந்து உதிராநின்ற வெண் கூதாள மலரைத் தலைவர் காண்பா; காணுங்கால் நின் கைவளையல்களும் இங்ஙனம் கழன்று வீழும்' என்று கருதி விரைவின் மீள்வர் என்று கூறுகின்றாள்.

உஅஉ. செவ்விகோள் வரகின் செஞ்சுவற்
கலித்த
கெளவை நாற்றின் காரிரு ளோரிலை
நவ்வி நாண்மறி கவ்விக் கடன்கழிக்கும்
காரெதிர் தண்புனங் காணிற் கைவளை
நீர்திகழ் சிலம்பின் ஓராங் கவிழ்ந்த
வெண்கூ தாளத் தந்தூம்பு புதுமலர்
ஆர்கழல் புகுவ போலச்
சோர்குவ வல்ல என்பர்கொல் நமரே.

—நாகம் போத்தனூர்.

(இ - ள்) நமர் - நம்மைப் பிரிந்துறையும் நந்தலைவர், செஞ்சுவல் கலித்த செவ்விகொள் வரகின் - செவ்விய மேட்டு நிலத்தே தழைத்த பருவம் வாய்ந்த வரகினது, கௌவை

நாற்றின் கார் இருள் ஓர் இலை - ஒலிக்கின்ற நாற்றினுடைய மிக்க கருநிறமுடைய ஒறறையிலையை, நவ்வி மறி கவ்வி நாட் கடன் கழிக்கும்-மானினது குட்டி தின்று காலை உணவுண்ணுங் கடனைக் கழித்தற்குக் காரணமான, கார் எதிர் தண் புனம் காணில் - கார்ப்பருவத்தை ஏற்றமையானே தண்ணிதாகிய புனத்தைக் காணுங்கால், நீர்திகழ் சிலம்பின் ஓராங்கு அவிழ்ந்த- நீரானே விளங்குகின்ற மலைப்பக்கத்தே ஒருபடித்தாக மலர்ந்த, வெண் கூதாளத்து அம்தூம்பு புதுமலர் - வெள்ளிய கூதாளத் தினது அழகிய உட்டுளையையுடைய புதிய மலர்கள், ஆர்கழல்பு உகுப போல - தங் காம்பினின்றும் கழன்று உதிர்தலைப் போன்று, கைவளை சோர்குவ அல்ல என்பர் கொல் - நின்கை வளைகள் கழன்று வீழ்வன வல்ல என்றோ கருதுவர்?



**விளக்கம்** :—கார்ப்பருவம் வந்தமையின் நந்தலைவர் தண்புனத்தைக் காணுங்கால், ஆண்டு வெண் கூதாளமலர் யாண்டும் ஒருபடித்தாய் மலர்ந்து உதிர்ந்து கொண்டிருப்பதையும் காண்பர். அங்ஙனம் கண்டுழித் தம் பிரிவானே நின் கைவளைகள் இங்ஙனமே சோர்ந்து வீழ்வன என்று எண்ணினராய் விரைந்து மீள்வர் என்று ஆற்றுவித்த படியாம்.

செஞ்சுவற் கலித்த செவ்விகொள் வரகின் என்றும், நவ்விமறி கவ்வி நாட் கடன் கழிக்கும் என்றும் ஏற்ற பெற்றி மாற்றிக் கொள்க.

செவ்வி - பருவம்; ஈண்டு வரகு கதிரீனும் பருவம் என்க. கதிரீனும் பருவத்தே அக்கதிர்க்கு முன்னே வளமுடைய மடல் ஒன்று தோன்றுவது இயல்பு. அம்மடலையே ஈண்டுக் கார் இருள் ஓர்இலை என்றாள். கார் இருள் - கரிய இருள் எனினுமாம். அவ்வோர் இலையே நவ்விமறியின் காலைப் பசியைப் போக்கப்போதியதென்பாள், 'நவ்விமறி ஓர் இலை கவ்வி நாட்கடன் கழிக்கும் கார்' என்றாள். இது கார்ப்பருவத்தின் வளமிகுதி கூறியபடியாம். இனித் தலைவர் இப் பருவத்தே மீண்டு வருவேன் என்று குறித்த ஒரு சொல்லையே பற்றி யாம் இப்போது உயிர் வாழா நின்றேம் என்னும் உள்ளுறைக்கும் 'ஓரிலை கவ்வி நவ்விமறி நாட்கடன் கழிக்கும்' என்றதனை உவமையாகக் கொள்க.

கௌவை: ஒலி; ஈண்டுக் காற்றானே வரகுப்பயிர் சலசலக்கும் ஒலி என்க. நவ்வி - மான். மறி - குட்டி. தண்புனம் என்றதற்குக் காரெதிர் என்றது குறிப்பேதுவாய் நின்றது.

தண்புனங் காணில் புதுமலர் ஆர் கழல்பு உகுவனவும் காண்பர். அங்ஙனம் காணுங்கால் என விரித்துரைத்துக் கொள்க. என்பர் - என்று கருதுவர். 'சோருவ அல்ல என்பர் கொல்?' என்னும் வினா, 'என்னார் சோர்குவ என்பர்' என, உடன்பாட்டுப் பொருளை வலியுறுத்தி நின்றது. ஆர் - காம்பு.

ஆகலின், விரைந்து மீள்வர் நீ ஆற்றுக என்பது குறிப்பெச்சம்.

## பாட்டு - உஅங : தலைவி கூற்று

துறை :—தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவழி ஆற்றாளெனக் கவன்ற தோழிக்கு, 'அவர் பிரிய ஆற்றேனாயினேன் அல்லேன்; அவர் போயின கானத்துத் தன்மையை நினைந்து வேறுபட்டேன்' என்று கிழத்தி சொல்லியது இதன் பொருள் வெளிப்படை.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'நந்தலைவர் பொருள்வயிற் பிரியுங்கால், தந் தாயப்பொருளைச் செலவு செய்து வாழ்வோர் வாழ்பவராகார். நல்குரவாளர் வாழ்க்கை இரவினும் இளிவாம்; ஆகலின் யாம் பொருளீட்டி வருந்துணையும் நீ ஆற்றுக எனக் கற்பித்துச் சென்றமையானே, யான் பிரிவினை ஆற்றியிருக்கின்றேன்; ஆனால், அவர் சென்ற நெறியின் தீமையை எண்ணும் போதோ ஆற்றொணுத் துன்பம் உண்டாகின்றது; யான் என் செய்கோ?' என்று இரங்குகின்றாள்.

## மூலமும் உரையும்

சஉக

உ௩ரு. உள்ளது சிதைப்போர் உளரெனப் படாஅர்
இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவெனச்
சொல்லிய வன்மை தெளியக் காட்டிச்
சென்றனர் வாழி தோழி யென்றும்
கூற்றத் தன்ன கொலைவேல் மறவர்
ஆற்றிருந் தல்கி வழங்குநர்ச் செகுத்த
படுமுடை பருந்துபார்த் திருக்கும்
நெடுமூ திடைய நீரில் ஆறே.

—பாலை பாடிய பெருங்கடுங்கோ.

(இ - ள்.) தோழி—, உள்ளது சிதைப்போர் உளர் எனப்படார் - தாமே தந் தாளான் ஈட்டிச் செலவழியாது தமக்குத் தாயத்தானே உளதாகிய பொருளைச் செலவழிப்பவர்கள் செல்வமுடையோர் என்று அறிஞர்களாற் பாராட்டப்படுவாரல்லர், இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு என - தாமே ஈட்டும் பொருளில்லாதோர் வாழும் வாழ்க்கை இரந்து வாழ்தலினும் காட்டில் இழிவுடையதாம் என்று, சொல்லிய வன்மை தெளியக் காட்டி - நூலோர்களானே கூறப்பட்ட ஆண்மைத் தன்மையை யாம் நன்கு தெளியுமபடி எடுத்துக் கூறி, என்றும் கூற்றத் தன்ன கொலைவேல் மறவர்-எக்காலத்தும கூற்றுவனைப போன்ற கொலைதொழின் மிக்க வேலையுடைய மறவர்கள், ஆற்றிருந்து அல்கி வழங்குநர்ச் செகுத்த படுமுடை - வழியின்கண்ணே தங்கியிருந்து ஆறுசெல்வோரைக் கொன்றமையானே உண்டான புலாலினை, பருந்து பார்த்திருக்கும் - பருந்துகள் தமக்கு இரையாக எதிர்பார்த்திருக்கின்ற, நெடுமூதிடைய நீர் இல் ஆறு சென்றனர் - நெடிய பழைதாகிய நீர் அற்ற வழிகளில் செல்லாநின்றனரே, வாழி - அவர் வாழ்வாராக.

**விளக்கம்** :—அவர் பொருள் வயிற் பிரிந்தமையை அவர் தம் தேற்ற வுரை கொண்டு ஆற்றியிருப்பேனாயினும், அவர் நீரில் ஆறு சென்றமையை உள்ளுந்தோறும் துயரம் ஆற்றொணாது மிகுகின்றது காண்.

இச் செய்யுளின் முதலிரண்டடிகள் சிறந்த செவியறிவுறூஉவாக அமைந்துள்ள அருமையுணர்ந்து இன்புறுக. உள்ளது என்றது, முன்னோர் ஈட்டிய செல்வத்தை. அச்செல்வத்தை முதலாகக் கொண்டு வினை செய்து ஊதியத்தைச செலவு செய்வோரே உளர் எனப்படுவர் என்பது கருத்து. உளா - செல்வம் உளவாகப் பெற்றோர். இல்லோர் என்றது, ஈண்டுத் தாளாற்றித் தந்த பொருளில்லோரை என்க. இது பற்றி இறையனார் களவியலுரையாசிரியர் கூறுங் கருத்தும் ஈண்டு நினைந்தின்புறற்பாலது. அது வருமாறு.

“இனிப் பொருட் பிரிவென்பது பொருளிலனாய்ப் பிரியும் என்பதன்று; தன் முதுகுரவராற் படைக்கப்பட்ட பல்வேறு வகைப்பட்ட



பொருளெல்லாங் கிடந்தது மன்; அதுகொடு துய்ப்பது ஆண்மைத்தன்மையன்றெனத் தனது தாளாற்றலாற் படைத்த பொருள்கொண்டு வழங்கி வாழ்தற்குப் பிரியுமென்பது. அல்லதூஉம், தேவர் காரியமும் பிதிரர்காரியமும் தனது தாளாற்றலாற் படைத்த பொருளாற் செய்தன, தனக்குப் பயன் படுவன; என்னை? தாயப் பொருளாற் செய்தது தேவரும் பிதிரரும் இன்புறார் ஆதலான், அவர்களையும் இன்புறுத்தற்குப் பிரியும் என்பது” எனவரும்.

இரத்தற்கண் இல்லங்கடோறும் செல்லலும், தக்காரைக் கண்டவிடத்தே இரப்புரை கூறலும் முதலிய சிறு முயற்சிகள் உளவா தலான், இல்லோர் வாழ்க்கை இரத்தலினும் இளிவு எனப்பட்டது. தலைவன், உடைமையதுயர்ச்சியும், இன்மையதிளிவும் இங்ஙனம் நூலோர் கூறுப என எடுத்துக் காட்டினனாகலின், 'சொல்லிய வன்மை தெளியக் காட்டி' என்றாள். ஆன்றோரானே சொல்லப்பட்ட வன்மை என்க. வன்மை - ஆண்மைத் தன்மை. எண்பொருளவாகச் செலச் சொல்லினன் என்பாள், 'தெளியக்காட்டி' என்றாள். தெளியக் காட்டின மையின் யான் அவர் பிரிந்தமைபற்றி வருந்தேன் என்பது குறிப் பெச்சம்.

தனிமையாலே தான்படுந்துயரத்தையும் மறந்து, 'ஆறலை கள்வர் மிக்க, நீரற்ற பாலைநிலத்தே எம்பெருமான் எங்ஙனம் செல்வரோ? அவர்க்கு ஏதம் என்னுறுமோ?' என்று கையற்றுக் கலங்குமிது தலையன் பின் மெய்ப்பாடென்க.

தப்பாது கொல்வோர் என்பாள், கூற்றத்தை உவமை எடுத்தோதி னள். மறவர் ஈண்டுப்பாலைநிலமாக்களாகிய ஆறலைகள்வர். அல்கியி ருந்து எனமாறுக நெடுமையும், முதுமையும், நீரின்மையும் ஆறலைகள் வர் உண்மையும், ஏதந்தரும் ஏதுக்களாம்.

## பாட்டு - உஅச : தோழி கூற்று

துறை :—வரைவிடைத் தோழி கிழத்திக் குரைப்பாளாய் உரைத்தது அஃதாவது, வரைவிடைவைததுத் தலைவன்பொருள் வயிற்பிரிந்தபொழுது, ஊரலர் அஞ்சி வருந்திய தலைவியைத்தேற் றும்பொருட்டுத் தோழி ஊரினா மேலிட்டுரைத்தது.

இதன்கண், 'இனனுமைதரும் இச்சிற்றாரில்

வாழும் மாக் கள் தமக்கு எனச் சிறிதும அறிவில்லா தார் போலும்! தந்தலை வன் அறவோனுயினும், அல்லனுயினும், அவற்ருல் வரும் நலந்
தீங்குகள நமக்கே உரியன; இவர்க்கு வரும் ஏதம் யாது? நம்மை எற்றுக்குப் பழிக்கின்றனர். இவ்வறிவிலிகளின் செயலை யாம் பொருளாகக் கொள்ளல் வேண்டா?' என்று கூறுகின்ருள்.

உ௪௯. போருத யானைப் புகர்முகங் கடுப்ப
மன்றத் துறுகல் மீமிசைப் பலவுடன்

ஒண்செங் காந்தள் அவிழும் நாடன்

மூலமும் உரையும்

சஉ௩

அறவ ணுயினும் அல்ல ணுயினும்
நம்மே சுவரோ தம்மிலர் கொல்லோ
வரையிற் ருழ்ந்த வால்வெள் ளருவி
கொன்னிலைக் குரம்பையி னிழிதரும்
இன்னு திருந்தவிச சிறுகுடி யோரே.

—மிளைவேள் தித்தனுர்.

(இ - ள்.) பொருத யானைப் புகர்முகம் கடுப்ப - போர் செய்த யானையினது புள்ளிகளையுடைய முகத்தைப் போல, மன்றத் துறுகல் மீமிசை - அம்பலத்தின் கண்ணதாகிய பொற்றைக் கல்லின் மேலே, ஒண் செங் காந்தள் அவிழும் நாடன்- ஒள்ளிய செங்காந்தளின் பூக்கள் மலரும் நாட்டையுடைய தலைவன், அறவன் ஆயினும் அல்லன் ஆயினும் - வாய்மையுடையோன் ஆயினும் அல்லன் ஆயினும், வரையில் தாழ்ந்த வால் வெள் அருவி - மலையினின்றும் தாழ்ந்து வீழுகின்ற தூய வெள்ளிய அருவிநீர், கொன் இலைக் குரம்பையின் இழிதரும் - வீணே இலைவேய்ந்த குடிலின்கண்ணே இறங்காநின்ற, இன்னாது இருந்த - நமக்கின்னாமையுளதாகிய, இச்சிறுகுடியோர் - இச் சிற்றூரின்கண் வாழுபவர், தம்மிலர் கொல் - தம்மைத்தாங் கொண்டொழுகும் வன்மையிலர் போலும், நம்மேசுவர்-தொடர் பற்ற நம்மைப் பழியாநிற்பர்.

**விளக்கம்**:—'ஏ, ஏ, இவளொருத்தி; அறமிலியைக் காதலித்துப் பட்டது பார்மின்!' என வம்பலர் அலர் தூற்றலின், அவன் அறவோன் ஆயினும், அல்லன் ஆயினும் இவர்க்குற்றதென்? என்பாள், 'அறவோனாயினும் அல்லனாயினும் நம்மேசுவர்' என்றாள்.

மலையிடத்தே வீழும் வெள்ளருவி பயன்மிக்க பொழிலிடத்தே வீழாது கொன்னே இலைக்குரம்பையின் வீழ்ந்தாங்கு இவர்களும் பயனில்லாது நம்பழி தூற்றாநின்றனர் என்பது குறிப்பு. கொன்- பயனில்லாதே என்னும் பொருளில் வந்தது;

"அச்சம் பயமிலி காலம் பெருமை என்று
அப்பால் நான்கே கொன்னைச் சொல்லே."
(தொல்-இடை-௬)

எனவரும் தொல்காப்பியத்தானே அதற்கப் பொருளுண்மை யுணர்க. இங்ஙனம் கூறுவழி உள்ளுறைக் கேலாமையுணர்க. அசசப் பொருட்டாக்கி உரைப்பாருமுளர்.

'வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்தோன் அறவனுயினும் அல்லன் ஆயினும் ஆகுக; அதனல் இவர்க்குற்ற தென்னே?' வாளா பிறர்பழி கூறும் மடவோர் தமக்கென்றறிவிலர் என்று அலர் தூற்றுவோரின் அறியாமை காட்டி, அவர் அலர்க்கு யாம் அஞ்ச வேண்டா' என்று தலைவியைத் தேற்றியவாருகக் கொள்க.



இனி, நாடன் அறவன் ஆயின் நம்மைப் போற்றுதல் வேண்டுமே! அதுசெய்யாது அவ்வழியும் நம்மேசுவர், அல்லனுயின் அவனையே ஏசுதல் வேண்டுமே! அது செய்யாது, அப்பொழுதும் நம்மேசுவர், இவர் தம்மிலர் என்று கொள்ளின் சாலச் சிறக்கும்.

தம்மிலர் - தம்மைத் தாம் கொண்டொழுகும் ஆற்றலிலர் என்க. "பெருமையும் தன்னைத் தான் கொண்டொழுகின் உண்டு" (கஎச) எனவரும் குறளானும் இக்கருத்துணர்க.

துறுகன் மிசைச் செங்காந்தள் மலர்ந்திருத்தல், பொருது புண் பட்ட யானை முகத்திற்கு உவமை. பொருதற்றொழில் இல்லாத துறு கல்லைப் புண்ணுடைய முகம்போலச் செஙகாந்தள் தோன்றச்செய்தது போலப் பழியற்ற நம்மைப் பழியுடையராகக் கூறுவர் என்பது குறிப்பாகக் கொள்க.

## பாட்டு - உஅரு : தலைவி கூற்று

துறை:—பருவங் கண்டு வேறுபட்ட விடத்து வற்புறுத் துங் தோழிக்கு வன்புறை எதிரழிந்து தலைமகள சொல்லியது. அஃதாவது, தலைவன் பிரிந்த காலத்தே குறித்துச்சென்ற பருவம் வந்தும, அவன் வாராமையானே வருநதிய தலைவியை நீ ஆற்றியிருத்தல் வேண்டும் என வற்புறுத்திய தோழியோடு பிணங்கித் தலைவி கூறியது.

இதன்கண், தோழியைநோக்கி, 'நீ ஆற்றுக என்கின்றனை; தலைவர் மீண்டு வருவதாகக் கூறிச் சென்ற பருவமோ வந்து விட்டது. அப்பருவத்திற்குரிய நாட்களும் பலப்பல கழிந்தன. மலையிறந்தோர் வந்தாரிலர் அவர், எவ்விடத்திருக்கின்றனரோ அறிகின்றிலேன்; இனி யாங்ஙனம் யான் ஆற்றுவன்' என்பது படக் கூறுகின்றாள.

உ௫௫. வைகல் வைகல் வைகவும் வாரார்
எல்லா எல்லை எல்லையுந் தோன்றார்
யாண்டுளர் கொல்லோ தோழி ஈண்டிவர்
சொல்லிய பருவமோ இதுவே பல்லூழ்
புன்புறப் பெடையொடு பயிரி யின்புற
இமைக்கண் ஏதா கின்றோ ஞெமைத்தலை
ஊனசைஇ யொருபருந் திருக்கும்

வானுயர் பிறங்கல் மலையிறந் தோரே.

—பூதத் தேவனார்.

(இ - ள்.) தோழி, பல் ஊழ் புன் புறப் பெடையொடு பயிரி-பல முறையும் புல்லிய முதுகினையுடைய பெண் புறுவை

மூலமும் உரையும்

சஉ௫

அழைத்து, இமைக்கண் - இமைப்பொழுதளவினுள், இன்புறவு ஏதாகின்று-இனிய ஆண்புறு எவ்வளவு இன்பத்தை யுடையதாகின்றது காண், ஞெமைத்தலை ஊன் நசைஇ ஒரு பருந்து இருக்கும்-ஞெமைமரத்தின் உச்சியில் இறந்தோரது தசையைத் தின்ன விரும்பி ஒற்றைப்பருந்து இருக்கின்ற, வான் உயர் பிறங்கல் மலை இறந்தோர்-விசும்பைத் தீண்டும்படி உயர்ந்த விளக்கமுடைய மலைகளைக் கடந்துசென்ற நந்தலைவர், யாண்டுளர் கொல் - எவ்விடத்தே உறைகின்றனரோ அறிகிலேன், ஈண்டு இவர் சொல்லிய பருவமும் இதுவே-இவ்விடத்தே தாம் மீண்டு வருவம் எனக் குறித்துக் கூறிய பருவமும் இதுவே பிறிதன்றே, வைகல் வைகல் வைகவும் வாரார் - இப்பருவத்தின்கண் நாள் தோறும்

விடியற்காலம் போய்ப் பகல் வரா நிற்பவும் அவர் வந் திலர், எல்லா எல்லேயும் தோன்ருர்-எல்லாப் பகலின் எல்லேயா கிய மாலேப்பொழுதுகளினும் அவர் காணப்பட்டிலர், யான் எங்ஙனம் ஆற்றுகேன்.

**விளக்கம்**:—பருவம் வந்தபின்னர் ஒவ்வொருநாளும் காலேயிலிருந்து இரவுவருந்துணேயும் அவன் வரும் வழிமேல் விழிவைத்து எதிர்பார்த் திருப்பது தோன்ற, வைகல்வைகல் வைகவும் வாரார்; எல்லா எல்லேயும் தோன்ருர்,' என்ருள்.

வைகல் - விடியற் காலம், நாள், நாட்கழிவு என்னும் பலபொருள் ஒருசொல். வைகலும் என உம்மை விரித்தோதுக. நாள்தோறும் விடியற்காலம் போய்ப் பகல் வரவும் என்க. தலேவன் வருகின்ற நாள் எந்நாளாயினும் அந்நாளின் மாலேப்போதிற்குள் வருதல் மரபா கலின், 'எல்லா எல்லே எல்லேயும் தோன்ருர்' என்ருள். எல்லே-பகல். எல்லேயின் எல்லே என்க. பகலின் முடிவாகிய மாலேப்பொழுது எனபது கருதது.

இஙஙனம் நாள்நாளாக அவர் குறித்த பருவமும் பெரும்பாலும் கழியாநின்றதே என்பாள், 'அவர் சொல்லிய பருவமும் இதுவே' என்ருள். ஒருமைத்தலே ஊனசை ஒருபருந்திருக்கும் என்றது, சென்ருேர் முகப்பக் கிடவாப் பொருணசையானே தலேவர் நம்மை மறந்து தனித்துறைவாராயினர் என்னும் குறிப்புடையதாம். யாண்டுளர் கொல்லோ, என்றது, ஒரு தூதானும் அவர் இருக்கு மிடத்தை எமக்கு அறிவித்திலரே என்று வருந்தியபடியாம். ஒரு பருந்து - ஒற்றைப் பருந்து. துணேயினீங்கித் தனித்துறையும் பருந்து என்றவாறு. ஆகலின், யான் ஆற்றுவதெங்ஙனம் எனத் தோழியைக் கடிந்தனள் என்க.

ஆண்புறு பெண்புறவைப் பயிரி இன்புறுதல், காமவிழைவினைத் தூண்டும் நிகழ்ச்சியாதல் உணர்க.

## பாட்டு - உஅசு : தலைவன் கூற்று

துறை —(க) இரந்து பின்னின்ற கிழவன் குறைமறுமற் கூறியது. அஃதாவது, தலைவியைத் தோழி வாயிலாகப் பெறு



தற்கு முயலுந் தலைவன், அவள் குறைமறுக்காது இயையும் பொருட்டுத் தனக்கும் தலைவிக்கும் கூட்டமுண்மை குறிப் பாற் றோன்றுமாறு கூறியது.

(உ) பாங்கற்குச் சொல்லியதூஉமாம்.

இதன் கண், 'முள்ளெயிற்றையும், அமிழ்தமூறும் செவ் வாயையும், ஆரநாறும் அறல்போற் கூந்தலையும், பேரமர் மழைக் கண்ணையும் உடைய தலைவியின் மூரல்முறுவலோடு, செருக்கின நோக்கை இப்போது யான் நினைவு மாத்திரையானே நுகர்வேனா கின்றேன்' என்று

தலைவன் தோழிக்குக் கூறுகின்றான்.

உ அகூ. உள்ளிக் காண்பென் போல்வன் முள்ளெயிற்

றமிழ்த மூறும்அஞ் செவ்வாய்க் கமழகில
ஆர நாறும் அறல்போற் கூந்தல்
பேரமர் மழைக்கட் கொடிச்சி
மூரல் முறுவலொடு மதைஇய நோக்கே.

—எயிற்றியனார்.

(இ - ள்.) முள் எயிற்று அமிழ்தம் ஊறும் அம் செவ் வாய் - முட்கள் போன்ற கூரிய எயிற்றின்கண்ணே அமிழ்தம் ஊறுகின்ற அழகிய சிவந்த வாயினையும், கமழ் அகில் ஆரம் நாறும் அறல் போல கூந்தல் - பரவாநின்ற அகிற்புகையும் சந்தனப்புகையும் மணக்கின்ற கருமணல் போன்ற கூந்தலையும், பேர் அமர் மழைக்கண் - பெரிய விருப்பத்தைச்செய்யும் குளிர்ந்த கண்களையும் உடைய, கொடிச்சி மூரல் முறுவலொடு

மதைஇய நோக்கு - தலைவியினது புன்னகையோடு செருக்கிய பார்வையை, உள்ளிக்காண்பென் போல்வன் - நினைத்தே காணுவன் போலும்.

**விளக்கம்** :—அமிழ்தம் என்றது, வாயூறலை. கமழ்தல் - பரவுதல். அகில் ஆரம் என்பன அவற்றாலாய புகைக்கு ஆகுபெயர். அமர் - விருப்பம். மழை - குளிர்ச்சிக்கு உவமை. மூரன் முறுவல் - புன் சிரிப்பு. மதைஇய - செருக்குற்ற.

அமிழ்தமூறும் செவ்வாய் என்றதும், ஆரநாறும் அறல் போல் கூந்தல் என்றதும் அவையிற்றைத் தான் நுகர்ந்தமையைக் குறிப் பானுணர்த்திற்று. இது, முன்னுறு புணர்ச்சி முறையுற மொழிந்தமை யாதல் காணக.

பண்டு நுகர்ந்து கண்ட யான், இன்று நினைவு மாத்திரையானே காண்பவனாகின்றேன் என்பான். 'உள்ளிக் காண்பென் போல்வன்' எனறான.

## மூலமும் உரையும்

**சூஉள்**

மூரல் முறுவலொடு மதைஇய நோக்கென்றதும், அவளும் என் பாற் பேரன்புடையள் எனக் குறிப்பான் உணர்த்தியவாறும். என்னை? இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைவியின் உடன்பாட்டுக் குறிப்புக்கள் இவைகளே ஆகலின், அவள் குறிப்பினைத் தான் அறிந்தமையையும், அறிந்தவழி அவளது மூள்ளெயிற் றமிழ்தம் பருகினமையும், அவள் கூந்தலே பாயலாகக் கிடந்தமையும் இச்செய்யுள் குறிப்பான் உணர்த் தலான் என்க. இங்ஙனம் ஒன்றுபட்ட எம்மைக் கூட்டுதலன்றிச் சேட்படுத்தல் நினக்குத் தகவன்றென்று, இது குறைமறுமற் கூறியதா தல் அறிக.

## பாட்டு - உஅஎ : தோழி கூற்று

துறை :—பிரிவிடை வேறுபட்ட தலைவி நம்மைத் துறந்து,
வாரானென்று கவன்றாட்குப் பருவங் காட்டித் தோழி வருவர் எனச் சொல்லியது. அஃதாவது, தலைவன் பிரிந்துழி, 'இனி நம்பால் அவர் வருவார் அல்லர்', என்று பெரிதும் வருந்திய தலைவிக்குத் தோழி, தலைவர் மீண்டு வருதற்குரிய கார்ப்பருவம் வந்தமை காட்டி, 'விரைவில் வருவர்' என ஆற்றுவித்தது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'உதோ வானத்தின்
கண்ணே ஏறிச் செல்லமாட்டாதனவாய்ச் சூல் கொண்ட மகளிர் போல, நீர் கொண்டு குன்றநோக்கி முகில்கள் செல்கின்றன; இக் கார்ப்பருவத்தைக் கண்டு வைததும், நந்தலைவர் இனி ஆண்டுத் தங்குவாரல்லர்; விரைவில் வருவர்' என ஆற்றுவிக் கின்றாள்.

உ அஎ. அம்ம வாழி தோழி காதலர்
இன்னே கண்டுந் துறக்குவர் கொல்லோ
முந்நாற் றிங்க ணிறைபொறுத் தசைஇ
ஒதுங்கல் செல்லாப் பசும்புளி வேட்கைக்
கடுஞ்சூல் மகளிர் போலநீர் கொண்டு
விசும்பிவர் கல்லாது தாங்குபு புணரிச்

செழும்பல் குன்றம் நோக்கிப்
பெருங்கலி வான மேர்தரும் பொழுதே.
—கச்சிப்பேட்டு நன்னாகையார்.

(இ - ள்.) அம்ம வாழி தோழி - தோழியே கேட்பாயாக, முந்நால் திங்கள் நிறை பொறுத்து அசைஇ - பன்னிரண்டு திங்கள் நிரம்பிய கருவினைத் தாங்கித் தளர்வெய்தி, ஒதுங்கல் செல்லா - நடக்கவியலாத, பசும் புளி வேட்கைக் கடுஞ்சூல் மகளிர் போல - பசிய புளிச்சுவையின்கண் விருப்பத்தையுடைய நிலைச்சூலினையுடைய மகளிர்களைப் போன்று, நீர் கொண்டு -



நீராகிய சூலினைக் கொண்டு, விசும்பு இவர்கல்லாது - வானத்தின் கண்ணே ஏறமாட்டாது, தாங்குபு புணரி - அச்சூலினைத் தாங்கி ஒன்றனோடு ஒன்று சேர்ந்து, செழும் பல் குன்றம் நோக்கி - செழித்துள்ள பலவாகிய மலைகளை நோக்கி, பெருங்கலிவானம் ஏர்தரும் பொழுது - பெரிய ஆரவாரமுடைய முகில்கள் எழா நின்ற இக் கார்ப்பருவத்தினை, இன்னே கண்டும் - இப்பொழுதே

கண்டுவைத்தும், காதலர் துறக்குவர்கொல் - நின்பாற் காதல்
மிக்குடைய தலைவர் நின்னைத் துறந்தமைவரோ? விரைவில் மீண்டு வருகுவர்.)
(அமையார்,

விளக்கம் :—அம்ம - கேட்பித்தற்கண் வந்தது. காதலர் என்றது
நின்பாற் காதல் மிக்குடைய தலைவர் என்னும் பொருட்டாய்த் துறவாமைக்குக் குறிப்பேதுவாயிற்று. இன்னே - இப்பொழுதே. கண்டும் என்றது, கண்டபின்னரும் என்றவாறு. அவர் கூறிச் சென்ற பருவமிஃதாகலின், இதனைக் கண்டபின்னர் ஆண்டுத் தங்குவாரல்லர். இதுகாறும் அவர் வாராமைக்குக் காரணம் இப்பருவ வரவு காணாமையே எனறவாறு.

முந்நாற் றிங்கள் - பன்னிருதிங்கள். தலைசிறந்த கரு, பன்னிரு திங்கள் வயிற்றின்கண் இருந்து முதிரும் என்பதொரு கொள்கையும் உண்டு. இதனை,

"பன்னிரு திங்கள் வயிற்றிற் கொண்ட அப்பாங்கினால்
என்னிளங் கொங்கை அமுத மூட்டி எடுத்துயான்
பொன்னடி நோவப் புலரியே கானிற் கன்றின் பின்
என்னிளஞ் சிங்கத்தைப் போக்கினேன்

எல்லே பாவமே.' எனவரும் பெரியாழ்வார் பாசுரத்தானும் உணர்க. (௩. ௨ : ௮)

நிறை: கருவிற்கு ஆகுபெயர். அசைஇ - தளர்ந்து - நிறைந்த சூலுடைய மகளிர் நடைதளர்தல் இயல்பு. ஒதுங்கல் - நடத்தல்.

சூல்மகளிர் புளிச்சுவையை விரும்புவர் என்பதனை,

"நீர் உறை கோழி, நீலச சேவல்
கூருகிர்ப் பேடை வயாஅ ஊர
புளிங்காய் வேட்கைத் தன்று நின்
மலர்ந்த மார்பிவன் வயாஅ நோய்க்கே.'

(ஐங். ருக) எனவரும் ஐங்குறுநூற்றானும் அறிக.

கடுஞ்சூல் - தலைச்சூல். மேகங்கள் சூலின் பொறையாலே விசும்பி வர மாட்டாது குன்றம் நோக்கிச சென்றன என்க. தலைவன் நெடிது நாள் நின்னைப்பிரிந்துறைதலானே தன் உளத்தே முதிர்ந்த காமத்தின் பொறையாலே ஆண்டுறைதலாற்றாது நின்னை நோக்கி விரைந்து வருவன் என்னும் குறிப்பும் கொள்க. வானம் - ஆகுபெயர்.

பெருங்கலி வானம் ஏர்தரும் பொழுது என்றது, அவர் கூறிச் சென்ற பருவமும் இப்போது தான் தொடங்குகின்றது, வானம்

மூலமும் உரையும்



பெருங்கலியும் உடைமையின் அவர் இன்னே இதனைக் காண்பர் என்பதுபட நின்றது.

# பாட்டு - உ அ அ : தலைவி கூற்று

துறை :—தலைமகனது வரவுணர்ந்து, நம்பெருமான் நமக்கு அன்பிலன் என்ற தோழிக்குக் கிழத்தி யுரைத்தது. அஃதாவது பிரிந்த தலைவன் வரவினை அறிந்த தோழி, அவன் வரவறியாதாள் போன்று தலைவனை இயற்பழித்துரைக்க, அது பொறுதாளாய்த் தலைவி இயற்படமொழிந்தது.

இனி, இங்ஙனம் கொள்ளாது, 'நம்பெருமான் நமக்கு அன்பிலன்' என்ற தோழிக்குத் தலைவன் வரவுணர்ந்த தலைவி இயற்படமொழிந்தது என்று மாறிக்கூட்டி வரவுணர்தலைத் தலைவிக் காக்குவாருமுளர் வரவுணர்ந்து இயற்படமொழிந்தாளெனல் தலையன்பாகாமை உணர்க.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'நமக்கினியராகிய தலைவர் செய்யும் இன்னாமையும், முடிவில் நமக்கு இனிமையே ஆகுங் காண். கேண்மையுடையோர் இயற்றும் இன்னாமை தரும இன்பத்திற்குத் துறக்க வின்பமும நிகராகமாட்டாது,' எனத் தலைவனைப் பாராட்டுகின்றாள்.

உ௯௯. கறிவளர் அடுக்கத் தாங்கண் முறியருந்து
குரங்கொருங் கிருக்கும் பெருங்க னாடன்
இனிய னாகலி னினத்தி னியன்ற
இன்னா மையினு மினிதோ
இனிதெனப் படூஉம் புத்தே ணாடே.

—கபிலர்.

(இ - ள்.) தோழி, கறிவளர் அடுக்கத்து ஆங்கண் - மிளகுக்கொடி வளராநின்ற பக்கமலையாகிய அவ்விடத்தே, முறி அருந்து குரங்கு ஒருங்கு இருக்கும் - தளிரைத் தின்னுகின்ற குரங்கு ஒருங்கே கூடியிராநின்ற, பெருங்கல் நாடன் இனியன் ஆகலின் - பெரிய மலைநாட்டையுடைய தலைவன் நம்மைப் பிரிந்தவிடத்தும் நமக்கு இனிய அன்புடையன் ஆதலானே, இனத்தின் இயன்ற இன்னாமையினும் - உறவுடையாரானே தோன்றிய இன்னாமையைக் காட்டினும், இனிதெனப்படும் புத்தேள் நாடு இனிதோ - இனியதென்று நூல்களானே
உலகம் இனிதாகுமோ ?
கூறப்படும் கடவுள்

**விளக்கம்** :—அன்புடையாரானே செய்யப்படும் நன்மையே அன்றித் தீமையும் அன்பு செய்யப்பட்டார்க்குப் பேரின்பமே நல்குவதாம்.

நம் தலைவரோ நம்பாற் பேரன்புடையர். அவர் செய்வன நமக்கு இனியவேயாம் என்று இயற்பட மொழிந்தவாறு.

எல்லாம்

இது, 'தலைவன் அன்பிலன்; கொடியன்,' தோழியை மறுத்துரைத்தது என்க.

என இயற்பழித்த

செயல்கள் இனியன வாதலும் இன்னாவாதலும் செய்வோரின் நெஞ்சத்தின் பண்பாலேயாகும்; ஆதலின், நந் தலைவன் செயல் யாதாயினும் நம்பால் அன்புடைமையாலேயே அச் செயல் நிகழ்தலின் அஃதினிதேயாம். அன்புடையார் செயல் ஒரோவழித் துன்பம் பயப்ப தாயினும் அத் துன்பமே மிகச சிறந்த இன்பமாகும். இவ் வின்பத் திற்குப் புத்தேளுலகு தரும் இன்பமும் ஈடாகாது என, ஈண்டுத் தலைவி கூறும் நுணுக்கம் பெரிதும் இன்பந் தருவதாம்.

இனத்தோர் ஒரோவழி இன்னாமை செய்வதூஉம் மேலும் இன்பம் உண்டாக்குதல் கருதியே ஆகும். ஆகவே, அவ் வின்னாமையே இன்பத்திற்குக் காரணமாகும். அவ் வின்பத்திற்குப் புத்தேளுடும ஒவ்வாது என்றாள். அஃதாவது, தலைவன் பொருளீட்டற்பொருட்டு நமக்கு இன்னாமை செய்து பிரிந்து போயினர். அவர் நமக்கு இப்பொழுது இன்னாமை செய்தாராயினும் அவர் பொருளீட்டியவழி அப் பொருள் இல்லறம் இனிதே நடத்தற்குக் காரணமாகும். அறததானீட்டிய பொருளானே யாம் செய்யும் அறத்தான் வரும் இன்பமே மெய்யின்பமாம். அறத்தின் பயனைத் தாமே நுகர்தலாகிய புத்தேளுட் டின்பத்தினும் ஈத்துவக்கும் இவ் வின்பம் ஆற்றவும் பெரிதாயிற்று என்றுளாயிற்று. இதனால் இனத்தினியன்ற இன்னாமை புத்தேளுட் டின்பத்தினும் பெரிய இன்பமாதலை நுண்ணிதின் உணர்க. தளிர் அருந்தும் குரங்கு மிளகுத் தளிரையும் தின்னுதலும், அத் தளிர் உறைப்புச சுவையுடையதாயினும் ஏனைத் தளிரினும் உடலாக்கந் தருவதும்போல, யாமும் தலைவன் செயல்களிற் சில துன்பந் தருவதாயினும் அதுவே ஆக்கந் தருவதாம் என்று அமைதல்வேண்டும் எனபாள், 'கறிவளர் அடுக்கத்து ஆங்கண் முறியருநது குரங்கு ஒருஙகு இருக்கும்,' என்றாள்.

## பாட்டு - உ அகூ : தலைவி கூற்று

துறை:—காலங் கண்டு வேறுபட்டாளெனக் கவன்ற தோழிக்கு, 'காலத்து வந்திலர் என்று வேறுபட்டேனல்லேன்; அவரைப புறத்தார் கொடியர் என்று கூறக்கேட்டு வேறுபட்டேன்,' என்று தலைமகள் சொல்லியது. அஃதாவது, தலைவன் குறித்துச் சென்ற பருவம் வந்தும், அவன் வந்திலன் என்று தலைவி ஆற்றாளாகின்றாள் என்று கருதிக் கவலையுற்ற தோழிக்குத், தலைவி, 'யான் வருந்துவது பருவம் வந்தும் அவர் வந்திலாமைக்கன்று; அவரை ஊரினர் கொடியர் என்று பழிதூற்றுதல் கேட்டு வருந்துகின்றேன்,' என்று கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'வளர்பிறைபோல நாடோறும் வளர்ந்து என்னை நலியாநின்ற காமநோயோடே

௧

பொருந்தி, நந் தலைவரின்மையானே யான் பெரிதும் வருந்துவது மல்லாது, அவர் திறத்து இரங்குகின்ற என்னைக் காட்டினும், என் திறத்து இவ்வூர் பெரிதும இரங்கி அவரைப் பழி தூற்றுகின்றது, அதற்கே யான் ஆற்றேனுகின்றேன்,' என்கின்றாள்.

உ௪௧. வளர்பிறை போல வழிவழிப் பெருகி
இறைவளை நெகிழ்த்த எவ்வ நோயொடு
குழைபிசைந் தனையே மாகிச் சாஅய்
உழையர் அன்மையின் உழப்ப தன்றியும்
மழையுந் தோழி மான்றுபட் டன்றே
பட்ட மாரி படாஅக் கண்ணும்
அவர்திறத் திரங்கு நம்மினும்
நந்திறத் திரங்குமிவ் வழுங்கல் ஊரே.
—பெருங்கண்ணனூர்.

(இ - ள்.) தோழி—, உமையர் அன்மையின் வளர் பிறை போல வழி வழிப் பெருகி - நங் காதலர் நம் பக்கத்தில்லாமை யானே ஒளிப்பக்கத்தே நாடோறும் வளராநின்ற பிறையைப் போன்று மேலும மேலும் பெருகி, இறை வளை நெகிழ்த்த எவ்வ நோயொடு - முன்கையின்கட் செறித்த வளையலை நெகிழச் செய்த துன்பமாகிய காம நோயோடே, குழை பிசைந்து அனையேம் ஆகிச் சாஅய் - தளிரைப் பிசைந்தாற்போன்ற நிலையினை யுடையேமாகி மெலிந்து, உழப்பது அன்றியும் - யாம் துயருழப் பதல்லாமலும், மழையுமமான்று பட்டன்று - இம் மழையும் மயங்கிப் பெய்யாநின்றது, பட்டமாரி படாஅக் கண்ணும் - இங்ஙனம பெய்யும மழை தோன்றுமுன்பே, அவர் திறத்து இரங்கும் நம்மினும் - அவர் பொருட்டு வருந்துகின்ற நம்மைக் காட்டி னும், இவ் அழுங்கல் ஊர் நம் திறதது இரங்கும் - கலக் கத்தையுடைய இவ் வூரினர் நம் பொருட்டு இரங்காநின்றனர்.

**விளக்கம்** :—தனது வருத்தங் கண்டு கவல்கின்ற தோழியையே

ஈண்டு அழுங்கல் ஊர் என்றாள். ஊர் என்பது ஊரிலுள்ளார்க்கு ஆகுபெயராய் நின்று குறிப்பானே தோழியை உணர்த்திற்று.

தலைவியின் நிலைக்கு இரங்குந் தோழி, இவள் இவ்வாறு ஆற்றாமை யுடையளாம்படி பருவம் வந்தும் வாராதாராயினர் தலைவர். அவர் கொடியர் எனக் கூறிக் கவன்றமையின், அவர்பொருட் டிரங்கும் என்னினும் என் திறத்து நீ பெரிதும் இரங்குகின்றாய் என்பாள், 'அவா திறத்திரங்கு நம்மினும் நந்திறத்து இரங்கும் இவ்வூர்' என்றாள். அழுங்குதல் - மிகவும் கலக்கமெய்தல்.

"அவலக் கவலை கையாறு அழுங்கல்." (மணி-சு: கஉ)
என்புழியும் இஃதப் பொருட்டாத லுணர்க.

சஙஉ குறுந்தொகை

இறை-முன்கை. எவ்வம் - துன்பம். நோயொடு குழைபு இசைந்து அனையமாகி எனக் கண்ணழித்து காமநோயாற் குழைந்துருகி அத னோடு ஒன்றுபட்டாற் போன்றன மாகி எனினுமாம். சாஅய்-மெலிந்து. உழையர் - பக்கத்திலிருப்போர். தோழி மழை பொழிந்தமை கண்டு இது கார்ப்பருவம் என்றும், அவர் வந்திலர் என்றும் கவன்றாளாகலின், இது பருவ மழையன்று வம்பமாரி என்பாள், 'மழையும் மான்று பட்டன்று' என்றாள். மான்று - மயங்கி. பட்டன்று - பட்டது; பெய்தது என்றபடி.

எனவே, அவர் திறத்து யான் வருந்துவதினும் பார்க்க எந் திறத்துப் பெரிதும் வருந்தி வம்பமாரியைக் காரென மதித்து அவரைப் பழி தூற்றும் நின் செயலைக் கருதியே யான் இப்பொழுது ஆற்றே னுகின்றேன் என்பது குறிப்பு.

## பாட்டு - உகூ0 : தலைவி கூற்று

துறை :—வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் அழிவுற்றுச் சொல்லியது.

அஃதாவது, தலைவன் பிரிந்து சென்ற பின்னர் வருந்திய தலைவியை, 'நீ ஆற்றுதலே அறிவுடைமை,' எனத் தோழி வற்புறுத்தினளை, 'நீ காமத்தின் இயல்பறியாது கழறுகின்றனை,' என்த தலைவி கடிந்து கூறியது.

இதன்கண், தலைவி தோழி கேட்ப முன்னிலைப் புறமொழி யாக, "காம நோயைப் பொறுத்திரு,' என்று என்னைச் சிலர் வற்புறுத்துகின்றனர். அவர் அந் நோயின் இயல்பை உணர்ந் திலரோ! அல்லது அதனைத் தாங்குமளவு வலிமிக்காரோ அறிகி லேன்; யானோ என் காதலரைக் காணுதவிடத்து, துயரம் மிக்க நெஞ்சத்தோடு நீரின்கண் நுரை மெல்ல மெல்ல அழிந்து இல்லையானாற்போல அழிந்து இல்லை யாகின்றேன்," என்று கூறுகின்றாள்.

உ௱௦. காமந் தாங்குமதி யென்போர் தாமஃ
தறியலர் கொல்லோ அனைமது
கையர்கொல்
யாமெங் காதலர்க் காணே மாயிற்
செறிதுனி பெருகிய நெஞ்சமொடு பெருநீர்க்
கல்பொரு சிறுநுரை போல
மெல்ல மெல்ல இல்லா குதுமே.

—கல்பொரு சிறுநுரையார்.

(இ - ள்.) காமம் தாங்குமதி என்போர் அஃது அறியலர்

கொல் அனை மதுகையர் கொல் - நீ காம நோயைப் பொறுத்திரு என்று எம்மை வற்புறுத்துவோர், அந் நோயின் இயல்பை அறியாதவரோ அன்றி அத்துணை வலிமை யுடையவரோ யாம்

## மூலமும் உரையும்

சங்கு

அறிகின்றிலேம், யாம் எம் காதலர்க் காணேம் ஆயின் - யாமோ எம்முடைய காதலரைக் காணுதேமாய பொழுது, செறி துனி பெருகிய நெஞ்சமொடு - செறிந்த வருத்தந் தேங்கிய உளத் தோடே, பெருநீர்க் கல் பொரு சிறு நுரை போல - பெரிய வெள்ளம் கல்லை மோதுழி உண்டாகும் சிறிய நுரை மெல்லத் தேய்ந்து அழியுமாறுபோல, மெல்ல மெல்ல இல்லாகுதும் - பையப் பையத் தேய்ந்து இல்லையாகினறேம்

விளக்கம் :—காமநோயைப் பொறுத்து இருத்தல்வேண்டும் என்று தோழி ஆற்றுவித்தாள் ஆகலின், 'காமந் தாங்குமதி என்போர்,' என்றான். மதி : முன்னிலையசைச் சொல். அது - அக் காமத்தை, அவர் அவ்வாறு அறிவுறுத்தற் காரணம் அதனியல்பறியாதவர் ஆதல்; அல்லது அதனைத் தாங்கும் வன்மையுடையர் ஆதல் வேண்டும். இவ விரண்டினில் எதன்பாற் பட்டவர் என்று யானறிகிலேன் என்பாள், 'அஃதறியலர் கொல் ; அனைமதுகையர் கொல்' என்றான். கொல் : ஐயத்தின்கண்பட்ட வினைப்பொருள்.

செறிதுனி - செறிந்த துன்பம். பெருநீர் - வெள்ளம், பெரிய நீர் நிலை எனினுமாம். நீர் கல்லிடத்தே மோதுங்கால் நுரை தோன்று தலும், பின்னர் மெல்ல மெல்லக் காணப்படாது மறைதலும் இயல்பு. நுரை இல்லையாதல் துன்பத்தாற் றன்னை மறத்தற்கு உவமை. இல்லையாதல் சாக்காடென்னும் மெய்ப்பாடெனினுமாம்.

கல்பொரு சிறு நுரையை அரிதின் உவமைகண்ட அருமை நோக்கி இதனை இயற்றியவர் 'கல்பொரு சிறுநுரையார்' எனப் பட்டார்.

## பாட்டு - உ௱௨ : தலைவன் கூற்று

துறை .—பாங்கற்கு உரைத்தது

அஃதாவது, இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னாப் பாங்கற் கூட்டம் பாங்கற்குத் தலைவியின் நிலைமை கூறியது.

விரும்பும் தலைவன்

இதன்கண், 'தினைபபுனத்தே கிளிகடியும் தலைவியின் கையின்கண்ணதாகிய குளிர், இசையோ டியைந்த இனிய தாளத்தை உடையது; அவ்விசைகேட்டு அவள் பாட்டென்று கருதிக் கிளிகள் அகலமாட்டா. அதற்குப புலந்தழும் அவளுடைய கணகளோ, மழைத்துளியை ஏற்றுக்கொண்ட குவளை நாண்மலா போன்றன' என்று தலைவன் பாங்கற்கு அறிவுறுத்துகின்றான்.

உ௬௧. சுடுபுன மருங்கிற் கலித்த வேனற்
படுகிளி கடியுங் கொடிச்சிகைக் குளிரே
இசையின் இசையா இன்பா ணித்தே

கிளியவள் விளியென எழலொல் லாவே
அதுபுலந் தழுத கண்ணே சாரற்



**௬௧௬ குறுந்தொகை**

குண்டுநீர்ப் பைஞ்சுனைப் பூத்த குவளை
வண்டுபயில் பல்லிதழ் கலைஇத்
தண்டுளிக் கேற்ற மலர்போன் றனவே.

—கபிலர்.

(இ - ள்.) தோழி—, சுடுபுனம் மருங்கிற் கலித்த ஏனல் - மரங்களை வெட்டிச் சுட்டெரித்துப் பண்படுத்திய புனத்தின் கண்ணே தழைத்த தினையில், படுகிளி கடியும் கொடிச்சி கைக் குளிர் - வீழா நின்ற கிளிகளை ஓட்டும் தலைவியினது கையின் கண்ணதாகிய குளிர் என்னும் கருவி, இசையின் இசையா இன் பாணித்து - இசை பாடுங்கால் இசைக்கப்படும் இனிய தாளத்தை

யுடையதாம், கிளி அவள் விளியென எழல் ஒல்லா - அக்கருவி யானே அவள் கடியுங்கால் கிளிகள் அக்குளிரின் ஓசையை அவள் பாட்டின் தாளம் என்று கருதித் தினையினின்றும் அகலாதனவாம, அது புலந்து அழுதகண் - அதற்கு வருந்தி அழுத அவளுடைய கண்களோ, சாரல் குண்டு நீர்ப் பைஞ்சுனை பூத்த குவளை - மலைச்சாரலின்கண் அமைந்த ஆழமான இடத்தி லுள்ள நீரையுடைய பசிய சுனையிலே மலர்ந்த குவளையினது,

வண்டு பயில் பல இதழ் கலைஇத தண் துளிக்கு

ஏற்ற மலர்போன்

றன - வண்டுகள் பழகாநின்ற பலவாகிய இதழ்கள் கலந்து தண் ணிய மழைத்துளியை ஏற்றுக்கொண்ட மலர்களை ஒப்பனவாகும்.

**விளக்கம் :—** சுடுபுனம் - மரங்களை வெட்டிச

சுட்டெரித்துசசீர்

திருத்தப்பட்ட புனம் என்க. மரங்களை எரிததமையால் மண்சுடப் பட்டு பயிர்களுக்குச் செழிப்பு நல்குமாகலின், சுடுபுனம் என்றது, வளமிக்க புனம் என்பது குறித்து நின்றது. கலித்தல் - தழைத்தல். ஏனல் - தினை. கொடிச்சி - குறிஞ்சிநிலத தலைவி. குளிர் - கிளிகடி கருவி. குளிரைப் புடைததுக் கொண்டு கொடிசசி "ஆயோ" எனக் கூவிக் கூவிக் கிளி கடியுங்கால், குளிரின் புடைப்பொலி இசை பாடுங் கால் ஒலிககப்படும் இனிய தாளத்தின் தன்மையை உடையதாயிருக் கும்; எனவே, கிளிகள் தலைவியின் கிளிகடிதற் றொழிலை பாடற்றொழி லாகக் கருதி அவ்விசையின்பத்தின் மயஙகி அகலமாட்டாவாயின. எத்துணைக் கடிந்தும் கிளிகள் அகலாமை கண்டு அவள் அழுதாள் என்க. அழுதலானே கண்ணீர்த் துளிகளையுடைய தலைவி கண்களுக்கு இதழ் கலந்து மழைத்துளி ஏறற குவளை நாண் மலர்கள் உவமை.

அது என்றது, அக்கிளிகள் எழாமையை. புலந்து - வருந்தி. இது தலைவி இருக்குமிடமும், அவளியற்றுந் தொழிலும், அவள் குரலின் றன்மையும், அவள் எழிலும் பாங்கனுக்குத தலைவன் தெரித்தோதிய வாறுதல் உணர்க.

# பாட்டு - உகூஉ : தோழி கூற்று

துறை :—தோழி இரவுக் குறிக்கட் சிறைப்புறமாகக் காப்பு மிகுதி சொல்லியது. அஃதாவது, வரைந்து கோடற்கண்

## மூலமும் உரையும்

சரு ௫

கருத்தின்றிக் களவொழுக்கமே நிகழ்த்துந் தலைவன், இரவுக் குறிக்கண் மனைப்படப்பை யருகே வந்து நிற்றலை அறிந்த தோழி, தலைவி தமராற் பெரிதும் பாதுகாக்கப் படுதலையும், வரைந்து கோடல் இன்றியமையா தாதலையும், அவனுக்கு உணர்த்தும் பொருட்டு அவன் வரவறியாதாள் போன்று தலைவிக்குக் கூறுவாளாய் அவன் கேட்பக் கூறியது.

இதன்கண், 'நீராடச் சென்ற ஒருத்தி,
நீரிலே மிதந்து வந்த பசுங்காயைத் தின்ற
தவற்றிற்காக, அவர் தமர் யானை
பொன் முதலிய கொடுப்பவுங் கொள்ளானாய் அவளைக் கொலை செய்த நன்னன் போல, நம்மன்னை வரையா நிரயம் புகுவாளாக; அஃதெற்றுக் கெனின், ஒருநாள் அன்னை நந்தலைவன் வந்ததனைக் கண்டனளாக, அன்று தொடங்கி இரவெல்லாம் துயிலாதிருந்து நம்மைப் பாதுகாக்கின்றனளாகலான்.' என்று தோழி தலைவிக்

குக் கூறுகின்றாள்.

உகூஉ. மண்ணிய சென்ற ஒண்ணுத லரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்
கோன்பதிற் றொன்பது களிற்றொ
டவணிறை
பொன்செய் பாவை கொடுப்பவுங்
கொள்ளான்
பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரையத்துச் செலீஇயரோ
அன்னை
ஒருநாள் நகைமுக விருந்தினன்
வந்தெனப்
பகைமுக ஊரின் துஞ்சலோ இலளே.

—பரணர்.

(இ - ள்.) அன்னை - தோழியே! கேட்பாயாக, ஒருநாள் நகைமுக விருந்தினன் வந்தென - நம்மன்னை ஒருநாள் முறுவல் பூத்த முகத்தையுடைய விருந்தினனாக நந்தலைவன் நம்மில்லத்தே வந்தானாக, பகைமுக ஊரின் துஞ்சல் இலள் - அவனைக் கண்டு ஐயுற்றனளாய் அன்று தொடங்கி போர்க்களத்தின் கண்ண தாகிய ஊரிலுள்ளார் போன்று இரவெல்லாம் உறங்குதல் இலளாயினள், மண்ணிய சென்ற ஒண்ணுதல் அரிவை - நீராடற் பொருட்டு யாற்றிற்குச் சென்ற ஒள்ளிய நுதலையுடைய மகளொருத்தி, புனல் தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு - அவ்வியாற்றுநீர் கொணர்ந்த பசிய காயைத்தின்றதனால் உண்டாகிய தவற்றிற்காக, ஒன்பதிற்று ஒன்பது களிற்றொடு அவள் நிறை பொன் செய்பாவை கொடுப்பவும் கொள்ளான் - அவள் தமர் அவளை மீட்கும் பொருட்டு எண்பத்தொரு களிற்றி யானைகளோடே அவளது நிறையையுடைய பொன்னாற் செய்த



பாவையினையும் தண்டமாக இறுப்பாராகவும், அவையிற்றை

ஏற்றுக் கொள்ளாதவனாய், பெண் கொலை புரிந்த போல - அப்பெண்ணைக் கொலைசெய்த நன்னன் நன்னன்

என்னும்

குறுநிலமன்னனைப் போன்று, வரையா நிரையத்துச் செலீஇயர் - இவளும் கால வரையறையில்லாத நரகத்தின்கண் வீழ்வாளாக.

**விளக்கம்** :—நந்தலைவனை ஒருநாள் கண்ட நம்மன்னை அன்று தொடங்கி இரவெல்லாம் துயிலாதிருந்து நம்மைப் புறம்போகாது காவல்செய்து நமக்கு இன்னாமை செய்பவளாயினள். அவள் மீளாத் தீநரகம் புகுவாளாக என்றாள் என்க. இதுகேட்ட தலைவன் தலைவி காப்புமிகுதியால் இனி இரவுக்குறிக்கண்ணும் நம்மைக் காண வியலாதவளாயினள்; ஆதலின் இனி வரைந்து கோடலே செயற்பாலதெனத் தெளிதல் இதன் பயன் என்க.

நீராடுவோர் நீரில் மிதந்து வரும் கனியை அருந்துதல் குற்றமன்றாகவும், அருந்தியவளும் பெண் ஆகவும், நன்னன் சிறிதும் அருளின்றி அவளைக் கொலைசெய்து இறப்பப் பெரும்பாவம் ஈட்டினான்; அதனால் அவன் என்றென்றும் மீளா எரிவாய் நரகம் புக்கான்; அவன் எய்திய நரகத்தையே கற்புக்கடம் பூண்ட நின் செயல் அறத்தொடு பட்டதென்று கருதி, இனிய செய்யாது, துயிலாதிருந்து நினக்குப் பெரிதும் இன்னாமையே செய்கின்றாள் ஆகலின் நம்மன்னையும் அந்நரகினை எய்தக கடவள் எனத் தாயின் கொடுமையைத் தககதோர் உவமை கொண்டு தெரித்தோதினாள்.

இதன் கட் கூறப்படும் நன்னன் ஒரு குறுநிலமன்னன் என்று தெரிகின்றது. மலைபடுகடாம் கொண்ட நன்னன் அல்லன் மலைபடுகடாங் கொண்ட நன்னன் என்பான், செங்கண் மாத்துவேள் நன்னன் சேய் நன்னன் எனப்படுவான் ஈண்டுப் பெண்கொலை செய்த நன்னன் கொண்கானவேள் நன்னன் எனப்படுவான். இவனைப் பற்றிய செய்தி

இக்குறுந்தொகையின்கண் ௭௩ - ஆம் செய்யுளினும் கூறப்பட்டது. அச்செய்யுளும் பரணராலேயே பாடப்பட்டுள்ளது. இவன் வரலாற்றை அச்செய்யுள் விளக்கத்தும் கூறியுள்ளாம்; ஆண்டுக் காண்க

இந்நன்னன் தனது பூம் பொழிலில் ஒரு சிறந்த தேமாமரம் வைத்திருந்தான்; அதிற் பழுத்த கனி ஆற்றில் விழுந்தது. அக்கனியை நீராட வந்த ஒரு பெண் எடுத்தருந்தினள்; அச் செய்தி கேட்ட நன்னன், அப் பெண்ணின் தமர் யானை, பொற்பாவை முதலியவற்றைத் தண்டமாகத் தரவும் இசையாது அவளைக் கொன்றான், என்பது வரலாறு.

தலைவன் விருந்தினரோடு விருந்தினராய்த் தலைவியின் மனை புகுதல் வழக்கம். இங்ஙனம் புகும் வழக்கத்தை இந்நூல் ௧௧அ-ஆம் செய்யுளானும், அதன் விளக்கத்தானும் உணர்க.

## பாட்டு – ௨௯௩ : தலைவி

கூற்று

துறை :—பரத்தையிற் பிரிந்து வந்த கிழவற்கு வாயிலாகப் புக்க தோழிக்குக் கிழத்தி யுரைத்தது. அஃதாவது, பரத்தையர் சேரிக்குத் தலைவன் தன்னைப் பிரிந்து சென்றமையால் ஊடி

### மூலமும் உரையும்

சங்கள

யிருந்த தலைவியின் ஊடல் போக்கத் தலைவன், தோழியை விட்டவழி அத்தோழியின் கூற்றை மறுத்துத் தலைவி கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, "'நீ தலைவனை ஏற்றுக் கொள்க', என்று என்னை வேண்டுகின்றனை ; நின் வேண்டுகோட்கிணங்கி இவனை யான் ஏற்றுக் கொண்டது பரத்தை அறிவாளாயின், அவளே நம் மிலலிற்கு வந்து அவனைப் பற்றிச் செல்வள காண்,'' என்று கூறுகின்றாள்.

உகூரு. கள்ளிற் கேளிா ஆத்திரை யுள்ளூர்ப்
பாளை தந்த பஞ்சியங் குறுங்காய்
ஓங்கிரும் பெண்ணை நுங்கோடு பெயரும்
ஆதி யருமன் மூதூ ரன்ன
அயவெள் ளாம்பல் அம்பகை

நெறித்தழை
தித்திக் குறங்கின் ஊழ்மா றலைப்ப
வருமே சேயிழை யந்திற்
கொழுநற் காணிய அளியேன் மன்னே.
—கள்ளில் ஆத்திரையனார்.

(இ - ள்.) தோழி, கள் இல் கேளிர் ஆத்திரை - கள்விற்கும் கடைக்கு உரியராகிய களியரின் செலவு, உள்ளூர் ஓங்கு இரும் பெண்ணை பாளை தந்த பஞ்சியம் குறுங்காய் நுங்கொடு பெயரும் - அக் கள் கிடைக்கப் பெறாமையால்

ஊரினகத்தே யுள்ள உயர்ந்த கரிய பனையினது

பாளையினைப்பட்ட நாருடைய

அழகிய குறிய காயாகிய நுங்கோடே பெயர்தற்குக் காரண
மான, ஆதி அருமன் மூதூர் அன்ன - ஆதியருமன் என்பா

னுடைய பழைய ஊரைப் போன்ற, அயம் வெள்

ஆம்பல் அம் பகை நெறித்தழை-நீரில் தோன்றிய

வெள்ளாம்பலினது அழகிய மாறுபட்ட

நெறிப்பினையுடைய தழை ஆடை, தித்திக்

குறங்கின் ஊழ் மாறு அலைப்ப -

சுணங்கினையுடைய துடையின்கண்

முறையே மாறிமாறி அசையா நிற்ப, சேயிழை கொழுநற்
காணிய வரும் - சிவந்த அணிகலன்களையுடைய பரத்தை ஈண்டு
அவளுடைய கொழுநனைக் காணும் பொருட்டு வருதல் ஒருதலை
யான் அளியேன் - அங்ஙனம் வருமிடத்து யான் இரங்கத்

தக்கவள் ஆவேன்.

**விளக்கம்** :—கள்இல் - கள்விற்கும் கடை. கேளிர் - கள்ளோடு
உறவுபூண்ட களிமாக்கள். விடாது செல்வர் என்பது தோன்ற ஆத்
திரை என்றாள். ஆத்திரை - யாத்திரை ; செலவு

கள்ளுக்கடைக்குச் செல்வோர், ஆண்டுச் செவ்வி பெறுவிடத்து,
உள்ளூரின்கண் உள்ள தம் பனை நுங்கையுண்டேனும் அவ்வேட்கை

யைத் தணிக்கக் கருதிப் பனை நுங்கோடே மீண்டாற் போலே, தலைவன் பரத்தையரில்லிற் செவ்வி பெறாமையால், நுங்கனையேனுகிய என்பால் மீண்டனன் போலும் என்பாள், 'கள்ளிற் கேளிர் ஆத்திரை பெண்ணை நுங்கொடு பெயரும் மூதூர்' என்றாள். தலைவன் வாய்மையாக நம்பால் அன்பாலே மீண்டானல்லன் என்பது குறிப்பு. பாளையை அரிந்து கொள்ளும் கள்ளைப் பரத்தைக்கும், கிழங்கு முதலிய தருதற்குக் காரணமான நுங்கை மகப் பேற்றிற்கும் அறததிற்கும் உரிய தனக்கும் உவமித்த நயமுணர்க.

கள்ளிற் கேளிர் ஆத்திரை என்ற தொடர் கருதி இதனை யியற்றிய நல்லிசைப்புலவர் கள்ளி லாத்திரையார் எனப்பட்டார்.

பஞ்சி - நுங்கின் கண்ணுள்ள நார். குறுங்காய் - ஈண்டு இள நுங்கு என்பது படநின்றது. பெண்ணை - பனை.

இவ்வருமனைப்பற்றி நக்கீரனார் நற்றிணையில் (௩௬௭) குறிப்பிட்டுள்ளார். அது வருமாறு,

"கொடுங்கட் காக்கைக் கூர்வாய்ப் பேடை
நடுங்குசிறைப் பிள்ளை தழீஇக் கிளைபயிர்ந்து
கருங்கட் கருனைச் செந்நெல் வெண்சோறு
சூருடைப் பலியொடு கவரிய குறுங்காற்
கூழுடை நன்மனை குழுவின விருக்கும்
மூதில் அருமன் பேரிசைச் சிறுகுடி"

என்பதாம். இச செய்யுளானே அருமன் புலவராற் மொரு வள்ளலாய்த் திகழ்ந்தான் என்பதுணரலாம்:

## பாட்டு - உகூச : தோழி கூற்று

துறை :—பகற்குறிக்கண் தலைமகன் வந்தவிடத்துத் தோழி செறிப்பறிவுறீஇயது. அஃதாவது, தலைவியைப் பகற்குறி யிடத்தே காண்டற்கு வந்த தலைவன, சிறைப்புறமாக வந்து நின்றனனாக, அவன வரவுணர்ந்த தோழி, அவன் வரவுணரா தாள் போன்று தலைவிக்குக் கூறுவாளாய்த் தாய் அவளை இல்லின்கண் வைத்துப் பாதுகாக்க எண்ணியிருத்தலை அவன் அறிந்து கொள்ளும்படி கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'நந்தலைவன் நாம் கடலாடுமிடத்தும், கடற்கரைச்சோலையிலே தங்குமிடத் தும், ஆயமோடாடுமிடத்தும், ஏதிலான் போல வந்து ஒரே லென நம்மைத தழுவி நீங்கின் அலராகும். அங்ஙனமன்றியும் நின் அல்குலிற் பொருந்திய தழையுடையினும் நம்மருங்கின் நீஙகானுய்ப் பயின்று நேரிற்காண அலர்தந்து, நம்மன்னை நம்மை இற்செறிக்கும்படி செய்து விட்டனன் ; யாம் இனி என் செய்வேம்!' என்று கூறுகின்றாள்.

உகூச. கடலுட ஞடியும் கான லல்கியும்
தோடலே யாயமோடு தழுவணி யணிந்தும்
நோதுமலர் போலக் கதுமென வந்து
முயங்கினன். செலினே யலர்ந்தன்று
மன்னே
தித்தி பரந்த பைத்தக லல்குல்
திருந்திழை துயல்வுக்கோட் டசைத்த
பசுங்குழைத்
தழையினும் உழையிற் போகான்
தான்தங் தனன்யாய் காத்தோம் பல்லே.
—அஞ்சியாந்தையார்.

(இ - ள்.) கடல் உடஞடியும் கானல் அல்கியும் - கடலின் கண்ணே நீராடியும் கடற்கரைச் சோலையிலே வதிந்தும், தொடலே ஆயமொடு தழுவணி அயர்ந்தும் - மாலையை யுடைய மகளிர்கூட்டத்தோடே குரவைக்கூத்தாடியும் யாம் விளையாடுங்கால், நொதுமலர் போலக் கதும் என

வந்து முயங்கினன் செலின் - அயலார் போலே ஞெரெலென நம்பால் வந்து
தழுவிச் சென்றிருப்பனேல், அலர்நதன்று-அலராயிற்று. அன்றியும், தித்தி பாந்த பைத்து அகல் அல்குல் திருந்து இழை துயல்வுக் கோட்டு அசைத்த - சுணங்குபடர்நத விரிந்தகன்ற திருத்தமுறசசெய்த அணிகலனகள் அசைதலையுடைய அல்குலினது பககத்தே யாத்த, பசுங்குழைத் தழையினும் உழையின் போகான் - பசிய தளிராகிய தழையுடையைக் காட்டினும நம் மருங்கிருந்து அகலாதவனாகி, யாய் காத்தோம்பல் தான தந்தனன் - நம் அன்னை நமமை இற்செறித்துப் பாதுகாத்தலைத் தானே உண்டாக்கினன்.

விளக்கம் :—செய்தனிலத்தலைவியாதலால் கடலும் கானலும் கூறி
னள். தொடலை - மாலை. ஆயம் - விளையாட்டுமகளிர் கூட்டம். தழுவணி - குரவைக் கூத்து. மகளிர் தம்முட் கைகோத்துத் தழுவி ஆடுதலின் தழுவணி எனப்பட்டது. “சீர்மிகு நெடுவேட் பேணித் தழூஉப் பிணையூஉ சேரிதொறும் நின்ற குரவை” (கசஃ-இ.) என்றார் மதுரைக் காஞ்சியினும.

ஆடியும் அல்கியும் அயர்ந்தும் யாமிருப்புழி என்க. யாமிருப்புழி என வருவித்துரைக்க. கதுமென: விரைவுக்குறிப்பு. தித்தி- சுணங்கு. பைத்தல் - விரிதல். கோடு - பக்கம். குழைத்தழை - குழையையுடைய தழை எனினுமாம். தம்மருங்கினின்றும் அகலாத தலைவனுக்கு, தம்மிடையினின்றும் நீங்காத தழையுடை உவமை. இங்ஙனம் நம்மை நீங்கானாகியபோது அலர் உண்டாகித் தாய் அறிந்து நம்மைக் காத்தோம்பல் தலைப்பட்டாள் என்பாள், ‘தாய் ஓம்பல் தான் தந்தனன்’ என்றாள். தாயோம்பற்குத் தானே காரணமாயினன் என்ற

வாறு.



ஆதலால் இனிப் பகற்குறி வாரற்க என்று, குறிப்பால் தலைவனை மறுத்தவாறு.

## பாட்டு - உகரு: தோழி கூற்று

துறை :—வாயில் வேண்டிச் சென்ற கிழவற்குத் தோழி உரைத்தது அஃதாவது, பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் தோழியை வாயில் வேண்டியபொழுது, 'நீ தகாத ஒழுக்க முடையை,' என்று தோழி வாயில் மறுத்தது.

இதன்கண், தோழி தலைவனை நோக்கி, "ஐய! நீயோ உடுத்தும், தொடுத்தும, பூண்டும, செரீஇயும், ஆயத்தோடே கூடி விழாச்சிறப்போடே வருகின்றனை ; இவ்வூரார் 'பண்டு இவன் வாழ்க்கை ஓர் ஆன் வல்சி வாழ்க்கை; இத்தலைவியை மணந்த பின்னரே அவ் வாழ்க்கை இவ் விழாச் சிறப்புடைய

தாயிற்று ' என்று கூறுகிற்பர் " என்று கூறுகின்றாள்.

உகூரு. உடுத்துந் தொடுத்தும் பூண்டுஞ் செரீஇயும்
தழையணிப் பொலிந்த ஆயமொடு
துவன்றி
விழவொடு வருதி நீயே யிஃதோ
ஓரான் வல்சிச் சீரில் வாழ்க்கை
பெருநலக் குறுமகள் வந்தென
இனிவிழ வாயிற் றென்னுமிவ் வூரே.

—தூங்கலோரியார்.

(இ - ள்.) ஐய!, உடுத்துந் தொடுத்தும் பூண்டும் செரீஇ யும் - ஆடையாக உடுத்தும் மாலையாகத் தொடுத்தணிந்தும் அணிகலன்களாக அணிந்தும் செவிகளினும் கூந்தலிடத்தும்
பூக்களாகச் செருகியும், தழையணிப் பொலிந்த துவன்றி - தழையானே ஒபபனைசெய்யப்பட்ட ஆயமொடு
அழகானே
பொலிவுபெற்ற பரத்தையர் குழாத்தோடே நெருங்கி, நீ விழ வொடு வருதி-நீ

விழாகொண்டாட்டத்தோடே வாராநின்றனை, இவ் ஊர் இஃதோ ஓர் ஆன் வல்சிச் சீறில் வாழ்க்கை-இதுகண்ட
இவ்வூர் வாழ்மாந்தர்கள இதோ காண்மின் பண்டு ஒரோவோர் ஆன்தரும் பயனைக்கொண்டு உண்ணும் உணவையுடைத்தாயிருந்த சிறப்பற்ற எளிய வாழ்க்கை, பெருநலக் குறுமகள் வந்தென - பெரிய நன்மையையுடைய சிறுமி ஒருத்தி வாழ்க்கைத்
துணைவியாக வந்து வாய்த்தாளாக, இனி விழவு ஆயிற்று என்னும் - இப்பொழுது விழாவெடுத்தற்குரியதாயிற்று என்று தமக்குள் ஒருவர்க் கொருவர் கூறாநிற்பர்.

## மூலமும் உரையும்

சசக

**விளக்கம்:**—இது, மணந்துகோடற்கு முன்னர் நல்குரவுடையனாயிருந்த தலைவன் ஒருவன், ஒருதலைவியை மணந்து கொண்ட பின்னர்ச் சிறந்த செல்வமுடையன் ஆயினன்; அந்நன்மையெல்லாம் திருமகள் போன்ற தலைவி தன்னில்லம் புக்க சிறப்பானே பெருகின; அங்ஙனமிருந்தும், தன் வாழ்க்கைத் துணைவியின் சிறப்பினைக் கருதாமல் தலைவன் பரத்தமை பூண்டொழுகினான்; அவன் பரத்தையர் சூழ விழாக்கொண்டாடியிருந்து ஒருநாள் தலைவியின் மனைக்கு வந்து தோழியை வாயில் வேண்டினனாக, அவற்குத் தோழி தலைவியாலுற்ற நன்மையைக் குறிப்பாற் சுட்டிக்காட்டி, அந்நன்றியை நீ மறந்தனை எனக் கடிந்துரைக்கின்றதாகக் கொள்க.

உடுத்தன் முதலிய நான்கிற்கும் ஆடை முதலியன

பெய்து கூறுக.

இஃதோ - என்றது காண்போர் ஒருவர்க்கொருவர் சுட்டிய தென்க. இஃதோ காண்மின். சீரில் வாழ்க்கை விழவாயிற்று; இவ்வுலகியலிருந்த வாறிது என்பர் என்க. பெருநலக்குறுமகள் - பெரிய நலந்தோன்று தற்குக் காரணமான குறுமகள் என்க.

ஓரான் வல்சிச் சீரில் வாழ்க்கை என்றது, ஒரு ஆனினது பயனை விற்று அதுகொண்டுண்ணற் குரிய நல்குரவு வாழ்க்கை என்றவாறு.

> "சிறப்புஞ் சீரு மின்றிச் சீறூர்
> நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை
> ஓரான் யாத்த ஒருதூண் முன்றில்
> எதில் வறுமனை."

(அகம்-நஉகூ) எனவரும் அகநானூற்றுச் செய்யுட்பகுதியை ஈண்டு நினைக.

## பாட்டு - உகூரு : தலைவி கூற்று

துறை:—காணும் பொழுதிற காணப் பொழுது பெரிதாக லான், அஃதாற்றாளாய தலைமகள், தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது. அஃதாவது, களவுக்காலத்தே தலைவன் தலைவியைக் கண்டு அளவளாவும் காலத்தைப்பார்க்கினும்

காணும்பொழுதே மிகுதியாகலான், அப்பிரிவாற்றாது தலைவி நாடோறும் வருந்துவாள் ஒருநாள், தலைவன் சிறைப்புறத்தே வந்து நிற்றலை அறிந்தும் அறியாதாள் போன்று தோழிக்குக் கூறுவாளாய்த் தன்னிலையைத் தலைவற்கு உணர்த்தியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, "தண்ணந் துறை

வனை நீ காணும்பொழுது கடுஞ்சொற்கள் கூறி 'இவள் இங்ஙனம் வருந்தும்படி நீ துறந்து போதல் நினக்குத் தகுமோ?'

என்று இடித்துரையாதேகொள்" என்று கூறுகின்றாள்.

௨௯௬. அம்ம வாழி தோழி புன்னை
அலங்குசினை யிருந்த அஞ்சிறை நாரை
உறுகழிச் சிறுமீன் முனையிற் செறுவிற்

௪௪௨ குறுந்தொகை

கள்நாறு நெய்தல் கதிரொடு நயக்கும்
தண்ணந் துறைவற் காணின் முன்னின்று கடிய
கழறல் ஓம்புமதி தொடியோள்
இன்ன ளாகத் துறத்தல்

நும்மின் தகுமோ என்றனை துணிந்தே.

—பெரும்பாக்கனூர்.

(இ - ள்.) அம்ம வாழி தோழி - தோழி ஒன்று கூறுவன் கேட்பாயாக, புன்னை அலங்கு சினை இருந்த அம் சிறை நாரை - புன்னை மரத்தினது அசைகின்ற கொம்பின்கண் இருந்த அழகிய
சிறகையுடைய நாரை, உறுகழிச் சிறுமீன் முனையின்-மிக்க கழியிடத்தே சிறிய மீன்களைத் தின்று வெறுத்ததாயின், செறுவில் கள் நாறு நெய்தல் கதிரொடு நயக்கும் - கழனிகளிடத்தே தேன்
மணக்கும் நெய்தற்பூவை நெற்கதிரோடே தின்ன விரும்புதற்குக் காரணமான, தண்ணந் துறைவன் காணின்-குளிர்ந்த துறையை யுடைய தலைவனை இனி நீ காணுங்கால், முன்னின்று துணிந்து-அவன் கண்முன்னே நின்று துணிந்து, தொடியோள் இன்னள் ஆகத் துறத்தல் நும்மின் தகுமோ என்றனை - வளையலையுடைய
தலைவி இவ்வாறு ஆற்றாளாகும்படி அவனைப் பிரிந்து போதல் நுமக்குத் தகுதியாகுமோ என்று இன்னோரன்ன, கடிய கழறல் ஓம்பு மதி-கடிய சொற்களைக்கூறி இடித்துரைத்தலைப் பாது காப்பாயாக.

விளக்கம்:—அம்ம - கேட்பித்தற்கண் வந்தது. வாழி-அசைநிலை. அலங்குசினை - அசைகின்ற கொம்பு. உறு - மிகுதிப்பொருள் குறித்த உரிச்சொல். செறு - கழனி. முனையின் - தின்று வெறுத்த விடத்தே முன்னின்று அவனுலுண்டாகிய இன்னலை எடுத்துக்கூறின் அவன் துன்புறுவான் ஆகலின், அங்ஙனம் கூறல் என்றாள். இதனால் தன் ஒழுக்கம் இடித்துரைத்தற் கேற்ற தாதலைத் தலைவன் உணர்ந்துகொள் வானுதல் உணாக.

'நல்லார் எனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை
அல்லார் எனினும் அடக்கிக் கொளல்வேண்டும்
நெல்லுக் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு
புல்லிதழ் பூவிற்கு முண்டு." (நாலடி-உஉ)

என்னும் அறம்பற்றிக் கூறுவாள் போன்று கடிய கழறல் ஓம்பென் றாள். தொடியோள் என்ற குறிப்பானே அத்தொடிகள் கழன்று இங் ஙனம் மெலிந்தாளாக என்க.

நும்மின் என்றது, பெருந்தன்மைகட் கெல்லாம் உறைவிட மாய்த் திகழும் சான்றோராகிய நுமக்கு என்பதுபட நின்றது.

இங்ஙனம் எதிர்நின் றிடித்துரைத்தல் நம்மனோர்க்கு பாள், 'துணிந்து' என்றாள்.

ஏலாதென்

மூலமும் உரையும்

தோழியைக் கழறற்க என்னும் வாயிலாய்த் கழறினமை உணர்ந்தின்புறுக.

தானே தலைவனைத்

இனி, புன்னை அலங்குசினை யிருந்த நாரை, கழிச் சிறுமீனை வெறுத் துழிச செறவில் நெய்தல் கதிரொடு நயக்கும் என்றது, இடையூறுமிக்க இக்களவு நிலையில் எய்தும் இன்பத்தினும் துன்பமே பெரிதாகலின் இது வெறுக்கத் தக்கதாயிற்று. இனி நாம் வரைந்து கொண்டு நம் மனையிலிருந்து இன்புறுதலே தருவதாம் என்னும் உள்ளுறை தோற்றி நின்றது காண்க.

## பாட்டு - உகூஎ : தோழி கூற்று

துறை:—தோழி வரைவு மலிந்தது.
அஃதாவது, கள

வின்கண் தலைவனைக் காண்டற்கு இடையூறுகள் பல வுண்மை யானும், தலைவி அவனைக் காணுதலைமகிலள் ஆதலானும், இனித் தலைவனோடே தமர் அறியாது சென்று அவனை மணந்து கோடலே தகுதி எனத் தோழி தலைவிக்குக் கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கிக், 'கொடுஞ்சிலை

மறவர்கள் ஆறுசெல்வோரைக் கொன்று அவருடலிற் றழையை இட்டு வைத்த பதுக்கைகள், ஊர்போலத் தோன்றுகின்ற மலை

களையுடைய பாலையின்வழியே நம்தலைவனோடு நீ போதலே இப்பொழுது செய்யத்தகுந்த செயலாம்' என்று உடன்போமாறு உணர்த்துகின்றாள்.

உகூஎ. அவ்விளிம் புரீஇய கொடுஞ்சிலை மறவர்
வைவார் வாளி விறற்பகை பேணார்
மாறுநின் றிறந்த ஆறுசெல் வம்பலர்
உவலிடு பதுக்கை ஊரின் தோன்றும்
கல்லுயா நனந்தலை நல்ல கூறிப்
புணர்ந்துடன் போதல் பொருளென
உணர்ந்தேன் மன்றவர் உணரா வூங்கே.
—காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்.

(இ - ள்) அவ் விளிம்பு உரீஇய கொடுஞ்சிலைமறவர் - அழகிய விளிம்பைக் கையானே உருவிவிட்ட கொடிய வில்லை யுடைய மறவருடைய, வைவார் வாளி விறல் பகை பேணார் -

கூர்மையையும நீட்சியையுமுடைய அம்புகளின் வெற்றியுடைய பகைமையினின்றும் தம்மைப் பாதுகாவாராகி, மாறு நின்று இறந்த ஆறுசெல் வம்பலர்-அவற்றை எதிர்த்து நின்றமையானே இறந்துபட்ட வழிச்செல்வோர் உடலின் மிசை, உவல் இடு

பதுக்கை ஊரின் தோன்றும்-தழையிட்டு மூடப்பட்ட குவியல்கள்

௪௪௪ குறுந்தொகை

ஊரின்கண் குடில்கள்போல் தோன்றுகின்ற, கல் உயர் நனந் தலை - மலைகள உயர்ந்த அகன்ற இடத்தின் வழியே, நல்ல கூறி- நன்மையுடைய செய்திகளைக் கூறிக்கொண்டு, புணர்ந்து உடன் போதல் - தலைவனோடு சேர்ந்து ஒருங்கே செல்லுதல் ஒன்றே, பொருள் என - செயத்தகும் செயலாகும் என்று, அவர் உணரா ஊங்கே உணர்ந்தேன் - நம்தலைவர் உணர்தற்கு முன்னரே யான் உணர்வேனாயினேன்.

**விளக்கம்** :—'தோழி! கல்லுயர் நனந்தலை நல்ல கூறித் தலை
வருடன் நீ இப்போது போதலே செய்யத்தக்கதென
தற்கு முன்னர் யான் கருதுகின்றேன்' என்பதாம்.
அவர் கருதுவ

தலைவனது வரைவிற்குத் தமர் உடம்படார் எனக் கண்டதோழி, தலைவியைத் தலைவனோடு செல்ல உடம்படுவித்த தென்றுணர்க.

அவ்விளிம்பென்றது வில்லின் மேல் விளிம்பினை என்பாருமுளர். மறவர் வில்வினை உருவும் வழக்கமுடையராதலே, "வீங்கு விளிம்பு உரீஇய விசையமை நோன்சிலை, வாங்குதொடை பிழையா வன்கண் ஆடவர்" (அகநா-௧எ௯) என்றும், "அவ்விளிம் புரீஇய விசையமை நோன் சிலைச், செவ்வாய்ப் பகழிச செயிரநோக் காடவர்" (அகநா-௩எக) என்றும் பிற சான்றோர் கூறுமாற்றானும் உணர்க. கொலைக் கருவியா தலான் கொடுஞ்சிலை எனப்பட்டது. வை - கூர்மை; வார் - நீட்சி; தவறாது கொல்லும் அம்பாகலின் விறற்பகை எனப்பட்டது.

வாளிப்பகை பேணார் ஆறுசெல் வம்பலர் பதுக்கை ஊர்போல் தோன்றும் வழியைப் போதல்பொருளென உணர்ந்தேன் என்றது, அம்மறவர் செய்யும் கொடுமையினுங் காட்டில் நந்தமர் செய்யும் கொடுமை பெரிது எனத் தலைவிக்குக் குறிப்பான் உணர்த்தியவாறு. "சான்றோர் இல்லாத் தொல்பதியிருத்தலின், தேன்றேர் குறவர் தேயம் நன்றே" என்ற வெற்றிவேற்கைச செய்யுள் ஈண்டு நினைக்கற்பாலது. பொருள் என்றது, பொருளாகக்கருதிச செய்யத்தக்கது என்றவாறு. மன்ற - தேற்றத்தின்கண் வந்தது. இதனைத் தலைவனும் உணர்தல் வேண்டும்; அவன் உணருமுன் யான் உணர்ந்தேன் என்பாள், 'அவர் உணராவூங்கே' என்றாள். தலைவனும் இதற்கு உடன்படல் ஒருதலை என்பது குறிப்பு இது வரைந்துகோடற்கு உபாய முணர்த்தலான் வரைவுமலிந்த தாயிற்றென்க.

## பாட்டு - ௨௬அ : தோழி கூற்று

துறை :—கிழத்திக்குத் தோழி குறைமறுமற் கூறியது. அஃதாவது, தன்பாற் குறையிரந்துநின்ற தலைமகன் பொருட்டுத் தலைவியைக் குறைநயப்பிக்குந் தோழி அவள் மறுக்காதபடி சூழ்ந்துரைத்தது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'நந் தலைவன்
நாடோறும் நம் சேரிக்கு வந்து வந்து என்பாற் குறையிரந்து செல்லாநின்றனன்; அவன் நோக்கம் அவனது துன்பத்தை



விளக்குகின்றது; இந்நிலை நீளின் அவன் மடலேற எண்ணியுளன் என்று யான் உணர்கின்றேன்,' என்று கூறி அவனை ஏற்றுக்கோடலே நன்றென்பதுபடக் கூறுகின்றாள்.

உகூஅ. சேரி சேர மெல்ல வந்துவந்
தரிது வாய்விட் டினிய கூறி
வைகல் தோறும் நிறம்பெயர்ந்
துறையுமவன்
பைதல் நோக்கம் நினையாய் தோழி
இன்கடுங் கள்ளின்அகுதை தந்தை
வெண்கடைச் சிறுகோ லகவன் மகளிர்
மடப்பிடிப் பரிசில் மானப்

பிறிதொன்று குறித்ததவ னெடும்புற
நிலையே.

—பரணர்.

(இ - ள்) தோழி—, சேரி சேர மெல்ல வந்து வந்து - நமது தெருவினை அடைய மெல்ல வந்து வந்து, அரிது வாய் விட்டு இனிய கூறி - எப்போதாவது அரிதாகத் தன் வாய் மலர்ந்து நமக்கு இனியமொழிகளையே கூறி, வைகல் தோறும் நிறம் பெயர்ந்து உறையும் - நாள் தோறும் தனது மேனியின் நிறம் வேறுபட்டுத் தங்குகின்ற அத்தலைவனது, பைதல் நோக்கம் நினையாய் - வருத்தந் தேங்கிய பார்வையினை நீ நினைத்துக் காண்பாயாக, இன் கடுங் கள்ளின் அகுதை தந்தை - இனிமையும் கடுமையயுமுடைய கள்ளையுடைய அகுதை தந்தையாகிய வள்ளலின் பின்னின்ற, வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர் - வெள்ளிய முனையினையுடைய சிறிய கோலைக் கொண்ட பாடல்மகளிர் பெறுகின்ற, மடப்பிடிப்பரிசில் மான - மடப்ப முடைய பிடியானையாகிய பரிசிலைப் போல, அவன் நெடும்புற நிலை பிறிது ஒன்று குறித்தது - அவன்

நம்பால் பின்னிற்கின்ற நிலை நம்மைக் குறையிரத்தலை யன்றியும் வேறொன்றனைக் கருதியதாக இராநின்றது

**விளக்கம்** :—அவன் பைதனோக்கம் நினையாய்! அவன் புறநிலை பிறிதொன்று குறித்தது என்க.

நஞ்சேரிக்கு அவன் வரலாகாமையின், செவ்வி நோக்கிச சேரியண்மையின் வந்தென்பாள், 'சேரி சேர' வந்தென்றாள். பிறர் காணாதவாறு வரவேண்டுதலின், 'மெல்ல வந்'தென்றாள். அவன் குறையை நம்பாற் கூறுந் துணிவிலன் ஆகலின் கூறத்துணியானாய் நமக்கினியவே கூறும் பொருட்டு எப்போதாவது சிறிது பேசுவன் என்பாள், 'அரிது வாய் விட்டு இனிய கூறி' என்றாள். முன்னத்திற் கூறுவதல்லது வாய் விட்டுரையான் என்றவாறு. வாய்விட்டுக் கூறுதலும் தானுற்ற நோய் அன்றென்பாள், 'இனிய கூறி' என்றாள். இங்ஙனம் நாடோறும்



வருவன் என்பாள், 'வந்து வந்து' என்றாள். "நென்னற் கண்ட திருமேனி இன்று பிறிதாய் நிலைதளர்வான்" என்பாள், 'வைகறோறும் நிறம் பெயர்ந்துறையும்' என்றாள். அவன் கண்பார்வையிலே அவனகத்துறையும் பைதல் மெய்ப்பட்டு நன்கு தோன்றுமென்பாள், 'அவன் பைதல் நோக்கம் நினையாய்' என்றாள். யான் அப்பார்வையினின்றும் அவன் இனி மடலேறத் துணிவன் என்று அறிந்தேன்; நீயும் அப்பார்வையினை நினைத்துப் பார்ப்பாயாயின் அங்ஙனமே நினைப்பாய் என்பாள், 'நோக்கம் நினையாய்' என்றாள்.

இங்ஙனமாக அவன் பின்னின்றும் அவனை யாம் ஏலோமாயினேம்; ஆகவே, இனி அவற்கு மடலல்லதில்லை வலி; இனி மடலேறவே எண்ணுகின்றனன் என்பாள், 'அவன் நெடும்புறநிலை பிறிதொன்று குறித்தது'

என்றாள்.

இனி, அவன் புறநிலை பிறிதொன்று குறித்ததாதற்கு அகுதை தந்தையினிடம் அகவன்மகளிர் பெறும் பரிசு உவமை என்க. இவ் வுவமை கூறியதன் கருத்தென்னையோஎனிற் கூறுதும்:

மண்ணிய சென்ற பெண் ஒருத்தி, புனல் தரு பசுங்காய் தின்ற தப்பற்கு அவளை நன்னன் என்பான் கொலை செய்தானாக (உ௯உ) குறுந்தொகைச் செய்யுளையும் அதன் விளக்கத்தையும் பார்க்க. அப் பெண் கோசர்குடிப் பெண்ணாவாள்; அவளை மீட்டற்கு அவள் தமர், யானை முதலியன கொடுத்தும் கொள்ளாது கொன்ற நன்னனின் நறு மாவை வேரோடு அழிக்கமுனைந்த கோசர், ஒரு சூழ்ச்சி தொடங்கினர்; பாடல்வல்ல மகளிர்க்குப் பிடிப்பரிசில் மிகுத்து நல்கும் அகுதை தந்தையினிடம் அகவன் மகளிரைச் செலுத்தி, அவன்பால் அவர்கள் பெற்ற பரிசிலாகிய பிடிகள் பலவற்றையும், நன்னனூரில் இல்லாத செவ்வியில் அவன் நறுமாமரத்திற் பிணிக்கச் செய்தனர். அப்பிடிகள் அம்மாவினை வேரோடு பிடுங்கி அழித்துவிட்டன என்பதாம். ஈண்டு அகவன் மகளிர் அகுதையிடம்பெற்ற பிடிப்பரிசில் பரிசிற் பொருட்டா காமல், நன்னன் நறுமா கொல்லலாகிய பிறிதொன்று குறித்த தானாற் போன்று, நந்தலைவன் நீளப் பின்னிற்றல் மடலேறுங் கருத்தாலேயாம் என உவமை கூறிய படியாம்; இங்ஙனம் கோசர் சூழ்ச்சி செய்ததனையே, "நன்னன் நறுமாகொன்று நாட்டிற் போக்கிய ஒன்று மொழிக் கோசர் சூழ்ச்சி போல" என இந்நூல் எ௩-ஆம் செய்யுளிற் கூறப்பட்டுள்ள தென்க. எ௩-ஆம் செய்யுளையும் இச் செய்யுளைப்பாடிய பரணரே பாடினமையும் நினைவு கூர்க. இந்நன்னன் வரலாற்றை "மண்ணிய சென்ற" என்ற இந்நூல் உ௯உ-ஆம் செய்யுளிற் கூறியவரும் பரணரே ஆவர்.

## பாட்டு - உ௯௯ : தலைவி கூற்று

துறை :—சிறைப்புறமாகத் தோழிக்குக் கிழத்தி உரைத் தது. அஃதாவது, தலைவன் சிறைப்புறத்தே வந்துநிற்றலை அறிந்த தலைவி, அவன் கேட்கும்பொருட்டு அவன் வரவுணராதாள் போன்று தோழிக்குக் கூறுவாளாய்த் தன்னிலையைத் தலைவற் குணர்த்தி வரைவு கடாயது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'நந்தலைவனைக் கண்டன என் கண்களாக, அவன் கூறிய இன்னுரையைக்

மூலமும் உரையும்
௬௬௭

கேட்டன என் செவிகளாக, இங்ஙனம் கண்டும் கேட்டும் அறி

யாத இத்தோள்கள் எற்றுக்கு அவன் மணந்தநாள் நலம் எய்தியும தணந்த நாள் நெகிழ்ந்தும் விடுகின்றன; இஃதொரு வியப்பு' என்கின்றாள்.

௨௯௯. இதுமற் றெவனோ தோழி முதுநீர்ப்
புணரி திளைக்கும் புள்ளிமிழ் கானல்
இணரவிழ் புன்னை யெக்கர் நீழற்
புணர்குறி வாய்த்த ஞான்றைக் கொண்கற்
கண்டன மன்னெங் கண்ணே
யவன்சொற்
கேட்டன மன்னெஞ் செவியே மற்றவன்

மணப்பின் மாணல மெய்தித்
தணப்பின் ஞெகிழ்பவெந் தடமென்
றோளே.

—வெண்மணிப்பூதியார்.

(இ - ள்.) தோழி—, முதுநீர்ப் புணரி திளைக்கும் புள் இமிழ் கானல் - பழையதாகிய நீரையுடைய கடலின் அலைகள் தவழாநின்ற பறவைகள் ஆரவாரிக்கும் கடற்கரைச் சோலையின் கண்ணே, இணர் அவிழ் புன்னை எக்கர் நீழல் - பூங்கொத்துகள் மலர்தலையுடைய புன்னைமரத்தின் கீழ் இடுமணல்மேற் பரவிய நீழலின்கண், புணர் குறி வாய்த்த ஞான்றை - தலைவனோடு கூடும் குறிப்பு எமக்கு வாய்த்த பொழுது, எம்கண் கொண்கற் கண்டன - அத்தலைவனைப் பார்த்தன எமமுடைய இக்கண்களே யாம், எம் செவி அவன் சொற்கேட்டன - எம்முடைய இச் செவிகளே அவன் கூறிய சொற்களைக் கேட்டன, அவன் மணப் பின் மாண் நலம் எய்தி-அவன் நம்மை அணையுங்கால் மாட்சிமை யுடைய அழகை அடைந்து, தணபபின் - அவன் பிரிந்தால், எம் தடமென் தோள் - அவனை என்றும் கண்டும் கேட்டும் அறியாத இப் பெரிய தோள்களே, ஞெகிழ்ப - சோர்வனவாயின, இஃது எவன் - இஃதென்ன வியப்பு!

**விளக்கம்:**—செய்யுளாகலான் சுட்டுச்சொல் முன்வந்தது. எவன் என்வினை இஃதோர் வியப்பு என்னும் பொருள்பட நின்றது. முதுநீர்: அன்மொழித்தொகை. முதிய நீரையுடைய கடல் என்க. நிலந் தோன்றுதற்கு முன்பே கடல் தோன்றிற் றென்பவாகலான், அது முதுநீர் எனப்பட்டது. புணரி - அலை. திளைத்தல் - மோதித் தழுவுதல். இமிழ் - ஆரவாரம். இணர் - பூங்கொத்து. எக்கர் - இடுமணல். அலை கொணர்ந்திட்ட மணல் என்க. எக்கரமேனின்ற புன்னைநீழலில் என்றவாறு; இஃது இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த இடம் கூறியவாறும்.

புணர்குறி வாய்த்தலாவது - புணர்தற்குரிய குறிப்புகளைத் தலைவி உடையளாதல். தலைவனைக் கண்டும் கேட்டுமிராத இத்தோள்கள்



அவன் பொருட்டு இங்ஙனம் மாணலம் எய்துதலும் நெகிழ்தலும் வியப் பாகும் என்றாள் என்க.

இதனால் தலைவன் பிரியுங்கால் தோள் நெகிழ்ந்து மெலிவாளாதலை அவனுக்கு உணர்த்தப் பட்டமை உணர்க.

தான்

## பாட்டு - ௩௦௦: தலைவன் கூற்று

துறை :—இயற்கைப் புணர்ச்சி புணர் ந்த தலைமகன் பிரிவச் சமும், வன்புறையும் கூறியது. அஃதாவது, பாலதாணையால் தலைவியை ஒரு பூம்பொழிலிடத்தே தலைப்பட்டுப் புணர்ந்த தலைவன், தான் அவளைப் பிரியும் நிமித்தம், பிரிவுளதென்பதை உணர்ததிப் பின்னர் 'அவளைப பிரியேன்' என வற்புறுத்தியது.

இதன்கண், தலைவன் தலைவியை நோக்கி, " கூந்தலையும் வாயையும் கித்தியையும் உடைய மாயோயே! 'நீ அஞ்சற்க' என்று யான் கூறிய

சொல்லை அயிராதே கொள் ; கடல் சூழ்ந்த நிலவலயம் முழுதும் நின்னைப் பிரிந்துழிக் கிடைப்பதாயினும் நின்னை யான் பிரியேன் காண்,'' எனக் கூறுகின்றான்.

௩00. குவளை நாறுங் குவையிருங் கூந்தல்
ஆம்பல் நாறும் தேம்போதி துவர்வாய்க்
குண்டுநீர்த் தாமரைக் கோங்கின் அன்ன
நுண்பல் தித்தி மாஅ யோயே
நீயே, அஞ்ச லென்றவென் சொல்லஞ்
சலையே
யானே, குறுங்கா லன்னங் குவவுமணற்
சேக்கும்
கடல்சூழ் மண்டிலம் பெறினும்
விடல்சூ ழலனென் நின்னுடை நட்பே.
—சிறைக்குடி ஆந்தையார்.

(இ - ள்) குவளை நாறும் குவை இரும் கூந்தல் - குவளை மலரின் மணங்கமழாநின்ற கற்றையாகிய கரிய கூந்தலையும்,

ஆம்பல் நாறும் தேம் பொதி துவர்வாய் - ஆம்பல்மலரின் மணங்கமழாநின்ற தேன் பொதிந்த சிவந்த வாயையும், குண்டு நீர்த் தாமரைக் கொங்கின் அன்ன - ஆழமான நீர்நிலையிற் றோன்றிய தாமரைமலரினது தாதை ஒத்த, நுண் பல் தித்தி மாயோயே - நுண்ணிய பலவாகிய சுணங்கினையும் மாமையையும் உடையவளே!, நீ அஞ்சல் என்ற என் சொல் அஞ்சலே - நீ அஞ்சாதே கொள் என்று யான் கூறிய சொல்லைக்கேட்டு அஞ்ச வருவதும் உளதோ என்று கருதி அஞ்சாதேகொள், யான் குறுங்கால் அன்னம் குவவு மணல் சேக்கும் கடல் சூழ் மண்டிலம் பெறினும் - யான் நின்னைத் துறந்துழிக் குறிய காலை யுடைய அன்னம் குவிந்த மணலிடத்தே தங்காநின்ற கடலாற்



சூழப்பட்ட நிலவலயம் முழுதும் பெறக்கிடப்பினும், நின்னுடை நட்பு விடல் சூழலன் - நினது நட்பினை விடுதலைக் கருதேன் காண்!

**விளக்கம்** :—குவளை, ஆம்பல், தாமரை என்பன அவற்றின் மலர்களுக்கு ஆகுபெயர்கள். குவை - குவியல்; ஈண்டுத் கற்றை என்க. இருமை, நிறத்தின் மேற்று. தேம் - தேன். ஈண்டுத் தலைவியின் வாலெயிறூறிய நீரைக் கருதிக் கூறினன் என்க. இயற்கைப் புணர்ச்சிக் கண் தலைவியினது கூந்தற் பாயலிலே கிடந்து வாலெயிறு ஊறிய தேன் பருகினனாகலின் அந்நுகர்ச்சி தோன்றக் கூந்தல் வாய் தித்தி மாமை முதலியவற்றை விதந்தோதினன என்க. இதனால் தலைவியைத் தலைவன் நயந்தமை விளக்கினான். அஞ்சல் என்ற சொல் அஞ்சாதே என்பதாம். இயற்கைப்புணாசசி எய்திய தலைவன் இனி ஆயத்தார் அறியாமைப் பொருட்டுத் தான் பிரியக் கருதுவான், புணர்ச்சிக் கின மாகிய பிரிவென்பதும் ஒன்று உளது என அவள் அறியும் பொருட்டு, 'யான் சென்று வருவன், நீ அஞ்சற்க' என்ற வழித் தலைவி நடுங்கிப் பிரிவென்பதும் ஒன்றுளது போலும் என அஞ்சிய வழிக் கூறிய தென்க. அங்ஙனம் அஞ்சியவளை, யான் இஙஙனம் பிரியினும் நின்னட்பை விடுவேனல்லேன் எனத் தலைவி மனங் கொளத்தேற்றித் தெளிவகப் படுத்துதற்குக் 'கடல் சூழ்மண்டிலம் பெறினும் விடல் சூழலன் யான் நின்னுடை நட்பே', என்றான். நின்னைப் பிரிந்து பெறும சிறப்புடைப் பொருள் யாண்டுமில்லை என்பான், கடல் சூழ் நிலவலயத்தையே எடுத்துக் காட்டினான். இதனால் காதலின்பத்தினும் உயர்ந்த இன்ப மில்லை என்பது அவன் கருத்தாதலும் அறிக.

கொங்கு - தாது. தித்தி - சுணங்கு. மாயோள் - மாமைநிற முடையவள். மாயோயே: விளி. அஞ்சல் - அஞ்சாதேகொள். அஞ்சலை - அஞ்சற்க. உலகம் முழுதும் என்பான், - 'கடல் சூழ் மண்டிலம்' என்றான். விடல் சூழ்தல் - விடக் கருதுதல்.

குறுங்காலன்னம் குவவு மணற் சேக்கும் என்றது, அன்னப்பறவை தனககுத் தகுந்த வெண்மணற் குன்றை விரும்பி ஆண்டே உறைந்தாற் போன்று யானும் நின்னிடத்தேயே உறைவன் என்னும் குறிப்பிற்று.

## பாட்டு – ௩0௧ : தலைவி கூற்று

துறை :—'வரைவிடை வைப்ப ஆற்றகிற்றியோ' என்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, தலைவன் வரை விடைவைத்துப் பொருளீட்டச் சென்ற பொழுது, 'நீ அவனைப் பிரிந்துறையவல்லையாயிருந்தனையோ?' என்று வினைய தோழிக் குத் தலைவி அப்பொழுதுற்ற தன்னிலையைத் தெரித்தோதியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கித், தலைவன் பிரிந் துறைந்த ஒவ்வோரிரவும், நள்ளிரவின் கண்ணே அவன் மணி யுடை நெடுந்தேர் வாராத பொழுதும் சேய்மைக்கண் வருவது போன்று என் செவிகளிலே மணியொலி ஒலியா நிற்கும். செவிகள் அவ் வொலியை இடையறாது ஓர்ப்பனவாகக் கண்களோ துயில் துறந்தன' என்கின்றாள்.

கு.—29



௩௦௧. முழவுமுத லரைய தடவுநிலைப் பெண்ணைக்

கொழுமட லிழைத்த சிறுகோற் குடம்பைக்

கருங்கா லன்றிற் காமர் கடுஞ்சூல்

வயவுப்பெடை யகவும் பானாட் கங்குல்

மன்றம் போழும் இனமணி நெடுந்தேர்

வாரா தாயினும் வருவது போலச்
செவிமுத லிசைக்கு மரவமோடு
துயில்துறந் தனவால் தோழியென்
கண்ணே.

—குன்றியனார்.

(இ - ள்.) தோழி—, முழவு முதல் அரைய தடவு நிலைப் பெண்ணை - முழவை ஒத்த அடிமரத்தினையுடைய வளைந்து நிற்றலையுடைய பனையினது, கொழு மடல் இழைத்த சிறு கோல் குடம்பை - கொழுவிய மடலின்கண்ணே இயற்றிய சிறிய சுள்ளிகளாலாய கூட்டின்கண் இருந்து, கருங்கால் அன்றில் காமர் கடுஞ்சூல் வயவுப் பெடை அகவும் - கரிய காலையுடைய ஆண் அன்றிலை அதற்கு விருப்பத்தையுடைய முதற் சூல் கொண்டுள்ள வயாநோயையுடைய பெண்ணன்றில் அழையாநிற்கும், பானாள் கங்குல் - நடுநாளாகிய இனமணி நெடுந்தேர் இரவின்கண்ணே, மன்றம் போழும் - தனது உருளாலே அம்பலத்தைப் பிளந்து கொண்டுவருதற்குக் காரணமான திரளாகிய மணிகளை யுடைய தலைவனது நெடிய தேர், வாராதாயினும் வருவது போலச்

செவிமுதல் இசைக்கும் அரவமொடு - வாராதாக

இருப்பினும் வருவது போன்று செவியினிடத்தே ஒலியாநின்ற தோர் ஓசையாலே, என்கண் துயில் துறந்தன - எனது கண்கள் அந்நாள்களெல்லாம் உறங்கா திருந்தன காண்.

விளக்கம் :—வரைவிடைக் கிடந்த நாள் எல்லாம் அவர் வருவர்

வருவர் என்று எதிர்பார்க்கும் எண்ணம பற்றுக் கோடாக ஆற்றியிருந் தேன் என்றவாறு. இதனை "இரவுக்குறி பிழைத்த விடத்துத் தலைவி கூறியது" என்பர் நச்சினார்க்கினியர். தலைவன் வருகையை மன மொருங்கி ஆராய்கின்றாளாகலின், சேய்மைக்கண் மணி யொலிப்பது போன்று தலைவிக்குத் தோன்றிற்று. இங்ஙனம் தோன்றுதலை நமது அனுபவத்தினும் சிற்சில செவ்விகளிற் காணல் கூடும். முழவு - குட முழா. இஃது பனையின் அடிப்பகுதிக்கு உவமை. தடவு - வளைவு. "தடவென் கிளவி கோட்டமும் செய்யும்" (உரி - உ௩.) என்பது தொல்காப்பியம்.

இதனை 'எதிர் பெய்து பரிதல்' என்னும் மெய்ப்பாட்டிற்குப் பேராசிரியர் எடுத்துக் காட்டுவர். அஃதாவது, "உருவு வெளிப்பாடு; அது தலைமகனையும் அவன் தேர் முதலாயினவற்றையும் தன்னெதிர் பெய்துகொண்டு பரிந்து கையறுதல்" (தொல். மெய்ப் - உ௨.) என்பதாம்.

## மூலமும் உரையும்

௪௫௧

சிறு கோல் - சிறிய சுள்ளிகள். முட்டையீனும் பருவமாகலின் அன்றில் சிறு கோல்களாற் குடம்பைசெய்து அதன்கணிருந்த தென்க.

குடம்பை - கூடு.

அன்றிற் பெடை யகவுதல் தன் காமநோயை மிகுவித்தமையின் அதனை நினைந்து கூறினள். மன்றம் - ஊரம்பலம். இனமணி-திரளான மணிகள். இனமணி என்றது, இசைக்கும் அரவம் மணியரவம் என்றற்குக் குறிப்பேதுவாயிற்று.

## பாட்டு : ௩௦௨ : தலைவி கூற்று

துறை :—வரைவிடைக் கவன்ற தோழிக்குக் கிழத்தி சொல்லியது. அஃதாவது, வரைபொருளீட்டற்குத் தலைவன் பிரிந்தமையை ஆறறாத தலைவியின் நிலைகண்டு வருந்திய தோழிக்குத் தலைவி, தன் ஆற்றாமைக் காரணம் தெரித்தோதியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'அன்னே நந் தலைவன் இவ்வூர் அலர் தூற்றுதலை அஞ்சி வாரானாயினனே! அவன் வாராமையானே உண்டாகும் துன்பத்திற்கு யான் அஞ்சுகின்றேன்! இறந்துபடவும் பெரிதும் அச்சம் உண்டாகின்றது; ஊர் துஞ்சு யாமத்தேனும் என் நெஞ்சில் வருதலன்றி அவன் நேரே வருதலின், யான் எங்ஙனம் ஆற்றுவேன்?' என்கின்றாள்.

௩௦௨. உரைத்திசின் தோழியது புரைத்தோ அன்றே
அருந்துயர் உழத்தலும் ஆற்றும்
இதன்றலைப்
பெரும்பிறி தாகல் அதனினும் அஞ்சுதும்

அன்னே இன்னும் நன்மலை நாடன்
பிரியா நண்பினர் இருவரும் என்னும்
அலரதற் கஞ்சினன் கொல்லோ
பலருடன்
துஞ்சூர் யாமத் தானுமென்
நெஞ்சத் தல்லது வரவறி யானே.

—மாங்குடிகிழார்.

(இ - ள்) தோழி—, அருந்துயர் உழத்தலும் ஆற்றும் - பொறுத்தற்கரிய துயரானே வருந்துதலைப் பொறுத்தற்கும் ஆற்றல் இலேம், அதன்றலை பெரும்பிறிது ஆகல் அதனினும் அஞ்சுதும்—அதற்குமேல், இறந்துபடுதலையோ அவ் வருத்தத்தை அஞ்சுதலினுங் காட்டிற் பெரிதும் அஞ்சாநின்றேம், அன்னே—ஐயகோ, இன்னும் நல் மலை நாடன் - யான் இந்நிலை எய்திய பின்னரும் நலல மலைநாட்டையுடைய தலைவன், இருவரும் பிரியா நண்பினர் என்னும் அலரதற்கு அஞ்சினன் கொல்- இவ் விருவரும் பிரியாத நண்பர்களாயினர் என்று இவ் வூரினர்



கூறும் பழியை அஞ்சுகின்றான் போலும், ஊர் பலருடன் துஞ்சு யாமத்தானும் - ஊரிலுள்ளோர் பலரும துயிலாநின்ற நடு இரவின்கண்ணும், என் நெஞ்சத்து அல்லது வரவு அறியான் - என்

நெஞ்சின் கண்ணே நினைவுருவாய் வருவதல்லது என்பால்
வருதலை அறிந்திலன், அது புரைத்தோ
உயர்ந்ததாகுமோ? ஆகாதே!
அன்றே - அச் செயல்

**விளக்கம்** :—உரைத்திசின் : இசின் - அசைநிலை. அது என்னும் சுட்டு வரவறியாமையைச சுட்டிச் செய்யுளாகலின் முன் வந்தது. புரைத்து - உயர்வுடையது. புரைத்தோ என்பதில், ஓகாரம் வினா. அன்றென்றது - புரைத்தன்று என்றவாறு. "புரை உயர்வாகும்" (உரி.) என்பது தொல்காப்பியம் அருந்துயர் - பொறுத்தற்கரிய காமத் துன்பம். ஆற்றுதவழி - இறந்துபாடு. அத் துன்பததிற்கு உய்தியாக வும், அதனைப் பெரிதும் அஞ்சுகின்றேன் அளியேன் என்பாள், 'பெரும் பிறிதாகல் அதனினும் அஞ்சுதும்,' என்றாள். இங்ஙனம் கூறும் பொழுதே ஆற்றாமை எய்தினமையின், 'அன்னே,' என்று விளிந்தாள். 'அன்னே,' இரக்கக் குறிப்பிடைச் சொல். இன்னும் என்றது யானிந் நிலை எய்திய பின்னரும் என்றவாறு.

நன்மலை நாடனாயிருந்தும் தகாது செய்தனன் என்பாள், 'நன்மலை நாடன்,' என்றாள் ஊர் பலருடன் துஞ்சும் யாமம் என மாறுக. வினைப் பகலில் வருதற்கு இடையூறு உளவாயினும் நள்ளிரவில் நம்மைக் காணவருதல் அவற்கு எளிதாகவும் அதுவும் செய்திலன் என்பாள், 'யாமத்தானும் வர வறியான்,' என்றாள். கண்கூடாக எதிர்வந்து அருளாதான் என்கொலோ நெஞ்சத்தின்கண் வந்து என்னைப் பீழிப் பது என்பாள், 'நெஞ்சத் தல்லது வரவறியான்,' என்றாள. வரவறியான் நெஞ்சத்தும் வாரானாயின் ஆற்றுவேன் மன் என்றபடி.

எனவே, அவனை மறக்க வியலாமையின் ஆற்றேனாகின்றேன்; மறத்தல் என் வரைத்தன்றே என்று கூறியவாறாயிற்று.

## பாட்டு - ௩௦௩ : தோழி கூற்று

துறை :—செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது. அஃதாவது,

தலைவியின் வேறுபாடறிந்த தாய், அவளை இற்செறித்தற்குக் கருதியிருத்தலைத் தோழி தலைவனுக்கு அறிவுறுத்தி வரைந்து கொள்ளத் தூண்டியது.

இதன்கண், தலைவனை நோக்கித் தோழி, 'துறைவனே ! தலைவி இனிய நிழலையுடைய புன்னைநீழலிலே பொன்னிற அலவன் ஆட்டிப பிரிந்தபொழுதே புறத்தார் அறியும்படி பசந்தாள்,' என்று உணர்த்துகின்றாள்.

௩௦௩. கழிதேர்ந் தசைஇய கருங்கால் வெண்குரு
கடைகரைத் தாழைக் குழீஇப்
பெருங்கடல் உடைதிரை ஒலியில் துஞ்சுந்
துறைவ

மூலமும் உரையும்

தொன்னிலை நெகிழ்ந்த வளைய ளீங்குப்
பசந்தனள் மன்னெஎன் தோழி யென்னொடும்
இன்னிணர்ப் புன்னையம் புகர்நிழற்
பொன்வரி அலவன் ஆட்டிய ஞான்றே.

—அம்மூவனார்.

(இ - ள்.) கழி தேர்ந்து அசைஇய கருங்கால் வெண்குருகு - கடற்கழியின்கண் இரை தேர்ந்துண்டு இளைப்புற்ற கரிய காலையுடைய வெள்ளிய நாரைகள், அடை கரைத் தாழைக் குழீஇ - நீரடைகரையின்கண் தாழையின்மேல் கூடி, பெருங்கடல் உடைதிரை ஒலியில் துஞ்சும் துறைவ - பெரிய கடலினது உடைகின்ற அலையின் ஆரவாரத்தாலே உறங்காநின்ற கடற்றுறையையுடைய தலைவனே! இன் இணர்ப் புன்னை அம் புகர் நிழல்-கண்ணுக்கினிய பூங்கொத்துக்களையுடைய அழகிய புள்ளிகளையுடைய நிழலிலே, என்னொடு பொன் வரி அலவன் ஆட்டிய ஞான்றே - என்னோடே பொன்னிறமான வரிகளையுடைய நண்டுகளை அலைத்து விளையாடியபொழுதே, தொல் நிலை நெகிழ்ந்த வளையள் - தம் பழைய நிலையாகிய செறிவினின்றும் நெகிழ்ந்த வளையல்களை உடையளாய், என் தோழி ஈங்கு மன் பசந்தனள் - என் தோழியாகிய தலைவி இவ்விடத்தே மிகவும் பசந்தாள்.

**விளக்கம்** :—பண்டு புன்னையம் புகர்நிழலிலே தலைவியும் தோழியும் நண்டினை அலைத்து விளையாடியபொழுது தலைவன் தலைவியைக் கூடிப் பிரிந்தான்; பிரிந்தபின்னர் உடனே தலைவி மேனி, பசலை பாய்ந்தது. எனவே, நின் கூட்ட நாளிலேயே இவள் பசந்தாள் என்றற்கு, 'என்னொடு அலவனாட்டிய ஞான்'றென அந்நாளைக் குறிப்பான் உணர்த்தினாள். அஞ்ஞான்றே பசந்தவள் மேலும் மேலும் மெலிந்து புறத்தார்க்குப் புலப்படும்படி வேறுபட்டாள். இனி அன்னையால் இற்செறிக்கப்படுவாள் என்பது குறிப்பு. வளை நெகிழ்வு உடல் மெலிவையும், பசப்பு நிற வேறுபாட்டையும் விளக்கின. தொன்னிலை என்றது நின்னைக் காணுமுன்னர் இருந்த நிலை என்றவாறு.

கழியில் இரை தேர்ந்து இளைத்த குருகு, தாழையிற் குழீஇத் திரையொலியில் துஞ்சும் என்றது, களவொழுக்கத்தின்கண் குறியிடம் பெற்று அரிதினெதிர்ந்து இன்புற்றும் நிரம்பாது இளைத்த நீவிர், இனி வரைந்துகொண்டு ஓரில்லத்தே யிருந்து அறஞ் செய்யுமாற்றால் உலகம் புகழும் இசையிலே இன்புற்றுறையக் கடவீர் என்னும் உள்ளுறை தோற்றி நின்றது.

## பாட்டு - ௩0௪ : தலைவி கூற்று

துறை :—வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, களவுக் காலத்தே தலைவன்

வரையாது வைத்துத் தலைவியைப் பிரிந்தானாக, அப் பிரிவாற்
றாது வருந்தும் தலைவியைக் கண்டு தோழி வருந்தினள்; அத்
தோழிக்குத் தலைவி தன் ஆற்றாமைக்குக் காரணம் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'பூக்கள் நெருங்கிய
கடற்கரைச் சோலையையும் குளிர்ந்த கடலையுமுடைய தலைவ
னோடே இனிதென்று கருதி நட்புச் செய்ததன் வாயிலாய் நாம்
நமக்கு இன்னாமையே தேடிக்கொண்டோம்,' என்று வருந்து
கின்றாள்.

௩௦௪. கோல்வினைப் பொலிந்த கூர்வா யெறியுளி
முகம்பட மடுத்த முளிவெதிர் நோன்காழ்
தாங்கரு நீர்ச்சுரத் தெறிந்து வாங்குவிசைக்
கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீ னெறிய
நெடுங்கரை யிருந்த குறுங்கா லன்னத்து
வெண்டோ டிரியும் வீததை கானற்
கைதையந் தண்புனற் சேர்ப்பனொடு
செய்தனெ மன்றவோர் பகைதரு நட்பே.

—கணக்காயர் தத்தனார்.

(இ - ள்.) தோழி, கொல் வினைப் பொலிந்த கூர்வாய் எறிஉளி முகம்பட மடுத்த - கொற் றொழிலாலே பொலிவு பெற்ற கூரிய வாயையுடைய எறியுளி என்னுங் கருவி யினது முகத்திலே பொருந்தும்படி கட்டப்பட்ட, முளி வெதிர் நோன் காழ் - உலர்ந்த மூங்கிலினது வலியுடைய கழியை, தாங்கரு நீர்ச் சுரத்து எறிந்து - தாங்குதற்கரிய நீரையுடைய
வழியிலே வீசி, விசைவாங்கு கொடுந்திமில பரதவர்-விசைத்து இழுக்கின்ற வளைந்த திமிலையுடைய பரதவா, கோட்டு மீன் எறிய - கொம்புடைய சுறுமீனை அங்ஙனம் எறியாநிற்ப, நெடுங் கரை இருந்த குறுங்கால் அன்னத்து வெண் தோடு இரியும் - அவ்வாரவாரத்தாலே நெடிய கடற்கரைக்கண் இருந்த
குறிய காலையுடைய அன்னப்பறவைகளின் வெள்ளிய கூட்டம் கெட்டோடுகின்ற, வீததை கானல் - பூக்கள் செறிந்த கடற் கரைச் சோலையினையுட, கைதையும் தண் புனல் - தாழைகளையும் அழகிய குளிர்ந்த நீர்நிலைகளையுமுடைய, சேர்ப்பனொடு - நெய் தனிலத் தலைவனோடே, மன்ற ஓர் பகைதரு நட்புச் செய்தனெம்-
யாம் தேற்றமாக நமக்குப் பகையைத்

கேண்மையையே செய்துகொண்டேம்.
தருகின்றதொரு

## மூலமும் உரையும

சரு௫

**விளக்கம்** :—கொல்வினை - கொல்லர்கள் செய்யும் தொழில்; கொலைத் தொழிலிலே பொலிவு பெற்ற எளினுமாம். எறியுளி - படகி லிருந்து மீனின்மேல் எறிதற்குரியதொரு கருவி என்க.

இவ்வுளி உலர்ந்த மூங்கிற் கழியின்றலையிலே கயிற்றாலே யாக்கப் பட்டிருத்தலின், முகம்பட மடுத்த முளிவெதிர் நோன் காழ் எனப் பட்டது. முகம் என்றது அம்மூங்கிலின் நுனியை. முளிவெதிர் - உலர்ந்த மூங்கில். வலிய மீன்களையும் எறிய வேண்டுதலின் நோன்காழ் என்றார். நோன்காழ் - வலிய கழி. பரதவர் - நெய்தனில மாக்கள் கோட்டுமீன் - சுறுமீன். இம்மீன்முகத்தே கொம்புடையதாகலின் கோட்டுமீன் எனப்பட்டது.

எறிய என்றது, எறிந்தவழி அம்மீன் செய்யும் ஆரவாரத்தால் என்றவாறு. செயவெனெச்சம் காரணப் பொருளில் வந்தது. நெடுங் கரையிருந்த குறுங்காலன்னம் என்புழி முரண்தொடை இன்பம் தோன்றுதலுணர்க. அன்னம் தூய வெண்ணிற முடைத்தாகலின் அதன் குழாம் வெண்டோடு எனப்பட்டது. தோடு - கூட்டம் வெண் ணிறக் கூட்டம் என்க. இரிதல் - கெட்டோடுதல். பரதவா மீனெறியக்

கரையிருந்த அன்னக்குழாம் இரியும் என்றது, யாம் தலைவனோடே நட்புச் செய்ய நம் பெண்மை நலம் முழுதும் இரிந்தது என்னும் உள்ளுறை தோற்றி நின்றது. பகை என்றது, காரியத்தைக் காரணமாக உபசரித்தபடியாம். துன்பம்தரும் நட்பென்க. மன்ற: தேற்றத்தின் கண் வந்தது. பகை தருதலாவது - வளை கழலலும் தோள் மெலிதலும் இன்னோரன்ன பிறவும் செய்தல் என்க.

## பாட்டு – ௩௦௫. தலைவி கூற்று

துறை :—காப்பு மிகுதிக்கண் தோழி அறத்தொடு நிற்பா ளாக, தனது ஆற்றாமை தோன்றத தலைமகள் தன்னுள்ளே

கூறியது. அஃதாவது, தமரானே காவற்பட்டு ஆற்றாளாய தலைமகள், தன் களவு ஒழுக்கத்தைத் தோழி யாய் முதலியோர்க்கு, வெளிப்படுத்தற்பொருட்டுத் தன் ஆற்றாமை தோன்றத தனக்குள்ளே கூறியது.
அறத்தொடு நின்றது.

எனவே, தலைவி தோழிக்கு

இதன்கண், தலைவி தோழி கேட்பத் தனக்குள்ளே, 'எனது கண் தேடித்தந்த காம நெருப்பு என் என்புதியச் சுடினும், அவரை முயங்கற்கோ அவரைக் காண்கின்றிலேன் ; மற்று, அவரும் என்னிலை யுணர்ந்து தாமே வந்து அருள் செய் வாருமல்லர் ஆயினர் ;

ஈண்டு யான் உற்ற நோயை நீக்குமாற்
றாலே எனக்குத் துணையாவார் பிறரையும் உடையேனல்லேன் ;
இனி அழிந்தவாறே முழுதும் அழியவேண்டியவளாயினேன்'
என்று கூறுகின்றாள்.

௩௦௫. கண்தர வந்த காம ஒள்ளேரி
என்புற நலியினும் அவரொடு பேணிச்



சென்றுநாம் முயங்கற் கருங்காட் சியமே
வந்தஞர் களைதலை அவராற் றலரே
உய்த்தனர் விடாஅர் பிரித்திடை களையார்
குப்பைக் கோழித் தனிப்போர் போல
விளிவாங்கு விளியி னல்லது
களைவோர் இலையா முற்ற நோயே.

—குப்பைக்கோழியார்.

(இ - ள்.) கண் தர வந்த காம ஒள் எரி - இக்கண்கள்
கண்டு தந்தமையாலே உண்டாகிய காமமாகிய ஒள்ளிய நெருப்பு, என்புற நலியினும்-எம்முடைய எலும்பினைப் பொருந்திச் சுட்டு வருத்துவதாகும பொழுதும், அவரொடு பேணிச்
சென்று நாம் முயங்கற்கு - நந்தலைவர்பால் விருமபிச் சென்று யாமே அவரைத் தழுவிக் கொள்ளுதற்கோ எனின், அருங்காட்சியம் - அவரைக் காண்டல் அரியமாயினேம், அவர் வந்து அளர் களைதல் ஆறறலர்-இனி அவருந்தாம் எளிவந்து நமது துன் பத்தை அகற்றுதல் செய்யார், உய்த்தனர் விடாஅர் பிரித்து இடை களையார் - இந் நிலையினேமாகிய எம்பால் பிறர் அவரைச் செலுத்தி விடுவாருமிலர்; அல்லது இவ் விடத்தினின்றும் எம்மைப் பிரித்து அவர்பால் சேர்த்து எம்மின்னலைக் களைவாரும் இலர், யாம் உற்ற நோய் குப்பைக் கோழித் தனிப் போர் போல - இங்ஙனமாகலின்
யாம் கொண்டுள்ள காம நோய் குப்பையின்கண் கோழிகள் இடும் தனிமையுடைய போர் போன்று, விளிவாங்கு விளியின் அல்லது—தானே அழியுங் காலத்தே அழிவதன்றி, களைவோர் இலை - அதனை இடையே நீக்கித் துணை செய்வோர் யாருமிலர்.

விளக்கம் :—பாலதாணையால் தலைவி தலைவனை ஒரு பூம்பொழி விடத்தே தலைப்பட்டவிடத்து முதன்முதலாக அவனைத் தன் கண்ணாலே கண்டு காமுற்றாளாகலின், கண்தர வந்த காமம் என்றாள். "கண் வழி நுழையுமோர் கள்வனே கொலாம்" (கம்பரா-மிதிலைக் காட்சி-ருகு.) என்னும் கம்ப நாடர் செய்யுள் தொடர் ஈண்டு நினைந்தின்புறற் பாலது. உலக நெருப்பின் இது வேறென்பாள், 'காம வொள்ளெரி' என்றாள்:

" ஊரு ளெழுந்த உருகெழு செந்தீக்கு
நீருட் குளித்தும் உயலாகும்—நீருட்
குளிப்பினும் காமஞ் சுடுமேகுன் றேறி
ஒளிப்பினும் காமஞ் சுடும்." (நாலடி-கூ0)

எனவும்,



" தொடிற்சுடின் அல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ." (குறள்-ககருக)

எனவும் பிற சான்றோரும் ஓதுதல் உணர்க.
மெலிந்து என்புந் தோன்றும்படி எனினுமாம்.
என்புற என்றதற்கு

அருங் காட்சியம் - காட்சி யரியம் என்றவாறு. யாமும் சென்று காணவல்லேம் அல்லம்; அவரும் வந்து அளிசெய்வாருமிலர். இவ் வழி அவரை எம்பால் உய்த்து விட்டேனும் எம்மை இடைப்பிரித்து அவரிடைச் சேர்த்தேனும் உதவுவார் பிறரும் இலர் என்பாள், 'உய்த்தனர் விடாஅர், பிரித்து இடைகளையார்' என்றாள். இடைப்பிரித்துக் களையார் என மாறுக. இடை - இடம். அஃதாவது இற்செறிப்புண்ட இடம் என்க. இரண்டிலொன்றைச் செய்து இடர் களைவது தோழியின் கடமையாகவும், அவள் ஒன்றுஞ் செய்யாது வாளாகிடக்கின்றாள் என்று வைதபடியாம். குப்பையிடத்துக் கோழி போரிடுங்கால் ஆற்றுந்துணையும் பொருது ஆற்றாவழித் தாமே நிறுத்துதல் போன்று எந் நோய் நலியுந்துணையும் நலிந்து யான் இறந்து பட்டுழி நிற்கும் போலும் என்றவாறு. போர்ப்பொருட்டு வளர்த்த கோழிகள் போரிடுங்கால் காண்போர் கூட்டமும் விலக்குவாருமுளராகலான், காண்போரும் விலக்குவோருமில்லாத குப்பைக் கோழிப் போரினை உவமை கூறினாள்.

எனவே யான் அவரை எய்தும்படி அறத்தொடு நின்று மறை வெளிப்படுத்து, அவ்வழித் தலைவரை எம்பால் உய்த்து என்னை உயக் கொள்ளுதி என்பது குறிப்பு.

"யான் உற்ற நோய்" எனப் பாடமோதுவாருமுளர். அவர் நாமுயங்கற்கு, அருங்காட்சியம் எனவரும் பன்மை நோக்கிலர்.

## பாட்டு - ௩௦௬ : தலைவி கூற்று

துறை .—காப்பு மிகுதியால் நெஞ்சு மிக்கது

வாய் சோர்ந்து கிழததி உரைத்தது அஃதாவது,

காவன் மிகுதியால் பெரிதும்

வருந்திய தலைவி, தலைவனைக் காணுங்கால் அவனோடு சிறிது மாறுபட வேண்டும் என்று கருதியிருந்தவள் அவனைக் கண்டுழி, அவன்பால் விருப்பமே மீதூரப்பெற்றுத் தான் கருதியவாறு

வேறுபாடுகாட்டி ஒழுகாது பட்டாங்கொழுகி அவன் பின்னர்த் தன் னெஞ்சத்தைக் கடிந்து கூறியது.

போய

இதன்கண், தலைவி தன் நெஞ்சினை விளித்து, 'நெஞ்சே நீ மடவைகாண்! அவன் வாராத பொழுது யான் நினக்கு அவனோடு இனியன பேசேல் என எத்துணைக் கூறியும், அவனைக் கண்டவுடனே அவற்றை மறந்து அவனோடு இனியவே கூறி அளவளாவுகின்றனை; இஃதென்கொலோ!' என்று கடிந்துரைக்கின்றாள்.

௬௫அ குறுந்தொகை

௩௦௬. மேல்லிய இனிய மேவரு தகுந
இவைமோழி யாமேனச் சோல்லினு
மவைநீ

மறத்தியோ வாழியென் னெஞ்சே
பலவுடன்
காமர் மாஅத்துத் தாதமர் பூவின்
வண்டுவீழ் பயருங் கானல்
தண்கடற் சேர்ப்பனைக் கண்ட பின்னே.
—அம்மூவனர்.

(இ - ள்.) என் நெஞ்சே - எனது நெஞ்சமே! மெல்லிய இனிய மேவரு தகுந இவை மொழியாம் எனச் சொல்லினும் — மென்மையுடையனவும் இன்பம் பயப்பன வும விரும்பத் தகு வனவும் ஆகிய இத்தகைய மொழிகளை அவரைக் கண்டபொழுது கூறமாட்டேம் என்று பன்முறை உனக்கு யாம் அறிவுறுத் திருந்தும், காமர் மாஅததுத தாதமர் பூவின் வண்டு பலவுடன் வீழ்பு அயரும்-அழகிய மாமரத்தினது தாதுக்கள் பொருந்திய மலரின்கண்ணே வண்டுகள் பலவும் ஒருஙகே வீழ்ந்து மயங்கா நின்ற, கானல தண்கடல் சேர்ப்பனைக் கண்டபின - கடற்கரைச் சோலையினையும் குளிர்ந்த கடலையும் உடைய தலைவனைக்கண்ட போது, அவை நீ மறத்தியோ-அவ்வறிவுரைகளை நீ மறந்து விடு கின்றனையோ? நீ அளியை காண்.

**விளக்கம்:**—மெல்லிய - ஓசையாலே மெல்லியவாகிய மொழி. இனிய - கேட்டார்க்கு இன்பம் பயப்பன. மேவரு தகுந - விரும்பத் தகுவன; ஆகியபண்புடைய இவைகளே என்க. தன்னெடு நெஞ்சிற்கு வேற்றுமையின்மையின் மொழியாம் என்றாள். எனச சொல்லுதல் - என்று திண்ணமாக நினைத்தல். அவை-அவ்வறிவுரைகளே. பன்முறையும் கருதினமை தோன்ற அவை எனப் பன்மை கூறினள். தலைவனைக் காணுத போதெல்லாம் அவனது தவற்றையே கருதியிருந்து, கண்டவுடனே அவற்றை மறந்து அவனை வரவேற்பவளாகின்றேனே என்று இரங்கியபடியாம். இங்ஙனம் ஊடக்கருதுதல் வரைவுகடாதற் பொருட்டாகலின், ஊடாமை வரைவு நீட்டித்தற்கேதுவாய் நமக்கு இன்னுவாகின்றது என்பது கருத்து.

> "புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சம்
> கலத்த லுறுவது கண்டு." (குறள்-கஉருக)

> "நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
> புணர்ந்தூடி நிற்பே மெனல்." (குறள்-கஉகூ0)

எனவரும் அருமைத் திருக்குறட்பாக்கள் ஈண்டு நினையற் பாலன.

மா அத்துத் தாதமர் பூவின் வண்டு வீழ்ந்து ஆண்டுப்படும் கள்ளுண்டு மயங்கிஞற் போன்று நீயும் தலைவனைக் கண்டுழி மயங்காநின்றனை என்பது குறிப்பாகக் கொள்க.

## பாட்டு - ௩௦௭ : தலைவி கூற்று

துறை:—பிரிவிடைக் கடுஞ்சொற் சொல்லிய தோழிக்குக் கிழத்தி சொல்லியது.
அஃதாவது, தலைவன் பிரிந்திருந்த காலத்தில் ஆற்றாமைமிக்க தலைவியை, 'நீ ஆற்றியிருத்தலே நன்று; இங்ஙனம் ஆற்றாயாதல் நினக்குப் பீடன்'றென இடித்துரைத்த தோழிக்குத் தலைவி கூறியது.

இதன்கண், தலைவி கடிந்துரைத்த தோழியை நோக்கி, 'களிற்றியானை தன் பிடியானையினது பசித்துன்பங் கண்டு அது பொறாது யாமரத்தின் பட்டையை உரித்துக் கையிற்கொண்டு அதன்கட் பசைகாணாது அண்ணாந்து வருத்தத்தோடே முழங்கா நின்ற பாலை நிலததே, யாம் அழும்படி நம்மைப் பிரிந்து சென்ற நந்தலைவர் நமமை மறந்தனா போலும், உதோ வானத்தின்கண் ஐயென வெண்பிறை தோன்றி நம்மை நலியாநின்றது; யாம் எங்ஙனம் ஆற்றியிருக்க வல்லேம்' என்கின்றாள்.

௩௦௭. வளையுடைத் தனைய தாகிப் பலர்தொழச்
செவ்வாய் வானத் தையெனத் தோன்றி
இன்னம் பிறந்தன்று பிறையே அன்னோ

மறந்தனர் கொல்லோ தாமே களிறுதன்
உயங்குநடை மடப்பிடி வருத்த நோனது
நிலையுயர் யாஅந் தொலையக் குத்தி
வெண்ணார் கொண்டு கைசுவைத்

தண்ணாந்

தழுங்க னெஞ்சமொடு முழங்கும்
அத்த நீளிடை அழப்பிரிந் தோரே.

—கடம்பனூர்ச் சாண்டிலியனார்.

(இ - ள்.) தோழி—, வளை உடைத்து அனையது ஆகி-சங்கினை உடைத்தாற் போன்றதாக, பலர் தொழ செவ்வாய் வானத்து ஐயெனத் தோன்றி-உலகினர் பலரும தொழாநிற்பச் சிவந்த இடத்தையுடைய மேலைவானத்தின்கண் விரைந்து தோன்றி, பிறை இன்னம் பிறந்தன்று-பிறைத்திங்கள் இன்னும் பிறந்தது, களிறு தன் உயங்கு நடை மடப் பிடி வருத்தம் நோனது - ஆண் யானை தனது வருந்திய நடையினையும் மடப் பத்தையும் உடைய பிடியானையினது பசிவருத்தத்தைக் கண்டு பொறுக்கலாற்றாது, உயர் நிலை யாஅம் தொலையக் குத்தி-உயர்ந்து நிற்றலையுடைய யாமரம் அழியும்படி தன் மருப்பாலே குத்தி, வெள் நார் கொண்டு - உலர்ந்து வெள்ளிதாகிய பட்டையை உரித்துக் கையிற்கொண்டு, கைசுவைத்து -

குறுந்தொகை

யினை நாவானே சுவைத்துப்பார்த்துச்

சுவையின்மையாலே,

அண்ணாந்து அழுங்கல் நெஞ்சமொடு - அம்மரத்தின் உச்சியை நோக்கி வருத்தமுடைய நெஞ்சத்தோடே, முழங்கும் அத்தம் நீள் இடை-முழங்குதற்குக் காரணமான வழிநெடிதாகிய பாலையிடத்தே, அழப்பிரிந்தோர் அன்றே மறந்தனர் கொல் – யாம்

அழும்படி நம்மைப் பிரிந்துசென்ற தலைவர்

அந்தோ நம்மை மறந்தேவிட்டனரோ?

**விளக்கம்:**—வளை - சங்கு. சங்கையுடைத்ததுண்டு பிறைக்குவமை. பிறையைப் பல்வேறு சமயத்தினரும், கன்னியரும் தொழுதலுண்மையின் பலர் தொழத் தோன்றி என்றாள். பிறை தொழப்படுதலை,

“பிறைநுதல் வண்ண மாகின்று அப்பிறை

பதினெண் கணனும் ஏத்தவும் படுமே.”

(புறம்-க)

எனவும்,

“தொன்று தொழு பிறை.”

(மதுரைக்கா-கசுரு)

எனவும் பிறசான்றோர் கூறுமாற்றானும் உணர்க செவ்வாய் வானம்- செக்கர் வானம். பிரிவானே யான் நலியாநிற்பவும், மேலும் பிறையும் பிறந்து வருத்தும் என்பாள், இன்னம் பிறை பிறந்தன்று என்றாள். பிரிந்துறைவோரைப் பிறைநலிவது இயல்பு. இதனை,

"அந்திப் போதகத் தரும்பிடர்த் தோன்றிய
திங்கட் செல்வனுஞ் செவ்விய னல்லன்."

(வேனில்-௫அ-௬) எனவரும் சிலப்பதிகாரத்தானும் உணர்க.

ஐ-விரைவுக்குறிப்பு. வருத்தம் - ஈண்டுப் பசிவருத்தம் என்க. நோனது - பொறுக்கமாட்டாமல். உலர்ந்த பட்டை என்பாள், வெண்ணார் என்றாள். அழப் பிரிந்த வன்கண்ணர் மறத்தலும் இயல்பு என்பாள், அழப் பிரிந்தோர் என்றாள்.

யாமரத்துச்சியிலே சிறிது தழை காணப்படுதலால் அதனை அண்ணாந்து நோக்கி முழங்கிற்றென்க.

களிற்று யானை தன் பிடிவருத்தம் நோனது இங்ஙனம் முழங்குதலைக் கண்டும், எம்மை நினையாது மறந்தனர் என்பது குறிப்பு. அத்தம்-வழி. நீளத்தம் எனமாறினுமாம்.

## பாட்டு - ௬௦அ : தோழி கூற்று

துறை:—வரைவிடைக் கிழத்தி வன்சொற்சொல்லி வற் புறுத்தியது. அஃதாவது, வரைந்துகோடற்குப் பொருளீட்டத் தலைவன் பிரிந்தமையை ஆற்றாது வருந்திய தலைவியைத் தோழி இடித்துரைத்து ஆற்றுவித்தது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, ‘நந் தலைவன்
கேண்மை நமது காமவின்பத்தை மிகுவிப்பதோர் செயலிலே யன்றோ இப்பொழுது தங்கிற்று. நீ இதற்கு மகிழாது வருந்துதல் என்னையோ? ’என்று கழறுகின்றாள்.

௲௨௪. சோலை வாழைச் சுரிநுகும் பினைய
அணங்குடை அருந்தலை நீவலின்
மதனழிந்து
மயங்குதுயர் உற்ற மையல் வேழம்
உயங்குயிர் மடப்பிடி யுலைபுறந் தைவர
ஆமிழி சிலம்பின் அரிதுகண் படுக்கும்
மாமலை நாடன் கேண்மை
காமந் தருவதோர் கைதாழ்ந் தன்றே.
—பெருந்தோட் குறுஞ்சாத்தனூர்.

(இ - ள்) தோழி—, சோலை வாழை சுரி நுகும்பு இனைய-
சோலையின்கண்ணுள்ள வாழையினது சுருண்ட குருத்து வருந்தும்படி, அணங்குடை அருந்தலை நீவலின் - தெய்வமுறையும் பிறர் ஏறுதற்கரிய தனது தலையை வருடலானே, மதன் அழிந்து மயங்கு துயர் உற்ற மையல் வேழம்-தனது வலி கெட்டு

மயங்குதற்குக் காரணமான துன்பத்தை எய்திய மயக் கத்தையுடைய களிற்றுயானே, உயங்கு உயிா மடப்பிடி உலேபுறம் தைவர-வருந்திய உயிர்ப்பினேயுடைய மடப்பமுடைய பிடியானே தனது வருந்திய முதுகினே வருடாநிற்ப, ஆம் இழி சிலம்பின் அரிது கண்படுக்கும் - நீர் வீழ்கின்ற பக்கமலேயின் கண்ணே அரிதில் துயிலாநின்ற, மாமலே நாடன் கேண்மை - பெரிய மலே நாட்டையுடைய நந்தலேவனது நட்பு, காமம் தருவது ஓர்கை தாழ்ந்தது - நாம் விருமபியவற்றை நமக்கு அளிபபதா கிய தொரு நற்செயலிலே தஙகாநின்றது.

விளக்கம்—'நாடன் நட்பு, விருப்பமானவற்றை நமக்கு அளிப்ப தொரு செயலிலே தங்கிற்று. அதற்கு நீ உவவாது வருந்துதல் பேதைமை' என இடித்துரைத்தவாறு.

வாழைச் சாற்றை யானே மத்தகத்தில் தேய்த்தால், அதன் மதங் கெட்டு மயங்கும். இப்போதும் மதவெறியாற் கட்டுக்கடங்காது திரி யும் யானேக்கு யானேப்பாகர் வாழைத் தண்டை உணவாக இடுதலும், வாழையின் சாற்றை மத்தகத்தில் தேய்த்தலும் உண்டு.

களிற்றியானை வாழையை ஒடித்து அதன் குருத்தாலே தன் மத்தகத்தைப்புடைத்தமையால் அக்குருத்து இனைந்து சாறுபட்டு யானை மயக்கமுற்றது என்க.



களிற்றியானை மயங்கு துயர் உற்றமை பொறாது பிடி வருந்தி பெருமூச் செறிந்ததென்பாள், 'உயங்குயிர் மடப்பிடி' என்றாள். ஆம்-நீர்.

காமம் - விரும்பிய பொருள். தலைவன் வரைதற்குப் பொருளீட்டப் பிரிந்தானாகலின் அப்பொருளீட்டுஞ் செயல் தலைவனோடு எப்போதும் பிரியாது உறையவேண்டும், என்னும் நமது விருப்பம் நிறைவேற ஏதுவாம் என்பாள், 'நாடன் கேண்மை காமந் தருவதோர் கைதாழ்ந்தன்று' என்றாள். கை-செயல். அதற்கு யாம் உவத்தல் வேண்டும்; அதுபோக்கி நீ வருந்துதல் அடாது என்பது குறிப்பு.

## பாட்டு - ௩௦௧ : தோழி கூற்று

துறை :—பரத்தையிற் பிரிந்துவந்த கிழவற்குத் தோழி வாயில் நேர்ந்தது. தலைவன் பரத்தையிற் பிரிந்து சென்றவன் மீண்டு வந்து தோழியை வாயில் வேண்டிய வழி, தோழி அவன் தீமையை எடுத்துக் காட்டி அவனை ஏற்றுக்கொண்டது.

இதன்கண், தோழி தலைவனை நோக்கி, 'நீ எமக்கு இன்னா தன பல செய்கின்றாயாயினும், நின்னை இன்றியமையாதேமாகலின் நின்னை யாங்கள் ஏற்றுக் கொள்கின்றேம்; பின் என் செய்வாம்!' எனப் புலந்து கூறுகின்றாள்.

௩௦௯. கைவினை மாக்கடம் செய்வினை முடிமார்

சுரும்புண மலர்ந்த வாசங் கீழ்ப்பட
நீடின வரம்பின் வாடிய விடினும்
கொடியரோ நிலம்பெயர்ந் துறைவே மென்னாது
பெயர்த்துங் கடிந்த செறுவிற் பூக்கும்
நின்னூர் நெய்த லனையேம் பெரும
நீயெமக், கின்னா தனபல செய்யினும்
நின்னின் றமைதல் வல்லா மாறே.

—உறையூர்ச் சல்லியன் குமாரனார்.

(இ - ள்.) பெரும - பெருமானே!, கைவினை மாக்கள் தம் செய்வினை முடிமார் - கையாலே தொழில் செய்யும் உழவர்கள் தமது களைதல்தொழிலை முடிப்பாராய், சுரும்புண மலர்ந்த - வண்டுகள் உண்ணும்படி மலர்ந்த, வாசம் கீழ்ப்பட - மலரின் மணம் நிலத்தே படும்படி, நீடின வரம்பின்

வாடிய இடினும் - நெடிய கழனி வரம்பிலே வாடும்படி இட்டுவைத்தாலும், கொடி

யர் நிலம் பெயர்ந்து உறைவேம் என்னுது - இம் மாக்கள் அருளில்லாதார் ஆகலின் இவர் நிலத்தினைவிட்டு வேறு நிலஞ் சேர்ந்து வாழ்வேம் என்று கருதாமல், கடிந்த செறுவிற்

மூலமும் உரையும

௪௬௩

பெயர்த்தும் பூக்கும் - அவர் களையாகத் தம்மைக் களைந்த கழனியிலேயே மீண்டும் மலராநின்ற, நின் ஊர் நெய்தல் அனையேம் -

நினது ஊரின்கண்ணுள்ள நெய்தலையே ஒத்த தன்மையேமாயினம்; அஃதெற்றுலெனின், நீ எமக்கு இன்னுதன பல செய்யினும் - நீதான் எமக்குத் துன்பமாவன பல செயல்களைச் செய்தாயெனினும், நின் இன்று அமைதல் வல்லாம் மாறு - நின்னை இன்றிப் பொருந்தும் வன்மையிலேம் ஆகலின்.

**விளக்கம்** :—நின்னை யின்றி எமக்குப் பற்றுக்கோடின்மையினுல் நீ எமக்கு எத்துணை இன்னல் செய்யினும் அவற்றைப் பொறுத்துக் கொண்டு நின் விருப்பப்படி ஒழுகாநின்றனம்; வேறு யாம் என் செய்வாம எனறவாறு.

நெய்தற்கு நிலத்தையின்றிப் புகலிடம் இன்மையால் அந்நிலத்திற் குரிய உழவர் கொன்றன்ன இன்னா செயினும் பொறுத்துக் கொண்டு மீண்டும் அந்நிலத்திலேயே மலர்தல் போன்று, யாமும் நின்னின்றி யமையாமாகலின் நீ செய்த இன்னல்களைப் பொறுத்துக்கொள்ளா நின்றனம என உவமையை விரித்தோதுக.

கைவினை மாக்கள் - ஈண்டு உழவர். செய்வினை - களைகட்டலாகிய தாம் மேற்கொண்ட தொழில். வாசம் கீழ்ப்பட என்றது, தலைவி நலம் கெட்டமைக்கு உவமை.

என்னாது - என்று கருதாமல். செறு - வயல். ஓ - அசை. பரத்தை யரோடு தலைவன் நீராடல், பொழிலாடல் முதலிய செய்தலின், இன்னா தன பல என்றாள். வல்லாமாறு என்புழி மாறு ஏதுப்பொருள் தருவ தோர் இடைச்சொல், "அனையை ஆகன்மாறே தாயில் தூவாக் குழவி போல, ஓவாது கூஉம் நின் உடற்றியோர் நாடே" (ச) எனவரும் புறநானூற்றின் கண்ணும் இஃது அப் பொருட்டாதல் காண்க.

## பாட்டு - ருகo : தலைவி கூற்று

துறை :—வரைவிடைமுனிந்து கிழத்தி தோழிக்கு உரைத்தது. அஃதாவது, வரைவிடைவைத்துத் தலைவன் பிரிந்தமை யால் ஆற்றாது வருந்திய தலைவியைத் தோழி 'ஆற்றுக' என இடித் துரைத்தாளாக, அத் தோழியைச் சினந்து தலைவி கூறியது.

இதன்கண், 'தோழி! பறவைகளும் வாயடங்கின; பூக்களும் கூம்பின; கானலும் புலம்புடைத்து; வானமும் நம்மைப் போன்று மயங்கிப் புற்கென்றது; யான் என்னிலையைத் தலைவனுக்குக் கூறுவாரைப் பெறின் இன்னும் உயிர் வாழ்வேன்; இன்றேல் இறந்துபடுவேன்' என்கின்றாள்.

௩௧௦. புள்ளும் புலம்பின பூவுங் கூம்பின
கானலும் புலம்புநனி யுடைத்தே
வானமும்
நம்மே போலும் மம்மர்த் தாகி



எல்லை கழியப் புல்லென் றன்றே
இன்னும் உளேனே தோழி இந்நிலை
தண்ணிய கமழு ஞாழல்
தண்ணந் துறைவர்க் குரைக்குநர்ப் பெறினே.

—பெருங்கண்ணனார்.

(இ - ள்.) தோழி—, புள்ளும் புலம்பின - பறவைகளும் தத்தம் குடம்பையிலே தனித்தன, பூவும் கூம்பின - நீர்ப்பூக் களும் முகிழ்த்தன, கானலும் புலம்பு நனி உடைத்து - கடற் கரைச் சோலையும் தனிமையை மிக உடையதாயிற்று, வானமும் நம்மேபோலும் மம்மர்த்தாகி - விசும்பும நம்மைப்போன்று மயக்கமுடையதாகி, எல்லைகழியப் புல்லென்றன்று - பகற் பொழுது கழியாநிற்பப் பொலிவழிந்தது, தண்ணிய கமழும் ஞாழல் - குளிர்ந்தனவாகிய மலர்கள் மணங்கமழாநின்ற ஞாழல் கிளையுடைய, தண்ணந் துறைவர்கரு - குளிர்ந்த கடற்றுறையை யுடைய தலைவர்க்கு, இந்நிலை உரைக்குநர்ப்பெறின் - என் இந்த நிலையினைக் கூறுவாரைப் பெற்றால், இன்னும் உளென் - மேலும் யான் உயிர் வாழ்வேனுவன்.

**விளக்கம்** :—புள்ளும் புலம்பின என்றதற்குப் பறவைகளும் தம் மினத்திற் பிரிந்து தத்தம் குடம்பைகளிலே சென்று தனிமை கொண்டன என்பதே சிறப்பாம் என்னை? “பறவைபாட்டடங்கினவே பகல் செய்வான் மறைந்தனனே” (சிலப், கானல்.) எனப் பிறரும் அந்தி மாலைப் போதில் பறவைகள் பாட்டடங்கினமையே கூறுதல் காண்க. மேலும் பூவும் கூம்பின கானலும் புலம்புடைத்து வானமும் புல்லென் றது என வருவனவற்றோடும் இயைபுடையதாதலும் காண்க.

தன்னிலையை அறிந்து ஆவன செய்யாது, தோழி வாளா இடித் துரைப்பாளாதல் பயனின்றென்பாள், 'இந்நிலை துறைவர்க்கு உரைக்கு நர்ப் பெறின் உளென்' என்றாள். அங்ஙனம் கூறுவாரைப் பெறாமை யானே யான் இறந்துபடுதல் ஒருதலை என்றவாறு.

முதலும் கருவுமாயமைந்த உலகப் பொருள்கள் எல்லாம் எனது தனிமைத்தன்மையை மிகுவிப்பனவாகி ஆற்றாமை செய்கின்றன வாகிய பினனரும் இறந்துபடேனாய் இருப்பேன் என்பாள், 'இன்னும் உளென்' என்றாள். மாலைப் பொழுது பகலுமின்றி இரவுமின்றி ஒளியு மின்றி இருளுமின்றி மயங்குதலின் இங்ஙனம் மயங்கும் மயக்கத்திற்குத் தனது நெஞ்சத்தின் மயக்கத்தையே உவமை கண்டாள். இச்செய் யுளானே, முதல் கரு உரி என்ற முப்பொருட்கும் உள்ள இயைபு புலனாதல் உணரலாம்.

இந்நிலை என்றது, துயரம் கைம்மிக்கு யான் ஆற்றொணாதிருக்கின்ற இந்த நிலைமையினை என்றவாறு. எல்லை - ஞாயிறுமாம். அவன் இந் நிலை அறிந்தால் உடனே வந்து அளிசெய்வன். அறிவிப்பார் இன்மையே குறை என்பாள், 'தண்ணிய கமழும் தண்ணந்துறைவன்' என்றாள்.

## மூலமும் உரையும்

சகூ௫

## பாட்டு - நகக : தலைவி கூற்று

துறை :—அலர் அஞ்சிய தலைமகள், தலைமகன் சிறைப் புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. அஃதாவது, ஊரவர் தூற்றும் பழியை அஞ்சிய தலைவி, இங்ஙனம் பழிதூற்றப்படுதலைத் தலைவனுக்கு அறிவிக்கக் கருதித், தலைவன் சிறைப்புறத்தே வந்து நிற்கின்றமை கண்டு அவன் வரவறியாதாள் போன்று அவன் கேட்பத் தோழிக்குச் சொல்லியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'நம் தலைவனுடைய தேர், வலவன் பையச் செலுத்தமுயன்றும் அடங்காமல் ஆரவாரத் தோடே நம் பெருங்கடலகன்றுறையிலே நள்ளிரவிலே சென்றதன்றோ? அத்தேர்ச் செலவினை நன்கு கண்டிலாதாள் யான் ஒருத்தியே, மற்று நம் ஆய மகளிர் அனைவரும் நன்கு கண்டனர்; இங்ஙனமாகலின், இனி இந்நிகழ்ச்சி அலராகாது ஒழிதல் எங்ஙனம்?' என்று கூறுகின்றாள்.

௩௧௧. அலர்யாங் கொழிவ தோழி பெருங்கடற்
புலவுநா றகன்றுறை வலவன் றாங்கவும்
நில்லாது கழிந்த கல்லென் கடுந்தேர்
யான்கண் டனனே இலனே பாணள்

ஓங்கல் வெண்மணல் தாழ்ந்த புன்னைத்
தாதுசேர் நிகர்மலர் கோய்யும்
ஆயம் எல்லாம் உடன்கண் டன்றே.

—சேந்தன் கீரனார்.

(இ - ள்.) தோழி—, பெருங் கடல் புலவு நாறு அகன் றுறை - பெரிய கடலினது புலானாற்றத்தையுடைய அகன்ற துறையிடத்தே, வலவன் தாங்கவும் நில்லாது கழிந்த கல்லென் கடுந்தேர் - பாகன் குதிரைகளைத் தடுக்கவும் நில்லாமல் சென்ற கல்லென்னும் ஆரவாரத்தையும் கடிய செலவினையும் உடைய நந்தலைவனுடைய தேரினை, யான் கண்டனனோ இலனோ - யான் கண்டேனோ அல்லது கண்டிலேனோ, பால் நாள் - நடு இரவின் கண்ணே, ஓங்கல் வெண்மணல் தாழ்ந்த புன்னை - உயர்ச்சி பொருந்திய வெள்ளிய மணலிடத்தே தாழ்ந்து வளர்ந்த புன்னை மரத்தில், தாது சேர் நிகர் மலர் கொய்யும் - பூந்தாதுக்கள் சேர்ந்த ஒளிபொருந்திய மலர்களைக் கொய்து கொண்டிருந்த, ஆயம் எல்லாம் உடன் கண்டன்று - மகளிர் கூட்டம் எல்லாம் ஒருங்கே கண்டது, அலர் யாங்கு ஒழிவ - இங்ஙனம் கண்டமை யானே இனிப் பழிமொழி எவ்வாறு ஒழிவனவாகும்.

**விளக்கம்** :—மக்கள் வழக்கம் மிக்க இடம் என்பாள், 'பெருங் கடல் அகன்றுறை' என்றாள். ஆண்டுச் சென்ற தேர்ச் சுவட்டினை வேறு பலரும் கண்டிருப்பர் என, இதனானும் ஓர் ஏதுக் காட்டியவாறும். வலவன் - தேர்ப்பாகன். வலவன் ஆரவாரம் எழாமல் மெல்லச் செலுத்தும் பொருட்டு எத்துணை முயன்றும் பயனில்லை என்பாள், 'வலவன் தாங்கவும் நில்லாது கழிந்த தேர்' என்றாள். கல்லென் என்பது, ஒலிக் குறிப்பு. விரைந்தோடுதலாலே பேராரவாரஞ் செய்து கழிந்ததென்பாள், 'கல்லென் கடுந்தேர்' என்றாள். கடுந்தேர் - கடிதாயோடும் தேர்; விரைந்தோடும் தேர் என்க. கடுந்தேர் என்றதும், கல்லென் தேர் என்றதும், ஆயம் எல்லாம் அறிதற்குக் குறிப்பேதுக்கள் என்க.

தலைவன் தேரிலேறி மீண்டு போயபொழுது யான் எத்துணைப் பொழுது கூர்ந்து நோக்கினும் என்கண்கள் கண்டது போதும் என அமைதியுற்றில; பின்னும் காண்டல் வேட்கையேயுடையன ஆகலின், அவன் தேரினைக் கண்டுங் காணாதவளாக இருப்பவள் யான் ஒருத்தியே என்பாள், 'யான் கண்டனனோ இலனோ' என்றாள். இதனால் தலைவி தன் கண் விதுப்புறுதலைத் தலைவனுக்குக் குறிப்பாலுணர்த்தினள் என்க. ஆயமகளிர் மலர் கொய்ததனைத் தலைவன் கண்டிலன் என்றற்கு ஏதுக் கூறுவாள், 'பானாள்' என்றும், 'தாழ்ந்த புன்னை' என்றும் கூறினாள். ஆயமகளிர் காண்டற்குப் பிறிதுமோரேதுக் கூறுவாள், ஓங்கல் வெண்மணலின் மேனின்று தாழ்ந்த புன்னை மலர் கொய்யும் ஆயம் என்றாள். ஓங்கல் - உயர்ச்சி, தாழ்தல் - தழையடர்ந்து வளைந்து தாழ்தல். நிகர் மலர் - ஒளிமலர். "அரும்பவிழ் முல்லை நிகர்மலர் நெல்லொடு தூஉய்" (சிலப் - கூ - உ.) என்புழி அடியார்க்கு நல்லார், "ஒளி மலர்" என்றே பொருள் கூறியிருத்தலறிக. ஆயம் - மகளிர் கூட்டம். எல்லாம் என்பது எஞ்சாப் பொருட்டாய் "வெயிலெல்லாம் மறைந்தது," என்புழிப் போல ஒருமை முடிவு கொண்டது. கண்டன்று- கண்டது. எனவே, இனி இஃது அலராவது தேற்றம் என்று வலியுறுத்தற் பொருட்டு அலர் யாங்கொழிவ என வினவினாள். இவ்வலரானே யாய் முதலியோர் அறிந்து இற்செறிப்பர்; ஆகலான், இனித் தலைவனை யாம் வரவேற்று அளவளாவும் செவ்வியுடையேம் ஆகேம் என்பது குறிப்பெச்சம். ஆகலான் வரைந்து கோடலே நன்றென்று குறிப்பானே வரைவு கடாவியபடியாம்.

## பாட்டு - நகஉ : தலைவன்

கூற்று

துறை :—இரவுக்குறி வந்து நீங்குகின்ற தலைமகன், தன் னெஞ்சிறகு வரைவுடைமை வேட்பக கூறியது. அஃதாவது, இரவின்கண் வந்து தலைவியோ டளவளாவிச் செல்கின்ற தலைவன், இக் களவுக் காலத்தே அவள் தனக்கேற்பவும் தமர்க் கேற்பவும் ஒன்றை ஒன்று முரணிய இருவேறு நெறியில் ஒழுக வேண்டியவளாகலை எண்ணி, இந்நிலை அவட்குத் துன்பந்தரும் ஆகலான், இனி யான் வரைந்து கோடலே நன்றென்று கருது வான் தன்னெஞ்சிற்குக் கூறியது.

இதன்கண், தலைவன் தன்னெஞ்சைவிளித்து, 'நங்காதற் றலைவி, இருவேறு ஒழுகலாற்றைத் திறம்பட ஒழுகும் ஒரு

## மூலமும் உரையும்

௪கூ௭

கள்வியாயிருந்தனள் ! நள்ளென் யாமத்து நம்மை ஏற்று அளவளாவுங்கால் நம்மோடு ஒத்துத் தமரோடு மாறுபட்டாளாக இருக்கின்றாள் ; மற்றுப் பகற்காலத்திலோ, தமரோடொத் தியங்கி நமக்கு முழுதும் ஏதிலாட்டியாக இருக்கின்றாள்; இந்நிலை மிகவும் இரங்கத் தக்கதுகாண்' என்கின்றான்.

௩௧௨. இரண்டறி கள்விநங் காத லோளே
முரண்கோள் துப்பிற் செவ்வேன் மலையன்
முள்ளூர்க் கான நாற வந்து

நள்ளேன் கங்குல் நம்மோ ரன்னள்
கூந்தல் வேய்ந்த விரவுமலர் உதிர்த்துச்
சாந்துளர் நறுங்கதுப் பெண்ணெய் நீவி
அமரா முகத்த ளாகித்
தமரோ ரன்னள் வைகறை யானே.

—கபிலர்.

(இ - ள்.) நெஞ்சே !, நள்ளென் கங்குல் - நள்ளென்னும் ஓசையையுடைய இடையிரவிலே, முரண் கொள் துப்பின் செவ் வேல் மலையன் - மாறுபாடு கொண்ட வலியினையும் சிவந்த வேலினையும் உடைய மலையமான் திருமுடிக்காரியினது, முள்ளூர்க் கானம் நாற வந்து - முள்ளூர் மலைக்காட்டின் மணத்தைப்போலத் தன் பால் மணங் கமழும்படி எம்பால் வந்து, நம் ஓர் அன்னள் - நமமோடு ஒத்தவளாக ஒழுகா நின்றனள், வைகறையான் - மற்று விடியற் காலத்திலோ, கூந்தல் வேய்ந்த விரவு மலர் உதிர்த்து - கூந்தலின்கண்ணே நம்மாற் சூட்டப் பட்ட பலவாகக் கலந்த மலர்களை யெல்லாம உதிர்த்து விட்டு, சாந்து உளர் நறுங்கதுப்பு எண்ணெய் நீவி - மயிர்ச்சந்தன மிட்டுக் கோதிய நறிய கூந்தலிடத்தே எண்ணெய் தடவி, அமரா முகத்தள் ஆகி - நம்மோடே பொருந்தாத முகத்தை உடையவளாகி, தமர் ஓர் அன்னள் - தன் தாய் முதலியோரோடே ஒத்து ஒழுகா நின்றனள் ஆதலால், நங் காதலோள் - நம் தலைவி, இரண்டு அறி கள்வி - ஒன்றற் கொன்று மாறுபட்ட இரண் டொழுக்கத்தை நன்கு அறிந்தவளாக விருந்தாள்.

விளக்கம் :—இரண்டு - ஆகு பெயராய் ஒழுக்கத்தைக் குறித்து நின்றது. ஒன்றேறொன்றெவ்வா இருவேறொழுக்கம் என்க. தலைவியினது ஆழ்ந்த அன்பினைப் பாராட்டுவான், 'நங்காதலோள்' என்றான். துப்பு - வலிமை. முரண் - மாறுபாடு, மாறுபடுதற்குக் காரணமாகலின் முரண் கொள் துப்பு எனப்பட்டது. மலையனின் படைச்சிறப் போது வான், துப்பினை வேலின் மேலேற்றிக் கூறினான். மலையன் - மலையமான் திருமுடிக்காரி என்னும் வள்ளற்பெருமான். இவ்வள்ளல் வீரத்



தினும் பெருஞ்சிறப்புற்று விளங்கின செய்தியைப் புறநானூற்றுச் (கஉஉ, கஉ௬.) செய்யுள்களான் உணரலாம். முள்ளூர் இம் மலையனுக் குரியது என்பதை, "பேரிசை முள்ளூர் பலருடன் கழித்த வொள்வாண் மலையன்" (நற் - கஎ0.) என்றும் "செவ்வேல், முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி," (அகநா - உ0க) என்றும், "மலையன்...முள்ளூர்" (புறம் - கஉ௩.) என்றும், பிறாண்டும் பிறசான்றோர் கூறுமாற்றானும் உணரலாம்.

மலையனது முள்ளூர்க் கானம் வளம் பொலிந்து பல்வேறு மலர் களும் மலர்ந்து நறுமண மிக்கதாகலின், பல்வேறு மலர்மணம் கமழும் தலைவிக்கு உவமை கூறினான். அகத்தது, முகத்தே தோன்றாமல் மறைத்தல் பெரிதும் அருஞ்செயல் ஆகலின், அததகைய அருஞ்செய லுடையாள் என்பான், 'அமரா முகத்தளாகி' என்றான்; தன்னோடே பயிலுங்கால் முகத்தானமாந்தினிது நோக்குவாள் தமரோடு பயிலுங் கால் தன்னைக காண்புழி முழுதும் எதிலாள் போன்று நோக்குதல் வியத்தகு செயல் என்பான், 'அறி கள்வி' என்றான். அகத்தது கரந் தொழுகும் அருமையைப் பாராட்டுவான், 'கள்வி' என்றான்.

கூந்தல் வேய்ந்த நறுமலர் என்றது, கூட்டக் காலத்தே தன்னால் வேயப்பட்ட மலரை என்க. சாந்து - மயிர்ச்சசாதனம் தன்பால் வந்த பொழுது சாந்துளர்ந்து வந்த மணம் தமரறியாவாறு மறைப்பாள் எண்ணெய் நீவினள் என்பான், 'சாந்துளர் நறுங்கதுப்பு எண்ணெய்

நீவி ' என்றான். அக்கருப்புத் தன்னால் இனிதின் நுகரப்பட்டமை
தோன்ற 'சாந்துளர் நறுங்கதுப்' பென்றான். வைகறை வைகறையை முதலாகவுடைய பகற் பொழுதினை என்க.
என்றது

தாய் முதலியோரை அஞ்சி இங்ஙனம் ஒழுகுதல் அவட்கு இன்னல் நிலையாம் ஆதலின், யாம் அவளை விரைந்து வரைந்து கோடலே நன்றென்று நெஞ்சினை உடம்படுவித்தது இஃதென்க.

## பாட்டு - ௩௧௩ : தலைவி கூற்று

துறை :—இரவுக்குறி வந்து ஒழுகுங் காலத்துத் தலைமகனது
வரவுணர்ந்து, பண்பிலர்' என, இயற்பழித்த தோழிக்கு, அவரொடு பிறந்த நட்பு அழியாத நட்பன்றோ வென்று, சிறைப்புறமாகத் தலைமகள் இயற்பட மொழிந்தது.
அஃதாவது, இரவின்கண் மனையயலே தலைவன் வந்து நிற்றலை அறிந்த தோழி, அவன் வரவறியாதாள போன்று, அவனைக் குறை கூறக் கேட்ட தலைவி, அது பொருளாய்த் தலைவனைப் புகழ்ந்தது.

இதன்கண், 'தலைவன் அன்பிலான்,' எனப் பழித்த தோழியை நோக்கி, தலைவி, 'அவனது நட்பு என்றென்றும் அழியாத சிறந்த நட்பாகும்' என்று புகழ்ந்துரைக்கின்றாள்.

ருகரு. பெருங்கடற் கரையது சிறுவெண்
காக்கை
நீத்துநீர் இருங்கழி இரைதேர்ந் துண்டு

மூலமும் உரையும்
சு கூ ஆ

பூக்கமழ் பொதும்பிற் சேக்குந்
துறைவனொடு
யாத்தேம் யாத்தன்று நட்பே
அவிழ்த்தற் கரிதது முடிந்தமைந்
தன்றே.

........................[1]

(இ - ள.) தோழி—, பெருங் கடல் கரையது சிறு வெண் காக்கை - பெரிய

கடற்கரையினகண்ணே உளதாகிய சிறிய வெண்மையுடைய காக்கை, நீத்து நீர் இருங் கழி இரை தேர்ந்து உண்டு-நீந்துதற்குக் காரணமான நீர்ப் பெருக்கையுடைய பெரிய கழியினிடத்தே இரையை ஆராய்ந்து தின்று, பூக் கமழ் பொதும்பில் சேக்கும் துறைவனொடு - மலர் மணக்கும் சோலையினூடே உறையாநின்ற கடற்கரையையுடைய நந் தலைவனோடே, யாத்தேம் நட்பு யாத்தன்று - நம்மை யாம கட்டினேம் அங்ஙனம் கட்டப்பட்டமையாலே உண்டாய நட்பும் நன்கு பொருந்துவதாயிற்று, அவிழ்த்தற்கு அரிது அது முடிந்தமைந்தன்று - அது யாராலும் பிரித்தற்கு அரியதொன்றாய் நிறைமுடிவுடையது.

**விளக்கம்** :—பெருங்கடல், சிறுவெண்காககை என்புழிச் செய்யுளின்பம் உணர்க. இக்களவொழுககம் நிகழ்த்தும் தலைவன் இனி வரைந்துகொண்டு இனிதே இல்லறம் நிகழ்த்துவன் என்பாள், 'சிறுவெண் காக்கை கழியில் இரை தேர்ந்துண்டு பூக்கமழ் பொதும்பிற் சேக்கும்' என்றாள். இருஙகழியில் இரைதேர்தல், குறியிடஙகளில் களவின்பம் நுகர்தலாகவும், பூக்கமழ் பொதும்பிற் சேக்குதல், வரைந்து கொண்டு புகழ்படத தம்மனைக்கண் இல்லறம் நடத்துதலாகவும் கருதுக.

நீத்துநீர் - நீந்துதற்குக் காரணமான பெருக்குடைய நீர் என்க. இருங்கழி - கரிய கழியுமாம். யாத்தேமாகிய நம்முடைய நட்புயாத்தன்று எனமாறுக. யாத்தன்று - பொருந்தியது. அவிழ்ததல் எனப் பிறவினையாற் கூறினமையின் பிறரால் அவிழ்த்தற்கு என்க. அவிழ்த்தல் - ஈண்டுப் பிரித்தல் என்னும் பொருட்டு. அவிழ்க்கலாகாமைக்கு ஏதுக் கூறுவாள், அது முடிநதமைந்தனறு என்றாள். முடிக்கப்பட்டு அமைந்ததென்க. முடிந்ததற்கு வினைமுதல் பாலதாணையாகலான் அது வருவித்துரைக்க.

பாலதாணையான் முடிக்கப்பட்டதொன்றனை மாந்தர் தவிர்க்கலாகாமையும் உணாக. இது தலைவன் தலைவியைப் பூம்பொழிலிற் கண்டு முதன்முதல் கூடியபொழுது, தலைவன் அன்பின் சிறப்பெடுத்தோதினமையைத் தலைவி கொண்டு கூறினாள் என்று கருதுக.

இதனால் தலைவனொடு யாங் கொண்ட கேண்மை பண்டும் பண்டும் பலப்பல பிறப்புக்களிலே பயின்று ஒருகாலைக் கொருகாற் சிறந்துயர்ந்த கேண்மை ஆகலின், அஃது அழியாத உழுவலன்பாம் என அவனது கேண்மைப் பண்பினைத் தலைவி புகழ்ந்தாளாதல் உணர்க.

---

1. ஆசிரியர் பெயர் காணப்பட வில்லை.



## பாட்டு – நுகச: தலைவி கூற்று

துறை :—பிரிவிடை வேறுபட்ட கிழத்தி வற்புறுத்துந் தோழிக்குப் பருவம்காட்டி அழிந்து கூறியது. அஃதாவது,

தலைவன் பிரிந்திருந்த காலத்தே ஆற்றாமை எய்திய தலைவியைத் தோழி, நீ 'ஆற்றுதலே அறிவுடைமையாம்' என வற்புறுத்தினளாக, அவட்குத் தலைவி, 'தலைவன் வருவன்' எனக் கூறிச் சென்ற பருவம் வந்தமையைச் சுட்டிக் காட்டி, 'யான் எங்ஙனம் ஆற்றுவல்' என்பதுபடக் கூறியது.

இதன்கண், தன்னை ஆற்றுவித்த தோழியை நோக்கி,

'உதோபார், விசும்பின் கண்ணே சூல் கொழு முகில்கள் தோன்றி முழங்கி மின்னி மழை பெய்கின்றன; காமநோயை மிகுவிக்கும் இம் மாலைப் பொழுதினும் நம் தலைவர் வந்திலர்; இனி யான் எங்ஙனம் ஆற்றியிருப்பன் ?' என்று கூறுகின்றாள்.

௩கச. சேயுயர் விசும்பி னீருறு கமஞ்சூல்
தண்குரல் எழிலி ஒண்சுடர் இமைப்பப்
பெயல்தாழ் பிருளிய புலம்புகோள்
மாலையும்
வாரார் வாழி தோழி வரூஉம்
இன்னுறழ் இளமுலை ஞெமுங்க
இன்னா வைப்பின் சுரனிறந் தோரே.
—பேரி சாத்தனார்.[1]

(இ - ள்.) தோழி—, இன்னா வைப்பின் சுரன் இறந்தோர் - இன்னல் மிக்க இடங்களையுடைய பாலைநிலத்தைக் கடந்து சென்ற நந்தலைவா, சேய் உயர் விசும்பின் நீர் உறு கமம் சூல் தண்குரல் எழிலி - தூரிதாய் உயர்ந்த வானத்தின் கண்ணே நீர்மிக்க நிறைந்த சூலினையும் குளிர்ச்சியையும் முழக்கத்தையும் உடைய முகில்கள், ஒண் சுடர் இமைப்பப் பெயல் தாழ்பு இருளிய - ஒள்ளிய மின்னல்கள் விளங்க மழை பெய்து

இருண்ட, புலம்பு கொள் மாலையும் - தனிமை யைத் தன்னிடத்தே கொண்ட இம்மாலைப் பொழுதினும்,
வருஉம் இன் உறழ் இளமுலை ஞெமுங்க வாரார் - தோன்றுகின்ற இனிமை பொருந்திய இளைய முலைகள் அழுந்துமாறு தழுவிக் கோடற்கு வந்தாரிலர்; யான் எங்ஙனம் ஆற்றுவன் ?

**விளக்கம்:**—எல்லையின்றி உயர்ந்துளதாகலின் 'சேயுயர் விசும்பு' எனப்பட்டது. நீர்உறு - நீர் மிக்க. கமம் - நிறைவு. தண் எழிலி, குரல் எழிலி எனத் தனித்தனிக் கூட்டுக. எழிலி - முகில். குரல், ஈண்டு இடிமுழக்கம் என்க. ஒண்சுடர் என்றது, மின்னலை. இமைத்தல் - விளங்குதல். பெயல் - மழை. தாழ்பு - தாழ்ந்து; பெய்து என்றவாறு. இதுகாறும் கார்ப்பருவ வரவு கூறப்பட்டது. புலம்பு - தனிமைத்துன்பம். காலை நண்பகல் மாலை என்ற முப்பொழுதுகளினும் மாலைப்பொழுதே தனிமைத் துன்பத்தை மிகுவிப்பதாகலின் புலம்பைத் தன்னிடத்தே கொண்ட மாலை என்றாள். மாலையும் என்பதன்கண் உம்மை சிறப்பின்கண் வந்தது.

வாரார் என்றது வாராராயவிடத்து யான் எங்ஙனம் ஆற்றுவல் என்பதுபட நின்றது. இன் உறழ் - இனிமை பொருந்திய. ஞெமுங்க - அழுந்தும்படி, தழுவிக்கோடற்கென வருவித்துக் கூறுக.

இன்னுவைப்பிற் சென்றோர் இனிய ஊற்றின்பமுடைய இளமுலை ஞெமுங்க வாரார் என்புழிச் செய்யுளின்பமுணர்க.

---

(பாடம்) 1. பேரிச்சாத்தன், பெருஞ்சாத்தன்.

# பாட்டு – ௩கரு : தலைவி கூற்று

துறை :—'வரைவிடை யாற்ற கிற்றியோ' என்ற தோழிக்

குக் கிழத்தியுரைத்தது. அஃதாவது, -'தலைவன் வரைபொருளீட்டற்குப் பிரியக் கருதுகின்றனன்; அப்பிரிவினை நீ ஆற்றியிருக்க வல்லையோ?' என்று வினவிய தோழிக்கு, ஆற்றுவன் என்பதுபடத் தலைவி கூறியது

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'கடலிலே பிறை தோன்றினாற் போன்று, மலையின்கண் அருவி தோன்றும் மலைநாட்டையுடைய தலைவன், ஞாயிற்றுமண்டிலத்தை ஒப்பாவான்; என தோள்களோ அஞ்ஞாயிற்று மண்டிலத்தையே இடையறாது நோக்கும் நெருஞ்சி மலர்களை ஒப்பனவாம்' என்று கூறுகின்றாள்.

௩கரு. எழுதரு மதியங் கடற்கண்டா அங்
கொழுகுவெள் ளருவி யோங்குமலை
நாடன்

ஞாயி றனையன் தோழி
நெருஞ்சி யனையவென் பெரும்பணைத்
தோளே.

—மதுரை வேள்ஆதத்தனூர்.

(இ - ள்) தோழி—, எழுதரு மதியம் கடல் கண்டாங்கு - தோன்றாநின்ற திங்கள் கடலிடத்தே காணப்பட்டாற் போன்று, ஒழுகுவெள் அருவி ஓங்கு மலைநாடன் - காணப்பட்டு வீழ்கின்ற வெள்ளிய அருவியையுடைய உயர்ந்த மலைகள் பொருந்திய நாட்டினையுடைய நந்தலைவன், ஞாயிறு அனையன் - ஞாயிற்று மண்டிலத்தை ஒப்பாவான், என் பெரும்பணைத் தோள் - என்னுடைய பெரிய மூங்கில் போன்ற தோள்களோ, நெருஞ்சி யனைய - நெருஞ்சிமலர்களை ஒப்பனவாம்.



விளக்கம் :—மதியம் - திங்கள். இது வீழ்கின்ற வெள்ளருவியின் தோற்றத்திற்கு உவமை; கடல் மலைகட்குவமை. இச்சிறு செய்யுளின் கண் மதியம், ஞாயிறு, கடல், அருவி முதலிய அழகிய மங்கலப் பொருள்கள் பயின்று வந்தமை உணர்க.

ஞாயிற்றுமண்டிலத்தின் ஒளியி லியைந்து அதன் இயக்கத் தோடொத்து நெருஞ்சிமலர் திரும்பும் இயல்புடையது. இதனை, "சுடரொடு திரிதரு நெருஞ்சி போல," (அகம் - ௩௩௬) என்றும், "பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ, ஏர்தரு சுடரி னெதிர்கொண் டாஅங்கு" (புறநா - கருக) என்றும், 'நீள்சுடர் நெறியை நோக்கும் நிரையிதழ் நெருஞ்சிப் பூப்போல்," (சீவக - சஈக) என்றும், பிறசான் றோர் கூறுமாற்றானும் உணர்க.

நெருஞ்சிமலர் ஞாயிற்றின் ஒளியி லீடுபட்டு அதன் இயக்கத் தோடொத்துத் திரும்புதல் போன்று, யானும் தலைவனது அன்பி லீடுபட்டு அவன் செயலோடொத்தியங்குவன் ஆகலின், ஆற்றியிருப் பன் என்றவாறு. தனது கருத்தினைத் தோண்மேல் ஏற்றிக்கூறிய வாறென்க.

## பாட்டு - ௩கரு : தலைவி கூற்று

துறை :—'வரைவிடை வேறுபடுகின்றாய்' என்ற தோழிக் குக் கிழத்தி உரைத்தது. தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த பொழுது ஆற்றாளாய தலைவியை, 'நீ ஆற்றாயாகின்றதென்?' என வினாய தோழிக்குத் தலைவி தன் ஆற்றாமைக்குக் காரணம் கூறியது.

இதன் கண், 'பொருள்வயிற் பிரிந்த தலைவனோ தன் சொற் பிறழ்ந்து காலம் நீட்டிப் பானாயினன்; அதனால் தோள மெலிந்து உடல் நலிவுடையேன் ஆய்விட்டேன்; இவ் வேறுபாட்டை அன்னை அறியின் யான் உயிர் வாழகில்லேன்; யான் எங்ஙனம் ஆற்றுவேன்?' என்று தலைவி, தோழிக்குக் கூறுகின்றாள்.

௩௬௬. ஆய்வளை நெகிழவு மயர்வுமெய் நிறுப்பவும்

நோய்மலி வருத்தம் அன்னை யறியின்
உளேனோ வாழி தோழி விளியா
துரவுக்கடல் பொருத விரவுமண லடைகரை
ஓரை மகளி ரோராங் காட்ட
வாய்ந்த வலவன் துன்புறு துனைபரி
ஓங்குவரல் விரிதிரை களையும்
துறைவன் சொல்லோ பிறவா யினவே

—தும்பிசேர் கீரனார்.[1]

---

(பாடம்) 1. தும்பிசோ கீரனார்.

மூலமும் உரையும்

(இ - ள்.)
விரவு மணல்
தோழி—, விளியாது உரவுக் கடல் பொருத
அடைகரை - இடைவிடாமல் வலிய கடலால்
மோதப்பட்ட மணல் விரவிய
அடைகரையின்கண், ஓரை மக
ளிர் ஓராங்கு ஆட்ட - விளையாட்டுமகளிர் ஒருதன்மையாக
அலைக்க, வாய்ந்த அலவன் துன்புறு துனை பரி - பொருந்திய
நண்டினது துன்பமிக்க விரைந்த செலவினை,
ஓங்கு வரல் விரி திரை களையும் - உயர்ந்து
வருதலையுடைய விரிந்த அலைகள்
தவிர்க்கின்ற, துறைவன் சொல் பிற ஆயின-துறையையுடைய
நந்தலைவன் சொற்களோ வேறுபட்டன வாயின, ஆய் வளை நெகி
ழவும் அயர்வு மெய் நிறுப்பவும்-அதனால் உண்டாகிய அழகிய
வளையல்கள் நெகிழா நிற்பவும், அயர்ச்சியை உடலிலே நிலைக்கச்
செய்யவும் காரணமான, நோய் மலி வருத்தம்
- துன்பமிக்க
எனது வருத்தத்தை, அன்னை அறியின் உளெனோ - நம்மன்னை
அறிவாளாயின் அவளறிந்தபின்னரும யான் உயிரோடு இருப்
பேனோ?

விளக்கம்:—ஆய்-அழகு. ஆராய்தற்குக் காரணமான வளை எனினு
மாம். நெகிழ, ஞெகிழ என்ன நகரத்திற்கு ஞகரம் போலியாக
வந்தது. அயர்வு - இளைப்பு. நிறுப்ப - நிலைக்கச் செய்ய. ஞெகிழ
வும் நிறுப்பவும் காரணமான நோய் மலிந்த வருத்தம் என்க. நோய்-
பிரிவுத்துன்பம்; காமநோயுமாம்.

உளளுே என்னும் வினை, உளனுகேன் என்பது படிநின்றது. விளியாது - இடைவிடாமல். உரவு - வலிமை. ஓரை - விளையாட்டு. ஓரை மகளிர் நண்டினை அலைக்க அது துன்புற்று ஓடுங்கால் கடல் அலை பெருகி அதனை எடுத்து அதன் செலவு தவிர்த்து உய்யக் கொண் டாற்போல, ஈண்டு யாயின் கொடுமையை அஞ்சுவேனைத் தலைவன் விரைந்து வந்து வரைந்து உய்யக் கொள்ளினல்லால் எனக்கு உய்தி இல்லை என்பது குறிப்பு. வாய்ந்த என்றது, அவர்கள் அலைத்தற்குப் பொருந்திய என்றவாறு. தலைவன் விரைந்து வரல் வேண்டும் என் பாள் 'ஒங்குவரல் விரிதிரை' என்றாள்.

'நின்னிற் பிரியேன்; பிரியின் ஆற்றேன்; விரைவில் மீள்வேன்' என்று பற்பல சொல்லிப்பிரிந்தமை தோன்றச் 'சொல் பிற ஆயின' என்று பன்மையாற் கூறினாள். சொல் பிறவாயின என்றது, அவை குறித்த பொருளுடையன வாகாமல், வேறு பொருளுடையன ஆயின என்றவாறு. பொய்பட்டன என்பது கருத்து.

## பாட்டு - ௩௧ : தோழி கூற்று

துறை:—பிரிவிடைக் கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது.
அஃதாவது, தலைவன் பிரிந்திருந்தகாலத்தே தலைவியைத் தோழி ஆற்றுவித்தது.
ஆற்றுமைமிக்க

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'மரையானினேறு நல்லிக்கனியைத் தின்று, மலைப் பைஞ்சுனையில் நீர் பருகுதற்

இடமான நாட்டையுடைய நந்தலைவன், முகில்கள் தென்புலம் படரும் வாடைமிகக இத்தண்பனி நாளிலே நம்மை நீத்துறை வானல்லன்; விரைவில் வருவன்' என்று தேற்றுகின்றாள்.

நூகஎ. புரிமட மரையான் கருநரை நல்லேறு
தீம்புளி நெல்லி மாந்தி யயலது
தேம்பாய் மாமலர் நடுங்க வெய்துயிர்த்
தோங்குமலைப் பைஞ்சுனை பருகு நாடன்
நம்மைவிட் டமையுமோ மற்றே கைம்மிக
வடபுல வாடைக் கழிமழை
தென்புலம் படருந் தண்பனி நாளே.

—மதுரைக் கண்டரதத்தனார்.

(இ - ள்.) தோழி—, புரி மடம் மரையான் கரு நரை நல் ஏறு - விரும்புதற்குக் காரணமான மடப்பத்தையுடைய மரை யானினது கரிய பெரிய நன்றாகிய ஏறு, தீம் புளி நெல்லி மாந்தி- இனிய புளிச்சுவையுடைய நெல்லிக்காயைத் தின்று,

அயலது தேம்பாய் மாமலர் நடுங்க வெய்து உயிர்த்து-பக்கத்தே உளதாகிய தேனை பரவிய பெரிய மலர்கள் நடுங்கும்படி வெய்தாக மூச் செறிந்து, ஓங்கு மலைப் பைஞ்சுனை பருகும் நாடன் - உயர்ந்த மலையின்கண் உள்ள பசிய சுனையின்கண் நீர் பருகுதற்கிடமான நாட்டையுடைய நந்தலைவர், கைம்மிக வடபுல வாடைக்கு

அழி மழை-மிகும்படி வடதிசையினின்றும வரும் வாடைக் காற்றுக்கு அழிந்த முகில்கள், தென்புலம் படரும் தண்பனி நாள் - தென்றிசை நோக்கிச் செல்லாநின்ற குளிர்ந்த பனியை யுடைய பருவத்தில், நம்மை விட்டு அமையுமோ-நம்மை பிரிந் துறைவரோ? உறையார் காண்.

**விளக்கம்** :—தலைவர் குறித்துச் சென்ற பருவமாகிய தண்பனி

நாள் இன்னும் வந்திலது. அது வருமுன் வருவர் அதுகாறும் ஆற்றுக என்பது குறிப்பு நெல்லி என்ற குறிப்பால் பாலைநிலம் என்பதும், ஓங்குமலைப் பைஞ்சுனை என்ற குறிப்பால் குறிஞ்சிநிலம் என்பதும் பெற்றாம். பெறவே, பாலைநிலத்தே நெல்லிதின்ற மரையான் ஏறு, குறிஞ்சிநிலப் பைஞ்சுனையில் அக்காய் தின்ற இனிமை தோன்ற வெய்துயிர்த்து நீருண்ணும் என்றது, நின்னைப் பிரிந்து சென்ற தலை வர் ஆண்டு நிரம்பப் பொருளீட்டிக் கொண்டு அப்பொருளால் வரும் இன்பத்தை நின்பால் வந்து பெறுவர் என்னும் குறிப்புடையதாகக் கருதுக. நெல்லிக்காயைத் தின்றபின்னர் நீர்பருகின் அந்நீர் இனிப் புடையதாதல் இயல்பு.

மாந்தி - தின்று. பாலேயில் நின்று செல்லி மாந்தியதனுல் வெய்துயிர்த்து என்ருள். நம்மை என்றது, இன்றியமையாத நம்மை என்

மூலமும் உரையும்

சஎ௫

பதுபட நின்றது. கைம்மிக என்றது,
மிகுதிப்பொருள் குறித்து நின்ற ஒருசொல் என்க.

வாடைக்காற்று முகில்களேத் தென்புலத்திற்கு மோதித் தள்ளுதலால் 'வாடைக்கு அழிந்த மழை' என்ருள். மழை - முகில்.

## பாட்டு - ருகஅ: தலேவி கூற்று

துறை:—கிழவன், அண்மையனுகத்
தோழிக்குக் கிழத்தி உரைத்தது அஃதாவது,
களவொழுக்கமே காமுற்று வரைதல்
முயற்சியின்றி ஒழுகுந்தலேவன், ஒருநாள் சிறைப்புறத்தே வந்து
நின்ற பொழுது அவன் வரவுணராள் போன்று அவன் கேட்பத்
தோழி தலேவிக்குக் கூறுமாற்ருனே வரைவு கடாஅயது.

இதன்கண் தலேவன் வரவுணர்ந்த தோழி
தலேவியை நோக்கி

'நந்தலைவன் வரையக்கருதினும் கருதானாயினும், நாம் என் செய்வாம? அவனே பிழையா வஞ்சினம் செய்தவனும், கடமை யுடையோனும், நமக்குப் புணையாவோனும், கள்வனும் ஆவன். அவன், தானே அறியாதவிடத்து யான் அவற்கொன்றும் அறிவிக்க மாட்டேன்' என்று கூறுகின்றாள்.

௩௪௯. எறிசுறாக் கலித்த இலங்குநீர்ப் பரப்பின்
நறுவீ ஞாழலொடு புன்னை தாஅய்
வெறியயர் களத்தினில் தோன்றுந்
துறைவன்
குறியா னாயினும் குறிப்பினும் பிறிதோன்
றறியாற் குரைப்பலோ யானே
யெய்த்தவிப்
பணையெழின் மென்றோ ளணைஇய
வந்நாட்
பிழையா வஞ்சினஞ் செய்த
கள்வனும் கடவனும் புணைவனுந் தானே.

—அம்மூவனார்.

(இ - ள்.) தோழி—, எறி சுறாக் கலித்த இலங்கு நீர்ப்பரப் பின்-எறிந்து கொல்லுகின்ற சுறாமீன்கள் மிக்க விளங்குகின்ற நீரையுடைய கடற்பரப்பினிடத்தே, ஞாழலொடு புன்னை நறுவீ தாஅய்-ஞாழலோடே புன்னையினுடைய நறிய மலர்கள் பரந்து, வெறியயர் களத்தினில் தோன்றுந் துறைவன் - வெறியாடுமிடத் தைப்போன்றுதோன்றுகின்றகடற்றுறையையுடையநந்தலைவன், குறியான் ஆயினும் குறிப்பினும்-என்னை வரைந்து கோடலைத் தன் நெஞ்சிற் குறிக்கொள்ளான் ஆயினும் அல்லது குறிக்கொண் டாலும், பிறிது ஒன்று அறியாற்கு யான் உரைப்பலோ-இக்கள வொழுக்கத்தையன்றி வேறொன்றனையும் தானே உணராத அவ



னுக்கு யானே வலிந்து உணர்த்துவேனோ உணர்த்த இசையேன் காண், எய்த்த இப் பணை எழின் மென்றோள் அணைஇய அந்நாள்- இன்று மெலிந்துள்ள இந்த மூங்கில் போன்ற அழகுடைய மெல் லிய தோள்களை அணைந்த அந்த நாளிலே, பிழையா வஞ்சினம் செய்த - தவறாத வஞ்சினங் கூறிய, கள்வனும் கடவனும் புணை வனுந் தானே - வஞ்ச நெஞ்சுடையவனும் அதனை நிறைவேற் றும் கடப்பாட்டாளனும், நமக்குப் புகலிடமாம்

புணை போன்ற வனும் அவனல்லனே?

**விளக்கம்:**—அந்நாள் வஞ்சினஞ்செய்தவனும், அவ்வஞ்சினத்திற்குச் சான்றுவானும், அதனை நிறைவேற்றும் கடமையுடையானும், நமக்குப் புணை போன்றவனும் அவனே ஆகலான், அவன் வரைந்து கொண்டு இல்லறம் நிகழ்த்தலைக் குறிக்கொள்ளாதவிடத்து யான் கூறுதல் முறையன்று ஆகலின், யான் கூறேன் காண்.

தானே அறியும் இயல்பிலானுக்கு யான் கூறிப் பயந்த தென்னென்பாள், 'பிறிதொன்றறியாற் குரைப்பலோ' என்றாள். உரைப்பலோ என்னும் வினு உரையேன் என்பதுபடநின்றது.

பிறிது என்றது களவின் வேருகிய கற்பினை. களவொழுக்கத்தையேயன்றி, வரைந்து கொண்டு இல்லறம் நடத்தலை குறிக்கொள்ளான் என்று இகழ்ந்தவாறு. இக் களவொழுக்கத்தானுற்ற இன்னல் நிலை தெரிப்பாள், 'எய்த்த இத்தோள்' என்றாள். 'பணையெழின் மென்றோள்' என்றது, பண்டு அவை யிருந்தவண்ணம் இயம்பி இரங்கியபடியாம். அந்நாள் என்றது, பாலதாணையால் தான் தலைவனைத் தலைப்பட்டு இயற்கைப்புணர்ச்சி எய்திய நாளினை என்க. அந் நாள் என்றமையால்

இந்நாள் எய்த்த இத்தோள் என்க. கள்வன் - வஞ்சகன். வஞ்சினம் செய்தவனும் கள்வனும் அவனே என்றவாறு. வஞ்சினமுரைத்த பொழுது அவனையன்றிச் சான்றுவார் பிறரின்மையின் கள்வனும் அவனே என்றாள். கடவன் - கடமையுடையோன். புணைவன் - புணைபோன்று பற்றுகி உய்ப்போன்.

வஞ்சினம், நின்னிற் பிரியேன் என்றசொல். அது நிறைவேற வேண்டுமாயின் வரைந்துகோடல் வேண்டும். அதனைக் குறிக்கொள்ளாமையின் பிழையா வஞ்சினம் பிழைத்தான் என்று பழித்தாள். வஞ்சினம் பிழைக்கப்படாததொன் றென்பாள், 'பிழையா வஞ்சினம்,' என்றாள.

நீர்ப்பரப்பு மலரான் மறைக்கப்பட்டு ஆடுதற்குரிய இடம்போன்று தோன்றும் என்றது, பிரியும் தலைவன் வஞ்சினத்தாலே தன்னை மறைத்துப் பிரியாதான் போன்று தோன்றினான் என்னும் குறிப்புடைத்தென்க.

## பாட்டு - ௩௧௯ : தலைவி கூற்று

துறை :—பருவ வரவின்கண் வேறுபட்ட கிழத்தி வன்புறை எதிரழிந்து சொற்றது அஃதாவது, தலைவன் 'மீண்டு வருவேன்,' எனக் குறித்துச் சென்ற கார்ப்பருவம் வந்தும் வாரானாக, ஆற்றாமைகொண்ட தலைவியை, 'நீ ஆற்றியிருத்தல்



ண்டும்,' எனத் தோழி வற்புறுத்தினகாலை அவட்குத் தலைவி ஞ்சழிந்து கூறியது.

இதன்கண், வற்புறுத்திய தோழியை நோக்கித் தலைவி, ண் மான்கள் பிணைகளைத் தழுவிக்கொண்டு கானப்புதலில் ங்கின ; களிற்றியானைகள் பிடி தழுவி மலையிடத்தை எய்தின ; லைப்பொழுதும் கொலைக்களத் தேதிலார்போல வந்தது : ழையும் பொழியாநின்றது ; இங்ஙனமாகவும் என் மேனி ஞ் சிதைத்தோர் இன்னும் வந்திலர் ; என் உயிர்நிலை இனி ணும்,' என்று கூறுகின்றாள்.

௧௯. மானேறு மடப்பிணை தழீஇ மருள்கூர்ந்து
கான நண்ணிய புதன்மறைந்
தொடுங்கவும்
கையுடை நன்மாப் பிடியொடு பொருந்தி
மையணி மருங்கின் மலையகஞ் சேரவும்
மாலைவந் தன்று மாரி மாமழை
பொன்னேர் மேனி நன்னலஞ்
சிதைத்தோர்
இன்னும் வாரார் ஆயின்
என்னுந் தோழிநம் இன்னுயிர் நிலையே.

—நாயங் கண்ணனார்.

(இ - ள்.)
ண் மான்கள்
தோழி—, மான் ஏறு மடப் பிணை தழீஇ - தம் மடப்பம் பொருந்திய பிணை மான்களைத்

ழுவிக்கொண்டு, மருள் கூர்ந்து - மயக்கம் மிக்கு, கானம் நண்
ிய புதல் மறைந்து ஒடுங்கவும் - காட்டின்கட் பொருந்திய
நல்களிடத்தே சென்று ஒடுங்கி யிருக்கும்படியும், கை உடை
ர்மாப் பிடியொடு பொருந்தி - துதிக்கையையுடைய நல்ல

ிற்று யானைகள் தம் பெண்யானைகளோடு கூடி, மை அணி
நங்கின் மலை யகம் சேரவும் - முகில்களை அணிந்த பக்கத்தை
டைய மலையின்கண் சேரும்படியும, மாரி மா மழை மாலை
;தன்று - கார்காலத்துப் பெரிய மழை இம்மாலைப் பொழுதின்

ன் வந்தது, பொன் நேர் மேனி நல்நலம் சிதைத்தோர் இன்னும்
ரார் ஆயின் - நமது பொன்போன்ற மேனியின் அழகைக்
டுத்த நங் தலைவர் இம் மழைக்காலம் வந்தும் இன்னும் வந்தில
யின், நம் இன் உயிர் நிலை என்னும் - நம்முடைய இனிய உயிர்

ல எத்தகையதாகும்?

விளக்கம் :—மானேறு மடப்பிணை தழீஇப் போதலும், களிறு பிடி
ீஇச் சேர்தலும், தலைவி தலைவனை நினைத்தற் கேதுவாகி அவள்
ிவுத் துன்பத்தை மிகுவிப்பனவாம்.



மருள் - மயக்கம். திசையிருண்டு மழை பொழிதலின், மருள்
கூர்ந்து ஒடுங்கின என்க. கையுடை நன்மா - யானை. பிடி தழீஇ
என்றமையாற் களிற்று யானை என்க. பிடியொடு பொருந்திப் போதல்
கண்டமையால் நன்மா என்றாள். மை - முகில். மருங்கு - பக்கம்.
மாலைக்காலந் தனிமைத் துன்பத்தை மிகுவித்தல் கருதி மாலை வந்
தன்று என்றாள். இது தலைவன் குறித்துச் சென்ற கால மாரியே என்
பாள், 'மாரி மாமழை.' என்றாள். கார்ப்பருவந் தொடங்கு முன்னரே
வருவன் என்று கூறிச் சென்றவர், கார்ப்பருவந் தொடங்கி மழை
பொழிந்தும் வாராராயினர் என்பாள், 'இன்னும் வாராராயின்,'
என்றாள்.

இதுகாறும் அவர் கூறிச்சென்ற பருவத்தே வருவர் என்னும் எண்ணம் பற்றுக்கோடாக உயிர் நிலைப்பதாயிற்று. இனி அப்பற்றுக்கோடும் இல்லையாயபின் உயிர்போதல் ஒருதலை என்பாள், 'நம் இன் உயிர் நிலை என்னும்?' என்றாள். பிரிந்தபின்னும் வாழ்வுகந்த உயிர் என்பாள், 'இன்னுயிர்,' என்றாள். 'துன்பம் உழத்தொறும் காதற்றுயிர்,' எனப் பிற சான்றோரும் கூறுதலறிக.

பொன்னிறமுடைய மேனி முழுதும் பசலை பாய்ந்து மெலிந்து போம்படி செய்த வன்கண்ணர் என்பாள், 'பொன்னேர் மேனி நன்னலம் சிதைத்தோர,' என்றாள். ஏனை மகளிரைப் பார்க்கினும் பண்டு சிறந்த நலமுடையேனா யிருந்தேன் என்றிரங்குவாள், 'நன்னலம்,' என்றாள்.

இனி யான் உயிர் வாழகில்லேன் என்பது கருத்து.

## பாட்டு - ௩௨௦ : தலைவி கூற்று

துறை —அலரஞ்சி ஆற்றாளாகிய தலைமகள், தலைவன் கேட்பானாகத் தோழிக்குக் கூறியது. அஃதாவது, ஊர் மாக்கள் தூற்றும் பழிச்சொல் பொறாது வருந்திய தலைவி, ஒருநாள் தலைவன் தன் மனையயல் வந்து நிற்றலை அறிந்து, அவன் வரவுணராதாள் போன்று தோழிக்குக் கூறுவாளாய் அவன் கேட்பக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, "மீனும் இறவும் மணல் புலானுறப் பரக்கும் துறையையுடைய நந் தலைவனோடு

யாம் ஒரு நாளேனும் இன்புற்றமர்ந்து மகிழ்ந்தேம்,' என்னும் பழியிலேமாகவும், புட்கள் ஆரவாரிக்கும் புன்னைச் சோலையை யுடைய இச்சேரியோர் தம் கொடுமை காரணமாக யாண்டும் வீணே பழிதூற்றா நின்றனர் காண்," என்று கூறுகின்றாள்.

௩௨௦. பெருங்கடற் பரதவர் கோணமீன்
உணங்கல்

அருங்கழிக் கொண்ட இறவின் வாடலோடு
நிலவுநிற வெண்மணல் புலவப் பலவுடன்
எக்கர்தோறும் பரக்குந் துறைவனே

டொருநாள்

மூலமும் உரையும்
சஎகூ

நக்கதோர் பழியு மிலமே போதவிழ்
பொன்னிணர் மரீஇய புள்ளிமிழ் பொங்கர்ப்
புன்னையஞ் சேரி யிவ்வூர்
கொன்னலர் தூற்றுந்தன் கொடுமை யானே.

—தும்பிசேர் கீரனர்.[1]

(இ - ள்.) தோழி!, பெருங் கடல் பரதவர்

கொள் மீன்
ணங்கல் - பெரிய கடலின்கண்ணே பரதவர் வேட்டத்தாற்
காண்ட மீன்களினது உலர்ந்த வற்றல், அருங் கழிக் கொண்ட
றவின் வாடலொடு - நிலைத்தற்கரிய கழிகளிடத்தே கொண்ட
றுவினது வற்றலோடே, நிலவு நிற
வெண்மணல் புலவப் லவுடன் எக்கர்தொறும்
பரக்கும் துறைவனொடு - நிலவொளி
ரான்ற வெள்ளிய மணற்பரப்புப் புலானாறும்படி பலவும்
நங்கே இடுமணல்தோறும் பரவிக் கிடவாநின்ற கடற்றுறையை
டைய நந் தலைவனோடு, ஒருநாள் நககது ஓர்
பழியும் இலம் - ம் ஒரு நாளேனும் மகிழ்ந்து
விளையாடிய பழி இல்லாதேமா
நப்பவும், போது அவிழ் பொன் இணர் மரீஇய புள் இமிழ் -
பர்கள் விரிந்த பொன்னிறமுடைய பூங் கொத்துக்களிடத்து
ப்திய பறவைகள் ஆரவாரிக்கின்ற, பொங்கர்ப் புன்னை அம்
ரி இவ்வூர் - கிளைகளையுடைய புன்னை மரங்கள் சூழ்ந்த
ழகிய சேரிகளை யுடைத்தாகிய இந்த ஊரின்கண் உள்ளோர்,
ன் கொடுமையான் கொன அலர் தூற்றும் - தமக்கியல்பாக
ர்ள கொடிய தன்மையாலே வீணே பழி
தூற்றுகின்றனர்.

**விளக்கம்** :—பரதவர் - நெய்தனில மாக்கள்.
பரதவர் கொண்ட
ன் உணாகலும் இரு வற்றலும் தமக் கியல்பாகிய புலானாற்றத்தை
வொளி போலும் தூய மணலிலேற்றி நாறும்படி செய்தாற்போன்று
வூர் வம்பமாக்கள் தமக் கியல்பாகிய புன்மையால் கற்புக்கடம் பூண்
ழுகும் நம் தூய வொழுக்கத்தை யாண்டும் பழி தூற்றுகின்றனர்

ாபது உள்ளுறையாகக் கருதுக.

இக் களவுக் காலத்தே தலைவனை யாம் பன்முறை கூடப்பெற்றேம் ரினும், நெஞ்சம் நிறைவுறக் கூடினேமல்லேம் என்பாள், 'ஒருநாள் க பழியுமிலம்' என்றாள். எனவே, இக் களவொழுக்கம் நிறையின்பம் ர்தற்கு இடனாகாமையோடு வீண்பழி எற்க இடனாகவும் உளதென ணர்த்தியவாறு. இனி வரைந்து கொண்டாலோ அந்நிலை நிறை ்பமும் புகழும் தரும் என்பதும் அருத்தாபத்தியாற் கொள்ள பத்தமையும் உணர்க.

உணங்கல் - உலர்ந்த மீன். இரு - இறவு என ஆக்குறுகி உகர ற்றது. இரா - ஒருவகை மீன். வாடல் - வற்றல் அஃதாவது ர்ந்த இறவு. நிலவு நிறம்போன்ற வெண்மையுடைய மணல் என்க. கது: இடக்கரடக்கல். இவ்வூர் - ஆகுபெயர். கொன் - வீண்.

---

(பாடம்) 1. தும்பிசேர் கீரன்; தும்பி மோசிகீரன்.



இங்ஙனம் மனம் விரும்பியவாறு இன்பநுகர்தற்கு இடனாகாது வீண்பழிக்கே இடனாகிய இக்களவொழுக்கத்தை விட்டு விரைவின் வரைந்துகொண்டு வேண்டியாங்கின்புற்றுப் புகழ்பட வாழ்தலே சிறப்புடைத்தெனக் குறிப்பானுணர்த்தி இது வரைவு கடாயதாதலறிக.

## பாட்டு - ௩௨௧ : தோழி கூற்று

துறை :—தோழி கிழத்திக்கு நொதுமலர் வரையுமிடத்து
அறத்தொடு நிற்பேன் என்றது. அஃதாவது, நொதுமலர் வரைவுவேண்டிப் புக்கபொழுது தோழி 'இனி யான் மறை வெளிப்படுத்துவன்' என்று தலைவிக்குணர்த்தியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'அன்னாய் நான்
கூறுவதனை விரும்பிக்கேள் ; நின் துணைவனுகிய ஆரநாறு மார்பினன் கண்ணிசூடி ஈண்டு வந்து பெயரும்பொழுது புலியேறு முழங்கினும் முழங்கும் ஆதலால், இது மறைத்தொழுகும் பொழுதன்று; நான் அறத்தொடு நிற்பேன் காண்' 'என்கின்றாள்.

நூஉக மலைச்சேஞ் சாந்தின் ஆர மார்பினன்
சுனைப்பூங் குவளைச் சுரும்பார் கண்ணியன்
நடுநாள் வந்து நம்மனைப் பெயரும்
மடவர லரிவைநின் மார்பமர் இன்றுணை
மன்ற மரையா இரிய ஏறட்டுச்
செங்கண் இரும்புலி குழுமும் அதனல்
மறைத்தற் காலையோ அன்றே
திறப்பல் வாழிவேண் டன்னைநம் கதவே.

(இ - ள்) அன்னை வாழி வேண்டு - அன்னாய் நீ வாழ்வாயாக; யான் கூறுவதொன்றனை விரும்பிக்கேள், மடவரல் அரிவை - மடப்பம் வருதலையுடைய அரிவையே! நின் மார்பு அமர் இன் துணை - நினது மார்பினைப் பொருந்தும் இனிய தலைவன், மலைச் செஞ் சாந்தின் ஆர மார்பினன் - மலையின்கண் பிறந்த சிவந்த சந்தனத்தையும் முத்தமாலையையும் உடைய மார்பினனாய், சுனைப் பூங் குவளைச் சுரும்பார் கண்ணியன் - சுனையின்கண் பிறந்த அழகிய குவளை மலரானாய வண்டுகள் பொருந்திய தலைமாலையுடையனாய்; நம் மனை நடுநாள் வந்து பெயரும் - நமது மனைக்கு இடையிரவிலே வந்து மீளாநின்றான், மன்றம்

1. ஆசிரியர் பெயர் காணப்படவில்லை.

## மூலமும் உரையும்

சஅக

மரையா இரிய - அப்பொழுது அம்பலத்தின்கண் உள்ள மரையா ஓடும்படி, ஏறு அட்டுச் செங்கண் இரும்புலி குழுமும்- அதன் ஏற்றினைக் கொன்று சிவந்த கண்ணையுடைய பெரிய புலி

முழங்கும், அதனால் மறைத்தற் காலே அன்று - ஆதலால் நம் களவொழுக்கம் மறைத்தற்குத் தகுந்த காலம் இஃதன்று, நம் கதவு திறப்பல் - யான் நமது மறையினை வெளிப்படுப்பேன்.

**விளக்கம்** :—இச்செய்யுட்குத் துறை வகுத்தோர் ஒரு துமலர் மகட் பேசி வந்தமையை அறிந்த தோழி, அச்செய்தியைத் தலைவி அறியின் வருந்துவள் எனக்கருதித் தான் அறத்தொடு நிற்றற்குப் பிறிதோர் காரணம் காட்டித் தலைவியின் உடம்பாடு பெறக் கூறியதென்று கருதினா போலும்.

ஈண்டுத் தான் அறத்தொடு நிற்றற்குக் காரணம் இரவுக்குறியின் கண் வந்து மீளும் தலைவற்குப் புலியானே ஏதம் உறுங்கொல் என அஞ்சும் அச்சமாகும் என்று தோழி கூறினள் என்க.

சாந்தினையும் ஆரத்தினையும் உடைய மார்பினன்

என்க. சாந்து -

சந்தனம் ஆரம் - முத்துமாலை. சாந்தும் கண்ணியும் அணிந்து வருவன் என்றது, அவற்றின் மணத்தாலே அவன் வரவு பிறரானறியப் படும் எனப் பிறிதுமோர் ஏது குறிப்பானுணர்த்திய படியாம். நடு

நாள் - நடு இரவு. நம்மனை நடுநாள் வந்து பெயரும் என மாறுக. அவன் வந்து பெயர்ந்த பின்னர் யான் புலி முழக்கத்தைக் கேட்டுளேன் என்பாள், 'செங்கண் இரும்புலி குழூஉம்' என்றாள். ஊரம் பலத்தின் கண்ணே புலி குழூஉம் என்றது தலைவன் அதற்குத் தப்புதல் அரிதென்பதுபட நின்றது.

இங்ஙனம் ஏதமிக்க இருள் நெறியில் அவன் வந்து பெயர்தலை யாம் தவிர்க்கவேண்டும் ஆதலின், நமது மறையை வெளிப்படுத்து அவன் வரைந்து கோடற்கு வழிசெய்தல் இன்றியமையாதென்பாள், 'இது மறைத்தற் காலே' அன்றென்றாள்.

நம் கதவு திறப்பல் என்றது, குறிப்புமொழி.
அஃதாவது நமது
மறைச் செய்தியை வெளிப்படுப்பன் என்றவாறு. மறை வெளிப்படுத்தல் வரைவிற்கு வழிசெய்தலே ஆகலின் கதவு திறப்பல் என்றது நன்கு சிறத்தலறிக.

## பாட்டு - ௩௨௨ : தலைவி கூற்று

துறை :—தலைமகன் வரவுணர்ந்து தலைமகள் இயற்பட

மொழிந்தது. அஃதாவது, இரவுக்குறிக்கண் தலைவன் குறித்த பொழுதில் வாராமையானே அவனைத் தோழி பழித்தாள். அப்பொழுது தலைவன் வருதலைத் தலைவி அறிந்துகொண்டு அவன் வரவறியாதாள் போன்று தோழிக்குத் 'தலைவன் பழியிலன்' என்பதுபடத் தலைவி கூறியது.

இதன்கண், தோழிக்குத் தலைவி, 'ஆமாவினது கன்று, கானவருடைய ஆரவாரத்தாலே அஞ்சித் தன் இனத்தைப்

கு.—31

பிரிந்து காட்டின்கண் உள்ளதோர் சிற்றூரிலே புகுந்து, ஆண்டுள்ள மகளிரால் பேணப்பட்டு வீட்டு வாழ்க்கையில் வன்மை பெற்றது போன்று, அவன் வாராவிடினும் நாமே வலிந்து அவன்பாற் சென்று இன்புறுவேமாக' என்று கூறுகின்றாள்.

௩௨௨. அமர்க்க ணாமான் அஞ்செவிக் குழவி
கானவ ரெடுப்ப வெரீஇ யினந்தீர்ந்து
கான நண்ணிய சிறுகுடிப் பட்டென
இளைய ரோம்ப மரீஇயவ ணயந்து
மனையுறை வாழ்க்கை வல்லி யாங்கு
மருவின் இனியவு முளவோ
செல்வாந் தோழி யொல்வாங்கு நடந்தே.

—ஐயூர் முடவனார்.

(இ - ள்) தோழி—, அமர்க்கண் ஆமான் அஞ்செவிக்

குழவி - விரும்புதற்குக் காரணமான கண்களையுடைய ஆமானின் அழகிய செவிகளையுடைய கன்று, கானவர் எடுப்ப வெரீஇ இனம் தீர்ந்து - வேடர்கள் அலைத்து எழுப்புதலானே அஞ்சித் தனது இனத்தினின்றும் பிரிந்து போய், கானம் நண்

ணிய சிறுகுடிப் பட்டென - காட்டின்கண் பொருந்திய சிறிய குறவர் குடியிலே அகப்பட்டதாக, இளையர் ஓம்ப மரீஇ அவண் நயந்து - அக்குடிக்கண் உள்ள இளமகளிர்கள் பேணுநிற்ப அவ ரோடு கலந்து அவ்விடத்தை விரும்பி, மனையுறை வாழ்க்கை வல்லி யாங்கு - வீட்டின்கண் வாழும் வாழ்க்கையின்கண் வன்மைபுற்றாற் போன்று, மருவின் இனியவும் உளவோ - பழகுதலானே வரும் இனிமையினும் இனிமையுடையன வேறு பொருள்களும் உள்ளனவோ? ஆதலின் யாமும் நந்தலைவ னுடன் மருவி இன்புறும் பொருட்டு, ஒல்வாங்கு நடந்து செல்வாம் - நம்மால் இயன்ற அளவின் நடந்து அவன் இருக்கைக் குச் செலவோம்.

**விளக்கம்** :—'அவன் ஈண்டு வந்திலன்; அன்பிலன்,' எனத் தோழி இயற்பழித்தாளாக, 'அவன் வாராமையானே அன்பிலன்' என்று கூறுதே கொள்; 'அவன் அன்புடையனே; நமக்கு இன்பம் வேண்டின் அவன் இருக்கைக்கு யாமும் செல்வோம' என்று தலைவி இயற்பட மொழிந்தது.

காட்டில் வாழும் இயல்புடைய ஆமான் கன்று, அக்காட்டில் வாழ் வாரானே அலைபபுண்டு, தன் இனத்திற் பிரிந்து சிறுகுடியிற்பட்டு ஆண்டுறையும் மகளிரோடு பழகி அவ்வின்பத்தே பழகினாற்போன்று, நம்மூராரானே அலர்தூற்றி அலைக்கப்பட்ட யாமும் நம் தமரின் நீங் கித் தலைவன்பால் வலிந்து சென்று உய்வேம் என உவமையை விரித்

## மூலமும் உரையும்

சஅரு

துக் கொள்க. இவ்வுவமையானே தலைவி தனக்குற்ற இன்னா நிலையினைத் தலைவற்குக் குறிப்பானுணர்த்தி வரைவு கடாவினள் ஆதலும் உணர்க.

மகளிர் தலைவன் மனைக்குத் தாமே சேறல் வழக்கமன்றெனினும், நமக்குற்ற இன்னலினின்று தப்பற்கு வேறு வழியின்மையான், அவ் வழக்கை மாற்றிப் புதுவதாக யாமே செல்லும் வழக்கத்தை உண்டாக்குவேம்; அங்ஙனம் செய்தேனும் உய்வம் என வருந்திக் கூறியது எனக.

அவனிருக்கைக்குச செல்லல் தனது மென்மையால் இயலாது என்பதுபட, 'ஒல்வாங்கு நடந்து செல்வாம்' என்றாள்.

கானவர் - குறிஞ்சிநில மாக்கள். எடுப்பதும் ஆரவாரித்தும் எழுப்ப என்றவாறு. என்றது கவண் எறிந்

## பாட்டு - ௩௨௩ : தலைவன் கூற்று

துறை :—வினைமுற்றினன் பாகற்கு உரைத்தது ; அஃதாவது, தலைவியைப் பிரிந்து வினைமேற் சென்ற தலைவன் வினை முற்றியவுடன் தேர்வலவனுக்குக் கூறியது.

அவ்

இதன்கண், தலைவன் பாகனை நோக்கி, 'வலவனே! இங்ஙனம் வினை முதலியன செய்து கழிக்கும் நாள்கள் எல்லாம் பயனற்ற வீணாட்களேயாம்; இவ்வுலகத்தே பயன்பட வாழும் நாட்களாவன, நறுநுதல் அரிவை தோளிணைத் துஞ்சிக் கழிந்த நாட்களேயாகும்' என்று கூறுகின்றான்.

௩௨௩. எல்லாம் எவனோ பதடி வைகல்
பாணர் படுமலை பண்ணிய எழாலின்
வானத் தெழுஞ்சுவர் நல்லிசை வீழப்
பெய்த புலத்துப் பூத்த முல்லைப்
பசுமுகைத் தாது நாறும் நறுநுதல்
அரிவை தோளிணைத் துஞ்சிக்
கழிந்த நாளிவண் வாழு நாளே.

—பதடி வைகலார்.

(இ - ள்) வலவ—, பாணர் படுமலை பண்ணிய எழாலின் - பாணர்கள் படுமலைப் பாலை என்னும் பண்ணை இசைத்த இசையினது, வானத்து எழும் சுவர் நல் இசை வீழ - விசும்பிலே எழாநின்ற மேலான ஒலிபோன்ற நல்ல இசையுண்டாகும்படி, பெய்த புலத்துப் பூத்தமுல்லை - மழைபெய்த கொல்லையின் கண்ணே மலர்ந்த முல்லையினது, பசு முகைத் தாது நாறும் நறுநுதல் - பசிய அரும்பினது தாது மணக்கும் நறிய

நெற்றியையுடைய, அரிவை தோள் இணைத் துஞ்சிக் கழிந்த நாள் - தலைவியினது தோளிணைகளிலே துயின்று கழிந்த நாள்கள் மட்டுமே, இவண் வாழும் நாள் - இவ்வுலகத்தின்கண் யாம் வாழ்ந்த நாட்களாகும, எல்லாம் எவனோ - அங்ஙனமின்றி பிற நெறியில் கழிந்த நாட்கள் எல்லாம் என்ன பயனுடையன, பதடி வைகல் - அவையனைத்தும் உள்ளீடற்ற பதர்போன்றனவே யாம்.

விளக்கம் :—பதடி - பதர். பதர்போன்று இன்பமாகிய உள்ளீடற்ற நாள்கள் என்க. படுமலை - படுமலைப் பாலை என்னும் ஒரு பண். இதனை "செம்பாலை, படுமலைப் பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப் பாலை, விளரிப்பாலை, மேற் செம்பாலை எனப் பட்ட ஏழுபாலையினை யும்," எனவரும் (சிலப் - ந. ௭0 - ௭௧ உரை) அடியார்க்கு நல்லார் உரையானும் அறிக. எழால் - இசை. எழாலினது இசைபோலும் நல்லிசை என்க. சுவல் - சுவர் என லகரத்திற்கு ரகரம் போலியாக வந்தது. சுவல் - மேலிடம். இசையில், கீழ்ஓசை நடுவண்ஓசை மேலோசை (மந்தம் உச்சம் சமம்) என மூன்றிடம் வகுப்புண்மையின் மேலோசையைச் சுவல் நல்லிசை என்றான் என்க. மழை பெய்யும் ஒலி படுமலைப்பாலைப் பண்ணொலியை ஒக்கும் என்பதனை,

> "பலவயின் நிலைஇய குன்றிற் கோடுதோ
> றேயினை யுரைஇயரோ பெருங்கலி யெழிலி
> படுமலை நின்ற நல்யாழ் வடிநரம்
> பெழீஇ யன்ன உறையினை."

(நற் - ௩௱௬), எனவரும் நற்றிணைச் செய்யுளானும்

உணர்க.

வீழ என்றது, உவமவுருபு.

"எள்ள விழையப் புல்லப் பொருவக்
கள்ள மதிப்ப வெல்ல வீழ
என்றாங் கெட்டே பயனிலை யுவமம்."

(உவம-கச) எனவரும் தொல்காப்பியத்தானும் அஃதுவமவுருபாதல் அறிக.

'அரிவை தோளிணைத் துஞ்சிக் கழியா நாள் எல்லாம் பதடி நாள் எனவே, இந்நாளையும் பதடி நாளாக்காது விரைந்து தலைவியின் பாற் சேறல் வேண்டும்; தேரினை விரைந்து செலுத்துக' என்று குறிப்பான் உணர்த்தினுனயிற்று.

தலைவியோடு துயிலா நாள் எல்லாம் பதடிவைகல் என்ற அருமை கருதி இதனைப் பாடிய நல்லிசைப் புலவர் 'பதடி வைகலார்' என வழங்கப்பட்டனர்.

## பாட்டு - ௩௨௪ : தோழி கூற்று

துறை :—செறிப்பறிவுறுக்கப்பட்டு "இரா வாரா வரைவல்' என்றாற்குத் தோழி அதுமறுத்து வரைவு கடாயது. அஃதாவது

தலைவி இற்செறிக்கப்பட்டமையைத் தோழியால் உணர்த்தப் பட்ட தலைவன், 'யான் இரவுக்குறியில் வந்து தலைவியைக் கண்டு செல்வேன்; பின்னர் வரைந்துகொள்வேன்' என அத் தோழியை இரந்தானாக, அவள் அவன் குறை மறுத்து வரைந்து கொள்ளும் படி தூண்டியது.

இதன்கண், தோழி தலைவனை நோக்கி, 'ஐய! நீ தலைவியின் பாற் கொண்டுள்ள அன்புடைமையானே கொடிய முதலைகள் திரிகின்ற கழியினை நீந்தி நள்ளிரவின்கண் வருகின்றனை; அவளோ தனது மடமையாலே நீ அங்ஙனம் வருதலை அஞ்சிப் பெரிதும் வருந்தாநின்றனள்; உங்களிருவருடைய வருத்தத்தையும் காண்கின்ற யானோ தன் இரட்டைப் பிள்ளைகள் நஞ்சுண்ணக் கண்ட தாய் போல நும் இருவிர்க்கும் இரங்கி அஞ்சாநின்றேன்' என்கின்றாள்.

ஙஉச. கொடுங்கால் முதலைக் கோள்வ லேற்றை
வழிவழக் கறுக்குங் கானலம் பெருந்துறை
இனமீன் இருங்கழி நீந்தி நீநின்
நயனுடை மையின் வருதி யிவடன்

மடனுடை மையின் உயங்கும் யானது
கவைமக நஞ்சுண் டாஅங்
கஞ்சுவல் பெருமவென் னெஞ்சத் தானே.

**—கவை மகனார்.**

(இ - ள்.) பெரும - பெருமானே ! நீ நின் நயன் உடைமை யின் - நீ நினது அன்புடைமையானே, கொடுங்கால் முதலைக் கோள் வல் ஏற்றை - கொல்லுதலில் வல்ல வளைந்த கால்களை யுடைய ஆண் முதலையானது, வழி வழக்கு அறுக்கும் கானல் அம் பெருந்துறை - வழியினிடத்தே மக்கள் செல்லுவதை விலக்காநின்ற கானலையுடைய அழகிய பெரிய கடற்றுறையின் கண், இனமீன் இருங்கழி நீந்தி - திரளாகிய மீன்களையுடைய கரிய கழியை நீந்தி, வருதி - வாராநின்றனை, இவள் தன் மடன் உடைமையின் உயங்கும் - இவளோ தன் அறியாமையை உடைமையாலே நின் வருகைபற்றி வருந்தாநின்றனள், யான் கவை மக நஞ்சு உண்டாங்கு - யானோ தன்னுடைய இரட்டைப் பிள்ளைகள் நஞ்சுண்டபொழுது தாய் அவ்விருவர்திறத்தும் வருந்துவதுபோல, என் நெஞ்சத்தான் அஞ்சுவல் - எனது உள்ளத்தானே

அஞ்சாநிற்பேன்.

விளக்கம் :—கோள் வல் முதலை ஏற்றை என்க. முதலை ஏற்றை - ஆண் முதலை. தப்பாது கொல்லும் வன்மையுடைய முதலை என்பாள்,



'கோள்வல் ஏற்றை' என்றாள். இம்முதலை உண்மை அறிந்தோர் அவ் வழிச் செல்லாமையின் 'வழி வழக்கறுக்கும்' என்றாள். வழிவழக்கு - வழிப்போதல். அறுத்தல் - இல்லையாக்குதல். இதனால் இரவுக்குறி வருதற்குளதாம் ஏதம் கூறினாள். அவள்பால் அன்பு பெரிதுடையை யாகலின் இவ்வேதமிருந்தும் நீ அஞ்சாது வருகின்றனை என்பாள், 'நீ நின் நயனுடைமையின் வருதி' என்றாள்.

தலைவி நின்பால் பேரன்புடையளாகலின் நினது ஆற்றல் அறியாது, நினக்கு 'ஏதம் வருமே' என்று வருந்துகின்றாள் என்பாள், 'இவள் தன் மடன் உடைமையின் உயங்கும்' என்றாள். மகளிர்க்கு மடன் உரியதே என்பாள், 'தன்மடன்' என்றாள்.

'இங்ஙனம் இருவர்திறத்தும் பரிதற்குரிய அவ்விரவுக் குறியினை யான் பெரிதும் அஞ்சுவேன்' என்பாள், தனது இரட்டைமகவு நஞ்சுணக் கண்ட தாயின் வருத்தத்தை உவமை எடுத்தோதினாள். 'இருவர்க்கும் இன்பமேயான .வரைவே இனி நிகழ்த்தற் பாலது; இரவுக்குறிக்கண் வாரற்க' என இது வரைவுகடாவியபடியாம்.

கவைமக - ஒரே கருவில் இரண்டுருவமாகத் தோன்றிய மகவுகள். இவ் இருவர் துயர்க்கும் ஒருங்கே வருந்துதற்குக் கவைமகவு நஞ் சுண்டமையை உவமை கண்ட சிறப்பானே, இதனைப் பாடிய நல்லிசைப் புலவர் 'கவைமகனார்' எனப்பட்டார் என்க. போன்று என வருவித்துக்கூறுக.

நஞ்சுணக்கண்ட தாய்

## பாட்டு - ௩௨௫ : தலைவி கூற்று

துறை :—பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி மெலிந்து உரைத்தது. அஃதாவது, 'தலைவன் பிரிந்த காலத்து ஆற்றுகின்றிலள்' எனக் கவலையுற்ற தோழிக்குத் தலைவி, 'எனது இன்னலுக்கு யானே காரணம ஆயினேனே,' என்று நெஞ்சழிந்து கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, "அந்தோ ! நம் தலைவர் 'யான் பொருளீட்டச் செல்வேன் ! செல்வேன் !' என்று எனக்குப் பன்முறையும் கூறினர். அவர் கூறுவது பொய் என்று கருதி, யானும 'செல்வீர் ஆயிற் செல்லுதிர்' என்றேன். அவர் மெய்யாகவே சென்றுவிட்டார். இப்பொழுது எவ்விடத்தினரோ? என் கண்ணீர் நிறைந்து என் மார்பு குளமாயிற்றே!" என்று வருந்துகின்றாள்.

௩௨௫. சேறுஞ் சேறு மென்றலின் பண்டைத்தன்
மாயச் செலவாச் செத்து மருங்கற்று
மன்னிக் கழிகென் றேனே அன்னோ
ஆசா கேந்தை யாண்டுளன் கொல்லோ

கருங்கால் வெண்குருகு மேயும்
பெருங்குளம் ஆயிற்றென் இடைமுலை
நிறைந்தே.

—நன்முலையார்.

## மூலமும் உரையும்

சஅள

(இ - ள்.) தோழி—, சேறும் சேறும் என்றலின் - யாம் இனிப் பொருள் ஈட்டற்குச் செல்வேம் செல்வேம்என்று நந்தலைவர்பலகாலும் கூறினமையாலே, பண்டைத் தன் மாயச்செலவாச் செத்து - முன்பு அவர் கூறிய பொய்ச் செலவாகக் கருதி, மருங்கற்று மன்னிக் கழிக என்றேன் - என் பக்கலின் நீங்கி நிலையாகப் பிரிந்து போமின் என்று கூறினேன், அன்னே
ஆசாகு எந்தை யாண்டுளன் கொல்லோ - அந்தோ நமக்குப் பற்றுக்கோடாகிய நந்தலைவர் இப்பொழுது எவ்விடத்தே உள்ளனரோ அறிகின்றிலேன், என் முலை இடை - என் முலைகளின் இடைப்பகுதி, நிறைந்து கருங்கால வெண்குருகு மேயும் பெருங்குளம் ஆயிற்று - கண்ணீரானே நிறைந்து கரிய கால்களை யுடைய வெள்ளிய நாரைகள் மேயாநின்ற பெரிய குளம் போல ஆயிற்று.

**விளக்கம்** :—சேறும் - செல்வேம். பொருளீட்டப் பிரிந்து செல் வேம் என்றவாறு. அடுக்குப் பலகாலும் கூறினமை தோற்றி வந்தது.

பண்டு அசதியாடற் பொருட்டு இங்ஙனம் அவர் கூறுவர் ஆகலான் இப்பொழுதும் அப்படியே கூறுகின்றார் என யான் தவறாகக் கருதினேன் என்பாள், 'பண்டைத்தன் மாயச் செலவாச் செத்து' என்றாள். செலவாக என்பதன்கண் ககரந் தொக்கது. மாயம் - பொய். செத்து - கருதி. யானும் அசதியாடுவேன் அவர் செலவைப் பொருட்டாகக் கருதாதேன் போன்று செல்வீரேற் சென்மின் என்று பொய்யே கூறினேன் என்பாள், 'மருங்கற்று மன்னிக் கழிகென்றேனே' என்றாள். மருங்கு - பக்கம், மருங்கற்று - பக்கத்தினீங்கி என்க. மன்னிக் கழிக என்றது, நிலையாகக் கழிக என்றவாறு. அஃதாவது, என்பால் இனி வாராது பிரிந்துறைதலையே நிலையாகக் கொண்மின் என்றவாறு.

கழிக என்னுந் துணையே யன்றி மன்னிக் கழிக என்றேனே; அவர் ஒருகால் அங்ஙனமே நிலையாகத் தங்கிவிடுவரோ என்றேங்குவாள், 'அன்னோ' என்றாள். அன்னோ - அந்தோ: இரக்கக் குறிப்பு.

எனது தவற்றிற்கு யானே வருந்தி அவர் இருக்குமிடத்தை அடைவேன் எனினோ, அவ்விடமும் அறிந்திலேன் என்பாள், 'எந்தை யாண்டுளன் கொல்லோ' என்றாள் அவனை இன்றி வாழகில்லேன் என்பாள், 'ஆசாகு எந்தை' என்றாள். ஆசு - பற்றுக் கோடு. எந்தை என்றது முறை குறியாது தலைமைத் தன்மை குறித்து எம்பெருமான் என்பதுபட நின்றது.

அவன் கூறியது மாயமெனக் கருதாது மெய்யென்றே கருதி இருப்பனேல், அவன செய்து செலவழுங்குவிப்பேன் ; அறியாமையான் அது செய்யா தொழிந்தேன் என்றிரங்கியவாறு.

இடையறாது நீர் தேங்கி நிற்றலின் முலையிடையைப் பெருங்குள மாயிற்று என்றாள். குளத்தின் பெருமையை விளங்கக் கூறுவாள், 'குருகு மேயும் பெருங்குளம்' என்றாள். கருங்கால் வெண்குருகு என் பதன்கண செய்யுளின்ப முணர்க. முலையிடை - முலைகளின் இடைப் பகுதி. இடைமுலை - முன்பின் மாறி நின்றது. முன்றில் என்பது போன்று.



## பாட்டு - கூ௨கூ: தலைவி கூற்று

துறை :—சிறைப்புறம். அஃதாவது, களவுக் காலத்தே தலைவன் ஒருநாள் மனையருகே வந்து நின்றமை கண்ட தலைவி, அவன் வரவுணராதாள் போன்று, 'இவ்வொழுக்கத்தே காணும் பொழுதினும் காணப் பொழுதே பெரிதாகலான், இப்பிரிவினை யான் ஆற்றுகிலேன்; விரைவில் வரைந்து கோடலே நன்'றெனத் தலைவற்குணர்த்தும் பொருட்டுத் தோழியை நோக்கிக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'நம் தலைவர் ஒருநாள் என்னைப் பிரிந்துறைந்த வழியும், அப்பிரிவுத் துன்பம் பல நாட்களில் நுகரும பெருந்துன்பம் போன்று மிகவும் நீளி தாக என்னை வருத்தா நின்றது ?' என்று

கூறுகின்றாள்.

௬௨௯. துணைத்த கோதைப் பணைப்பெருந் தோளினர்
கடலாடு மகளிர் கான விழைத்த
சிறுமனைப் புணர்ந்த நட்பே தோழி
ஒருநாள் துறைவன் துறப்பின்
பன்னாள் வரூஉம் இன்னா மைத்தே.

1

..............................

(இ - ள்.) தோழி—, துணைத்த கோதைப் பணைப் பெருந் தோளினர் - கட்டப் பெற்ற மாலையை அணிந்த மூங்கிலை யொத்த பெரிய தோள்களையுடையராகிய, கடல் ஆடுமகளிர் கானல் இழைத்த - கடலின்கண் நீர்விளையாட்டயர்ந்த மகளிர்கள் பின்னர்க் கடற்கரைச் சோலையின்கண்ணே இயற்றிய, சிறுமனைப் புணர்ந்த நட்பு - சிற்றிலிடத்தே முதன்முதலாக யாம் தலைவனோடு உளம் பொருந்திய இந்நட்பு, துறைவன் ஒருநாள் துறப்பின் - நம் தலைவர் ஒரோ ஒருநாள் நம்மைப் பிரிந்துறை வராயினும், பன்னாள் வரூஉம் இன்னாமைத்து - அவ்வொரு நாளும், பலநாட்களிலே வருகின்ற

துன்பத்தைத் தன்பாலுடைய தாயிருந்தது காண்.

**விளக்கம்** :— துணைத்த - சேர்த்துக் கட்டப்பட்ட என்க. கோதை - மலர்மாலை. பணை - மூங்கில். மகளிர் என்றது, ஆயமகளிரை.

தலைவி க. ற் கானலிலே ஆயமகளிரோடு சிற்றில் இழைத்து

விளையாடிய பொழுது ஆண்டு வந்த தலைவனை முதன் முதலாகக் காதலித்தாளாகலின், 'மகளிர் கானலிழைத்த சிறுமனைப் புணர்ந்த நட்பு' என்றாள். ஈண்டுப் புணர்ந்த என்றது, உள்ளப் புணர்ச்சியை. இங்ஙனம் விளையாட்டிடத்துக் காதல் நிகழும் வழக்கமுண்மையை,

1. ஆசிரியர் பெயர் காணப்பெறவில்லை.

## மூலமும் உரையும்

௬௮௬

" தொடலை யாயமொடு கடலுட னாடியும்
சிற்றி லிழைத்துஞ் சிறுசோறு குவைஇயும்
வருந்திய வருத்தந் தீர யாஞ்சிறி
திருந்தன மாக எய்த வந்து
தடமென் பணைத்தோள் மடநல் லீரே
எல்லு மெல்லின் றசைவுமிக வுடையேன்

மெல்லிலைப் பரப்பின் விருந் துண் டியானுமிக்
கல்லென் சிறுகுடித் தங்கின்மற் றெவனோ
எனமொழிந் தனனே ஒருவ னவற்கண்
டிறைஞ்சிய முகத்தெம் புறஞ்சேர்பு பொருந்தி
இவைநுமக் குரிய வல்ல விழிந்த
கொழுமீன் வல்சி என்றன மிழுமென
நெடுங்கொடி நுடங்கு நாவாய் தோன்றுவ
காணுமோ வெனக் காலிற் சிதையா
நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளும்
என்னே குறித்த நோக்கமொடு நன்னுதால்
ஒழிகோ யானென அழிதகக் கூறி
யான்பெயர் கென்ன நோக்கித் தான்றன்
நெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி
நின்றோன் போலும் இன்றுமென் கட்கே. (அகம் - ககO)

என்பது போலப் பிறண்டும் தொகைநூல்களுள் வருவனவற்றா லுணர்க.

துறப்பினும் என வரற்பாலதாகிய உம்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது. ஒருநாள் துறப்பினும் அவவொருநாள் பலநாள் போல் நீளிதாய்த் துன்புறுத்தும் என்பாள், 'ஒருநாள் பன்னாள் வருஉம் இன்னுமைத்து' என்றான். பிரிந்துறைவார்க்குக் காலம் நீளிதாதலை,

" ஒருநாள் எழுநாள்போற் செல்லும்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு "

(குறள் - கஉகக.)

எனவரும் திருக்குறளானும் உணர்க. ஈண்டு பன்னாள் என்னும் பொருட்டாதலும் உணர்க.

எழுநாள் என்றதும்

இங்ஙனம் இக்கள வொழுக்கத்தே பிரிந்துறையும் பொழுதெல்லாம் என்னைப் பெரிதும் வருத்துதலான் விரைவில் வரைந்து கோடல் வேண்டும் என்பது தலைவனுக்குக் குறிப்பானுணர்த்திய பொருளாம்.

## பாட்டு - ௩௨௭ : தலைவி கூற்று

துறை :—கிழவன் கேட்கும் அண்மையனாக, அவன் மலையினின்று வரும் யாற்றிற்கு உரைப்பாளாய் உரைத்தது. அஃதாவது, தலைவன் சிறைப்புறத்தே வந்து நின்றமை கண்ட தலைவி, அவன் வரவுணராதாள் போன்று அவன் மலையினின்று வரும் யாற்றினை நோக்கித் தலைவன் செய்த கொடுமையைக் கூறியது.



இதன்கண், தலைவி யாற்றை விளித்து, 'நம்மருகேயுள்ள மடமகள் போன்று இவ் வாழை மெல்லிய சாயலுடையதென்று கருதி அதனை அளி செய்யாது, மலையினின்றும் பெயர்த்துக் கொணர்ந்தனை ஆகலான், நீ தன்னை நயந்தோர்க்கு உதவாமையே நன்றென்றுணர்ந்த குன்ற நாடனினும் பெரிதும் தீமை

யுடையை' என்று கூறுகின்றாள்.

௲௨௭. நல்கின் வாழும் நல்கூர்ந் தோர்வயின்
நயனில ராகுதல் நன்றென உணர்ந்த
குன்ற நாடன் தன்னினும் நன்றும்
நின்னிலை கொடிதால் தீய கலுழி
நம்மனை மடமகள் இன்ன மென்மைச்
சாயலள் அளியள் என்னாய்
வாழைதந் தனையாற் சிலம்புபுல்
லெனவே.

—அம்மூவனார்.

(இ - ள்.) தீய கலுழி - தீமையுடைய யாறே!, நம் மனை மடமகள் - நம்மருகேயுள்ள மனையின்கண் வாழும் மடப்பத்தை யுடையவள், இன்ன மென்மைச் சாயலள் அளியள் என்னாய் - இதனை போன்ற மெல்லிய சாயலையுடையாள் அளிக்கத் தக்கவள் என்று கருதாயாய், சிலம்பு புல் என வாழை தந்தனை - அது பிறந்த மலைப்பக்கம பொலிவழியும்படி இவ் வாழையைப் பெயர்த்

துக் கொணர்ந்தனை ஆதலின், நல்கின் வாழும் நல்கூர்ந்தோர் வயின் - தான் அருள் செய்த வழியே வாழ்கின்ற எளியோரிடத்தே, நயனிலர் ஆகுதல் நன்று என உணர்ந்த - அன்பிலர்

ஆகுதல் நன்மையாம என்று உணர்ந்துள்ள, குன்றநாடன் தன்னினும்-மலைநாட்டையுடைய தலைவன் நிலையினது கொடுமையினும், நின்னிலை கொடிது - நினது தன்மை கொடியதாம்.

விளக்கம் :—நல்கின் வாழும் நல்கூர்ந்தார் என்றது, நல்கா வழி வாழ்தல் இயலாத எளியவர் என்றவாறு. இது தலைவன் தன்னைப் பிரிந்தவழி ஆற்றாமை மிக்கு வருந்தாநின்ற தன்னிலையைத் தலைவனுக்குக் குறிப்பான் உணர்த்தியதென்க. நயன் - அன்பு.

"ஓரிரா வைகலுள் தாமரைப் பொய்கையுள்
நீர்நீத்த மலர்போல நீ நீப்பின் வாழ்வாளோ"

எனவரும் கலியடிகளை ஈண்டு நினைவு கூர்க. குன்றநாடன் என்றது நீ பிறத்தற்கிடமாகிய மலைநாட்டிற்குத் தலைவன் எனத் தலைவனுக்கும் யாற்றிற்குமுரிய தொடர்புண்மை குறித்தவாறு. தனக்கும் யாற்றிற்குமுரிய தொடர்பு கூறுவாள், 'நம்மனை மடமகள்' என்றாள்.

யாற்றின் அருகேயுள்ள மனையாகலின் நம்மனை எனக் கிழமைப் பொருள் தோன்றக் கூறினாள். நயனிலர் ஆகுதல் யாவர்க்கும் நன்



றென உணர்ந்தான் என்பது பொருளாகலான், நயனிலர் எனப் பன்மை கூறப்பட்டது. நன்று - பெரிது. நிலை - தன்மை. நாடன் றன்மையினும் நின் றன்மை கொடிதென்க.

இவ் வாழையைக் காண்டலும் இது நாம் நல்கினன்றி வாழாத நல்குரவுடைத்து. மேலும் நம் மடமகளை ஒத்திருக்கின்றது, ஆதலால் இது நம்மால் அளிக்கத்தக்கது என்று எண்ணாது அதன் வாழ்வை அழித்தனையாகலின், நீ என் வாழ்வை இன்னும் அழித்திலாத குன்றநாடனினும் கொடியை என்றவாறு.

நம் மனை மடமகள் இன்ன மென்மைச் சாயலள் என்னுய் என்ருளேனும், இவ் வாழை நம் மடமகளன்ன மென்மைச் சாயலுடைத்து என்னுய் எனபது கருத்தாகக் கொள்க.

கலுழி - யாற்றிற்கு ஆகுபெயர்.
நோக்கிக் கூறினள் எனினுமாம்.
கலுழி-வெள்ளம், கலுழியையே

## பாட்டு - ௬௨அ: தோழி கூற்று

துறை:—வரைவிடை வேறுபடும் கிழத்தியை அவர் வரையும் நாள் அணித்தெனவும், அலரஞ்சலெனவும் கூறியது. அஃதாவது, வரைவிடைவைத்துத் தலைவன் பொருள்வயிற் பிரிந்தானாக, ஆற்ருது வேறுபட்ட தலைவியை நோக்கித் தோழி, வரைதற்கே தலைவன் பொருள் ஈட்டப் பிரிந்தனன்; ஆதலால், அண்மையில் அவனும் வரைவொடு புகுவன்; மேலும் ஊரின்கண் அலரும் பெரிதாயிற்று; அதுவும நந்தமர் தலைவனை அறிந்து வரைவுடம்படுதற்கு

ஏதுவாம; ஆதலான், 'வருந்தற்க' என, ஆற்றுவித்தது.

இதன் கண், 'தலைவன் நல்கிய நாள் சிலவே உள்ளன; அல

ரும் நமக்கு நன்மையே தரும்; நீ அலர்க்கஞ்சி வேறுபடாதே கொள்' என்று தோழி தலைவிக்குக் கூறுகின்றாள்.

நஉ௯. சிறுவீ ஞாழல் வேரளைப் பள்ளி
அலவன் சிறுமனை சிதையப் புணரி
குணில்வாய் முரசின் இயங்குந்
துறைவன்
நல்கிய நாள்தவச் சிலவே அலரே
வில்கெழு தானை விச்சியர் பெருமகன்
வேந்தரொடு பொருத ஞான்றைப் பாணர்
புலிநோக் குறழ்நிலை கண்ட
கலிகெழு குறும்பூர் ஆர்ப்பினும் பெரிதே.

—பரணர்.

(இ - ள்.) சிறுவீ ஞாழல் வேர் அளைப் பள்ளி - சிறிய பூக்களையுடைய ஞாழலினது வேரிடத்தேயுள்ள வளையாகிய

பள்ளியையுடைய, அலவன் சிறுமனை

சிதைய-நண்டினது சிறிய

இல்லம் அழியும்படி, புணரி குணில் வாய் முரசின் இரங்குந் துறைவன் - அலைகள் குறுந்தொடி வாய்ந்த முரசம் போல மோதி முழங்கும் கடற் றுறையையுடைய தலைவன், நல்கிய நாள் தவச்சில - அளிசெய்த நாட்களோ மிகவும் சிலவேயாம், அலரே- அங்ஙனமாகவும் அதுபற்றி ஊரில் எழுந்த பழிமொழியோ, வில் கெழு தானை விச்சியர் பெருமகன் வேந்தரொடு பொருத ஞான்றை - விற்படை பொருந்திய படைகளையுடைய விச்சியர்

களுக்குத் தலைவன் தன் பகைவேந்தரொடு

போர்செய்த

பொழுது, பாணர் புலிநோக்கு உறழ்நிலை கண்ட - பாணர்கள் புலிப்பார்வை ஒத்த பார்வையுடையராகிய நிலைமையினைக் கண்ட, கலி கெழு குறும்பூர் ஆர்ப்பினும் பெரிது - ஆரவாரம் பொருந்திய குறும்பர்கள் உறையும் ஊரின்கண் எழுந்த முழக்கத்தினும் பெரிய முழக்கத்தையுடையதாயிற்று.

**விளக்கம்**:—வீ-மலர். ஞாழல்-நெய்தனிலத்துள்ள ஒருவகை மரம். அதன் மலர்கள் சிறியனவாகலாற் 'சிறுவீ ஞாழல்' எனப்பட்டது. அளைப்பள்ளி: பண்புத்தொகை. பள்ளி - துயிலுமிடம். அலவன்-நண்டு. புணரி - அலை. சிதைய இரங்கும் என்றமையால் சிதைய மோதி இரங்கும் எனத் தகுதியால் ஒருசொல் வருவித்தோதுக.

வில்கெழு தானை விச்சியர் பெருமகன் என்றது, விச்சிமலையைச் சூழ்ந்துள்ள நாட்டையுடைய ஒரு குறுநிலமன்னனை என்க.

பாரி இறந்த பின்னர் அவன் மகளிரைக் கபிலர்

விச்சிக்கோனு

ழைக் கொண்டு சென்று அம் மகளிரை மணந்து கொள்ளும்படி வேண்டினர் என்னும் வரலாறு புறநானூற்று உ௦௦-ஆம் செய்யுளானே அறியப்பட்டது. கபிலரால் பாடப்பட்ட விச்சிக்கோவே ஈண்டுப் பரணரானும் பாடப்பட்டவன் என்றூதல் அல்லது அம்மரபிற் றோன்றிய மற்றொருவன் என்றூதல் கொள்க.

வேந்தர் - பகைமன்னர். விச்சியர் பெருமகன் வேந்தரொடு பொருதமைகண்ட குறும்பர்கள் அவ்வேந்தர்க்கு அழிவு வந்தமையான் அகமகிழ்ந்து ஆரவாரஞ் செய்தனர் என்க. அரசர்கள் அழிவதில் குறும்பர்கட்கு மகிழ்ச்சியுண்டாதல் இயல்பென்க. குறும்பர் - அரசியலின் உட்பகைவர்;

"பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்
கொல்குறும்பும் இல்லது நாடு."

என்னும் திருக்குறளானும் குறும்பர் இயல்புணர்க.

இனி, விச்சிக்கோ வேந்தரைப் பொருதகாலை அவ்வேந்தர் நாட்டிலிருந்த குறும்பர்கள் அஞ்சிமுழங்கினா எனக் கொள்ளினுமாம். குறும்பூர் - ஆகுபெயர். குறும்பூர் என்பது ஓர் ஊர் எனக் கருதுவாருமுளர்.

விச்சிக்கோ - வேந்தரொடு பொருதுங்கால் பாணர், யார் வெல்வர் யார் தோற்பர் என்ற ஐயத்தால் பகைவர் இருவர் திறத்தும் நோக்

## மூலமும் உரையும்

௬௬௫.

கலின், 'பாணர் புலிநோக்கு உறழ்நிலை' எனப்பட்டது. சிங்கநோக்கென்றே வழங்குதல் பெரும்பான்மை. இருபுறமும் நோக்குதல் என்பது கருத்து. புலியும் அங்ஙனம் நோக்கும் போலும்.

'தலைவனும் வரை பொருளீட்டப் போயினன்; ஊரினரும் அலர் தூற்றுகின்றனர்; அலரானே நந்தமர் தலைவனை அறிந்து வரைவுடம் படுவர்; தலைவனும் விரைவில் வருவன்; ஆதலால், வரையும் நாள் அணித்தாம்; நன்மைக்கே ஏதுவாகிய அலர்க்கு நீ அஞ்சி வருந்தற்க' எனத் தோழி தலைவியை ஆற்றினாள் என்க.

அலவனுடைய சிறுமனையைச் சிதைத்துப் புணரி அதனை வெளிப் படுத்தாற்போன்று, இவ்வலர் நம் மறைவெளிப்படுத்து வரைவிற்கு ஏதுவாம என்று உள்ளுறை காணக.

## பாட்டு - ௩௨௯: தலைவி கூற்று

துறை:—பிரிவிடை மெலிந்த கிழத்தி வற்புறுத்துந் தோழிக்கு, 'யான் ஆற்றுவல்' என்பதுபடச் சொல்லியது. அஃ தாவது, தலைவன் பிரிந்த ஞான்று ஆற்றாமை கொண்ட தலை வியை 'நீ ஆற்றுதல் வேண்டும்' என வற்புறுத்திய தோழிக்கு, 'ஒருவாறு ஆற்றுவல்' என்பதுபடத் தலைவி கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'யான் ஆற்றியிருக் கவே முயல்கின்றேன்; என் கண்களோ அவரை மறக்க வியலா தனவாகி நினைந்து நினைந்து நீர் பெருக்குகின்றன; ஒருவாறு ஆற்றுவல்' என்று கூறுகின்றாள். ஆயினும்

௯௨௯. கான விருப்பை வேனல் வெண்பூ
வளிபொரு நெடுஞ்சினை உகுத்தலி
ஞர்கழல்பு
களிறு வழங்கு சிறுநெறி புதையத் தாஅம்
பிறங்குமலை அருஞ்சுரம் இறந்தவர்ப்
படர்ந்து
பயிலிருள் நடுநாள் துயிலரி தாகித்
தெண்ணீர் நிகர்மலர் புரையும்
நன்மலர் மழைக்கணிற் கெளியவாற்
பனியே.

—ஓதலாந்தையார்.

(இ - ள்.) தோழி!, கான இருப்பை வேனல் வெண்பூ- காட்டிலே உள்ள இருப்பை மரத்தினது வேனிற்காலத்தே மலர்ந்த வெள்ளியமலர்கள், வளிபொரு நெடுஞ்சினை உகுத்தலின் - காற்றாலே அலைப்புண்ட நெடிய கொம்புகள் உதிர்த்த மையானே, ஆர் கழல் களிறு வழங்கு சிறு நெறி புதையத் தாஅம் - காம்புகள் கழலப் பெற்று களிற்றுயானைகள் வழங்கா நின்ற சிறிய வழி மறையும்படி பரக்கும், பிறங்கு மலை அருஞ்

சுரம் இறந்தவர்ப் படர்ந்து - விளங்குகின்ற

மலைகளையுடைய

கடத்தற்கரிய அருவழியைக் கடந்து சென்ற நந்தலைவரை நினைந்து, பயில் இருள் நடுநாள் துயில் அரிது ஆகி - மிக்க இருளையுடைய நடு இரவினும் உறங்குதல் இல்லையாகி, தெண்ணீர் நிகா மலர் புரையும் - தெளிந்த நீரின்கண் உள்ள ஒளி மலரை ஒப்பாகின்ற, நன்மலர் மழைக்கண்ணிற்கு - நன்றாகிய விழிப்பினையுடைய குளிர்ந்த என்னுடைய கண்களுக்கு, பனி எளிய - நீர்த்துளிகள் எளியவாகப் பெருகுவன காண்.

**விளக்கம்:**—கானம் என்றது, ஈண்டுப் பாலையை

என்க. மலை கூற

விற் குறிஞ்சி திரிந்த பாலையெனக் கொள்க. வளி-ஈண்டுக் கோடைக் காற்றென்க. இருப்பை பாலைக் கருப்பொருளாதல் உணர்க. ஆர்-காம்பு. கழல்பு - கழன்று. செய்புஎன் வாய்பாட்டுவினையெச்சம். பிறங்குமலை - விளக்கமுடைய மலை. பாலையாகலின் மரங்கள் தீய்ந்து பசும்புல் தலைகாண் பரிதாகி மலை மட்டும் பிறங்கின என்க. தாஅம்-பரக்கும். படர்ந்து - இடையறாது நினைந்து. இருள்பயில் நடுநாள் எனமாறி, இருள் பரவுகின்ற நடுஇரவு எனினுமாம். அரிது - இன்மை குறித்து நின்றது.

"மனக்கவலை மாற்றலரி."

றென்னும் திருக்குறளிற் போல.

தெண்ணீர்க்கண் மலர் என்றது, இரவின்கண் துயிலாது மலர்ந்த குவளைமலரை என்க. நள்ளிரவில் துயிலாமைக்கு, தெண்ணீர் நிகர்

மலர் உவமை என்க. நிகர் மலர்-ஒளி மலர்; மலர் மழைக்கண்-மலர்ந்த மழைக்கண். அஃதாவது விழிப்புடைய கண் என்றவாறு. மழைக் கண் என்றது, அதன் பண்டைநிலை கருதிக் கூறியதாம். அக் கண்களுக்குப் பனி எளியவாம் என்ற குறிப்பால், அவை என்வரைத் தன்றிக் கலுழ்கின்றன என்பது கருத்து என்க.

'யான் அவர்பிரிந்தமைக்கு ஆற்றியிருப்பவும், களிறு வழங்கு சிறுநெறி அருஞ்சுரத்தை எவ்வாறு கடந்தனரோ?' என்று நினையுங்கால் ஆற்றாமை யுண்டாகின்றது; ஆயினும் யான் அவர் பிரிவினை ஆற்றுகின்றேன்' என்று கூறினாள்.

## பாட்டு - ௩௩௦ : தலைவி கூற்று

துறை :—பிரிவிடை வேறுபட்ட கிழத்தி தோழிக்குச் சொல்லியது. அஃதாவது, தலைவன் பிரிந்த காலத்தே வருந்திய தலைவி, 'தோழிக்குத் தலைவர் வன்கண்ணர்' என்பதுபடக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'என்னைப் பெரிதும் வருத்தாநின்ற மாலையும் புலம்பும் தலைவர் உறையு நாட்டில் இலவோ?' என்று வினவுகின்றாள்.

௩௩௦. நலத்தகைப் புலத்தி பசைதோய்த்
தெடுத்துத் தலைப்புடைப் போக்கித்
தண்கயத் திட்ட
நீரிற் பிரியாப் பரூஉத்திரி கடுக்கும்
பேரிலைப் பகன்றைப் பொதியவிழ்
வான்பூ
இன்கடுங் கள்ளின் மணமில கமழும்
புன்கண் மாலையும் புலம்பும்
இன்றுகொல் தோழியவர் சென்ற
நாட்டே.

—கழார்க் கீரனெயிற்றியனார்.[1]

(இ - ள்.) *தோழி—, நலத்தகைப் புலத்தி* - நன்மையையும் அழகையுமுடைய வண்ணாத்தி, *பசை தோய்த்து எடுத்துத் தலைப்புடைப் போக்கி* - கஞ்சியிலே தோய்த்து எடுத்து முதல்

ஒலிப்பினை ஒலித்த பின்னர், தண் கயத்து இட்ட நீரிற் பிரியாப் பருஉத்திரி கடுக்கும் - குளிர்ந்த குளத்திலே போகடப்பட்ட அந்நீரின்கண்ணே பிரிதலைச்செய்யாத பருத்த ஆடையின் முறுக்கினை ஒக்கும், பெரு இலைப் பகன்றைப் பொதியவிழ் வான்பூ - பெரிய இலைகளையுடைய பகன்றையினது கூம்பு விரிந்த வெள்ளிய பூக்கள், இன்கடுங் கள்ளின் மணமில கமழும்- இனிய கடுப்பையுடைய கள்ளைப்போன்று நறுமணமின்றிக் கமழா நின்ற, புன்கண் மாலையும் புலம்பும் - துன்பத்தை யுடைய இம்மாலைப் பொழுதும் அதன்கண் மிகும் தனிமைத் துன்பமும, அவர் சென்ற நாட்டு இன்றுகொல் - நந்தலைவர் சென்றுள்ள நாட்டின்கண்ணே இல்லையோ?

**விளக்கம்**:—நலம் - பெண்மை நலம் தகை - அழகு; நலமாகிய தகுதியையுடைய எனினுமாம் புலத்தி என்றது, பின்வரும் வினையால் வண்ணாத்தியை உணர்த்திற்று பசை - கஞ்சி. ஆடைக்குக் கஞ்சியூட்டுதல் இன்றும் கண்டது. தலைப்புடை - முதல் ஒலிப்பு. மீண்டும் கழுவி ஒலித்தல் உண்மையின் தலைப்புடை என்றார். போக்குதல் - முடித்தல் முறுக்கேறும்படி சுழற்றிச் சுழற்றி ஒலித்துப் பின்னர் நீரிலே போகட்ட ஆடை, முறுககவிழாமற் கிடத்தல் முறுக்குடைய வெள்ளிய பகன்றை மலர்க்கு உவமை என்க. இங்ஙனமே "பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல், கழுவுறு கலிங்கங் கடுப்பச் சூடி" (பதிற் - எசு.) என்றும், "போதுவிரி பகன்றைப் புதுமலர் அன்ன அகன்று மடி கலிங்கம் உடீஇ" (புறநா - நகூந.) என்றும், பிறசான்றோரும் கூறுதலுணர்க.

"தேட் கடுப்பன்ன நாட்படுதேறல்" எனப் பிறரும் கள்ளுக்குக் கடுப்புண்மை கூறல் அறிக. இன்று - பன்மை ஒருமை மயக்கம்.

அவர் உறையும் நாட்டினும் இவையுளவாயிருந்தும் நினைந்து மீள்கிலா வன்கண்ணர் ஆயினர் என்பது கருத்து.

நம்மை

1. கிழார்க் கீரனெயிற்றியன்; கிழார்க்கீரன்.



## பாட்டு - ௩௩௧ : தோழி கூற்று

துறை :—செலவுக் குறிப்பறிந்து வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது அஃதாவது, 'தலைவன் தன்னைப் பிரிவான் கொல்' என்று குறிப்பான் உணர்ந்து வருந்திய தலைவிக்கு, அவன் பிரியான் என்பதுபடத் தோழி கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கித் 'தலைவர், கொடுஞ் சிலை மறவர் கொள்ளைப் பொருளையுண்ணும் யானைக்கானம் கடந்து நம்மினும் சிறந்ததாகப் பொருளைக் கருதினராய்ப் பிரிவர் என்றோ எண்ணுகின்றனை! அங்ஙனம் பிரியார்காண்' என்று கூறுகின்றாள்.

௩௩௧. நெடுங்கழை திரங்கிய நீரி லாரிடை
ஆறுசெல் வம்பலர் தொலைய மாறுநின்று
கோடுஞ்சிலை மறவர் கடறுகூட்
டுண்ணும்
கடுங்கண் யானைக் கான நீந்தி

இறப்பர்கொல் வாழி தோழி நறுவடிப்
பைங்கால் மாஅத் தந்தளி ரன்ன
நன்மா மேனி பசப்ப
நம்மினுஞ் சிறந்த அரும்பொருள்
தரற்கே.

—வாடாப் பிரபந்தனர்.[1]

(இ - ள்.) தோழி—, நறுவடிப் பைங்கால் மாஅத்து அந் தளிர் அன்ன நன்மாமேனி பசப்ப - நறிய வடுக்களையும் பசிய அடியினையும் உடைய மாமரத்தினது அழகிய தளிரை ஒத்த நன்றாகிய மாமையுடைய நிறம் பசலை பாயும்படி, நம்மினும் சிறந்த அரும்பொருள் தரற்கு - நம்மைக்காட்டினும் தலைவருக்குச் சிறந்ததாகத் தோன்றுகின்ற தேடுதற்கரிய பொருளைத் தேடிக் கொணர்தற்கு, நெடுங்கழை திரங்கிய நீர் இல் ஆர் இடை - நெடிய மூங்கில்கள் உலர்ந்து வற்றுதற்குக் காரணமான நீரற்ற கடத்தற்கரிய பாலை நிலத்தின்கண்ணே, ஆறுசெல் வம்பலர் தொலைய மாறு நின்று - வழியைப்போகும் மாந்தர்கள் அழியும்படி எதிர்த்து நின்று, கொடுஞ்சிலை மறவர் கடறு கூட்டு உண்ணும் - கொடிய வில்லையுடைய ஆறலை கள்வர் காட்டைக் கொள்ளையிடாநின்ற, கடுங்கண் யானைக்கானம் நீந்தி - தறுகண்மையுடைய யானைகளையுடைய காட்டைக் கடந்து, இறப்பர் கொல் - போவாரோ? போகார்காண்.

**விளக்கம்** :—திரங்குதல் - வற்றி உலர்தல். வெப்பத்தைப் பெரிதுந் தாங்கும் வன்மையுடையது மூங்கில். அது வற்றும் பாலை எனவே

(பாடம்) 1. வாடாப் பிரமந்தனர்; பிரமாந்தனர்.

வேறு மரங்கள் தீய்ந்து போனமை கூறவேண்டாவாயிற்று. ஆர் - அரிய, கடத்தற்கரிய என்க. கடறு - காடு கூட்டுண்ணும் என்றது, கொள்ளையிடும் என்னும் பொருட்டாய் நின்றது. கடுங்கண் - தறுகண். நீரில்லாததும், மறவர் கூட்டுண்பதும் யானையுடையதுமான காடு என்க. நின் மென்றோள் துயில்மருவுந்தலைவர் அவவின்பத்தை விட்டு இத்தகைய பாலையைச் செல்லவோ எண்ணுவர்; எண்ணார்காண் என்னும் நினைவால் அங்ஙனம் பாலையின் கொடுமையை விதந்தாள் என்க.

இறப்பர்கொல் என்னும் வினா, இறவார் என்பதனை வற்புறுத்தி நின்றது. நம்மினும் சிறந்த அருமபொருள் என்றதும் பொருள் நம்மினும் அவர்களுச் சிறந்ததாகாமையும் அவர் அறிவர் என்பதுபட நின்றது. சென்றோர் முகப்பப் பொருளும் கிடவாது என்பான், 'அரும் பொருள்' என்றாள்.

நின் மேனி பசக்கும்படி விட்டுக் கொடிய பாலைவழியில் அரும் பொருள்தரச செல்லார என்றபடியாம்.

## பாட்டு - ருருஉ : தோழி கூற்று

துறை.—வரையாது வந்தொழுகாநின்ற காலத்துக் கிழவன் கேட்பக கிழத்திக்குத் தோழி கூறியது. அஃதாவது,

களவின்பமே காமுற்று வரைந்துகோடற் கருத்தின்றி ஒழுகுந் தலைவனைத் தோழி வரைவுகடாவுவாள் ஒருநாள தலைவன் சிறைப் புறமாக நிற்றலையுணர்ந்து அவன் கேட்கும்படி தலைவியை

நோக்கிக் கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'நந்தலைவருக்கு, மழையையுடையதும வாடை வீசுவதுமாகிய இக்காலத்து இரவின் கடையாமத்தே நீ உழக்கும துன்பந் தீர்தற்பொருட்டு நின்னிலையை நீயே எடுத்துக்கூறின் அதனால் ஏதம என்னை?' என்று கூறுகின்றாள்.

௯௯௨. வந்த வாடைச் சில்பெயற் கடைநாள்
நோய்நீந் தரும்படர் தீரநீ நயந்து
கூறின் எவனோ தோழி நாறுயிர்
மடப்பிடி தழீஇத் தடக்கை யானை
குன்றச் சிறுகுடி யிழிதரு
மன்ற நண்ணிய மலைகிழ வோற்கே.

—மதுரை மருதங்கிழார் மகனார் இளம்போத்தனார்.

(இ-ள்.) தோழி—, நாறு உயிர் மடப்பிடி தழீஇ-மணங் கமழ்கின்ற உயிர்ப்பினையும் மடப்பத்தையும் உடைய பெண்யானையைத் தழுவிக்கொண்டு, தடக்கை யானை-பெரிய

கு.—32

கையினையுடைய களிற்றுயானை, குன்றச் சிறுகுடி இழிதரும் மன்றம் நண்ணிய - மலையிடத்தேயுள்ள சிற்றூரின்கண் இறங்கி வருதற்கிடமான அம்பலம்பொருந்திய, மலை கிழவோற்கு - மலைகளையுடைய தலைவனுக்கு, வாடை வந்த சில் பெயல் கடை நாள் - வாடைக்காற்று வருகின்ற சிலவாகிய பெயலையுடைய கடையாமத்தே, நோய் நீந்து அரும்படர் தீர - வருத்தத்திலே உழல்கின்ற பொறுத்தற்கரிய துன்பம் நீங்கும்பொருட்டு, நீ நயந்து கூறின் எவன் - நீயே விரும்பிக் கூறவேண்டியதனை எடுத்துக்கூறின் அதனால் வருங் குற்றம் யாது?

விளக்கம்:—வாடை வந்த என மாறுக. சில்பெயற் கடைநாள் என்பதற்குச் சிலவாகிய பெயலையுடைய இக் கூதிர்காலத்து இறுதி நாட்களிலே எனினுமாம். என்னை? வரைவுகடாதற்குரிய காலம் அதுவேயாகலான் என்க. கூதிர்கால மாகலின் வாடையும் சில்பெய லும் கூறப்பட்டன. காணும்பொழுதினும் காணப்பொழுதே பெரி தாகித் துன்பந்தருதலின், 'நோய் நீந்து அரும்படர்' என்றாள். இத னால் இககளவுக காலத்தே தலைவி நோய் நீந்துவாளாதலைத் தலைவற் குக் குறிப்பான் உணாத்தப் பட்டமையுணர்க.

யான் கூறற் கிடம்பெற்றிலேன் என்பாள், 'நீ கூறின் எவன்'

என்றாள். எவன் என்றது, அதனால் வரும் குற்றம் யாது என்று வினாய்க் குற்றமின்மை தெளித்தவாறு. இதனால் தன்னிலை கூறத் தலைவி நாணுகின்றாள் என்று தலைவனுக்கு உணாத்தப்பட்டமை யறிக.

நாறுயிர்ப் பிடி தழீஇ யானை ஊர்மன்றத்தே வரும் என்றது, தலைவியைப் பலரறிமணஞ்செய்துகொண்டு நீ நின்னில்லத்திற் புகுதல் வேண்டும் என்னும் உள்ளுறைபயந்து நின்றது.

நாறுயிர் - தோன்றுகின்ற உயிர்ப்பெனினுமாம்.

## பாட்டு - ௩௩௩ : தோழி கூற்று

துறை :—அறத்தொடு நிற்பலெனக் கிழத்திக்கு உரைத்தது.

அஃதாவது, களவுக்காலத்தே பிரிவாற்றாமையானே வருந்துந் தலைவிக்கு, 'இனி யான் யாய்க்கு நம்மறை வெளிப்படுத்து வரைவுநிகழ வழிசெய்வேன்' என்று கூறியது.

இதன்கண், தலைவியை நோக்கி, 'நீயோ ஆற்றாயாகின்றாய்; நம் மறையினை வெளிப்படுத்தினாலன்றி நமர் வரைவுகருதார் ஆகலான், நம் களவுமணம பலரறிமணமாதற் பொருட்டு இப்பொழுது நம் மறையினை வெளிப்படுப்பின் நன்று,' எனத் தோழி கூறுகின்றாள்.

௩௩௩. குறும்படைப் பகழிக் கோடுவிற் கானவன்
புனமுண்டு கடிந்த பைங்கண் யானை
நறுந்தழை மகளிர் ஓப்புங் கிள்ளையொடு

## மூலமும் உரையும



குறும்பொறைக் கணவுங் குன்ற நாடன்
பணிக்குறை வருத்தம் வீடத்

துணியின் எவனோ தோழிநம் மறையே.

—உழுந்தினைம்புலவனார்.

(இ - ள்.) தோழி—, குறும்படைப் பகழிக் கொடுவில் கானவன் - குறிய படையாகிய அம்பினையும் கொடிய வில்லையும உடைய குறவனது, புனம் உண்டு கடிநத பைங்கண் யானை - தினைப்புனத்தை உண்டமையானே கடியபபட்ட பசிய கண்ணை யுடைய யானை, நறுந தழை மகளிர் ஓப்பும் நறிய தழையுடையினையுடைய மகளிர் கடிந்த கிள்ளையொடு - கிளிகளோடே, குறும் பொறைகரு அணவும் குன்ற நாடன் - குறிய பொறறைக் கல்லினது உச்சியைச் சேரவ்ருமபி திரிந்து நோக்காநின்ற மலைநாட்டையுடைய தலைவனது, பணிக்குறை வருத்தம் வீட - வினையின் குறையாலுண்டாகிய நினது துன்பம் கெடும் பொருட்டு, நம மறைதுணியின் எவன் - நமது செய்தியை யாய் அறியும்படி தெளிவித்தால் என்னும்? மறைச்

விளக்கம் :—இப்பொழுது மறைவெளிப்பாடு இன்றியமையாதாகலின் யான் அறததொடு நிற்பல் எனக் கூறி அவள் கருத்தை அறிய முயனற வாறும.

படைப் பகழி: பண்புத்தொகை. கொடுவில் - வளைந்தவில் லெனினுமாம். கானவன் - குறிஞ்சிநிலத்தில் வாழ்பவன்.

கானவனாற் கடியப் பட்ட யானை மகளிராற் கடியப்பட்ட கிள்ளையோடே குறும்பொறையில் ஏற அணவும் என்றது, காவலர் முதலியோராற் கடியப்பட்ட தலைவன் தாய் முதலியோராற் கடியப்பட்ட நின்னோடே கூடி இல்லறஞ் செயற்கு விரும்புகின்றான் என்னும் உள்ளுறை தோற்றி, ஆதலால் யான் அறத்தொடு நிற்பன் என்பதற்கு ஏதுவாயிற் றென்க.

குறும் பொறை - குறிய பொற்றைமலை. அணவுதல் - நிமிர்ந்து நோக்குதல். துணியின் என்னும் தன் வினை துணிவிப்பின் என்னும் பிறவினைப் பொருள் தந்துநின்றது. எவனோ என்னும் வினா, நன்றாம் என்பது படநின்றது.

உன் கருத்தைக் கூறுக என்பது குறிப்பெச்சம். மறை - பிறர் அறியாவாறு ஓம்பப்பட்ட களவுமண நிகழ்ச்சி. துணிவித்தலாவது, தலைவி கற்புக்கடம் பூண்டமையைச் செவிலிமுதலியோர் தெளியும்படி செய்தல்.

## பாட்டு - ௩௩௪: தலைவி

### கூற்று

துறை :—'வரைவிடை ஆற்றகிற்றியோ?' என்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, தலைவன் வரைந்து கொள்ளாமல வைத்துப் பிரிந்துசெல்லுங் கருத்துடையனாதலை

அறிந்த தோழி, 'அவன் அங்ஙனம் பிரியின், 'நீ ஆற்றியிருக்க வல்லையோ' என்று தலைவியை வினவினளாக, அவட்குத் தலைவி கூறியது.

இதன்கண், 'தலைவன் பிரியின் நீ ஆற்றவல்லையோ?' என்று வினவிய தோழியை நோக்கித் தலைவி 'விரிநீர்ச் சேர்ப்பன் நீப்பின் என்னுடைய இன்னுயிரும் உடனே நீங்கும்' என்று கூறுகின்றாள்.

௩௩௪. சிறுவெண் காக்கைச் செவ்வாய்ப் பெருந்தோ
டெறிதிரைத் திவலை யீர்ம்புற நனைப்பப்
பனிபுலந் துறையும் பல்பூங் கானல்
விரிநீர்ச் சேர்ப்பன் நீப்பி னொருநம்
இன்னுயி ரல்லது பிறிதொன்
றெவனோ தோழி நாமிழப் பதுவே.

—இளம்பூதனார்.

(இ - ள்.) தோழீ—, சிறு வெண் காக்கைச் செவ்வாய்ப்

பெருந் தோடு - சிறிய வெள்ளிய காக்கையினது சிவந்த வாயை யுடைய பெரிய தொகுதி, எறிதிரைத் திவலை ஈர்ம் புறம் நனைப்ப - வீசாநின்ற அலைகளினது துளி தடம் ஈரிய முதுகினை நனைத்தலானே, பனி புலந்து உறையும் பல்பூங் கானல் - உண்டாகிய குளிரை வெறுத்துவந்து தங்குதற்கிடமான பல வாகிய பூக்களையுடைய சோலையையுடைய, விரி நீர்ச் சேர்ப்பன் - அகன்ற கடலினது கரையையுடைய நந்தலைவன், நீப்பின் - நம்மைப் பிரிந்துசெல்லின், நாம இழப்பது நம் இன் உயிர் அல்லது பிறிது ஒன்று எவன் - நாம இழத்தற்குரிய பொருள் நமது இனிய உயிரேயன்றி வேறு யாதுளது?

**விளக்கம்** :—சிறவெண் காககைச் செவவாய் என்று இச்செய்யுளி னும், சிறுவெண்காக்கை என்று இந்நூலின்கட் பிறுண்டும் பற்பல இடங்களினும் பயின்று வருவதை நோக்குமிடத்து, சிவந்த அலகும் வெண்ணிறமும் உடையதொரு கடற்பறவையையே கடற்காக்கை என்று பண்டையோர் வழங்கினர் என்று எண்ண இடந்தருகின்றது. காக்கைக்கு வெண்மை கூறிய இடந்தொறும் உ. வே. சா. ஐயர் அவர்கள் காக்கையின் கழுத்தின்கண் உள்ள சாம்பனிறத்தைக் கருதியதாக விளக்கம் கூறியுள்ளார்கள். ஈண்டுச் செவ்வாயும் உடன் வருதலால் காக்கையின் உள்வாய்ச சிவப்பைக் குறிக்கும் என்று கருதிக் கூறியுள்ளார்கள்.

இக்காலத்தார் "கடல் ஆலா" என்று வழங்கும் கடற்பறவை சிறியதாகவும் வெண்ணிறமும் சிவந்த அலகும் உடையதாகவும் காணப்படுதலின், இதே கடற்காக்கை போலும். வேறுளதாயினும் கொள்க.

## மூலமும் உரையும்

### ருOக

பெருந்தோடு - பெரிய தொகுதி. கடலிலே நீந்தி இரைதேருங்கால் அலை சிறுவெண்காக்கைகளின் புறத்தை நனைக்கும் என்க. 'அவன் பிரியின் என் உயிர் போய்விடும்; இதனை நீ கேட்டோ அறிதல் வேண்டும்?' என்று கடிவாள், 'சேர்ப்பன் நீப்பின் இன்னுயிர் அல்லது இழப்பது பிறிதெவன்' என்று வினவினுள்.

ஆற்றுமை மிகுமிடத்து உயிரொன்றும் நிற்க ஏனை நலனெல்லாம் தாமே ஒழியும்; நாம் இழக்க எஞ்சுவது உயிரொன்றே அதனையும் இழப்பது ஒருதலை என்பாள், 'இன்னுயிா அல்லது பிறிதொன்றெவன் நாமிழப்பது' என்றுள். உயிர்நிற்க ஏனை நலனெல்லாம் அழிதலுண்மையை,

"பயிரொன்று நலேயுஞ் சங்கும் பழிப்பரு நலனும் பண்பும்
செயிரொன்றி யலர்ந்த பொற்புஞ் சிந்தையும் உணர்வுந் தேசும்
வயிரஞ்செய் பூணு நாணு மடனுந்தன் னிறையு மற்றும்

உயிரோன்றும் ஒழிய எல்லாம் உகுத்தொரு தெரிவை நின்றாள்."

(கம்ப, உலாவியல்: அ)

எனவரும கம்பநாடர் செய்யுளானறிக.

எறிதிரை : வினைத்தொகை. திவலை - நீர்த்துளி. ஈர்ம் புறம் - நெய்ப்புடைய முதுகு. நீர்ப்பறவைகளின் சிறகுகள் நெய்ப்புடையன வாதலியல்பு

## பாட்டு - ந ௩ரு : தோழி கூற்று

துறை —இரவுக்குறி நயவாமைத் தோழி செறிப்பறிவுறீஇயது. அஃதாவது, 'தலைவி இற்செறிக்கப்படுவாள்' என்று தலைவனுக்குக் கூற எண்ணிய தோழி, அவன் இற்செறிக்கப் பட்ட பின்னர்த் தலைவியை இரவின்கண் கண்டு அளவளாவக் கருதாதவாறு சூழ்ந்து கூறியது.

இதன்கண், தோழி தலைவனை நோக்கி, 'ஐய வல்விற் கானவர் தங்கையாகிய நந்தலைவி இருக்கின்ற ஊர், அடைதற்கரிய மலையின்கண்ணே உளது காண்' என்று கூறுகின்றாள்.

௩௩ரு. நிரைவளை முன்கை நேரிழை மகளிர்
இருங்கல் வியலறைச் செந்தினை

பரப்பிச்

சுனைபாய் சோர்விடை நோக்கிச்

சினையிழிந்து

பைங்கண் மந்தி பார்ப்போடு கவரும்
வேற்பிடை நண்ணி யதுவே வாாகோல்
வல்விற் கானவர் தங்கைப்
பெருந்தோட் கொடிச்சி யிருந்த வூரே

—இருந்தையூாக கொற்றன் புலவனுர்.

(இ - ள்.) பெருமானே !, வார் கோல் வல் வில் கானவர் தங்கை - நீண்ட அம்பினையும் வலிய வில்லையும் உடைய வேட்டு



வருடைய தங்கையாகிய, பெருந் தோள் கொடிச்சி இருந்த ஊர்- பெரிய தோள்களையுடைய நந்தலைவி இராநின்ற ஊர், நிரைவளை முன் கை நேர் இழை மகளிர் - நிரல்பட்ட வளையலையணிந்த நேரிய அணிகலன்களையுடைய மகளிர்கள், இருங்கல் வியல் அறைச் செந்திணை பரப்பி - கரிய மலையின்கண்ணதாகிய அகலிய பாறையின்மேல் சிவந்த திணையைப் பரப்பி, சுனை பாய் சோர்வு

இடைநோக்கி - சுனையின்கண் பாய்ந்து ஆடுகின்ற சோர்வினை யுடைய செவ்விசண்டு, பைங் சண் பந்தி பார்ப்பொடு சினை யிழிந்து கவரும - பசிய கண்களையுடைய பெண்குரங்குகள் தங்குட்டியோடே மரக்கொம்புகளினின்று இறங்கி வந்து அத் தினையைக் கைக்கொள்ளாநிற்கும, வெற்பிடை நண்ணியது - மலையினிடத்தே பொருந்தியது

**விளக்கம்** :—நிரை - நிரல்; வரிசை. நேர் இழை என்பதன்கண்
நேர்மை - நுண்மை குறித்து நின்றது. "நேரியனைப் பரியனுமாய்," என்புழியும் அஃதப் பொருள் தந்தமை யுணர்க. இழை - அணிகலன். இருங்கல் - பெரிய மலையுமாம். வியல் - அகலம், "வியலென் கிளவி அகலப் பொருட்டே." (உரி-கூக) என்பர் தொல்காப்பியனார். சுனை பாய்தலானுண்டான சோர்விடை என்க. சோர்வு - அதனை மறந்திருத்தல். சினை - கொம்பு.

வார்கோல் வல்வில் கானவர் தங்கை என்றமையான், இரவுக்குறிக்கண் தலைவியை எய்தலாகாமைக்கோரேதுக் குறிப்பான் உணர்த்தினாளாதல் அறிக. ஊர் வெற்பிடை நண்ணியது; ஆண்டு நீ வருதல் சாலாது என்று, குறிப்பான் உணர்த்தியவாறென்க.

மகளிர் சோர்விடை நோக்கி மந்தி தினைகவரும் வெற்பு என்றது, 'கானவர் சோர்வாலே நீ தலைவியை எய்தினாய்: அத்துணையே காண், ஈண்டு இரவினும் வரல் கருதற்க,' என்னும் குறிப்பிற்றென்க.

கானவர் தங்கை என்றது, 'கானவர் குடிப் பிறந்தாள்,' என்னும் பொருட்டு. இங்ஙனம் கூறும் வழக்குண்மையை,

"சிறுதினைத் துளரெறி நுண்டுகட்

என்றும்'

"உழவர் தங்கை."

என்றும்,

"கொலைவி லெயினர் தங்கை."

என்றும்,

"கானவர் தங்கை."

களைஞர் தங்கை" (குறுந்-௩௯௨)

(சிறுபாண் - ௧௯0)

(ஐங் - ௩௬௩)

(அகம் - ௧௩௨)

என்றும், பிற சான்றோர் கூறுமாற்றானு முணர்க.

ஆதலின் வரைந்து கோடலே நன்று என்பது

## பாட்டு - ௫௫௬ : தோழி கூற்று

துறை :—தலைமகன் இரவுக்குறி நயந்தானைத் தோழி சொல்லி மறுத்தது. அஃதாவது, இரவின்கண் தலைவியைக் கண்டு அளவளாவ விரும்பிய தலைவன் தோழியின்பாற் குறையிரந்தானாக, அவள் இரவுக்குறிக்கண் வரின் உளதாம் ஏதங் காட்டி மறுத்துக் கூறியது.

இதன்கண், தோழி தலைவனை நோக்கி, 'நீ இரவுக்குறிக்கண் வருவன் என்கின்றாய்; அங்ஙனம் வருதல நின் பகைவர்க்கு உவகையும எமக்குத துன்பமுந தருவதொன்றாம்; இரவின்கண் நீ வருதல்கண்ட தலைவி பெரிதும் வருந்தாநின்றனள்,' என்று கூறுகின்றாள்.

௫௫௬ செறுவர்க் குவகை யாகத் தெறுவர

ஈங்கனம் வருபவோ தேம்பாய் துறைவ
சிறுநா வொண்மணி விளரி யார்ப்பக்
கடுமா நெடுந்தேர் நேமி போகிய
இருங்கழி நெய்தல் போல
வருந்தின ளளியணீ பிரிந்திசி னோளே.

—குன்றியனூர்.

(இ - ள்) தேம் பாய் துறைவ - தேன் பரவுகின்ற துறையையுடைய பெருமானே!, செறுவர்க்கு உவகை ஆக - பகைவர்க்கு மகிழ்ச்சி உண்டாகும்படியும், தெறு வர - கேளிர்க்குத் துன்பம் உண்டாகும்படியும், ஈங்கனம் வருபவோ - இவ்வாறு சான்றோர் வருவாருமுளரோ, நீ பிரிந்திசினோள் - நின்னாற் பிரியப்பட்ட தலைவி, சிறு நா ஒண் மணி விளரி ஆர்ப்பக் கடுமா நெடுந்தேர் நேமி போகிய - சிறிய நாவினையுடைய ஒள்ளிய மணிகள் விளரிப் பண்போல ஒலிப்பக் கடிய செலவினையுடைய குதிரைகளையுடைய நின்னுடைய நெடிய தேரினது உருள்கள் ஏறிச் சென்றமையானே நலிந்த, இருங்கழி நெய்தல் போல - கரிய கழியருகேயுள்ள நெய்தன் மலர்போன்று, வருந்தினள் அளியள் - வருந்தாநின்றனள்காண், ஆதலால் இரங்கத்தக்காள்!

**விளக்கம்** :—செறுவர் - பகைவர். இரவுக்குறி வருங்கால் தலைவனுக்கு ஆற்றிடைப் புலி முதலியவற்றானே இடையூறுண்டாயவழி அவன் பகைவர்க்கு மகிழ்ச்சி யுண்டாகுமாகலின், 'செறுவர்க் குவகையாக,' என்றாள். நினக்கு ஏதம் உண்டாகும்படி என்பது குறிப்பு. செறுவர் என்னும் குறிப்பானே தெறுவர என்றதற்குக் கேளிர்க்கென வருவித்துக் கூறுக. ஈங்கனம் என்றது, இவ்வாறு இரவின்கண்



என்றவாறு. அறிவுடையோர் தம் பகைவர்க்கு உவகையாகவும் தங் கேளிர்க்குத் தெறுவரவும் இவ்வாறு வருபவோ எனப் பொதுவகையிற் கூறினாளேனும் சான்றோனாகிய நீ இங்ஙனம் வரல் தகுதியன்றென்பது கருத்தாகக் கொள்க. வருபவோ என்னும் வினா வாரார் என்பது பட நின்றது.

தேம்பாய் துறைவ என்றது, நட்டார்க்கு இனியவே செய்யும் இயல்புடையோனே என்னும் குறிப்பிற்று. தேம் - தேன்.

தலைவன் வந்து மீண்ட தேர் உருளாலே நலிந்த நெய்தலை, அவள் கண்கூடாகக் க ண்டமையான் அதனையே மனம் நைந்த தலைவிக்கு உவமையாக்கினாள். கடுமா - கடிதாகச் செல்லும் குதிரை. தேரின் மணியொலிக்கு விளரிப் பண்ணிசை உவமை களவுக் காலத்துப் புணர்வினும் பிரிவே நீளிதாகலின் 'பிரிந்திசினோள்' என்றாள். இசின், அசைநிலை நீ வருதலும் தகவன்று, அவளும் நலிந்தனள் எனவே நீ வரைந்து கோடலே நன்றென்று வரைவுகடாயினாளாத லுணர்க.

## பாட்டு - ௬௬௭: தலைவன் கூற்று

துறை :—தோழியை இரந்து பின்னின்ற கிழவன், தனது குறையறியக் கூறியது. அஃதாவது, தலைவியைப் பெறத் தோழியின்பால் குறை யிரந்த தலைவன், அவள பருவம் வாய்த்தமையும தன்னை வருத்தினமையும் தோழி நன்குணரத் தெளித் தோதியது என்றவாறு.

இதன கண், தலைவன் தோழியை நோக்கி, 'தலைவிக்கு, முலை முகிழ்த்தன, கூந்தல் நீண்டு தாழ்ந்தன ; பற்களும் நிரம்பின; சுணங்கு பரந்தன ; யான் அவளை நன்கு உணாகின்றேன் ; அவளோ என்னிலை தோகிலள் யாங்காகுவளோ?' என்கின்றான்.

௬௬௭. முலையே முகிழ்முகிழ்த் தனவே தலையே
கிளைஇய மென்குரல் கிழக்குவீழ்ந்
தனவே
சேறிநிரை வெண்பலும் பறிமுறை
நிரம்பின
சுணங்குஞ் சிலதோன் றினவே

யணங்குதற்

கியான்ற னறிவலே தானறி யலளே
யாங்கா குவள்கோ ருனே
பெருமுது செல்வ ரோருமட மகளே.

**—பொதுக்கயத்துக் கீரந்தையார்.**

(இ - ள்.) முலை முகிழ் முகிழ்த்தன - தலைவிக்கு முலைகள் அரும்பின, தலை கிளைஇய மென் குரல் - தலையின் கிளைத்த மெல்லிய கூந்தற் கொத்துக்கள், கிழக்கு வீழ்ந்தன - வளர்ந்து கீழே



வீழ்ந்து தூங்காநின்றன, செறி நிரை வெண்பலும் பறிமுறை நிரம்பின - நெருங்கி நிரல்பட்ட வெள்ளிய பற்களும் விழுந்தெழும்முறை நிரம்பப் பெற்றன, சுணங்குஞ் சில தோன்றின - தேமலும் சிற்சில உண்டாயின, அணங்குதற்கு யான் அறிவல் - அவள் என்னை வருத்தும பொருட்டு யான் அவளை அறிந்தனன், தான் அறியலள் - அவளோ அதனை அறிந்தாளில்லள், பெருமுது செல்வர் ஒரு மடமகள் யாங்கு ஆகுவள் கொல்லோ - பெரிய பழைய

செல்வத்தையுடையோரின ஒப்பற்ற மடப்பத்தை யுடைய மகளாகிய தலைவி எத்தன்மையுடையள் ஆவாளோ அறிகிலேன்.

**விளக்கம் :**—முகிழ முகிழ்த்தன என்றது, முகிழ்த்தலைச் செய்தன என்றவாறு. கிளைஇய - கிளைத்த, முளைத்தெழுந்த என்றவாறு குரல்-கொத்து, கூந்தற்கொத்து என்க. கிழக்கு - கீழ். "செறுநரைக் காணிற் சுமக்க இறுவரை, காணிற் கிழக்காந் தலை," (ஈஅஅ) என்னும் திருக்குறளினும் கீழ், கிழக்கென வந்தமை காண்க.

முலை முகிழ்த்தல் முதலாக ஈண்டுக் கூறப்பட்டவை பேதைப் பருவங் கடந்து மகளிர் பெதும்பைப் பருவ மெய்தியதற்குரிய அறிகுறிகள் எனக.

"முலைமுகம் செய்தன, முள்ளெயிறு இலங்கின,
தலைமுடி சான்ற,... .....பேதை யல்லை
மேதையங்
குறுமகள், பெதும்பைப் பருவத்
தொதுங்கினை."

என வரும் அகநானூற்றுச் செய்யுளை ஈண்டு நினைவுகூர்க. செறி வெண்பல், நிரை வெண்பல் எனத் தனித் தனிக் கூட்டுக. செறிதல்-

இடையீடின்றி ஒன்றனோடு ஒன்று நெருங்கியிருத்தல். நிரை - வரிசை. பறிமுறை - விழுந்தெழாநின்ற முறைமை. பறிதல் - முளைத்தல்; தோன்றுதல். கதிர் பறிந்தது என்னும் உலக வழக்கும் உணர்க. பற்கள் விழுந்தெழும் முறை நிரம்பின என்றது, எல்லாப் பற்களும் விழுந்து முளைத்து ஒத்தன என்றவாறு. பெதும்பைப் பருவத் தொடக்கமாக லின் சுணங்கும் சில தோன்றின என்றான் அணங்குதற்கு யான் அறிவல் என்றது, அவளை யான் அறிந்தமையே அவள் என்னை வருத்தக் காரணமாம்; இதனையறியின் அவளை யான் அறிந்திரேன் என்றவாறாம். தன் என்றது, தனது இப் பருவத்தின் தன்மையை. பெருமுது செல்வர் ஒரு மடமகள் என்றது, அவளை அறிவிப்பாருமிலர் என்னும் குறிப்புடையதென்க. என்னை? செல்வர் மக்கட்கு அறிவுரைக்கப் பிறர் அஞ்சுவராகலான் எனக.

இது, தலைவி பருவம்வாரா இளையள்என்று குறைமறுத்த தோழிக்குத் தலைவன் கூறியதாகக் கருதுக.

"கட்டுரை யின்மையின் வரைவு கடாயது," என்பர் (தொல். மெய்ப் - உ௩).

பேராசிரியர்.

௫0௬ குறுந்தொகை

## பாட்டு : ௩௩அ : தோழி கூற்று

துறை :—பிரிவிடைத் தோழி வற்புறுத்தது. அஃதாவது,

தலைவன் பிரிந்திருந்த காலத்தே ஆற்றாமைமிக்க தலைவியைத் தோழி, 'இதோ தலைவன் வந்தான்' என்னும் வாய்பாட்டால் ஆற்றுவித்தது.

இதன் கண், தோழி ஆற்றாமை மிக்க தலைவியை நோக்கி, 'கலைமான் பிணைமானோடே, நிழலிலே கிடந்து தூற்றின் கண் தூங்கி, பயற்றங்கொடியைக் கறிக்கும் புன்கண் மாலைப்பொழுதினையும், பனியையும் உடைய அச்சிரப் பொழுதிலே நந் தலைவன் தேர் நினது துயர்கெடும்படி வந்ததுகாண்!' என்று கூறுகின்றாள்.

ருரு௮. திரிமருப் பிரலை யண்ணல் நல்லேறு
அரிமடப் பிணையோ டல்குநிழ லசைஇ
வீததை வியலரில் துஞ்சிப்
பொழுதுசேலச்
செழும்பயறு கறிக்கும் புன்கண் மாலைப்
பின்பனிக் கடைநாள் தண்பனி அச்சிரம்
வந்தன்று பெருவிறல் தேரே
பணைத்தோள்
விளங்குநக ரடங்கிய கற்பின்
நலங்கே ழரிவை புலம்பசா விடவே

—பெருங்குன்றூர்கிழார்.

(இ - ள்.) பணைத்தோள் விளங்கு நகரடங்கிய கற்பின் - மூங்கிலை ஒத்த தோள்களையும் விளங்குகின்ற இல்லத்தினகத்தே அடங்கிய கற்பையும் உடைய, நலங்கேழ் அரிவை - பெண்மை நலம் பொருந்திய தலைவி, புலம்பு அசாவிட - தனிமைத்துன்பம் நீங்கும்படி, பெருவிறல் தேர் - பெரிய வெற்றியையுடைய தலைவனது தேர், திரி மருப்பு இரலை அண்ணல் நல் ஏறு - முறுக் கேறிய கொம்புகளையுடைய இரலையாகிய தலைமைத்தன்மை பொருந்திய நன்றாகிய ஆண்மான், அரி மடப் பிணையோடு அல்கு நிழல் அசைஇ - மென்மையையும் மடப்பத்தையும் உடைய பெண்மானோடே தங்குதற்குரிய நிழலிடத்தே தங்கி, வீ தைதை வியல் அரில் துஞ்சி - பூக்கள் நெருங்கிய அகன்ற பிணக்கத்தையுடைய தூற்றின்கண்ணே துயின்று, பொழுது செலச் செழும் பயறு கறிக்கும்-ஞாயிறு மறையாநிற்பச் செழுவிய பயற்றினைக் கறித்துத் தின்னற்குக் காரணமான, புன்கண் மாலைப் பின்பனிக் கடைநாள் தண்பனி அச்சிரம் வந்தன்று - துன்பமுடைய

மாலைப்பொழுதினையும், பின்பனியையுடைய கடையாமத்தை யும், குளிர்ந்த பனியையும் உடைய அச்சிரக்காலத்தே வந்தது காண்.

**விளக்கம்** :—திரி மருப்பு - முறுக்குடைய கொம்பு. இரலை - ஆண் மான். இரலையாகிய ஏறு என்க. அண்ணல் - தலைமைத்தன்மை. அரி - மென்மை, "அரியே ஐமை," (உரி - ருஅ ) என்பது தொல்காப் பியம். ஐமை - மென்மை. அரியையும மடப்பத்தையும் உடைய பிணை என்க. அல்குதல் - தங்குதல். அசைஇ - தங்கி; இளைப்பாறி எனினு

மாம். வீ - மலா. ததைதல் - நெருங்குதல். அரில் - பிணக்கமுடைய தூறு. பனிப்பருவத்தே காய்த்து முதிரும் இயல்புடையதாகலின், பயறு கறிகரும் எனப்பட்டது. அசசிரம் - பனிப்பருவம். மாலைப் பொழுது தனித்துறைவாரை நலியுமியல்பிற்றாகலின், 'புன்கண் மாலை' என்றாள். பெருவிறல: அன்மொழித்தொகை. பெரிய வெற்றியை யுடைய தலைவன் என்க. வினைமுற்றி வந்தான் என்பாள், 'பெரு விறல்' என்றாள். நின்னை நினைந்தே வந்தான் என்பாள், 'புலம்பு அசாவிட வந்தன்று' என்றாள்.

இது நந்தலைவன் அச்சிரக்காலத் தொடக்கத்தே வருவன்; அது காறும் ஆற்றியிருந்திடுக என்பாள், துணிவுபற்றி வந்தன்று என்று இறந்தகாலத்தாற் கூறியவாறென்க.

தலைவன் கூறிச சென்ற அச்சிரக்காலத் தொடக்கத்தே வருதல் ஒருதலை என்பது கருத்து.

அடங்கிய கற்பென்றது அடங்குதற்குக் காரணமான கற்பு என்ற

வாறு. ஆறிய கற்பென்பாருமுளர். மனைக்கு விளக்கம் கற்புடை மடவாரே யாகலின், விளங்கு நகர் அடங்கிய கற்பின் அரிவை என்றாள். தன்னாலே விளக்கம் பெற்ற இல்லத்தின்கண்ணே அடங்கிய வழியும் கற்புடைய நங்கை என்றவாறு.

இரலை ஏறு பிணையோடே அசைஇத் துஞ்சிக் கறிக்கும் அசசிரம் என்றது. அக்காலத்தே தலைவன் நின்னோடே உடனுறைந்தின் பஞ்செய்வன் என்னும் குறிப்புடைய தென்க.

## பாட்டு - ௩௩௧: தோழி கூற்று

துறை :—வரைவிடை வேறுபட்ட கிழத்தியைத் தோழி கடுஞ்சொற் சொல்லி வற்புறுத்தியது. அஃதாவது, தலைவன் வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிந்த காலத்தே பெரிதும் வருந்திய தலைவியைத் தோழி நீ வருந்துதல் தகவன் றென்பது பட இடித்துரைத்து ஆற்றுவித்தது.

இதன்கண், தோழியை நோக்கி, 'தலைவன்
நினைது குவளை
யுண்கண் கலுழப் பிரியாது நின்னோடு உடனுறைந்த பொழு
தெல்லாம் உனக்கு இனிதாயிருந்தது; உடனுறைவியல்பாதல்



போன்று உடனுறைந்தோர் பிரிதலும்,
உலகியலேகாண்; இதற்கு நீ வருந்துதல் பேதைமை'
என்கின்றாள்.

நடநடகூ. நறையகில் வயங்கிய நளிபுன நறும்புகை
உறையறு மையிற் போகிச் சாரற்
குறவர் பாக்கத் திழிதரு நாடன்
மயங்குமலர்க் கோதை நன்மார்பு
முயங்கல்
இனிதுமன் வாழி தோழி மாயிதழ்க்
குவளை யுண்கண் கலுழப்
பசலை யாகா வூங்கலங் கடையே.

—பேயார்.

(இ - ள்.) தோழி—, நறை அகில் வயங்கிய நளிபுன நறும் புகை - மணமுடைய அகிலினது விளங்கிய செறிந்த புனத்தின்கண் எழுந்த நறிய புகை, உறை அறு மையின் போகி- துளித்தலொழிந்த முகில்களைப்போன்று சென்று, சாரல் குறவா பாக்கத்து இழிதரும் நாடன் - மலைப்பக்கத்தேயுள்ள குறவருடைய ஊரின்கண்ணே இறங்குகின்ற நாட்டையுடைய நந்தலைவன், மயங்கு மலர்க்கோதை நன்மார்பு முயங்கல் - பன்னிற மலர்களும் விரவிய மாலையையுடைய நினது நல்ல மார்பைப் பொருந்துதல், மா இதழ்க் குவளை உண்கண் கலுழ - கரிய இதழையுடைய குவளைப்பூப் போன்ற நினது மையுண்ட கண்கள் அழும்படி, பசலை ஆகா ஊங்கலங்கடை-பசலை உண்டா காததன் முன்னர், மன் இனிது - மிகவும் இனிதாயிருந்தது.

விளக்கம் :—நறை - மணம். வயங்கிய - விளங்கிய. நளி - செறிவு. புனத்தின்கண் குறவர் அகில்மரங்கொன்று சுடுதலானே உண்டாகிய நறும்புகை என்றவாறு. உறை - மழைத்துளி. துளியாது செல்லும் மேகம் ஒழிந்த அகிற்புகைக்கு உவமை. உறையறு மை என்றதற்கு, பெய்து வெண்மேகம எனினுமாம். மை - மேகம். பாக்கம் - ஊர். தலைவன் மார்போடே மயங்கும் மலர்க்கோதை

எனினுமாம். புணர்ச்சி
உண்டாயின் அதற்கினமாகிய பிரிவும் பின்னர் உண்டாதல் ஒருதலை. கின் பொருட்டே தலைவன் பிரிந்துளான்; நீ ஆற்றியிருத்தலே தகவாம்; பிரிவினைப் பொறாது வருந்துதல் பேதைமை என்றாள் என்க.

நன்மார்பு முயங்கல் இனிதுமன் என்றது, அங்ஙனம் முயங்கியிருத்தல் ஒன்றுமே இயல்பன்று; பிரிதலும் இயல்பாகலின் அதனையும் இனிதாக் கோடலே சிறப்பென்பதுபட நின்றது.

ஊங்குக் கடை என்பதனிடையே அல் அம் என்னும் சாரியை புணர்ந்து ஊங்கலங்கடை என்றாயிற்று. பாக்கம் என்பது - பக்கத்தே உள்ள ஊர் என்னும் பொருட்டு.

மூலமும் உரையும்
௫௦௬

## பாட்டு - ௩௪௦ : தலைவி கூற்று

துறை :—இரவுக்குறி உணர்த்திய தோழிக்குக் கிழத்தி

மறுத்தது அஃதாவது, தலைவனுக்கு இரவுக்குறியுடம்பட்ட தோழி, தலைவிக்கு அதனை அறிவுறுத்தியவழி அவள் இரவுக் குறியின் ஏதங்காட்டி அதனை மறுத்தது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'நம்மனம் நந்தலைவ ரில்லாத பொழுது அவரோடாகி அவரையே நினைந்து வருந்தியும், அவர் இரவுக்குறி வருமிடத்து அவர் நம்மோடுடனுறையும் பொழுதும் ஆற்றினது ஏதங்குறித்து நம்மோடாகி அவர் வரவிறகுப பெரிதும் வருந்தியும், இருவழியும் வருத்தமே எய்துகின்றது ஆதலின், அவர் வருதலினும் வாராமையையே யான் விரும்புகின்றேன்' என்கின்றாள்.

௩௪௦. காமங் கடையிற் காதலர்ப் படர்ந்து
நாமவர்ப் புலம்பி னம்மோ டாகி
ஒருபாற் படுதல் செல்லா தாயிடை
அழுவ நின்ற அலர்வேய் கண்டல்
கழிபெயர் மருங்கி னொல்கி யோதம்
பெயர்தரப் பெயர்தந் தாங்கு
வருந்துந் தோழியவ ரிருந்தவென் னெஞ்சே.

—அம்மூவனார்.

( இ - ள் ) தோழி—, அவர் இருந்த என் நெஞ்சு நந்தலைவர் ஒரு பொழுதும் ஒருவாது வீற்றிருந்த என் நெஞ்சம், காமம் கடையின் காதலர் ; படர்ந்தும் - அவரிங்கிலராய பொழுது நம்மைக் காமநோய் வருத்துமிடத்தே நம்மைவிட்டுக் காதலர் பாற் சென்றும், நாமவர்ப் புலம்பின் - அவர் நம்மோடிருக்கும் பொழுது நாம் அவர்க்கு வழி யேதம் கருதி வருந்துமிடத்தே, நம்மோடாகி - நம்மோடு சேர்ந்தும், ஒருபாற்படுதல் செல்லாது- யாதானுமோர் கூற்றிலே அமையாது, ஆயிடை-அவற்றிடையே, அழுவம் நின்ற அலர்வேய் கண்டல் - கடற்கரையிலே நின்ற மலர்கள் நிறைந்த தாழை, கழி பெயர் மருங்கின் ஓங்கி - கழிநீர் ஓடிய பக்கத்தே வளர்ந்தும், ஓதம் பெயர்தரப் பெயர்தந்தாங்கு- அக் கழியின்கட் புக்க வெள்ளம் மீண்டவழித் தானும் மீண்டாற் போன்று, வருந்தும் - இருவழியும் துன்புறுகிற்கும்.

விளக்கம் :—கடைதல் - மிகுதல். காமம் மிக்கு வருத்தின் நெஞ்சு காதலர்ப் படர்ந்து வருந்தியும், நாம் அவர்தம் வழியிடையூறு கருதி வருந்தின் நம்மோடு கூடி வருந்தியும் ஒருபாற்படாதாகி என்க. எனவே

காதலர் வாராதபோதும வந்த போதும் வருந்துகின்றது என்றவாறு. வந்தபோது, இரவுக்குறிக்கண் வழியிடையூறு எணணி வருந்திற் றென்க. இவ்விரண்டு வருத்தத்தினும் காதலாப்படர்ந்து வருந்துதலே யேனும யான் ஆற்றுவன். வழியிடையூறு கருதி வருந்துதல் ஆற்றுறைதது என்று குறிப்பாற் கொள்ளவைத்தாள். என்னே? தலைவன் வாராமைக்கேனும் பின்னர் வருவன் எனனும் எண்ணம் ஆறுதல் அளிக்கும். இடையூறுண்டாம் என்று எண்ணி வருந்தும் வருத்தத்திற்கு ஆறுதல் எவ்வாற்ருனும் இன்மையின் என்க. படர்ந்தும், ஆகியும் எனஉம்மை விரித்தோதுக.

அவர்ப் புலம்பி - அவர் திறதது வருந்தி என்க. இதனல் இரவுக் குறி உடம்படாது மறுத்தாளாதல் அறிக. அவ்விடை - ஆயிடை என நின்றது; அவற்றின் இடையே என்க. மலர்கள் மிக்க தாழையானது நீரோடிய வழி ஒல்குவதல்லது நிமிர்ந்து நில்லாமையின் கடலோதம் கழியிற்புகுங்கால் கழிநோக்கி ஒல்கியும் கடற்கு மீளுங்கால், கடனேக்கித் திரும்பியும் இருவழியும் அலைப்புண்ணல் ஈண்டு இருவழி யும் வருந்தும் நெஞ்சிற்குவமை. காதலர் இருந்த நெஞ்சம் என்றது, அவர் வாராவழியும் என்னெஞ்சத்திருத்தலால் ஒருவாறு ஆற்றுவன் என்னும் குறிப்பிற்கு ஏதுவாதலறிக.

## பாட்டு – ௩௪௪ : தலைவி கூற்று

துறை :— பருவ வரவின்கண் வேறுபடுமெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது. அஃதாவது, தலைவன் கூறிச் சென்ற பருவம வந்தும் அவன் வாராமைகண்ட தோழி, 'இப் பருவங்கண்டு தலைவி பெரிதும் வருந்துவாளே' எனக் கவன்றாட்கு, 'யான் வருந்துகிலேன்' என்று தலைவி கூறியது

இதன்கண், தலைவி, தோழியை நோக்கி, '

தலைவர் கூறிய பருவத்தே அவர் வந்திலரேனும, அவர் மேற்கொண்ட வினை முற்றியவுடனே வருதல் ஒருதலை என்னும் எண்ணம் என் நெஞ்சை வலித்தலானே ஆற்றியிருக்கின்றேன்' என்று கூறுகின்றாள்.

௩௪க. பல்வீ பட்ட பசுநனைக் குரவம்
பொரிப்பூம் புன்கொடு பொழிலணிக்
கொளாஅச்
சினையினி தாகிய காலையுங் காதலர்
பேணு ராயினும் பெரியோர் நெஞ்சத்துக்
கண்ணிய ஆண்மை கடவ தன்றென
வலியா நெஞ்சம் வலிப்ப
வாழ்வேன் தோழியென் வன்க ணானே.

—மிளைகிழார் நல்வேட்டனார்.

(இ - ள்.) தோழி—, பல் வீ பட்ட பசுநனைக் குரவம் - பலவாகிய பூக்கள் தோன்றிய பசிய அரும்புகளையுடைய குரா

மரம், பொரிப்பூம் புன்கொடு பொழிலணிக் கொளாஅ - நெற் பொரி போலும் பூக்களையுடைய புன்கமரத்தோடே சோலையினிடத்தே அழகைக்கொண்டு, சினை இனிது ஆகிய காலையும் - கொம்புகள் காண்டற்கு இன்பமுடையனவாகிய இப் பருவத்தினும், காதலர் பேணார் ஆயினும - காதல்மிக்க நந்தலைவா தாம் கூறிய சொற்பிறழாது காவாராயினும், பெரியோர் நெஞ்சத்துக் கண்ணிய ஆண்மை கடவது அன்றென - பெரியோர்கள் தமது நெஞ்சத்தின் கண்ணே கருதியவற்றை வழுவாது ஆளுந்தன்மையும் சில செவ்விகளில் கடைபோகச் செலுத்தப்படுவதொன்றன்று என எண்ணி, வலியா நெஞ்சம வலிப்ப - முன்னர்த் துணிந்திலாத நெஞ்சம பின்னர்த் துணியாநிற்றலானே உண்டாகிய, என்வலை கணுன - எனது தருகண்மையானே, வாழ்வேன்- யான் உயிரகொண்டு இப்பொழுது வாழ்பவளாயினேன்.

**விளக்கம்** —பல்வீ - பலவாகிய பூக்கள். படுதல் தோன்றுதல். நனை - அரும்பு. குரவம் - ஒரு மரம. புன்கின் மலர்க்கு நெற்பொரி உவமை.

“ பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கிளந்
திங்கள்வாழ் சடை யாள்திரு முன்றிலே ”
(சிலப்-வேட்டுவ-முன்றிற் சிறப்பு-௩)

என்றார் இளங்கோவடிகளாரும். குரவமும் புன்கும் அரும்புகின்ற இள வேனிற் றொடக்கத்தே மீண்டு வருவன் என்று கூறிச் சென்றவர், அவை பலவாகிய மலர்கள் தோற்றிப் பொழிலணிக்கொண்ட இக் காலத்தும் வந்திலர் என்பாள், 'குரவம் புன்கொடு அணி கொளாச சினையினி தாகிய காலையும்' என்றாள். சினை காண்டற்கினிதாகிய

காலம் என்க. இனிது: சாதியொருமை. காதலர் என்றது, காதலர் அல்லர் என்ற இகழ்ச்சிக்குறிப்பு. பேணுதல் - தம் சொற்பிழையாது ஓம்புதல். பேணாராயினும் என்றது பேணற் பாலார் பேணாது ஒழிந்த விடத்தும் என்பதுபட நின்றது. பெரியோர்கள் தங் கொள்கைகளுட் சிலவற்றைச் சில செவ்விகளில் தளரவிடும் இயல்புடையோர் ஆவர். 'மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா' என்னும் பழமொழி அருத்தாபத்தியாற் பெரியோர் கொண்டது விடுதலும் உண்டென் பதை விளக்குதல் காணலாம். தாம் மேற்கொண்ட கொள்கைகள், ஒன்றனை ஒன்று முரணியவிடத்து, அவற்றின் மென்மை வன்மைகளைச் சீர்தூக்கி இன்றியமையாதொன்றனை மேற்கொண்டு ஏனையதை விடுத லும் பெரியோர் இயல்பு என்பது கருத்து. எனவே, 'வினையே ஆடவர்க்குயிர்' என்னும் சிறப்புப்பற்றி, தாம் மேற்கொண்ட வினையை முற்ற முடிக்கும்பொருட்டுத் தாம் கூறிச்சென்றபடி வருதலைத் தவிர்ந்து தங்கினர் என்றவாறு. வினைமுற்றியவுடன் மீள்வது ஒருதலை என்பது குறிப்பு. இக்குறிப்பானே என் நெஞ்சம் துணிந்து வல்லி தாயிற்றென்பாள், 'வலியா நெஞ்சம் வலிப்ப என் வன்கணானே' என்றாள். வலித்தமையாலுண்டான வன்கண் என்க.

**கண்ணிய - கருதப்பட்டவை. ஆண்மை - வழுவாது ஆளுந்தன்மை. கடவது - செய்து முற்றுவது.**



## பாட்டு - ௩௪௨ : தோழி கூற்று

துறை :—செறிப்பறிவுறுக்கப்பட்டான் வரைவின்கட் செல் லாது, பின்னும வரவுவேண்டிய தலைமகனைத் தோழி நெருங்கிச் சொல்லி வரைவுகடாயது. அஃதாவது, 'தலைவி தமரானே நன்கு பாதுகாக்கப படுகின்றனள்' என்று தலைவனுக்குத் தோழி அறிவித்த பின்னரும் வரைந்துகோடற் கருத்தின்றிக் களவொழுக்கமே விரும்பித் தோழியைக் குறையிரந்த தலைவனை, அவள் கடிந்து 'இனி வரைந்து கொளளலே நன்' றெனக் கூறியது.

இதன் கண், தோழி தலைவனை நோக்கி, 'குன்றநாட ! இவள் வருந்துதற்கு ஏதுவாகியதொரு செயலை நீ செய்தல நினக்குப் பொருநதுவதன்றுகாண்' என்று கடிந்துகூறு கின்றாள்.

ௗ௬௨. கலைகை தோட்ட கமழ்சுளைப் பெரும்பழம்
காவல் மறந்த கானவன் ஞாங்கர்க்
கடியுடை மரந்தோறும் படுவலை மாட்டும்
குன்ற நாட தகுமோ பைஞ்சுனைக்
குவளைத் தண்தழை யிவளீண்டு வருந்த

நயந்தோர் புன்கண் தீர்க்கும்
பயந்தலைப் படாஅப் பண்பினை எனினே.

—காவிரிப்பூம்பட்டினத்துக் கந்தரத்தனார்.

(இ - ள்.) கலை கை தொட்ட கமழ் சுளைப் பெரும் பழம் - ஆண்குரங்கு கையால் தோண்டிய மணங்கமழ்கின்ற சுளையை யுடைய பெரிய பலாப்பழத்தை, காவல மறந்த கானவன் - அங் ஙனம் குரங்கு தோண்டுமபடியாகத் தனது காததற் றொழிலை மறந்திருந்த வேடன், ஞாங்கர்க் கடியுடை மரந்தொறும் படுவலை மாட்டும் - அதன் பின்னர் மணமுடைய பலாமரங்கள் தோறும் குரங்குகள் படுவதற்குரிய வலையை மாட்டிவைத்தற்கு இடமான,
குன்ற நாட - மலைநாட்டை யுடையோனே!, பைஞ்சுனைக் குவளைத் தண் தழை இவள் ஈண்டு வருந்த - பசிய சுனையிற்றோன் றிய குவளைப்பூக்களை யிடையிட்டுப் புனைந்த தண்ணிய தழை யுடையை உடைய இத்தலைவி இவண் வருந்தாநிற்ப, நயந்தோர் புன்கண் தீர்க்கும் பயந்தலைப்படாப் பண்பினை எனின் - நின்னை விரும்பியவர்களது துன்பத்தைத் தீர்ப்பதாகிய பயனை எய்துதற்
கெண்ணாத வன்கண்மையுடையை நீ என்னின,
பழிமொழி நினக்குத் தகுமோ காண்.
தகுமோ - அப்

**விளக்கம் :**—கலை - ஆண்குரங்கு. கைதொட்ட - கையாற்றோண்டப் பட்ட என்க. கலைதொட்ட என்றது, கமழ் சுளையாதற்குக் குறிப்பேது வாம் என்க. இனிக் கலை தொடும்படி கமழ்சுளை எனக் கமழ்தலைத் தொடுதற்கு ஏதுவாகக் கருதினுமாம். பெரும்பழம் காவன் மறந்தமை யால் கலை கை தொட்டமை கண்டபின்னர், கானவன் மரந்தொறும் படுவலை மாட்டும் என்க.

கலைதொட்டமையைக் கமழ்தலானே அறிந்த கானவன், மீண்டும் தொடாவாறு படுவலைமாட்டும் என்றது, நினது களவொழுக்கத்தை அலரானறிந்த தமர், தலைவியை நீ மீட்டும் எய்த வொண்ணாதபடி இற்செறித்துவிட்டனர் ஆகலான், நீ அவளை இனி இக்களவொழுக்கத் தானே எய்தொணாது காண் என்னும உள்ளுறை தோற்றிநின்றது.

இங்ஙனம் இற்செறிக்கப்பட்டமையால் தலைவி ஆற்றாமை மிக்கு வருந்தாநின்றனள் : நிற்பவும் நீ வரையாது களவின்பமே காமுறுதல் நின் பெருமைக்கு இழுக்கன்றோ என்பாள், 'நயந்தோர் புன்கண் தீர்க்கும் பயந்தலைப் படாப் பண்பினை எனிற் றகுமோ' என்றாள். நயந்தோர் என்றது, ஈண்டுத் தலைவியைக் குறிப்பானுணர்த்திற்று. புன்கண்-இச்செறிக்கப்பட்டுத் தலைவனைக் காணாமல் வருந்துதல். அதனைத் தீர்க்கும்பண்பு வரையக்கருதுதல், தீக்கும் பயம் தலைப்படாப் பண்பு என்றது, களவொழுக்கமே காமுறுதலை என்க. பிறர் வருத்தம் நோக்காது தன்னலமே நாடுதல் சான்றாண்மை யன்றென்பாள், நினக்குத் தகுமோ' என்றாள். பயம் - பயன் : அஃதாவது தலைவனோடே இடையறாது கூடியிருத்தலாகிய பயனெனக் கொள்க.

இதனால் இரவுக்குறி மறுத்துக் கடிந்துரையானே வரைவுகடாவப் பட்டமை யுணர்க.

## பாட்டு - ௩௪௩ : தோழி கூற்று

துறை :—தோழி, கிழத்தியை உடன்போக்கு நயப்பக் கூறியது. அஃதாவது, தலைவி தமரறியாது தலைவனோடு உடன் சேறலன்றிப் பிறிது நெறிகாணாத் தோழி தலைவியைத் லுடன் செல்லும்படி அறிவுறுத்தியது.
தலைவ

இதன் கண்,
நம் தலைவனோடு
தோழி, தலைவியை நோக்கி, 'நீ இப்பொழுது நமர் அறியாது செல்லுதலே நன்மையாம்; ஆகலான், அங்ஙனம் செல்லுதலையே நீ கருதுக' என்கின்றாள்.

௩௪௩. நினையாய் வாழி தோழி நனைகவுள்
அண்ணல் யானை அணிமுகம் பாய்ந்தென
மிகுவலி இரும்புலிப் பகுவா யேற்றை
வெண்கோடு செம்மறுக் கொளீஇ
விடர்முகைக்
கோடை யொற்றிய கருங்கால் வேங்கை
வாடுபூஞ் சினையிற் கிடக்கும்

உயர்வரை நாடனொடு பெயரும் ஆறே.

—ஈழத்துப் பூதன்றேவனார்.

கு.—33



(இ - ள்.) தோழி—, மிகு வலி இரும்புலிப் பகுவாய் ஏற்றை - மிக்க வலியையும் பெரிய பிளந்த வாயையுமுடைய ஆண் புலியானது, நனை கவுள் அண்ணல் யானை அணி முகம் பாய்ந்தென - மதத்தால் நனைந்த கவுளையுடைய தலைமையையுடைய யானையினது அழகிய முகத்தின்கண்ணே பாய்ந்ததாக, வெண் கோடு செம் மறுக் கொளீஇ - அவ்வியானையினது வெள்ளிய மருப்பினைத் தனது குருதியானே சிவந்த கறையைக் கொள்ளச் செய்து, விடர் முகை கோடைஒற்றிய கருங்கால் வேங்கை - பிளந்த மலைமுழைஞ்சிலுள்ள மேல்காற்றானே வீழ்த்தப்பட்ட கரிய அடியினையுடைய வேங்கைமரத்தினது, வாடு பூஞ் சினையிற் கிடக்கும்-வாடிய பூவையுடைய கொம்புபோன்று இறந்து கிடக்கும், உயர்வரை நாடனொடு பெயரும் ஆறு - உயர்ந்த மலைகளையுடைய நாட்டையுடைய தலைவனோடு செல்லும் திறத்தை, நினையாய் - நீ கருதிக் காண்பாயாக

**விளக்கம் :**—இச்செய்யுள் பூட்டுவிற்பொருள்கோள் உடைத்து. நாடனொடு பெயருமாறே நினையாய் என்று இயைத்துக் கொள்க. ஆறே என்பதன்கண் ஏகாரத்தைப் பிரிநிலைப் பொருட்டாக்கி, பிறவாற்றானே நம் கற்புக்கடமையை நிறைவேற்றல் இயலவதன்று அஃதொன்றே உளது, அதனை நீயும் ஆராய்ந்து துணிக என அறிவுறுத்தாளாகக் கருதினுமாம். யானையினது முகத்திற்றானே பாய்ந்து புலி இறந்து கிடக்கும் வரைநாடன் என்றது, நீ உடன் போகும் பொழுது நம் தலைவனை எதிர்ப்பாருளராயின், அவர் தோற்கும்படி செய்யும் ஆண்மையுடையன் ஆவன் தலைவன் என்னும் குறிப்புடைத தென்க. அண்ணல்-தலைமைத்தன்மை. தலைவனுக்கு உவமமாகலின் அவன்றலைமையை யானைக்கேற்றினள். வெண்கோடு செம்மறுக் கொளீஇ என்றது, தலைவனுக்கு வெற்றிப்புகழை யுண்டாக்கி என்னும் உள்ளுறை தோற்றிய தென்க.

புலியினது குருதி தோய்தலானே உண்டாகிய செம்மறு என்க. மறு - கறை. கோடை - மேல்காற்று இறந்து கிடக்கும் புலிக்குக் காற்றானே முறித்துப் போகட்டு வாடிய வேங்கையின் பூவையுடைய கிளை உவமை என்க. "உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையை" (கலி - ௩அ) எனப் பிறரும் ஓதுதலறிக.

## பாட்டு - ௩௪௪ : தலைவி கூற்று

துறை :—பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் கூறியது. அஃதாவது. தலைவன் பிரிந்த காலத்தே ஆற்றாளாகிய தலைவியை நீ ஆற்றுதல் வேண்டும் என நெருக்கிய தோழிக்குத் தலைவி நெஞ்சழிந்து கூறியது.

இதன்கண், வற்புறுத்த தோழியைத் தலைவி நோக்கி, 'இப் புன்கண் மாலைப்பொழுதின்கண் பிரிந்துசென்ற தம் தலைவர் மீண்டு வருதலைக் காணும் மகளிர், தவம் பெரிதும் முயன்

'ளோர் ஆவர்; யான் அது செய்திலேன் போலும்,' என்று வருந்தினாள்.

நூ.சச. நோற்றோர் மன்ற தோழி தண்ணெனத்
தூற்றுந் துவலைப் பனிக்கடுந் திங்கட்
புலம்பயி ருருந்த அண்ண லேற்றொடு
நிலந்தூங் கணல வீங்குமுலைச் செருத்தல்
பால்வார்பு குழவி யுள்ளி நிரையிறந்
தூர்வயிற் பெயரும் புன்கண் மாலை
அரும்பெறற் பொருட்பிணிப் போகிப்
பிரிந்துறை காதலர் வரக்காண் போரே.

—குறுங்குடி மருதனூர்.

(இ - ள்.) தோழி—, தண் எனத் தூற்றும் துவலைப் பனிக் கடுந் திங்கள் - குளிருமபடி வீசாநின்ற துளிகளாகிய பனியை

உடைய கடியவாகிய திங்கள்களிலே, புலம் பயிர் அருந்த அண்ணல் ஏற்றொடு-மேய்புலங்களிலே பயிரை அருந்துதலையுடையனவாகிய தலைமையுடைய ஏறுகளோடே, நிலம் தூங்கு அணலவீங்குமுலைச் செருத்தல் - நிலத்திற் றோயும்படி நான்ற தாடியையுடையனவாகிய பருத்த முலைக்காம்புகளையும் மடியையுமுடைய ஆன்கள், குழவி உள்ளி - தங்கன்றுகளை நினைந்து, பால்வார்பு நிரையிறந்து-பாலொழுகவிட்டு நிரையினின்று நீங்கி, ஊர்வயின் பெயரும் புன்கண் மாலை - ஊரினுள்ளே புகுதற்குக் காரணமான துன்பமுடைய இம்மாலைப்பொழுதின்கண்ணே, அரும் பெறல் பொருள் பிணிப் போகி - அரிதிற் பெறுகின்ற பொருளின்கட் பற்றுடைமையாலே சென்று, பிரிந்து உறை காதலர் வரக்காண்போர் - தம்மைப்பிரிந்து தங்கிய தந்தலைவர்கள் மீண்டு வருதலைக் காண்கின்ற மகளிர், மன்ற நோற்றோர் - தேற்றமாகத் தவம் செய்தோரேயாவர்.

**விளக்கம்**:—நோற்றோர் - தவம்செய்தவர். மன்ற - தேற்றப் பொருளில் வந்தது. துவலையாகிய பனி என்க. கடுந்திங்கள் - குளிர்க் கொடுமை மிக்க திங்கள் என்றவாறு. புலம் - மேய்கின்ற நிலப்பகுதி. அருந்த - அருந்தலையுடையன. அணல - அலைதாடியையுடையன செருத்தல் - மடி; ஆனுக்கு ஆகுபெயர். அன்புக்குரிய கன்றை நினைந்தனவாய் ஆன்கள் பாலொழுகும்படி ஊர்புகுதும் என்றது, அவை அங்ஙனமாகவும் நந் தலைவர் நம்மை நினைந்து மீள்கிலாரே என்னும் நினைவிற்று என்க. வளர்ந்து தூங்கும் பெரிய தாடி என்பாள், 'நிலந் தூங்கு அணல' என்றாள். நிரையிறந்து - ஆனிரையினின்று நீங்கிச் சென்று. வார்பு - வார்ந்து, ஒழுகி என்க. தனித்துறைவோர்க்குப் பெரிதும் துன்பந்தரும் மாலை என்பாள், 'புன்கண் மாலை' என்றாள். சென்றோர் கருதியபடி ஈட்டற்கரிய பொருள் என்பாள், 'அரும் பெறற்

பொருள்' என்றாள். நமது அன்புப் பிணியொரீஇ என்பாள், 'பொருட் பிணிப் போகி' என்றாள்.

வரக்காண்போா தவம் செய்தோர் என்றது அவர்வரக் காணுமை, யான் செய்த பாவமே என்னும் குறிப்புடைத்து.

## பாட்டு - ௩௪௫ : தோழி கூற்று

துறை :—பகல் வந்து ஒழுகுவானைத் தோழி இரா வரவென்றது. பகற்குறியின்மட்டுமே வந்து மீளுந்தலைவனைத் தோழி, காணுப்பொழுது நீளிதாகலின் தலைவி பெரிதும் வருந்தாநின்றனள் என்பதுபட, 'இரவு வருக' என்று கூறியது.

இதன்கண், தோழி தலைவனைத் தனியிடத்தே கண்டு, 'நந் தலைவியின் தனிமைததுன்பம் நீங்கும்பொருட்டு நீயிர் நுந் தேரினை மணற்குன்றின் மறைவிலே நிறுத்திவிட்டு இரவினும் ஈண்டுத் தங்குதல் வேண்டும்,' என்று வேண்டுகின்றாள்.

௩௪௫. இழையணிந் தியல்வருங் கோடுஞ்சி நெடுந்தேர்
வரைமருள் நெடுமணல் தவிர்த்துநின்
றசைஇத்

தங்கினி ராயின் தவறோ தெய்ய
தழைதாழ் அல்குல் இவள்புலம் பகலத்
தாழை தைஇய தயங்குதிரைக்
கொடுங்கழி
இழுமென ஒலிக்கும் ஆங்கண்
பெருநீர் வேலியெம் சிறுநல் லூரே.

—அண்டர்மகன் குறுவழுதியார்.

(இ - ள்.) தாழை தைஇய தயங்கு திரைக் கொடுங்கழி- தாழை பொருந்திய விளங்குகின்ற அலைகளையுடைய வளைந்த கழி, இழும் என ஒலிக்கும்-இழும் என ஆரவாரியாநிற்கும், ஆங்கண்-அவ்விடத்ததாகிய, பெருநீர் வேலி எம சிறு நல்லூர்-கடலை வேலியாகவுடைய எமது சிறிய நல்ல ஊரின்கண்ணே, இழை அணிந்து இயல்வரும் கொடுஞ்சி நெடுந்தேர்-பொற்படைகளால் ஒப்பனை செய்யப்பட்டு இயங்குதலைச் செய்யும் கொடுஞ்சியையுடைய நெடிய தேரினை, வரை மருள் நெடுமணல் தவிர்த்து-மலையையொத்த நெடிய மணற்குவியலின் மறைவிலே விட்டு வைத்து, நின்று அசைஇ-தங்கி இளைப்பாறி, தழைதாழ் அல்குல் இவள் புலம்பு அகல - தழையுடை தாழ்ந்த அல்குலையுடைய தலைவியினது தனிமைத்துன்பமும் நீங்கும்படி, தங்கினிர் ஆயின் தவறோ-தங்குவீராயின் அச்செயல் பிழையுடையதாமோ? கூறுதிர்.

## மூலமும் உரையும்

குகள

**விளக்கம்:**—இழை என்றது, தேரின் பொற்படை முதலிய ஒப்பனைப் பொருள்களை. இயல்வருதல் - இயங்குதல். கொடுஞ்சி-தாமரை முகை வடிவிற்றாய்ப் பொன்னாற் செய்து தேர்முகப்பே நடப்படுவதோர் உறுப்பு. வரைமருள் நெடுமணல் என்றது, நெடிய தேரினைப் பிறர் அறியாவாறு மறைத்து நிறுத்திவைத்தற்குரிய இடமுண்மையைக் குறிப்பானுணர்த்தியவாறு. நின்று என்றது, அம் மணற்பரப்பிலே பகல் கழியுந் துணையும் இருந்து என்றவாறு. அசைஇ - இளைப்பாறி. நின்றசைஇ என்றது, தலைவன் தங்குதற்குப் பிறிதுமோரா நலங்காட்டிய வாறு. தெய்ய: அசைநிலை. தவறோ என்னும் வினா தவறின்மையை வற்புறுத்துணர்த்தி நின்றது. அப் பகற் குறியிடத்தே தலைவன் தந்த தழையுடையுடுத்துத் தலைவி விளங்கினமை கண்டமையானே, 'தழை தாழஅல்குல் இவள்' என்றாள். தலைவி அயலில் இலளாயிருந்தும் இருவர் நெஞ்சிற்கும் அணியளாதல் பற்றி, 'இவள்' என, அண்மை நிலையாற் சுட்டினாள். இவள் புலம்பகல என்றது, நீ பிரிந்துறையும் பொழுதெல்லாம் இவள் பெரிதும் வருந்துகின்றாள் என்பதையும் தலைவனுணரக் கூறியவாறாம். புலம்பு - தனிமைத்துன்பம்.

நீயும் நின்றசைஇ இருத்தற்கும் இவளும் புலம்பகல்தற்கும் நீ தங்குதல் இன்றியமையாதது என்றவாறாம்.

தைஇய - பொருந்திய. பெருநீர் - கடல். பெருநீர் சிறுநல்லூரே என்புழி முரண் தோன்றிச் செய்யுளின்பம் மிகுதல் உணர்க.

### பாட்டு - ௩௪௬ : தோழி கூற்று

துறை :—தோழி கிழத்தியை இரவுக்குறி நயப்பக் கூறியது.

அஃதாவது, பகற்குறி வந்தொழுகுந் தலைவன், இரவுக்குறியினும் வரவிரும்புதலை யுணர்ந்த தோழி, அதனைத் தலைவிக்குணர்த்தி அவனை இரவினும் ஏற்கும்படி கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'நந்தலைவன் பகற் குறியிடத்தே வந்து குவளைத்தொடலை தந்தும், படுகிளியோப் பியும் உடனுறைவானாகியும், மாலைப்பொழுதிலே ஏதோ ஒரு உடம்பாட்டை நம்பால் விரும்பினவனாய் அதனை நமக்குக் கூறவும் இயலாது வருந்துகின்றான்' என்று கூறுகின்றாள்.

௩௪௬. நாகுபிடி நயந்த முளைக்கோட் டிளங்களிறு
குன்றம் நண்ணிக் குறவர் ஆர்ப்ப
மன்றம் போழு நாடன் தோழி
சுனைப்பூங் குவளைத் தொடலை தந்தும்
தினைப்புன மருங்கிற் படுகிளி யோப்பியும்
காலை வந்து மாலைப் பொழுதில்
நல்லக நயந்துதான் உயங்கிச்
சொல்லவும் ஆகா தஃகி யோனே.

—வாயிலிளங் கண்ணனார். குகூஅ

குறுந்தொகை

(இ - ள்.) தோழி!, நாகு பிடி நயந்த முளைக் கோட்டு இளங்களிறு - இளமையுடைய பிடியானையை விரும்பி மூங்கின் முளைபோன்ற கொம்பினையுடைய இளங்களிற்றியானை, குன்றம் நண்ணி குறவர் ஆர்ப்ப மன்றம் போழும் நாடன் - மலையின் கண் பொருந்தி ஏறி ஆண்டுள்ள குறவர் ஆரவாரித்தலாலே ஊரம்பலத்தை ஊடறுத்துப் போகாநிற்கும் நாட்டையுடைய நந்தலைவன், காலை வந்து - காலைப்பொழுதிலே நம்பால் வந்து, சுனைப்பூத்த குவளைத் தொடலை தந்தும் - சுனையின்கண் மலர்ந்த அழகிய குவளைமலர்மாலையைப் புனைந்து நினக்களித்தும், தினைப்புனம மருங்கில் படுகிளி ஓப்பியும் - நமது தினைப்புனத் தின் கண்ணே வீழாநின்ற கிளிகளை நின்னோடு சேர்ந்து ஓட்டி யும். மாலைப்பொழுதில் - மாலைப்பொழுது வந்தவிடத்தே, நல் அகம் நயந்து உயங்கி - நமது நன்றாகிய நெஞ்சத்தை விரும்பி வருந்தி, சொல்லவும் ஆகாது - அவ்விருப்பத்தை நமக்குக் கூறவுமியலாது, அஃகியோன் - குறைவுற்றனன் காண்.

**விளக்கம்** :—நாகு - இளமை. முளை - மூங்கில்முளை. இனி முளைக்கோடு என்பதனை வினைத்தொகையாக்கி, முளைக்கின்ற கொம் பெனலுமாம்; முளைக்கும் பருவத்தையுடைய கோடு என்றபடி. மன் றம் போழ்தலாவது - ஊரம்பலத்தின் ஊடே போதல். இளம்பிடியை இளங்களிறு மலையின்கண் மருவுதல் கண்டு குறவர் ஆரவாரிப்ப அக் களிறு மன்றத்தூடே செல்லும் என்க. பிடி நயந்த களிறு மன்றம் போழும் என்றது, 'நின்னை நயந்த தலைவன் இரவுக்குறிக்கண் நம மனைப் படப்பையகத்தேயும் வருவன்' என்னும் உள்ளுறை தோற்றிய தென்க.

மாலைப்பொழுதில் நல்லகம் விரும்பி என்றது, அவன் குறைநயத் தலையுடைய நல்ல நமது நெஞ்சத்தை விரும்பி என்றவாறு. அஃதாவது நமது இரவுக்குறி உடம்பாட்டை நயந்து என்க. நம்பால் அதனை சொல்லமாட்டாமையால் தன்னுள்ளே வருந்தி என்பாள், 'தான் உயங்கி' என்றாள். உயங்குதல் - வருந்துதல். நாம் உடம்படேம் என்று கருதிச் சொல்லவும் ஆகாது அஃகினன் என்க. அஃகுதல் - குறைதல். ஈண்டு உளம் வருத்தத்தாலே ஊக்கமின்றிச் சுருங்குதல் என்க.

இதனால் யாம் அவனை இரவினும் ஏற்றுக்கோடல் வேண்டும் என்று குறிப்பான் உணர்த்தப்பட்டது. அஃகியோன் என்றது, விரைந்தேலாவழி அவற்கேதமுறுதல் ஒருதலை என வற்புறுத்தற் பொருட்டென்க.

## பாட்டு - ருசஎ : தலைவன் கூற்று

துறை :—பொருள்வலிக்கும் நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லிச் செலவழுங்கியது. அஃதாவது, தலைவன் உடைமைய துயர்ச்சியும் இன்மையதிளிவும் காட்டித் தன்னைப பொருளீட்டத் தூண்டிய தன் நெஞ்சிற்குத் தலைவியைப் பிரியவொண்ணாமை காட்டிச் செலவொழிந்தது.

## மூலமும் உரையும்

ருகசு

இதன்கண், தலைவன் தன்னெஞ்சை விளித்து, 'நெஞ்சமே! நம் தலைவியும் நாம் செல்லும் பாலைநிலத்தின் நீண்ட வழியிடத்தே நம்மோடு வருவாளாயின் நினது கருத்து நன்றே யாம்!' என்று கூறுகின்றான்.

௩௪௭. மல்குசுனை புலர்ந்த நல்கூர் சுரமுதற்
குமரி வாகைக் கோலுடை நறுவீ
மடமாத் தோகைக் குடுமியிற் றோன்றும்
கான நீளிடைத் தானு நம்மோடு
ஒன்று மணஞ்செய்தனள் இவளெனின்
நன்றே நெஞ்சம் நயந்தநின் துணிவே.

—காவிரிப்பூமபட்டினத்துச் சேந்தங்
கண்ணனார்.

(இ - ள்.) நெஞ்சம் - என நெஞ்சமே !, இவள் - நந்தலைவி, மல்குசுனை புலர்ந்த நல்கூர் சுரமுதல் - நீர் பெருகும் இயல்பினை யுடைய சுனைகள் நீர் அற்றமையானே உண்டாகிய வறுமை யுடைய பாலைநிலத்தே, குமரி வாகைக் கோல் உடை நறு வீ - இள வாகைமரத்தினது காமபினையுடைய நறிய பூக்கள், மட மாத் தோகைக் குடுமியின் தோன்றும் - மடப்பத்தையுடைய கரிய மயிலினது உச்சிச்சூட்டினைப் போன்று தோன்றுதற்கிட மா ா, கானம் நீள் இடை நம்மொடு ஒன்று மணம் செய்தனள் எனின் - காடாகிய நீண்ட வழியிடத்தே நம்மோடு முயங்குவ தாகிய மணத்தைச் செய்வாளாயின், நயந்த நின் துணிவு நன்று - விரும்பிய

நினது துணிவு நன்மையே ஆகும.

**விளக்கம்** :—மல்கு சுனை என்றது, பொருட்கேற்ற அடைபுணர்ந்து நின்றது. மல்குதல் - நிறைதல். பண்டு நிறைந்திருந்த சுனை என்க. நல்குரவு - ஈண்டு நீரின்மை குறித்து நின்றது. சுனை கூறப்பட்டமையாற் குறிஞ்சிதிரிந்த பாலை என்க. குமரி வாகை - இளமையுடைய வாகைமரம்.

வாகை மலர்க்குக் காம்புகள் நீளியவாகலான் 'கோலுடை வாகை' எனப்பட்டது. தோகை - மயில். குடுமி - உச்சிக்கொண்டை. வாகைப்பூ மயிலினது உச்சிக்கொண்டைபோல் தோன்றும் என்க. ஒன்று மணம் என்றது, புணர்தலை.

'இவள்' என்றான், நெஞ்சிற் கணியளாதல் பற்றி. டின்மை தோன்ற 'நின் துணிவு' என்றான்.

தனக்குடம்பா

செய்தனள் அவளெனின் என்றது, அங்ஙனம் செய்யாளே என்பதுபட நின்றது. நெஞ்சம்: அண்மை விளி.

அங்ஙனம் அவள் வாராளாகலின், நின் துணிவு நன்றன்று என்பது குறிப்பு.

## பாட்டு - ௩௨௪ : தோழி

கூற்று

துறை:—செலவுக் குறிப்பறிந்து வேறுபட்ட கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது. அஃதாவது, தலைவனது ஒழுகலாற்றானே 'இவன் நம்மைப் பிரிவன் போலும்' என்று அஞ்சி வருந்திய தலைவிக்குத் தோழி, 'அவன் பிரியான்' என்றற்குக் காரணங் காட்டி ஆற்றுவித்தது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'அவர் பிரிவர் என்று கருதிய துணையானே நின் கண்கள சொரியும் நீரினை நந்தலைவர் காண்பரல்லரோ! அங்ஙனம் கண்டுவைத்தும் நின்னை யவர் பிரியக் கருதுவரோ; கருதார்காண்', என்று தேற்றுகின்றாள்.

௩௨௪. தாமே செல்ப வாயிற் கானத்துப்
புலந்தேர் யானைக் கோட்டிடை யொழிந்த
சிறுவீ முல்லைக் கொம்பிற் றாஅய்
இதழழிந் தூறுங் கண்பனி மதரெழிற்
பூணக வனமுலை நனைத்தலும்
காணார் கொல்லோ மாணிழை நமரே.

—மாவளத்தனார்.

(இ - ள்.) மாண் இழை நமர் - மாட்சிமையுடைய அணி கலன்களையுடைய நந்தலைவர், தாமே செல்ப ஆயின் - நம்மை விட்டுத் தாமட்டுமே செல்வாராயின், கானத்துப் புலம் தேர் யானைக் கோட்டிடை ஒழிந்த - காட்டின்கண் மேய்புலத்தை ஆராய்ந்து திரியும் யானையினது மருப்பிடத்தே சிக்கி முறிந்து தன் முதலினின்று நீங்கிய, சிறு வீ முல்லைக் கொம்பின் - சிறிய பூக்களையுடைய முல்லையினது கொம்பைப்போன்று, தாஅய் இதழழிந்து ஊறும் கண்பனி - பரவி இமையின் விளிம்பைக் கடந்து ஊறுகின்ற கண்ணீர்த்துளி, மதர் எழில் பூண் ஆகவன முலை நனைத்தலும் - மதர்த்த அழகினையுடைய அணிகலன்களைத் தன்பாற்கொண்ட அழகிய முலையினை நனைக்கின்றதனையும், காணுர்கொல் - அவர் காணமாட்டாரோ?

விளக்கம் :—தாமே செல்ப ஆயின் என்றது, நின்னோடன்றித் தாம் மட்டுமே செல்வார் என நீ கருதுவாய் ஆயின் என்றவாறு. புலம் - மேய்புலம், யானை மேய்புலத்தை ஆராய்ந்து காட்டினூடே திரியும் பொழுது அதன் கொம்பிடைச் சிக்கிய முல்லைக்கொடியின் பூக்கள் சிதறுமாறுபோலச் சிதறி என உவமையை விரித்துக்கொள்க.

கொம்பு : ஆகுபெயராய்ப் பூவைக் குறித்தது. இனி முல்லைக் கொம்பின் சிறுவீயிற் றூஅய் என மாறி யுரைப்பினுமாம்.

இதழ் அழிந்து ஊறும் என்றது, இதழினது கடந்து ஊறும், என்றவாறு. பனி – துளி.

விளிம்பைக்

"யானைக் கோட்டிடைக்கொண்ட முல்லை எந்தக் கணத்தில் அதன் வாயினுட்புகுமோ என அறியா நிலையிலிருத்தலைப்போல இவள் எப்பொழுது உயிர் நீப்பாளோ" என்று உவமை விரிப்பாரு முளர.

அவர் பிரிவாரோ என்று ஐயுற்ற துணையானே

நின் கண்பனி

முலை நனைத்தலை அவர் இப்பொழுது கண்டிருப்பர். நீத்துச்சென்றால் நீ இறந்துபடுவை என்பதும் அவர் உணர்வர்; ஆதலிற் செலவழுங்குவர் என்று தேற்றியபடியாம். 'பொலங்தேர்' என்றும் பாடம்.

காணூர் கொல்லோ என்னும் வினு கண்டிருப்பர் என்பதுபட நின்றது. மாணிழை என்றதனை அன்மொழித்தொகையாகக் கொண்டு தலைவிக்கேற்றி விளியாக்கினுமாம்.

## பாட்டு – ௩௪௯ : தலைவி கூற்று

துறை :—பரத்தைமாட்டுப் பிரிந்துவந்த தலைமகன் கேட்

கும் அண்மையனுகத் தோழிக்குக் கிழத்தி கூறியது. அஃதாவது, தலைவன் பரத்தையில்லினின்றும் மீண்டு தலைவியிருக்குமிடத்திற்கு வந்தபொழுது அவன் கேட்கும்பொருட்டு அவன் வரவுணராதாள் போன்று தலைவி தோழிக்குக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, "நீ 'தலைவனை வளைத்துக்கொண்டு நம் நலத்தைக் கைக்கொள்வோம்' என்கின்றாய்; ஒருவர்க்களித்த தொன்றனை மீண்டும் தருக என்று கேட்டலினும் சாதலே நன்றாம்" என்று கூறுகின்றாள்.

௩௪௯. அடும்பவிழ் அணிமலர் சிதைஇமீன் அருந்தும்
தடந்தாள் நாரை இருக்கும் எக்கர்த்
தண்ணந் துறைவற் றொடுத்து நந்நலம்
கொள்வாம் என்றி தோழி கொள்வாம்
இடுக்கண் அஞ்சி இரந்தோர் வேண்டிய
கொடுத்தவை தாவென் சொல்லினும்
இன்னா தோநம் இன்னுயிர் இழப்பே.

—சாத்தனார்.

(இ - ள்.) தோழி—, அடும்பு அவிழ் அணிமலர் சிதைஇ மீன் அருந்தும் - அடும்பங்கொடியின்கண் மலர்ந்த அழகிய

பூக்களைச் சிதைத்து மீனைத்தின்னுகின்ற, தடந்தாள் நாரை இருக்கும் எக்கர்-வளைந்த கால்களையுடைய நாரைகள் இராநின்ற இடுமணலையுடைய, தண்ணந் துறைவன் தொடுத்து - குளிர்ந்த



கடற்றுறையையுடைய நந்தலைவனை வளைத்துக்கொண்டு, நம் நலம் கொள்வாம் என்றி - நாம் இழந்த நமது பெண்மை நலத்தைக் கைக்கொள்வோம் என்கின்றனை, கொள்வாம் - அங்ஙனமே கொள்வோம்; ஆயினும், இடுக்கண் அஞ்சி இரந்தோர் வேண்டிய கொடுத்து - தமக்குற்ற துன்பத்தை அஞ்சி ஏற்பவர் விரும்பியவற்றைக் கொடுத்து, அவை தா என் சொல்லினும் - பின்னர் யாந் தந்தவற்றை எமக்குத் தருவாய் என்று இரக்கும் சொல்லைக்காட்டினும், நம் இன் உயிர் இழப்பு இன்னாதோ - நம் இனிய உயிரினை இழந்துவிடுதல் துன்பந் தருமோ ?

விளக்கம் :— அடும்பு-ஒருவகைக் கொடி.

அவிழ்தல் - மலர்தல்.

சிதைஇ - சிதைத்து. தடந்தாள் - வளைந்தகால். எக்கர் - இடுமணல். மீன் அருந்தும் தடந்தாள் நாரை எக்கர் மேற்படர்ந்த அடும்ப மலர் சிதையும்படி அவற்றினை மிதித்து இருக்கும் என்றவாறு. எனவே, பரத்தையரை நுகருந் தலைவன் நம் பெண்மை நலம் நின்றான் என்னும் உள்ளுறை தோன்றுதலுணர்க.

சிதைய ஒழுகா

அடும்பவிழ் என்பது தொடங்கி...கொள்வாம் என்னுந் துணையும் தலைவி தோழி கூற்றைக் கொண்டு கூறினள் என்க.

கொள்வாம் என்றது, நீ கூறியவாறே நந்நலம் கொள்வாம் என உடம்பட்டுப் பின்னர்க் கொள்ளுதலின் இழிவுகூறி மறுக்கின்றாள் என்க.

என்றி - என்று கூறுகின்றாய். இடுக்கண் அஞ்சி என்பதனை, இரந்தோர் வேண்டிய கொடுத்தது இடுக்கண அஞ்சி அவை தா என் சொல் எனப் பிரித்துக் கூட்டி இடுக்கண் அஞ்சுதலைக் கொடுத்தோர்க் கேற்றுக. ஒருவன் ஒருகால் இரந்தோர்க் கீந்த வொன்றனைப் பின்னர்த் தனக்குற்ற இடுக்கண் காரணமாகக் கொடு என்று கேட்டலினும் அவ்விடுக்கணால் இறந்துபடுதல் இனிதாகும் என்றவாறு. எனவே, அவன் பரத்தைமையால் யாம் இடுக்கண் உறினும் அவன்பால் நலங் கேட்டல் இழிவாம் எனத் தோழியை மறுத்தவாறாதல் அறிக.

நலஞ் சிதைத் தொழுகுந் தலைவன்பால் எம் நலந்தா எனக்கேட்கும் வழக்கத்தை, 'மாணலந் தா என வருத்தற் கண்ணும்" (தொ-கற்பு-சூ க.) என வரும் தொல்காப்பியச சூத்திரப் பகுதியானும் உணர்க.

தலைவன் தவறு செய்தானாயினும் யாம் அவனைக் கடிதல் தகுதியன்று என்பது கருத்து.

## பாட்டு – ௩௫௦ : தோழி கூற்று

துறை :—பிரிவு நேர்ந்த தலைமகள், அவனது நீக்கத்துக் கண் வேறுபட்டாளைத் தோழி வற்புறீஇயது. அஃதாவது, தலைவன் பிரியும்பொழுது அவன் பிரிதலை உடம்பட்டிருந்து அவன் சென்றபின்னர் ஆற்றாமை எய்திய தலைவியைத் தோழி கடிந்து ஆற்றுவித்தது.

### மூலமும் உரையும்

௫௨௩

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, " மலையுடைக் கானம் நீந்தி நிலையாப் பொருட்பொருட்டுத் தலைவர் பிரிந்த பொழுதே யாம் அவர் முன்னின்று, 'இப் பனிக்காலத்தே யாம் தனித்துறைதலைப் பொறேம்; ஆகலின், நீயிர் போகன்மின்' என்று தடுத்திருந்தால் அவர் செல்லார்; அப்பொழுது உடம் பட்டிருந்து இப்பொழுது வருந்துதல்

பேதைமை" என்று இடித்துரைக்கின்றாள்.

௩௨௦. அம்ம வாழி தோழி முன்னின்று
பணிக்கடுங் குரையஞ் செல்லா தீமெனச்
சொல்லின மாயிற் செல்வர் கொல்லோ
ஆற்றய லிருந்த இருந்தோட் டஞ்சிறை
நெடுங்காற் கணந்துள் ஆளறி வுறீஇ
ஆறுசெல் வம்பலர் படைதலை
பெயர்க்கும்
மலையுடைக் கான நீந்தி
நிலையாப் பொருட்பிணிப் பிரிந்திசி
னோரே.

—ஆலத்தூர் கிழார்.

(இ - ள்.) அம்ம வாழி தோழி - தோழி யான் கூறுவ
தனைக் கேட்பாயாக, ஆறு அயல் இருந்த இருந் தோடு அஞ்சிறை நெடுங்கால் கணந்துள் - வழியின்பக்கத்தே இருந்த பெரிய தொகுதியாகிய அழகிய சிறகினையும் நெடிய கால்களையும்
உடைய கணந்துட்பறவை, ஆள் அறிவுறீஇ - ஆறலைகள்வர்

வருகையை அறிவுறுத்தி, ஆறுசெல் வம்பலர் படை தலைப் பெயர்க்கும் - வழிப் போகின்றவர்களின் படைத்திரளை இடத் தினின்றும் நீங்கச் செய்யும், மலையுடைக் கானம் நீந்தி - மலை களையுடைய காட்டைக்கடந்து, நிலையாப் பொருள் பிணிப் பிரிந்திசினோர் - நிலையுதலில்லாத பொருளின்கண் நசையாலே நம்மைப்பிரிந்த நந்தலைவர், முன்னின்று பனிக் கடுங்குரையம்
செல்லாதீம் என - பிரியத்தொடங்கிய பொழுது அவர் முன்னே நின்று, யாம் இப்பொழுது பனியினது கடுமையினை யுடையே மாகலின் நீயிர் போகாதே கொண்மின் என்று, சொல்லினம் ஆயின் - கூறியிருப்பேமாயின், செல்வர்கொல் - அவர் நம்மைப் பிரிந்து போவாரோ ?

**விளக்கம்** :— ஆற்றயல் - வழியின் மருங்கு. இருந்தோடு - பெரிய கூட்டம்; கணந்துட் புள்ளின் கூட்டம். கணந்துள் - ஒருவகைப் பறவை. இதனைக் "கானக் கோழியும் நீர் நிறக் காக்கையும், உள்ளும் ஊரலும் புள்ளும் புதாவும்," (க0-ககசு-எ.) என வரும் சிலப்பதிகார அடிகட்கு அடியார்க்குநல்லார் வகுத்த உரையின்கட் "புள்ளு-கணந்துட்

புள் என" வரைந்தமையானும் அறிக. இதனால் இஃது அக்காலத்தே புள் என்றும் வழங்கப்பட்டமை உணரலாம். இதனை இக்காலத்தார் "ஆட்காட்டி" என வழங்குகின்றனர். இப்பறவை கூட்டமாய் வாழு மியல்புடையதாகலின் 'இருந்தோட்டுக் கணந்துள்' எனப்பட்டது. இப்பறவை ஆள் வழக்கற்ற இடங்களிலே இருக்கும்; ஒரோவழி யாரே னும் அப்பறவை இருக்குமிடத்திற்கு அண்மையில் வரக்கண்டால் பறந்து கத்தும்; பெரும்பாலும் அங்கு வந்தவர் மறையுங்காறும் விடாது கத்தும்; ஆதலால் கணந்துட் பறவை ஒலித்தால் யாரோ வருகின்றனர் என்று அறிந்து கொள்ளலாம். இச் செய்யுளில் "ஆளறிவுறீஇ" என்றதற்கும் இக் காலத்தார் ஆட்காட்டி என்பதற்கும் உள்ள பொருட் பொருத்தம் உணர்க.

வம்பலர் - ஆறு செல்வோர். வம்பலர் என்னும்
என்றதற்குப் புதியவர் பட்டது.
பொருளும் உண்மையால் ஆறுசெல் வம்பலர்
ஆறு செல்வோராகிய வழிப்போக்கர் என்றபடி.
எனப்

பாலைநிலத்தே வழிப்போவாரும் ஆறலைகள்வர்க்கஞ்சிப் கொடு போதலுண்மையின் வம்பலர் படை என்றாள்.
படை

நிலையாப் பொருட்பிணி என்றது, யாம் செல்லற்க செல்லார் என்பதற்கோர் குறிப்பேதுவாதல் அறிக.
என்னின்

யாம் அப்போது செலவழுங்குவியாது உடம்பட்டிருந்து இப் போது வருந்துதல் பேதைமை ஆகலின், வருந்தற்க என்பது குறிப் பெச்சம்.

கணந்துள் ஆள் அறிவுறீஇ வம்பலர் படை பெயர்க்கும் என்றதும், யாம் நம் ஆற்றாமை அறிவுறீஇ அவர் பிரிவைத் தடுக்கற்பாலேம்; அஃது செயதிலேம் என்று உள்ளுறை யாகுமாறும் உய்த்துணர்க.

கடுங்குரையம் என்பதன்கண், குரை: அசைநிலை; கடியம் என்னும் பொருட்டு. பனியாகிய கடுமையை யுடையேம் என்றவாறு. செல்லாதீம் - செல்லன்மின். மலையுடைக் கானம் என்றது, குறிஞ்சிதிரிந்த பாலை என்பது படகின்றது.

## பாட்டு - ௩௫௧ . தோழி கூற்று

துறை :—தலைமகன் தமர் வரைவொடு வந்தவழி 'நமர் அவர்க்கு வரைவு நேரார் கொல்லோ?' என்று அஞ்சிய தலைமகட்குத் தோழி வரைவு மலிந்தது. அஃதாவது, தலைவன் தலைவியை வரைந்து கோடற் பொருட்டு அவன தமரை மணம்பேச ஏவி

னான்; அவர் மணம்பேச வந்தனர்; அப்பொழுது தலைவி, 'தமர் மறுப்பரோ?' என்று அஞ்சி வருந்தினளாக, அவட்குத் தோழி தமர் வரைவுடம்பட்டமையை அறிவுறீஇயது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'பெருமாட்டி, நமர் தலைவன்தமர்க்கு வரைவுடமபட்டனர் ; யான் மகிழ்ந் தேன்! இவ்வூர் இனி அலர் விளம்புகின்றாள்.

தூற்று தடங்குங்காண்' என ஓகை

### மூலமும் உரையும்

௫௨௫

௩௫௧. வளையோய் உவந்திசின் விரைவுறு
கொடுந்தாள்
அளைவாழ் அலவன் கூருகிர் வரித்த
ஈர்மணல் மலிர்நெறி சிதைய இழுமென
உருமிசைப் புணரி உடைதரும்
துறைவர்க்கு
உரிமை செப்பினர் நமரே விரியலர்ப்
புன்னை ஓங்கிய புலாலஞ் சேரி
இன்னகை ஆயத் தாரோடு
இன்னும் அற்றோஇவ் வழுங்க லூரே.

**—அம்மூவனார்.**

(இ - ள்.) வளையோய் உவந்திசின் - வளையலை அணிந்தோய் யான் மகிழாநின்றேன்; அஃதெற்றுக்கெனின், விரைவு உறு கொடுந்தாள அளைவாழ் அலவன் - விரைதலையுடைய வளைந்த

கால்களையுடைய வளையின்கண் வாழ்கின்ற நண்டு, கூர்
உகிர் வரித்த ஈர் மணல் மலிர் நெறி - தன் கூரிய நகத்தினாலே கீறிய ஈரிய மணலையுடைய நீரொழுகும வழி, சிதைய இழும் என உரும் இசைப் புணரி உடைதரும துறைவர்க்கு-சிதைந்தழியும்படி இழும் என்னும் ஓசையுண்டாக இடியோசை போன்ற முழக்கத்தையுடைய அலைகள உடையாநின்ற கடற்றுறையை யுடைய நந் தலைவர்க்கு, நமர் உரிமை செப்பினர்-நம் சுற்றத்தார் நீ உரியையாந் தன்மையை உடம்பட்டுக் கூறினர் ஆகலான், விரி அலர்ப் புன்னை ஓங்கிய-மேலும், மலர்ந்த பூக்களையுடைய புன்னை
மரஙகள வளர்ந்துயர்ந்த, புலால் அம்சேரி இன்னகை ஆயத்தாரோடு - புலாலுற்றத்தையுடைய சேரியினிடத்தேயுள்ள இனிய சிரிப்பையுடைய மகளிர் குழுக்களோடே, இவ் அழுங்கல் **ஊர்** இன்னும் அற்றோ - இவ் வாரவாரமுடைய ஊர் இனியும் அலர் கூறும் பழைய தன்மையை உடையதாமோ?

**விளக்கம்** :—வளையோய் : விளி. இசின் - அசைநிலை. கூறத்தொடங் கியவுடன் யான் மகிழ்கின்றேன் என்றது, தலைவி தான் கூறப்போவது
மகிழ்ச்சிக்குரிய செய்தியாதலை உணர்ந்து விரைந்து கேட்டற் பொருட்டென்க. விரைதற்கு ஏதுவான கொடுந்தாள் என்க. கொடுமை - ஈண்டு வளைவின்மேற்று. அளை - வளை. அலவன் -

நண்டு.

நண்டு கீறிய நெறியினைப் புணரி அழிக்கும் என்றது, ஊரினர்

தூற்றும் பழித்துயரத்தைத் தலைவன் வரைந்து கொண்டு போக்குவன் என்னும் உள்ளுறையுடைத்தென்க. இழுமென உடைதரும் என்று ஒழியாது உரும் இசைப் புணரி என்றது, தலைவன் இசைக்கருவிகளின் ஆரவாரத்தோடே வந்து வரைவன் என்னும் குறிப்பிற்றென்க.

வரித்தல் - வரிபடக் கீறுதல். அலர்மொழி புண்படுத்தும் தன்மைத்தென்பது தோன்ற அலவன் கூருகிரால் வரித்த நெறி என்றாள்.



உரிமை - தலைவனுக்குக் கிழத்தியாகும் உரிமை உடைமை. செப்புதல் - ஈண்டு உடம்பட்டோதுதல் என்பதுபட நின்றது. இச் சேரி

யினர் மட்டுமே யன்றி இவ்வூர்ப்புன்னையும் அலர் தூற்றும் என்பதுபட 'விரியலர்ப் புன்னை யோங்கிய சேரி', என்றமை கண்டின்புறுக. அலர் தூற்றுவோர் தூற்றுங்கால் இகழ்ந்து நகைத்தலும் உடையராதல் பற்றி, அலர் தூற்றும் அறிவின் மகளிர் என்பாள் 'இன்னகையாயம்'

என்றாள் ; எள்ளல், நகைபிறத்தற் கிடனாதல்பற்றி

என்க.

அற்றோ - அத்தன்மைத்தோ; ஈண்டுச சுட்டு நெஞ்சறிசுட்டென்க. பண்டு அலர் கூறிய தன்மைத்தோ என்றவாறு.

அற்றோ என்னும் வினா அற்றன்று என்பது படநின்றது. இவ்வூரவரும் வாயடங்குவா என்பது குறிப்பு.

இனி

## பாட்டு - ௩௫௨ : தலைவி கூற்று

துறை :—பிரிவிடைத் தோழிக்குக் கிழத்தி மெலிந்து கூறியது. அஃதாவது, தலைவன் பிரிந்துறைந்த காலத்தே ஆற்றாளாகிய தலைவி தோழிக்குத் தன் ஆற்றாமைக் காரணம் தெரித்தோதியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'இச்சிறுபுன் மாலை இத்துணைப் பொல்லாங்குடையதாகும் உண்மையை நம் தலைவரைக் காணப் பெறாத இக்காலத்திலேதான் யான் உணர்கின்றேன்.' என்று கூறுகின்றாள்.

௩௫௨. நெடுநீ ராம்பல் அடைப்புறத் தன்ன
கொடுமென் சிறைய கூருகிர்ப் பறவை
அகலிலைப் பலவின் சாரல் முன்னிப்
பகலுறை முதுமரம் புலம்பப் போகும்
சிறுபுன் மாலை உண்மை
அறிவேன் தோழியவர்க் காணா வூங்கே.

—கடியலூர் உருத்திரங்கண்ணனூர்.[1]

(இ-ள்.) தோழி—, நெடுநீர் ஆம்பல் அடைபுறத்து அன்ன -ஆழ்ந்த நீரின்கண் உள்ள ஆம்பல் இலையின் பின்புறத்தை ஒத்த, கொடுமென் சிறைய கூர் உகிர்ப் பறவை - வளைந்த மெல்லிய

சிறகினையுடையவாகிய கூரிய நகங்களை உடைய

வெளவால்கள்,

அகல் இலைப் பலவின் சாரல் முன்னி - அகன்ற இலைகளையுடைய பலாமரங்களையுடைய மலைச்சாரலை நினைந்து, பகல் உறை முது மரம் புலம்பப்போகும் - தாம் பகற்பொழுதிலே உறைதற்கிடமான பழைய மரம் தனிமையுறும்படி செல்லாநிற்கும், சிறுபுன்

---

(பாடம்) 1. 'கடியலூ ருத்திரனங்கண்ணன்'

மூலமும் உரையும்

௫௨௭

மாலை உண்மை - சிறிய புல்லிய மாலைக்காலம் என்றொன்றுள

தாதலை, அவர்க் காணா ஊங்கு - நந்தலைவரைக் காணப்பெறாத

இக் காலத்தேதான், அறிவேன் - உணர்கின்றேன்.

விளக்கம் :—நெடுமை ஈண்டு ஆழங்குறித்து நின்றது. அடை -

இலை. புறம் - முதுகு. ஈண்டு இலையின் அடிப்பகுதி என்க. ஆம்பலிலை யின் புறம், வெளவாலின் சிறகிற்கு உவமை. கொடுமை - வளைவு. சாரல்-மலைப்பக்கம். முன்னுதல் - நினைத்தல். வெளவால் ஏனைப் பறவை போலாது பகலின்கண் உறைந்து இரவில் இரைதேடும் இயல்புடைய தாகலின், பகலுறை முதுமரத்தைவிட்டுப் பலாமரத்தை நினைந்து மாலைப்பொழுதிலே போயின என்க.

பறவை, பலாவின்பழத்தை நினைந்து தம் உறைபதி தனிப்பப் போகும் என்றது, தன்னைப் புலம்பவிடுத்துப் பொருள் உன்னித் தலை வன் போயினமை கருதிக் கூறியதென்க.

மாலைக்காலம் அவர் உடனுறையும் காலமெல்லாம் இனிதாயிருந் தமையின் அப்பொழுது அதனை அறியாள் ஆயினள் என்க. அம்மாலைப் பொழுது தனித்துறைவார்க்குப் பெரிதும் துன்பந்தரும் என்பதை,

"பனியரும்பிப் பைதல்கொள் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும்."

(குறள்-கஉஉரு) எனவும்,

"காதலர் இல்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும் "

(குறள்-கஉஉச) எனவும் வரும் திருக்குறள்களானறிக. இச் செய்யுளின் கருத்தை,

"மாலைநோய் செய்தல் மணந்தா ரகலாத
காலை யறிந்த திலேன்."

(குறள்-கஉஉசு) எனவரும் திருக்குறளினும் காண்க.

## பாட்டு - நுருரு : தோழி

கூற்று

துறை :—பகற்குறி வந்து ஒழுகும் தலைமகன் வெளிப்பாடஞ்சி இரவுக்குறி நயந்தானது குறிப்பறிந்த தோழி, இரவின் கண் அன்னையது காவலறிந்து பின்னும் பகற்குறியே நன்று அவ் விரவுக் குறியினென்று, பகற்குறியும் இரவுக்குறியும் மறுத்துத் தலைமகன் சிறைப்புறத்தானாக வரைவுகடாயது.

அஃதாவது, பகற்குறி வந்தொழுகுந் தலைவன் அவ்

வொழுக்கம் புறத்தார்க்குப் புலனாம்என்று தானே அஞ்சிய வழித் தோழியை இரவுக்குறி நயக்கும் குறிப்புடையன் ஆயதைத் தோழி அறிந்தனள்; ஒருநாள் தலைவன் சிறைப்புறத்தே வந்து நின்றது கண்டு அவன் வரவுணராதாள் போன்று இரவுக்குறி



பின் இடையூறு தலைவற்குணர்த்துவாள் தலைவியை நோக்கிக் கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, ‘யாம் பகற்

பொழுதிலே சிமையம் உயர்ந்த மலைச்சாரலிலே பாடின் அருவி யாடுதல் இனிது; இரவிலோ நம் அன்னையின் முயக்கத்தூடே

துயிலுதல் மிகவும் இன்னாது காண்' என்று கூறுகின்றாள்.

ஙடுங. ஆர்கலி வெற்பன் மார்புபுணை யாகக்
கோடுயர் நெடுவரைக் கவாஅற் பகலே
பாடின் அருவி ஆடுதல் இனிதே
நிரையிதழ் பொருந்தாக் கண்ணோ

டிரவிற்
பஞ்சி வெண்திரிச் செஞ்சுடர் நல்லிற்
பின்னுவீழ் சிறுபுறந் தழீஇ
அன்னை முயங்கத் துயிலின் னாதே.

—உறையூர் முதுகூற்றனார்.

(இ - ள்.) தோழி—, ஆர்கலி வெற்பன் மார்பு புணையாகக் கோடு உயர்நெடுவரைக் கவாஅன் - நிறைந்த ஆரவாரத்தை யுடைய மலைநாட்டையுடைய தலைவனது மார்பமே தெப்பமாகக் கொண்டு, குவடுகள் உயர்ந்த நெடிய மலையினது தாழ்வரையிலே,
பகல் பாடு இன் அருவி ஆடுதல் இனிது - பகற்பொழுதிலே முழங்குகின்ற ஊன்றின்பமுடைய அருவியிலே ஆடுதல் இனிதாகும், இரவில் - இனி இரவிலோ, பஞ்சி வெண் திரிச் செஞ்சுடர் நல்இல் - பஞ்சாலே திரித்த வெள்ளிய திரியையுடைய செவ்விய விளக்கையுடைய நன்றாகிய இவ்

வில்லின்கண், பின்னு வீழ் சிறுபுறம் தழீஇ - பின்னல் வீழ்ந்து கிடக்கின்ற முதுகினைத் தழுவிக்கொண்டு, அன்னை முயங்க-நம் அன்னை அணையா நிற்ப, நிரை இதழ் பொருந்தாக் கண்ணோடு - நிரல்பட்ட இமைகள் பொருந்தாத விழிகளோடே, துயில் இன்னாது-யாம் துயில்வது மிகவும் துன்பமாம்.

**விளக்கம்**:—ஆர் கலி - முழக்கம். வெற்பன் - குறிஞ்சித் தலைவன். புணை - தெப்பம். நிலையாவிடத்தினும் அவன் மார்பு பற்றுக்கோடாகச் சென்றுடலின், 'மார்பு புணையாக' என்றாள். கோடு - மலைக்குவடு. கவான் - தாழ்வரை. அருவி வீழுங்கால் இசையுண்டாகலான், 'பாடு இன் அருவி' என்றாள். இன்னருவி என்றது, ஊற்றின்பழுமையை குறித்து என்க.

நிரை - நிரல். இதழ் - கண்ணிமை. இமைபொருந்தாத் துயில் என்றது, உறங்காமையை உணர்த்தியபடியாம். அன்னை பெரிதும் ஐயுற்றுக் காவல் செய்கின்றாள் என்பது தோன்றப் 'பஞ்சி வெண்திரிச்

செஞ்சுடர் நல்லில்' என்றாள். இரவுமுழுதும் விளக்கேற்றி வைத்துப் பாதுகாக்கின்றாள் என்பது கருத்து. ஒளிமிக்க பெரிய விளக்கென் பாள், 'பஞ்சி வெண்திரிச் செஞ்சுடர்' என்றாள். இனி வீடும் வலிய கதவுகளும் தாழக்கோலும் சுற்றுச் சுவர்களும் உடையதென்பாள், 'நல்லில்' என்றாள். அன்னையறியாவகை தலைவி புறஞ் செல்ல லாகாமை தோன்றச் 'சிறுபுறந் தழீஇ அன்னை முயங்க' என்றாள். அன்னை துஞ்சாமை தோன்ற முயங்கவென் றொழிந்தாள். இந்த நிலை யின்னைக் குறித்து வருந்தும் வருத்தத்தினும் தலைவிக்குப் பெரிதும் இன்னா நிலை என்பாள், 'துயில் இன்னாது' என்றாள். ஆதலால் வரைந்து கோடலே நன்று என்பது குறிப்பு.

## பாட்டு - நூருசு : தோழி கூற்று

துறை :—பரத்தையிற் பிரிந்து வாயில்வேண்டிச் சென்ற தலைமகற்குத் தோழி வாயில்மறுத்தது. பரத்தையர் கேண்மை கொண்டொழுகிய தலைவன் தலைவியை விரும்பி வந்த பொழுது தோழியைத் தலைவியின் ஊடல் போக்குமாறு இரந்தானாக அவள் குறையேலாது மறுத்துக் கூறியது.

இதன்கண், தோழி தலைவனை நோக்கி,

'பண்டு பாம்புகள் வழங்குந் தெருவிலே இரவின்கண் அஞ்சாது வந்து நீ தலைவிக் குத் தண்ணளிசெய்தனை; நீரின்கண் நீண்டபொழுது ஆடிற் கண்கள் சிவந்துவிடும்; தேனையே பருகுவார்க்கு அத்தேனும், புளிப்பதாகிவிடும்; அங்ஙனமே நீ தலைவியை இப்போது வெறுப்ப வணுகி விட்டனை; ஆயின், அவளை அவள் தந்தையில்லிற் சேர்த்து விடுதி' என்று கடிந்து கூறுகின்றாள்.

நூருசு. நீர்நீ டாடிற் கண்ணுஞ் சிவக்கும்

ஆர்ந்தோர் வாயில் தேனும் புளிக்கும்
தணந்தனை யாயினெம் இல்லுய்த்துக்

கொடுமோ

அந்தண் பொய்கை எந்தை எம்மூர்க்
கடும்பாம்பு வழங்குந் தெருவில்
நடுங்களுர் எவ்வம் களைந்த எம்மே.

—கயத்தூர்கிழார்.

(இ - ள்.) ஐய!, நீர் நீடு ஆடில் கண்ணும் சிவக்கும்-நீரின் கண்ணே நீண்டபொழுது விளையாடில் கண்களும் சிவந்துவிடும், தேனும் நீடு ஆர்ந்தோர் வாயில் புளிக்கும் - இனிப்புடைய தேனை யினும் நெடுநாள் பருகுவோர் வாயின்கண் புளிப்புடையதாகும் ஆதலின் உலகியற்கை இங்ஙனமிருத்தலின், தணந்தனை யாயின்- நீ தலைவியோடே நெடிது உடனுறைந்தமையானே வெறுப்புற்று

கு.—34



அவளைப் பிரிந்தனையாயின், அம் தண் பொய்கை எந்தை எம்

ஊர் - அழகுந் தண்மையுமுடைய நீர்நிலைகள் மிக்க எம் தந்தையினது எம்மூரினிடத்தே, கடும்பாமபு வழங்கும் தெருவில்-கடிய நஞ்சுடைய பாம்புகள் வழங்காநின்ற எம் தெருவின்கண் இரவில் வந்து, நடுங்கு அஞர் எவ்வம் களைந்த எம்- நின்னால் நடுங்குதற்குக் காரணமான மிக்க துன்பம் களையப்பட்ட எம்மை, எம் இல் உய்த்துக் கொடுமோ -எமது வீட்டிலே செலுத்தித் தருவாயாக.

**விளக்கம்**:—தலைவன் தணந்தமைக்கு ஏது உலகியலில் வைத்துக் காட்டுவாள், 'நீர் நீடு ஆடிற் கண்ணும் சிவக்கும், தேனும் ஆர்ந்தோர் வாயிற்புளிக்கும்' என்றாள். நீடு ஆடின் என்றமையால் நீடு ஆர்ந்தோர் என்றும் கூறுக. இவ்வியல்புக் கேற்பவே நீ தலைவியை நெடிது நுகர்ந்து வெறுப்புற்றுத் தணந்தனை என்று விரித்தோதுக. இதனால் ஒருகாலைக் கொருகால் வளரும் மெய்யன்புடைமையயல்லை; வறிய காமமட்டுமே உடைமை; நினது காமம் குறைந்தமையாற் கைவிட்டகலாநின்றனை எனக் குறிப்பான் இகழ்ந்தமை காண்க. "வேண்டாத பெண் தாயோடே" என்னும் வழக்குப்பற்றித் 'தணந்தனையாயின் எம்மில் லுய்த்துக் கொடுமோ' என்றாள். தலைவி தனிவழியே தாய்வீடேகுதல் மரபன்றாகலின், 'அழைத்து வந்த நீயே கொண்டுபோய் விடுக' என்பாள், 'உய்த்துக கொடுமோ' என்றாள்.

நீ அன்புதிரிந்து வறியனாயினை என்பாள், பண்டு அவன் தலைவிபாற் கொண்டிருந்த அன்பை விளக்கும் பொருட்டு; 'எம்மூர்க் கடும்பாம்பு வழங்கும் தெருவில் எவவம் களைந்த எம்மே' என்றாள். மிகச்சிறந்த ஊரையும் தமரையும் நீத்து நின்னையே புகல்புக்கவள் தலைவியென்பாள், 'அந்தண் பொய்கை எந்தை எம்மூர' என்றாள். களைந்த – களையப் பட்ட என்க. கடும்பாம்பு வழங்குந் தெருவில் என்னும் குறிப்பால் இரவின்கண்வந்து என வருவித்தோதுக. கொடுமோ என்பதன் கண் மோ: முன்னிலையசை.

## பாட்டு - கூருரு : தோழி கூற்று

துறை :—இரவுக்குறி வந்த தலைமகற்குத் தோழி நொந்து கூறியது. அஃதாவது, ஏதமிக்க இரவின்கண் தலைவன் வந்தமை கண்ட தோழி, அவன் அங்ஙனம் வந்தமைக்குப் பரிந்து கூறியது.

இதன்கண், தோழி தலைவனை நோக்கி, 'முகில்கள் பரந்து கிடத்தலால் வானமும் காணப்பட்டிலது; யாண்டும் நீர் பரவி ஒழுகலான் நிலமும் தோன்றிற்றில்லை; யாண்டும் பேரிருள் கதுவியுளது; யாவரும் உறங்கும் இத்தகைய இடையிரவின்கண் நீ எவ்வாறு வந்தனையோ! எம்முடைய சிற்றூர் இருக்குமிடத்தைத் தான் இவ்விருளில் எங்ஙனம் அறிந்தனையோ! நீ இங்ஙனம் வருதற்கு யான் வருந்துகின்றேன்' என்று கூறுகின்றாள்.

### மூலமும் உரையும்

ருகூக

டருரு. பெயல்கண் மறைத்தலின் விசும்புகா
ணலையே

நீர்பரந் தொழுகலின் நிலங்கா ணலையே
எல்லை சேறலின் இருள்பெரிது
பட்டன்று
பல்லோர் துஞ்சும் பானாட் கங்குல்
யாங்குவந் தனையோ ஓங்கல் வெற்ப
வேங்கை கமழுமெஞ் சிறுகுடி
யாங்கறிந் தனையோ நோகோ யானே.

—கபிலர்.

(இ - ள்.) ஓங்கல் வெற்ப-உயர்ச்சியையுடைய மலைநாட்டை
டைய பெருமானே, பெயல் கண் மறைத்தலின் விசும்பு
ணலை - மழை இடத்தை மறைத்தலானே வானத்தையும் காண்
ர்றிலை, நீர் பரந்து ஒழுகலின் நிலம் காணலை -
மழைநீர் யாண் பரவி ஓடுதலானே
நிலத்தையும் காண்கின்றிலை, எல்லை
றலின் இருள் பெரிது பட்டன்று -
ஞாயிற்றுமண்டிலம்
ற்றிசையிற் சென்று மறைந்தமையானே இருள் மிகவும்
றிந்தது, பல்லோர் துஞ்சும் பானாள் கங்குல் - உலகிற் பலரும்
லுதற்குக் காரணமான இந்நடு நாளாகிய இரவின் கண், யாங்கு
தனையோ - எவ்வாறு தான் வந்தாயோ!, வேங்கை கமழும்
சிறுகுடி - வேங்கைப்பூ மணம் கமழாநின்ற எமது சிற்
ரை; யாங்கு அறிந்தனையோ - எவ்வாறு தெரிந்துகொண்

யோ! யான் நோகு - யான் உன் வரவுகண்டு வருந்து

றேன்.

விளக்கம்:—பெயல் - முகிலுமாம். கண் - இடம்; கண்ணை மறைத்
ன் எனினுமாம். இரவின்கண் ஆறு செல்வோர் விண்மீன் நிலைகண்டு
யறிந்து சேறலுண்மையின், அவ்விசும்பும் காணப்பட்டிலதே
று வியப்பாள், 'விசும்பு காணலே,' என்றாள். இது திசைகாணல்

மை கூறியவாறும்.

பரந்தொழுகல் அப்பொழுதே மழைபெய்து கொண்டிருத்தலால்
ந்ததென்க. யாண்டும் நீர்பரவி ஓடுதல் என்றது, ஆறு காண்ட
மை கூறிற்று. எல்லை - ஞாயிறு. சென்று மறைதலின் என்க.
ன்று - பட்டது; உண்டாயது. தலைவியும் தானும் தம்போல்வார்

ற் சிலரும் துஞ்சாமையின் சில்லோரன்றிப் பல்லோர் துஞ்சும்
துபடப் பல்லோர் துஞ்சும் என்றாள்; துஞ்சுதல் - துயிலுதல்.
ாள் என்றது, இரவின் நடுயாமத்தை. யாங்கு வந்தனையோ
தனையோ என்பவற்றின்கண் ஓகாரங்கள் அசைநிலை. நோகோ
தன்கண் ஓகாரம் இரக்கங் குறித்து நின்றது. ஏகாரங்கள்: அசை

நாகோ யானே என்றது, இங்ஙனம் வாரற்க எனக் குறிப்பான்
குறி மறுத்து வரைவுகடாயவாறும்.

**௩௬உ** **குறுந்தொகை**

## பாட்டு - ௩௬௩: செவிலி கூற்று

துறை :—மகட்போக்கிய செவிலித்தாய் உரைத்தது.
அஃதாவது, தலைவி தலைவனுடன் போனமை அறிந்த செவிலி, அவள் நிலைக்கு வருந்திக் கூறியது.

இதன் கண், செவிலி, 'அந்தோ! பொற்கலத் தேந்திய பொரிகலந்த பாலையும் மிக்குளதென்று உண்ண மறுப்பாளே! அத்தகையாள் நீரும் நிழலும் அற்ற பாலைநில வழியிலே தலைவனோடே விரைந்து சென்று வெம்பிய பருகுவதற்கு வல்லள் ஆதல் எங்ஙனம்?' கலங்கற் சின்னீரைப் எனத் தனக்குள்ளே வருநதுகின்றாள்.

௩௫௩ நிழலான் றவிந்த நீரில் ஆரிடைக்
கழலோன் காப்பக் கடுகுபு போகி
அறுசுனை மருங்கின் மறுகுபு வெந்த
வெவ்வெங் கலுழி தவ்வெனக் குடிக்கிய
யாங்கு வல்லுநள்கோல் தானே ஏந்திய
செம்பொற் புனைகலத் தம்பொரிக் கலந்த
பாலும் பலவென உண்ணாள்

கோலமை குறுந்தொடித் தளிரன்
னோளே.

—கயமனார்.

(இ - ள்.) கோல் அமை குறுந்தொடித் தளிர் அன்னோள் - திரட்சி அமைந்த குறிய வளையலையுடைய மாந்தளிர்போன்ற நிறமும் மென்மையுமுடைய என்மகள், ஏந்திய செம்பொன் புனை கலத்து அம் பொரிக் கலந்த பாலும்-கையிலேந்திய சிவந்த பொன்னாற் செய்த கலத்தின்கண் உள்ள அழகிய பொரியைக் கலந்த பாலையும், பலவென உண்ணாள் - மிக்கன என்று கூறி உண்ண மறுப்பாளே ! அத்தகையவள், கழலோன் காப்ப - வீரக் கழலணிந்த தன் தலைவன் காத்துச் செல்லாநிற்ப, நிழல் ஆன்று அவிந்த நீர் இல் ஆர் இடை - நிழல் அடங்கி அற்றுப்போன நீர் அற்ற கடத்தற்கரிய பாலையிடத்தே, கடுகுபு போகி - விரைந்து சென்று, அறுசுனை மருங்கின் மறுகுபு வெந்த வெவ்வெங் கலுழி தவ்வெனக் குடிக்கிய - நீர் அற்ற சுனையின்பக்கத்தே முறுகி வெந்தமையானே மிக்க வெப்பமுடைய நீரைத் தவ்வென்னும் ஓசையுண்டாகும்படி பருகுதற்கு, யாங்கு வல்லுநள் - எவ்வாறு வன்மையுடையளாயினள்.

**விளக்கம்:**—நிழல் ஆன்றவிந்த என்புழி ஆன்று என்னும் எச்சம், குறைந்து என்னும் பொருளினின்றது. ஆன்று என்பதற்கு இல்லை

யாகி என்ற பொருளும் உண்டு. "அருவி ஆன்ற அணியில் மாமலை" எனவரும் மதுரைக்காஞ்சி(௩0௬.)யில் அஃதப் பொருட்டாதல் உணர்க.

கழலோன் என்றது, போர் அணிகளுடன் செல்லும் தலைவன் என்பதைக் குறிப்பானுணர்த்தியது. தலைவியை உடன்கொண்டு போங்கால் எதிர்ப்பாருளராயின் அவரை வெல்லற்கு வில் முதலியன கொண்டு சேறல் மரபாகலின் என்க. "வில்லோன் காலன கழலே" என முன்னும் வந்தமையுணர்க. கடுகுபு - கடுகி; விரைந்தென்றபடி.

அறுசுனை - நீர் வறந்த சுனை என்க. வறந்த சுனையினகத்தே ஒருமருங்கென்பாள், 'அறுசுனை மருங்கின்' என்றாள். மருங்கு-பக்கம். மறுகுபு - மறுகி. என்றது வெப்பத்தாற் கொதித்து முறுகி என்றவாறு. வெந்தமையானே மிக்க வெப்பமுடைத்தாகிய கலுழி. வெவ்வெங் கலுழி என்றது வெம்மைமிகுதி குறித்து இரட்டித்து வந்தது. தவ் வென, ஒலிக்குறிப்பு.

கலுழி-கலங்கனீர். குடிக்கிய-குடிக்க. செய்யிய என்னும் வாய் பாட்டு வினையெச்சம். கொல், தான், ஏ - அசைநிலைகள்.

ஏந்திய என்றது செவிலித் தாயர் தங்கையின் ஏந்தி நின்று இரந்து ஊட்டும் பொழுதும் என்பதுபட நின்றது.

செம்பொற்கலமென்றாள், அவள் பிறந்த குடியின் திருவுடைமை தோன்ற. புனை கலம் – வினைத்தொகை. அம்பொரி என்றது, பொரியின் நிறச் சிறப்போதியவாறு. பாலும் என்றதன்கண் உம்மை உயர்வு சிறப்பு. பலவென்பது ஈண்டு எண்ணளவு குறியாது மிகுதிப் பொருள் குறித்து நின்றது. கோல் – திரட்சி. தளிரன்னோள் என்றது, பாலை வழிச் செல்ல வொண்ணாத அவள் மென்மையையும் மேனியையும் குறித்து நின்றது.

## பாட்டு – ௩௨௭ : தோழி கூற்று

துறை :—தோழி, கிழவன் கேட்கும் அண்மையனாகக் கிழத்திக்குச் சொல்லியது. அஃதாவது, களவின்பமே விரும்பி வரைதற் கருத்தின்றி ஒழுகுந் தலைவன், மனைப்படப்பையின் மருங்கே ஒருநாள் வந்து நிற்றலை அறிந்த தோழி, அவன் வரவறியாள் போன்று, அவன் தலைவியின் நிலையினை உணர்ந்து வரைந்து கோடற்பொருட்டுத் தலைவிக்குக் கூறுவாளாய் அவன் கேட்பக் கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, "இற்றைநாள் மெலிந்து கிடக்கும் நின் தோள்கள் பிறரால் நீ நந்தலைவனைக் காண்டற்கு முன்பெல்லாம் 'இவை மேவரத்திரண்டு நல்லனவாயின' என்று பாராட்டப்படும் சொல்லைப் பெறுகின்றன." என்று கூறுகின்றாள்.

நடுஎ. முனிபடர் உழந்த பாடில் உண்கண்
பனிகால் போழ்ந்து பணையெழில்
ஞெகிழ்தோள்



மெல்லிய ஆகலின் மேவரத் திரண்டு
நல்ல என்னுஞ் சொல்லை மன்னிய
ஏனலஞ் சிறுதினை காக்குஞ் சேஎணோன்
ஞெகிழியிற் பெயர்ந்த நெடுநல் யானை
மீன்படு சுடரொளி வெரூஉம்
வான்தோய் வெற்பன் மணவா ஊங்கே.

—கபிலர்.

(இ- ள்.) தோழி—, முனிபடா உழந்த பாடு இல் உண் கண்-வெறுத்தற்குரிய துன்பத்தை நுகர்கின்றமையானே துயில் இல்லையான மையுண்ட கண்களில் உண்டாகிய, பனி கால் போழ்ந்து - துளிகளானே கால் பிளக்கப்பட்டு, பணை யெழில் ஞெகிழ்தோள் மெல்லிய ஆகலின் - தமக்கியல்பாகிய மூங்கில்

போன்ற அழகு குறைந்துபோன நின் தோள்கள் இப்பொழுது மெலிந்தனவாய் விட்டமையானே, ஏனல் அம் சிறுதினை காக்கும் சேஎேன் - தினைவகையினுள் வைத்து அழகிய சிறுதினையை விளைததுக் காவல் செய்யும் பரண்மேலிருந்த குறவனுடைய, ஞெகிழியில் பெயர்ந்த நெடு நல் யானை-கொள்ளியினாலே அஞ்சிச் சென்ற நெடிய நல்ல யானை, மீன்படு சுடர் ஒளி வெரூஉம்-பின்னர் விண்மீன் வீழ்தலானே உண்டாகிய மிக்க ஒளியை அஞ்சா நிற்றற்கிடமான, வான் தோய் வெற்பன் - வானத்தைத் தீண்ட வுயர்ந்த மலையையுடைய நந்தலைவன், மணவா ஊங்கு - நின்னை மணத்தற்கு முன்பெல்லாம், மேவரத் திரண்டு நல்ல என்னும் சொல்லை மன்னிய - கண்டார்க்கு விருப்பம் வரும்படி பருத்து நல்லனவாயிருந்தன என்று பிறர் கூறும் சொற்களை அடையா நின்றன.

**விளக்கம்:** —நின் தோள்கள் மிகவும் மெலிந்தமையானே அவையிற் றைக் கண்டோர், இவை இவள் தலைவனை மணக்குமுன்பெல்லாம் மேவரத்திரண்டு நல்ல வாயின என்று இரங்கிப் பாராட்டும் சொல்லைப் பெறுநின்றன என்றாள் என்க. இஃதென் சொல்லியவாறோ எனின்,

பண்டு செல்வனாயிருந்த ஒருவன் அதனை யிழந்து நல்கூர்ந்தவழி அவனைக் கண்டோர், 'ஆ! இவன் பண்டு பெருஞ்செல்வன் கண்டீர்' என்று இரங்கிப் பாராட்டப்படுமாறு போல, இவள் தோள்மெலிவு பிறர் அவற்றின் பழைமை நினைந்து பாராட்ட ஏதுவாயிற்று என்றவாறு. இதனால் அவள் மெலிவுகண்டு ஊரவர் அலர்தூற்றுதலும் அவள் பெரிதும் மெலிந்து போனமையும் தலைவற்குக் குறிப்பான் உணர்த்தப் பட்டமை அறிக.

களவொழுக்கத்தால் இவள் வேறுபாடு தீராது ஆகலின், விரைவின் வரைந்து கொள்ளலே நன்றென்று தலைவனுக்குக் குறிப்பானுணர்த்தல் இதன் பயன் எனக.

## மூலமும் உரையும்

௫௯௫

முனிபடர்-வாழ்வினை வெறுத்தற்குக் காரணமான துன்பம். பாடு-துயில். கால் போழ்தல் - கால் கொண்டொழுகுதல். நீர்த்துளிகள் தோள்களில் வீழ்ந்து கால் கொண்டு ஓடின எனக. கால்-வாய்க்கால். கால் போறலிற் கால் என்றாள். கால் என்றதற் கேற்பப் போழ்ந்தென் னும் வினை பெய்துரைக்கப்பட்டது. போழ்தல் - பிளத்தல்.

பணை எழில்-மூங்கிலை ஒத்த அழகு. எழிலை நெகிழவிட்ட தோள் கள் எனக. மேவருதல் - விருப்பம் வருதல். கண்டார்க்கென ஒரு சொல் வருவித்துக் கொள்க. தினை பலவகைப் படுதலின் அவையிற் றுள் மிகச் சிறிய தினை என்பாள், 'ஏனலஞ் சிறுதினை' என்றாள்; ஏன லுள் வைத்து அழகிய சிறியதினை எனக. ஏனல் - தினை.

தினைகாக்கும் குறவன் பரண்மேலிருத்தலாற் சேணோன் எனப்பட்டான். பரண்மேலிருந்து யானை கடியும் பொருட்டுச் சேணோனாற் கொளுத்தப்பட்ட ஞெகிழியென்க. விண்-விண்மீன். மிக்க ஒளி என்பாள், 'சுடரொளி' என்றாள்.

ஞெகிழிக்கு அஞ்சிய யானை மீன்படு சுடரை வெரூஉம் என்றது, களவினகண்ணே நன்மைதமாக்கள்ஞ்சிய தலைவன் அவர்பால வரைவுடன் சேறற்கும் அஞ்சி வரைவு நீட்டிப்பான் ஆயினன் தோற்றி நின்ற துணர்க

என்னும் உள்ளுறை

## பாட்டு - ௩௫௮ : தோழி கூற்று

துறை —தலைமகன் பிரிவிடைக் கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது. அஃதாவது, தலைவன் பிரிந்த காலத்தே பெரிதும் வருந்திய தலைவிக்குத் தோழி பருவவரவு காட்டித் 'தலைவன் விரைவில் மீண்டுவருவன் வருந்தற்க!' என வற்புறுத்திக் கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'நங்காய் பேதுறல்! நின்படர் சேணீங்க யாம வருவேம்' என்று நங் தலைவர் குறித்துச் சென்ற பருவமும் இதுவே என்று, பல்லான் கோவலர் கண்ணி முல்லை முகையும் நமக்குக் கூறுகின்றன காண்' என்று கூறுகின்றாள்.

௩௨௪. வீங்கிழை நெகிழ விம்மி யீங்கே
எறிகண் பேதுற லாய்கோ டிட்டுச்
சுவர்வாய் பற்றுநின் படர்சே ணீங்க
வருவேம் என்ற பருவம் உதுக்காண்
தனியோர் இரங்கும் பனிகூர் மாலைப்
பல்லான் கோவலர் கண்ணிச்
சொல்லுப அன்ன முல்லைமென்
முகையே.

—கொற்றனர்.



(இ-ள்.) தோழி—, வீங்கு இழை நெகிழ

விம்மி ஈங்கே

எறிகண் பேதுறல் - செறிந்த அணிகலன்கள் நெகிழும்படி அழுது இவ்வாறு நீர்த்துளியுதிர்க்கும் கண்களோடே மயங்காதேகொள், ஆய் கோடிட்டுச் சுவர் வாய் பற்றும் நின்படர் - ஆராய்ந்து காண்டற்குரிய கோடுகளைக் கீறிச் சுவரிடத்தே பற்றிநிற்றற்குக் காரணமான நினது துன்பம், சேண் நீங்க வருவேம் - தூரியவிடத்தே நீங்கி யொழியும்படி யாம் மீண்டு வருவேம், என்ற பருவம்

உதுக்காண் - என்று நமக்குத் தலைவர் பண்டு குறிப்பிட்ட கார்ப் பருவமும் இதுவே காண், முல்லை மென் முகை - இப்பருவத்தே தோன்றுதற்குரிய முல்லையினது மெல்லிய அரும்புகள், தனியோர் இரங்கும் பனிகூர் மாலை - தலைவரைப் பிரிந்து தனித்துறையும் மகளிர் இரங்குதற்குக் காரணமான குளிர் மிகுதியையுடைய மாலைப்பொழுதில், பல் ஆன் கோவலர் கண்ணி - பலவாகிய ஆன்களையுடைய இடையர்களது தலையிற் சூடப்பட்ட கண்ணியின் கண் இருந்து, சொல்லுப அன்ன - நமக்கு இப்பருவ வரவினைக் கூறுவ போன்றன.

**விளக்கம்:**—விம்முதல்-அழுகை குறித்து நின்றது. அழுகை உடல் மெலிவிற்குக் காரணமாதல் பற்றி, 'இழை நெகிழ விம்மி' என்றாள். ஈங்கு என்றது, இடமுணர்த்தாது பண்புணர்த்தி நின்றது. எறிகண்-வினைத்தொகை. துளி எறியும் கண் என்க. பேதுறல் - அல்லீற்று வியங்கோள் எதிர் மறைவினைமுற்று; "மகனெனல்" என்புழிப்போல. கணவனைப் பிரிந்துறையும் மகளிர், கணவன் வருவல் எனக் கூறிச் சென்ற நாட்களைச் சுவரிற் கோடிட்டு நாடோறும் இன்னும் எத்துணை நாள்கள் உள என, ஒற்றி, ஆராய்தல் மரபு; இதனை,

> "வாளற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
> நாள்ஒற்றித் தேய்ந்த விரல்."

(குறள். கஉசுக) எனவருந் திருக்குறளானும் அறிக.

ஆய்கோடு - ஆராயப்படும் கோடென்க. வருநாள் அறிதற் பொருட்டு இடையறாது சுவர் ஒற்றி நிற்றலால், 'சுவர்வாய் பற்றும் நின்படர்' என்றாள். வீங்கிழை என்பது தொடங்கி உதுக்காண் என்னுந்துணையும் முல்லை சொல்லுவன வாகக்கொள்ளினும் அமையும். இங்ஙனம் கோடற்கு, நெகிழ வீங்கி ஈங்கே பேதுறல் நின் படர் நீங்க வருவேம் என்ற பருவம் உதுக்காண் எனக் கண்ணிமுல்லை முகை சொல்லுப அன்ன என இயைபு காண்க.

தலைவர் வருவேம் என்ற பருவம் என வருவித்தோதுக. கண்ணியின்கண் இருந்து சொல்லுப அன்ன என்க.

ஆதலால் தலைவர் விரைந்து மீள்வர் என்பது குறிப்பெச்சம்.

கண்ணி - தலையிற் சூடும் மாலை. ஆயர்கள் கார்காலத்தே முல்லைக் கண்ணி சூடுதல் வழக்கம். இதனை "முல்லைக்கண்ணிப் பல்லான் கோவலர்" (பதிற்-உக. உ0) எனப் பிறசான்றோர் கூறுமாற்றானும் உணர்க.

மூலமும் உரையும்

ருஙஎ

## பாட்டு - ருருக : தோழி கூற்று

துறை :—பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகன் வாயில்

வேண்டிப்பெறாது தானே புக்குக் கூடியதுகண்டு தோழி பாணற்குச் சொல்லியது. அஃதாவது, பரத்தையர் இல்லிற்குச் சென்றுவந்த தலைவன் வாயில் வேண்டாது தானே சென்று தலைவியை அளவளாவிய பொழுது தலைவி ஊடல் தீர்ந்தமைக்குக் காரணம் இஃதெனத் தோழி பாணனுக்குக் கூறியது.

இதன்கண், தோழி பாணனை நோக்கி, 'பாணனே கேட்பாயாக, நம்தலைவன் தலைவியின் படுக்கையாகிய நறும்பூஞ் சேக்கைக்கு ஆற்றாமையே வாயிலாகச் சென்று நெட்டுயிர்ப் பெறிந்து ஆண்டுத் துயின்ற தன் மகனை நகையாலே தழுவிக் கொண்டனன்; நந்தலைவியோ தலைவனைப் பின்னர் வாய்வாளாது தழுவிக்கொள்வாளாயினள்; இச்செயல் அவளது சிறந்த பண்புடைமையை விளக்குகின்றது' என்று கூறுகின்றாள்.

நஉகூ. கண்டிசிற் பாண பண்புடைத் தம்ம
மாலை விரிந்த பசுவெண் ணிலவிற்
குறுங்கால் கட்டில் நறும்பூஞ் சேக்கைப்
பள்ளி யானையின் உயிர்த்தனன் நசையிற்
புதல்வற் றழீஇயினன் விறலவன்
புதல்வன் தாயவன் புறங்கவைஇ
யினளே.

—பேயனார்.

(இ - ள்.) பாண—, விறலவன் - வெற்றியையுடைய நம்
தலைவன், மாலை விரிந்த பசு வெண்ணிலவில் - மாலைப்பொழுதின்கண்ணே பரந்த பசிய வெள்ளிய நிலவொளியில், குறுங்கால் கட்டில் நறும்பூஞ் சேக்கை குறிய கால்களையுடைய கட்டிலின்கண் பரப்பப்பட்ட நறிய பூக்களாலாகிய படுக்கையிற்
படுத்து, பள்ளி யானையின் உயிர்த்தனன் - தனது ஆற்றுமையானே படுக்கைகொண்ட யானையைப்போல நெட்டுயிர்ப்பெறிந்தவனாய், நசையில் புதல்வன் தழீஇயினன் - தனது விருப்பத் தானே தன் மகனைத்தழுவிக் கிடந்தானாக, புதல்வன் தாய் அவன் புறங்கவைஇயினள் - அம் மகவின் தாயாகிய நம்தலைவியோ அத் தலைவனுடைய புறத்தைத் தழுவிக்கொண்டனள், கண்டிசின் - இந்நிகழ்ச்சியை நீயும் காண்பாயாக, பண்புடைத்து - இந்நிகழ்ச்சி சால அழகிதாம்.

விளக்கம் :—கண்டிசின் - காண்பாயாக. இசின் - அசைநிலை. அம்ம : வியப்பின்கண் வந்தது. பண்பு - இல்வாழ்க்கையின் உயர்ந்த பண்

பாகிய பேரன்புடைமை. என்னை ? அன்பும் அறனும் இல்வாழ்க்கையின் பண்பும் பயனும் எனச் சான்றோர் கூறுதலான் என்க.

தோழியும் பாணனும் அகம்புகன் மரபின் வாயில்களாவார். பரத்தையிற் பிரிந்த தலைவன்பால் தலைவி பெரிதும் ஊடியிருந்தமை அவர்கள் நன்கறிவராகலான், அவள் ஊடல் போர்த்தற்குத் தம்மை இரப்பன் என்று எண்ணியிருந்தனர். தலைவன் மீண்டு வந்தவுடன் தலைவியைக் காண்டல்வேட்கை மிக்கு ஆற்றாமையே வாயிலாய்ச் சென்று உயிர்ப்பெறிந்து புதல்வனைத் தழுவியபொழுது அன்புமிக்க தலைவியும் தன்னகத்தே அடங்கியிருந்த அன்பு பொங்கி எழுதலானே ஆற்றாமையே வாயிலாய் வாய்வாளாது புக்குத் தலைவனைத் தழுவிக் கொண்டனள். சிறியன சிந்தியாத தலைவியின் அன்புப் பெருக்கத்தைப் பாராட்டி வாயில்கள் தம்முட் கூறியது இஃதென்க.

அன்புப்பெருக்கத்தானே இல்லத்தின்கண் நிகழும் இக் காட்சியை இவ்வுலகம் பெறும் என இந்நல்லிசைப் புலவர் இந்நூலில் மற்றொரு செய்யுளிற் பாராட்டியுள்ளனர்.

அன்பினது வெற்றியைப் பெற்றமை
தோன்ற விறலவன்

என்றாள். பள்ளியானை - படுக்கைகொண்டயானை என்க. யானை படுத்தவுடன் நெட்டுயிர்ப்பெறியும் இயல்புடையது. உயிர்த்தனனாய்ப் புதல்வற் றழீஇயினன் என்க. தலைவன் புதல்வற் றழீஇயிருத்தலால், தலைவி புறந்தழீஇயினள். புறந்தழுவுதல் முதுகு, தன் மார்போடே பொருந்த அணைத்தல்.

## பாட்டு - ௩௨௦ : தலைவி கூற்று

துறை :—தலைமகன் சிறைப்புறத்தானாக வெறியஞ்சிய தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைவி சொல்லியது. அஃதாவது, தலைவன் கேட்கும் அண்மையனாய் வந்து நின்றமை கண்ட தலைவி, தமர் வெறியாடுதற்கெண்ணியிருப்பதனையும், அதற்குத் தான் அஞ்சுதலையும் அவனுக்குணர்த்தக் கருதித தோழிக்குக் கூறுவாளாய் அவன் கேட்பக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, "இன்று வெறி யாட்டெடுக்கக் கருதியிருக்கின்ற நம் அன்னை, எனக்குற்ற வேறுபாடு 'தெய்வத்தால் தீரும்' என்று வேலன் கூறியது பொய்யாதலை அறிந்துகொள்ளும் பொருட்டுத் தலைவன் வாராமையானே யாம பெரிதும துன்பமுழப்பேமாயினும் இன்றிரவுமட்டும் அவன் ஈண்டு வாராதிருப்பின் நன்று" என்று கூறுகின்றாள்.

௩௪௦. வெறியென உணர்ந்த வேலனேய்மருந்
தறியா ளுகுதல் அன்னை காணிய
அரும்படர் எவ்வம் இன்றுநாம்
உழப்பினும்
வாரற்க தில்ல தோழி சாரற்

பிடிக்கை அன்ன பெருங்குரல் ஏனல்
உண்கிளி கடியும் கொடிச்சிகைக் குளிரே சிலம்பிற்
சிலம்புஞ் சோலை
இலங்குமலை நாடன் இரவி னானே.

—மதுரை ஈழத்துப் பூதன்றேவனார்.

(இ - ள்.) தோழி-, அரும் படர் எவ்வம் இன்று நாம் உழப்பினும்-பொறுததற்கரிய நினைவானுண்டாகிய துன்பத்தை இன்று யாம் நுகர்ந்தாலும், சாரல் பிடிக்கை அன்ன பெருங் குரல் ஏனல் - மலைப்பக்கத்தேயுள்ள பெண்யானையினது கையை யொத்த பெரிய கதிரையுடைய தினையை, உண் கிளி கடியும் கொடிச்சி கைக்குளிர் - தின்னுகின்ற கிளிகளை ஓட்டுகின்ற குறமகளின் கையின்கண்ணதாகிய குளிர், சிலம்பில் சிலம்புஞ்சோலை- பக்கமலைகளிலே எதிரொலி செய்யும் சோலைகளையுடைய, இலங்கு மலை நாடன் - விளங்குகின்ற மலைநாட்டையுடைய நம்தலைவன், வெறி என உணர்ந்த வேலன -என் நோய்க்கு மருந்தாவது வெறி யாட்டெடுத்தலே என்று கருதிய வேலன், நோய் மருந்து அறி யான்

ஆகுதல்-எனக்குற்ற நோயின் காரணத்தையும் அது தீரும் மருந்தையும் அறியாளவதனை, அன்னை காணிய - நம அன்னை உணர்ந்து கொள்ளும் பொருட்டு, இரவினன் வாரற்க தில் - இரவுக்குறியின்கண் இவண் வாராதொழிக, இஃது என் விருப்பம்

விளக்கம் :—எண்டு அன்னை என்றது, செவிலித்தாயை. தலைவி

யுற்ற நோய்க்கு வெறியாடல் மருந்தாம் என்று தனது மடமையாலே கருதிய வேலன் என்றவாறு கொடிச்சி கைக்குளிரினின்றும் எழும் ஒலி சிலம்பினின்று எழும் ஒலிபோலத்தோன்றும் நாடன் என்றது, தனது மார்பு தர வந்த நோய் தெய்வநதர வந்ததெனப் பிறர் கருது தற்குக் காரணமான தலைவன் என்னும் உள்ளுறை தோற்றிற்று என்க.

இற்றையிரவில் அன்னை வெறியாட்டெடுப்பாள்; நம்பாற் றலைவன் வந்தால் நம் வேறுபாடு சிறிது அகலும்; நாளை நம் வேறுபாடகன் றமை காணுந் தாய் வெறியாட்டே என் நோய்க்கு மருந்தென உணர்ந்து வேலனைப் பாராட்டுவாள்; ஆகலின், நந்தலைவன் இன்று வாரானுயின் நாம் துன்பமுழத்தலானே இன்னும் வேறுபாடுமிக்குத் தோன்றும். நம்மைக்காணுந் தாய் வேலன் இந்நோய்க்கு மருந்தறி யான் என்று அறிவாள். அங்ஙனம் அறிதற்பொருட்டு இரவில் தலைவன் வாராதிருத்தல் நன்றென்றாள் என விரித்தோதுக.

நோய்தீர்ப்பதெல்லாம் மருந்தேயாகலின் வெறியும் மருந்து எனப்பட்டது. இதனுல் களவொழுக்கத்தானே தன் வேறுபாடு நீங்காமையும், தாய் முதலியோர் வெறியாட்டெடுக்க எண்ணியுளதனை யும், தலைவி தலைவற்குக் குறிப்பான் உணர்த்தினமை உணர்க. இதனுற் றலைவற்குச் சூழச்சி பிறந்து வரையமுயலுதல் பயன் என்க.

படர் - நினைந்து துன்புறுதல். எவ்வம் எனப் பின்வருதலின்,
படர் என்றது நினைவு என்னும் தற்பொருட்டு மாத்திரையாய் நின்றது.
குளிர் - கிளிகடி கருவி. இரவினன்: வேற்றுமைமயக்கம்.

## பாட்டு - ருகூரு : தலைவி கூற்று

துறை :—வரைவுமலிந்தவழித் தோழி 'நன்காற்றினாய்' என்றாட்குக் கிழத்தி சொல்லியது. அஃதாவது, வரைவுக் குரியன நிகழாநிற்பத் தோழி தலைவியை நோக்கி 'நீ இதுகாறும் தலைவன் பிரிவினை நன்றாக ஆற்றியிருந்தனை' என்று பாராட்டினாட்குத் தலைவி, தான் ஆற்றியிருந்தமைக்கு ஏதுக்கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'யான் அவர் பிரிந்திருந்த காலமெல்லாம் அவருடைய மலையினின்று வந்த காந்தளை மனையயலே நட்டு வளர்த்து, அதனை மெல்லிலை
குழைய முயங்குமாற்றானே ஆற்றவல்லேன் ஆயினேன்;
செயலைக் கடிந்திலாத நம்மன்னை வாழ்க!' என்கின்றாள்.
இச்

௩௯௧. அம்ம வாழி தோழி அன்னைக்
குயர்நிலை உலகமுஞ் சிறிதால் அவர்மலை
மாலைப் பெய்த மணங்கமழ் உந்தியொடு
காலை வந்த காந்தள் முழுமுதல்
மெல்லிலை குழைய முயங்கலும்
இல்லுய்த்து நடுதலுங் கடியா தோளே.

—**கபிலர்.**

(இ - ள்.) அம்ம வாழி தோழி-தோழி யான் கூறுவதனைக் கேட்பாயாக, அவர்மலை மாலைப் பெய்த மணம் கமழ் உந்தியொடு - நம் தலைவருடைய மலையின் கண்ணே மாலைப்பொழுதிலே பெய்த மழையானே உண்டாகிய மணம் கமழாநின்ற வெள்ளத்தோடே, காலைவந்த காந்தள் முழுமுதல் - மறுநாட்காலைப் பொழுதிலே நம்மனையருகே யாற்றில் மிதந்து வந்த காந்தளாகிய முழுச் செடியினை, மெல்இலை குழைய முயங்கலும் - அதன் மெல்லிய இலைகள் குழையும்படி யான் தழுவுதலையும், இல் உய்த்து நடுதலும் கடியாதோள் அன்னைக்கு - நமது வீட்டிற்கொணர்ந்து அதனை யான் நட்டு வளர்த்தலையும்

விலக்கா திருந்தவளாகிய நம்

அன்னையின் நன்றிக்குக் கைமாறு கருதுங்கால், உயர்நிலை உலகமும் சிறிது - உயர்ந்த நிலையினையுடைய வானவர் உலகமும் சிறிதாகும்.

**விளக்கம்** :—அம்ம - கேட்பித்தற்கண் வந்தது. வாழி, அசை நிலை. அவர் என்னும் சுட்டு, நெஞ்சறி சுட்டு. உயர்நிலை யுலகம் - வானுலகம்.

## மூலமும் உரையும்

௩௬௪

உலகமும் என்றதன்கண் உம்மை உயர்வுசிறப்பு. மலையிடத்தே பல்வேறு மலர்களும் உண்மையின் அதன்கட் பெய்த மழையினாற் பெருகிய நீர் மணங் கமழ்வதாயிற் றென்க. உந்தி - வெள்ளம். எதிர்ப்பட்ட பொருள்களை உந்திச் சேறலான் இஃதேதுப் பெயர் போலும். இஃதிப் பொருட்டாதலை, பிங்கலந்தையினும் (௩௪௯௯) காண்க.

மணங்கமழ் உந்தி என்றது, அதன்கண் துளைந்தாடிய தலைவியின் விருப்பந் தோன்ற நின்றது. என்னை? அதுவும் அவர்மலைநீர் ஆகலான் என்க. எனவே ஆற்றியிருந்தமைக்கு இதனானும் ஓரேதுக் கூறியவாறாயிற்று. அவ்வெள்ளம் அவர் மலைக்காந்தளை இல்லுய்த்து நடுதற்குத் தகுதியாக வேரோடும் கிழங்கோடும் இலைகளோடும் கெடாது கொணர்ந்ததென்பது தோன்றக் 'காந்தள் முழுமுதல்' என்றாள்.

அன்னை இச் செயலைக் கடிந்திருப்பளேல் யான் ஆற்றாமையானே இறந்துபடுவேன். தான் கடியாமை வாயிலாய் அவள் என் உயிர்தந்த உதவி செய்தவளாயினாள். காலத்தாற் செய்த இந்நன்றிக்கு இவ்வையகமே யன்றி வானகமும் கைம்மாறுதல் செல்லாதென்பாள், 'உயர்நிலை உலகமும் சிறி'தென்றாள்.

அவர் மலையினது காந்தளானே யான் ஆற்றினேன் காண் என்பது குறிப் பெச்சம்.

## பாட்டு - ௩௯௨ : தோழி கூற்று

துறை :—வெறிவிலக்கித் தோழி அறத்தொடு நின்றது. அஃதாவது, இற்செறித்தலானே தலைவனைக் காணப் பெறாது மெலிந்த தலைவியின் வேறுபாடுகண்டு வருந்திய செவிலி, வேலனை வினயவிடத்து அவன் 'இது தெய்வத்தனுய' தென்றான், அந்நோய்க்குத் தீர்வாகச் செவிலி வெறியாட்டெடுத்த பொழுது தோழி குறிப்பாக வெறியாடலை விலக்கித் தலைவி கற்புக் கடம் பூண்டமையைச் செவிலிக்குணர்த்தியது.

இதன்கண், தோழி வெறியாடும் வேலனை நோக்கி, 'முது வாய் வேல! யான் நின்னை ஒன்று வினவுவேன் ; சினவாதே கொள் ! தலைவியின் நோய்க்குத் தீர்வாக நீ இவண் மடை கொடுத்து மறிகொன்று வணங்காநின்றனை ! நந் தலைவியை அணங்கிய மாமலைச்சிலம்பன் அகலமும் நீ கொடுக்கும் பலி யுண்ணுமோ ? கூறுதி !' என்கின்றாள்.

௩௬௨. முருகயர்ந் துவந்த முதுவாய் வேல
சினவ லோம்புமதி வினவுவ துடையேன்
பல்வே றுருவிற் சில்லவிழ் மடையோடு
சிறுமறி கொன்றிவண் நறுநுதல் நீவி
வணங்கினை கொடுத்தி யாயின் அணங்கிய



விண்தோய் மாமலைச் சிலம்பன்
ஒண்தார் அகலமும் உண்ணுமோ பலியே.

**—வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தனர்.**

(இ - ள்.) முருகு அயர்ந்து உவந்த முதுவாய் வேல - முருகனை வழிபட்டு மகிழ்ந்த அறிவு வாய்த்தலையுடைய வேலனே. வினவுவது உடையேன் - நின்னைக் கேட்பது ஒன்றுடையேன், சினவல் ஓம்புமதி - அதனைக் கேட்டதற்காக என்னைச் சினத் தலைப் பரிகரிப்பாயாக, பல்வேறு உருவின் சில் அவிழ் மடையொடு - பலவாக வேறுபட்ட நிறத்தையுடைய சில சோற்றையுடைய பலியோடே, சிறுமறி கொன்று இவள்

நறுநுதல் நீவி - இளைய ஆட்டினைக்கொன்று அதன் குருதி தோய்ந்த மண்ணை இத் தலைவியினுடைய நறிய நுதலிலே தடவி, வணங்கினை கொடுத்தியாயின் - தெய்வம் பரவினையாய்ப் பலி யாகக் கொடுப்பாயாயின், அணங்கிய விண்தோய் மாமலைச் சிலம்பன் - இவளை வருத்திய வானத்தை அளாவிய பெரிய மலைகளை யுடைய தலைவனது, ஒண் தார் அகலமும் பலி உண்ணுமோ - ஒள்ளிய மாலையை அணிந்த மார்பமும் அப்பலியை ஏற்று உண்ணுமோ கூறுக.

விளக்கம் :—முருகு - முருகக்கடவுள் அயர்தல் - வழிபடுதல். முருகயர்ந்து வந்த எனக் கண்ணழித்து வழிமுறை வழிமுறை முருகனை வழிபட்டு வந்தமையானே என முதுவாய்க்கு ஏதுவாக்கினுமாம். ஈண்டு முதுவாய் வேலன் என்றது இகழ்ச்சிக் குறிப்பு. முதுவாய் - அறிவு வாய்த்தலைபுடைய; முது - அறிவு. இஃதிப் பொருட்டாதலை. "முனிவிகந்திருந்த முதுவாய் இரவல." (சப) எனவரும் சிறுபாணாற் றுப் படையில் நச்சினார்க் கினியர் உரையானும் உணர்க. சினவல் - சினத்தல். ஓம்புதல் - வாராமற் காத்தல் என்க. ஓம்புமதி : மதி, முன்னிலை அசை. வினவுவது - வினவற்பாலதொன்று. மடை-தெய்வத்திற் கிடும் சோற்றுப்பலி. அது பன்னிறமுடைத்தாகலின் 'பல்வேறு உருவின் மடை' என்றாள். சில்அவிழ் - சிலவாகிய சோறு. சிறுமறி எனறது, அருளின்றித் தகாது செய்தனை என்பதுபட நின்றது. வெறியாடுங்கால் மறிக் குருதி தோய்ந்த மண்ணை நோயுற்ற மகளிர் நுதலினீவுதல் வழக்கம். இதனை,

"வாணுதலின், மன்றி லரிந்த மறியின் குருதியின்
மண்ணும் அள்ளிச்
சென்றொரு வேலர்கை தீண்ட என் செய்தது
தீவினையே." எனப் பிறர் கூறுமாற்றானும் உணர்க.
(அம்பிகா-உ௬எ)

சிலம்பன் என்றது, குறிஞ்சிநிலத் தலைவன் நின்றது.

என்னுந் துணையாய்

இதனால், தலைவி நோய்க்குக் காரணம் ஒரு தலைவன் மார்பேயாம்; தெய்வமன்று என்பதைச் செவிலிக்குக் குறிப்பான் உணர்த்தப்பட்டமை உணர்க.

## மூலமும் உரையும்

௫௪௩

## பாட்டு - ௩௬௩ : தோழி கூற்று

துறை :—பிரிவுணர்த்தப்பட்ட தோழி கிழவற்குச் சொல்லியது. அஃதாவது, தலைவன் பிரிந்து செல்லக்கருதிய தன் கருத்தைத் தோழிக்குணர்த்த, அவள் 'நீ பிரிதல் மிகவும் இன்னாமையைத் தருவது' என்று செலவழுங்குவித்தது.

இதன்கண், தோழி தலைவனை நோக்கி, 'பெருமானே! இன்னாதாகிய அரிய பாலைநிலத்திலே இனிய துணையைப் பிரிந்து செல்லுதல் நினக்கு இனியதாமோ?' என்று கூறுகின்றாள்.

௩௪௩. கண்ணி மருப்பின் அண்ணல்நல் லேறு
செங்கோற் பதவின் வார்குரல் கறிக்கும்
மடக்கண் வரையா நோக்கிவெய் துற்றுப்
புல்லரை உகாஅய் வரிநிழல் வதியும்
இன்னா அருஞ்சுரம் இறத்தல்
இனிதோ பெரும இன்றுணைப் பிரிந்தே.

—செல்லூர்க் கொற்றனார்.

(இ - ள்.) பெரும - பெருமானே, இன் துணைப் பிரிந்து - இனிய காதலியைப் பிரிந்து, கண்ணி மருப்பின் அண்ணல் நல் ஏறு - கண்ணி போன்று வளைந்த கொம்பினையுடைய தலைமையையுடைய நல்ல எருது, செங்கோல் பதவின் வார் குரல் கறிக்கும்- சிவந்த தண்டையுடைய அறுகம்புல்லின் நீண்ட கதிரை மேயாநின்ற, மடக்கண் வரை ஆ நோக்கி - மடப்பமுடைய மலை ஆவினைக்கண்டு, வெய்துற்று - பெருமூச்சுவிட்டு, புல்அரை உகாஅய் வரிநிழல் வதியும் - புற்கென்ற

அடியினையுடைய உகாய்
மரத்தினது நிரம்பா நிழலிலே தங்குதற்குக் காரணமான, இன்ஞ அருஞ்சுரம் இறத்தல் - துன்பமுடைய கடத்தற்கரிய சுரததைக் கடந்து போதல், இனிதோ - நினக்கு இனியதாகுமோ ?

**விளக்கம்** . —கண்ணி - ஏற்றின் வளைந்த கொம்பிற்கு உவமை.

கண்ணி - குறவர்கள் விலங்குபடுக்கும் ஒருவகைக் கருவி. பதவு-அறுகம் புல். செங்கோல் - சிவந்த தண்டு. வார் குரல் - நீண்ட கதிர். கறித்தல்- கடித்துத்தின்னல். உகாய் - ஒருவகை மரம். நீரின்மையால் **திரங்கிய** அடியை உடைமையின் ' புல்அரை ' என்றாள்.

இனிக் கண்ணி மருப்பின் அண்ணல் நல்லேறு என்றது, முல்லை நிலத்துக் கோவலரானே மாலை சூட்டிவிடப்பட்ட நல்ல காளை பாலை நிலத்தே சென்றதாக, ஆண்டு யாண்டும் புல்காணப் பெறாது ஓரிடத்தே மரையாவானே மேயப்படும் அறுகம்புல்லைக்கண்டு அவ்வாவிற்கஞ்சி ஆண்டுச் செல்லாது உகாய் நிழலிலே வதியும் எனினுமாம். ஏற்றையும் மலையெருதென்பாருமுளர். மலையெருது மரையானைக்கண்டு வெய்



துற்றகன்றதென்றல் பொருந்தாமை உணர்க. இதனால் இன்றுணை யோடு வதிந்த நீ எயினர் இருக்கையாகிய பாலையிற் சேறல் இன்னுதாம் என்று உள்ளுறை தோற்றியுணர்த்தப்பட்டமை நினைக.

வரிநிழல், இலையின்மையானே கொம்புகளின் உருவம் படிந்த கோடுகோடான நிரம்பாநிழல் என்க. இதனானும் பாலைச் செலவின் இன்னாமைக்கோரே துணர்த்தியவாறாயிற்று.

## பாட்டு - ௩௯௪ : இற்பரத்தை கூற்று

துறை :—வேறொரு பரத்தையானவள் தன்னைப் புறங் கூறினாளெனக் கேட்ட இற்பரத்தை, அவட்குப் பாங்காயினார் கேட்பக் கூறியது. அஃதாவது, சேரிப்பரத்தை தன்னைப் புறங்
கூறினாள் எனத் தனக்குப் பாங்காயினார் கூறக்கேட்ட இற்பரத்தை, அச் சேரிப் பரத்தைக்குப் பாங்காயினார் உளராய வழி, அவர் கேட்பத், 'தலைவன் தன்பாற் கழிபெருங் காமமுடையான்' என்று கூறியது.

இதன்கண், சேரிப்பரத்தையின் பாங்காயினார் கேட்ப இற் பரத்தை, 'ஊரன் தகுவி புறங் கூறுமென்ப; தலைவன் என்னை விரும்புதற்குரிய நாளும் வந்தன ; இனித் தலைவன் என்னையே பெரிதும் விரும்புவான்' என்கின்றாள்.

௩௯௪. அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய்
வாளை நாளிரை பெறூஉம் ஊரன்
பொற்கோல் அவிர்தொடித் தற்கெழு

தகுவி

எற்புறங் கூறும் என்ப தெற்றென
வணங்கிறைப் பணைத்தோள் எல்வளை

மகளிர்

துணங்கை நாளும் வந்தன அவ்வரைக்
கண்பொர மற்றதன் கண்ணவர்
மணங்கொளற் கிவரும் மள்ளர் போரே.

—ஔவையார்.

(இ - ள்.) அரில் பவர்ப் பிணங்கிய கொடியையுடைய பிரம்பின் வரிப்புற நீர்நாய் - பிரம்பினை யொத்த வரிகள் பொருந்திய முதுகையுடைய நீர்நாய், நாள் இரை வாளை

பெறூஉம் ஊரன் - நாட்காலையுணவாக வாளைமீனைப் பெறுதற்கு இடமான ஊரினையுடைய தலைவனுடைய, பொன் கோல் அவிர் தொடி தன்கெழு தகுவி - பொன்னாற் செயயப்பட்ட திரட்சியை யும் விளக்கத்தையும் உடைய தனக்குத்தானே பொருந்திய தகுதியையுடைய பரத்தை, என் புறங்கூறும் என்ப - என்னைப்

புறங் கூறுகின்றாள் என்று கூறுகின்றனர், தெற்றென - அவள்

கூற்றுப் பொய்யாதல் யாவர்க்கும் விளங்கும்படி, வணங்கு இறைப் பணைத்தோள் எல்வளை மகளிர் - வளைந்த முன் கையினையும் மூங்கிலை ஒத்த தோள்களையும் ஒளியுடைய வளையலையும் உடைய மகளிர்களுக்குரிய, துணங்கை நாளும் வந்தன - துணங்கைக் கூத்தாடுதற்குரிய விழாநாட்களும் வாராநின்றன, அவ்வரைக் கண்பொர-அப்பொழுது ஒருவர் கண்ணோடு ஒருவர் கண் மாறுபடும்படி, மற்றதன்கண் அவர் மணங்கொளற்கு இவரும் மள்ளர் போர் - அக்கூத்தினிடத்தே அம்மகளிரினது மணத்தை விரும்பிக் கொள்ளற்பொருட்டு மறவருடைய விளையாட்டுப் போரும் வருவதாம்.

**விளக்கம்** :—அரில் - பிணக்கம். பிரம்பங்கொடிகள் ஒன்றோடொன்று பின்னிக்கிடக்கும் இயல்புடையனவாதல் பற்றி 'அரிற்பவர்ப் பிரம்பு' என்றாள். பவர் - கொடி. பிரம்பங்கொடியின் மேற்புறம் நீர் நாயின் முதுகிற்கு உவமை என்க. இனிப் பிரப்பந்தூற்றிலுறையும் நீர்நாய் எனினுமாம். "நீர்நாய், முள்ளரைப் பிரம்பின் மூதரிற் செறியும்" (அகம் - கூ.) என்பவாகலான். வரிப்புறம் - கோடுகளையுடைய முதுகு.

நீர்நாய் - நீரின்கண் வாழும் ஒருவகை நாய். வாளை - ஒருவகை மீன் நீர்நாய் தன் விருப்பப்படியே சென்று வாளையை நாளிரையாகப் பெறுதல் போன்று தலைவன் தன் விருப்ப மிகுதியாலேயே என்பால் உறைகின்றானன்றி யான் அவனை மடக்கிக்கொண்டேன் அல்லேன் என்பது இதன்கண் உள்ளுறையாகக் காண்க. வாளை, மீன்களிற் சிறந்தது போன்று யான் பரத்தையரில் மிக்கேன் என்பது குறிப்பு. சேரிப்பரத்தை, இற்பரத்தை தலைவனைப் புறம்போகாது மடக்கித் தன் வயத்தில் வைத்துக்கொண்டனள் என்றே புறங்கூறினாள் ஆகலின், யான் மடக்கிக்கொண்டேன் அல்லேன், அவனே ஏனைப் பரத்தையரினும் என்னையே பெரிதும் விரும்புகின்றான் என்னும் வாயிலாய்த் தன்னைப் புறங்கூறியவள் சிறப்பிலாள் என்று இகழ்ந்தவாறிது என்க.

இனி, தலைவன் ஏனைப் பரத்தையரினும் என்னையே விரும்புவானாதலை அண்மையில் நிகழவிருக்கும் விழாவில் ஆடும் துணங்கைக் கூத்தின்கண் அவன் விரும்பி எனக்கே தலைக்கை தருவானாதலையும் அவள் கண்கூடாகக்கண்டு தெளியலாம் என்பாள், 'தெற்றென மகளிர் துணங்கை நாளும் வந்தன' என்றாள்.

தெற்றென - இவ்வுண்மை தெளியும்படி. அவ்வரை - அப்பொழுது. மகளிர் துணங்கையாடுங்கால் மள்ளர் விளையாட்டுப் போர் நிகழ்த்துதல் மரபு. இதனை "மள்ளர் குழீஇய விழவினானும், மகளிர் தழீஇய துணங்கை யானும், யாண்டுங் காணேன் மாண்டக் கோனை" என இந்நூல் (௩௧) ஆம் செய்யுளிற் கூறப்படுதலானும்,

"தைஇய மகளிர்தம் ஆயமோடமர்ந் தாடும்
வையைவார் உயரெக்கர் நுகர்ச்சியும்
உள்ளார்கொல்"

எனவரும் கலியானும் உணர்க.

(கலி - ௨௭.)

## பாட்டு - ௩௬௫ : தோழி கூற்று

துறை :—'யான் வரையுந் துணையும் ஆற்றவல்லளோ?' என்று வினைய கிழவற்குத் தோழி சொல்லியது. அஃதாவது, வரைவிடை வைத்துப் பிரியக் கருதும தலைவன், 'யான் வந்து வரையுமளவும் ஆற்றுவளோ ?' என்று தோழியை வினவின னாக அவள், தலைவி ஆற்றாள் என்பதுபடச் சொல்லி வரைவு கடாயது. (இப்பிரிவு பொருள்வயிற் பிரிவன்று)

இதன்கண், தோழி தலைவனை நோக்கி, 'தலைவியினது வளை

கள் நெகிழ்ந்தன ; கண்கள் துளி வீழ்த்தழாநின்றன ; ஆதலால் இனி நீ வரைவுநீட்டித்தலை அவள் பொறாள் காண்' என்று

அறிவுறுத்துகின்றாள்.

௩௬௫. கோடீர் இலங்குவளை நெகிழ நாளும்
பாடில கலிழ்ந்து பனியா னாவே
துன்னரும் நெடுவரைத் ததும்பிய அருவி
தண்ணெனன் முரசின் இமிழிசை காட்டும்
மருங்கிற் கொண்ட பலவிற்

பெருங்கல் நாடநீ நயந்தோள் கண்ணே.

—மதுரை நல்வெள்ளியார்.

(இ - ள்.) தன் அரும் நெடு வரைத் ததும்பிய அருவி - கிட்டுதற்கரிய நெடிய மலைப்பக்கத்திலே ஒலித்த அருவி, தண் என் முரசின் இமிழ் இசை காட்டும் - தண்ணென்ற ஒலியையுடைய முரசினைப்போன்று ஒலிக்கின்ற இசையினைத் தோற்றுவிக்கின்ற, மருங்கின் கொண்ட பலவின் - பக்கத்திற் கொண்டுள்ள பலாமரங்களையுடைய, பெருங்கல் நாட - பெரிய மலைகளையுடைய நாட்டிற்குத் தலைவனே, நீ நயந்தோள் கண் - நின்னால் விரும்பப்பட்ட தலைவியினது கண்கள், கோடு ஈர் இலங்கு வளை நெகிழ - சங்கை அரிந்தியற்றிய விளங்குகின்ற வளையல்கள் கழலும்படி, நாளும் பாடு இல கலிழ்ந்து பனி ஆனு - நாள்தோறும் துயிலுதலிலவாய் அழுது நீர்த்துளிகள் நீங்காவாயின காண்.

**விளக்கம்** :—கோடு - சங்கு. ஈர்தல் - அரிதல். துன்புற்று அழுதல் உடல் மெலிந்து வளை நெகிழ ஏதுவாகலான் வளைநெகிழக் கண் பனி யானு என்றாள். ஆனு - அமையமாட்டா. நாளும் நின்னைக் காணும்பொழுதினும் காணுப்பொழுதே பெரிதாகலான், 'நாளும் பாடில' என்றாள். ஒருநாளும் துயிலுதலின்றி என்றவாறு. களவுக் காலத்தே தலைவன் வந்த காலையும், வாராக்காலையும் ஆகிய எப்பொழுதும் தலைவியின் கண்கள் துயிலாவாதலை,

"வாராக்கால் துஞ்சா வரில்துஞ்சா ஆயிடை
ஆரஞர் உற்றன கண்" (குறள் - ககஎக.)

எனவரும் திருக்குறளானும் உணர்க.

கலிழ்ந்து - அழுது. ததும்புதல் - ஒலித்தல். "ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப" (ககூ௪.) எனவரும் புறநானூற்றினும் அஃதிப் பொருட்டாதலுணர்க. தண்ணென் என்பது ஒலிக்குறிப்பு. அஃதாவது, மந்தவிசை என்க. என்னே? "தாழ்குரற் றண்ணுமை" எனவரும் சிலப்பதிகார அடிக்கு அடியார்க்கு நல்லார் "மந்த சுரத்தினையுடைய தண்ணுமை" என உரை கூறலானும், தண்ணென்னும் ஓசையுடைமை பற்றியே அவ்விசைக் கருவி தண்ணுமை எனப்படுதலானும் என்க.

அருவி இமிழிசை காட்டும் தன்மருங்கே பலவினையுடைய பெருங் கல் என்றது, நின் தண்ணளி காட்டி இனிய தலைவியை நின் மருங்கே வரைவினாற் கொள்க என்னும் உள்ளுறை தோன்ற நின்றதென்க.

நீ இடையிடையே உடனுறையப் பெறும் இப்பொழுதே இந்நிலையினள் பிரியின் ஆற்றாள் காண் என்பது குறிப்பெச்சம்.

## பாட்டு - ௩௬௬ : தோழி கூற்று

துறை :—காவல் மிகுதிக்கண்வேறுபட்ட தலைமகளது வேறுபாடுகண்டு 'இவ்வேறுபாடு எற்றினாயது?' என்று செவிலி வினவத் தோழி கூறியது. அஃதாவது, இற்செறிக்கப் பட்ட வழி வேறுபட்ட தலைவியைக்கண்ட செவிலி, 'இவள் இங்ஙனம் மெலிவானேன்?' என்று தோழியை வினவ, அவள் அறத்தொடு நின்றது.

இதன்கண், தோழி செவிலியை நோக்கி, 'இவள் பண்

டொருநாள் ஆழ்ந்த சுனையின்கண் மலர்ந்திருந்த நீலப்பூவை நோக்கி அதனைப் பெறமாட்டாமையானே அழுவாள் ஆயினள்; ஆண்டுவந்தான் ஒருவன், அப்பூவைப் பறித்துநல்கினன்; அவன் சால்புடைமை நம்மால் அளந்தறியற்பாலதன்று; இந் நிகழ்ச்சி பாலின்பாற் பட்டதாகல் வேண்டும்', என்று கூறு கின்றாள்.

௩௬௬. பால்வரைந் தமைத்த லல்ல தவர்வயிற்
சால்பளந் தறிதற் கியாஅம் யாரோ
வேறியாள் கூறவும் அமையாள்
அதன்தலைப்
பைங்கண் மாச்சுனைப் பல்பிணி யவிழ்ந்த
வள்ளிதழ் நீலம்நோக்கி உள்ளகை
பழுத கண்ண ளாகிப்
பழுதன் றம்மவிவ் வாயிழை துணிவே.
—பேரிசாத்தனார்.

(இ - ள்.) இ ஆய் இழை - இவ் வாராய்ந்த அணிகலன் களையுடைய தலைவி, பைங்கண் மாச் சுனைப் பல் பிணி அவிழ்ந்த வள் இதழ் நீலம் நோக்கி - பசிய இடத்தையுடைய பெரிய சுனையினகத்தே பலவாகிய கட்டுகள் அவிழப் பெற்ற பெரிய இதழ்
களையுடைய நீல மலரையே பார்த்து, உள் அகைபு அழுத கண்ணள் ஆகி - நெஞ்சினுள்ளே வருத்தங் கொண்டு அழாநின்ற கண்ணையுடையளாகி, வெறியாள் கூறவும் அமையாள் - வெறி யாடும் மகளை இந்நோய் முருகனாலாயது என்று கூறவும் அக்
கூற்றிலே பொருந்தாதவளாய், அதன் தலைத் துணிவு பழுதன்று - அம்மலரிடத்தே துணிந்ததும் குற்றம் அன்று, பால்வரைந்து அமைத்தல் அல்லது - ஊழானே வரையறை செய்து இங்ஙனம் பொருத்தப் படுவதல்லது, அவர் வயின் - அப்பூவைத் தந்த அத்தலைவரிடத்தமைந்த, சால்பு அளந்து அறிதற்கு யாம் யார் - தகுதியை அளந்து அறிதற்கு யாம் எத்தகுதியையுடையேம்.

விளக்கம் :— அப்பூத் தரும்படி தகுதியுடைய தலைவன் ஒருவனை ஊழே கூட்டிற்று என்பாள், 'இது பால்வரைந்து அமைத்தது' என்றாள். தலைவனும் அளக்கலாகாச் சால்புடையான் என்பாள், 'அளந்தறிதற்கு யாம்யார்' என்றாள்.

அதன் தலை - அம் மலர்பெறுதலின் கண்ணே, துணிவு என்றது ஏதிலான்பால் அதனைக் கொள்ளத் துணிந்ததனை; அத்துணிவும் பால்
தந்தது என்றபடி. பால் இவட்குத் தக்கான் ஒருவனையே கூட்டிற்று என்பாள், துணிவும் பழுதின்று என்றாள். துணிவும் என்பதன்கண் உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது.

## பாட்டு - ௩௬௭ : தோழி கூற்று

துறை :—(க) வரைவுணர்த்திய தோழி தலைமகட்குக் கழி யுவகை மீதூராமை உணர்த்தியது. அஃதாவது, தலைவன் வரைந்துகொள்வன் என்ற செய்தியைத் தலைவிக்குணர்த்திய தோழி, அச்செய்தியால் ஆற்றொணாப் பேருவகை கொள்ளா மைப் பொருட்டுப் பின்னும் அத் தலைவி ஐயுறும் வண்ணம் கூறி யது. (கழிபேருவகையும் அறிவினை மயக்குதலான் அஃதெய் தாவாறு கூறினள் என்க.)

(உ) வரைவு நீட்டித்தவிடத்து ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி ஆற்றும் வகையால் ஆற்றுவித்ததூஉமாம்.

இதன்கண், தோழி தலைவியைநோக்கி ‘ஒருகால் யான் நினக்குக் கூறியவாறு, கொடியோர் நினக்கு அளிசெய்யாராய பொழுதும், நின் தோள்கள் அழகுறும் பொருட்டு அவரது மண்ணுறு மணியில் தோன்றும் மலையை நோக்கியேனும் ஆற்றி யிருப்பாயாக’ என்கின்றாள்.

௩௬௭. கோடியோர் நல்கா ராயினும் யாழநின்
தொடிவிளங் கிறைய தோள்கவின்
பெறீஇயர்
உவக்காண் தோழி அவ்வந் திசினே
தொய்யல் மாமழை தொடங்கலின்
அவர்நாட்டுப்
பூச லாயம் புகன்றிழி அருவியின்
மண்ணுறு மணியின் தோன்றும்
தண்ணறுங் துறுகல் ஓங்கிய மலையே.
—மதுரை மருதனிள நாகனர்,

(இ - ள்.) தோழி—, கொடியோர் நல்காராயினும்-கொடியோராகலின் ஒருகால் யான் உணர்த்தியபடி நின்னை வரைந்து கொண்டு தண்ணளி செய்யாதாராய விடத்தும், நின் தொடி விளங்கு இறைய தோள் கவின் பெறீஇயர் - நின்னுடைய வளைகள் விளங்காநின்ற முன்கையை உடையவாகிய தோள்கள் அழகு

பெறும் பொருட்டு, உவக்காண் அவ்வந்திசின் - உங்கே அவண் வருவாயாக, அஃதெற்றுக் கெனின், தொய்யல் மாமழை தொடங்கலின் - நெகிழ்ச்சியையுடைய பெரிய மழை பெய்யத் தொடங்கினமையானே, அவர் நாட்டுப் பூசல் ஆயம் புகன்று இழி அருவியின் - நம் தலைவருடைய நாட்டிலுள்ள ஆரவாரத்தையுடைய மகளிர்குழு விரும்பி இறங்குதற்குக் காரணமான அருவியினாலே, தண் நறுந் துறுகல் ஓங்கிய மலை - குளிர்ந்த நறிய குண்டுக்கற்கள் உயர்ந்துள்ள மலை, மண்ணுறு மணியின் தோன்றும் - கழுவப்பட்ட நீலமணிபோலே தோன்றுநிற்கும்.

விளக்கம் :—இதுகாறும் வரைந்து கொள்ளாது கொடுமை செய்தவரே யாகலின் அக் கொடுமையானே இன்னும் வரைவு நீட்டிப்பினும் என்பாள், 'கொடியோர் நல்காராயினும்,' என்றாள். முன்னர்த் தலைவர் வரைந்து கொள்வர்காண் என வரைவுணர்த்தினமை தோன்ற 'நல்காராயினும்' என்றாள். அங்ஙனம் நல்காராயவிடத்தும் என்க. ஐய

டம்மையால், நல்குவர்; ஒரோவழி நல்காதவிடத்தும் என்பது பெற்றாம்; நல்குவர் என்று தேற்றமாகத் தலைவி உணர்ந்த வழிக் கழிபேருவகையாற் செயலறவு எய்துவளென்றஞ்சி இங்ஙனம் ஐயுறுமாறு சூழ்ந்தாதும் நுணுக்கம் நினைந்து நினைந்து இன்புறற் பாற்று. கழிபேருவகையாற் கையறவு கொள்ளல் இராமனுடைய வெற்றியை அநுமான் கூறக்கேட்ட சீதைநிலையினைக் கம்பர் கூறுமாற்றான் உணர்க; இராமா-யுத்த.)

உவக்காண் - உங்கே. உவக்காண் ஒட்டிநின்ற டங்கே என்பது பொருள்.

இடைச்சொல்;

தோழி தலைவிக்கு ஓரிடத்தைச் சுட்டிப் பின்னர் அவ்வந்திசின் ென அழைக்கின்றாள் ஆகலின், உவக்காண் தோழி அவ்வந்திசின்



அங்கே வருவாயாக. அவ்விடத்தினின்று நோக்கின் மலை தோன்றும் என இடம் சுட்டிக் கூறியவாறு.

அருவி பாய்தலானே மண்ணுற மணிபோற் றோன்றும் என்க. அவர் நாட்டு மகளிர் இழிதரும் அருவி மலை என்றலின் அவர்நாட்டு மலை என்பது பெற்றாம். மலையைக் காண்டல் ஆற்றியிருத்தற்கு ஏது வாய்த் தோள் கவினழியாமைப் பொருட்டென்க.

இனி இரண்டாவது துறைக்கு இது பொருந்துமாறும் உய்த்துணர்க.

## பாட்டு - ருசுஅ : தலைவி கூற்று

துறை:—வரைவுமலிந்த தோழிக்குக் கிழத்தி உரைத்தது; அஃதாவது, அண்மையில் வரைவுநிகழும என்று தலைவிக்குத் தோழி கூறியபொழுது, அவள் பேருவகையால், 'இனி, யான் இடையறாது இனிது வாழ்வேன்,' எனபது படக்கூறியது.

இதன்கண் தலைவி தோழியை நோக்கி, 'இதுகாறும் நாம் நம் மாமைநிற மழுங்கி வெய்துற்ற விடத்தும், அந் நிலையைப் பிறர்க்குக் கூறவும வகையினறிப் பெரிதும் வருந்தினேம்; இனி நீர்நிறைந்த நீர்நிலையின் மருங்குள்ள மரம்போன்று தலைவனோடே இடையீடின்றி உடனுறைநது இன்புறாநிற்பேம்' என்று கூறுகின்றாள்.

௩௬௮. மெல்லிய லோயே மெல்லிய லோயே
நன்ஞண் நீத்த பழிதீர் மாமை
வன்பின் ஆற்றுதல் அல்லது செப்பிற்
சொல்ல கிற்றா மெல்லிய லோயே
சிறியரும் பெரியரும் வாழும் ஊர்க்கே
நாளிடைப் படாஅ நளிநீர் நீத்தத்
திண்கரைப் பெருமரம் போலத்
தீதில் நிலைமை முயங்குகம் பலவே.

—நக்கீரனூர்.

(இ - ள்.) மெல் இயலோயே - மெல்லிய தன்மையுடைய தோழியே! மெல் இயலோயே—, நல்நாள் நீத்த பழி தீர் மாமை-

நன்றாகிய தொருநாளிலே நம்மை அகன்று போன குற்றமற்ற மாமையினது இழப்பினே,வன்பின் ஆற்றுதல் அல்லது - நமது வன்மையானே பொறுத்திருத்தல் அல்லாமல், மெல்

இயலோயே—, செப்பில் சொல்ல கிற்றும் - அத்துன்பத்தை மொழிகளானே இதுகாறும் பிறர்க்கு எடுத்துக் கூறும் வன்மை இலேமாயினேம், சிறியரும் பெரியரும் வாழும் ஊர்க்கே-



சிற்றினமாக்களும் சான்றோரும் விரவி வாழாநின்ற இந்த ஊரினிடத்தே, நாள் இடைப்படாஅ நளிநீர் நீத்தத் திண் கரைப்

பெருமரம் போல - ஒரு நாளேனும் இடையீடுபடாத செறிந்த நீரையுடைய வெள்ளத்தினது திண்ணிய கரையின்கண் உள்ள

பெரிய மரம் போன்று, தீது இல் நிலைமை பல முயங்குகம் - இனி நம் தலைவனைத் தீதற்ற நன்னிலையையுடையேமாய்ப் பல காலும்

தழுவி மகிழ்வோமாக.

விளக்கம் :—நற்செய்தியை உணர்த்திய தோழியின்பாலுண்டாய மகிழ்ச்சியாலே மும்முறையும் விளித்தாள். அவள் கூறிய சொற்கள் மிக இனிமையாயிருநதமை பற்றி, 'மெல்லியலோய்' என்றாள். நன்னாள் என்றது பால்வரை தெய்வம் தன்னைத் தலைவனோடே கூட்டுவித்த இயற்கைமணம் நிகழ்ந்த நாளை என்க. அன்றே தலைவன் பிரிந்தவுடன் தன் மாமையும் கெடலின், 'நன்னாள் நீத்த மாமை' என்றாள். தோழியர் பலரானும் பாராட்டப்பட்ட நல்ல மாமை என்பாள், 'பழிதீா

மாமை' என்றாள். மாமை - கரிய நிறம், அழகெனினுமாம்; மாமையின் இழப்பை என ஒருசொல் வருவித்துக் கூறுக. நிறங்கெட்டு வருந்திய காலத்தும் பிறர்க்குக் கூறவொண்ணாது அகத்தேவைத்து வருந்தினேம் என்றது, நெஞ்சின் துயரை அயலார்க்குக் கூறி அவரானே ஆறுதல் எய்தும் இயல்புபற்றி என்க.

அக் காமநோய் ஆற்றெணாக் கொடுமையுடைத்தாதலை நினைந்து வன்பின் ஆற்றினேம்' என்றாள். வன்பு - வலியுடைமை. பிறர் இங்ஙனம் வருந்துதற் கிரங்காமல் பழிதூற்றுமியல்புடைய மாக்களும் வாழும் ஊர் என்பாள், 'சிறியரும் வாழும் ஊர்' என்றும், தலைவனுக்குத் தன்னை வரைவுநேர்ந்தாரும் உண்மையின், பெரியரும்வாழும் ஊா'என்றும் கூறினாள். இனி அசசிறியோா சிறுமை புறவும் பெரியோர் மனமகிழவும் யாம் பலமுயங்குவம் என்றவாறு. நாளிடைப்படாமல் வந்து நிறையும வெள்ளம் என்றது தலைவனோடே பிரிவின்றி உடனுறைதலானே இடையறாத இன்பத்தை நினைந்து கூறியது என்க.

கரை நொய்தாயின் மரத்திற்கு அழிவுண்டாமாதலின், 'திண்கரை' என்றாள். இது தலைவனின் திண்ணிய நட்பைக் கருதிக் கூறியது என்க. நீத்தம் - வெள்ளம்; இது தலைவன் தண்ணளியைக் கருதிற் றென்க. நிலம்பக வேர் வீழ்த்து நிற்கும்பெருமரத்தைத் தான் தலைவன் பாற் கொண்ட கேண்மை கருதித் தனக்கு உவமித்தாள். தீது இல் நிலைமை என்றது, களவொழுக்கத்தே தலைவன் ஏதமிக்க இருள்நெறிக் கண் வந்தமை போன்ற தீதில்லாத நிலைமை என்றவாறு. முயக்கத்திற்கு எக்கறவுடைமை தோன்றப் 'பல முயங்குகம்' என்றாள்.

## பாட்டு - ௩௬௬ : தோழி

### கூற்று

துறை :—தோழி கிழத்திக்கு உடன்போக்குஉணர்த்தியது. அஃதாவது, தலைவனை வரைந்து கொள்ளற்கு வேறு நெறிகாணாமையானே தலைவனோடு தலைவியைத் தமர் அறியாது போக்கு

விக்கக் கருதிய தோழி
தியது.

அவ்வுடன்போக்கினைத் தலைவிக்குணர்த்

இதன்கண், தோழி தலைவியை நோக்கி,'நம்தலைவர் நின்னைத் தம்முடன் அழைத்துச் செல்லுதற்குடம் பட்டார்; இனி யாம் அவரோடே வாகை நெற்றைக் கோடைக்காற்று அலைத்து ஒலிக்கும் பாலைநிலத்தின் கண்ணே செல்வேமாக' என்கின்றாள்.

௩௬௯. அத்த வாகை அமலை வானெற்
றரியார் சிலம்பி னரிசி யார்ப்பக்
கோடை தூக்குங் கானம்
செல்வாந் தோழி நல்கினர் நமரே.

—குடவாயிற் கீரத்தனார்.

(இ - ள்.) தோழி—, நமர் நல்கினர் - நந்தலைவர் தண்ணளி செய்தனர், அத்த வாகை அமலை வால் நெற்று - அருவழியின் கண் உள்ள வாகையினது ஒலியையுடைய வெள்ளிய வற்றல்களை, அரி ஆர் சிலம்பின் அரிசி யார்ப்ப-உள்ளிடு பரலையுடைய சிலம்பு போன்று அவற்றின் உள்ளீடாகிய விதைகள் ஆரவாரிக்கும்படி, கோடை தூக்கும் கானம்-மேல்காற்றுத் தூக்கி அலைக்கின்ற பாலை நிலத்தின் கண்ணே,செல்வாம்-யாம் தலைவனோடே செல்வேமாக.

**விளக்கம்** :—நமர் நல்கினர் ஆகலின், யாம் அவரோடே பாலைநிலத்தின்கட் செல்வேமாக என்றாள் என்க. அத்தம் - அருவழி. வாகை நெற்றைக் கோடை தூக்குங் கானம் என்றமையாற் பாலைநிலம் என்பது பெற்றாம். தூக்கும் என்றது அலைக்கும் என்றவாறு. அரி - சிலம்பின் உள்ளீடாகிய பரல். அரிசி என்றது விதையை. தலைவன் தலைவியை அவள் தமர் அறியாவாறு அழைத்துக்கொடு போய்த் தன் மனையின் கண், வரைந்து கோடற்கு உடம்பட்டான் என்பாள், 'நமர் நல்கினர்' என்றாள். இதனால் தலைவியின் தமர் நல்காமையும் குறிப்பாற் பெறப் பட்டது.

நெற்றைக் கோடைதூக்கும் என்றது, யாமும் அவன் கருத்திற் கியைய உடன் செல்ல வேண்டும் என்னும் குறிப்புடையதென்க.

## பாட்டு - ௩௭௦ : பரத்தை கூற்று

துறை :—கிழத்தி தன்னைப் புறனுரைத்தாள் என்பது கேட்டுப் பரத்தை அவட்குப் பாங்காயினோர் கேட்பச் சொல்லியது. அஃதாவது, தலைவனைப் பரத்தை தன்பால் மடக்கிக் கொண்டாள் எனத் தலைவி புறங் கூறுவதாகக் கேள்வியுற்ற பரத்தை, தலைவி யின் பாங்காயினோர் கேட்கும்படி தலைவி என்னைப் புறங்கூறல் தவறென்பதுபடக் கூறியது.

மூலமும் உரையும்
௩௭௫

இதன்கண், 'யாம் தலைவனோடு இருப்பின் இரண்டுடலை உடையேமாவேம்; அவனோடே கிடப்பின் வில்லக விரல் போல் ஒன்றிக்கிடப்பேம்; அவன் இல்லிற் சேகினோ ஒருடலே உடையேமாயிருப்பேம்' என்று பரத்தை கூறுகின்றாள்.

௩எ௦. போய்கை யாம்ப லணிநிறக்
கொழுமுகை வண்டுவாய் திறக்குந்
தண்டுறை யூரனொடு
இருப்பி னிருமருங் கினமே கிடப்பின்
வில்லக விரலிற் பொருந்தியவன்

நல்லகஞ் சேரி னொருமருங் கினமே.

—வில்லகவிரலினர்.

(இ - ள்.) பொய்கை ஆம்பல் அணி நிறக் கொழு முகை- பொய்கையின்கண் உள்ள ஆம்பலினது அழகிய நிறத்தையுடைய கொழுவிய அரும்புகளிலே, வண்டு வாய்திறக்கும் - வண்டுகள் இதழைத்திறக்கின்ற, தண் துறை ஊரனொடு - குளிர்ந்த நீர்த் துறைகளையுடைய தலைவனோடே, இருப்பின் இருமருங்கினம்- யாம் இருப்பேமாயின் இரண்டு உடலை உடையேமாவேம், கிடப்

பின் - அவனோடே பாயல் கொள்ளுங்கால், வில் அக விரலிற் பொருந்தி-வில்லை அகப்படுத்திய விரல்களைப் போன்று பொருந் திக் கிடந்து, அவன் நல் அகம் சேரின் - அத்தலைவன் தனது நல்ல இல்லத்திற்குப் போய்விடின்,

உடையேமாவேம்.

ஒருமருங்கினம் - ஒருடலே

விளக்கம்:—பொய்கை - இயற்கைநீர்நிலை. அணிநிறக் கொழு முகை - அழகிய நிறத்தையுடைய கொழுத்த அரும்பென்க. பொய்கை யின்கண் தோன்றிய அரும்பினது நிறத்தானும் செழிப்பானும் கவர்ச்சி யுற்ற வண்டு வலிந்து சென்று அதன் வாயினைக் கிண்டித் திறத்தல்

போன்று, தலைவன் எமது அணிநிறமிக்க பருவக் கவர்ச்சியானே எம்பால் வலிந்து வந்து உறைகின்றான். ஆதலானே யாம் குற்றமுடையேம் அல்லேம் என்று உள்ளுறைகாண்க. பொய்கை என்றது தங் குடிக்கோர் உயர்வு கற்பித்தபடியாம். என்னை? கரை முதலியன மாந்தரானே இடப்பட்ட குளம் போலாது இயற்கையானே அமைந்த பொய்கை என்றது, வரைதன் முதலிய செயற்கையின்றி இயற்கையானே மனம் விரும்பியபடி ஒழுகும் குடியினேம் என்னும் உள்ளுறைக்கு உவமமாக நிற்றலின் என்க.

இனி அணிநிறக் கொழுமுகை என்றதும், முகை தனது நிறப் பெருமையானும் செழிப்பானும் வண்டைத் தன் வயமாக்குமாறு போல, யாமும் தலைவியினுங் காட்டில் அணிநிறமும் உருவச் செழிப்பும் உடையேமாகலின் அவன் 'எம்பால் உறைபவனாகின்றான் எனத் தலைவிக்கோர் இழுக்குக் கூறல் உள்ளுறையாகல் உணர்க.

மருங்கு: ஈண்டு உடல் என்னும் பொருட்டாய் நின்றது "மருங்குடையார்" என்னும் திருக்குறளில், பக்கத்தாராகிய சுற்றத்தாரை



உணர்த்தினாற் போன்று. உயிரை நோக்க உடலும் அயலதாகலான் ஆகுபெயரால் உடலைக் குறித்ததென்க. இனி இடையின் பெயர் உடலுக்கு ஆயிற்றெனினுமாம்.

கிடப்பின் என்றது, இடக்கரடக்கல். வில் அகப்படப் பற்றிய விரல்கள் இடையீடின்றிச் செறிந்திருத்தலின், இடையீடில்லாப் புணர்ச்சியையுடைய உடல்கட்கு உவமையாயின.

அவன் நல்லகம் சேரின் ஒருமருங்கினம் என்றது, அவனை எம்பால் வளைத்துக் கொள்ளவும் யாம் முயலாது தனித்திருக்கவும் வல்லேம் எனச் செருக்கிக் கூறியவாறு. இது, தலைவன் எம்மகம் சேரினும் தலைவி வீணே எம்மைப் புறங் கூறுவள் யாம் அவள் போல லேம் என்றவாறு.

முயக்கத்திற்கு வில்லக விரலினை உவமை கண்டு கூறிய அருமை கருதி இச்செய்யுள்பாடிய புலவர் 'வில்லக விரலினார்' என வழங்கப் பட்டனர்.

## பாட்டு - ௩௭௧ : தலைவி கூற்று

துறை :—வரைவிடை வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் சொல்லியது. அஃதாவது, தலைவன் வரையாமலே பிரிந்தானாக ஆற்றாது வருந்திய தலைவிக்கு,'நீ ஆற்று தலே அறிவுடைமையாம்' எனத், தோழி வற்புறுத்தியபொழுது, தலைவி அவட்குக் காம நோயின் கொடுமை கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி,'தலைவன் பிரிந்தமை யானே வளைநெகிழ்தலையும் பசப்பூர்தலையும் யானும் விரும்பு கின்றிலேன்; அக் காமநோயோ என்வரைத்தன்றி என்னை நலி கின்றது; யான் என் செய்வேன்' என்று கூறுகின்றாள்.

௩௭௧. கைவளை நெகிழ்தலும் மெய்பசப் பூர்தலும்

மைபடு சிலம்பின் ஐவனம் வித்தி
அருவியின் விளைக்கு நாடனொடு
மருவேன் தோழியது காமமோ பெரிதே.

—உறையூர் முதுகூற்றனார்.

(இ - ள்.) மை படு சிலம்பின் ஐவனம் வித்தி அருவியின் விளைக்கும் நாடனொடு - முகில்கள் படிகின்ற மலைச்சாரலின் கண்ணே மலைநெல்லை விதைத்து மலையருவியானே விளைவிக்கும் நாட்டையுடைய தலைவனாலே, கைவளை நெகிழ்தலும் மெய் பசப்பு ஊர்தலும் மருவேன் - எனது கையின்கண் வளைகள் கழலுதலையும் உடலின்கட் பசப்பூர்தலையும்பெறேன், அது காமம் - அங்ஙனம் மருவச் செய்தது காமநோய், ஓ பெரிது அது-என் வரைத் தன்றிச் சாலவும் பெரிதே காண்.



விளக்கம் :—மை - முகில். சிலம்பு - மலைப்பக்கம். ஐவனம் - மலை நெல். இங்ஙனம் புறத்தார் அறிந்து அலர்தூற்ற ஏதுவாக வளைநெகிழ்

தலும் பசப்பூர்தலும் எனக்கும் உடம்பாடன் றென்பாள், 'நெகிழ்தலும் ஊர்தலும் மருவேன்' என்றாள். 'பின் இவவேறுபாடு எற்றாலாயது?' என்ற வினாவிற்கு விடையாக, 'அது காமம்' என்றாள். 'அக்காமநோய் நின்னால் ஆற்றப்படாதோ?' என்னும் வினாவிற்கு விடையாக, 'ஓ பெரிது' என்றாள். ஓ: வியப்பிடைச் சொல். பெரிது என்றது, என் வரைத் தன்றி மிக்கது என்றவாறு.

"மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போல் தோன்றி விடும்." (குறள் - ௧௨௫௩.)

"நிறையுடையேன் என்பேன்மன் யானோ என்காமம்
மறையிறந்து மன்று படும்." (குறள் - ௧௨௫௪.)

எனவரும் திருக்குறள்கள் ஈண்டு நினையற்பாலன.

சிலம்பில் ஐவனம் வித்தி அருவியின் விளைக்கு நாடன் என்றது, நம்பாற் காதல்வித்தி அதனை விளைவிக்கப் பொருள்நீர் கொணரப் பிரிந்த தலைவனும் நல்லனே என்பதுபட நின்றது.

## பாட்டு - ௩௭௨ : தோழி கூற்று

துறை :—இரவுக்குறி வந்து ஒழுகாநின்ற தலைமகன் கேட்பத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

அஃதாவது, வரைதற் கருத்தின்றி இரவுக்குறிக்கண் வந்து சிறைப்புறத்தே நின்ற தலைவனுக்கு ஊரலர் மிகுதி உணர்த்தி வரைவுகடாவ எண்ணிய தோழி, அவன் வரவறியாதாள் போன்று அவன் கேட்பத் தலைவிக்குக் கூறியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'தலைவன் நம்பால் வந்து மீண்ட சுவடு மறைதற்கு முன்னரே இவ்வூரில் அலர் எழுவதாயிற்று' என்கின்றாள்.

௩௭௨. பனைத்தலைக், கருக்குடை நெடுமடல்
குருத்தொடு மாயக்
கடுவளி தொகுத்த நெடுவெண் குப்பைக்
கணங்கொள் சிமைய வணங்குங்
கானல்
ஆழிதலை வீசிய வயிர்ச்சேற் றருவிக்
கூழைபெய் எக்கர்க் குழீஇய பதுக்கை
புலர்பதங் கொள்ளா வளவை
அலரெழுந் தன்றிவ் வழுங்க லூரே.

—விற்றூற்று மூதெயினனார்.

(இ - ள்.) பனைத் தலைக் கருக்குடை நெடுமடல் குருத்தொடு மாய - பனைமரத்தினது உச்சியிலுள்ள கருக்கினையுடைய

நெடிய மடல்கள் குருத்தோடே மறைந்து போம்படி, கடு வளி தொகுத்த நெடு வெண் குப்பை - கடிய காற்றுத் தொகுத்து வைத்த நெடிய வெள்ளிய மணற்குவியல்களாகிய, கணங் கொள் சிமைய அணங்குங் கானல் - கூட்டமான குவடுகளையுடைய வருத்தத்தைச் செய்யும் கடற்கரையிலே, ஆழி தலை வீசிய அயிர் சேற்று அருவி - கடல் எறிந்த கருமணலாகிய சேற்றை யுடைய அருவியால், கூழை பெய் எக்கர்க் குழீஇய பதுக்கை - கூந்தலிடத்தே பெய்தற்குரிய எக்கராகக் குவியப்பெற்ற குவியல் கள், புலர்பதம் கொள்ளா அளவை - உலர்ந்த செவ்வியை எய்துதற்கு முன்னரே, இவ் அழுங்கல் ஊர் அலர் எழுந்தன்று - இந்த ஆரவாரத்தையுடைய ஊரின்கண் பழிமொழி எழுந்தது.

**விளக்கம்** :—கடற்கரையிலே காற்றாலே குவிக்கப்பட்ட மணல் மேடுகள் பனைமரங்களை மூடி மறைத்துவிடுவதனை இன்றுங் காணலாம். மாய்தல் – மறைதல். பனைமரங்கள் எஞ்சாது முழுவதும் மறைந்தன என்பாள், 'குருத்தொடு மாய' என்றாள். கடுவளி – விரைவு மிக்க காற்று. குப்பையாகிய சிமையம் என்க. தனித்துறைவோர்க்கு நோய் செய்தலின், 'அணங்குங் கானல்' என்க. தலைவனைப் பெறாமல் தலைவி வருந்தியிருக்கும் இடமாதல் நினைந்து 'அணங்கும் கானல்' என்றாள்.

அயிர் – கருமணல், எக்கரின் சேற்றை மகளிர் கூந்தற்கிடுதல் மரபாகலின், 'கூழை பெய் எக்கர்' என்றாள். எக்கர் – இடுமணல். ஆழி – கடல். பதுக்கை – குவியல். எக்கர்க்குவியல் புலர்வதன் முன் பென்றது தலைவன் வந்து போன அடிச்சுவடுடைய ஈர்மணல் உலர்ந்து மாறுதற்கு முன்னரே என்றவாறு. எனவே, அலர்க்கு ஏதுவாதல் உணர்த்தினளாயிற்று.

அச் சுவடுண்மையே

ஈர்மணலில் அடிச்சுவடு நன்கு விளங்கித்தோன்றலும் மணலில் அங்ஙனம் விளங்காமையும் இயல்பாதலுணர்க.

உலர்ந்த

புலர்பதம் - உலர்ந்த செவ்வி. எழுந்தன்று - எழுந்தது. ஆதலாற் றலைவியை வரைந்து கோடலே நன்றென்பது குறிப்பெச்சம்.

## பாட்டு - ௩௭௩ : தோழி கூற்று

துறை :—அலர் மிக்கவழித் தலைமகட்குத் தோழி சொல்

லியது; அஃதாவது, ஊரவர் அலர் தூற்றியவழி ஆற்றாளாய தலைவியைத் தோழி தலைவன் நட்பின் பெருமையை எடுத்துக் காட்டி ஆற்றுவித்தது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'நாம் தலைவனோடே கொண்ட தொடர்பு நிலம் புடைபெயரினும், நீருந் தீயும் தத்தம் இயல்பு திரியினும், கடற்கெல்லை தோன்றினும், பிறழாத தொன்றும். அங்ஙனமாக வெவ்வாய்ப்

பெண்டிர் கௌவை

மூலமும் உரையும்

குறுள

யானே அதற்குக் கேடு யாதுண்டாம்? நீ கவலாதேகொள்,'' என்று ஆற்றுவிக்கின்றாள்.

௲௭௱. நிலம்புடை பெயரினு நீர் தீப் பிறழினும்
இலங்குதிரைப் பெருங்கடற் கெல்லை
தோன்றினும்
வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை
அஞ்சிக்
கேடேவன் உடைத்தோ தோழி
நீடுமயிர்க்
கடும்பல் ஊகக் கறைவிரல் ஏற்றை
புடைத்தோடு புடைஇப் பூநாறு
பலவுக்கனி
காந்தளஞ் சிறுகுடிக் கமழும்
ஓங்குமலை நாடனொ டமைந்தநந்
தொடர்பே.

—மதுரைக் கொல்லம் புல்லனார்.

(இ - ள்.) தோழி—, நீடு மயிர்க் கடும்

பல் ஊகக் கறை விரல் ஏற்றை - நெடிய

மயிரினையும் கடிய பற்களையும் உடைய

கருங்குரங்கில கறுப்புநிறம் வாய்ந்த விரல்களையுடைய ஆண் குரங்கு, புடைத் தொடுபு உடைஇப் பூநாறு பலவுக் கனி - பக்கத்திலே தோண்டியமையானே உடைந்து மலர் மணக்கு மாறு போலே மணக்கும் பலாப்பழம், காந்தள் அம் சிறுகுடிக் கமழும் - காந்தளையுடைய அழகிய சிறிய ஊரின்கண்ணே மணங் கமழாநிற்கும், ஓங்கு மலை நாடனொடு அமைந்த நம் தொடர்பு - உயர்ந்த மலைநாட்டையுடைய நந்தலைவனோடே யாம் கொண்

டுள்ள நட்பு, வெவ்வாய்ப் பெண்டிர் கெளவை

யஞ்சி - வெவ்விய

வாயையுடைய பெண்டிர் தூற்றும் பழிமொழிக்கு அஞ்சி, நிலம்புடை பெயரினும் - இந்நானிலம் இடமாறினும், நீர்தீ பிறழினும் - நீரும் தீயும் தத்தம் இயல்பினின்று திரியினும், இலங்குதிரைப் பெருங்கடற் கெல்லை தோன்றினும் - விளங்கு கின்ற அலைகளையுடைய பெரிய கடல் சுருங்கி எல்லை காணப் பட்டாலும், கேடு எவன் உடைத்து - என்ன கெடுதலை உடைத்

தாம்.

**விளக்கம்** :—கெளவை யஞ்சிப் பெயரினும் பிறழினும் எல்லை தோன்றினும் நம்தொடர்பு என்ன கேடுடைத்தென வினைமுடிவு செய்க.

இனி, பெயரினும் பிறழினும் தோன்றினும் கெடாத நம்தொடர்பு கெளவை அஞ்சி என்ன கேடுடைத்தாம் எனக்'கெடாத' என்னும் ஒரு சொல்வருவித்து முடிப்பினும் ஆம்.

ஐம் பெரும்பூதங்களுள் மூன்றுபூதங்கள் கூறப்பட்டமையானே எடுத்தமொழியின் இனஞ் செப்பி ஏனை யிருபூதமும் கொள்க. கொள்ளவே, ஐம் பெரும்பூதக்கூட்டமாகிய உலகமே தன்னிலை கலங்கினும் கலங்காத நட்பு என்றவாறாயிற்று.

## ருரு௮ குறுந்தொகை

புடை பெயர்தல் - இடமாறுதல்; அஃதாவது, நெய்தல் மருதமாய் மருதம் குறிஞ்சியாய் இவ்வாறு தத்தம் நிலைமாறுதல் என்க. நீர் தீ முதலியன என ஏனைப்பூதங்களையும் கொள்க. நீா முதலியன தண்மை நெகிழ்ச்சி முதலிய தத்தம் இயல்பிற் பிறழினும், பெருங்கடற்கு எல்லை தோன்றினும் என்றது, நீர்வற்றி எல்லை காணப்படும் அளவிற்றாயினும் என்றவாறு.

"ஊழி பெயரினுந் தாம்பெயரார்
சான்றாண்மைக்
காழி யெனப்படு வார். (குறள்-கூ௮கூ)

எனவரும் திருக்குறள் ஈண்டு நினைக்கற் பாற்று.

மெய்யன்பு, "நிலத்தினும் பெரிதே வானினும்
உயர்ந்தன்று,
நீரினும் ஆரளவின்றே" என்றோதுப வாகலான் பூதங்கள் திரியுமிடத்தும் திரியாதென அதன் மாண்பு தெரித்தோதப் பட்டது. இத்தகைய நட்பினை எளிய அலர் என்செய்யும்; நீ கவலற்க என்பது குறிப்பு.

குரங்கு தோண்டிய பலாக்கனி
சிறுகுடியின்கண் சென்று
கமழும் என்றதன்கண், தலைவனோடே கொண்ட நட்பு ஊரவர் அறிய வெளிப்படுதல் வரைதற் கேதுவாய்ச் சிறக்கும் என உள்ளுறை

காண்க.

## பாட்டு - ௩௭௪ : தோழி கூற்று

துறை:—அறத்தொடு நின்றமை தோழி கிழத்திக் குரைத்தது. அஃதாவது, தலைவியின் தமர் வரைவு நேர்ந்தமை உணர்ந்த தலைவி, இஃதெற்றினாயது? என்று வியப்பாட்குத் முன்னர்த் தான் அறத்தொடு நின்றமை கூறியது.
தோழி

இதன்கண், தமர் வரைவுமலிந்தமை கேட்டுவந்த தலைவிக்குத் தோழி, 'நாம ஒளித்த செய்திலை நம்தந்தையும் தாயும் உணருமாறு வெளிப்படுத்தினேனாகப் பின்னர்த் தலைவன் வரைவு வேண்டி வந்து தமரை இரந்தவழி, அவரும் உடம்பட்டு இது நிகழ்வதாயிற்று' என்று கூறுகின்றாள்.

௩௭௪. எந்தையும் யாயும்உணரக் காட்டி
ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்தபின்
மலைகெழு வெற்பன் தலைவந் திரப்ப
நன்றுபுரி கொள்கையின் ஒன்று கின்றே

முடங்கல்இறைய தூங்கணங் குரீஇ
நீடிரும் பெண்ணைத் தொடுத்த
கூடினும் மயங்கிய மைய லூரே.

—உறையூர்ப் பல்காயனார்

(இ - ள்.) தோழி—, எந்தையும் யாயும் உணரக் காட்டி - நம்தந்தையும் தாயும் உணரும்படி அறிவித்து, ஒளித்த செய்தி



வெளிப்படக் கிளந்தபின் - நம்முள் நாம் மறைத்துப் போற்றிய செய்தியை யான் வெளிப்படுத்துக் கூறியபின்னர், மலைகெழு வெற்பன் தலை வந்துஇரப்ப - மலைகள் பொருந்திய நிலத்தை யுடைய நம்தலைவன் தம்பால் வந்து வரைவுவேண்டாநிற்ப,

நன்றுபுரி கொள்கையின் - நமரும் நன்மையையே விரும்பிய கோட்பாட்டினாலே, முடங்கல் இறைய தூங்கணங்குரீஇ - வளைவினையுடைய சிறகுடையனவாகிய தூக்கணங்குருவிகள், நீடு இரும் பெண்ணைத் தொடுத்த - நீண்ட கரிய பனைமரத்தின் கண்ணே புனைந்த, கூடினும் மயங்கிய மையல் ஊர் - கூட்டினைப்
பார்க்கினும் மயங்கிய அறியாமையையுடைய

இன்று - நம்மோடு ஒன்றுவதாயிற்று.
இவ்வூர், ஒன்று

**விளக்கம்:**—மறைவெளிப்படுத்துங்கால் குறிப்பாகவே கூறவேண்டு தலின் குறிப்பாற் கூறியவிடத்தும் ஐயந்திரிபுகட்கு இடமில்லாதே அறிவித்தேன் என்பாள், 'உணரக் காட்டி' என்றாள். ஒளித்த செய்தி யாவது, தலைவனோடு கற்புக் கடம்பூண்ட களவொழுக்கம். இது தலைவற் கும் உடம்பாடு என்பது தோன்றக், 'கிளந்தபின் வெற்பன் தலைவந் திரப்ப' என்றாள். கிளத்தல் - கூறுதல். வெற்பன் என்றது, தலைவன் என்னும் துணையாய் நின்றது. வரைவினை இரப்ப என்க. இரந்ததனால் உண்டாகிய நன்றுபுரி கொள்கை என்க. நன்றுபுரிதல் - வரைவுடம் படுதல். அது சான்றோர் மேற்கோளாகலின் கொள்கை என்றாள்.

இறை - இறகு (சூ. நிகண்டு. கக. நகரவெ-கக) தூக்கணங் குருவி யின் கூடு ஒருவழிப்படாது பல்லாற்றானும் பின்னப்பட்டிருத்தலானே பல்லாற்றானும் மயங்கி அலர் தூற்றும் ஊர்க்கு உவமையாயிற்று. கூட் டினும்எனற்பாலது, எதுகை நோக்கிக் கூடினும்என நின்றது. மையல்- அறியாமை. மயங்குதற்குக் காரணமான மையல் என்க.

## பாட்டு - கூஎ௩: தோழி கூற்று

துறை :—இரவுக் குறிக்கண் சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய் இருபொழுதும் மறுத்து வரைவு கடாயது. அஃதாவது, வரைதற்கு முயலாது களவின்பமே விழைந்து இரவுக் குறிக்கண் வந்தொழுகுந் தலைவனுக்குத் தலைவி,

புறம்போகாதவாறு தமரானே நன்கு காக்கப்படுதலானே இருவகைக் குறியிடத்தும் அவளை இனிக் காண்டல் இயலாதென்பதனை உணர்த்தக் கருதிய தோழி அவன் சிறைப்புறத் தானாகத் தலைவிக்குக் கூறுவாள் போன்று அவன் கேட்பக் கூறியது.

இதன்கண், தோழி தலைவியை 'நோக்கி, நள்ளிரவினும் காவலர் உறங்காதவராய்த் தொண்டகச் சிறுபறையை முழக்கா நின்றனர்; ஆதலால், இன்று இரவுக்குறிக்கண் தலைவர் வாராராயின் நன்றாம்' என்று கூறுகின்றாள்.



௩௭௫. அம்ம வாழி தோழி இன்றவர்
வாரா ராயினோ நன்றே சாரற்
சிறுதினை விளைந்த வியன்கண்
இரும்புனத்
திரவரி வாரின் தொண்டகச் சிறுபறை
பானாள் யாமத்துங் கறங்கும்
யாமங் காவலர் அவியா மாறே.

1
........................

(இ - ள்.) அம்ம தோழி - தோழி கேட்பாயாக!, சாரல் சிறுதினை விளைந்த வியன்கண் இரும்புனத்து - மலைப்பக்கத்தே சிறிய தினை விளைந்துள்ள அகன்ற இடத்தையுடைய கொல்லையின் கண்ணே, இரவு அரிவாரின் - இராவினும் கதிர் அரிவாரைப் போன்று, தொண்டகம் சிறுபறை - தொண்டகமென்னும் சிறிய பறை, யாமம் காவலர் அவியாமாறு - இரவின்கட் காவல் செய்யுந் தொழிலையுடையோர் உறங்காமையானே, பால் நாள் யாமத்தும் கறங்கும் - பாதியாகிய இரவினும் ஒலியாநிற்கும்

ஆதலால், இன்று அவர் வாரார் ஆயின் நன்று - இன்றிரவு நம் தலைவர் வாராராயின் நலமாகும்.

**விளக்கம் :**—அம்ம - கேட்பித்தற் பொருட்டு. வாழி - அசைநிலை. வாராராயின் நன்றென்றது வந்தாற் காவலராற் காணப்பட்டு மறை வெளிப்படற்கேதுவாம் என்பதுபட நின்றது. ஓ, ஏ, அசைகள். வியன்கண் இரும்புனம் என்றது, தினை அரிதற்குப் பலநாள் ஆகும் என்பதுணர்த்தி என்றும் இரவுக்குறி வாராதிருப்பின் நன்றென்று குறிப்பானுணர்த்தியவாறு. தினையரியும் காலம் எனவே பகற்குறியினும் வருதற்கு இடமின்மை கூறி இருவகைக் குறியும் மறுத்தவாறுணர்க.

தொண்டகம் - குறிஞ்சிப்பறை. தொண்டகம் யானைமுதலியன தினையை அழியாமைப் பொருட்டு முழக்கப்படும் என்க.

பானாள் - ஈண்டு நடு இரவைக் குறித்துநின்றது. கறங்கும் - முழங்கும். யாமங் காவலர், இராப்பொழுதிலே ஊர்காவல் செய்வோர். காவலர் விழிப்புடையராய் யாண்டும் ஆராயுமியல்புடையராகவின் தலைவன் வரில் காணப்படுதல் ஒருதலை என்பாள், 'யாமங்காவலர் அவியாமாறு' என்றாள். அவிதல் - உறங்குதல். மாறு - ஏதுப்பொருள் தருவதோரிடைச் சொல்.

இருபொழுதும் இங்ஙனம் மறுக்கப்பட்டமையின் இனித் தலைவியை வரைந்து கோடலானன்றிக் காண்டலியலாதென வரைவுகடாவிய வாறுதலுணாக.

---

1. ஆசிரியர் பெயர்காணப்படவில்லை.

## மூலமும் உரையும்

௩௬௬

## பாட்டு - ௩௭௬ : தலைவன் கூற்று

துறை :—பொருள்வயிக்கும் நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லிச் செலவழுங்கியது. அஃதாவது, தலைவியைப் பிரிந்து போயப் பொருளீட்டத் தூண்டிய தன்னெஞ்சிற்குத் தலைவன் தலைவியைப் பிரிய மாட்டாமை கூறிச் செலவு தவிர்ந்தது.

இதன்கண், தலைவன் நெஞ்சினை விளித்து, 'நெஞ்சே நந் தலைவி வேனிற்காலத்தே பொதியமலையில் தோன்றிய சந்தனத் தினும் தண்மை மிககாள்; மற்றுப் பனிபடு பருவத்திலோ ஞாயிற்றின் வெம்மையைத் தன்னகத்தே ஏற்றுக் கூம்பிய தாமரைமலரினது உள்ளகம்போன்று சிறிய வெம்மையும் உடையள் காண்; அத்தகையோளை எவ்வாறு பிரியவல்லேம்,' என்கின்றான்.

௩௭௬. மன்னுயிர் அறியாத் துன்னரும் பொதியிற்
சூருடை அடுக்கத் தாரங் கடுப்ப
வேனி லானே தண்ணியள் பனியே
வாங்குகதிர் தொகுப்பக் கூம்பி ஐயென
அலங்குவெயிற் பொதிந்த தாமரை
உள்ளகத் தன்ன சிறுவெம் மையளே.

—படுமரத்து மோசிகொற்றனர்.

(இ - ள்) நெஞ்சமே!, மன் உயிர் அறியாத் துன்னரும் பொதியில் - நிலைபெற்ற உயிர்களாலே அறியப்படாத கிட்டுதற் கரிய பொதியமலையினுள்ள, சூர் உடை அடுக்கத்து ஆரம் கடுப்ப- தெய்வங்களையுடைய பக்கங்களிலே தோன்றிய சந்தனத்தைப் போன்று, வேனிலான தண்ணியள - வேனிற் பொழுதிலே நம் தலைவி குளிர்ச்சியை உடையவளாவாள், பனியே-இனிப் பனிப் பருவத்திலோ, வாஙகு கதிர் தொகுபப - தன்னாலே கவரப்பட்ட

கதிர்களை ஞாயிறு தன்பாற் சேர்த்துக் கொண்டமையானே, கூம்பி - குவிந்து, ஐ என அலங்கு வெயில் பொதிந்த தாமரை - அழகிதாக அசைகின்ற வெயிலைத் தன்னகத்தே வைத்து மூடிக் கொண்ட தாமரை மலரினது, உள் அகத்து அன்ன சிறு வெம்மையள் - உள்ளிடத்தைப் போன்ற சிறிய வெம்மையை உடையள்.

விளக்கம் :—வழிவழியாக உலகில் நிலைபெற்று வருதலின் மன்னுயிர் எனப்பட்டது. உயிர் ஈண்டு அறிதற்சிறப்புடைய மக்கள் உயிர் குறித்து நின்றது. துன்னுதற்கருமை தெய்வமுடைமையானும் உயர்ச்சியுடைமையானும் காடுகள் உடைமையானும் ஆம் என்க.

கு.—36



சூர் - தீண்டிவருத்தும் தெய்வம். அடுக்கம்-பக்கமலை. பொதியில்-பொதியமலை. ஆரம்-சந்தனம். பொதியமலை சிறந்த சந்தனந் தோன்றுமிடமாதலான் அம்மலைச சந்தனம் என்றான். இது தலைவியின் மேனி தண்ணிதாதற்கு உவமை. வேனிற்காலத்தே குளிர்ச்சியையும் குளிர் காலத்தே வெம்மையையும் நல்கி இன்பம் செய்பவள் என்க. தண்ணியள் - தண்ணென்ற ஊற்றின்பம் உடையள். தாமரையாலே கவரப்படும் கதிர் என்பாள், 'வாங்கு கதிர் தொகுப்ப' என்றாள். தொகுத்தல்-ஒருவழிச சேர்த்தல்; என்றது, ஞாயிறு கதிர் சுருங்கி மறையாநிற்ப என்றவாறு. வெப்பம் அசைந்து காணப்படுதல் கோடை வெயிலிற் காண்க. நீரின் அசைவுபோல அழகிதாய் அசைதலின் 'ஐயென அலங்கு வெயில்' என்றாள். வெயில் வெம்மைக்கு ஆகுபெயர். தாமரை பகற் பொழுதெல்லாம் மலர்ந்திருந்து வெயில் வெம்மையை ஈட்டித் தன்னுள்ளே பொதிந்துகொண்டு கூம்பும் என்றதன் நுணுக்கமும், அருமையும் உணர்ந்தின்புறுக. கூம்பிய தாமரைமலரின் உள்ளகம் சிறிது வெம்மையாயிருத்தல் பனிப்பருவத்தே தலைவியின் உடல் வெம்மைக்குவமை என்க.

வேனிற் காலத்தே தண்மையையும் பனிக்காலத்தே வெம்மையை

யும் விருப்புவது மக்களியல்பு. தலைவி அவ்வக் காலத்திற் கேற்ற இன்ப முடையள் எனவே, வேனிற்பொழுதிலே ஆற்றொணா வெம்மையே நல்கும் பாலைநிலத்தே அவளைப் பிரிந்துபோதல அமையுமோ என்று செலவழுங்கியபடியாம்.

## பாட்டு - கூஎஎ: தலைவி கூற்று

துறை :—வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி அழிந்து கூறியது. அஃதாவது, 'வரைவிடைவைத்துத் தலைவன் பிரிந்தமை தலைவி ஆற்றுகின்றிலள்' எனத் தோழி கவன்றாட்குத் தலைவி, 'யான் ஆற்றியிருப்பவும், ஆற்றுகிலேன்' என வருந்துதல் என்னை,' என்று கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, ' நந்தலைவர் பிரி

வானே என் கண்கள் நலங்கெடினும், தோள்கள் நெகிழினும், யான் அவரது நல்ல நட்பினை நினைந்து நெஞ்சின்கண் ஆற்றியே இருக்கின்றேன், அங்ஙனம் யான் ஆற்றவும் நீ என்பொருட்டு ஆற்றுயாகின்றதென்கொலோ ?' என்று வினவுகின்றாள்.

கூஎஎ. மலரேர் உண்கண் மாணலந் தொலைய
வளையேர் மென்றோள் ஞெகிழ்ந்ததன்
தலையும்

மாற்ரு கின்றே தோழியாற் றலேயே
அறிதற் கமையா நாடஞெடு
செய்து கோண்டதோர் சிறுநன் னட்பே.

— மோசிகொற்றஞர்.



(இ - ள்.) தோழி—, அறிதற்கு அமையா நாடனொடு - தனது தன்மையை அளந்தறிதற்குப் பொருந்தாத நந்தலைவனோடே, செய்து கொண்டதோர் சிறு நல் நட்பு - யாம் செய்து கொண்ட ஒரு சிறிய நன்றாகிய நட்பு, மலர் ஏர் உண்கண் மாண் நலந்தொலைய - தாமரை மலர்போன்ற மையுண்ட கண்களினது மாட்சிமையுடைய அழகு கெடா நிற்ப, வளை ஏர் மெல் தோள் ஞெகிழ்ந்ததன்தலையும - வளையல்கள் அழகிய மென்மையுடைய தோள்களினின்று கழன்றவிடத்தும், மாற்று ஆகின்று - என் நோய்க்கு மருநதாகின்றது, ஆற்றலே - அங்ஙனமாகவும் நீயோ என்திறத்துக கவன்று ஆற்றுகின்றாயல்லைகாண்.

**விளக்கம்** :—மலர் - ஈண்டுச் சிறப்பாற் றாமரை மலர் குறித்து நின்றது. உண்கண் - மையுண்ட கண். வளையையுடைய தோள் எனினுமாம். ஞெகிழ்ந்த என்பதன்கண் நகரத்திற்கு ஞகரம் போலி. மலரேர் என்பதன்கண், ஏர்: உவமவுருபு. ஞெகிழ்நததன்தலையும் - நெகிழ்ந்தவிடத்தும். 'அவன் பிரிவானே என்னுடலும் கண்களும் நிரலே நெகிழ்ந்தும் அழகழிந்தும் காணப்படினும் அவனது நட்பு நலத்தைக் கருதுமிடத்து என்னெஞ்சம் ஆறுதலே கொள்கின்றது. ஆதலால், என் புறத்தோற்றமே கண்டு நீ வருந்துதலை இனி விடு' என்றவாறு.

சிறுநன் னட்பு என்றதன்கண்,
நன்மை, தூய்மையின் மேற்று என்க.
சிறுமை, காலத்தின் மேற்று,

நிலத்தினும் பெரிதாய், நீரினும் ஆழளவின்றாய், எல்லையின்றிக் காணப்படுதலின் தன்னறிவானே அளந்து காணற்கியலாப் பேரன்புடையான் என்பாள், 'அறிதற்கமையா நாடன்' என்றாள். "அன்பெனும் ஒன்றின்றன்மை அமரரும் அறிந்ததன்றால்" என்பர், கம்பநாடரும்.

## பாட்டு - ௩௭௮ : செவிலி

## கூற்று

துறை:—மகட்போக்கிய செவிலி, தெய்வத்திற்குப் பராயது. அஃதாவது, தமர் அறியாவாறு தலைவி தலைவனோடே சென்றமையறிந்த செவிலி, 'என் மகள் சென்ற வழி அவட்கு இன்பமே நல்கும்படி அருள்க' எனத் தெய்வத்தை வாழ்த்தியது.

இதன்கண், செவிலி தெய்வத்தைக் கருதி, 'எம்மை விட்டுச் சுடர்வேற் காளையோடே என் மகள் சென்ற பாலை நிலவழி, 'ஞாயிற்றானே காயப்படாமல் மாநிழலுடைத்தாய், மணல் பரந்து மழையும் பெய்யப்படுவதாக!' என்று வேண்டுகின்றாள்.

௩எ௮. ஞாயிறு காயாது மரநிழற் பட்டு
மலைமுதற் சிறுநெறி மணன்மிகத் தாஅய்த்
தண்மழை தலையின் றாக நந்நீத்துச்
சுடர்வாய் நெடுவேற் காளையோடு
மடமா அரிவை போகிய சுரனே.

—கயமனர்.

(இ - ள்.) நம் நீத்துச் சுடர்வாய் நெடு வேல் காளையொடு- நம்மைப் பிரிந்து ஒளிபொருந்திய நெடிய வேலையுடைய தலைவனோடே, மடமா அரிவை போகிய சுரன் - மடப்பத்தையும் மாமைநிறத்தையும் உடைய என் மகள் சென்ற பாலைநிலம், ஞாயிறு காயாது - ஞாயிற்றானே வெயில் வீசப்படாமல், மர நிழல் பட்டு - மரங்களின் நிழலுண்டாகப்பெற்று, மலைமுதல் சிறுநெறி-மலையிடத்ததாகிய சிறிய வழி, மணல் மிகத் தாஅய் - மணல் மிகுதியாகப் பரவப்பெறறு, தண்மழை தலையின்று ஆக- தண்ணிய மழை பெய்யப்பட்டது ஆகுக.

விளக்கம் :—'தெய்வமே! என்மகள் சென்ற பாலைப்பெருவழி வெயிலின்றித் தண்ணிழல் உடைத்தாய் மணன்மிகப் பரவி மழை

பெய்யப்பெற்று அவள் செல்லற்கு இனிதாம்படி செய்தருள்க' என்று பராயவாறும்.

பாலைநிலத்தின் வெம்மையை அவள் மலரடி பொறா வென்பாள், ஞாயிறு காயாமை வேண்டினள். இனிதே தங்கி விளையாடற்கு மர நிழல் வேண்டினள். பரற்கற்கள் ஆயின் அவள் சீறடி நோம என் பாள், மணல் பரந்த நெறி வேண்டினள். பிறந்தநாள் தொட்டுப்

பாராட்டி ஊட்டி வளர்த்த எம்மையும் வெறுத்தகன்றாள்

என்பாள், 'நம்
நீத்து' என்றாள். எம்மினும் சிறந்த கேள்வனைப் பெற்றமையானே எம்மை நீத்தனள் என்பாள், 'சுடர்வேற் காளையொடு போகினள்' என்

றாள். சுடாவேற் காளை என்றது, அவனது ஆண்மைச சிறப்பும் அழகும் தோன்றநின்றது. சுடர்வேற் காளையொடு போயினள் என்றது, தோழி கூற்றைக்கொண்டு கூறியபடியாம்.

## பாட்டு - ௩௭௯ : தோழி கூற்று

துறை :—நொதுமலர் வரைவுழித் கோழி அறத்தொடு நின்றது. அஃதாவது, தலைவியை அயலார் வரைவுவேண்டி
வந்த காலத்தே தலைவி கற்புக்கடம்பூண்டமை செவிலிக்குக் குறிப்பால தோன்றும்படி அவள் கேட்பத் தலைவிக்குக் கூறு வாளாய்த் தோழி கூறியது.

இதன்கண், செவிலி கேட்கும் அண்மையளாகத் தோழி தலைவியை நோக்கி, "நினது அறிவு காழ்க்கொள்ளும் பொழுது, 'நங்காய்! நீ எம்மில்லிற்கு வரக்கடவை' என்று நினது கூந்

மூலமும் உரையும்

௫௬௫

தலைத் தடவிய நாடன், இன்று எவ்விடத்துள்ளானோ அறிகிலேன்?", என்கின்றாள்.

௩௭௧. இன்றியாண் டையனோ தோழி குன்றத்துப்
பழங்குழி அகழ்ந்த கானவன் கிழங்கினோடு
கண்ணகன் தூமணி பெறூஉம் நாடன்
அறிவுகாழ்க் கொள்ளும் அளவைச் செறிதொடி
எம்மில் வருகுவை நீயெனப்
பொம்மல் ஓதி நீவி யோனே.

1

..............................

(இ - ள்.) தோழி—, குன்றத்துப் பழங்குழி அகழ்ந்த கானவன் - மலையின்கண்ணே பழைய குழியைத் தோண்டிய குறவன், கிழங்கினோடு கண் அகல் தூ மணி பெறூஉம் நாடன் - கிழங்கோடே இடம் அகன்ற தூய மணியையும் பெறுதற்குக் காரணமான நாட்டையுடையோனும், செறி தொடி அறிவு காழ்க் கொள்ளும் அளவை - செறிந்த வளையலை உடையோய் நினது அறிவு முதிர்ந்தவுடனே, எம்இல் வருகுவை நீ என - எமது இல்லத்திற்கு வரக்கடவை நீ என்று கூறி, பொம்மல் ஓதி நீவியோன் - நிமிர்ந்த நினது கூந்தலைத் தடவியவனுமாகிய தலைவன், இன்று யாண்டையன் - இன்று எவ்விடத்துள்ளானோ அறிகிலேன்?

**விளக்கம்:**—யாண்டையனோ - எவ்விடத்துள்ளானோ. ஓகாரம் இரக்கப்பொருளது. பழங்குழி யகழ்ந்த கானவன் கிழங்கோடே தூ மணியையும் பெறும் என்றது, தனக்கு வழக்கமாகவுள்ள வேட்ட மேற்புக்கான் ஒரு தலைவன் வேட்டத்தோடே தூயமணிநிகர் தலைவியையும் பெற்றனன் என்னும் உள்ளுறை உடைத்து. பழங்குழி என்றது - பழைதாகிய ஊழ் தலைப்படுத்தப் பட்டமை குறித்து நின்றது.

தூமணி என்றாள், கற்புக் கடம்பூண்டமையின் சொதுமலர் வுடம்படாமை தோன்ற.

வரை

அறிவுகாழ்க் கொள்ளுதல் - ஈண்டுக் காமம் பருவத்தைக் குறிப்பான் உணர்த்தியது.

சால்புடைத்தாகும்

செறிதொடி: அன்மொழித்தொகை; விளியேற்று நின்றது.

இயற்கைப் புணர்ச்சியின்கண் ணிகழும் மெய்ப்பாடு பன்னிரண்டனுள் கூழை விரித்தல் மெய்யுறு புணர்ச்சிகு ஏதுவாமாகலின், 'பொம்மலோதி' என்றது உணர்ச்சிவயப்பட்டு நிமிர்ந்த கூந்தல் என்றவாறு. பொம்மல் ஈண்டு எழுச்சி என்னும் பொருளதாய் நின்றது. இக்கருத்தறியார் வாளா 'செறிந்த' என்று பொருள் கூறினர். ஓதி நீவுதல் ஈண்டுக் குறிப்பாய் மெய்யுறு புணர்ச்சியை விளக்கி நின்றது.

---

1. ஆசிரியர் பெயர் காணப்பெறவில்லை.



'அவன் யாண்டையனோ?' என்றது, ஈண்டு வரைவு வேண்டி வருதற்குரிய அத்தலைவன் வாராமல் நொதுமலர் வரைவு வேண்டுகின்றனர் என்பதுபட நின்றது.

இதனால் தலைவி பண்டோர் தலைவனோடே நட்புக்கொண்டு கற்புக் கடம்பூண்டனள் என்பது குறிப்பாற் செவிலிக்குணர்த்தப் பட்டமை அறிக.

## பாட்டு - ௯௦ : தோழி கூற்று

துறை :—பனிப் பருவம் குறித்துப் பிரிந்தான் தலைமகன்; பிரிதலால் பருவ வரவின்கண் வேறுபடுவாளாயினும் கதுமென ஆற்றுவிப்பது அரிதென்னும் கருத்தினளாய்க் கூதிர்ப்பருவத்துத் தலைமகள் கேட்பத் தனது ஆற்றாமை விளங்கத் தோழி சொல்லியது.

அஃதாவது, முன்பனிப்பருவத்தே வருவல் எனத் தலை வன் கூறிச்சென்றான்; ஒருகால் அவன் குறித்த பருவத்தே வாரானாயின் அப்பொழுது இவள் வருத்தத்தை ஆற்றுதல் அரிதாம் என்று தோழி கருதினாள்; அவள் ஆற்றாளாதற்கு முன்னரே இதனைத் தலைவி உணர்ந்து ஆற்றிக்கோடற்பொருட்டுத் தலைவனைக் குறைகூறியது.

இதன்கண், தோழி, தலைவியை நோக்கி, 'நந்தலைவர் மழை ஒழியாதே பொழிகின்ற இக் காலத்தே நம்மை நினையாது சேய்

நாட்டி லுறைகின்றார் ; அவா
அணித்தே வருகின்றது; அவர்

குறித்த பனிப்பருவமோ
வாராராயின் யாம் என் செய்
கோம் ?' என்று வினவுகின்றாள்.

ருஅ௦. விசும்புகண் புதையப் பாஅய் வேந்தர்
வென்றெறி முரசின் நன்பல முழங்கிப்
பெயலா னுதே வானம் காதலர்
நனிசேய் நாட்டர் நம்முன் னலரே
யாங்குச்செய் வாங்கொல் தோழி
யீங்கைய
வண்ணத் துய்ம்மலர் உதிர
முன்னர்த் தோன்றும் பனிக்கடு நாளே.

—கருவூர்க் கதப்பிள்ளை.

(இ - ள்.) தோழி—, விசும்பு கண் புதையப் பாஅய் - வானிடம் மறையும்படி யாண்டும் பரந்து, வேந்தர் வென்று எறி முரசின் நன்பல முழங்கி - அரசர்கள் தம் பகையை வென்ற பின்னர் முழக்கும் வெற்றிமுரசினைப்போன்று நன்மையாகப்

௩௬௭

பலகாலும் முழங்கி, வானம் பெயல் ஆனாது - முகில் மழை பொழிதலை ஒழிந்திலது, காதலர் நனிசேய் நாட்டர் நம் உன்னலர் - நம் காதலரோ மிகவும் தொலைவின்கண் உள்ள நாட்டின் கண் உளர்; மேலும் நம்மை நினைந்ததுமிலர், ஈங்கைய வண்ணத் துய்மலர் உதிரப் பனிக்கடு நாள் முன்னர்த் தோன்றும் - ஈங்கை யின்கண் மலர்ந்தனவாகிய நிறத்தையும் துய்மையும் உடைய மலர்கள் உதிரும்படி பனிபடுங் கடிய நாள்களோ அண்மையின் நம்மெதிரே வாராநிற்கும், யாங்குச் செய்வாம - அப் பருவ வரவின்கண் யாம் என்ன செய்வேம்.

**விளக்கம்:**—பனிப்பருவத் தொடக்கத்தே வருவர் வருவர் என்னும் கருத்தானே தலைவி ஆற்றியிருந்தாள். அப் பருவம் வந்தவுடன் அவன் வாரானாயின் ஞெரேலென ஏங்கி இறந்துபடினும் படுவள் என்று அஞ்சிய தோழி, பருவவரவின் முன்னரே எதிரதாக் காப்பாள் ஒருகால் அப் பருவ வரவின் தொடக்கததே அவன் வரவியலாமையும் கூடும் என்பதுபடக் கூறி அவள் மனநிலையை அங்ஙனம் நிகழினும் ஆற்றியிருத்தற்கு வல்லிதாம்படி செய்வாள் இங்ஙனம் கூறுகின்றாள் என்க. தோழி செய்யும் இச சூழ்ச்சி மனத்தியல்பறிந்த சான்றோரானே உன்னி உன்னி இன்புறற் பால தொன்றாம் என்னை? எதிர்காலத்தே யாதானுமொரு கேடு வாராதென்றிருப்போர்க்கு அக் கேடு கதுமென நேரின் ஆற்றவியலாமையும் எதிர்காலத்தே இன்ன கேடு நேரினும் நேரலாம் என்று எதிர்பார்த்திருப்போர் அக்கேடு நிகழுங்கால் அதனைத்தாங்கும் வண்ணம் தம் மனததைத் தகுதியாக்கிக் கோடலும் இயல்பாகலான் என்க.

ஈண்டு பனிப்பருவம் அணித்தே வருகின்றது. நம் காதலரோ தனிசேய் நாட்டு நம்மை நினையாது தாம் மேற்கொண்ட வினையே நினைந்திருக்கின்றனர் என்றது, அப்பருவத் தொடக்கத்தே அவர் குறித்தபடி வாராதிருத்தலும் இயல்பேயாம். அங்ஙனமாயின் என் செய்வாம் என்று வினவியபடியாம். இதனால், தலைவிக்குப பருவ வரவின்கண் தலைவர் வாராராயினும் சிறிது தாழ்த்து வருதல் ஒருதலை; யான் இப்போது ஆற்றுமாப்போலே அப்பொழுதும் ஆற்றுதல் வேண்டும் என்னும் சூழ்சசி பிறந்து அப்பொழுதும் ஆற்றுதற்கு மனம் வல்லிதாகப் பெறும் என்க.

> "எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
> அதிர வருவதோர் நோய்" (குறள் - ௪௨௯.)

எனவரும் அருமைத் திருக்குறள் ஈண்டு நினையற்பாலது.

பாஅய் - பரந்து. வென்றெறி முரசம் - வெற்றி முரசம். நம் முன்னலர் என்றது, தாம் மேற்கொண்ட வினையை முன்னுவர் என்றவாறு. நனிசேய் நாட்டில் வினையே முன்னியிருப்போர் அவ்வினை முற்றுங்காறும் நம்முன்னுதிருத்தலே இயல்பு எனத் தேறுதற்கு வழி கூறியவாறு. வினைமுற்றியவுடன் வருதல் ஒருதலை என்பது குறிப்பு.

பனிக்கடு நாள் முன்னர்த்தோன்றும் என்றது, இது கூதிர்ப் பருவத்தின் இறுதிப் பகுதியாகலான் அப்பருவம் அண்மையிற் றோன்றும



என்றறிவுறுத்து அப் பருவ வரவின்கண் தலைவன் வாராமைக்கும் ஏதுக்காட்டினாள் என்க. யாங்குச் செய்வாம் என்றது, இப்போது ஆற்றுமாறு போன்றே அவர் வினைமுற்றி வருந்துணையும் ஆற்றுதல் வேண்டும் என்னும் சூழ்ச்சி தோன்றற் பொருட்டென்க. தாய் - மலரின்கண் பஞ்சு நுனி போன்றதோர் உறுப்பு.

'ஈங்கை மலர் உதிர் பருவத்தே வருவன்' எனத் தலைவன் கூறிப் போயினமையின் அதனை எடுத்தோதினாள் என்க.

## பாட்டு - ௩௮௧: தோழி கூற்று

துறை — வரைவிடை ஆற்றாளாகிய தலைமகளை ஆற்றுவித்தலுறும் தோழி தலைமகனை இயற்பழித்தது. அஃதாவது, வரைவிடைவைத்துப் பிரிந்த தலைவனை நினைந்து பெரிதும் வருந்திய தலைவியின் நெஞ்சைப் பிறிதொரு வழியிலீர்த்து ஆற்றுவிக்க எண்ணிய தோழி தலைவனைப் பழித்துக் கூறியது

இதன் கண், தோழி தலைவியை நோக்கி, 'யாம் தலைவனோடே இலங்கெயிறு தோன்ற நக்கதன் பயன் நமது தொல் கவின் தொலைந்து தோள் நலம அழிந்து அல்லல் நெஞ்சமொடு நாடோறும் இரவில் துயிலாது மேனி பசலை பாய அழியும் இதுதானோ?' என்கின்றாள்.

ந௨௧. தொல்கவின் தொலைந்து தோணலஞ்
சாஅய்

அல்லல் நெஞ்சமோ டல்கலும் துஞ்சாது
பசலை யாகி விளிவது கொல்லோ
வெண்குருகு நரலுந் தண்கமழ் கானற்
பூமலி பொதும்பர் நாண்மலர் மயக்கி
விலங்குதிரை உடைதருந் துறைவனோ
டிலங்கெயிறு தோன்ற நக்கதன் பயனே.

1

.................................

(இ - ள்.) தோழி—, வெண் குருகு நரலும் தண் கமழ் கானல - வெள்ளிய நாரைகள ஆரவாரியாநின்ற குளிர்ந்த மணங் கமழ்கின்ற கடற்கரையிலே, பூமலி பொதும்பர் நாண்மலர் மயக்கி-பூக்கள மிக்க சோலையிடததே பூத்த புதியமலர்களைக்

கலங்கச் செய்து, விலங்கு திரை உடைதரும் துறைவனொடு-குறுக்கிடும் அலைகள் உடையாநின்ற கடற்றுறையையுடைய

**நந்தலைவனோடே, இலங்கு எயிறு தோன்ற**

**நக்கதன் பயன்-**

விளங்குகின்ற பற்கள் தோன்றும்படி நகைத்ததனால் உண்டா கிய பயன், தொல்கவின்தொலைந்து தோள் நலம் சாஅய்-பழைய

---

1. ஆசிரியர் பெயர் காணப் பெறவில்லை.

## மூலமும் உரையும்

௫௱௬

அழகுகெட்டுத் தோள்களின் நலமும் மெலியாநிற்ப, அல்லல் நெஞ்சமொடு அல்கலும் துஞ்சாது-வருந்துதலையுடைய நெஞ்சத் தோடே இராப்பொழுதுகளினும் துயிலாமல், பசலை ஆகி விளி வது கொல்-மேனியிற் பசலை உண்டாகும்படி அழிந்து படுவது தானோ?

விளக்கம்—: கடற்றிரைப் பொதும்பரிலுள்ள நாண்மலரைக் கலங்கச் செய்து உடைதரும் என்றது, தலைவன் நம்மைக் கேண்மைகொண்டு பின்னர்க் கலங்கும்படி நீத்தான் என்னும் உள்ளுறை தோற்றி நின்றது.

வந்த வெள்ளம் இருந்த வெள்ளத்தையும் கொண்டு போயிற்று என் னும் பழமொழிப்படி, கேண்மையால் உண்டாக வேண்டிய நலம் இல்லையானதோடன்றி நமக்கியல்பாகவுள்ள நலத்தையும் அழித்த தென்பாள், 'தொல் கவின் தொலையத் தோள் நலம் சாஅய்' என்றாள்.

தொல்கவின் என்றது, தலைவனைக் காணுமுன்னர் இருந்த அழகு என்றவாறு. சாஅய்-மெலிந்து. இடையறாது நினைந்து வருந்தும் நெஞ்சத்தோடே என்பாள், 'அல்லல் நெஞ்சமோடு' என்றாள். அல்கல்-இரவு. எயிறு தோன்ற நகைத்தது என்றது, இயற்கைப்புணர்ச்சியுடம்பாட்டை. நக்கதன் பயன் வாழ்வுபெறுதலாக இருக்க, அழிவதாயிற்றே; இங்ஙனம் நட்டாரை நீத்தவன் சான்றோன் அல்லன் என்று தலைவனைக் குறிப்பான் இயற்பழித்த வாறுதல் காண்க.

இதனால் தலைவிக்குச் சூழ்ச்சி பிறந்து தலைவனது நட்புச் சிறப்பினை ஆராயுமாற்றால் ஆற்றாமை நீங்குதல் பயன் என்க.

## பாட்டு : ௩௮௨ : தோழி கூற்று

துறை:—பருவ வரவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி, 'பருவ மன்று, வம்பென்று' வற்புறீஇயது. அஃதாவது, தலைவன குறித்துச் சென்ற பருவம் வந்தும் அவன் வாராமையானே பெரிதும் வருந்திய தலைவிக்குத் தோழி, 'இஃதவன் குறித்துச் சென்ற கார்ப்பருவமன்று; இப்போது பெய்வது வம்ப மாரி' எனக்கூறி ஆற்றுவித்தது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'மழை பெய்கின்றமையானே இது கார்ப்பருவம் போலும் என்று நீ கருதுகின்றனை; இது கார்ப்பருவம் அன்று; இம்மழை வம்பமழை; கார்ப்பருவமாயின் நங்காதலர் வந்துவிடுவரல்லரோ?' என்று தோழி

கூறுகின்றாள்.

௩௪௨. தண்துளிக் கேற்ற பைங்கொடி முல்லை
முகைதலைத் திறந்த நாற்றம் புதல்மிசை
பூமலி தளவமொடு தேங்கமழ்பு கஞல
வம்புப் பெய்யுமால் மழையே வம்பன்று



காரிது பருவம் ஆயின்
வாரா ரோநம் காத லோரே

—குறுங்கீரனார்.

(இ-ள்.) தோழி—, தண் துளிக்கு ஏற்ற பைங்கொடி முல்லை - தண்ணிய மழைத்துளிகளை ஏற்றுக்கொண்ட பசிய கொடியாகிய முல்லையினது, முகைதலை திறந்த நாற்றம்-அரும்புகள் மலர்ந்தமையானே உண்டாய மணம், புதல் மிசைப் பூமலி தளவமொடு தேம் கமழ்பு கஞல-புதலின் மேல் பூக்கள் மிக்கசெம் முல்லையோடே தேன் மணக்குமாறு நெருங்காநிற்ப, மழை வம்பு பெய்யும் - முகில்கள மழையைக் காலமல்லாத காலத்தே பெய்யும், வம்பன்று இது கார்ப்பருவம் ஆயின் -வம்பமாரி யன்று இது கார்ப்பருவமாரியே என்பாயாயின், நம் காதலர் வாராரோ- நங் காதலர்

வரமாட்டாரோ?

**விளக்கம்:**—'நம் காதலர் வாராமையானே இது கார்ப்பருவ மழை யன்று; வம்ப மழையே என்பது தேற்றம். ஆதலால், அவர் அப்பருவம் வருமுன் வருவர்; நீ ஆற்றுக' என்பது குறிப்பு.

துளிக்கு - வேற்றுமை மயக்கம். முகை-அரும்பு. மலர்தல். புதன்மிசைப் படர்ந்த தளவம் என்க.

தலைதிறத்தல்-
தளவம் - செம்

முல்லை. தேம் - தேன். கமழ்பு - கமழ்ந்து.

கஞலுழல் - செறிதல்.

வம்பு - புதுமை. மழைபெய்யாத பருவங்களிலே ஞரேலென முகில்கள் தோன்றிப் பெய்யும் மழையை வம்பமழை என்ப.

இது கார்ப்பருவ வரவென்றே நீ கருதினையாயின் என்பாள்,'வம்பன்று காரிது பருவமாயின்' என்றாள். இது கார்ப்பருவமாயின் என மாறுக. கார்ப்பருவமல்லாமைக்கு அளவை கூறுவாள், 'காதலர் வாராரோ' என்றாள் இது கார்ப்பருவமாயின் அவர் வந்திருப்பர் அவர் வாராமையானே இது வம்பென்பது தேற்றம் என்றவாறு. உண்மையில் கார்ப்பருவமே யாகவும் தலைவியை மருட்டி ஆற்றுவிக்கும் பொருட்டு இங்ஙனம் தோழி கூறினாள் என்க.

"பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்" (குறள்-உகூஉ)

எனச சான்றோர் கூறுமாற்றான் இங்ஙனம் பொய்ம்மையாகாமையும் உணர்க.

கூறுவன வெல்லாம்

## பாட்டு - நுஅரு : தோழி கூற்று

துறை:—உடன்போக வருந்துந் தலைமகளை நாணுக் கெடச்
சொல்லியது. அஃதாவது, தலைவனுடன் போக முன்னர் உடம்பட்டு அவன் வந்த பின்னர் நாணமீதூர்தலானே உடன் போக ஒருப்படாது நின்ற தலைவியின் நாணம் நீக்கி உடன்போக் கும் பொருட்டுத் தோழி கடிந்துரைத்தது.

மூலமும் உரையும்
ருளக

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, "நீ உடம்பட்டமை யானே யான் தலைவனை ஈங்குக் கொணர்ந்தேன்; அவனும் நின்

வரவினை எதிர்நோக்கி நிற்கின்றான்; நீயோ 'நாளைப் போகுவல்' என்கின்றனை; யான் நின் செயலாலே கைகால்கள் ஓய்ப்பெற்று நடுங்காநின்றேன்; பின் யான் என்செய்வேன்!'' என்று கடிந்து கூறுகின்றாள்.

நடுரு. நீயுடம் படுதலின் யான்தர வந்து
குறிநின் றனனே குன்ற நாடன்
இன்றை யளவை சென்றைக் கென்றி
கையுங் காலும் ஓய்வன அழுங்கத்
தீயுறு தளிரின் நடுங்கி
யாவதும் இலையான் செயற்குரி யதுவே.

—படுமாத்து மோசிகீரனூர்.

(இ - ள்.) நீ உடம்படுதலின்-தோழி நீ தலைவனுடன் போதற்கு இயைந்தமையானே, குன்ற நாடன் யான் தர வந்து குறி நின்றனன்-மலைநாட்டையுடைய நந்தலைவன் யான் அழைக்க வந்து குறியிடத்தே நிற்கின்றான், இன்றை அளவை சென்றைக்க என்றி-நீயோ இன்றையாகிய ஒருநாள் அளவேனும் கழிவதாக நாளைச்செல்வல் என்கின்றாய், கையும் காலும் ஓய்வன அழுங்க - யானோ என் கைகளும கால்களும் செயலற்று வருந்தாநிற்ப, தீ உறு தளிரின் நடுங்கி-தீயில் இடபபட்ட தளிரைப் போல நடுங்குவதல்லது, யான் செயற்குரியது

யாவதும் இலை- யான் செய்யத்தக்கது யாதும் இல்லை.

**விளக்கம்:**—யானே தலைவனை அழைத்தேனும் அல்லன் என்பாள்,

'நீ உடம்படுதலின் யான் தர' என்றாள். யான் தர-யான் அழைத்துக் கொணர. குறி - நீ இவ்விடத்தே நில், யான் தலைவியை அழைத்து வருவல் எனச சுட்டிய இடம்.

இன்றை யளவை - இற்றை நாளாகிய காலவரை இன்று மட்டும் கழிக என்றி என்றவாறு. நாளைச் செல்வல் என்பது குறிப்பு. இது தலைவனை வாளா அலைத்ததாகுமாதலின் யான் நடுங்குகின்றேன் என்பாள், 'தீயுறு தளிரின் நடுங்கி' என்றாள்.

அஞ்சி நடுங்குவார்க்கு கைகால்கள் செயலற்றுப் போதல் நடுங்கி நிற்றல் அல்லது என வருவித்துரைக்க.

இயல்பு.

தனக்குற்ற துன்பமிகுதி கூறுவாள், 'தீயுறு தளிரின் நடுங்கி' என்றாள். யாவது· மிலையான் செயற்குரியது என்றது, நீ இன்று உடன் போகாது தாழ்த்திருப்பை எனின்,'இனி,இந்நிகழ்ச்சியில் யான் உனக்கு யாதோர் உதவியும் செய்யும் தகுதியில்லாதேன் ஆகிவிடுவென்' எனக் குறிப்பான் அச்சுறுத்தியவாறும். தலைவன் இனி நின்னை

அழைத்துப் போக மறுப்பினும் மறுப்பன் என்பது குறிப்பு, 'ஆதலால் நாணிக்கிக் கற்புக் கடம்பூணலே நீ இப்போது செயற்பாலது' என்று வற்புறுத்தியபடி யாயிற்று.

## பாட்டு - ௩அ௪ : தோழி கூற்று

துறை :—'நின் பரத்தையர்க்கு நீ உற்ற சூளுறவு நன்றாயிருந்தது!' என்று நகையாடித் தோழி வாயின்மறுத்தது.

அஃதாவது, பரத்தையரிடத்திலிருந்து வந்து தன்பால் குறை இரந்து வாயில் வேண்டிய தலைவனை, "நீ பரத்தையர்க்கு 'நும்மிற் பிரியேன்' எனச் சூள் உரைத்திருப்பாயன்றே; அங்ஙனம் உரைத்த சூள் என்னும்?" என நகைத்து வாயில்மறுத்தது.

இதன்கண், தோழி தலைவனை நோக்கி, "மகிழ்ந, நீ கரும் பெழுதிய தோளையும், நெடிய கூந்தலையும், குறுந்தொடியையும் உடைய பரத்தையர்க்கு 'நும்மிற் பிரியேன்' எனச் சூளுரைத்து மருட்டி அவர் நலநுகர்ந்த பின்னர் இங்ஙனம் வருவாய் எனின் நின்சூள என்னுமோ!" என்று நகைக்கின்றாள்.

௩அ௪. உழுந்துடைக் கழுந்திற் கரும்புடைப்

பணைத்தோள்

நெடும்பல் கூந்தற் குறுந்தொடி மகளிர்
நலனுண்டு துறத்தி யாயின்
மிகநன் றம்ம மகிழ்நநின் சூளே.

—ஓரம்போகியார்.

(இ - ள்.) மகிழ்ந - தலைவ, உழுந்து உடை கழுந்தின் - உழுந்த நெற்றினை உடைத்தற்குரிய கழுந்துடைய தடிபோன்ற, கரும்புஉடைப் பணைத்தோள் - கரும்பெழுதிய தொய்யிலை யுடைய பருத்த தோள்களையும், நெடும்பல் கூந்தல் - நெடிய பலவாகிய கூந்தலினையும், குறுந்தொடி மகளிர் - குறிய வளையல் களையும உடைய பரத்தையரது, நலன் உண்டு துறத்தி ஆயின் - பெண்மைநலத்தை நுகர்ந்து பின்னர் அவரைக் கைவிடுவா யாயின், நின்சூள் மிக நன்று - நீ அவர்க்கு மொழிந்த சூள் மொழி மிகவும் நன்றாக இருந்தது!

**விளக்கம்:—** "நீ தலைவிக்கு முன்னர்க் களவுக்காலத்தே 'நின்னிற் பிரியேன்' எனச் சூள்மொழிந்து, இப்பொழுது அச்சூள் மொழி போற்றாது பரத்தையர்பால் தலைவியை நீத்துச் சென்றனை; ஆண்டும் அவர்க்கு இங்ஙனம் சூள் மொழிந்தே மருட்டி அவர் நலனுண்டிருப் பாய்; நலனுகர்ந்த பின்னர் அவர்க்குரைத்த சூள்மொழியும் தப்பி இங்குவந்தனை; இவ்வாற்றானே நின் சூள்மொழி மிகமிக நன்றாயிருந் தது?" என்று நகைத்தவாறாம்.

கழுந்து-தேய்ந்து மழுங்கிய தழும்பு; உழுந்தடிக்கும் தடி, அங்ஙனம் தழும்புடைத்தாகலின் கழுந்து என்றாள். கழுந்து - ஆகுபெயர். கரும்பு - கரும்பு போன்று எழுதப்பட்ட தொய்யில் என்க. மெடும்பல் கூந்தற் குறுந்தொடி மகளிர் என்புழி முரண்தோன்றிச் செய்யுளின் பம் மிகுதல் உணர்க. குறுந்தொடி-குறிய வளையல். மகளிர் எனப் பொது விற் கூறினள், தலைவிக்கு மொழிந்த சூள்மொழியையும் கருதி. நல னுண்டு துறத்தலே நின் தொழில் என்பது பட மகளிர் நலனுண்டு துறத்தியாயின் என்றாள். மிகநன்று என்றது இகழ்ச்சி. மிக வும் தீது என்றவாறு. நின்போலும் சான்றோர்பால் இங்ஙனம் தீது காணப்படுதல், வியப்புக்குரியதென்பாள் ‘மிக நன்றம்ம’ என்றாள். அம்ம : வியப்பின்கண் வந்தது.

எனவே, நின் மொழியை இனியாம் மெய்யென்று கருதி மயங் கேம்; “நீ வந்தாங்கேமாறு” என்று வாயில்மறுத்தவாறுதல் அறிக.

## பாட்டு - ௩௮௫ : தலைவி கூற்று

### துறை:—வேற்றுவரவு மாற்றியது.

அஃதாவது, தொது
மலர் வரைவொடு புகுந்தமை அறிந்த தலைவி, தோழியை அறத் தொடு நிற்பித்து மறைவெளிப்படுத்துமாற்றானே அவ்வரை வினை மாற்றியது.

இதன்கண், தலைவி தோழி கேட்ப

'பெருவரை அடுக்கத் துக் கிழவன்
அன்றையன்ன நட்பினனாக இருப்பவும், இவ்
வழுங்கலூர் புதுவோரை உடைத்து' என்று
கூறுகின்றாள்.

ரு௫. பலவிற் சேர்ந்த பழமார் இனக்கலை
சிலைவிற் கானவன் செந்தொடை
வெரீஇச்
செருவுறு குதிரையிற் பொங்கிச் சாரல்
இருவேதிர் நீடமை தயங்கப் பாயும்
பெருவரை அடுக்கத்துக் கிழவன்
என்றும்
அன்றை யன்ன நட்பினன்
புதுவோர்த் தம்மவிவ் வழுங்க லூரே.

—கபிலர்.

(இ - ள்) பலவில் சேர்ந்த பழம் ஆர் இனக் கலை-பலாமரத்தில் பொருந்திய பழத்தைத தின்னுகின்ற திரளாகிய ஆண் குரங்குகள், சிலைவில கானவன் செந்தொடை வெரீஇ-ஆரவாரிக்கின்ற வில்லையுடைய வேட்டுவனது செவ்விய அம்பை அஞ்சி, செருவுறு குதிரையின் பொங்கி - போர்க்களததே எய்திய குதிரைகளைப் போலத் தாவி, சாரல் இரு வெதிர் நீடு அமை தயங்கப் பாயும் - மலைபக்கத்தேயுள்ள பெரிய மூங்கிலினது நீண்ட

கோல் அசையும்படி பாயாநிற்கும், பெருவரை அடுக்கத

ருஎச குறுநடதாகை

துக் கிழவன் - பெரிய மலைப்பக்கத்தையுடைய நம் தலைவன், என்றும் அன்றையன்ன நட்பினன் - எப்பொழுதும் அன்றிருந் ததைப் போன்று மாறுபாடின்றி இருக்கும் நட்பை உடையனாக வும், இவ் அழுங்கல் ஊர் புதுவோர்த்து அம்ம - இவ்வாரவா ரத்தையுடைய ஊரோ என் வரைவு குறித்து வந்த புதியவர்களை யுடையது; இஃதொரு வியப்பு.

விளக்கம் :— பலா - பலவு என ஆக்குறுகி உகரமேற்றது. பலா மரத்தை எய்திய கலை எனினுமாம். இனக்கலை - திரளாகிய கலை என்க. கலை - ஆண்குரங்கு. சிலைவில் - ஒலிக்கும் வில், வினைத் தொகை.

செந்தொடை - செவ்விய அம்பு. தொடுக்கப்படுதலால், அம்பு

தொடை எனப்பட்டது வெரீஇ - வெருவி, அஞ்சி. செரு, களத்திற்கு ஆகுபெயர். போர்க்களத்திலே குதிரை தாவுமாறு போலத் தாவி என்க. பொங்குதல் - மேலெழுதல், ஈண்டுத் தாவுதல் என்னும் பொருட்டு. வெதிர் - மூங்கில் அமை - ஆகுபெயராய்க் கோல் என்னும் பொருட்டாயது. அமை - மூங்கில். தயங்க - அசைய. பெருவரையடுக்கத்துக் கிழவன் என்றது, உருவானும் திருவானும் பிறப்பானுமட உயர்ந்தவன் என்பதுபட நின்றது. அவன் நமது மாறுபடாக் காதலனாக இருப்பவும் வேற்றோர் வரைவு வேண்டி வந்திருத்தல் வியப்பென்றாள். தோழி அவர் வருமுன்பே மறை வெளிப்படுத்து அவர் வருகையை மாற்றாளாயினள் என்னும் செறல் பற்றி, 'இப்போதேனும் அறத்தொடு நிற்பாயாக' என்று தோழிக்குக் குறிப்பானுணர்த்தியவாறாம்.

அன்றை என்றது, இயற்கைப்புணர்ச்சி எய்திய நாளை. அம்ம: வியப்பின்கண் வந்தது. புதுவோர்த்து - புதியோரை உடையது.

பலாமரத்திலுள்ள கலை, வேடன் தொடைவெரீஇ மூங்கில் கோலிற் பாயும் என்றது, நீ அறத்தொடுநிற்பின் இப் புதுவோர் விரைந்து தத்தமில்லம் புகுதுவர் என்னும் உள்ளுறை தோற்றி நின்றது.

## பாட்டு - ௩அ௬ : தலைவி கூற்று

துறை :—பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி வன்புறை எதிரழிந்து கூறியது. அஃதாவது, தலைவன் பிரிந்த காலத்தே பெரிதும் வருந்திய தலைவியை, 'நீ ஆற்றுதலே நன்' றெனத் தோழி வற்புறுத்து ஓதினளாக, அவள் கூற்றிற்கு நெஞ்சழிந்து தலைவி கூறியது.

இதன்கண், தலைவி தோழியைநோக்கி, 'துறைவன் பிரியாத காலத்தே மாலைக்காலத்தை மட்டுமே அறிவேன்; அம் மாலைக்காலம் நிலப்பரப்பன்ன துன்பத்தோடே உடைத்தாதலை அறிந்திலேன்' என்கிருள். தனிமையும்

மூலமும் உரையும்
ருளரு

ஙஅசு. வெண்மணல் விரிந்த வீததை கானல்
தண்ணந் துறைவன் தணவா ஊங்கே
வாலிழை மகளிர் விழவணி கூட்டும்
மாலையோ அறிவேன் மன்னே மாலை
நிலம்பரந் தன்ன புன்கணோடு
புலம்புடைத் தாகுதல் அறியேன் யானே.
—வெள்ளிவீதியார்.

(இ - ள்.) தோழி, வெண்மணல் விரிந்த வீததை கானல் - வெள்ளிய மணல் பரவிய மலர்கள்

செறிந்த கடற்கரைச் சோலை யையும், தண்ணந் துறைவன் - குளிர்ந்த கடற்றுறையை யும் உடைய நம் தலைவன, தணவா ஊங்கே - நம்மைப் பிரியாத முன்காலத்தே, வால் இழை மகளிர் விழவு அணி கூட்டும் - தூய அணிகலன்களையுடைய மகளிர்கள விழவின் பொருட்டு அணி களைத் தொகுக்கின்ற, மாலையோ அறிவேன் மன் - மாலைக்காலத் தையே அறிவேனாயினேன் அஃதிப்பொழுது கழிந்தது, மாலை நிலம் பரந்தன்ன புன்கணொடு - மாலைக்காலம் நிலம் பரந்தது

போலப் பரந்த துன்பத்தோடே, புலம்புடைத்து ஆகுதல் யான் அறியேன் - தனிமையும் உடைத்தாகுதலை யான் அப் பொழுது அறிந்திலேன்.

**விளக்கம் :—** வீ - மலர். ததைதல் - செறிதல். கானல் - கடற் கரைச் சோலை. தண்ணந் துறைவன் என்றது, அவன் அளியுடைமை நினைந்து கூறியவாறு. தணத்தல் - பிரிதல். ஊங்கென்னும் சுட்டு காலத்தைச் சுட்டி நின்றது. பிரியாது உடனுறைந்த காலத்தே

என்றவாறு. அக்காலத்தே மாலைப்பொழுது அணிகூட்டி மகிழ்தற் குரியதொரு நற்பொழுதாகவே இருந்ததென்பாள், மகளிர் விழவணி கூட்டும் மாலையோ அறிவேன், என்றாள். ஓகாரம்: பிரிநிலை. விழவணி என்றதற்குச் சிறந்த அணியெனக் கொள்க. மகளிர் மாலைப் பொழு திலே ஒப்பனைக் குரியவெல்லாம் கூட்டி ஒப்பனை செய்துகோடலை,

“பகலுரு வுற்ற இரவுவர நயந்தோர்,
காத லின்றுணை புணர்மார் ஆயிதழ்த்
தண்ணறுங் கழுநீர் துணைப்பஇழை புனையூஉ
நன்னெடுங் கூந்த னறுவிரை குடைய
நரந்த மரைப்ப நறுஞ்சாந்து மறுக
மென்னூற் கலிங்கங் கமழ்புகை மடுப்ப......
கல்லென் மாலை நீங்க.” (மதுரைக்-௫௪௯-௫௫௮.)

என வரும் மதுரைக் காஞ்சியானும் உணர்க. வால் இழை - தூய அணிகலன். மன் - கழிவிரக்கப் பொருட்டு. அவ் வினிய மாலையை இப்போது யான் அறிகின்றிலேனே என்று இரங்கியபடியாம்.



நிலம் எத்துணைப் பரப்புடைத்து, அத்துணைப் பரப்புடைய துன்பம் என்பாள், ‘நிலம் பரந்தன்ன புன்கண்,’ என்றாள். நிலம் பெருமைப் பண்பிற்கு உவமை என்க. “நிலத்தினும் பெரிதே,” “ஞாலத்தின் மாணப் பெரிது,” எனப் பிற சான்றோரும் கூறுதல் காண்க. அக் காலத்தே அறிந்திலேன் என்றது இப்பொழுது அறிகின்றேன் என்பது படநின்றது.

‘இத்தகைய புன்கணும் புலம்புமுடைய மாலைப் பொழுதினை யான் எங்ஙனம் ஆற்றவல்லேன்?’ என்பது குறிப்பு.

## பாட்டு - ௩௭௮ : தலைவி கூற்று

துறை :—பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி வன்புறை எதிரழிந்து கூறியது. 'அஃதாவது, தலைவன் பிரிந்த காலத்தே பெரிதும வருந்திய தலைவி ஆற்றியிருததலே நினக்கு அழகாம்,' என்று தனனை வற்புறுத்திய தோழியின் கூற்றிற்கு நெஞ்சழிந்து கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'பகல் கழிந்து ஞாயிறு சினந் தணிந்த செயலறவுடைய இம் மாலைப் போதினை மெல்ல நீந்தினேமாயினும் என்னும் ! இம் மாலையின் பின்னர் வரும இரவென்னும் வெள்ளமோ கடலினும் பெரிதாகுமே அதனை எவ்வாறு நீந்தவல்லேம்,' என்று கூறுகின்றாள்.

௩௮௭. எல்லை கழிய முல்லை மலரக்
கதிர்சினந் தணிந்த கையறு மாலையும்
இரவரம் பாக நீந்தின மாயின்
எவன்கோல் வாழி தோழி
கங்குல் வெள்ளம் கடலினும் பெரிதே.

—கங்குல்வெள்ளத்தார்.

(இ - ள்.) தோழி—, எல்லை கழிய முல்லை மலர - பகற்பொழுது நீங்க முல்லையரும்புகள் மலர, கதிர் சினம் தணிந்த கையறு மாலையும் - ஞாயிற்றினது வெப்பந் தணிந்த செயலற வினையுடைய இம் மாலைக் காலத்தையும், இர வரம்பு ஆக நீந்தினம் ஆயின் - இராப்பொழுதினை அதன் எல்லையாக எண்ணிக் கடந்தேம் ஆயின், கங்குல வெள ளம் கடலினும் பெரிது - அதன் பின்னரே வரும் இரவாகிய வெள்ளமோ கடலைக் காட்டி னும பெரிதாகுமே! எவன் - இம் மாலையை நீந்தியதால் உறும் பயன் என்னை?

விளக்கம் :—எல்லை - பகல். மாலைப் பொழுதில் முல்லை மலர்தல் இயல்பாதலின், 'முல்லை மலர,' என்றாள். கதிர் - ஆகுபெயர். சினம்-

மூலமும் உரையும்

௫௱௭

என்றது, வெப்பத்தை. மாலைக்காலம் பிரிந் துறைவார்க்குச் செயலறு தற்குரிய பெருந்துயர் விளைத்தலின், 'கையறு மாலை,' என்றாள். மாலையும் என்புழி உம்மை உயர்வுசிறப்பு. நீந்தற்கரிய இம் மாலைக்காலத்தையும் ஒருவாறு நீந்துவேமாயினும் என்றவாறு.

நீந்தினம் என்னும் வினையால் மாலையாகிய இவ் வெள்ளத்தை என்க. மாலைப் பொழுதிற்கு எல்லை இரவாகலின், வெள்ளம் என்றதற்கியைய, 'வரம்பு,' என்றாள். இரவு வரம்பாகக் கருதி நீந்துவோமெனின், அவ் விரவு வரம்பாகாது கடலினும் பெரிய வெள்ளமாயிருக்கும் ஆதலின், யாம் நீந்திக் கரை காண வல்லுநமோ என்பாள், 'எவன்,' என்றாள். கொல் - அசைநிலை. எவன், என், யாது பயன் என்றவாறு.

எனவே, 'இக் கொடிய மாலைப்பொழுதினையும் அதன் பின் வரும் நெடிய இரவினையும் யான் எங்ஙனம் கழிப்பேன்?' என்று அழிந்து கூறியவாறுதல் காண்க.

## பாட்டு - ௩அஅ : தோழி கூற்று

துறை :—தலைமகள் உடன்போக்கு நேர்ந்தமை உணர்ந்த தலைமகன் சுரத்து வெம்மையும், தலைமகள் மென்மையும் குறித்துச் செலவழுங்கலுறுவானைத் தோழி அழுங்காமற் கூறியது. அஃதாவது, 'தலைவி தன்னோடு வருதற்கு உடம்பட்டாள்,' என, அறிந்த தலைவன், 'அவள் கொடிய பாலைநிலத்தில் நடக்க வல்லு நள் அல்லளே,' எனக் கருதி, அழைத்துப் போக மயங்குவானைத் தோழி தலைவி வல்லுநள் ஆகல் கூறித் தெளிவித்தது.

இதன்கண், தோழி தலைவனை நோக்கி, 'நீரின்கண் நின்ற குவளை வெப்பமிக்க மேற்காற்று மோதிய விடத்தும் வாடாதாகும்; அங்ஙனமே நின்னோடு வரின் தலைவிக்குக் கொடிய பாலைநிலவழியும் இனியவாம்,' என்கின்றாள்.

௩அஅ. நீர்கால் யாத்த நிரையிதழ்க் குவளை
கோடை ஒற்றினும் வாடா தாகும்
கவணை அன்ன பூட்டுப்பொரு தசாஅ
உமணெருத் தொழுகைத் தோடுநிரைத்

தன்ன

முளிசினை பிளக்கு முன்பின் மையின்
யானை கைமடித் துயவும்
கானமும் இனியவாம் நும்மோடு

வரினே.

—ஔவையார்.

(இ - ள்.) தலைவ! நீர் கால் யாத்த நிரை இதழ்க் குவளை - நீரை அடியிலே கட்டப்பெற்ற நிரல்பட்ட இதழ்களை உடைய குவளைமலர், கோடை ஒற்றினும் வாடாது ஆகும் - மேல்காற்று மோதியவிடத்தும் வாடாததாகும், கவணை அன்ன பூட்டுப்





பொருது அசா-கவணை ஒத்த பூட்டுங் கயிறு பொருதலையானே வருந்து தலையுடைய, உமண் எருத்து ஒழுகைத் தோடுநிரைத்து அன்ன - உமணர்களின் எருதுகளையுடைய வண்டிகளின் தொகுதியை வரிசையாக நிறுத்தினாற்போன்ற, முளி சினை பிளக்கும் முன்பு இன்மையின் - உலர்ந்த கிளையைப் பிளத்தற்குரிய வலியில்லாமையாலே, யானை கைமடித்து உயவும் - யானை கையை வளைத்துக்கொண்டு வருந்துதற்குக் காரணமான, கானமும் நும்மொடு வரின் இனிய - பாலை நிலங்களும் நும்மோடே வருமிடத்துத் தலைவிக்கு இனியனவே ஆகும்.

**விளக்கம்** :—கால் யாத்த - அடியிற் கட்டப்பட்ட என்க. நீர் கால் யாத்தமையானே வளமுடைத்தாகிய குவளை என்பாள், 'நிரை யிதழ்க்

குவளை,' என்றாள். கோடை - மேல்காற்று ; மேல்காற்று வெப்ப முடைத்து ; வெப்பமுடைய காற்று மோதியவழியும் நீரின் நின்ற குவளை வாடாது. அதுபோல, வெப்பமுடைய பாலைவழியும் தலைவிக்கு நின்னோடு வருங்கால் இனிதாம் என்க. இது, எடுத்துக் காட் டுவமையணி.

பூட்டு - பூட்டுங் கயிறு. இன்றும் அக்கயிறு பூட்டென்றே வழங்கப் படுகின்றது. பூட்டுங் கயிறு பொருத எருது என்றது, வண்டியிற் பூட்டப்பட்ட எருது என்றவாறு.

தோடு - தொகுதி. உமணர் வண்டியின்கண் உள்ள குத்துக் கோல்கள், உலர்ந்த மூங்கிற் சினைக்கு உவமை. பசிய சினையின்மையின் முளி சினையைப் பற்றிப் பிளகக முயன்ற யானை, அது பிளக்கலாகா மையின் கை மடிதது உயங்கிய தென்க. முளிசினை கையின்கண் நோவுண்டாக்கலின், யானை உயவும் என்க. முளிசினை - உலர்ந்த கிளை.

மூன்பின்மை - பாலைநிலத்தே லுணர்த்திற்று.

யானைக்கு உணவின்மையைக் குறிப்பா

,நும் மொடுவரிற் கானமும் இனியவாம் என்றது நும்மைப் பிரிந் திருப்பின் இல்லமும் இன்னாதாம் என்பதனையும் குறிப்பாலுணர்த்துதல் உணாக.

'மெல்லிய ளேனும் நின்னோடு வரின் பாலைநில வெப்பத்தை ஆற்றுவள் ஆகலான், அழைத்துப் போகக் கடவை,' என்று தெளித்த வாறுதலறிக.

## பாட்டு - ௩௮௯ : தோழி கூற்று

துறை :—தலைமகன் குற்றேவல் மகனால் வரைவுமலிந்த தோழி தலைமகட்குச் சொல்லியது. அஃதாவது, தலைவனுடைய குற்றேவல் மகனால் தலைவன் வரைதற்கு முயல்வதனை அறிந்த தோழி அவ் வேவலமகனை வாழ்த்துமுகத்தானே தலைவிக்கு அச் செய்தியை உணர்த்தியது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'யான் தலைவன் ஏவலனைக் கண்டு, வரைவுபற்றி உசாவினேன் ; அவனும் எல்லாம்

மூலமும் உரையும்

௫௭௯

நலமே என்றான் ; அவன் இனிய உணவு பெற்று மகிழ்வானாக,' என்று கூறுகின்றாள்.

௩௮௯. நெய்கனி குறும்பூழ் காய மாக
ஆர்பதம் பெறுக தோழி அத்தை
பெருங்கல் நாடன் வரைந்தென
அவனெதிர்

நன்றே மகனே யென்றனென்
நன்றே போலும் என்றுரைத் தோனே.

—வேட்டகண்ணனர்.

(இ - ள்.) தோழி, பெருங்கல் நாடன் வரைந்தென-பெரிய மலைநாட்டையுடைய தலைவன் வரைவுக்குரிய செயல்களைத் தொடங்கினானாக, அவன் எதிர் நன்றோ மகனே என்றனென் - அத் தலைவன எதிரே அவன் குற்றேவல் மகனை நோக்கி நலமோ மகனே என யான் உசாவினேன், நன்றே போலும் என்று உரைத்தோன் - அதற்கு நலமே என்று கூறிய அக் குற்றேவன் மகன், நெய்கனி குறும்பூழ் காயம் ஆக - நெய் ஊறுகின்ற குறும்பூழ் சம்பாரத்தோடு கூடிய கறியாக, ஆர் பதம் பெறுக - உண்ணும் சோற்றினைப் பெறுவானாக.

**விளக்கம்:**—நெய்யில் அடப்பட்ட குறும்பூழ் என்பாள், 'நெய்கனி குறும்பூழ்' என்றாள். குறும்பூழ் - காடை. காயம் - குழம்பு. ஆர்பதம்- உண்ணும் சோறு. ஏவன் மகனுக்கு ஏற்ற உணவு கூறுவாள் குறும் பூழ்க் காயங் கூறினாள்.

வரைந்தென - வரைவுக்குரியன செய்தானாக. தலைவன் எதிரே வினவலின் குறிப்பாக வினவினேன் என்பாள் நன்றோ என்றனென் என்றாள்; வரைவுக்குரிய செய்திகள் நிகழ்கின்றனவா என்று குறிப் பான் வினவினேன் என்றவாறு. அவனும் குறிப்பாகவே விடுத்தான் என்பாள் நன்றே என்றுரைத்தனன் என்றாள்.

இந்தச் செய்தியை அறிவித்த அக்குற்றேவன் மகன் நல்லுணவு பெற்று வாழ்வானாக என வாழ்த்தினாள் என்க.

அத்தை - அசைநிலை. ஏ - தேற்றம். போலும் - அசைநிலை.

## பாட்டு - ௩௧௦ : கண்டோர் கூற்று

துறை:—புணர்ந்துடன் போயினாரை இடைச்சுரத்துக் கண்டார் பொழுது செலவும் பகையுங்காட்டிச் செலவுவிலக்கியது. அஃதாவது, தலைவியைத் தமர் அறியாதே உடன் அழைத்துக்கொண்டு பாலைவழியிற் போகுந் தலைவனை எதிரே கண்டோர் பொழுது போயினமையும், ஆற்றினது தீமையுங் காட்டி, 'இனிப்போகாது தங்குமின்' எனக் கூறியது.



' இதன்கண், கண்டோர் தலைவனை நோக்கி, 'பிடியானை

போலும் இவட்குத துணையாயவனே ஞாயிறும் பட்டது; ஆறலை கள்வருடைய ஆரவாரமும கேட்கப் படுகின்றது; ஆதலால். இனி இந்நெறியே நீ இவளோடே செல்லுதலைத் தவிர்வாயாக' என்கின்றனர்.

௩௧௦. எல்லும் எல்லின்று பாடுங் கேளாய்

செல்லா தீமோ சிறுபிடி துணையே
வேற்றுமுனை வெம்மையிற் சாத்துவந்
திறுத்தென
வளையணி நெடுவேல் எந்தி
மிளைவந்து பெயரும் தண்ணுமைக்
குரலே.

—உறையூர் முதுகொற்றனார்.

(இ - ள்.) சிறுபிடி துணையே—சிறிய பிடியானை போன்ற இவட்குத் துணைவனே! எல்லும் எல்லின்று - ஞாயிறும் விளக்க மிலதாயிற்று, சாதது வநது இறுத்தென - வணிகர் கூட்டம் வந்து சேர்நததாக, வேற்றுமுனை வெம்மையின் -பகைப்புலத்தே மேற் கொள்ளும் சினத்தைப் போலச் சினந்து, வளை அணி நெடுவேல் ஏந்தி-வளையை அணிந்த நெடிய வேலை ஏந்தி, மிளை வந்து பெயரும் - காவற காட்டிடததே வந்து மீள்கின்ற, தண்ணுமைக்குரல் பாடுங் கேளாய் - தண்ணுமை என்னும் முரசின் ஒலியாகிய முழக்கத்தையும் கேள, செல்லாதீம்-ஆதலால் நீயிர் இனி மேலே செல்லுதலைத் தவிர்வீராக.

**விளக்கம்:**—சிறுபிடி - சிறிய பிடிபோல்வாள். என்றது, தலைவியை. மகளோடு செல்வோய் எனக் குறிப்பாலுணர்த்துவார் 'சிறுபிடி துணையே' என்று விளித்தார்.

எல் – ஞாயிறு. எல்லின்று – விளக்கம் இலதாயிற்று. இருவரும் செல்லாதீர் என்பார், 'செல்லாதீம்' என்றார். 'செல்லாதீம்': முன்னிலைப் பன்மை வியங்கோள் வினைமுற்று.

வேற்றுமுனை – பகைப்புலம். பகைப்புலத்தே சினப்பதுபோலச் சினந்து என்க. சாத்து – வணிகர் கூட்டம் இறுத்தது – தங்கியது.

மிளை – காவற்காடு. தண்ணுமைக்குரல் – ஆறலைகள்வர் முழக்கியது என்க. ஆறலை கள்வர் சாத்துவந்தமை அறிந்து கொள்ளையிடுதற்குத் தம்மினத்தாரை அழைத்தற்பொருட்டுத் தண்ணுமை முழக்கும் ஒலி செவிப்படுதல் காட்டுவார், தண்ணுமைக குரற்பாடும் கேளென்றார். உம்மை: இறந்தது தழீஇயது.

## பாட்டு – ௩௬௧ : தலைவி கூற்று

துறை:—பிரிவிடைப் பருவவரவின்கண் ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி அழிந்து சொல்லியது. அஃதா

### மூலமும் உரையும்

ரு அக

வது, 'தலைவன் மீண்டு வருவல்' எனக் குறித்த பருவம் வந்தும், அவன் வாராமையானே வருந்திய தலைவியைக் கண்டு வருந்திய

தோழிக்குத் தலைவி நெஞ்சழிந்து கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி,

முல்லை **நிலத்திலே**

முகில்கள் இடித்து முழங்கி மழை பொழிந்தன; அம்மழையைத் தொடர்ந்து பிரிந்தோர் கையற்று வருந்தும்படி வந்த மாலைப் பொழுதிலே மயில்களும் அகவா நின்றன; அவை பெரும் பேதைமையுடையன; அவர் குறித்த பருவம் வந்தும் அவரோ வந்திலர் யான் எங்ஙனம் ஆற்றுவேன்? '

என்கின்றாள்.

நூகூக. உவரி யொருத்தல் உழாது மடியப்
புகரி புழுங்கிய புயனீங்கு புறவிற்
கடிதிடி உருமிற் பாம்புபை அவிய
இடியோடு மயங்கி இனிதுவீழ்ந் தன்றே
வீழ்ந்த மாமழை தழீஇப் பிரிந்தோர்
கையற வந்த பையுள் மாலைப்
பூஞ்சினை யிருந்த போழ்கண் மஞ்ஞை
தாநிர் நனந்தலை புலம்பக்
கூஉந் தோழி பெரும்பே தையவே.

—பொன்மணியார்.

(இ - ள்.) தோழி, ஒருத்தல் உவரி உழாது மடிய - பன்றிகள் வெறுத்து நிலத்தைகக கிளைக்காமல் சோம்பிக்கிடப்ப,
புகரி புழுங்கிய புயல் நீங்கு புறவில் - மான்கள் வெம்மையுற்ற மழைவறந்த முல்லைநிலத்தில், கடிது இடி உருமின் பாம்பு பை அவிய - விரைந் து இடிக்கின்ற இடியானே பாம்புகளின் படம்
அழியும்படி, இடியொடு மயங்கி இனிது வீழ்ந்தன்று - இடியோடே கலந்து மழை இனிதாகப் பெய்யாநின்றது, வீழ்ந்த மாமழை தழீஇப் பிரிந்தோர் கையற வந்த பையுள் மாலை - அங் ஙனம் பெய்த பெரிய மழையைப் பொருந்தித் தந்தலைவரைப் பிரிந்துறையும மகளிர் செயலறவு கொளளும்படி வந்த துன் பத்தையுடைய இம்மாலைப்பொழுதிலே,
பூஞ்சினை இருந்த போழ்கண் மஞ்ஞை - பூக்களை யுடைய கொமபுகளிலே இருந்த பிளவுபட்ட கண்களையுடைய மயில்கள், தாநீர் நனந்தலை புலம் பக் கூஉம் - பாய்கின்ற நீரினையுடைய அகன்ற இடத்தின்கண்
தனிமைத்துன்பம் தோன்றும்படி கூவா
பேதைய - அவை மிக்க அறியாமையுடைய.
நிற்கும், பெரும்

விளக்கம்:—ஒருத்தல் ஈண்டு ஆண்பன்றி என்னும்பொருட்டு. உழுதல் - நிலத்தை உழுதல். மழைவறந்து நிலம் கடிதாய்க் கிழங்குகள்



படாமையின், பன்றிகள் நிலம் கிளையாது மடிந்து கிடந்தன என்க. உழுது உழுது கிழங்கு காணப் படாமையின வெறுத்து மடிய என்பாள், 'உவரி மடிய' என்றாள். உவரி - உவர்த்து.

மடிதல் - சோம்பிக் கிடத்தல். புகரி - புகரையுடையது என்றது மான் என்றவாறு. வெப்பமிகுதியானே மான்கள் புழுங்கிய புறவு, என்க. புயல்-மழை. புறவு-முல்லை நிலம் முதுவேனிற் பருவத்தாலே மழை வறந்து வெம்பிக்கிடந்த முல்லை நிலததே என்றவாறு.

இடி விரைந்து வீழ்தலுண்மையின் 'கடிதிடி உரும்' என்றாள். இடிக்கும் இடி என்க. பை - பாம்புப்படம்.
வீழ்ந்தன்று - வீழ்ந்தது; பெய்த தென்றபடி. இவ்வினைக் கேற்ற
மழை என்னும் வினைமுதல் வருவித்துக் கூறுக. மழை பெய்யாநிற்ப மாலையும் வந்ததென்பாள், 'மழை தழீஇவந்த மாலை' என்றாள். மழை பெய்தலே என்னைப் பெரிதும் வருத்துவதாக மேலும் பிரிந்தோரைக் கையறச் செய்யும் மாலையும் வந்து நலிகின்றது என்றவாறு.
மயிலின் கண் நெடிதாய்ப்பிளந்து விட்டாற்போன்ற இமைகளை
உடைத்தாதலால், 'போழ்கண் மஞ்ஞை' என்றாள். மஞ்ஞை-மயில். மழைவரவானும் மாலைவரவானும் துன்புறும் என்னைத் தமது ஆரவாரத்தானும் துன்புறுத்துவன ஆகலான் 'அவை பேதைய' என்றாள்.

'தலைவர் குறித்த பருவம் வந்தது. அவரோ வந்திலர்! மழையும் மாலையும் மயிலின் குரலும் என் தனிமைத் துன்பத்தை மிகுவிக்கின்றன. யான் எங்ஙனம் ஆற்றுகேன்!' என நெஞ்சழிந்து கூறிய வாறாம்.

## பாட்டு - ௩௯௨ : தோழி கூற்று

துறை:—வரைவிடைக் கிழத்தியது நிலைமை தும்பிக்குச் சொலலுவாளாய்ச் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது. அஃதாவது, வரைவுநீட்டித்த தலைவன் சிறைப்புறத்தே வந்து நிற்றலறிந்த தோழி, அவன் வரவறியாள் போன்று தலைவியின் நிலையை அவனுக்குணாத்த ஒருவண்டினை விளித்து வேண்டியது.

இதன்கண், தோழி வண்டினை நோக்கி, "ஓ வண்டே ஒருவரிடத்தே நனமொழி கூற அஞசவேண்டியதிலலை; நீ தலைவனுடைய மலைக்குப போவாயாயின், 'நின் தலைவி இன்னும் தன் தமரோடேயே இருக்கின்றாள்' என்று அவனுக்கு நினைவூட்டுவாயாக," என்கின்றாள்.

௩௯௨. அம்ம வாழியோ அணிச்சிறைத் தும்பி
நன்மொழிக் கச்ச மில்லை யவர்நாட்

டண்ணல் நெடுவரைச் சேறி யாயிற்
கடமை மிடைந்த துடவையஞ்
சிறுதினைத்

மூலமும் உரையும்

௫அ௬

துளரெறி நண்டுகட் கிளைஞர் தங்கை
தமரின் தீராள் என்மோ அரசர்
நிரைசெல னுண்டோல் போலப்
பிரசந் தூங்கு மலைகிழ வோர்க்கே.

தும்பிசேர் கீரனர்.

(இ - ள்.) அணிச் சிறைத் தும்பி அம்ம - அழகிய சிறகை யுடைய வண்டே யான் கூறுவதனைக் கேட்பாயாக, நல் மொழிக்கு அச்சம் இல்லை - ஒருவரிடத்து நல்ல மொழியைக் கூறுவதற்கு யாதொரு அச்சமும் இல்லையாகும், அவர் நாட்டு அண்ணல் நெடுவரை சேறி ஆயின் - நீ அத்தலைவருடைய நாட்டினகண்ணதாகிய தலைமையையுடைய நெடிய மலைகருச் செல்லுவாயாயின், அரசர் நிரை செலல் நுண் தோல போல - அரசர்களுடைய நிரலாகச் செல்லுதலையுடைய கேடகங்களைப்போல, பிரசம்

தூங்கும் மலை கிழவோர்க்கு - தேத்திறால்கள் தூங்கா நின்ற அம்மலையையுடைய தலைவரிடத்தே, கடமை மிடைந்த துடவை அம சிறுதினை - கடமை மானகள் நெருங்கிய தோட்டத்திலுள்ள அழகிய சிறிய தினையினிடத்தே, துளர் எறி நுண் துகள் களைஞர் தங்கை - களைக்கொட்டினை எறிவதாலே எழுந்த நுண்ணிய புழுதியையுடைய களை எடுப்பாருடைய தங்கையாகிய தலைவி, தமரின் தீராள் என்மோ - தன சுற்றத்தாரிடத்தினின்றும் நீங்காளாயினள் என்று கூறுவாயாக.

**விளக்கம்** :—அம்ம - கேட்பித்தற் பொருட்டு. வாழி, ஓ - அசை நிலைகள். நன்மொழிக்கு அச்சமில்லை என்றது 'யான் நன்மையே கூறுகின்றேன்' எனத் தலைவனுக்குணர்த்தும் குறிப்புடையதாம். தலைவனின் தலைமைத் தன்மையை மலைக்கேற்றி அண்ணல் நெடுவரை என்றாள்.

சேறி - செல்லுதி. கடமை - ஒருவகைமான். துடவை - தோட்டம். துளர் - களைக்கொட்டு. களைகொட்டானே களைகோறலில் நுண்டுகள் படிந்த என்க. துகள் - புழுதி. களைஞர் - களைகட்போர். தமர் கொடுமையைத் தாங்கி அவரினீங்காதவளாய் வருந்தியிருப்பாள் என்பாள் தமரிற் றீராள் என்றாள் தோல் - கிடுகு; கேடகம். இது தேனடைக்கு உவமை. அவன் நெடுவரைக்குச் சேறியாயின் ஆண்டு நீ நுகர்தற்குத் தேன் மிக்குளது என்பாள். 'பிரசந் தூங்கும் மலை கிழவோன்' என்றாள். பிரசம் - தேன்; ஆகுபெயராய்த் தேனடையைக் குறித்தது. 'மணிச்சிறைத்தும்பி' என்றும் பாடம். இதற்கு நீலமணி போலும் சிறகையுடைய தும்பி என்க.

தமரிற்றீர்ந்து தலைவனோடிருந்து இல்லறஞ் செய்தின்புறற்குரிய காலத்தே தமரோடிருந்து துன்புறுகின்றாள் என அறிவிப்பாய் என்னும் முகத்தால் தலைவனை வரைவு கடாயவாறுதலறிக. இனித்தமரிற் றீராள் என்பதனைக் குறிப்பு மொழியாகக்கொண்டு இற்செறித்துக்



கொடுமை செய்யும் தமரினின்றும் இறந்து தீராது இன்னும் உளள் என்று கூறுக என வேண்டினளாகக் கொள்ளினுமாம்.

## பாட்டு - ருகரு : தோழி கூற்று

துறை :— தலைமகன் சிறைப்புறமாகத் தோழி அலர் மலிவுரைத்து வரைவுகடாயது. அஃதாவது, வரைதற் கருத்தின்றிக் களவின்கணின்றொழுகுந் தலைவன் சிறைப்புறத்தே வந்து நின்றமை கண்ட தோழி அவன் வரவறியாள போன்று அவன் கேட்பத தலைவிக்குக் கூறுவாளாய்க் கூறியது.

இதன் கண், தோழி தலைவியை நோக்கி, 'நின்னைத் தலைவன்

முயங்கிய நாள் மிகச் சிலவே ஆகவும், அதிகன் போர்க்களத்தே இறந்த பொழுதுண்டான ஆரவாரத்தினும் அலர் பெரிதாயிற்று' என்று கூறுகின்றாள்.

௩௯௩. மயங்குமலர்க் கோதை குழைய மகிழ்நன்
முயங்கிய நாடவச் சிலவே அலரே
கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்
பசும்பூண் பாண்டியன் வினைவ லதிகன்
களிறொடு பட்ட ஞான்றை
ஒளிறுவாட் கோங்கர் ஆர்ப்பினும்
பெரிதே.

—பரணர்.

(இ - ள்.) தோழி—, மகிழ்நன மயங்கு மலர்க்கோதை குழைய முயங்கிய நாள் தவச்சிலவே - நம தலைவன் நின்னை விராவிய மலரையுடைய மாலை குழையும்படி தழுவிய நாட்கள் மிகச் சிலவே ஆகவும், அலர் - அதுபற்றி ஊரவர் தூற்றும் பழி மொழியோ, கூகைக் கோழி வாகைப் பறந்தலை - கோட்டா னாகிய கோழிகளையுடைய வாகை என்னுமிடத்துள்ள போர்க் களத்தின்கண்ணே, பசும் பூண் பாண்டியன் வினைவல் அதிகன்- பசிய பூணை அணிந்த பாண்டியனது ஏவலிலே வல்ல அதிகன் என்பான், களிறொடு பட்ட ஞான்றை - தனது யானையோடே இறந்துபட்ட காலத்தே, ஒளிறுவாள கொங்கர் ஆர்ப்பினும் பெரிது - விளங்குகின்ற

வாட்படையையுடைய கொங்கர் எடுத்த ஆரவாரத்தினும் பெரிதாயிற்று.

விளக்கம் :—மயங்குமலர் - விராவிய மலர். குழைய முயங்குதல் என்றது, முயக்கத்தின் செறிவைப் புலப்படுத்தியபடியாம். கோதை-மாலை. தவ - மிகுதி. முயங்கிய நாள் சிலவே ஆகவும் அலர் பெரிதாயிற்று என்க. கூகைக்கோழி - இருபெயரொட்டு. கூகை - காட்டுக் கோழி எனினுமாம்.

## மூலமும் உரையும்

## ௩அ௩

வாகை - ஓர் ஊர். "சூடாவாகைப் பறந்தலை" (கஉ௫.) என இவ்வாசிரியரே அகநானூற்றினும் கூறியுள்ளார் பாண்டியனின் தண்டத் தலைவருள் ஒருவன் அதியன் என்பான் இவனைப் பற்றி இவ்வாசிரியர்,

"நல்லிசை தரூஉம் இரவலர்க்கு உள்ளிய
நசைபிழைப் பறியாக் கழல்தொடி யதிகன்"

(அகம்-ககஉ.)

எனப் பாராட்டியுள்ளார்.

பசும்பூண் பாண்டியனுக்கும் கொங்கர்க்கும் பகையுண்மையையும் இறுதியிற் பாண்டியன் கொங்கரை வென்றமையையும்,

"வாடாப்பூவிற் கொங்க ரோட்டி
நாடுபல தந்த பசும்பூட் பாண்டியன்"

(உ௬௩.) எனவரும் அகப்பாட்டான் அறியலாம்.

களிறொடு பட்ட ஞான்றை என்றது, "களிற்றுடனிலை" என்னும் புறத்துறை கூறி அதிகன் மறத்தினைப் பாராட்டியபடியாம்.

## பாட்டு - ௩௯௪ : தோழி கூற்று

துறை :—வரைவிடை ஆற்றாளாகிய கிழத்தியை ஆற்றுவிக்கு தோழி, தலைமகளை இயற்பழித்துக் கூறியது. அஃதாவது, வரைவிடை வைத்துத் தலைவன் பிரிந்த காலத்தே ஆற்றாளாகிய தலைவியை ஆற்றுவிக்கப் புக்க தோழி, அவள் நெஞ்சினை வேறு நெறியிற்றிருப்புவாள் தலைவனைப் பழித்துரைத்தது.

இதன்கண், தோழி தலைவியை நோக்கி, 'நந்தலைவர் நம்மோடாடிய நகைவிளையாட்டு முன்னாள் நமக்கு இனியதாகி இப்பொழுது பகையாக முடிந்தது' என்று கூறுகின்றாள்.

௩௯௪. முழந்தாள் இரும்பிடிக் கயந்தலைக் குழவி
நறவுமலி பாக்கத்துக் குறமகள் ஈன்ற
குறியிறைப் புதல்வரோடு மறுவந் தோடி
முன்னாள் இனிய தாகிப் பின்னாள்
அவர்திணை மேய்தந் தாங்குப்

பகையா கின்றவர் நகைவிளை யாட்டே.

—குறியிறையார்.

(இ - ள்.) தோழி, முழந்தாள் இரும்பிடிக் கயந்தலைக் குழவி - முழந்தாளையுடைய கரிய பெண் யானையினது மெல்லிய தலையையுடைய கன்று, நறவு மலி பாக்கததுக் குறமகள் ஈன்ற குறி இறைப புதலவரொடு - கள்மிக்க மலைபக்கத்து ஊரின் கண்ணே குறத்தி பெற்ற குறிய முன் கையையுடைய பிள்ளை



களோடே, மறுவந்து ஓடி - சுற்றிச்சுற்றி ஓடி, முன் நாள் இனியது ஆகி - முற்காலத்திலே இனிமை தருவதாயிருந்து, பின்னுள் அவர் தினை மேய்ந்தாங்கு - பிற்காலத்தே அவருடையதினையைத் தின்று துன்பந்தாற்போன்று, அவர் நகை விளையாட்டு - நந்தலைவர் நம்மோடு முன்பு நகைத்து விளையாடிய இன்ப விளை யாட்டு, பகையாகின்று - இப்போது நமக்குத் துன்பந்தரும் பகையாக முடிந்தது.

**விளக்கம்** :—கய - மென்மை - "கயவென் கிளவி மென்மையும் செய்யும்" (உரி -உ௪.) என்பது தொல்காப்பியம் இனிப் பரிய தலையையுடைக்கன்று எனினுமாம். குழவி - கன்று. நறவு - கள். பாக்கம்- பக்கத்தே உள்ள ஊர். குறிய இறை எனற்பாலது, யகரம் கெட்டது.

மறுவருதல் - சுற்றிச்சுற்றி வருதல். யானைக்கன்று குறவர் மக்களோடு இளமைப் பருவத்தே மறுவந்தோடி விளையாடி இன்புறுத்தியது என்க.

முன்னாள் என்றது, அதன் இளம்பருவத்தை. பின்னாள் என்றது, அது பெரிதாகிய பருவத்தை. யானைக்கன்று முன்னாள் விளையாடி இன்புறுத்திப் பின்னாள அவருடைய தினையை அழித்துத் துன்புறுத்தினாற்போன்று தலைவன் தொடக்கத்தே நம்மோடு விளையாடி இப்போது பிரிந்து நமது நலத்தை அழித்துத் துன்புறுத்துவானாயினன் என்க. விளையாட்டுத் துன்புறுதற்கு ஏதுவாதல் பற்றி விளையாட்டுப் பகையாயிற்று என்றாள் "விளையாட்டே வினையாயிற்று" என்னும் பழமொழியுண்மையும் நினைக. குறியிறைப் புதல்வர் என்ற தொடர் நினைந்து இதனை இயற்றியவர் குறியிறையார் என வழங்கப்பட்டனர்.

இப்பழி பொருது தலைவிக்குச் சூழ்சசி பிறந்து அவன் நன்மையை ஆராய்ந்து இயற்பட மொழியுமாற்றால். இது தலைவியை ஆற்றுவிக்க ஏதுவாதல உணாக.

## பாட்டு - ருகரு : தலைவி கூற்று

துறை ;—வரைவிடை வைத்துப் பிரிய ஆற்றாளாகிய கிழத்தி நாம் ஆண்டுச் சேறுமெனத் தோழிக்கு உரைத்தது. அஃதாவது, தலைவன் வரையாது பிரிந்து காலம் நீட்டிப்ப ஆற்றாளாகிய தலைவி, 'தலைவன் இருக்குமிடத்திற்கே போகுதும்' எனத் தோழிக்குக் கூறியது.

யாம்

இதன்கண், தலைவி தோழி கேட்ப

முன்னிலைப் புறமொழி

யாக, 'என் நெஞ்சமோ அவர் பிரிவை ஆற்றுகின்றிலது; அவரோ அன்பின்மையானே நமக்குத் தண்ணளி செய்யக் கருதிற்றிலர்; வாளா சொல்மாத்திரையானே தேற்றுவாரும் இங்கு யாருமில்லை; நாணம் கெடினும் யாம் அவர் உறைவிடம் சேறலே நன்று,' எனக் கூறுகின்றாள்.

மூலமும் உரையும்

இ-அள

ந௲ருகூடு. நெஞ்சே நிறையொல் லாதே யவரே
அன்பின் மையின் அருள்பொருள்
என்னார்
வன்கண் கொண்டு வலித்துவல் லுநரே
அரவுநுங்கு மதியினுக் கிவணோர் போலக்
களையார் ஆயினுங் கண்ணினிது படீஇயர்
அஞ்ச லென்மரும் மில்லை அந்தில்
அளிதோ தானே நாணே
ஆங்கவர் வதிவயின் நீங்கப் படினே.

1

(இ - ள்.) நெஞ்சு நிறை ஒல்லாது - என் என்வழி நிற்றலைப் பொருந்தாது, அவரே அன்பு நெஞ்சமோ
இன்மையின்
அருள் பொருள் என்னா - நந தலைவரோ தம்மகத்தே அன்பில் லாமை காரணமாக அருளை ஒரு பொருளாகக் கருதிற்றிலர், வன்கண் கொண்டு வலித்து வல்லுநர் - வன்கண்மையை மேற் கொண்டு வற்புறுத்தி வற்புறுத்தி அச் செயலில் வன்மை
பெற்றோராகிய சிலரும், அரவுநுங்கு மதியினுக்கு இவணோர் போல - பாம்பாலே விழுங்கப்படும் திங்களின் திறத்தில் இவ் வுலகில் வாழும் மாந்தா செயல்போல,
களையாராயினும் - என்
துன்பத்தை நீக்க வல்லுகர் அல்லராயினும் என்னோடு விழித் திருந்து உசாத் துணையாதலும் செய்யாது, இனிது கண் படூஉ இயர் - இனிதே துயிலா நின்றனர், அஞ்சல் என்மரும் இல்லை -
ஆதலால்
ராயினர்,
நீ அஞ்சற்க என்று என்னை ஆற்றுவிப்பாரும இல ஆங்கு அவர் வதிவயின் நீங்கபபடின் - இனி யான் உய்யுமாறெண்ணி அத தலைவர் உறையுமிடததிற்கு இவணின் நீங்கிச் சென்றலோ, நாண் அளிது - எனது நாணம் இரங்கத் தக்கதொன்றா யிருந்தது.

விளக்கம் :—நெஞ்சு அவர்வழிப் படர்தலன்றி என்வரை நில்லாது என்பாள், 'நெஞ்சு நிறை ஒல்லாது,' என்றாள். ஒல்லுதல் - இயலுதல். அவர் - நெஞ்சறிசுட்டு. அன்பே அருட்கு முதலாகலின் அஃதின்மையின் தண்ணளி செய்தலே பொருளாவது என்று கருதி என்னைப் பிரியாது உடனுறைவாருமல்லர் என்றவாறு. பொருள் - நன்மையுண்டாக்கும் பொருள். வன்கண் கொண்டு வலித்து வல்லுநர் என்றது தோழியை. தன்னைப் பகற்பொழுதிலே ஆற்றுக ஆற்றுக என்று கண்ணோட்டமின்றிக் கடிவாள்; பின்னர் இரவில் எனக்கு உசாத்துணையாகாது உறங்குவாள் என்று குறை கூறியவாறும்.

வலித்து வலித்து அதன்கண் வன்மைபெற்றோர் என்க. மதியை அரவு நுங்குங் காலத்தே உலகினர் அவ் விடர் களைய வல்லுநரல்லாத விடத்தும் அதற்கிரங்கி அது வீடு பெறுங்காறும் உறங்காதேனும் இராமல் இனிதே உறங்குதல்போலத் தோழி இடர் களையாவிடினும்

1. ஆசிரியர் பெயர் காணப்பெறவில்லை.



உறங்காது உசாத்துணை யாவாளுமல்லளாய் இனிதே உறங்குகின்றாள் என்றாள் என்று உவமையை விரித்துக் கொள்க.

அந்தில்-அசைநிலை. அவர் இருக்குமிடத்திற்குப் போதலே இனி நன்று எனினும் எனது நாணம் இறந்துபடுமே என்று இரங்கியவாறு, 'நாணம் கெடினும் போவேன்,' என்பதே தலைவியின் குறிப்பென்க.

படீஇயர் - படுகின்றனர்.

கவலையின்றி உறங்குவாள் என்பாள் இனிது படீஇயர் என்றாள். தோழியே இன்னளாயின் என்னைத் தேற்றுவார் யாருளர் என்பாள், 'அஞ்சல் என்மரு மில்லை,' என்றாள்.

உயிர்ப் பொருட்டு நாணந் துறக்க வேண்டுதலின், 'அளிதோ தானே நாண்,' என்றாள். ஓ, தான், ஏ, அசைகள். வதிவயின் - உறைவிடத்திற்கு. நீங்கப்படின் நாண் அளிது என்க. ஏ, ஈற்றசை.

## பாட்டு - ௩௯௬ : செவிலி கூற்று

துறை :—மகட் போக்கிய தாய் உரைத்தது. அஃதாவது, தலைவி தலைவனுடன் தமரறியாதே சென்றமை அறிந்த செவிலித் தாய் அவட்கு இரங்கி கூறியது.

இதன்கண், "பாலும் உண்ணாள் பந்தையும் விரும்பாள் விளையாடும் மகளிரோடே இடைவிடாது ஆடும் இயல்புடைய என் மகள், வெப்பமிக்க பாலைநிலத்தே அவனொடு செல்லுதலை எங்ஙனம் துணிந்தாளோ!" என்று செவிலி இரங்குகின்றாள்.

௩௯௬. பாலும் உண்ணாள் பந்துடன் மேவாள்
விளையாடு ஆயமொடு அயர்வோ ளினியே
எளிதென உணர்ந்தனள் கொல்லோ
முளிசினை
ஓமை குத்திய உயர்கோட் டொருத்தல்
வேனிற் குன்றத்து வெவ்வரைக்

கவாஅன்

மழைமுழங்கு கடுங்குரல் ஓர்க்கும்
கழைதிரங் காரிடை அவனொடு செலவே.

—கயமனார்.

(இ - ள்.) பாலும் உண்ணாள் - யான் பலகாலும் வேண்டவும் பாலையும பருகமாட்டாளாய, பந்துடன் மேவாள் - பந்தினையும் விரும்பாளாய், விளையாடு ஆயமொடு அயர்வோள் - விளையாடுகின்ற தோழியர் குழாத்தோடே இடையறாது விளையாடும் இயல்புடைய என் மகள், முளி சினை ஓமை குத்திய உயர்கோட்டு ஒருத்தல் - உலர்ந்த கொம்புகளையுடைய ஓமை மரத்தை மருப்பானே குத்திய ஏந்திய மருப்பையுடைய களிற்றியானை, வேனில் குன்றத்து வெவ் அரைக் கவான் - வேனிற் பருவத்தையுடைய



வெப்பமிக்க மலையினது தாழ்வரையிலே நின்று, மழை முயங்கு கடுங்குரல் ஓர்க்கும் - முகில்கள் முழங்காநின்ற கடிய ஒலியைச் செவி கொடுத்துக் கேட்டற்கிடமான, கழை திரங்கு ஆரிடை - மூங்கில்கள் உலர்கின்ற செலற்கரிய பாலை நிலத்தின்கண்ணே, இனி அவனொடு செலவு எளிது என உணர்ந்தனள் கொல்லோ - இப்பொழுது அத் தலைவனோடே செல்லுதல்

எளிமை யுடைத் தென்று அறிந்தனளோ!

விளக்கம் :—பால் உண்ணுதலினும் பந்தாடுதலினும் விருப்பமின்றி

நெருநல் காறும் ஆயத்தோடு இடையறாது ஆட்டயர்ந்த சிறுமியாகிய வள் கொடிய பாலைநிலத்தே போதற்கு எவ்வாறு துணிந்தாளோ?

பாலும் உண்ணாள் என்புழி, உம்மை உயர்வு சிறப்பு. ஆய மொடயர் வோள் என்றது, அவ வாயமகளிரையும் நீத்து என்பதுபட நின்றது. அயர்வோள் - விளையாடுபவள். இஃது அவளது இளமை குறித்து இரங்கியவாறும். இனி - இப்பொழுது.

உலர்ந்த ஓமையைக் குத்தி அதன்கண் நீர் காணாது எக்கற்ற களிறு ஒருபால் இடி முழக்கங் கேட்டலும் மழை பெய்யும்போலும் என விரும்பி அவ்வொலியைக் கூர்ந்து கேட்கும் என்க. கழை-மூங்கில். வெவ்வரை - வெப்பமுடைய மலை இது குறிஞ்சி திரிந்த பாலை என்க. 'வெவ்வறை,' என்றும் பாடம். இதற்கு வெவ்விய பாறைக்கற்கள் எனப் பொருள் காண்க.

அவன் என்றது நெஞ்சறி சுட்டு செலவு - செல்லுதல்.

பாலுண்ணமை முதலியன தலைவியின் கின. தலைவி பாலுண்ண மறுத்தலை, திருவுடைமையை விளக்

"பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்

விரிகதிர்ப் பொற்கலத் தொருகை யேந்திப்
புடைப்பிற் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்
உண்ணென் றோக்குபு புடைப்ப.........
...... ............. .. .. ..... . . .. ..
ஏவன் மறுக்குஞ் சிறுவிளை யாட்டி." (நற்.
ககய) எனவரும் நற்றிணைச் செய்யுளானும் உணர்க.

## பாட்டு - ௩௯௭ : தோழி கூற்று

துறை :—வரைவிடை வைத்து நீங்குந் தலைமகற்குத் தோழி உரைத்தது. அஃதாவது, வரைவிடைவைத்துப் பொருளீட்டப் பிரிகின்ற தலைவனுக்குத் தோழி தலைவியின் நிலை யுணர்த்தி, விரைந்து மீள்க என்பதுபடக் கூறியது.

இதன்கண், தோழி தலைவனை நோக்கி, 'பெருமானே! தாய் சினந்து அலைக்கும் குழவி அத் தாயையே புகல் புகுமாறு

௫௬௦ குறுந்தொகை

போல; இன்னு செயினும் இனியவே செயினும் நந் தலைவி நின்னையே புகலாக் கொள்ளும் இயல்பினள் ; அவள் துன்பம் களைவோர் வேறியாரு மிலர் என்பதை மறவற்க என்கின்றாள்.

௩௯௭ நனைமுதிர் ஞாழற் சினைமருள் திரள்வீ
நெய்தல் மாமலர்ப் பெய்தல் போல
ஊதை தூற்றும் உரவுநீர்ச் சேர்ப்பத்
தாயுடன் றலைக்கும் காலையும் வாய்விட்
டன்னு வென்னுங் குழவி போல
இன்னு செயினும் இனிதுதலை
யளிப்பினும்
நின்வரைப் பினளேன் தோழி
தன்னுறு விழுமங் களைஞரோ இலளே.

—அம்மூவனார்.

(இ - ள்.) நனை முதிர் ஞாழல் சினை மருள் திரள் வீ - அரும்புகள் முதிர்ந்த ஞாழலினது முட்டைபோன்ற திரண்ட மலர்களை, நெய்தல் மாமலர்ப் பெய்தல் போல -நெய்தலினது கரிய மலரிலே பெய்யுமாறு போல, ஊதை தூற்றும் உரவு நீர்ச் சேர்ப்ப -குளிர் காற்றுத் தூவாநின்ற வலிய கடற்கரையை யுடைய தலைவனே!, தாய் உடனறு அலைக்கும் காலையும் வாய் விட்டு அன்னு என்னுங் குழவி போல- தாய் மாறுபட்டுத் துன்

புறத்தும் பொழுதும் தன் வாய் திறந்து அத்தாயையே
அன்னையே என்று புகல் புகும் குழந்தையைப் போல, இன்னு செயினும் இனிது தலையளிப்பினும் - நீ இன்னுதவற்றைச் செய் தாலும அனறி இனிதாகத தலையளி செய்தாலும், என்
தோழி நின் வரைப்பினள - என் தோழியாகிய
தலைவி நினது எல்லையுட்பட்டவளே ஆவள், தன்
உறு விழுமம் களைஞர் இலள் -
நின்னை யல்லால் தனது மிக்க
பெற்றிலள்.
துன்பததைப் போக்குவாரைப்

விளக்கம் :—நனை - அரும்பு. ஞாழல் - ஒருவகை மரம். இதன் மலர் ஐயவி போன்றதென "ஐயவி யன்ன சிறுவீ ஞாழல் (௫0.) என இந்நூலிற் போந்தமையான் ஈண்டுச் சினை மருள் திரள்வீ என்றது - மீன் முட்டையினை ஒத்த மலர் என்று கொள்க. கழியின்கண் மலர்ந்த நெய்தற்பூவில் ஊதை ஞாழல் மலரைப் பெய்வதுபோலத் தூவும் என்க. உரவுநீர் - கடல். சேர்ப்பன் - நெய்தனிலத் தலைவன். அளியே செய்யும் இயல்புடையதாய் என்பதுபட 'அலைக்குங் காலையும்' என்றான். தாய் குழவிக்கு எத்தகையள் அத்தகையன் நீ என் றோழிக்கு, நீ நெடிது பிரிந்து அவளைத் துன்புறுத்துவாயானல் அத் துன்பத்தைப் போக்கி அவளை உய்யக் கொள்வார் பிறரிலர் என்பாள். 'தன்னுறு விழுமம் களைஞர் இலள்' என்றாள்.

விழுமம் - துன்பம். நின் வரைப்பினள் - நினது பட்டவள் என்க. வரைப்பு - எல்லை.

அருள் எல்லையுட்

## பாட்டு - ருகூஅ : தலைவி கூற்று

துறை:—பிரிவுணர்த்திய தோழி, தலைமகன் பிரிந்து வினை முடித்து வருந்துணையும ஆற்றியுளராவரென்று உலகின்மேல் வைத்து, உரைத்தாட்குத் தலைமகள் ஆற்றாமை மீதூரச் சொல்லியது, அஃதாவது - தலைவன் பிரிந்து சென்றமையைத் தலைவிக் குணர்த்திய தோழி, மேலும் உலகிலுள்ள சிறந்த மகளிர் தந் துணைவர் பிரிநத காலததே ஆற்றியிருத்தலே மரபு எனத் தலைவி ஆற்றும் பொருட்டுக் கூறினளாகத் தலைவன் பிரிந்தான் என்றமை கேட்ட துணையானே ஆற்றாமை மிக்கவளாய்விட்ட தலைவி அத்தோழியைக் கடிந்து கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, 'தலைவனின் பிரிவுணர்த்தி என்னைத் தன்பத்தாள் வீழ்த்துவாரையன்றி அவரது வருகையை உணர்த்தி எனது கண்ணீர் துடைப்பாரை யான் பெற்றிலேன்' என்று கூறுகின்றாள்.

௩௯௨. தேற்றா மன்றே தோழி தண்ணெனத்
தூற்றுந் துவலைத் துயர்கூர் காலைக்
கயலே ருண்கட் கனங்குழை மகளிர்
கைபுனை யாக நெய்பெய்து மாட்டிய
சுடர்துய ரேடுப்பும் புன்கண் மாலை
அரும்பெறற் காதலர் வந்தென
விருந்தயர்பு
மெய்ம்மலி யுவகையி னெழுதரு
கண்கலி ழுகுபனி யரக்கு வோரே.
—பாலைபாடிய பெருங்கடுங்கோ.

(இ - ள்.) தண் எனத் தூற்றும் துவலைத் துயர்கூர் காலை -குளிரும்படி தூவாநின்ற மழைத்துளியையுடைய துன்பம் மிகுகின்ற பொழுதில், கயல் ஏர் உண்கண் கனம் குழை மகளிர் - கயல் மீனை ஒத்த மையுண்ட கண்களையும் கனவிய

குழைகளையும் உடைய மகளிர்கள், கைபுனை ஆக நெய்பெய்து மாட்டிய-தம் கையே கருவியாக நெய்யை வார்த்துக் கொளுத்திய, சுடர் துயர் எடுப்பும் புன்கண் மாலை-விளக்குகள் துன்பத்தை எழுப்புதற்குக் காரணமான இடும்பையையுடைய மாலைக் காலத்தே, அரும்பெறல் காதலர் வந்தெனப்-பெறுதற்கரிய தலைவர் வந்தாராக, விருந்து அயர்பு மெய்மலி உவகையின்



விருந்து செய்து உடம்பு தளிர்த்தற்குக் காரணமான மகிழ்ச்சியோடே, எழுதரு கண்கலிழ் உகு பனி அரக்குவோர் தேற்றும் முன்னரே உண்டான கண் கலங்கியதனாலே வீழ்கின்ற துளியைத் துடைப்போரை யாம் அறிந்திலேம்.

**விளக்கம்** :—தேற்றும் தன்மைப் பன்மை. அன்று, ஏ. அசை நிலைகள். துவலை-நீர்த்துளி. தண்ணெனத் தாற்றுந் துவலைத் துயர் கூர் காலை என்றது, குளிரானே துன்புறுத்தும் இயல்புடையதும் தனிமைத் துயர் மிகுதற்கு ஏதுவாவதுமாகிய இக் கூதிர்க்காலத்தே என்றவாறு. கயலேர் உண்கண் கனங்குழை மகளிர் என்றாள் இயற்கையழகுஞ் செயற்கையழகுமுடையார் என்பது தோன்ற: ஏர் - உவமவுருபு உண்கண் - மையுண்ட கண். புனை - ஈண்டு நெய்பெய்தற் குரிய கருவியைக் குறித்து நின்றது. விளக்கேற்றியவுடன் காதலர்பால் நெஞ்சு படர்ந்து துன்பம் தோன்றலின் சுடர் துயர் எடுப்பும் மாலை என்றாள். காலை நண்பகல் மாலை என்னும் முப் பொழுதினும் மாலைப் பொழுதே காமநோய் மலரும் பொழுதாகலின் 'புன்கண் மாலை' என்றாள், புன்கண் - துன்பம்.

தலைவர் மீண்டு வந்தவுடன் விருந்து செய்து மகிழ்தல் மரபாகலின் 'விருந்து அயர்பு மெய்மலி உவகை' என்றாள், பனி அரக்குதற்கு

உவகை ஏதுவாம எனக.

தலைவன் பிரிவுணர்ந்தி வற்புறுத்தும்
வன்கண்ணரை யன்றி அவர் வரவு கூறி
மகிழ்விப்பாரைப் பெற்றிலேன் என்றவாறு.

மாலைப் பொழுதிலே மனைதோறும் விளக்கேற்றுதல் மரபு. இதனை, "மங்கையர் செய்யுமிழ் சுரையர் நெடுந்திரிக் கொளீஇக், கையமை விளக்கம் நந்துதொறு மாட்ட," (முல்லைப் - சஎ - கூ) "மாலை மணிவிளக்கங்காட்டி இரவிற்கோர், கோலங் கொடியிடையார் தாங் கொள்ள," (சிலப் - ச: ககூ உ0) என்றும் பிறசான்றோர் ஓதுமாற்றானும் உணர்க.

## பாட்டு - ருகக: தலைவி கூற்று

துறை:—வரைவு நீட்டித்த விடத்துத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது. அஃதாவது, தலைவன் வரைதற் கருத்தின்றிக் களவின்பமே விரும்பி ஒழுகுவானாக, அவ் வொழுக்கத்தினால் தனக்கு உண்டாகும் இன்னாமையைத் தலைவி தோழிக்குக் கூறியது.

இதன்கண், தலைவி தோழியை நோக்கி, தலைவர் தழுவுங் கால் விலகியும், அவர் தணந்துழிப் பரவியும், இப் பசலைநோய் ஊருண்கேணி உண்டுறையின்கண் உள்ள நீர்ப்பாசி போல்கின்றது காண் என்கின்றாள்.

௩௯௯. ஊருண் கேணி யுண்டுறைத் தொக்க
பாசி யற்றே பசலை காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்த லானே.

—பரணர்.

(இ - ள்.) தோழி!, காதலர் தொடுவுழித் தொடுவுழி நீங்கி- நம் காதலர் முயங்குந்தோறும் முயங்குந்தோறும் விலகி, விடுவுழி விடுவுழிப் பரத்தலான்-அவர் பிரியுந்தோறும் பிரியுந்தோறும் பரவாநிற்றலானே, பசலை ஊருண் கேணி உண்துறை தொக்க பாசி அற்று - இப் பசலை நோய் ஊர்மக்களானே உண்ணப்படும் கேணியின்கண்ணே கூடிய பாசியையே ஒப்பாகின்றது.

விளக்கம்:—ஊருண் கேணி-ஊராரானே உண்ணப்படும் சிறுகுளம் எனினுமாம். நீரின்கட் பரவிய ஒருவகைப் பச்சைப் பாசி, அந்நீர் முகக்குங்கால்விலகுதலும் ஏனைப் பொழுதின் யாண்டும் பரவி நீரை மறைத்தலும் இன்றுங் காணப்பட்டது. "பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட் டெறியப்படும்பொழுது நீங்கி, அது விடும்பொழுதிற் பரக்கும்" (உகக.) எனவரும் சிவஞான சித்தியார்ச் செய்யுளும் காண்க.

"விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்

முயக்கற்றம் பார்க்கும் பசப்பு" (குறள் - ககஅசு.)

எனவருந் திருக்குறளும், "விடுவழி விடுவழிச் சென்றுங் கவர், தொடு வழித் தொடுவழி நீஙகின்றற் பசப்பே," (கடுO) எனவரும் கலியும் ஈண்டு நினைக்கற் பாலன.

தலைவனை வரைந்து கொள்ளும்படி தூண்டுமாறு தலைவி தோழிக்குக் குறிப்பாலுணர்த்தினளாக நினைக.

## பாட்டு - சOO: தலைவன் கூற்று

துறை :—வினைமுற்றி வந்த தலைவன் தேர்ப்பாகனைத் தலை யளித்தது. அஃதாவது, தலைவியைப் பிரிந்து வினைமேற் சென்ற தலைவன், அவ்வினை முற்றியவழி மீண்டுவந்து தலைவியைக் கண்ட பின்னர் தன் கருத்திற்கியையத் தேரினைக்கடிது செலுத்திய தேர்ப்பாகனைப் பாராட்டி மகிழ்வித்தது.

இதன்கண், தலைவன் பாகனைநோக்கி, நெடிய வழியிலே செல்வே மெனின், இன்றுபோய்த் தலைவியின் இடும்பை களை

தல் அரிதென எண்ணினையாகிப் புதுவதாகக் குறுகிய வழி யொன்றை உண்டாக்கி அவ்வழியே விரைந்து வந்தமையானே தலைவிக்கு இறந்துபாடு எய்தாமற் காத்தனை நீதேர் தந்தாய்

கு.—38



என்றல் புல்லிது, தலைவியையே உயிரோடு தந்தனை காண் எனப் பாராட்டுகின்றான்.

௪௦௦. சேயாறு செல்வா மாயின் இடரின்று
களைகலம் காமம் பெருந்தோட் கென்று
நன்றுபுரிந் தெண்ணிய மனத்தை யாகி
முரம்புகண் உடைய வேகிக் கரம்பைப்
புதுவழிப் படுத்த மதியுடை வலவோய்
இன்று தந்தனை தேரோ
நோயுழந் துறைவியை நல்க லானே.

—பேயனூர்.

(இ - ள்.) சேய் ஆறு செல்வாம் ஆயின் - பழையதூரிய
வழியாற் செல்வோமானால், காமம் பெருந்தோட்கு இடர் இன்று களைகலம் என்று - காமநோயுடைய பரிய தோளை யுடைய தலைவிக்குத் துன்பத்தை இன்றே களைய மாட்டேமென்று, நன்று புரிந்து எண்ணிய மனத்தை ஆகி - நன்மையை
விரும்பி
உடைய
நினைத்த நெஞ்சத்தை உடையையாகி, முரம்புகண் ஏகி - பருக்கைகளையுடைய மேட்டுநிலமாகிய இடம் நுறுங்கும்படி சென்று, புதுவழிப் படுத்த மதியுடை வலவோய்-
புதிய வழியை உண்டாக்கிய அறிவுடைய வலவனே!, நோய் உழந்து உறைவியைத் தருதலான் - நோயினால் வருந்தி உறையா நின்ற தலைவியை இறந்துபடாமல் எனக்கு நீ தந்தமையானே, இன்று தேரோ தந்தனை - இன்று நீ தேரையோ தந்தனை !
தலைவியையன்றோ எனக்கு அளித்தாய்.

விளக்கம் :—சேயாறு - தூரிய வழி. புதுவழிப்படுத்த என்றமை யால் சேயாறு பழையவழி என்பது பெற்றாம். 'சேயாறு சுற்றி வளைந்து சேறலின் அதன்மிசைச் செல்வோம் எனின், இன்றே சென்று இடர் களையமாட்டோம்: காமநோயுடைய தலைவிக்கு என்று நன்று கருதிக் கரம்பைப் புதுவழிப் படுத்து அவ்வழியே வந்த 'மதியுடை வலவ,' என்றான் என்க.

நன்று புரிந்து எண்ணிய மனத்தை என்றது, தலைவி இறந்து படாமல் உய்யக்கொள்ளக் கருதிய மனத்தை என்றவாறு.

குறுக்குவழி காண்பான் முரம்பு கண்ணுடையச் செலுத்தினன் என்க. புதுவழி, குறுகிய புதுவழி என்க.

விரைந்து சேறற்குத் தானே தன் அறிவாற் புதுவழி காண்டலின் 'மதியுடை வலவ!' என அவன் அறிவுடைமையைப் பாராட்டினான் என்க. இங்ஙனம் நீ புதுவழிப்படுத்து இன்றே வந்திராவிடின் தலைவி நோயால் இறந்துபடுதல் ஒருதலை; அங்ஙனமாகாவாறு தலைவியை உய்யக் கோடலின் தலைவியை நீயே எனக்குயிருடன் அளித்தாய்

## மூலமும் உரையும்

௫௯௫

என்பான், இன்று தோரோ தந்தாய் என்றான்; தலைவியையே தந்தாய் என்பது குறிப்பெச்சம்.

நோயுழந்துறைவி என்றது, நாம் குறித்த பருவத்தே வருவேம் என்னும் எண்ணம் பற்றுக்கோடாகப் பெருந்துன்பம் உழந்தும் உயிர்த்திருந்தவள் என்பதுபட நின்றது. எனவே, நாம் குறித்த பருவமாகிய இன்று வந்திலேமெனில் அவள் உயிர்நீப்பது தேற்றம் என்பது குறிப்பு. பெருந்தோள்: அன்மொழித் தொகை. தன்னைக் காண்டலும் தோள்கள் தடித்து அழகுறலானே, 'பெருந்தோள்' என்றான்.

## பாட்டு - ௬௦௧: தலைவி கூற்று

துறை :—வேறுபாடுகண்டு இற்செறிக்கப்பட்ட தலைமகள் தன்னுள்ளே சொல்லியது. அஃதாவது, தலைவியின் உடல் நிலை வேறுபட்டமை கண்டதமர் அவளைப் புறம் போகாது இற்செறித்து ஓம்பிய வழித் தலைவி அந்நிலையின் இன்னலைத் தனக்குள்ளே சொல்லியது.

இதன்கண், ' துறைவனோடே கொண்ட மெய்தோய் நட்பா லுண்டான வேறுபாடு அவனைக் காணுமலே வருந்தும் நிலையினைத் தந்தது இஃதொரு வியப்பே' என்று தலைவி தன்னுள்ளே சொல்லிக் கொளகின்றனள்.

சூ0க. அடும்பி னய்மலர் விரைஇ நெய்தல்
நெடுந்தோடை வேய்ந்த நீர்வார் கூந்தல்
ஓரை மகளி ரஞ்சியீர் ஞெண்டு
கடலிற் பரிக்குந் துறைவனொ டோருநாள்
நக்குவிளை யாடலுங் கடிந்தன்
றைதே கம்ம மெய்தோய் நட்பே.

—அம்மூவனார்.

(இ - ள்.) அடும்பின் ஆய் மலர் விரைஇ - அடும்பினது ஆராய்ந்தெடுத்த மலர்களைக் கலந்து, நெய்தல் நெடுந்தொடை வேய்ந்த நீர்வார் கூந்தல் ஓரை மகளிர் அஞ்சி-நெய்தன் மலராற் புனைந்த நெடிய மாலையை அணிந்தமையானே நீர் ஒழுகாநின்ற விளையாட்டு மகளிரை அஞ்சி, ஈர் ஞெண்டு கடலில் பரிக்கும் துறைவனொடு - குளிர்ச்சியுள்ள நண்டு கடலினுள்ளே ஓடுதற்குக் காரணமான துறையையுடைய தலைவனோடே, ஒருநாள் நக்கு விளையாடலும் - எப்போதாவது ஒருநாள் நகைத்து விளையாடு தலையும், மெய் தோய் நட்புக் கடிந்தன்று - அவனுடைய மெய்யைத் தீண்டுதற்குக் காரணமான நட்பு விலக்கியது, ஐதேகம்ம - இது வியத்தற்குரியது.

இஅஅ குறுந்தொகை

விளக்கம் :—மெய்தோய்தற் குரித்தாகிய நட்பு நக்குவிளையாடற்கும் இடனிலதாக்கியது வியத்தற்குரியது என்க. விளையாடலும் என்பதன் உம்மை இழிவுசிறப்பு. அடும்பு - நெய்தனிலத்துப் படர்வதோர் பூங்கொடி. ஆய்மலர் - ஆராய்ந்து பறித்தமலர் எனினுமாம். விரைஇ - விரவி : கலந்து. நீர்ப்பூவாகிய நெய்தல்மலர்த் தொடையல் சூடலின் கூந்தலில் நீர்வார்ந்தது என்க. நெடுந்தொடை - நீண்டமாலை. ஓரை - விளையாட்டு மகளிர நண்டைப் பிடித்து அலைத்து விளையாடுவாராகலான் அவரை அஞ்சி அது கடலுள் ஓடிற்று என்க.

பரித்தல் - செல்லுதல். துறைவன் - நெய்தனிலத் தலைவன். ஒருநாள் என்றது யாண்டேனும் செவ்விபெற்ற ஒருநாள் என்பதுபட நின்றது ; களவொழுக்கத்திற் செவவிபெறலும் அருமையே ஆகலின்; கடிந்தன்று - கடிந்தது; விலக்கியது. ஈண்டு மெய்தோய்தற்குரிய தொன்றே விளையாடலும் கடிதற்கு ஏதுவாகலின் இதன்கண் ஒன்று ஒன்றாய்த் திரிந்தது எனப்பட்ட ஆக்கம்பற்றி மருட்கை தோன்றிற்று என்க.

ஐது வியப்புடையது.

"ஐவியப்பாகும்" (தொல். உரி - அஎ)

என்பது தொல்காப்பியம்.

ஏகு - அசைநிலை.

"ஐதேகம்ம இயைந்து செய்பொருளே."

(நற்றிணை : ௩௨)

எனவரும் நற்றிணையினும் ஏகு என்னும் அசைபயின்று வந்தமை காண்க. ஐதே காமம் என்றும் பாடம். இதற்குக் காமம் வியத்தற்குரிய தென்று பொருள் காண்க.

இத்தொகை முடித்தான் பூரிக்கோ.

இத்தொகை பாடிய கவிகள் இருநூற்றைவர்.

இத்தொகை நாலடிச் சிற்றெல்லையாகவும், எட்டடிப் பேரெல்லை யாகவும் தொகுக்கப்பட்டது.[1]

குறுந்தொகை மூலமும் உரையும் முற்றுற்றன.

---

1. ஈண்டுக் கூறிய அடிவரையறைக்கு முரணி, ௩௦௭-ஆம் செய்யுளும் ௩௯௧-ஆம் செய்யுளும் ஒன்பது ஒன்பது அடிகளை உடையன வாகக் காணப்படுகின்றன.

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

பக்கம்

௫௲௮

ஊணாஉ ரலரெழச்
ஊருண் கேணி
ஊர்க்கும் அணித்தே
எந்தையும் யாயும்உணரக்
எம்பணங் கினவே
எலுவ சிறாஅர்

எல்லாம் எவனே
எல்லும் எல்லின்று
எல்லை கழிய
எவ்வி இழந்த
எழின்மிக வுடைய
எழுதரு மதியங்
எறிசுறாக் கலித்த
எறும்பி யளையிற்
எற்றோ வாழி
என்னெனப் படுங்கொல்
ஐயவி அன்ன
ஓடுங்கீர் ஓதி

ஒருநாள் வாரலன்
ஒலிவெள் ளருவி
ஒறுப்ப வோவலர்
ஒன்றே னல்லேன்
ஓம்புமதி வாழியோ
ஓரூர் வாழினும்

கடலங் கான
கடலுட னாடியும்
கடல்பா டவிந்து
கடும்புனல் தொகுத்த
கணைக்கோட்டு வாளை

கண்டிசிற் பாண
கண்ணி மருப்பின்
கணதர வந்த
கருங்கண் தாக்கலை
கருங்கால் வேங்கை
கருங்கால் வேம்பின்
கலிமழை கெழீஇய
கலைகை தொட்ட
கல்லென் கானத்துக்
கவலை கெண்டிய
கவலை யாத்த

கவவுக் கடுங்குரையள்

கழனி மாத்து

கழிதேர்ந் தசைஇய

கழிய காவி குற்றும்

கள்ளிற் கேளிர்

கறிவளர் அடுக்கத்

கன்றுதன் பயமுலை

குறுந்தொகை

| பக்கம் | | பக்கம் |
| --- | --- | --- |
| ௩௮௮ | கன்று முண்ணாது | ௪௧ |
| ௫௯௨ | காணினி வாழி தோழி | ௨௪௬ |
| ௧௬௫ | காதலர் உழைய | ௬௧ |

| | | |
|---|---|---|
| ருருஅ | காந்தளங் கொழுமுகை | ௱கூஉ |
| எஅ | காந்தள் வேலி | கக0 |
| கஅஎ | காமங் கடையிற் | ரு0கூ |
| சஅ௱ | காமங் காமம் என்ப | ககூஎ |
| ருஅ0 | காமந் தாங்குமதி | ச௱உ |
| ருஎசு | காமம் ஒழிவ | சு௱ |
| உகூ | காமம காமம | உகூசு |
| ௱சுக | கார்புறந் தந்த | உ௱ச |
| சஎக | காலையும் பகலும் | சகூ |
| சஎரு | காலை யெழுந்து | சுசு |
| உ0 | காலே பரிதப் | சுரு |
| க௱உ | கானங் கோழி | ௱ருச |
| உஅக | கான மஞ்ஞை | ருஎ |
| எ௱ | கான யானை | ககரு |
| க0க | கான விருப்பை | சகூ௱ |
| உரு௱ | தூக்கூ வென்றது | உஉஎ |
| கஉகூ | குணகடல் திரையது | கஅசு |
| ருஉ | குருகுகொளக் குளித்த | கஅச |
| ௱0உ | குருகும் இருவிசும் | ௱அச |

| | | |
|---|---|---|
| ௩௪௪ | குவளை நாறுங் | ௪௪௮ |
| ௩௩௮ | குவியிணர்த் தோன்றி | ௧௫௬ |
| ௩௫௮ | குறுந்தாட் கூதளி | ௮௭ |
| ௪௩௯ | குறும்படைப் பகழிக் | ௪௯௮ |
| ௨௫௫ | குன்றக் கூகை | ௨௨௧ |
| ௧௫௦ | கூந்தல் ஆம்பல் | ௧௧௬ |
| ௨௩௭ | கூன்முண் முண்டகக் | ௭௫ |
| ௫௩௭ | கேட்டிசின் வாழி | ௪௫ |
| ௫௪௩ | கேளா ராகுவர் | ௩௭௨ |
| ௪௫௫ | கேளிர் வாழியோ | ௪௧௬ |
| ௧௦௦ | கைவளை நெகிழ்தலும் | ௫௫௪ |
| ௬௯ | கைவினை மாக்கடம் | ௪௭௨ |
| ௩௬ | கொங்குதேர் வாழ்க்கை | ௬ |
| ௩௯௧ | கொடியோர் நல்கா | ௫௪௯ |
| ௫௧௨ | கொடுங்கால் முதலைக் | ௪௮௫ |
| ௨௫௯ | கொண்கன் ஊர்ந்த | ௩௦௯ |
| ௩௪௧ | கொல்வினைப் பொலிந்த | ௪௫௪ |
| ௩௨௭ | கொன்னூர் துஞ்சினும் | ௨௦௦ |

# செய்யுள்

சிறைபனி உடைந்த
சேட்சினை தணிந்து
சுடர்செல் வானஞ்
சேடுபுன மருங்கிற்

சுரஞ்செல் யானைக்

சுனைப்பூக் குற்றுத்

சேங்களம் படக்கொன்

செப்பினஞ் செலினே

செல்வச சிறூஅர்

செல்வார் அல்லரென்

செவவரைச சேக்கை

செவ்விகொள் வரகின்

செறுவர்க் குவகை

சென்ற நாட்ட

சேஞோன் மாட்டிய

சேயாறு செல்வா

சேயாறு சென்று

சேயுயர் விசும்பி

சேரி சேர மெல்ல

சேறிரோ எனச

சேறுஞ் சேறு மென்றலின் ௪௮௬

சோலை வாழைச ௪௬௧

ஞாயிறு காயாது ௫௬௪

ஞாயிறு பட்ட ௧௩௫

தச்சன் செய்த ௮௯

தண்கடற் படுதிரை ௨௩௯

தண்துளிக் கேற்ற ௫௬௯

தலைப்புணைக் கொளினே ௩௨௩

முதற்குறிப்பு அகரவரிசை ௫௯௯

| | | |
|---|---|---|
| ௪௧௯ | நிலநதொட்டுப் புகாஅர் | ௧௮௯ |
| ௫௦௩ | நிலம்புடை பெயரினு | ௫௫௭ |
| ௨௬௫ | நிழலான் றவிந்த | ௫௩௨ |
| ௨௧௭ | நினையாய் வாழி | ௫௧௩ |
| ௫௯௪ | நீகண் டனையோ | ௧௦௯ |
| ௩௯௧ | நீயுடம் படுதலின் | ௫௭௧ |
| ௪௭௦ | நீாகால் யாத்த | ௫௭௭ |
| ௪௪௫ | நீர்நீ டாடிற் | ௫௨௯ |
| ௩௯௭ | நீர்வார் கண்ணை | ௩௩ |
| | நுதல்பசப் பிவர்ந்து | ௨௬௮ |
| | நெஞ்சே நிறையொல் | ௫௮௭ |
| | நெடிய திரண்ட | ௩௭௦ |
| | நெடுங்கழை திரங்கிய | ௪௯௬ |
| | நெடுநீ ராம்பல் | ௫௨௬ |
| | நெடுவரை மருங்கிற் | ௨௨௮ |
| | நெய்கனி குறும்பூழ் | ௫௭௯ |
| | நெய்தற் பரப்பிற் | ௧௬௬ |

பழமழைக் கலித்த ௩௨௧
பழமழை பொழிந்தெனப் ௩௮௬
பழூஉப்பல் அன்ன ௨௬௦,

௬௦௦

பறைபடப் பணிலம்
பணிப்புத லிவர்ந்த
பனைத்தலைக் கருக்குடை
பாசவ லிடித்த
பார்ப்பன மகனே
பாலும் உண்ணாள்

பூண்வனைந் தன்ன
பூவிடைப் படினும்
பூவொடு புரையுங்
பூவொத் தலமருந்
பூழ்க்கா லன்ன
பெயர்த்தனென் முயங்க
பெயல்கண் மறைத்தலின்
பெயன்மழை துறந்த
பெய்த குன்றத்துப்
பெருங்கடற்...களிற்றுச்
பெருங்கடற்...நீத்து

பெருங்கடற் பரதவர்
பெருநன் ரூற்றிற்
பெருந்தண் மாரிப்
பெருவரை மிசையது
பெரூர் கொண்ட
பெறுவ தியையா
பைங்காற் கொக்கின்
பொத்தில் காழ
பொய்கை யாம்ப
பொருத யானைப்

பொழுதும் எல்லின்று

பொன்னேர் ஆவிரைப்

மகிழ்நன் மார்பே

மகிழ்ந்ததன் றலையும்

மடவ மன்ற

மடவ வாழி

மட்டம் பெய்த

மணிவார்ந் தன்ன

மண்ணிய சென்ற

மயங்குமலர்க் கோதை

மரங்கொல் கானவன்

# குறுந்தொகை

| | | |
|---|---|---|
| ௮௩ | மால்வரை இழிதருந் | ௧௩௯ |
| ௩௩௧ | மாவென மடலும் | ௨௭ |
| ௧௦௪ | மானடி யன்ன | ௩௫௫ |
| ௯௯ | மானேறு மடப்பிணை | ௪௭௭ |
| ௧௨௩ | மின்னுச்செய் கருவிய | ௨௯௭ |
| ௫௩௧ | முகைமுற் றினவே | ௨௭௨ |
| ௨௫௦ | முட்கால் இறவின் | ௧௫௯ |
| ௨௯௦ | முதைப்புனங் கொன்ற | ௨௨௪ |
| ௩௬௦ | முருகயர்ந் துவந்த | ௫௪௧ |
| ௪௬௮ | முலையே முகிழ்முகிழ்த் | ௫௦௪ |
| ௪௭௮ | முல்லை யூர்ந்த | ௪௦௮ |
| ௧௬௭ | முழந்தாள் இரும்பிடிக் | ௫௮௫ |
| ௧௩௮ | முழவுமுத லரைய | ௪௫௦ |
| ௧௧௩ | முளிதயிர் பிசைந்த | ௨௪௧ |
| ௩௨௫ | முனிபடர் உழந்த | ௫௩௩ |
| ௨௮௯ | முட்டு வேன்கொல் | ௪௨ |
| ௧௭௭ | மெய்யோ வாழி தோழி | ௧௭௬ |
| ௩௭௬ | மெல்லிய இனிய | ௪௫௮ |
| ௫௫௩ | மெல்லிய லோயே | ௫௫௦ |
| ௪௨௨ | மெல்லியல் அரிவைநின் | ௧௯௯ |

# யாவதும் அறிகிலர்
# யானயந் துறைவோள்

யானை ஈண்டை...ஆறு
யானை யீண்டை...எனல்
வங்காக் கடந்த
வண்டுபடத் ததைந்த
வந்த வாடைச்
வளர்பிறை போல
வளையுடைத் தனைய
வளையோய் உவந்திசின்
வளைவாய்ச் சிறுகிளி
வண்பரல் தெள்ளறல்
வாரலெஞ் சேரி

வாரா ராயினும்
வாருறு வணர்கதுப்
விசும்புகண் புதையப்
விடர்முகை யடுக்கத்து
விட்ட குதிரை

## செய்யுள்

முதற்குறிப்பு அகரவரிசை முற்றும்.

# அருஞ்சொற்பொருள் அகரவரிசை

[எண் செய்யுள் எண்]

**அஃகியோன்-குறைவுற்ரோன்** ௩௪௬

அஃதயர்கம் - அவ்விளையாட்டை ஆடுவேம் ௮௦

அஃதறியாதோர் - அவ்வுண்மை யறியாதவர் ௧௭௦

அஃது அஞ்சுவதுடையளாயின் - அவ்விளையாட்டை அஞ்சுவா ளாயின் ௮௦

அஃதெவன்-அதனல் யாது பயன் ௨௩௭, ௨௫௯

அகலம் - மார்பு ௧௫௦

அகலிருவிசும்பு - அகன்ற பெரிய

வானம் ௬௫

அகல்வாய்க்குண்டு சுனை - அகன்ற வாயையுடைய ஆழமான சுனை ௫௯

அகல்வாய் வானம் - அகன்ற இடத்தையுடைய விசும்பு ௯௨

அகவன் மகள் - தெய்வங்களை அழைத்துப்பாடும் கட்டுவிச்சி ௨௫

அகறல் - பிரிதல் ௭௯

அகனுறத் தழீஇக் கேட்குநர்-உள்ளம் பொருந்த விரும்பிக் கேட்பவர் ௨௯

அகன்ற ஞான்று-பிரிந்தபொழுது ௬௧

அகன்றலை - அகன்ற இடம் ௧௨௪

அகன்று வந்தென-பிரிந்து சென்றனவாக ௬௪

அகுதை - ஒரு வள்ளல் ௨௯௮

அககால் - அந்தக்காலம் ௨௭௭

அக்கொடியோன் - அந்தக் கொடுமையுடைய தலைவன் ௨௬

அங்கலுழ்மேனி - அழகு ஒழுகும் மேனி ௧௪௩

அங்கவடு - அழகிய கிளை ௧௫௪

அங்கால் - அழகிய அடி ௧௬

அங்குடிச் சீறூர் - அழகிய குடிகளையுடைய சிறியவூர் ௪௧, ௭௯

அசாவா - வருந்தாமல் ௨௩௯

அசைஇய - இளைப்புற்ற ௩௦௩

அசைவளி - இயங்குங் காற்று ௨௮

அச்சிரம் - பனிக்காலம் ௬௮

அஞர் - வருத்தம் ௩௦௫

அஞ்ச - அஞ்சும்படி ௧௪

அஞ்சலை-அஞ்சாதே கொள் ௩௦௦

அஞ்சல் எஞ்சினம் - அஞ்சுதலை நீங்கினேம் ௨௧௧

அஞ்சல் என்மர்-அஞ்சாதே என்று ஆற்றுவிப்போர் ௩௯௫

அஞ்சி - அதியமானஞ்சி ௯௧

அஞ்சிறை - அழகிய சிறகு ௨

அஞ்சுடர் - அழகிய ஒளி. (கடவுள் வாழ்த்து)

அஞ்சு வருபொழுது - அச்சமுண்
டாகும காலம உசுக

அடிபொறிப்ப - அடிச்சுவடுண்டாக
உ0எ

அடும்பிவர் மணற்கோடு - அடும்பங்
கொடி படர்ந்த மணற் குன்று
உசஅ

அடைகரை - நீரை அடைத்து நிற்
கும் கரை கஎக

அடைசசி - உடுத்தி அ0

அட்ட - கொன்ற ௩சா

அணங்கியாங்கு - வருத்தினாற்
போல கககூ

அணங்கு - தெய்வம் ௩0அ

அணங்கு - தீண்டி வருத்தும் தெய்வம் ௧௩௯

அணங்குக - வருத்துவதாக ௧௯௬

அணல - அலைதாடியையுடையன ௩௬௬

அணவந்தன்ன - தலையை நிமிர்த்தி நோக்கினாற்போல ௯௪

அணவந்தாங்கு - எடுத்து நோக்கினாற்போல ௧௨௮

அணிகொண்ட - அழகாகக் கொண்ட ௨௨

அணிநிறக் கொழுமுகை - அழகிய நிறமுடைய கொழுவிய அரும்பு ௩௭௦



அணிப்படூஉம் - அண்மையிலுண்

டாகும ௨௪௭

அணிலாடு முன்றில்-அணில் விளையாடும் முற்றம் ௪௧

அணிற்பல்லன்ன - அணிலின் பல்லை ஒத்த ௪௯

அணிஇய - அணிந்த ௱௧௮

அணிமெல்லியள் - பஞ்சணை போன்றமென்மையுடையள் ௭0

அணையுங்கால் - தழுவும்பொழுது ௭0

அண்டர் - இடையர் ௧௧௭

அண்ணல்-தலைமைத்தன்மை ௨௯0

அண்ணல் நல்லேறு - தலைமையுடைய நல்ல ஆண்மான் ௱௫௮

அதற்பட்டு - அதன்கணகப்பட்டு

வேப்பமரம் ௨௮௧

அத்தவோமை - பாலைநிலத்தி லுள்ள ஓமை மரம் ௨௦௭

அத்தை - அசைநிலை ௧௨௯, ௫௮௯

அநதில் - அசைநிலை ௨௯௫

அந்தீங்கிளவி - அழகிய இன்சொல் ௨௦௬

அந்தூம்பு - அழகிய துளை ௨௮௨

அமராமுகத்தள் - விரும்பாத முகத்தை உடையள் ௫௧௨

அமர்துணை - விரும்புதற்குக் காரணமான பெண்யானை ௨௧௫

அமலை - ஒலி ௫௬௯

,, - சோற்றுத்திரள் ௨௭௭

அமலைவான்பூ - திரண்டவெண்பூ

அமல் - அடர்ந்த ௨௬0

அமளி - படுக்கை ௩0

அமன்ற - அடர்ந்த ௨0௨

அமிழ்தத்தன்ன - அமிழ்தம் போன்ற ௨0௬

அமிழ்துபொதி செந்நா - அமிழ்தத்தின் இனிமை நிரம்பிய செவ்விய நாக்கு ௧௪

அமைக - இருந்திடுக ௧௧௭

அமைதற்கு-பொருந்துவதற்கு ௪

அமைந்த - தகுதியான ௪

அமைந்தாங்கமைக - இருந்தபடி இருப்பதாக ௧௭௫

அமைவிலர் - நெஞ்சம் பொருந்தாதவர் ௮

அமபகட்டிளமுலை - அழகிய பரிய இளமையுடைய முலை ௭௧

அமபல் - பழிமொழி ௫௧

அம்ம அசைநிலை ௧௮

,, - வியப்பிடைச்சொல் ௨௯

அம்மா அரிவை-அழகியமாமையையுடைய தலைவி ௬௫

அம்மெல்லாகம்-அழகிய மெல்லிய மார்பு ௧௫௯

அயம் - நீர் ௨௯௫

அயர்வு மெய்நிறுப்பவும் - இளைப்பு உடலிலே நிலைபெறவும் ௫௧௬

அயர்வோள் - ஆடுவோள் ௩௯௬

அயலது-பக்கத்தே உள்ளது ௩௬

அயிரை - ஒருவகை மீன் ௧௨௮

அயின்றன்ன - தின்றாற்போல ௨௬௭

அரக்குவோர் - துடைப்போர் ௩௯௮

அரலை - அலரி அல்லது அரளி ௨௧௪

,, - ஒருமலை ௫௯

அரவம் - ஒலி ௩௦௧

அரவுநுங்குமதி - பாம்பால் விழுங்கப்படும் திங்கள் ௩௯௫

அரி - மென்மை ௩௩௮

அரிசி - விதை ௩௬௯

அரிதவாவுற்றனை - பெறற்கரி தொன்றனை விரும்பாநின்றனை

உகூ

அரிதுகண்படுக்கும் - அரிதில் துயிலும் ௩0௩

அரிதுபெறு சிறப்பு - பெறுதற் கரிய தலைமை க0க

கூ0௪ குறுந்தொகை

அரிதுவாய்விட்டு - அருமையாக வாய்திறந்து உகூஅ

அரிது வேட்டனை - கிடைத்தற் கரியதொன்றனை விரும்பினை

கஉ0

அரிய கானம் - கடத்தற்கரிய காடு

எஎ

அரியமாகிய காலை - யாம் காண்

டற்கரியமாகிய களவுக் காலத்தே கஎஅ

அரியலம்புகவு-கள்ளுணவு உருஅ

அரியள்-பெறற்கரியவள் கூஉ()

அரியார் சிலம்பு - உள்ளிடுபரலை யுடைய சிலம்பு ந_சாகூ

அரிவை - தலைவி உ

அரிற்பவர் பிரம்பு - பிணங்கிய கொடியையுடைய பிரம்பு கூக, ந_சாஓ

அருங்கரை - கடத்தற்கரிய கரை கசுரு

அருங்காட்சியம் - காண்டற்கு அரியேம் ந_()ரு

அரும்படர் எவ்வம் - பொறுத்தற

கரிய வினைவாலுண்டாகும் துன்
பம் ௩௬0

அரும்பற - அரும்புகள் இல்லையாம்
படி ௨௬

அரும்பணி - பொறுத்தற்கு அரிய
பணி ௬௮

அரும்பணி அசசிரம் - பொறுத்தற்
கரிய பணியையுடைய அசசிரம்
௮௨

அரும்பிய சுணங்கு - தோன்றிய
தேமல் ௭௧

அரும்பும் - அரும்பெடுக்கும் ௫

அரும்பூழ்த்த - அரும்பு தோன்
றிய ௧௧0

அரும்பெறலமிழ்தம் - பெறற்கரி
தாகிய தேவருணவு ௮௩

அரும்பொருள் - தேடற்கரிய
பொருள் ௫௯

அருவி - மலைவீழ் அருவிநீர் ௬௨

அருவிப்பரப்பு - அருவிநீர் பாயும்
பரப்பு ௧௦௦

அருவிவேங்கை - அருவியின்
மருங்கே வளர்ந்த வேங்கை
மரம ௯௬

அருளும் - அன்பும் ௨௦

அருளே மன்ற யாருமில்லது -
அருள்தான் தன்னை ஏற்றுக்
கொள்வாரை இலது ௧௭௭

அருள்பொருள் என்னார் - அருளே உறுதிப்பொருள் என்று கருதார் ௩௯௫

அரைநாள் வாழ்க்கை - பாதிநாள் மட்டும் வாழும் வாழ்க்கை ௨௮௦

அரையிருண்டுநாள் - பாதியாகிய இருள்செறிந்த இடையாமம் ௧௯௦

அலங்கல் - அசைதலையுடைய ௭௬

,, - அசைகின்ற ௭௯

அலங்குகுலை - அசைகின்ற குலை ௨௩௯

அலப்பென் - வருந்துவேன் ௪௧

அலமரல் - சுழற்சி ௨௮

அலமருந்தகைய - சுழலுந்தன்மை

யுடையன ௭௨

அலமலக்குறும் - கலங்கும் ௪௩

அலம்வரும் - அசையும ௧௪௮

அலராகி - பழிமொழியாகி ௯௭

அலரெழுந்தன்று - பழிமொழி எழுந்தது ௩௭௨

அலர்ந்தன்று - பழியாயிற்று ௨௯௪

அலர்வேய் கண்டல் - மலர்பொருந்திய தாழை ௩௪௦

அலவனாட்டிய - நண்டைப்பிடித்து அலைத்த ௩௦௩

அலைக்கு - அலைத்தலுக்கு ௮௯

அலைப்ப - வருத்தாநிற்ப ௨௮

அலையாத்தாயர் - வருத்தாத

அன்னைமார் ௨௪௬

அல்கலுந்துஞ்சாது - இரவுகடோறும் துயிலாமல் ௩௮௧

அல்கலும் - இரவுவருதலும் ௧௧௪

அல்கல் - இரவு ௩0

அல்கிரை - வைத்துண்ணும் உணவு ௧0௭

அல்குநிழல் - தங்குதற்குரிய நன்னிழல் ௩௩௮

அல்குல் - இடை ௨௭

அல்குறுபொழுது - இரவு ௨௭௩

அல்லல்நெஞ்சம் - வருத்தமுடைய நெஞ்சம் ௪௩

அல்லனாயினும் - வாய்மையில்லாதவனாயினும் உஅச



அல்லனெஞ்சம் - துன்பமுடைய நெஞ்சம் நஅக

அவருண்ட என்னலன் - அவரால் நுகரப்பட்ட என் பெண்மை நலம் ககஉ

அவரை - அவரைக்கொடி உசா0

அவர் - அத்தலைவர் கஉ, சாக

,, - அத்தலைவருடைய உந

,, - நந்தலைவர் உக

,, இருந்தவென் னெஞ்சு - தலைவர் வீற்றிருந்த என் உள்ளம் ௩௪0

அவர் ஊர் - தலைவருடைய ஊர் ௫0

அவர்திறத்து - அத்தலைவர் பொருட்டு உ௮௯

அவர்தந்துன்னச் சென்று - தலைவரை அணுகிச்சென்று ௯௮

அவா நமக்கியாராகியர் - அவர் நமக்கு என்ன உறவினையுடையார் ௧௧0

அவர்மலை - தலைவருடைய மலை ௩௯0

அவலநீளிடை - துன்பமுடைய நீண்டவழி உஉ௪

அவல நெஞ்சம் - துன்பமுடைய நெஞ்சு ௧௫௯

அவலம - கவலை ௧௨

அவனொடு செலவு - அத்தலைவனோடே போதல் ௨௯௬

அவனொடு மொழிம் - அவனோடே சேர்த்துக்கூறும் ௫௧

அவித்தன்று - அழித்தது ௬௫

அவியாமாறு - தூங்காமையால் ௨௭௫

அவிழ - மலர ௨௫

அவிழ்த்தற்கரிது - விலக்குதற்கரிது ௨௧௨

அவுணர் - அசுரர் ௧

அவை - கூட்டம் ௧௪௬

அவ்வந்திசின் - அவ்விடத்திற்கு

வருவாயாக ௩௬௭

அவ்வரி - அழகிய கோடு ௧௮0

அவவரிக்குருளை - அழகிய கோடுக

ளுடைய குட்டி ௧௧௯

அவ்வரை - அதுகாறும் ௨௫௬

அவ்விளிம்பு - அழகியவிளிம்பு

௨௯௭

அழப்பிரிந்தோர் - யாம் அழும்

படியாகப் பிரிந்தோர் ௩0௭

அழல் - அழுதல் ௩௫

அழாஅல் - அழாதேகொள் ௧௩௫

அழால் - அழாதேகொள் ௮௨

அழாற்கோ - அழமாட்டேனோ

௧௯௨

அழிசி - ஒரு மன்னன் ௨௫௮
அழிதுளி - அழிந்ததுளி ௩௫
அழிபடர் - மிக்கநினைவு ௧௭௩
அழிபடர்நிலை - மிக்க துன்பமுடைய நிலை ௧௮௫
அழியல் - வருந்தற்க ௭௩, ௧௪௩
அழிவதெவன் - வருந்துவதெற்றிற்கு ௮௯

அழுகற் சின்னீர்-அழுகலையுடைய சிலவாகிய நீர் ௫௯

அழுங்கலூர்-ஆரவாரத்தையுடைய ஊர் ௧௨
அழுங்கனெஞ்சம் - துன்பமுடைய நெஞ்சம் ௩௦௭

அழுங்குவர் - தவிர்வர் ௧௱௫

அழுதகண்டுடைப்பார் - அழுத கண்ணீரை மாற்றுவார் ௮௨

அழுவம் - பாலைப்பரப்பு ௭

அழுவம்-கடற்கரைப் பரப்பு ௱௪0

அளிமதி - பாதுகாப்பாயாக ௧௧௫

அளிய - இரங்கத்தகுவன ௯௨

அளியர் - இரங்கத்தக்கவர் ௭

அளியளோவளியள் - மிகவும் இரங்கத் தக்கவள் ௫௬

அளியேன்-இரங்கததகுவேன் ௱0

அளை - வளை ௧௨

அளைஇ - கலந்து ௧௫௮

அள்ளல் - சேறு ௧0௱

அற - நீங்கும்படி ௧௨

அறந்தலைப்பட்ட - அறத்தைச் செய்கின்ற ௨0௬

அறல் - கருமணல் ௨௮௬

அறவது - அறமுடையது ௨௪௭

அறவனாயினும் - வாய்மையுடையவனாயினும் ௨௮௪

அறனில்கோள் - அறத்தொடுபடாத கொலை ௨௫௭

அறனில்தாய் - அறன் அறியாத தாய ௨௪௪

அறிகரி பொய்த்தல் - கண்டறிந்ததை மறைத்துக் கூறல் ௧௮௪

அன்னவினியோள் - அத்தகைய இனிமையையுடையோள் ௨௦௬

அன்னாய் - தோழியே! ௫௫

அன்னை ௮௫

அன்னை காணிய - நந்தாய் அறியும் பொருட்டு ௫௬௦

அன்னையும் அத்தனும் - தாயும் தந்தையும் ௯௫

அன்னோ - அந்தோ ௧௬௧

ஆஅ - வியப்பிடைச் சொல் ௨௮

ஆகியர் - ஆகுக ௪௯

ஆங்கறிந்திசின் - அவ்வாறு அறிந்துள்ளேன் ௨௪௭

ஆங்குணர்ந்தமையின் - அவ்வாறுணர்ந்தமையாலே ௧௭௫

ஆங்கே - அவர் இருக்குமிடத்திற்கு ௧௧

ஆசாகெந்தை - பற்றுக்கோடாகிய தந்தைபோலும் தலைவன் ௧௭௬, ௩௨௫

ஆசில் - குற்றமில்லாத ௧௦௮

ஆசில் தெரு - குற்றமற்ற தெரு ௨௭௭

ஆடமை - அசைகின்ற மூங்கில் ௧௧௫

ஆடரை - ஆடுகின்ற அடிப்பகுதி ௨௪௮

ஆடுகள மகள் - விறலி, கூத்தள் ௩௧

ஆண்டும் - அவ்விடத்திற்கும் ௧௧௩

ஆண்டொழிந்தன்று - அவவிடத்தேயே நீங்கியது ௫௪

ஆதியருமன் - ஒரு வண்மையோன்

உகூரு

ஆத்திரை - யாத்திரை, செலவு

உகூரு

ஆபயந்தநெய் - ஆன் அளித்த நெய்

உ௯0

ஆமா - காட்டுப்பசு உஉஉ

ஆம் - நீர் உ0அ

ஆம்பல் - ஒருவகை நீர்ப்பூ ௬௯, அ0

ஆம்பல்மலரினும் - ஆம்பற்பூவையுங் காட்டில அ௬

ஆம்பனாறும் தேம்பொதி துவர்வாய் - ஆம்பற்பூ மணக்கும் தேன் பொதிந்துள்ள பவழவாய ரு00

ஆயம் ஆய்ந்த - மகளிரானே ஆராயப்பட்ட ௨௬௫

ஆயிடை - அவற்றினிடையே ௬௩

ஆயிழை - அழகிய அணிகலன்களையுடைய தலைவியே ௧௬௩

ஆய்கழல்-அழகிய வீரக்கழல் ௧௫

ஆய்நலம் - ஆராய்தற்குரிய அழகு ௨௨௩

ஆரணங்கினள் - பொறுத்தற்கரிய வருத்தத்தைச் செய்பவள் ௭0

ஆரநாறும்-சந்தன மணக்கும் ௨௮௬

ஆரம் - சந்தனம் ௩௭௬

ஆரம் - முததுமாலை ௩௨௧

ஆரலருந்த வயிற்ற - ஆரல்மீனை அருந்தி நிறைந்த வயிற்றை

யுடையனவாகிய ௧௧௪

ஆரல் - ஒருவகை மீன் ௨௫

ஆரளவு - அளத்தற்கரிய அளவு ௩

ஆரளி - நிரம்பிய அருள் ௧௫௮

ஆராது - வயிறுநிரம்பாமல் ௨௧௧



ஆரியர் - ஆரியக் கூத்தாடுவோர் ௭

ஆரிருள் - நிரம்பிய இருள் ௧௪௧

ஆர் - காமபு ௨௮௨

ஆர்கலி - ஆரவாரம் ௧௮௬

ஆர்கலிவிழவு - ஆரவாரமுடைய விழா ௨௨௩

ஆகழலபு-காமபு கழனறு ௫௨௯
ஆர்களிறு - பொருந்திய ஆண் யானை ௫௨
ஆர்க்கவும்படுப - ஆரவாரிக்கவும் படுவர் ௧௭
ஆர்ந்தோர் - உண்டவர் ௫௫௪
ஆர்ந்தோர் வாயிற் றேனும் புளிக்கும் ௫௫௪
ஆர்பதம் - உண்ணும் உணவு ௮௫, ௫௮௯
ஆர்ப்ப - முழங்க ௧௫
ஆர்ப்பிசை - ஆரவாரிக்கும் முழக்கம் ௫௪
ஆர்வலர் - விருப்பமுடையோர் ௨௦௭

ஆலலுமாலின - ஆடுதலைச் செய்தன உருக

ஆவிரை - ஒருவகைச் செடி கஎ௩

ஆழி - உருள் உ0ரு

,, கடல ௩எ௨

ஆளறிவுறீஇ - ஆள்வருகையை அறியச் செய்து ௩ரு0

ஆள்வினை - மேற்கோடற்குரிய தொழில் உகூஎ

ஆறு - வழி க௨

ஆறுசென்மாக்கள் - வழிநடப்போர் க௪0, உரு௩

ஆற்ற - பொறுக்கும்படி க௨க

ஆற்றயல் - வழியின்பக்கத்தே உ௪, ௩ரு0

ஆற்றலை-ஆற்றுகின்றாயில்லை ௬௭

ஆற்றல் - பொறுத்தல் ௬௮

ஆறாதலைக்கும் - இடையறாது வருத்தும ௨௯௨

ஆறாத்துயரம் - அமையாத துன்பம் ௧௪௫

ஆறாநாறும் - ஒழியாதே மணக்கும் ௨௫௯

ஆறாநோய் - அமையாத வருத்தம ௯௭

ஆன் - பசு ௮௯

ஆன்றோர் - அறிவோர் ௧௮௪

இஃதெவன் - இஃதென்னகாரியம் ௧௫௮

இஃதோ - இதுதானோ ௧௬௦
இஃதோ - இதோ பார்மின் ௨௯௫
இகந்து - நீங்கி ௨௯
இகலும் - மாறுபடும் ௨௫௭
இகழ்ந்தனர் - சோர்ந்திருந்தனர் ௬௫
இகழ்ந்தனன் - சோர்ந்திருந்தேன் ௬௫
இகுகரை - தாழ்ந்த கரை ௨௬௬
இகுதிரை - தாழ்கின்ற அலை ௧௦௯
இகுளை - தோழி ௨௫௧
இசின் - அசைநிலை ௫௦
இசையாதுகொல் - இயலாதோ ௬௮
இடிக்கும் - கடிந்துரைக்கின்ற ௫௮
இடித்திடித்து - அடிக்கடி இடித்து

இடுக்கஞ்சியிரந்தோர் - துன்பத்தை அஞ்சி எற்றோர் ௫௪௧

இடுநிழல் - செயற்கை நிழல் ௭௭

இடும்பைநோய் - துன்பஞ்செய்யும் காமநோய் ௨௧௭

இடைப்பட விரைஇ - இடையிடையே கலந்து ௯௨

இடைமுலை - முலையிடை ௧௭௮

இடையிடுபு - நடுநடுவே இட்டு ௨௧

இட்டுவாய் - ஒடுங்கிய வாய் ௧௯௫

இணர - பூங்கொத்துக்களை உடையன ௧0

இணரவிழ்புன்னை - கொத்தாக மலரும புன்னை ௨௯௯

இரண்டறி கள்வி இருவேறு ஒழுக்கத்தை அறிந்த கள்ளத் தன்மையுடையாள் ௩௧௨

இரந்தூண் - ஏற்றுண்ணும் உணவு ௩௩

இரலை - ஆண்மான் ௯௫

இரலைநன்மான் - நல்லாண்மான் ௨௫௦

இரவரிவார் - இரவில்கதிர் அரிவோர் ௩௭௫

இரவலர் - ஏற்போர் ௧௩௭

இரவினுன் - இரவின்கண் ௩௯௦

இரவூர் - இராக்காலத்தையுடைய ஊர் ௯௧

இரிய - கெட்டோட ௬௨௧

இரீஇ - வைத்து ௨௯௬

இருக்கைமுடவன் - இருத்தற்றெ ழில் ஒன்றே உடைய முடவன்

௯௦

இருங்கண்ஞாலம் - பெரிய இடத் தையுடைய உலகம் ௨௯௭

இருங்கழி - கரிய நீர்க்கழி ௯

இருங்குயில் - கரிய குயில் ௧௯௨

இருங்கூந்தல் - கரிய மயிர் ௫௨

இருடிணிந்தன்ன - இருள்செறிந் தாற்றோன்ற ௧௨௬

இருந்திரோ-இருக்கின்றீரோ ௯௫

இருந்துறை - பெரிய நீர்த்துறை

அ௦

இருபேராண்மை - இரண்டுபெரிய
ஆண்மைகள் ௬௩

இருப்பை - ஒருவகைமரம் ௩௨௧
இருமருங்கினம் - இரண்டு உடலை
யுடையேம் ௩௭0

இருமருப்பெருமை - கரியகொம்
பையுடைய எருமை க௮க
இரும்பிணர் - கரிய சருச்சரை க௨
இரும்புலிக்குருளை - பெரிய புலிக்
குட்டி ௬௭
இருவாம் - இருவேம் ௨௩௭
இருவி - தினையரிந்த தாள் ௨௨0
இருவிசும்பிவரும் - பெரிய வானிற்
பறந்து செல்லும் ௨௯0

இருவெதிர்-பெரிய மூங்கில் ௫௮௫

இருவேமாகிய உலகம் - தலைவன் தலைவியென்னும் இருவேமாகப் பயின்ற உலகம் ௫௭

இருளிய - இருண்ட ௫௧௪

இரை - உணவு ௯௨

இலங்குவளை - விளங்குகின்ற வளையல் ௧௧, ௫௦

இலையிலஞ்சினை - இலையில்லாது மலர்ந்து அழகிதாகிய கொம்பு ௨௫௪

இல்லாகுதும்-இல்லையாகின்றோம் ௨௯௦

இல்லிறைப்பள்ளி - வீட்டிறப்பின்கண் உள்ள படுக்கை ௪௬

இல்லுய்த்துநடுதல் - வீட்டிற்கொ

ணர்ந்து நடுதல் ருசுக

இல்லெலி - வீட்டிலுறையும் எலி க௰எ

இல்லோர் - நல்கூர்ந்தார் சுரு

இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு - வறியோர் வாழ்க்கை இரத்தலினும் காட்டில் இழிந்தது உஅரு

இல்லோனின்பங் காமுற்றாங்கு - வறியவன் இன்பத்தை விரும்பினாற் போல. கஉ௰

இவணும் - இவ்விடத்தும் கஉசு

இவணொழிய-இவ்விடத்தே தனித்துத் தங்க உஉ

இவரும் - படர்கின்ற ருசு

இவள்-இத்தலைவி; நெஞ்சறிசுட்டு

௧௮, ௨௭0
இவணோர் - இவ்வுலகத்துள்ளோர்
௫௯௫
இவ்வுலகத்துப்பிறர் - நம்மகளும் தலைவனும் அல்லாத ஏனையோர்
௬௬
இவ்வூர் - இவ்வூரிலுள்ளோர் ௧௬



இவ்வென - இவை என்று ௨௬௭
இழந்த - இழந்தமையாலுண்டாகிய
௧௯
இழிதரும் - இறங்காநின்ற ௯௫
இழுக்கிய - விழுந்த ௯0
இழுமென - இழும் என்னும் ஒலி யுண்டாக ௫௬௫

இழைஇயர் - இயற்றுதற்கு ௮௫

இழைககும் - இயற்றுகின்ற ௨

இளமாணாக்கன் - இளமையுடைய மாணவன ௬௨

இளமைககுமுடிவு - இளமைப்பருவத்திற்கு முடிவாகும் ௧௩௧

இளமைபாரார் - இளமையது அருமையை நினையார் ௧௨௫

இளையரும் மடவரும் - ஆண்டிளமையோரும் அறிவில்லாதோரும் ௨௪௫

இளையர் - இளமகளிர் ௬௨௨

இளையள் - ஆண்டாணிளமையுடையாள் ௧௧௯

இளையோர் - பிள்ளைகள் ௫௧

இறடி - தினை. ௨௧௪

இறந்தோர் - கடந்துசென்றோர் ௬௭

இறவினன்ன - இறாமீன்போன்ற ௧௬0

இறவின்வாடல் - இறாமீன்வற்றல் ௫௨0

இறீஇயர் - முறிவனவாக ௧௬௯

இறுமுறை - அழியும்முறை ௧௯௯

இறும்பு - குறுங்காடு ௧௫௫

இறைஇறை - சிறிதுசிறிதாக ௫௨

இறைகொள்பு - தங்குதலைக் கொண்டு ௧௫

இறைத்துண - கையாலிறைத்துண்ணும்படி ௯௯

இணமீன் - திரளான மீன் ௯

இனி - இப்பொழுது ௧௧

இனிச சென்றனன்-இப்பொழுது சென்றான் ௨௦௫

இனிதடங்கினர் - இனிதாக உறங்கினார் ௭

இனியது கேட்டு-இனிமையுடைய செய்தியைக் கேள்வியுற்று ௬

இனியறிந்தேன்-இப்போது அறிந்துகொண்டேன் ௮௬

இனியன் - இனிய பண்புடையோன் ௮௫

இன்னா - துன்பம் ௬௮

இணைமதி - வருந்துவாயாக க௬

இணையல்-வருந்தாதேகொள் க௯௨

இணையள் - இத்தன்மையுடையவள் ௭0

இன்கடுங் கள் - இனிய கடுப்பை யுடைய கள் ௮௮0

இன்பாணித்து-இனிய தாளத்தை யுடையது ௨௯௧

இன்புறுக - இன்பமெய்துவதாக ௮௪

இன்புறுதுணை - இன்புறுதற்குரிய பிணைமான் ௮௫

இன்முகம்திரியாது - இனிய முகம மாறுபடாமல் ௨௫௨

இன்றுகொல் - இல்லையோ ௪௯

இன்றாய் - இல்லையாகி ௩௪

இன்றுபெரிது-இந்நாள் பெருநாள் ௧௪௯

இன்றுயின்முனிநர்-இனிய துயிலை வெறுத்தோர் ௨௧௩

இன்றையளவை - இற்றைநாள் ௩௮௩

இன்றையன்னநட்பு - இன்றுஇருப்பதுபோன்று என்றுமிருக்கும் நட்பு ௧௯௯

இன்னகை யாயம்-இனியபுன்முறுவலையுடைய மகளிர்கூட்டம் ௩௫௧

இன்னது - இன்றிருக்குந்தன்

மைத்து ௧0௯

இன்னபண்பின் இனை - இத்தன்மையோடே துன்பம் ௪௮

இன்னமென்மைச் சாயலள்-இத்தகைய மெல்லிய சாயலையுடையாள் ௩௨௭



இன்னம் - இத்தகையேம் ௨௨௩.

இன்னளாக - இத்தன்மையளாகும்படி ௨௯௬

இன்னளாயினள் - இதனை ஒத்தனள் ௯௮

இன்னள் - இன்னவள் ௪௭௩

இன்னாக்கானம் - துன்பமுடைய காடு ௨௭௪

இன்னாதிசைக்கும் - இன்னாமையு
டையதாய்க் கூறப்படும் ௧௱௯

இன்னாதெறிதரும் - துன்பமுண்
டாகும்படி வீசுகின்ற ௧௧0

இன்னாமைத்து - துன்பமுடைத்து
௱௨௬

இன்னாவுறையுட்டு - துன்பந்தரும்
உறைவிடங்களையுடையது ௫௫

இன்னாவென்றிராயின் - துன்பமு
டையன என்பீரானால் ௧௨௪

இன்னாவைப்பு - துன்பமுடைய
இடம் ௱௧௪

இன்னிசை உருமின - இனிய
முழக்கத்தையுடைய இடியை
உடையன ௨00

இன்னிழல் - இனிய நிழல் ௫

இன்னுமற்றோ - இன்னும் அத்த
    கையதோ ௱௫௧

இன்னும் - இனிமேலும் ௯௪

இன்னும் பாடுக - இனியும்பாடுவா
    யாக ௨௱

இன்னுயிர் இழப்பு-சாதல் ௱ ௬௯

இன்னுயிா கழியினும்-இனியஉயிர்
    நீங்கினும் ௯௱

இன்னுயிர் குறித்து - இனிய உயி
    ரைக் கவர்தல் கருதி ௨௧௪

இன்னே-இப்பொழுதே ௨௮௭

ஈங்கனம் - இங்கே ௱ ௱௪

ஈங்காகின்று - இவ் வண்ணம்
    ஆயிற்று ௨௬௮

ஈங்கிவண் - இப்படி இவ்விடத்தே

